# உரையாசிரியர்கள்

(1968-ஆம் ஆண்டு சிறந்த ஆய்வு நூலுக்கு,
தமிழகஅரசு வழங்கிய முதற்பரிசைப் பெற்ற நூல்)

தமிழ்ப் பேராசிரியர்
**மு. வை. அரவிந்தன்**

**மணிவாசகர் பதிப்பகம்**
8/7 சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை-600108.

முதல் பதிப்பு : 21, சூன், 2010

ஆறாம் பதிப்பு : சூலை, 2015

திருவள்ளுவர் ஆண்டு : 2046

**விலை : ரூ. 325.00**

மணிவாசகர் பதிப்பக வெளியீட்டு எண் : 1444

நினைவில் வாழும்
நிறுவனர்

**ச. மெய்யப்பனார்**



டாக்டர் ச. மெய்யப்பன், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்.

பல்கலைக்கழகங்கள் பலவற்றில் இவர் அறக்கட்டளைகள் நிறுவியுள்ளார்.

**'வள்ளுவம்'** இதழின் நிறுவன ஆசிரியர்.

குன்றக்குடி அடிகளார் **'தமிழவேள்'** என்றும், தருமபுரம் ஆதீனத் தலைவர் **'செந்தமிழ்க் காவலர்'** என்றும் விருதுகள் வழங்கிச் சிறப்பித்துள்ளனர்.

**'பதிப்புச் செம்மல்'** என அறிஞர்கள் இவரைப் பாராட்டுவர்.

*கிடைக்குமிடங்கள்:*

**மணிவாசகர் நூலகம்**

12-B, மேலச் சன்னதி, சிதம்பரம் - 608001. ✆:04144-230069

31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 600108. ✆:044-25361039

6, சிவஞானம் தெரு, தி. நகர், சென்னை - 600017. ✆:044-24357832

110, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை - 625001. ✆:0452-2622853

15, ராஜ வீதி, கோயமுத்தூர் - 641001. ✆:0422-2397155

296/134, செரி சாலை, சேலம் - 636007. ✆:0427-4030709

28, நந்தி கோயில் தெரு, திருச்சி - 620002. ✆:0431-2706450

அச்சிட்டோர் : மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ்,
சென்னை – 600 021, தொலைபேசி : 25954528

# முதற்பதிப்பின் பதிப்புரை

செந்தமிழ் மொழியின் சிறப்புகள் பல. அவற்றுள் பேரிலக்கியங்களையும் அவைகளுக்குச் சிறந்த உரைகளையும் பெற்றிருப்பது ஒப்பில்லாத தனிச்சிறப்பு ஆகும். பேரிலக்கியங்களுக்குச் சீர்சான்ற உரை எழுதிய அறிஞர்களது அறிவு நலங்களை வெளிக்கொணர எண்ணி **உரையாசிரியர்கள்** என்னும் இந்நூலை வெளியிட விரும்பினோம். படைப்பாற்றல் மிக்க நூலாசிரியர்களை ஒத்த திறனும், மூல நூலைச் சிதைவுறாமல் காப்பாற்றிய திருப்பணியும் உரையாசிரியர்களுக்கு உரியன. இலக்கிய நூல்களைச் சிறந்த முறையில் அனுபவிப்பதற்கு இவ்வுரையாசிரியர்கள் உறுதுணையாக அமைந்த வரலாறும், நச்சினார்க்கினியர், பரிமேலழகர் போன்ற புலமை வீறு வாய்ந்த உரையாசிரியர்கள் தமிழுக்குச் செய்த அளப்பரிய தொண்டுகளும் இந் நூலில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இத் துறையில் இதுவே விரிவான முதல் ஆராய்ச்சி நூலாகும். இந்நூல், தமிழ் இலக்கியங்களின் பெருமையை மேலும் ஒருபடி உயரச் செய்யும் என்பது எங்கள் நம்பிக்கை.

இந் நூலினைத் திரு. **மு. வை. அரவிந்தன்** எழுதியுள்ளார். இவர், இந் நூலினை எழுதுவதற்கு எல்லா வகையானும் தகுதி வாய்ந்தவர்: ஆராய்ச்சி வன்மையும் சிந்தனைத் தெளிவும் உடையவர். இவருடைய அயரா உழைப்பு இந் நூலினை வளமுடைய தாக்கியுள்ளது.

இந் நூலால் தமிழுக்கு நல்லதோர் இலக்கியச் செல்வம் கிடைத்தது எனப் பெருமைப்படுகின்றோம். தமிழ் இலக்கிய வரலாறு ஒளிபெறுதற்கு இன்றியமையாத நூல்களை வெளி யிடுதல் எங்களின் நோக்கம் ஆகும். இத்துறையில் எங்கள் சிற்றிலக்கியச்செல்வ வரிசை எதிர்பார்த்த அளவு வெற்றி பெற்றிருக்கிறது. இதனை அடுத்து 'உரையாசிரியர்கள்' என்னும் இப்பெரு நூலினைத் தமிழ் ஆராய்ச்சியில் நாட்டம் பெருகிவரும்

இந் நாளில், காலத்துக்கேற்ற பணியாகக் கருதி வெளியிடுகின்றோம்.

விரிவான ஒரு பெரிய துறை பற்றிய இந் நூலை ஊதிய நோக்கு ஒன்றையே கருதி வெளியிட இயலாது; இலட்சிய நோக்கோடு வெளியிடுகின்றோம். இது உண்மை; வெறும் புகழ்ச்சியன்று. இந் நூலிற்கு அணிந்துரை, கருத்துரை நல்கிச் சிறப்பித்த அறிஞர்கள் அனைவருக்கும் எங்கள் நன்றி. எங்கள் நூல்களுக்குத் தமிழ் மக்கள் நல்கி வரும் ஆதரவு, இந் நூலுக்கும் தொடர்ந்து கிடைத்து எங்களை ஊக்குவிக்கும் என்று நம்புகின்றோம்.

# இரண்டாம் பதிப்பின் பதிப்புரை

'உரையாசிரியர்கள்' நூலின் திருத்தமான இரண்டாம் பதிப்பு வெளிவருகின்ற இந்த நாளில், நூலின் வரலாற்றை எண்ணிப் பார்க்கின்றேன்.

**வரலாறு**

*1957*-ஆம் ஆண்டு பி.ஏ. ஆனர்சு வகுப்பில் நான் பயின்று வந்த போது 'உரை ஒப்பாய்வு' என்ற பாடத்தை, கவிஞராய்—திறனாய்வுக் கலைஞராய் விளங்கிய திருவாளர் மு. அண்ணாமலை அவர்கள் கற்பித்தார்கள் "திருக்குறள் உரையாசிரியர்களில் பரிதி, மக்கள் போற்றும் உரைக் கலைஞர்; மணக்குடவர், பரிமேலழகர்க்குக் கருத்து வழங்கிய வள்ளல்'' என்று பல சிந்தனைவிதைகளை அள்ளித் தெளித்தார். அந்த விதைகள் என் நெஞ்சக் கழனியில் விழுந்து முளைத்தன. காலம், உரமிட்டு நீர்பாய்ச்சிப் பயிர் வளர்த்தது.

தமிழ்உலகில், புகழ்க்குன்றின் உச்சியில் நின்று பேரொளி வீசுகின்ற உரையாசிரியர்களைப் பற்றிப் பெருநூல் ஒன்றை வெளியிட ஆர்வம் கொண்டேன். என் ஆர்வம் நிறைவேறும் நாள் வந்தது.

*1967*-இல் காலம் கனிந்தது. அப்போது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சி மாணவராய் இருந்து, பிஎச்.டி பட்டம் பெற, ஆய்வு செய்து வந்த திரு மு. வை. அரவிந்தன் என் கவனத்தைக் கவர்ந்தார். நான் அவரை அணுகி என் திட்டத்தைக் கூறினேன். தயக்கத்தோடு-அச்சத்தோடு-பொறுப்போடு அந்தப் பணியைச் செய்து முடிப்பதாய் ஒப்புக்கொண்டார். அவருடைய சிந்தனை சொல் பேச்சு மூச்சு யாவும் 'உரையாசிரியர்கள்' ஆயின. நூல் தோன்றியது.

*1977*-இல், நூலின் திருத்தமான இரண்டாம் பதிப்பு உருவாகி வெளிவருகின்றது.

பத்து ஆண்டுகளுக்குள், ஆய்வுலகம் வளர்ந்துள்ளது; நூலாசிரியர் சிந்தனை வளர்ந்துள்ளது; தமிழறிந்தவர் ஆர்வம் வளர்ந்துள்ளது; பதிப்பகம் வளர்ந்துள்ளது. இந்த வளர்ச்சிகளின் முத்திரையை இந்த இரண்டாம் பதிப்பில் காணலாம்.

## பாராட்டு

பேராசிரியர் டாக்டர் வ.சுப. மாணிக்கம் அவர்கள் இந்த நூலை, "பல ஆய்வு நூல்களுக்கு மூல நூல்" என்று பலமுறை பாராட்டியுள்ளார்கள். தமிழறிந்தவர் அனைவரும் இதனை விரும்பி வாங்கினர். நூல்கள் விற்பனையின்றி, தேங்கிக்கிடந்த காலத்தில் சிறப்பாக இது விற்பனையாகி எழுச்சி யூட்டியது.

இந்த நூல், ஆசிரியரையும் பதிப்பகத்தையும் உலக மெங்கும் நன்கு அறிமுகப்படுத்தியது. சந்தித்தவர் அனைவரும் ஒருமுகமாக இதனைப் பாராட்டினர்.

இது திறனாய்வாளர்களைக் கவர்ந்து புகழ் பெற்றுள்ளது. சிறந்த நூல்களில் மேற்கோள் காட்டப் பெற்றுப் பெருமை பெற்றுள்ளது.

## நூலாசிரியர்

இந்த நூலின் ஆசிரியர் இயல்பாகவே ஆய்வு வேட்கை மிகுந்தவர்; எத்தகைய கடினமான செய்தியையும் அணுகிச் சிந்தித்துத் தெளிவாக வெளியிடும் ஆற்றல் உடையவர்; "இத்தனை நூல்களையும் இவர் எங்கே தேடிக் கண்டு பிடித்தார்? இத்தனை நூல்களையும் எவ்வளவு காலம் ஆழ்ந்து பயின்று தெளிவு பெற்றார்?" என்று எண்ணும் வகையில் எழுதுபவர். இவர் எழுதியதைவிட அதிகமாய்ச் சிந்தித்துள்ளார்; சிந்தித்ததை விடப் பல நூல்களை ஆழ்ந்து பயின்றுள்ளார்; ஆழ்ந்து பயின்ற நூல்களை விட அதிகமான நூல்களை ஒப்பிட்டு நோக்கியுள்ளார். நம் காலத்தில், உரையாசிரியர்களைப் பற்றிய சிந்தனைக்கு முழுவடிவம் தந்து, அதனை ஒரு கொள்கையாக்கி, ஆய்வுலகில் பரப்பி விட்டார். இந்த நூலின் வாயிலாக ஒரு கருத்துலகத்தைப் படைத்து நம்மை அந்த உலகத்திற்கு அழைத்துச் சென்று பல அரிய காட்சிகளை—கருத்துச் செல்வங்களை விளக்கிக் காட்டுகின்றார். இதுவே நூலாசிரியர் பெற்ற வெற்றியின் இரகசியம்.

## ஆய்வுநெறி

இந்த நூலாசிரியரின் ஆய்வுநெறி, பல தனிச்சிறப்பியல்பு களைக் கொண்டது:

(1) உண்மை, எங்கே எந்த வடிவத்தில் யாரிடத்தில் இருப்பினும், அதனைத் தேடிக் கண்டு பிடித்து வெளியே கொண்டுவந்து, பலர் முன்னிலையில் வைத்துக் காட்டுதல்.

(2) நடு நிலைமைக்கு ஓர் எடுத்துக் காட்டாய் விளங்கி, சாமம் செப்பாது கண்டது மொழிதல்.

(3) பல வகையில் ஆய்ந்து முடிவைத் திட்டவட்டமாய்க் கூறுதல்.

(4) கற்போரைக் குழப்பத்தில் ஆழ்த்தாமல், தெளிவாய்—எளிமையாய் அரிய கருத்துக்களை விளக்குதல்.

(5) படிப்போர்க்கு, சுவையான கதை படிக்கும் போது தோன்றும் இன்ப உணர்வை நூல் முழுதும் உண்டாக்குதல்.

(6) புதுமையும் எழுச்சியும் எழிலும் அமைந்த கவர்ச்சியான நடையைக் கையாளுதல்.

**பயன்**

இந்த நூலால் விளைகின்ற பயன்கள் பல. தமிழ் முழுதும் அறிய, இது ஒரு கருவி நூலாய் உள்ளது. இதனைக் கற்றோர், "உரையாசிரியர்களைப் பற்றிய—பழந் தமிழ்த் திறனாய்வுக் கலையைப் பற்றிய கலைக் களஞ்சியம்" என்று பாராட்டி யுள்ளனர். உரையாசிரியர்களைப் பற்றி விரிவாக ஆராய இந்த நூல் உறுதுணை புரிந்து வருகிறது.

**சாதனை**

ஆரவாரம் மிகுந்த மக்களிடையே வாழ்ந்து கொண்டு—விளம்பரப் புயல் வீசுகின்ற காலச் சூழலில் இருந்து கொண்டு அமைதியாக ஆற்றிய சாதனையின் விளைவே இந்த நூல். பயன் மிகுந்த பணி செய்தோம் என்ற மன நிறைவைத் தருகின்றது இந்த வெளியீடு.

**ச.மெய்யப்பன்**

# முதற்பதிப்பின் முன்னுரை

தமிழ்மொழியில் இலக்கிய ஆராய்ச்சியும் மொழி ஆராய்ச்சியும் இன்று விரைவாக வளர்ந்து வருகின்றன. அவ்விரு துறைகளிலும் பலர் ஆர்வத்துடன் ஈடுபட்டு வருகின்றனர். உரையாசிரியர்கள், பல ஆண்டுகளுக்கு முன்னரே அவ்விரு துறைகளிலும் நுழைந்து செயற்கரிய செயல்கள் பல செய் துள்ளனர். அவர்கள் ஆராய்ந்து கூறியுள்ள கருத்துக்களை அறிந்து இன்றுவரை வளர்ந்து வந்துள்ள ஆராய்ச்சிக்கு எல்லை கண்டு, மேலும் தொடர்தல் வேண்டும். முன்னோர்கள் விட்டுச் சென்ற இடத்திலிருந்து, இன்றுள்ளவர்கள் தொடங்கினால்தான் ஆராய்ச்சி வளரும்; கருத்துச் சிறக்கும்; புதுமை வெளிப்படும். இன்றேல் சொன்னவற்றையே திரும்பத் திரும்பச் சொல்லி. செய்தவற்றையே மீண்டும் மீண்டும் செய்து இளைக்கும் அவலநிலை ஏற்படும்; தேக்கமும் குழப்பமும் மிகும். ஆதலின் உரையாசிரியர்களின் கருத்துகளை நாம் அறிவது, முன்னேற்றத் திற்கு உறுதுணை செய்யும்.

ஆராய்ச்சி முடிவற்றது. ஆனால் ஏதேனும் ஒரு முடிவுக்கு வராமல் இருப்பது ஆராய்ச்சியாகாது. புதுமையைப் போற்ற வேண்டும். ஆனால், பழமையைப் புறக்கணிக்கக் கூடாது. பழமையும் புதுமையும் இணைந்தால்தான் ஆராய்ச்சி உலகம் வளரும்; செப்பமடையும்; சிறக்கும். பழமையும் புதுமையும் இணைதல் வேண்டும் என்ற நல்ல நோக்கத்துடன் **உரையாசிரியர்கள்** என்ற இந்த நூல் தோன்றியதாகும்.

காலத்திற்கு ஏற்ற புதிய கருத்துகளை இலக்கிய உலகில் நிலவச் செய்ய வேண்டும். அவ்வாறு செய்தால்தான் பழைய இலக்கியங்கள் ஆர்வத்துடன் கற்கப் பெறும். அத்தகைய முயற்சிக்கு 'உரையாசிரியர்கள்' என்ற இந்த நூல் உறுதுணை புரியும் என்று நான் நம்புகிறேன்.

இந்த நூலை நுணுகி ஆராய்ந்து, அணிந்துரைகள் வழங்கியுள்ள அறிஞர் பெருமக்கள் அனைவர்க்கும் என் உளங் கனிந்த நன்றி உரியதாகும். வித்துவான் திரு. **செ. வேங்கடராமச்**

செட்டியார் அவர்களும் புலமை மிகுந்த சான்றோரும் திருமுறைச் செல்வரும் ஆகிய வித்துவான் திரு. **க. வெள்ளைவாரணன்** அவர்களும், பேரிலக்கியங்களைத் தம் புதுவகை முயற்சியால் பொது மக்களுக்கு அறிமுகப்படுத்திப் புலவர் உலகில் புகழ்பெற்று விளங்கும் கலைமகள் ஆசிரியர் திரு. **கி. வா. ஜகந்நாதன்.** அவர்களும், புதிய இலக்கியப் படைப்பில் ஊக்கம் கொண்டுள்ள திரு. டாக்டர் **சி. பாலசுப்பிரமணியன்** அவர்களும் இந் நூலுக்கு அணிந்துரைகள் வழங்கிச் சிறப்பித்துள்ளனர். அவர்கள் அனைவர்க்கும் நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன்.

**மு. வை. அரவிந்தன்**

# இரண்டாம் பதிப்பின் முன்னுரை

'உரையாசிரியர்கள்' நூலின் முதற்பதிப்பு, 1968-ஆம் ஆண்டில் வெளிவந்தது.

உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாடுகள் வழங்கிய ஆய்வுகள் நூல் வடிவம் பெற்று வெளி வந்துள்ளன. இந்தியப் பல்கலைத் தமிழாசிரியர் கழகம் பல கருத்தரங்குகளை, பல்வேறு நகரங்களில் நடத்தி, கட்டுரைகளைத் தொகுத்து வெளியிட்டுள்ளது. பல்கலைக் கழகங்களும், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனமும் சிறந்த ஆய்வுக்களங்களாகச் செயல்பட்டுள்ளன. கல்லூரித் தமிழ் மன்றங்களும், பெரு நகரங்களில் பொதுமக்கள் நடத்திவரும் இலக்கியக் கழகங்களும் சிந்தனை அரங்கமாகி ஆக்கப்பணிகளை ஆற்றியுள்ளன. முதுகலைப் பட்டம் பெற்ற தமிழ் மாணவர்கள் ஒழுங்குபட்ட ஆய்வு நெறிகளை மேற்கொண்டு ஆய்வு நடத்தியுள்ளனர். தமிழ் இதழ்கள், அறிஞர்களின் கட்டுரைகளை வெளியிட்டு ஆராய்ச்சி உலகை விரிவுபடுத்தியுள்ளன.

புதுமைக் கவிஞர் பாரதியார்,

**தெளிவுறவே அறிந்திடுதல்; தெளிவுதர**
**மொழிந்திடுதல்; சிந்திப் பார்க்கே**
**களிவளர உள்ளத்தில் ஆனந்தக்**
**கனவுபல காட்டல்; கண்ணீர்த்**
**துளிவரஉள் ளுருக்குதல்இங் கிவைஎல்லாம்**
**நீஅருளும் தொழில்கள் அன்றோ?**
**ஒளிவளரும் தமிழ்வாணீ! அடியேற்கு**
**இவையனைத்தும் உதவு வாயே**

என்று தமிழ்வாணியிடம் முறையிட்டுப் பெற நினைத்த பேறுகளை, தமிழ் ஆய்வாளர் ஒவ்வொருவரும் பெற முயன்று வருகின்றனர்.

நாள்தோறும் விரிவடைந்து வருகின்ற ஆய்வுலகில் மலர்கின்ற சிந்தனைகள், உரையாசிரியர்களின் உள்ளத்தை

ஊடுருவிச் சென்று, பல வேறு புதிய கோணங்களில் நோக்கி, அவர்களின் தமிழ்ப்பணியைச் சிறந்த முறையில் மதிப்பிட்டுப் பயனுள்ள கருத்துக்களை வெளியிட்டு வருகின்றன. கடந்தகாலக் கருத்துக்களை நெஞ்சில் நிறுத்தி, நிகழ்காலத்தில் வளர்ந்து வரும் புதிய சிந்தனையைத் தழுவி, எதிர்காலத்தை வரவேற்கக் காத்திருக்கும் நெடிய நோக்கு ஆராய்ச்சியாளர்களிடம் அமைந் துள்ளது.

மாறி வருகின்ற சூழலை உணர்ந்து, வளர்ந்து வரும் புதுமையைப் போற்றி, தேவையற்ற கருத்தை விலக்கி இந்த இரண்டாம் பதிப்பு, செப்பம் செய்யப்பட்டுள்ளது. இன்று வரை வளர்ந்துள்ள ஆராய்ச்சியை வரையறுத்துக் கோடிட்டுக் காட்டி, இனி வளர வேண்டிய துறைகளுக்கு வழி வகுக்கும் முயற்சியின் பயனாய் இந்தப் பதிப்பு உருவாகியுள்ளது.

இந்த நூல் வெளி மாநிலங்களில் வாழ்கின்ற தமிழறிஞர் களிடம் சென்று சேர்ந்துள்ளது. கடல் கடந்த நாடுகளில் வாழ்கின்ற தமிழ்ச் சான்றோர்களின் கைக்குச் சென்று மகிழ்வூட்டி யிருக்கிறது. தமிழறிந்த பிறமொழிப் புலமையாளர்களின் பார்வையில்பட்டுப் பாராட்டப் பெற்றுள்ளது. தமிழகத்தில் உள்ள பல வேறு தமிழ் நிலையங்களுக்கு இந்த நூல் சென்றுள்ளது. தமிழ் பயிலும் மாணவர் முதல், கற்றுத் துறைபோகிய வித்தகர் வரை; ஆய்வுலகில் அடி எடுத்து வைக்கும் இளைஞர் முதல் ஆய்வுலகில் சாதனை பல புரிந்த மூதறிஞர்வரை; எழுதப் பயிலும் இளம் எழுத்தாளர் முதல் எழுத்துலக வேந்தர் வரை அனைவர் கருத்தையும் இந்த நூல் ஈர்த்துள்ளது.

1968ஆம் ஆண்டு, தமிழ் வளர்ச்சிக் கழகம் (தமிழக அரசு) இதனைச்சிறந்த நூலாகத் தேர்ந்தெடுத்து ஈறாயிரம் ரூபா பரிசு நல்கி என்னை ஊக்குவித்தது.

வணக்கத்திற்குரிய பெரியவர் மகாவித்துவான் **மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை** அவர்களும், தமிழ் மூதறிஞர் **கி. வா. ஜகந்நாதன்** அவர்களும், இலக்கிய வரலாற்றுக் கருவூலம் **மு. அருணாசலம்** அவர்களும் தாங்கள் படித்துப் பார்த்துத் திருத்திய பிரதியை மனமுவந்து எனக்குத் தந்து உதவினர். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை வெளியிட்டு வருகின்ற தமிழாய்வில், ஆராய்ச்சி அறிஞர் **மு. சண்முகம் பிள்ளை** அவர்கள் திறனாய்வு நோக்கில் நூலில் செய்ய வேண்டிய மாறுதல்களை எடுத்துக்காட்டினார்கள். அறிஞர் பெருமக்கள் அனைவர்க்கும் நன்றி செலுத்துகின்றேன்.

இந்த நூல் தோன்றவும் சிறக்கவும் திருத்தம் பெறவும் ஊக்கவுரை கூறி உறுதுணையாய் இருந்த பதிப்புச் செம்மல் தமிழவேள் ச. **மெய்யப்பன்** அவர்களுக்கு என் நன்றி என்றும் உரியதாகும்.

தமிழ் நூற்பதிப்பகங்களை நினைக்கின்றபோது, சென்னை நகரம்தான், முதலில் நம் நினைவுக்கு வரும். பல பதிப்பகங்கள், பல ஆண்டுகளாய்ச் சென்னையில்தான் உள்ளன. இந்த நினைவை மாற்றி, சிதம்பரத்திலும் ஒரு பதிப்பகம் உண்டு என்று நினைவூட்டியது மணிவாசகர் நூலகம். ஆராய்ச்சி என்பது ஓய்வு பெற்றவர் செய்ய வேண்டிய பணி என்று இருந்த நிலையை மாற்றியது, மணிவாசகர் பதிப்பகம்; ஆராய்ச்சி மாணவர்களையும் நடுத்தர வயதினர்களையும் ஆர்வமுள்ள இளைஞர்களையும் ஆராய்ச்சியில் ஈடுபடுத்தி, சிறந்த திறனாய்வு நூல்களை வெளியிட்டது மணிவாசகர் பதிப்பகம். அது தனக்கு என்று ஒரு வழியை வகுத்துக்கொண்டு, முறையாகவும் செப்பமாகவும் தரமான நூல்களை வெளியிட்டு வருகிறது.

இத்தகைய தனிச் சிறப்புகளை உடைய மணிவாசகர் பதிப்பகம் ‘உரையாசிரியர்கள்’ நூலின் முதற்பதிப்பை வெளியிட்டுச் சாதனை புரிந்தது. இப்போது இரண்டாம் பதிப்பை வெளியிட்டு, முன்பு பெற்ற சாதனைக்கும் வெற்றிக்கும் மெருகு ஊட்டி, ஒளிமயமான எதிர்காலத்தை நோக்கிப் பீடுநடை போடுகிறது.

தமிழ் கூறும் நல்லுலகம் இந்த நூலை வரவேற்று, என்னை ஊக்குவிக்கும் என்று நம்புகின்றேன்.

**மு. வை. அரவிந்தன்**

# ஆய்வுரைகள்

## மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை

நூல், பண்பட்ட ஆய்வுத் திறனைப் புலப்படுத்துகின்றது. பெயரை நோக்கும்போது இந்நூல் உரையாசிரியர்களின் வரலாறுகள் எனக் கருதச் செய்கின்றது. உண்ணுழைந்து ஆராய்வார்க்கு இஃது உரையாசிரியர்களின் கருத்துக் கருவூலமாமென்பது புலனாம். இதன் தெளிந்த உரை நடை, நடை பயிலும் கல்லூரி மாணவர்க்கும் பிறர்க்கும் நன்மாதிரியாய் அமைந்துள்ளமை பெரிதும் பாராட்டத் தக்கது.

இதுகாறும் உரையாசிரியர்களின் அளப்பருஞ் சிறப்பினை ஆய்ந்து தெரிவிக்கும் நூல், வெளிவாராப் பெருங்குறையை இந்நூல் நீக்குவதுடன், அரும்பொருள் பலவற்றையும் அள்ளி வழங்கும் வள்ளன்மை யுடையதாயும் திகழ்கின்றது. மலர்தோறும் சென்று மணங்கமழ்தேனைச் சேகரித்துப் பக்குவப்படுத்திப் பலர்க்கும் பயன்படச் செய்யும் தேனீயின் முயற்சியை மானும் செவ்விய முயற்சியை எவ்வயினோரும் போற்றுவர் என்பது திண்ணம்.

சுருங்கக் கூறின், எதிர்கால ஆராய்ச்சியாளர்க்குக் கருவி நூல்களுள் ஒன்றாகத் திகழும் இந்நூலெனல் சாலவும் பொருந்தும்.

## மு. சண்முகம் பிள்ளை

தமிழ் நூற்பரப்பில் உரை நூல்கள் சிறப்பிடம் பெறுகின்றன. காலத்தால் முற்பட்ட நூல்களையெல்லாம் வாழவைக்கும் ஓர் அருமருந்தாக இவை திகழ்கின்றன.

இறையனார் களவியல் உரையாசிரியர் முதலாக இன்று வாழும் உரையாசிரியர்கள் வரையில் உள்ள பற்பல வகையான நூலுரையாசிரியர்களையும் இந் நூலாசிரியர் அரிதின் ஆராய்ந்து பற்பல செய்திகளையும் புதிய கோணத்தில் அமைத்துத் தந்துள்ளார்.

உரையாசிரியர் ஒவ்வொருவருடையவும் உரைகளை இவர் நன்கு ஊன்றிக் கற்று, அவ்வவற்றில் காணும் தனியியல்புகளையும் ஒப்புமைப் பகுதிகளையும் பிறவியல்புகளையும் வகுத்துத் திறம்பட விளக்கிச் செல்கிறார். முந்திய ஆராய்ச்சியாளர் கொண்ட முடிவுகளையும் உரிய இடங்களில் எடுத்துக் காட்டியுள்ளார்.

உரையாசிரியர்கள் என்னும் இவ்வாய்வு நூலைப் பொதுப் பகுதி, சிறப்புப் பகுதி என இரு பகுதியாக ஆய்வாளர் பகுத்துக் கொண்டுள்ளார். பொதுப் பகுதியில் உரை வளர்ந்த வரலாறு, உரையாசிரியர் தந்த உரை வகைகள் அவற்றின் பொதுவியல்புகள் ஆகியவற்றை ஆராய்ந்துள்ளார். சிறப்புப் பகுதியில் உரையாசிரியர் பரம்பரையை முதல் வழி சார்பு நூல் வகையில் பகுத்துக் காட்டத் தக்கனவற்றை வகுத்துணர்த்தியும், உரைவேற்றுமைகளையும் மேற்கோள் பாடல்களையும் விளக்கியும் செல்கிறார்.

இலக்கண உரையாசிரியர்கள் இலக்கிய உரையாசிரியர்கள் சமய நூல் உரையாசிரியர்கள் எனப்பாகுபாடு செய்து கொண்டுள்ளமை இந் நூலின் ஒரு தனிச் சிறப்பாகும்.

**தமிழாய்வு—தொகுதி–1, பகுதி–1, பக் 27, 28. சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு—1972.**

# KAMIL ZVELEBIL

M. V. Aravindan, the author of an excellent book in Tamil called "Uraiya ciriyarkal" Commentatiors (Madras 1968), gives an illustration which shows how very much is, in its structure Nakkirar's prose akaval like.

**The Smile of Murugan,**
**"On Tamil Literature of South India".**
**Page - 255.**

# அறிமுகம்

**வித்துவான். செ. வேங்கடராமச் செட்டியார்**

அமிழ்தினும் இனிய தமிழ் மொழியில் இலக்கண நூல்களும் இலக்கிய நூல்களும் சாத்திர நூல்களும் தோத்திர நூல்களும் நிரம்பியிருத்தல் போலவே அவற்றை விளக்கம் செய்யும் உரை நூல்களும் நிரம்பியுள்ளன.

மூல நூல்களுக்கு உள்ள பெருமை உரை நூல்களுக்கும் உண்டு. சில மூலநூல்கள் உரை நூல்களாலேயே பெருமை அடைந் துள்ளன என்னலாம். உரை நூல்கள் இல்லையேல் சில மூல நூல்கள் விளக்கம் பெறாமல் மறைந்து போயிருத்தலும் கூடும். இதை உளங்கொண்டு நோக்கினால், மூல நூல்களை மக்களிடையே மதிப்புடன் வாழச் செய்யும் பெருமை உரை நூல் களுக்கே உண்டு என்பது புலனாம். இப்பெருமை உரைநூல் களுக்கு இருத்தலால், மூல நூலின் பெயரை விடுத்து இளம்பூரணம், சேனாவரையம், பேராசிரியம், நச்சினார்க்கினியம் என உரையாசிரியரின் பெயரால் தொல்காப்பியத்தில் உள்ள அதிகாரங்களை மக்கள் வழங்கலாயினர்.

தமிழ் மொழியில் பெருகக் காணப்படும் இலக்கியம், இலக்கணம் என்ற இருவகை நூல்களில் முதலில் இலக்கண நூல்களுக்கே உரை எழுதும் வழக்கம் உண்டாயிற்று. மிகப் பழைய இலக்கண நூலாகிய தொல்காப்பியத்திலேயே இலக்கண நூலுக்கு உரை வகுக்கும் முறையும் கூறப்பட்டிருத்தல் காணலாம்.

பழிப்பில் சூத்திரம் பட்ட பண்பிற்
கரப்பின்றி முடிவது காண்டிகை யாகும்

(மரபியல்–103)

எனவும்,

சூத்திரத் துட்பொரு ளன்றியும் யாப்புற
வின்றி யமையா தியைபவை யெல்லாம்
ஒன்ற உரைப்பது உரை எனப்படுமே

(மரபியல்–105)

உ.2.

எனவும், தொல்காப்பியர் கூறியுள்ளதை நோக்கின் அவர் காலத்திற்கு மிக முற்பட்ட காலத்திலேயே காண்டிகையும் விருத்தியும் ஆகிய உரை வகைகள் வழக்கில் இருந்திருக்க வேண்டும் என்பது புலனாம்; என்னை? இலக்கியம் கண்டன்றி இலக்கணங் கூறல் இயலாமையின் என்க.

உரை செய்யும் முறையைத் தெரிவித்த தொல்காப்பியர் நூலுக்கு அத்தகைய உரைகள் தோன்றுதல் இயல்புதானே! சிலவகை எழுத்தில் பலவகைப் பொருளைச் செறித்து இனிது விளக்கும் சூத்திர்யாப்பினால் இயன்ற இலக்கண நூல்கள் மிக்க நுண்ணறிவுடையார்க்கன்றிப் படித்தவுடன் பொருள் விளங்காமையின் அவற்றிற்கு உரை தோன்றுதல் இன்றியமை யாததும் ஆயது. இதனால், உரை நூல்களின் தேவை முதற்கண் சூத்திரயாப்பினால் அமைந்த இலக்கண நூல்களுக்கே ஏற்பட்டது என்பது தெளிவாகின்றது.

இவ்வாறு இலக்கண நூல்கள் உரைநூல்களால் நன்கு விளக்கம் பெற்று மக்களிடையே நன்மதிப்புப் பெற்று நிலவுவதைக் கண்ட அறிஞர்கள் சிறந்த இலக்கிய நூல்களுக்கும் இத்தகைய உரைகள் இருப்பின் அவை மக்களிடையே மதிப்புப் பெற்று நெடிது வாழும் என்று கருதுவாராயினர். திருக்குறள், சிலப்பதி காரம், சீவகசிந்தாமணி போன்ற இலக்கியங்கள் இவ்வாற்றான் உரைநூல்களால் விளக்கம் பெற்று மக்களிடையே நல்வாழ்வு பெற்றன. சிலப்பதிகாரம், அகநானூறு, பதிற்றுப் பத்துப் போன்ற இலக்கியங்கட்கு, எளிதில் விளங்காத இடங்களை மட்டும் விளக்கும் குறிப்புரையே முதற்கண் தோன்றியது. அக்குறிப்புரை யாலும் விளக்கம் பெறாத மக்கள் உளங்கொளப் பின்பு பொழிப்புரையும் விளக்க உரையும் தோன்றலாயின. இன்றைய நிலையில் உரையில்லாத நூல்களே இல்லை என்னுமாறு உரை நூல்கள் வளர்ச்சி பெற்று வருகின்றன.

இங்ஙனம் வளர்ச்சி பெற்றுவரும் உரை நூல்களை இயற்றிய ஆசிரியர்கள் மிகப்பலராவர். இடத்தானும் காலத்தானும் வேறு பட்ட இவ்வுரையாசிரியர்களின் வரலாறு முழுமையானதாக இதுகாறும் வெளிவராதது தமிழ் மொழிக்கு ஒரு குறையாகவே இருந்தது. அந்தக் குறை நீங்கத் திரு மு. வை. அரவிந்தன், 'உரையாசிரியர்கள்' என்ற பெயரால் ஒரு விரிவான அரிய ஆராய்ச்சி நூலைத் தந்துள்ளார்கள். இறையனார் களவியல் உரையாசிரிர் முதலாக இன்று வாழும் உரையாசிரியர்கள் வரையில் உள்ள பல உரையாசிரியர்களைப் பற்றியும் தம் நுண்மாண் நுழைபுலங் கொண்டு ஆராய்ந்து அரிதின் இயற்றிய

இந்நூல் தமிழன்னைக்குச் சிறந்த புதிய அணிகலனாகத் திகழும் பெருமை யுடையதாகும்.

இவர், உரையாசிரியர் ஒவ்வொருவரைப் பற்றியும் நன்கு ஆராய்ந்துள்ளார். ஓர் உரையாசிரியரைப் பற்றிக் கூறும் போது அவரைப்பற்றி இதுவரையில் யார் யார் என்னஎன்ன கூறியுள்ளார் என்பதை எல்லாம் பல நூற்சான்றுகள் கொண்டு விளக்கிச் செல்கின்றார். ஒவ்வொருவரைப் பற்றியும் பல கோணங்களில் ஆராய்ந்துள்ளார். உரை எழுதிய ஆசிரியரின் நுட்பமான கருத்துக்கள், பழைய இலக்கியங்களின் கருத்துக்களை யுணர்தற்கு எப்படி உதவுகின்றன என்பதையெல்லாம் அரிய மேற்கோளுடன் விளக்கியுள்ளார். உரை நூல்கள் நமக்கு எப்படிச் சிறந்த பயனை அளித்து வருகின்றன என்பதை இவர் ஒன்பது வகைப்படுத்தி விளக்கியுள்ள முறை போற்றுதற்குரியதாகும்.

நச்சினார்க்கினியர் தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் "யாத னுருபிற் கூறிற் றாயினும், பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும்'' *(சொல்-107)* என்ற சூத்திரத்தின்கீழ், 'கொக்கினுக்கொழிந்த தீம்பழம்' என்புழியும், 'கொக்கினின்றும்— என ஐந்தாவதன் பொருளாயிற்று' என்று உதாரணங்காட்டி விளக்கியுள்ளார். இதனால்,

**கொக்கினுக் கொழிந்த தீம்பழம் கொக்கின்**
**கூம்புநிலை யன்ன முகைய ஆம்பல்**
**தூங்குநீர் குட்டத்துத் துடுமென வீழும்**

**(நற்றிணை—280)**

என்ற செய்யுட்பகுதி எப்படித் தெளிவுபெற்றுள்ளது என்பதை இவர் விளக்கத் தவறவில்லை. 'கொக்கு வந்து இருந்ததனால் கிளை அசைதலின் உதிர்ந்த இனிய மாங்கனியானது ஆழமான நீரிலே துடுமென வீழாநிற்கும்' என்று நற்றிணையுரையில் எழுதியுள்ளதையும் மேற்குறித்த நச்சியனார்கினியரின் இலக்கணக் குறிப்பையும் இணைத்து நோக்கி இவர் கூறும் முடிவு சிறப்பாக அமைந்துள்ளது. "கொக்கு வந்து உட்கார்ந்ததால் மாங்கனி வீழ்ந்தது என்று கூறுவது பொருத்தமாகத் தெரியவில்லை; கொக்கு என்ற சொல்லுக்கு மாமரம் என்ற பொருள் உண்டு. 'மாமரத்திலிருந்து உதிர்ந்த இனிய பழம்' என்ற நச்சினார்க் கினியரின் குறிப்பின்படி பொருள் கொள்வதே பொருத்தமாக வுள்ளது. இத்தகைய சிறந்த பொருள் விளக்கத்திற்கு நச்சினார்க் கினியர் உரை பேருதவி புரிகின்றது" என்ற இவர் விளக்கம் தெளிவுடையதாக—பொருத்தமுடையதாக உள்ளது.

இக்காலத்து அறிஞர்களின் ஆர்வமும் நினைவும் பற்றி இவர் கூறும் கருத்துக்கள் சிறப்பாக அமைந்து இவர் ஆர்வத்தையும் நினைவையுங்கூடப் புலப்படுத்துகின்றன.

“ஒரு நூலுக்கு வழங்கிய பல்வேறு உரைகளையும் தொகுத்துக் காணவேண்டும் என்ற ஆர்வம் இக்காலத்தில் ஏற்பட்டுள்ளது. பலருடைய கருத்துக்களையும் ஒரே இடத்தில் காணும் வேட்கை பிறந்துள்ளது; உரை வேற்றுமைகளைக் கண்டு நல்லனவற்றையும் அல்லனவற்றையும் சீர்தூக்கும் நோக்கம் வளர்ந்து வருகின்றது. செல்வாக்கு உடையவர்களின் சொல்லை அப்படியே ஏற்கும் நிலை மாறி, நல்லது எது, சிறந்தது எது, பொருத்தமானது எது—என்று ஆராயும் திறன் பெருகி வருகின்றது. புகழ்பெற்ற உரையாசிரியர்களின் பொருந்தாக் கருத்துக்களை மறுக்கும் துணிவு தலை தூக்கியுள்ளது. யார் சொல்கின்றார்கள் என்று பார்க்கும் நிலை மாறி என்ன சொல்லுகின்றார் என்று நுணுகி நோக்கும் நிலை ஏற்பட்டு வருகின்றது” என்று இவர் கூறும் கருத்துக்கள் கருத்தூன்றிக் காணத்தக்கவையாகும்.

பழைய உரைகளின் பெருமைகளை இவர் குறிப்பிடும் போது, “பழைய உரைக்ள் ஆராய்ச்சி உலகத்தின் திறவுகோல்; இலக்கியம் இலக்கணம் கற்க முயன்று தளர்நடைபோடும் மாணாக்கர்களின் கைகளைப் பற்றி நடத்திச் செல்லும் தந்தை; அறிவு செழிக்குமாறு ஊட்டி வளர்க்கும் தாய்; காலத்தையும் இடத்தையும் கடந்து வந்து விரும்பிய போதெல்லாம் அறிவுபுகட்டும் பேராசான்” என்று புகழ்ந்து கூறும் இவர் கருத்துக்கள் இக்கால மாணவர்களின் உள்ளத்தில் பதிய வேண்டிய மிக நல்ல கருத்துகளாகும். உரை நூல்களில் இவர்க்குள்ள ஈடுபாட்டை இப்பகுதி இனிது விளக்குவதோடு, இந்த ஈடுபாடே ‘உரையாசிரியர்கள்’ என்ற இந்நூலை இயற்ற இவரைத் தூண்டியது என்பதையும் புலப்படுத்தாமல் இல்லை.

ஒவ்வோர் உரையாசிரியரைப் பற்றியும் இவர் எழுதும் போது அவர்தம் உரையின் சிறப்பியல்புகளைப் பல நோக்கோடு ஆராய்ந்து விளக்குகின்றார். இளம்பூரணர் உரை முழுவதையும் நுணுகி ஆராய்ந்து தாம் கண்ட முடிபாக அவர்தம் உரையின் இயல்புபற்றி எழுதியுள்ளார்.

“இளம்பூரணர் உரை ஆழமான தெளிந்த நீரோடை போன்றது; பற்றற்ற துறவி தூய்மையான வாழ்வு நடத்தி மூத்து முதிர்ந்து காவி உரையுடன்—அருள் பழுத்த நெஞ்சத்துடன் முகம் மலர்ந்து நம்மிடம் இன்சொல் பேசுவது போன்ற இன்ப உணர்வை இவர் உரை உண்டாக்குகின்றது ஆரவாரமும் பகட்டும் இவர்

உரையில் எங்கும் காண்பது அரிது. மிகமிகச் சுருக்கமாகத் தெளிந்த கருத்தைக் கூறி விளங்க வைக்கின்றார். தாம் கருதியதே சிறந்தது என்று எண்ணும் வகையில் இவர் எவ்விடத்திலும் எழுதவில்லை. பிறர் கருத்தை மதித்தலும், புலமை முதிர்ச்சியும், நடுநிலைமையும் உரை முழுவதும் வெளிப்படுகின்றன" என்று இவர் கூறும் கருத்துக்கள் பலரும் போற்றும் வகையில் அழகாக-இனிமையாக அமைந்துள்ளன.

சேனாவரையர் பாடஞ்சொல்லும் ஆசிரியராக இருந்தவர் என்பதையும், படைத்தலைவர் குடியில் பிறந்தவர் என்பதையும் உரையில் அவர் காட்டும் மேற்கோள்களைக் கொண்டே நிறுவியுள்ளமை பொருத்தமிக்கதாக உள்ளது. மேலும் அவர் காட்டும் உதாரணங்களைக் கொண்டு அவர் காலத்து அறநெறிகள், சாதிகள், விளையாட்டுக்கள், மக்கள் வாழ்க்கை நிலை, நாகரிகம் முதலியவற்றைக் கண்டு கூறுகின்றார். உரையாசிரியர்கள் ஒவ்வொருவர் உரையிலிருந்தும் இவ்வாறே அவர் கால இயல்பு இன்னது என்பதைப் பலவகையான் ஆராய்ந்து எழுதியுள்ளமை பாராட்டுதற்குரியதாகும்.

நச்சினார்க்கினியரைப் பற்றி மிக விரிவாகப் பல நோக்கோடு ஆராய்ந்து பற்பல கருத்துக்களைத் தெளிவுபடுத்தி யுள்ளார். இப் பகுதி தனி நூலாகவே வெளிவரத்தக்க பெருமையுடையதாக விளங்குகின்றது.

"நச்சினார்க்கினியர் நூலறிவோடு நுண்ணறிவும் உடையவர். பலவேறு கலைகளைக் கற்றுத் துறைபோகியவித்தகர். பாட்டிற்குச் சொற்பொருள் கண்டு எழுதுவதோடு அவர் நிற்கவில்லை. நூலில் இடம் பெறும் சமயக் கருத்து, இசை, நாடகம் முதலிய கலைகளைப் பற்றிய அறிவு, ஆடை அணி பற்றிய நுண்ணிய விளக்கம், உலகில் உள்ள பல இனத்து மக்களின் பழக்க வழக்கம், பண்பாடு இவற்றை அறிந்தவர். தமிழில் உள்ள இலக்கணம், இலக்கியம், நிகண்டு, காவியம், புராணம் ஆகியவற்றை நன்கு அறிந்தவர். சோதிடம், மருத்துவம் பற்றியும் கட்டடக் கலை பற்றியும் போதிய அறிவு இவரிடம் உண்டு. பயிர் வகையும் உயிர் வகையும் பற்றி நிறைய அறிந்தவர்" எனத் தொகுத்துக் கூறி, பின் இவற்றை விரித்தும் எழுதியுள்ளார். நச்சினார்க்கினியரின் உரையென்னும் அமுதக் கடலில் பலமுறை தோய்ந்த உள்ளத்தவர் இவர் என்பதை இவர் கூறும் விளக்கம் நன்கு புலப்படுத்துகின்றது.

அடியார்க்கு நல்லார் உரையின் பெருமையை இவர் நன்கு விளக்கியுள்ளார்: "அடியார்க்கு நல்லார் தமிழ்க் கலையின் மாண்பைப் போற்றி விளக்கியுரைத்த குரல், காலங்கடந்து வந்து

தெளிவாக ஒலிக்கின்றது. இருபதாம் நூற்றாண்டில் தமிழிசை மறுமலர்ச்சிக்கு அடியார்க்கு நல்லார் உரையே பெரிதும் உதவியது. தமிழ்க் கலைகளைப் பல நூற்றாண்டுகளாகக் காத்து வழங்கிய பெருமை இவர் உரைக்கு உண்டு.”

“மேலைநாட்டுத் திறனாய்வார்போல அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்தைப் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்துள்ளார். காப்பிய அமைப்பு, கதையின் கட்டுக் கோப்பு, நிகழ்ச்சி ஒருமைப்பாடு, காப்பிய மாந்தரின் பண்புகள், நூலாசிரியரின் ஆழ்ந்திருக்கும் கவியுளம், செயல் நிகழுங் காலஎல்லை, இடம் ஆகியவற்றையெல்லாம் நுணுகி நோக்கி ஆராய்ந்து திறம்படக் கூறுகின்றார்.”

என்ற பகுதிகளை உளங்கொண்டு நோக்கின், அடியார்க்கு நல்லார் உரை என்னும் கனிகளைப் பிழிந்து இவ்வாசிரியர் நமக்குக் கொடுக்கும் இனிய பிழிவு இது என்று புகழத்தான் வேண்டியுளது.

பரிமேலழகர் உரையின் இயல்பை விளக்கியிருக்கும் கருத்துகளும் ‘குறள் பெற்ற புது விளக்கம்’ என்ற தலைப்பில் இவர் வகுத்துக் காட்டும் உரைப் பகுதிகளும் நினைந்து நினைந்து இன்புறத்தக்கவை.

**‘உரையாசிரியர்கள்’** என்ற இந்நூலைப் பொதுப் பகுதி, வரலாறு, சிறப்புப் பகுதி என மூன்று பகுதிகளாகப் பகுத்துக் கொள்கின்றார் இவ்வாசிரியர். உரையாசிரியர்களின் வரலாறு களையும் அவர் உரையின் இயல்புகளையும் பொதுப் பகுதியில் விரிவாக ஆராய்ந்து விளக்கியுள்ளார். சிறப்புப் பகுதியில் உரை யாசிரியர்கள் மேற்கோள் காட்டிய செய்யுள்களின் அருமை பெருமைகளை நன்கு ஆராய்ந்து விளக்கியுள்ளார்.

‘கால குருகு’ என்ற தொடர்க்கு உரையாசிரியர் பலரும் தந்துள்ள விளக்கங்களை எல்லாம் தந்து இறுதியில் சிவஞான முனிவர் அச்சொற்றொடரை வழாநிலையாகக் காட்டிப் பொருள் கூறியிருக்கும் முறையை இவர் விளக்கியுள்ளமை சுவை பயப்பதாகும்.

அவ்வாறே புறப்பாட்டில் வரும் ‘ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே’ என்று தொடங்கும் பாடலில் வரும் ‘நன்னடை நல்கல்’ என்பது ‘தண்ணடை நல்கல்’ என்றே இருத்தல் வேண்டும் என்பதைப் பல எடுத்துக் காட்டுக்களுடன் விளக்கியிருப்பது இந் நூலாசிரியரின் ஆராய்ச்சித் திறனை நன்கு விளக்குகின்றது.

இந்நூலாசிரியர் தொல்காப்பியம் முதலாக உள்ள இலக்கண நூல்களின் உரைகளையும், சங்க இலக்கியங்களின் உரைகளையும் காப்பிய இலக்கியங்களின் உரைகளையும், சிற்றிலக் கியங்களின் உரைகளையும், சைவம் வைணவம் சமணம் முதலிய சமய நூல்களின் உரைகளையும், புராண இலக்கியங்களின் உரைகளையும் தம் புலமையுள்ளத்தால் நுணுகி ஆராய்ந்துள்ளார் என்பதை இந்நூல் நமக்குப் புலப்படுத்துகின்றது. இவர் இந்த நூலை எழுதுதற்கு மேற்கொண்ட முயற்சியும் உழைப்பும் சிறியன அல்ல என்பதை இந்நூல் முழுவதையும் ஊன்றிப் படிப்போர் உணராமலிருக்க வியலாது.

இந்நூல் முழுவதும் தெளிவான இனிய தமிழ் நடையில் அமைந்துள்ளது. இவர் உரைநடையில், உயர்திரு டாக்டர் மு. வ. அவர்கள் உரைநடையின் சாயல் அமைந்துள்ளது. இந்நூலின் ஆசிரியர் திருப்பதி நாட்டுமொழிக்கல்லூரியில் தமிழ் பயிலும்போதே ஆராய்ச்சிக் கட்டுரைகளும் கவிதைகளும் எழுதிப் பற்பல பரிசுகள் பெற்றுள்ளார். எந்த நூலையும் ஆழ்ந்து கற்கும் இயல்பினர். மாணவப் பருவத்தே இவர்தம் புலமை நலங்கண்டு ஆசிரியர்கள் மகிழ்வது உண்டு. அக்காலந் தொட்டே தம் விடா முயற்சியால் பற்பல நூல்களையும் உரைகளையும் முறையுறப் பயின்று, அறிஞர்கள் போற்றும் வகையான் இந்த விரிவான ஆராய்ச்சி நூலை எழுதியுள்ளமைகண்டு மனமிக மகிழ்கின்றேன். இந்த இளம் பருவத்திலேயே இத்தகைய நூலை இயற்றும் ஆற்றல் பெற்ற இவர், வருங்காலத்தில் இதனினும் சிறந்த நூல் பல இயற்றித் தமிழன்னையைச் சிறப்பிப்பார் என்பது என் நம்பிக்கை. இவர்தம் புலமை தமிழ் மொழிக்கும் நாட்டிற்கும் நன்கு பயன்படப் பொன்னம்பலவன் இவர்க்கு எல்லா நலன்களையும் நல்குவானாக என அப்பெருமான் திருவடிகளை வணங்கி வாழ்த்துகிறேன்.

**செ. வேங்கடராமன்**

# சிறப்புரை

**வித்துவான் கி.வா. ஜகந்நாதன் எம்.ஏ.**

தமிழ்இலக்கிய இலக்கண நூல்கள், மிகப் பழங்காலந் தொட்டுத் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. அவற்றை இயற்றிய ஆசிரியர்களை நூலாசிரியர்கள் என்பார்கள். நூல்களை விளக்கும் ஆசிரியர்கள் இருவகைப்படுவார்கள். மாணாக்கர் களுக்குப் பாடம் சொல்லி நூல்களை விளக்கும் ஆசிரியர்களைப் போதக ஆசிரியர் என்பர். நூல்களின் உரைகளை இயற்றிப் பலருக்கும் பயன்படும்படி வழங்கியவர்கள் உரையாசிரியர்கள். நூல்களை மாணாக்கர்களுக்குப் பாடம் சொல்லும் ஆசிரியர் களுக்கு எத்துணை மதிப்பு உண்டோ அத்துணை மதிப்பு உரையாசிரியர்களுக்கும் உண்டு.

இலக்கண நூல்களுக்கு உரைகள் இல்லாவிடின் அவற்றின் பொருளை அறிவது எளிதன்று. தொல்காப்பியத்தில், இலக்கணத்துக்கு உரை இவ்வாறு அமைய வேண்டும் என்ற வரையறை இருக்கிறது. இலக்கணமும் இலக்கியமும் சமய நூல் களும் சுருங்கிய சூத்திர வடிவில் அமைந்திருப்பதால், அவற்றின் பொருளை அறிந்துகொள்ள உரைகள் இன்றியமையாதவை. இலக்கிய நூல்களின் பொருளையும் மரபறிந்து, இலக்கண அமைதி தெரிந்து விளக்கவேண்டும். உரையாசிரியர்கள் அவ்வாறு செய்கிறார்கள். நூல்களின் பொருள்களை விளக்குவது மாத்திரம் உரையாசிரியர்களின் இயல்பு என்று எண்ணக்கூடாது. நூல்களின் கருத்தை விளக்கும்போது நூலைக் கற்பார் உள்ளம் கொள்ளும் படி பலவித உத்திகளை மேற்கொண்டு விளக்கவேண்டும். நூலாசிரியரின் உள்ளக் கிடக்கையை நன்கு தெரிந்துகொண்டு கருத்தை விளக்குவதோடு, உவமை மேற்கோள் முதலியவற்றையும் காட்டித் தெளிவிக்க வேண்டும். இதுவோ அதுவோ என்று ஐயுறு வதற்குரிய இடங்களில் தக்க காரணங்களைக் காட்டி இன்னது தான் என்று தெளிபடுத்த வேண்டும். செய்யுள் வழக்கு, உலக வழக்கு இரண்டிலிருந்தும் மேற்கோள்களும் ஒப்புமைகளும்

காட்ட வேண்டும். இலக்கியங்களில் உள்ள நுட்பங்களையும் நயங்களையும் எடுத்துக்காட்டும் உரையாசிரியர்களை மக்கள் பெரிதும் விரும்புவார்கள். தமிழ் இலக்கிய இலக்கணங்களுக்கு உரை எழுதிய ஆசிரியர்கள் பலர். அவர்கள் புலமையிலும் விளக்கும் திறமையிலும் நடையிலும் வெவ்வேறு வகையான வர்களாக இருக்கிறார்கள். இலக்கண நூல்களுக்கும் சமய நூல்களுக்கும் உரை எழுதிய ஆசிரியர்களின் விளக்கங்களில் பொருள் தெளிவை எதிர்பார்க்கிறோம். இலக்கியங்களின் உரைகளிலோ பொருள் தெளிவோடு நயங்களையும் எதிர்பாக் கிறோம். தமிழ்நூல் உரையாசிரியர்களிடம் இந்த இருவகை ஆற்றல்களையும் பார்க்கிறோம்.

அன்பர் திரு. **மு. வை. அரவிந்தன்** இந்த நூலில் தமிழ் நூல் உரையாசிரியர்களைப் பற்றி ஆராய்ந்து விரிவாக எழுதியிருக் கிறார். கூடிய வரையில் பத்தொன்பதாவது நூற்றாண்டு வரையில் வாழ்ந்த உரையாசிரியர்கள் அனைவரையும் பற்றி எழுதியிருப்ப தோடு, இருபதாவது நூற்றாண்டில் உரை எழுதிய சிலரைப் பற்றியும் எழுதியிருக்கிறார். பல நூலின் உரைகளை ஆராய்ந்து பல ஆராய்ச்சியாளர்கள் உரைகளைப் பற்றி எழுதிய நூல்களையும் கட்டுரைகளையும் படித்து, இந்த விரிந்த நூலை எழுதியிருக்கிறார். இதை மேலெழுந்தவாரியாகப் பார்த்தாலே ஆசிரியருடைய உழைப்பின் பெருமை புலனாகும்.

இலக்கண நூல்களின் உரையாசிரியர்களையும் இலக்கிய நூல்களின் உரையாசிரியர்களையும் சமய நூல்களின் உரை காரர்களையும் பற்றித் தனித்தனியே எழுதியிருக்கிறார். இப்போது கிடைக்கும் ஆதாரங்களை எல்லாம் தொகுத்து உரையாசிரியர் களின் வரலாற்றைத் தக்க மேற்கோள்களுடன் தந்திருக்கிறார். பிறகு உரைகளின் அமைப்பையும் நடையின் இயல்பையும் உரையில் காணும் சிறப்பான பகுதிகளையும் உரையால் உணரப் படும் காலநிலை, பழக்க வழக்கங்கள் முதலியவற்றையும் வகைப்படுத்திக் காட்டுகிறார். இறையனார் அகப்பொருள் உரையாசிரியர், இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பரிமேலழகர், சிவஞான முனிவர் ஆகியவர்களைப் பற்றி விரிவாக எழுதியிருக் கிறார். சில உரையாசிரியர்களின் இயல்புகளை ஒப்பு நோக்கி, ஒற்றுமை வேற்றுமைகளைப் புலப்படுத்தி இருக்கிறார். உரை யாசிரியர்களின் புலமைத் திறத்தையும் அவர்களால் உண்டான பயனையும் நன்கு தெரிவிக்கிறார். சிலருடைய உரைகளிற் சில பகுதிகள் ஏற்கத்தகாதன என்பதையும் சொல்லத் தவறவில்லை. அப்படி உள்ள சில இடங்களில் இவ்வாசிரியர் கூறும் கருத்துக்கள் எல்லாருக்கும் உடம்பாடாக இல்லாமல் இருக்கலாம். ஆயினும்

தமக்குத் தோன்றியதை வெளிப்படையாக எழுதியிருப்பது போற்றத்தக்கது.

உரை வளர்ந்த வகை முதலிய பொதுவான இயல்புகளையும் இந்தப் புத்தகத்தின் ஆசிரியர் தொகுத்துச் சொல்லியிருக்கிறார். பல நூல்களையும் உரைகளையும் ஆராய்ந்து, மற்றவர்களுடைய கருத்தையும் தெளிந்து, நல்ல முறையில் வகைப்படுத்தி, ஆசிரியர் இந்த நூலை எழுதியிருப்பது பாராட்டத் தக்கது. இத்தகைய ஆராய்ச்சி நூல்கள் தமிழ் வரலாற்றின் கூறாக நின்று மாணாக்கர்களுக்கும் ஆராய்ச்சியாளர்களுக்கும் மிக்க பயனைத் தரும்.

இவ்வாசிரியர் இன்னும் பலபல ஆராய்ச்சி நூல்கள் எழுதிப் புகழ் பெற வேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

**கி.வா. ஜகந்நாதன்**

# அணிந்துரை

## வித்துவான் க. வெள்ளைவாரணன்

தமிழ் நலம் வளரத் தொண்டுபுரியும் புலமைச் செல்வர் களை நூலாசிரியர் உரையாசிரியர் போதகாசிரியர் என மூவகையினராக வகைப்படுத்துரைப்பர் சான்றோர். இம் முத்திறத்தாருள் நூலாசிரியரது மனக்குறிப்பினை உய்த்துணர்ந்து போதகாசிரியர்க்குத் தெளிய அறிவிக்கும் நுண்ணுணர்வும் சொல்வளமும் ஒருசேரப் பெற்றவர்கள் உரையாசிரியர்களே யாவர். தொல்காப்பியர் திருவள்ளுவர் இளங்கோவடிகள் முதலிய பெரும்புலவர்கள் இயற்றிய சிறந்த நூல்களைப்போலவே, அவற்றின் பொருள் நலங்களை இனிது விளக்கும் நோக்கத்துடன் இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், பரிமேலழகர், அடியார்க்கு நல்லார் முதலிய பெருமக்கள் இயற்றிய உரைகளும் சிறப்புடையனவாக அறிஞர்களாற் பாராட்டிப் பயிலப் பெற்று வருகின்றன.

தமிழ் வளர்ச்சிக்கு ஆக்கந்தரும் முறையில் அமைந்த இவ்வுரைகளை இயற்றியுதவிய புலமைச் செல்வர்களாகிய உரையாசிரியர்களின் வரலாறுகளும் அன்னோரது மதிநுட்பமும் ஆராய்ச்சி வன்மையும் உலகியலறிவும் பல்கலைப்புலமையும் அவர்கள் வாழ்ந்த காலச் சூழ்நிலைகளும் ஆகியவற்றை ஆராய்ந்துணர்தல், தொல்காப்பியம் சங்கச் செய்யுட்கள் திருக்குறள் முதலிய பழந்தமிழ் நூல்களை ஆழ்ந்து பயில்வார்க்குப் பெரிதும் துணைபுரிவதாகும்.

இத் தமிழ்ப் பணியின் இன்றியமையாமையினை நன்குணர்ந்த திரு. **மு. வை. அரவிந்தன்,** இறையனார் களவியல் உரை முதல் இன்று வெளிவந்து வழங்கும் உரை ஈறாகவுள்ள சிறந்த தமிழிலக்கண இலக்கிய உரைகளை நுனித்துணர்ந்து அவ்வுரையாசிரியர்களின் வரலாறுகளையும் அவர்களியற்றிய உரைகளின் சொற்பொருள் மாண்புகளையும் கலை பயிலும் மாணாக்கர்களுக்கு அறிமுகஞ் செய்யும் நோக்குடன்

'உரையாசிரியர்கள்' என்னும் சிறந்த ஆராய்ச்சி நூலை இயற்றியுள்ளார்.

இந்நூல், தமிழ்மொழியில் உரைநூல்கள் தோன்றி வளர்ந்த வரலாற்றினையும் இளம்பூரணர் முதல் சிவஞான முனிவர் ஈறாகவுள்ள பண்டையுரையாசிரியர்கள் தம் புலமைத் திறத்தால் தமிழ் மொழிக்கு ஆற்றிய அரும்பெருந்தொண்டுகளையும் அவர்களைப் பற்றிய வரலாற்றுச் செய்திகளையும் அவர்களுடைய உரைகளின் வாயிலாகப் புலனாகும் உரை நுட்பம், கருத்து வளம், பொருள் மாண்பு, அவர்கள் காலச் சமுதாய வாழ்வு முதலிய பெரு நலங்கலையும், அவர்களைப்பற்றி அறிஞர் இதுவரை ஆராய்ந்து கண்ட அரும் பொருள்களையும், இக்கால உரையாசிரியர்களின் உரைவகைகளையும் விரிவாக ஆராய்ந்து விளக்குகின்றது. தமிழிலக்கண இலக்கிய நூல்களை ஆய்ந்து பயில விரும்புவோர் அனைவருக்கும் இனிய அறிவு விருந்தாகச் சுவை தரும் முறையில் இந்நூல் அமைந்துள்ளது.

ஆங்கில மொழியுடன் அருந்தமிழ் நூல்களில் நிறைந்த பயிற்சியும் ஆழ்ந்த புலமையும் ஒருங்கு வாய்க்கப்பெற்ற அறிஞர் அரவிந்தன் அவர்கள் தமது நுண்மாணுழை புலமும் காய்தலுவத் தலகற்றி ஆராயும் ஆராய்ச்சி நலமுந்தோன்ற இந்நூலைத் தெளிந்த செந்தமிழ் நடையில் இயற்றியுள்ளமை அறிஞர்களாற் பாராட்டத்தக்க சிறந்த தமிழ்ப் பணியாகும். கலைபயில் தெளிவும், கட்டுரை வன்மையும் உலகியலறிவுடன் உயர்குணம் பலவும் நிரம்பிய அன்பர் அரவிந்தன் அவர்கள் தமிழுக்கு ஆக்கமாகும் வகையில் இதுபோன்ற ஆராய்ச்சி நூல்கள் பல இயற்றி எல்லா நற்பேறுகளும் இனிது பெற்று நீடு வாழ்க எனத் தில்லைச் சிற்றம்பலவன் திருவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்றேன்.

க. வெள்ளைவாரணன்

# மதிப்புரை

**டாக்டர் சி. பாலசுப்பிரமணியம், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,**
**(முன்னைத் துணைவேந்தர், தமிழ்ப்பல்கலைக்கழகம்)**

இலக்கண வரம்புடன் இலக்கிய வளத்துடனும் இயல்பாக வளர்ந்துவரும் தமிழ்மொழியினைக் காலந்தோறும் வாழ்நத புலவர் பெருமக்களும் வேந்தர்களும் நன்கு புரந்து காத்து வந்தார்கள். தமிழ் இலக்கியப் பேரியாறு தடைபடாமல் முப்பது நூற்றாண்டுகளுக்கும் மேலாகச்சீரோடும் சிறப்போடும் அழகு நடை போட்டு ஓடிவருகின்றது. இப் பேரியாறு கொண்டுவந்த வளத்தினையும் வாழ்வினையும் கணக்கிட்டுப் பார்க்கும்பொழுது நமக்கு வியப்புப் பெருகுகின்றது. அவ்வளவிற்குப் பல்வேறு துறை நூல்கள் புலவர்தம் அறிவாற்றல்களின் விளைவாக நமக்குப் படைப்பிலக்கியங்களாகக் கிடைத்துள்ளன. கால வெள்ளத் தையும் கடல் வெள்ளத்தையும் நீந்தி, செல்லுக்கு இரையாகாமல் தப்பிப் பிழைத்துத் தமிழர்தம் கவனக் குறைவையும் கடந்து நல்ல பல இலக்கியங்களும் உரை நூல்களும் நமக்குக் கிடைத்திருக் கின்றன என்றால் தமிழர் தவமுடையர் என்பதில் ஐயுறவில்லை.

'சங்க இலக்கியம் ஒரு வாழைத் தோட்டம்' என்பர் அறிஞர். வாழையடி வாழையென வந்த புலவர் திருக்கூட்டம் கண்ட நூல்களிற் பலவும் உரையின்றி நடந்த காலம் ஒன்றிருந்திருக்கலாம். ஆயினும் தொல்காப்பியனார் காலத்திலேயே உரைநடை தோன்றி விட்டதென்பதற்கு 'உரைவகை நடையே நான்கென மொழிப' என முடியும் தொல்காப்பிய நூற்பாவே சான்றுபகரும். மூல நூல்கள் தோன்றிய காலத்திலேயே அவற்றிற்கு உரையும் தோன்றிவிட்டன எனக் கூறல் இயலாது. ஆயினும் சில நூல்களுக்கு நூலெழுதிய ஆசிரியரே உரையையும் வகுத்துச் சென்றிருக்கக் காணலாம். "உரையின்றிச் சூத்திரத் தானே பொருள் நிகழ்ந்த காலமும் உண்டு" என்றும், "உதாரணங் காட்டல் வேண்டாமையை உணர்ந்து உரை நடந்த காலமும் உடையவாகும் முற்காலத்து

நூல்கள் என்பது கருத்து" என்றும் பேராசிரியர் தொல்காப்பிய மரபியல் உரையில் புலப்படுத்துவதனை நோக்க இவ்வுண்மை புலனாகும்.

இவ்வுண்மைகளையெல்லாம் தெளிவாக உணர்ந்து, உணர்ந்து கொண்டவைகளை மனத்தில் நிறுத்தி நன்முறையில் **'உரையாசிரியர்கள்'** என்ற இந்நூலினை ஆசிரியர் திரு. **மு. வை. அரவிந்தன்,** உருவாக்கியிருக்கின்றார். முறைப்பட எண்ணி வகுத்து முடிவிலே சூழ்ந்த ஆசிரியரின் திறம் போற்றத்தக்கது. இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் தொடங்கி இற்றைநாள் உரையாசிரியர் வரையில் உரையாசிரியர்கள் பலரையும் குறிப்பிட்டு, அவர்தம் உரையின் நலங்களையும் ஓரோவழி அவர் உரையின் புன்மையினையும் எடுத்துக்காட்டித் தமிழிற்கு ஆக்கமானதொரு நூலினை ஆக்கித் தமிழுலகிற்கு ஆசிரியர் அளித்துள்ளார்.

'உரையின் தோற்றமும் வளர்ச்சியும்' என நூலினைத் தொடங்குகின்றார் ஆசிரியர். நூல் அரங்கேற்றத்தினை நுவன்று, உரையில்லாத காலத்தினை உணர்த்தி, செவிச் செல்வத்தின் சிறப்பினைப் புலப்படுத்தி, வாய்மொழியின் செல்வாக்கினை வகையுற மொழிந்து, உரையின் வளர்ச்சியினை விரித்துக்காட்டி, வலிமையுள்ளவை வாழ்வு பெறுகின்றன என எடுத்துக்காட்டும் ஆசிரியர் கைவண்ணம் நூலின் தொடக்கத்திலேயே அமைந்து காணப்படுகின்றது. பின்னர், செய்யுள் வடிவில் தோன்றிய சில உரை நூல்களையும், நூலாசிரியரே எழுதிய உரைநூல்களையும், உரைக்கு உரையாக எழுந்த நூல்களையும், உரை எழுதாக் கொள்கையின் உண்மையினையும் ஆசிரியர் நன்குணர்த்தி, இத்துறையில் புதிய முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்ற தம் உள்ளக்கிடக்கையினையும் தெள்ளிதின் கிளத்துகின்றார்.

"இருட்டறையில் உள்ள எழில் மிக்க ஓவியத்தைக் காணக் கண்கள் மட்டும் இருந்தால் பயனில்லை. இருளைப் போக்கும் ஒளி வேண்டும். பழம் பொருட்காட்சிச் சாலையில் உள்ள பல வகையான கலைச்செல்வங்களைக் கண்டுகளிக்க அவற்றைப் பற்றிய விளக்கவுரை வேண்டும். இனிய பலாப்பழத்தைச் சுவைத்து மகிழ, அதனை முறையாக அறுத்துச் சுளை எடுத்துத் தருபவரின் உதவி வேண்டும். இவ்வாறே பழம்பெரும் இலக்கண இலக்கியச் செல்வங்களைக் கற்று மகிழ்வதற்குத் தக்க உரையாசிரியர்கள் வேண்டும். காட்டு வித்தால் அன்றி அவற்றைக்

காண இயலாது" என்று ஆசிரியர் உரைகளின் இன்றியமையாமை யினை உவமை காட்டி இனிது புலப்படுத்தியுள்ளது மனங் கொள்ளத்தக்கது. மேலும் "நூலாசிரியரின் உள்ளக் கருத்தினை நுணுகி ஆராய்ந்து, தெளிவு பெற எடுத்து எழுதும் வன்மையாள ராய் உரையாசிரியர்கள் விளங்கினர்; யார் யார் எவ்வெத் துறை நூல்களில் மிகுதியான பயிற்சி பெற்றிருந்தனரோ அவரவர் அவ்வத்துறை நூல்களுக்கு உரை எழுதினர், கல்லாத மேற்கொண்டு ஒழுகாமல் கசடற வல்லதையே உலகிற்கு உணர்த்தி நின்றனர். ஒன்றே செய்து அதனையும் நன்றே செய்து இறவாப்புகழ் பெற்றனர். மொழி உள்ளளவும் தம் பெயரை நிலை நாட்டிச் சென்றனர" என்று இந் நூலாசிரியர், உரையாசிரியர் தம் பணிக்குச் செம்மையான தகுதிச் சான்று வழங்கியுள்ளார்.

'உரை செய்யும் உதவி' என்னும் தலைப்பில் ஆசிரியர் காட்டும் சீரிய காரணங்கள் அறிஞருலகு ஏற்றுக்கொள்ளும் சான்றுகளாம். மேலும் தக்கயாகப்பரணி உரையாசிரியர், தம் உரையில் (தக்க-54) 'சிலம்பிபொதி செங்காய்'-இது குறுந்தொகை எனக் கூறுகின்றார். "இப்பாடல் மறைந்து விட்டது" என்று ஆசிரியர் அரிய செய்திகளை ஆராய்ச்சியின் மூலம் அகழ்ந் தெடுத்துவந்து தருவது பாராட்டத் தக்கது.

இறையனார் அகப்பொருள் உரை, இளம்பூரணர் உரை நடை தொடங்கி, சிவஞான முனிவர் உரைநடை, ஆறுமுக நாவலர் உரைநடை இறுதியாக 'உரையாசிரியர்களின் உரைநடை' என்ற தலைப்பில் விரிவாக ஆராய்ந்து கூறுகின்றார்.

உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியரை இவர் நன்கு ஆராய்ந்துள்ளார். வரலாறும் சிறப்பியல்புகளும், காலம், வான்புகழ், நச்சர்—நச்சினார்க்கினியரா? முதலில் உரை எழுதிய நூல், உரையின் இயல்பு, மாட்டு, இலக்கியப் புலமையும் நினை வாற்றலும், முரண்பாடு, நெடுநல்வாடை திணை, பாரதக்கதை, ஆராய்ச்சிதிறன், உடம்படுமெய், நச்சினார்க்கு இனியரா? நடுவு நிலைமை, தம் கருத்தே சாதித்தல் முதலிய தலைப்புக்களில் நச்சினார்க்கினியரை விரிவாகக் காய்தல் உவத்தல் இன்றி விளங்க ஆராய்ந்துள்ளார். அதே நேரத்தில் "தமிழ் இலக்கண நூலுக்கு உரை எழுதப் புகுந்த நச்சினார்க்கினியர், வடமொழியில் உள்ள வேதநெறியையும், குலமுறைக் கோட்பாட்டையும் தம் உரையில் புகுத்தித் தமிழ் மக்களின் பண்பாட்டிற்கு மாசு ஏற்படுத்தியதை நினைத்துத் துன்புறும் தமிழ் நெஞ்சங்கள் பலவாகும்" என்று கூறி ஆசிரியர் தம் 'குணம்நாடிக் குற்றமும் நாடும்' பண்பினைப் புலப்

படுத்தியுள்ளார். ஆராய்ச்சிக்கு இன்றியமையாத பண்பு இது. "நச்சினார்க்கினியர் நினைவாற்றல் மிகுந்தவர்; நூலின் முன்னும் பின்னும் நோக்கி மாறுபாடு ஏற்படா வண்ணம் உரை எழுதுவார்; நூலாசிரியர் கருத்தை நுணுகி நோக்கி அறிந்து போற்றுபவர்; அக்கருத்தினை மறவாமல் பல இடங்களிலும் வெளிப்படுத்து பவர்" என்றும் ஆசிரியர் எழுதும் வரிகளில் அவர்தம் நடுநிலை சார்ந்த நன்னெஞ்சத்தினை அறியமுடிகின்றது. 'பல்கலைப் புலமை' என்ற தலைப்பில் நச்சினார்க்கினியர்தம் இலக்கியப் புலமை, வடமொழிப் புலமை, சமயநூல் அறிவு, நிலநூல் அறிவு, வாழ்வியல், உயிரியல், அகராதிக் கலைஞராய் விளங்கும் தன்மை, நோக்கு முதலியவற்றினை விளங்க எடுத்துரைத்துள்ளார்.

பத்துப்பாட்டு உரைகள். பதினெண் கீழ்க்கணக்கு உரைகள், நாலாயிர திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்கள், திருமுறைகளின் உரைகள், சைவ சாத்திர உரைகள், இலக்கண உரைகள் என்ற பகுதிகள் மிகவிரிந்த சிறந்த ஆராய்ச்சிகளாகும்.

பரிமேலழகர் பற்றித் தம் நுண்மாண் நுழைபுலம் விளங்கும் வண்ணம் ஆசிரியர் ஆராய்ந்து காட்டியுள்ளார்: "பரிமேலழகர் உரை திட்பநுட்பம் வாய்ந்து, கருத்துச் செறிவு உள்ளதாய், பலமுறை கற்றுத் தெளிந்தவரும் முறையாகப் பாடம் கேட்டறிய வேண்டியதாய் இருக்கின்றது" என்று ஆசிரியர் உரைக்கும் செய்தி பாராட்டற்பாலது.

பத்தொன்பதாம், இருபதாம் நூற்றாண்டு உரையாசிரியர் என்ற தலைப்பில் நல்ல செய்திகளை ஆசிரியர் முயன்று தேடித் தந்துள்ளார். "சின்னஞ்சிறிய ஆலம் விதையிலிருந்து மிகப் பெரிய ஆலமரம் தோன்றி வளர்வதுபோல், உரையாசிரியர்கள் தம் உரைகளிற் காட்டியுள்ள சிறிய பாடல் ஒன்றிலிருந்து பெரிய கதையோ, கருத்தோ பின்னால் வளர்ந்திருக்கிறது" என்று ஆசிரியர் எழுதும் தொடர் நயமுடையதோடு கருத்தாழமும் கொண்டதாகும்.

**'பதிப்பாசிரியர்கள்'** என்ற தலைப்பு, தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு அரண் செய்வதாகும். மறைந்து போன உரை நூல்களை ஆசிரியர் நன்கு ஆராய்ந்து கண்டுள்ளார்.

நூலின் அழகுக்கு அழகு செய்வது போன்று ஆங்கில மேற்கோள்களும், அடிக்குறிப்புகளும் அமைந்து நூல் நன்கு மதிக்கத்தக்கதாய்த் துலங்குகின்றது. ஆசிரியர் தெள்ளிய சிறந்த நடையில் நூலினை ஆக்கியுள்ளார். **'உரையாசிரியர்கள்'** பற்றிய

இந்நூல் தமிழ்த்தாய்க்கு நல்லதோர் அணிகலனாகும். உரையாசிரியர் பற்றிய செய்திகள் அனைத்தையும் இந்நூலில் ஆசிரியர் தொகுத்தளித்துள்ளார். ஆராய்ச்சிக் கண்கொண்டு நோக்குவோருக்கு இந்நூல் அருமையும் பெருமையும் கொண்டு திகழ்வதாகும்.

இந்நூலை யாத்த திரு. **மு. வை. அரவிந்தன்,** தமிழ்ப் புலமையும் நெஞ்சமும் வாய்ந்தவர்; ஆராய்ச்சித்திறன் நன்கு வாய்க்கப்பெற்றவர்; எடுத்துக்கொண்ட பொருளை இனிது காண்கின்றவர்; ஆராய்ச்சியாளர்க்கு வேண்டிய நடுவுநிலைமை நன்கு வாய்க்கப்பெற்றவர். நுண்மாண் நுழைபுலம் வாய்ந்து அரிதின் முயன்று ஆராய்ந்த நல்லதொரு ஆராய்ச்சி நூலினைத் தமிழ்கூறு நல்லுலகிற்கு ஆசிரியர் வழங்கியுள்ளார். ஆசிரியர்தம் முயற்சித்திறன் வெல்வதாக! தமிழுலகம் இந்நூலினை ஏற்றுப் போற்றிப் பயன்பெறும் என்னும் துணிபுடையேன்.

**சி. பாலசுப்பிரமணியன்**

# மூன்றாம் பதிப்பின் முன்னுரை

உரையாசிரியர்களைப் பற்றிய ஆய்வு, நான்கு கூறுகளை அடிப்படையாகக் கொண்டதாகும். அவை:

1. மூல நூல், 2. உரை, 3. பதிப்பு, 4. (இம்மூன்று பற்றியும் நிகழ்ந்துள்ள முன்னைய) ஆய்வு.

என்பன. இவற்றின் விவரங்களைத் தொகுத்துத் தருகின்ற ஆய்வடங்கல்கள் செம்மையான முறையில் வெளிவந்தால் ஆய்வு சிறக்கும்; முழுமை பெறும்; செப்பமடையும்.

ஆய்வடங்கல்கள் கூறும் விவரங்களை அறிவதோடு அவை குறிப்பிடும் நூல்களைப் பெறவும்; பெற்றுக் கற்றபின் தேவையான கருத்துகளைத் திரட்டவும்; திரட்டிய கருத்துகளைக் கொண்டு ஆய்வுக் கட்டுரைகளை உருவாக்கவும் வாய்ப்பு வேண்டும்; வசதி வேண்டும். அப்போதுதான், ஆய்வு நூல் சிறப்பாக அமையும்.

இந்த நோக்கத்துடன், 'உரையாசிரியர்கள்' நூலின் மூன்றாம் பதிப்பு, முன்னையபதிப்பைக் காட்டிலும் சிறந்து விளங்க வேண்டும் என்று நான் பெரிதும் முயற்சி செய்தேன்.

இரண்டாம் பதிப்பில் இருந்த பிழைகளைத் திருத்தினேன். பல இடங்களில் வாக்கிய அமைப்பை மாற்றினேன். சில உள் தலைப்புகளை நீக்கிவிட்டு வேறு தலைப்புகள் வைத்தேன். இவ்வாற செய்தபோது, ஒவ்வொ'ரு கட்டத்திலும் நுலின் முன்னைய அமைப்பும் கருத்தும் மாறக் கூடாது என்பதில் கவனம் செலுத்தினேன்.

எனக்கு மனநிறைவு ஏற்படும் வகையில் மூன்றாம் பதிப்பு செப்பம் அடைந்துள்ளது. எனினும், நான் எழுதி வைத்துள்ள பல புதிய ஆய்வுக் கட்டுரைகள் நூலில் இடம் பெறவில்லை. விரிவு செய்த பகுதிகளை இதில் இணைக்க முடியவில்லை. நூல் பெருகிவிடுமோ என்ற தயக்கம், எல்லா இடங்களும் ஒரே

வகையாய் அமைய வேண்டுமே என்ற நோக்கம், சில பகுதிகள் விரிவாகவும் மற்றவை போதிய அளவு விளக்கமின்றியும் அமையுமோ என்ற ஐயம், குறித்த காலத்திற்குள் எழுதி முடிக்க வேண்டுமே என்ற பொறுப்புணர்ச்சி ஆகியவற்றால் மூன்றாம் பதிப்பை மிகுதியாய் விரிவு செய்ய முடியவில்லை.

திருமந்திரம் திருவாசகம் பெரியபுராணம் கம்ப ராமாயணம் பாரதம் தலபுராணங்கள் நிகண்டுகள் முதலிய நூல் களின் உரைகளைப் பற்றி விரிவாக எழுதுவதற்காகத் திரட்டிய கருத்துகளைக் கட்டுரை வடிவில் எழுதிச் சேர்க்க முடியவில்லை.

19, 20 ஆகிய இரு நூற்றாண்டுகளில் தோன்றிய பல உரை களைப் பற்றிய செய்திகள் நிறைய இருப்பதால், அவை தனி ஆய்வுக்கு உரியவையாகும்.

18-ஆம் நூற்றாண்டிலிருந்து இன்று வரை உரைகளை வளர்த்த தமிழ்க் கழகங்கள், இதழ்கள் (வார, மாதப் பத்திரிகைகள்) செய்த உரைப்பணி, மடங்கள் உரைகளின் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் ஆற்றியுள்ள பல வகையான நற்பணிகள், பல்கலைக் கழக ஆய்வுகள் முதலியவை பற்றி விரிவாக எழுதலாம். ஏட்டுச் சுவடிகளில் இருந்த பழமையான சில உரைகள், அச்சிடப் பெற்று வெளிவந்துள்ளன. அவற்றைப் பற்றிய ஆய்வு, உரையாசிரியர்கள் நூலில் இடம் பெற வேண்டும்.

பரிமேலழகர், நச்சினார்க்கினியர், சிவஞான முனிவர் ஆகியவர்களின் உரைத்திறன்களைப் பற்றி விரிவாக ஆய்ந்து தனித் தனியே பெரிய நூல்கள் எழுதலாம்.

**இலக்கண உரைகள்**
**இலக்கிய உரைகள்**
**வைணவ உரைகள்**
**திருக்குறள் உரைகள்**
**நன்னூல் உரைகள்**
**தொல் காப்பிய உரைகள்**
**உரையாசிரியர்களின் திறனாய்வு முறைகள்**
**உரைகளால் உருவான இலக்கணக் கோட்பாடுகள்**
**உரையாசிரியர்களின் அகராதிக் கலைத்திறன்**
**உரையாசிரியர்களின் உரை நடைத் திறன்**
**உரையாசிரியர்கள் காட்டும் தமிழர் வாழ்வும் பண்பாடும்**

முதலிய தலைப்புகளில் ஆய்வு நூல்கள் இயற்றலாம்.

இவற்றை எல்லாம் சிந்திக்கும் போது, உரையாசிரியர்களைப் பற்றிய ஆய்வு தொடுவானம் போல விரிந்து செல்வதை உணர முடிகின்றது. உரை ஆய்வின் எல்லைக் கோடும், எல்லைக் கல்லும் மாறிக் கொண்டே இருப்பதை அறிய முடிகின்றது.

ஆராய்ச்சி முடிவற்றது. ஆனால், ஏதேனும் ஒரு முடிவுக்கு வராமல் இருப்பது ஆராய்ச்சி ஆகாது.

காலம் இடம் என்ற மிகப் பெரிய இரண்டு வரையறைக்குள் அமைகின்ற சூழ்நிலையின் இயல்புக்கு ஏற்றவாறு, ஒவ்வொரு கால கட்டத்திலும் — ஒவ்வோர் இடத்திலும் ஆராய்ச்சி ஏதேனும் ஒரு முடிவுக்கு வருகின்றது. காலமும் இடமும் மாறி, சூழ்நிலை வேறுபடும் போது முன்னைய ஆராய்ச்சி தன்னைத் தானே மாற்றிக் கொண்டு புதியனவற்றை ஏற்கும் பக்குவத்தைப் பெறுகின்றது. அதனால், ஆய்வுலகில் பழையன கழிந்து, புதியன புகுந்து மறுமலர்ச்சி ஏற்படுகின்றது. ஆனால் சிலவகை ஆய்வுகள் என்றும் மாறாத — மாற்ற முடியாத விதிகளாக நிலைபெற்று விடுகின்றன. அவ்விதிகளை வலிமை வாய்ந்த கடைக் காலாகக் கொண்டு புதிய ஆய்வுகள் ஓங்கி வளர்கின்றன.

சில போது, ஆய்வுலகில் பாதைகள் முடிந்தாலும் பயணங்கள் முடிவதில்லை. பாதை ஓர் இடத்தில் முடிகின்ற போது, பயணம் வேறு பாதையைத் தேடிக் கொண்டு தன் பணியைத் தொடர்கின்றது; உண்மையைத் தேடிக் கொண்டு தொடர்ந்து செல்கிறது.

உலகத்தைச் சுற்றி வருபவர், தாம் புறப்பட்ட இடத்திற்கே மீண்டும் வந்து சேர்வதைப் போல், சில புதிய ஆய்வுகள் தொடங்கிய இடத்திற்கே மீண்டும் வந்து சேர்ந்து, ஆய்வுப்பணி வட்டமான பாதையில் பயணம் செய்வதை உணர்ந்து அமைதியடைகின்றன.

தமிழ் மக்களின் தவப்பயனாகத் தமிழாய்வு உரையாசிரியர்களின் சமயம் காலம் ஆகியவை பற்றி ஆய்வதை நிறுத்திக் கொண்டது. மறுப்பும் சேர்ந்தபின், அவற்றைக் கைவிட்டது. ஆய்வுலகம், ஆக்கப்பணிகளில் ஈடுபட்டுச் சாதனைகளைப் புரிந்து வருகிறது. உரைவளம் கண்டு, உரை வேற்றுமைகளை உற்றுநோக்கி, ஒப்பியல் ஆய்வுக்கு வழிவகுத்து, திறனாய்வுக் கோட்பாடுகளை உருவாக்கி வருகின்றது.

ஆய்வு என்பது, முதியவர்களும் ஓய்வு பெற்றவர்களும் செய்ய வேண்டிய பணி என்ற நிலைமை மாறி, இளைஞர்களும்

பணியில் உள்ளவர்களும் தமிழாய்வில் ஈடுபட்டு வருகின்ற சூழல் மகிழ்ச்சி தருகின்றது. ஆய்வின் நடுவில் எதற்கெடுத்தாலும் ஆங்கில மேற்கோள்களைத் தேடி எடுத்து, நுழைக்கின்ற பழக்கம் குறைந்து வருகின்றது.

தமிழில் இல்லாததைப் பெறுதல், இழந்ததை ஈடு செய்தல், உள்ளதைப் போற்றுதல் ஆகிய மூன்று வகையான பணிகளில் ஆய்வாளர்கள் ஈடுபட்டு வருகின்றனர்.

'தமிழருக்கென்று இலக்கியமும், இலக்கணமும் இருப்பது போலவே, திறனாய்வுக் கோட்பாடுகளும் உண்டு' என்ற தெளிவு, வருங்காலத்தில் உருவாகும்.

அத்தகைய தெளிவு ஏற்பட, 'உரையாசிரியர்கள்' நூல் உதவி செய்யும் என்பது, பதிப்புச் செம்மல் டாக்டர் ச. மெய்யப்பனாரின் நம்பிக்கையாகும். அந்த நம்பிக்கையே அவர்களை உரையாசிரியர் கள் நூலை வெளியிடத் தூண்டியது. அந்த நூலை உருவாக்கும் வாய்ப்பை அவர்கள் எனக்கு நல்கினார்கள். அவர்களுடைய ஊக்கமும் ஒத்துழைப்பும் உறுதுணையும் இல்லை எனறால் 'உரையாசிரியர்கள்' நூல் தோன்றி இராது. விரிவும் செப்பமும் பெற்று மறுமதிப்புகள் வெளிவந்திரா. நூலாக்கத்திற்காக அவர்கள் எனக்குச் செய்த நன்மைகள் பல; காலமும் இடமும் தேவையும் அறிந்து செய்த உதவிகள் பல. என் இயல்பு அறிந்து எனக்களித்த ஆக்கங்கள் பல.

'உரையாசிரியர்கள்' நூலின் மூன்றாம் பதிப்பு வெளிவரும் போது, நான் அவற்றை எல்லாம் எண்ணிப் பார்க்கிறேன்; அவர் களுக்கு நன்றி பல கூறுகின்றேன்.

இந்த நூல் நன்கு அமைந்து விரைவில் வெளிவர வேண்டும் என்று நெடிது சிந்தித்தும், இடைவிடாது நெடிது சிந்தித்தும், இடைவிடாது நினைவூட்டியும், மனமுவந்து வாழ்த்தியும், வாயாரப் புகழ்ந்தும் என்னைப் போற்றி வருபவர், பதிப்புச் செம்மலின் தந்தையார் வடலூர் உள்ளொளி பழ. சண்முகனார். அவர்களுடைய அருளும் ஆதரவும் ஆசியும் எனக்கு ஆக்கமும் ஊக்கமும் தருகின்றன.

மணிவாசகர் பதிப்பகம் தொடங்கிய நாள் முதல் இன்று வரை, பதிப்பகத்தின் மூல சக்தியாய் இயங்கி வருகின்ற என் அன்புக்குரிய தோழர் குருமூர்த்தி, இந்த நூலின் ஆக்கத்திற்குச் செய்த உதவிகள் பல உண்டு.

இந்த மூவரையும் நான் என்றும் மறவேன். அவர்களுக்கு எப்போதும் நன்றி பல கூறுவது என் கடமையாகும்.

'உரையாசிரியர்கள்' நூலின் முன்னைய இரண்டு பதிப்புகளைப் போலவே, மூன்றாம் பதிப்பையும் தமிழ் கூறும் நல்லுலகம் வரவேற்று என்னை வாழ்த்தும் என்று நம்புகிறேன்.

மு. வை அரவிந்தன்.

2/7, பாலம்மாள் நகர்
திருப்பத்தூர். வ. ஆ.
635 601

# பதிப்பகத்தாரின் பாராட்டுரை

மணிவாசகர் பதிப்பகம் 'உரையாசிரியர்கள்' என்னும் அரிய பெரிய நூலை 1968-இல், இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டின் போது வெளியிட்டது.

உரையாசிரியர்கள் பற்றிய முதல் நூலாகவும், முதன்மை யான நூலாகவும் அது அமைந்து விட்டது. இத்துறையில் பின் வந்த நூல்கள் அனைத்துக்கும் அதுவே மூல நூலானது. உரையாசிரியர் பற்றிய கலைக் களஞ்சியம் என, அதனை அறிஞர் போற்றினர். அதன் தனிச் சிறப்புகளை விமர்சகர்கள் வியந்து பாராட்டினர்.

அந்நூல், தமிழ் கூறும் நல்லுலகுக்கும் மணிவாசகர் பதிப்பகத்தை இனங் காட்டியது. தரமான நூல்களைப் பதிப்பிக்கும் தகுதிபடைத்த நிறுவனம் மணிவாசகர் பதிப்பகம் என்னும் பெருமையினைப் பெற்றது. நூலாசிரியர்க்குப் பொன்னும் பொருளும் புகழும் தந்தது. உரையாசிரியர் பற்றிய ஆய்வுக்கு அந்நூல் வழிகாட்டியாக அமைந்ததல்லாமல் வரிச் சட்டமாகவும் அமைந்தது. உரையாசிரியர்களின் பரந்து விரிந்த உலகை அது திட்ப நுட்பத்துடன் விளங்கிக் காட்டியது.

அதனுடைய இரண்டாம் பதிப்பு, மிகவும் விரிந்து வளர்ந்தது. தமிழ் ஆராய்ச்சி வளர்ச்சியின் இரண்டாவது கட்டமாக அந்நூல் ஒளிபரப்புகிறது. செய்திகள் மட்டுமல்லாமல் தீர்வுகளும், முடிவுகளும் திட்பமுடன் வரையறுக்கப் பெற்றன. அதன் வீச்சு, தமிழ் ஆய்வுலகில் மிகப்பெரிய செல்வாக்கைச் செலுத்தியுள்ளது.

அரிய பெரிய ஆய்வு நூல்கள் தமிழ் நாட்டில் இரண்டாவது பதிப்பு காண்பது என்பது முயற்கொம்பு, இந்நூல் இரண்டாம்

பதிப்பைப் பெற்றது என்பது மட்டுமின்றி விரைவில் விற்று முடிந்தது.

மிக விரிவான திட்டத்துடன் இப்பொழுது மூன்றாவது பதிப்பு வெளிவருகிறது என்பது பெருமை தரும் செய்தியாகும்

— ச. மெய்யப்பன்

## ஆய்வாளரின் நற்சான்று

"உரைகளைப் பற்றிய ஆய்வு முயற்சிக்குக் கால்கோள் இட்ட பெருமை அறிஞர் மு.வை. அரவிந்தனையே சாரும். அவரது 'உரையாசிரியர்கள்' என்னும் நூல் இவ் வகையில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும்"

— டாக்டர் இரா. மோகன்

# பொருளடக்கம்

## 3. நோக்கு



## பிற்சேர்க்கை

"கலைவாணியே!
இதனைத் தொடங்குங்கள்!
தங்கள் திருவுள்ளத்தின்படி
எப்படி வேண்டுமானாலும்
தொடங்கிச் செல்லுங்கள்!"

– ஹோமர் (ஒதிஸியம்)

2.4.

"தமிழே!
நீ ஓர் பூக்காடு;
நான் ஓர் தும்பி!"

– பாரதிதாசன்

# பாயிரம்

"எந்நூல் உரைப்பினும் அந் நூற்குப் பாயிரம் உரைத்து உரைக்கற் பாற்று.

பருப்பொருட்டாகிய பாயிரம் கேட்டாற்கு, நுண்பொருட்டாகிய நூல் இனிது விளங்கும்"*

**– நக்கீரர்**

உலகில் வாழ்ந்து வரும் பலவகையான மக்கள் இனங்களில் ஏதேனும் ஒன்று, தனக்குரிய மொழியைப் புறக்கணித்து, காலப் போக்கில் மறந்துவிடுமாயின், அந்த இனம் தனது மொழியில் உள்ள இலக்கியச் செல்வங்களை இழந்துவிடும். இலக்கியங்களை இழந்தபின், அந்த இனம் தன் வரலாற்றையும் பண்பாட்டையும் மறந்துவிடும். அவற்றை மறந்து விட்ட இனம், முற்போக்கான மற்றோர் இனத்திற்கு அடங்கி வாழ்ந்து மெல்ல மெல்ல அடிமையாகிவிடும். பிறர்மொழியையும் பண்பாட்டையும் ஏற்றுக் கொண்டு தன் இயல்புகளை இழந்து விடும். இது, வரலாறு கூறு கின்ற மிகத் தெளிவான உண்மையாகும். இந்த உண்மை, ஓர் இன மக்களின் நல்வாழ்வுக்கு அவர்கள் பேசுகின்ற மொழி எவ்வளவு இன்றியமையாதது என்பதை உணர்த்துகின்றது.

'ஓர் இன மக்கள் பேசுகின்ற மொழி மாறிவிட்டால், அந்த இனத்தின் முன்னேற்றம் தடைப்படும்; அது செய்து வரும் ஆக்கப் பணி நின்று விடும்' என்ற உண்மையைப் பைபிள், பேபல் கோபுர வரலாற்றுக்கதையின் வாயிலாக உணர்த்துகின்றது.

தமிழ் மக்கள், தமது நல்வாழ்விற்கும் முன்னேற்றத்திற்கும் தமிழ்மொழி நெடுங்காலமாக உறுதுணையாக இருந்து வருவதை நன்கு உணர்ந்துள்ளனர். இருபதாம் நூற்றாண்டில் பாவேந்தர் பாரதிதாசன்,

எங்கள் வாழ்வும்
எங்கள் வளமும்
மங்காத தமிழ் என்று
சங்கே முழங்கு

என்ற எழுச்சிக் குரலை உரக்க எழுப்பியுள்ளார்.

### காலப் போக்கும் தமிழ்க் காப்பும்

தமிழின் இன்றியமையாமையை உணர்ந்து அதனைக் காலந் தோறும் காத்துத் தமிழ் மக்களை வாழவைத்ததில் பலர் பல வகையில் பங்கு கொண்டுள்ளனர்.

---

* இறையனார் களவியலுரை, தொடக்கம்.

சங்க காலத்தில் மன்னர்கள் தமிழைக் காக்கும் பொறுப்பை ஏற்றிருந்தனர். பல்லவர் காலத்தில் ஆழ்வார்களும் நாயன்மார்களும் தமிழ்ப் பணியை மேற்கொண்டனர். சோழர் காலத்தில் உரையாசிரியர்கள் தமிழின் காவலராய் விளங்கினர். நாயக்க மன்னர்களின் காலத்தில் சிற்றரசர்கள் தமிழுக்கு வாழ்வளித்தனர். ஆங்கிலேயர் காலத்தில் பலவேறு மதங்களுக்குரிய மடங்களும், செல்வர்கள் நிறுவிய தமிழ்ச் சங்கங்களும் தமிழை வளர்த்தன. இந்தியா சுதந்திரம் பெற்ற பின், அரசியல் கட்சியினரும், தமிழார்வம் மிக்க வள்ளல்களும் தமிழ்ப்பணி ஆற்றி வருகின்றனர்.

இத்தனை கால கட்டங்களிலும் இடைக் காலத்தில் வாழ்ந்த உரையாசிரியர்கள் தமிழுக்குச் செய்த தொண்டே மிகவும் உயர்ந்ததாகும்.

**ஏரினும் நன்றால் எருஇடுதல் கட்டபின்**
**நீரினும் நன்றதன் காப்பு**

என்று திருவள்ளுவர் உழவுத் தொழிலுக்குக் கூறிய அறிவுரை, தமிழ்ப் பணிக்கும் பொருந்தும். தமிழ் நூல்கள் இயற்றுவதை விட அவற்றைக் காப்பதே மிகவும் சிறந்த பணியாகும்.

உரையாசிரியர்கள், தம் காலத்திற்கு முன்னர் இருந்த மன்னர்களும், சமயச் சான்றோர்களும் போற்றி வளர்த்த இலக்கிய இலக்கணங்களைக் காத்து, அவற்றின் கருத்தை விளக்கிக் கூறித் தம் காலத்தவர்க்கும் தமக்குப் பின்னால் வந்தவர்களுக்கும் அவற்றைத் தந்த பெருமைக்கு உரியவர்கள். அவர்களால்தான் பழந்தமிழ் நூல்கள் கால இருளைக் கடந்து வெளிச்சத்திற்கு வந்தன; தமிழ் நூல்களில் உள்ள அரிய கருத்துகள் விளங்கின. பழந்தமிழ் மரபும் பண்பாடும் புத்துயிர் பெற்றன. இலையுதிர் காலத்திற்குப்பின், தளிர்விட்டுப் பூத்துக் காய்த்துக் கனிதரும் பழ மரங்களைப் போல், இடைக்காலத்தில் உரையாசிரியர்களின் இடைவிடாத முயற்சியாலும், தொடர் பணியாலும் பழந்தமிழ் புதுமை பெற்று மறுமலர்ச்சி அடைந்து கால ஓட்டத்துடன் இணைந்து பயன் தந்தது.

## உரையாசிரியர்களின் அரியபணி

தமிழ் இலக்கிய வரலாற்றைக் கால வரிசைப்படி உற்று நோக்கினால், எல்லாக்காலங்களிலும் எல்லா நூல்களும் ஒரே நிலையில் மதிக்கப்பட்டுச் சிறப்புடன் இருந்ததில்லை என்ற உண்மை புலனாகும்.

தோன்றிய காலத்தில் புகழுடன் விளங்கிய சில நூல்கள், பின்னர் ஏற்பட்ட அரசியல் மாற்றம், சமயப் போராட்டம், பிற மொழித் தாக்கம் ஆகியவற்றால் செல்வாக்கு இழந்துள்ளன.

இலக்கிய மரபும் இலக்கணக் கோட்பாடும் மாறியதால் சில நூல்கள் தமக்குரிய இடத்தை இழந்து பின்தங்கியுள்ளன.

தமிழ் மொழியில் பழையன கழிந்து புதியன புகுந்து, பழஞ் சொற்களின் பொருள் மாறியதால் சில நூல்கள் விளங்காத நிலையை அடைந்து கால ஓட்டத்தைவிட்டு ஒதுங்கியுள்ளன.

அயல் நாகரிகத்தை ஏற்றுக் கொண்ட மக்களின் புதுமை நாட்டத்தால் சில நூல்கள் கால இருளில் மறைந்துள்ளன.

இவ்வாறு தமிழ் நூல்களுக்கு அவ்வப் போது ஏற்பட்டு வந்துள்ள தடை, எதிர்ப்பு, புறக்கணிப்பு ஆகியவற்றை அகற்றி அந்த நூல்களுக்கு வாழ்வு தந்து போற்ற - அவை இழந்து விட்ட செல்வாக்கை மீட்டுத் தர - அவற்றிற்கு உரிய இடங்களில் அவற்றை மீண்டும் அமர்த்த - காலந்தோறும் அவை விளங்கும் தன்மையைப் பெற - ஓட்டத்தோடு நீந்தி அவை கரையேற - கால இருளை விட்டு வெளிச்சத்திற்கு வர உரையாசிரியர்கள் அரும் பாடுபட்டனர்.

உரையாசிரியர்கள் தமிழ் மொழியைக் காத்து, தமிழினத்தின் அரசியல், சமயம், கலை, பண்பாடு ஆகியவற்றின் நிலையான வாழ்விற்கு உறுதுணையாய் இருந்தனர் என்பதைத் தமிழறிஞர்கள் நினைவூட்டியுள்ளனர். அவற்றுள் சில, கீழே தரப்படுகின்றன.

### 1. டாக்டர் உ.வே. சாமிநாதஐயர்

"பல நூற்றாண்டுகளாகத் தமிழ் நாட்டில் வழங்கி வந்து இடையிலே மறக்கப்பெற்ற நூல்களில் உள்ள பொருள்களை உள்ளபடியே அறிய வேண்டுமானால், அந்நூல்கள் இயற்றப் பெற்ற காலத்து நிலைமையையும், இலக்கிய மரபையும் நன்றாக உணர்ந்து கொள்வது, இவ்வளவு காலத்திற்குப் பின் வந்த நம்மால் இயலாதது.

நமக்கு உதவி செய்ய உரையாசிரியர்கள் உள்ளனர்!"[1]

### 2. பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார்

"நூலாசிரியரின் அரிய கருத்துகளை எல்லாம் உரையாளர் உதவியாலேயே உலகம் உணர்ந்து இன்புறுகின்றது. பேருபகாரிகளாகிய உரை யாசிரியர்களின் உதவி இல்லையாயின், பண்டை உயர் நூல்களாம் கருவூலங்களில் தொகுத்துவைத்த

1. என் சரித்திரம், பக்கம் – 840.

விலைவரம்பில்லாப் பொருள் மணிக் குவியல்களை யாம், எங்ஙனம் பெறுதல் கூடும்?"[2]

### 3. செ. வேங்கடராமச் செட்டியார்

"மூல நூல்களுக்கு உள்ள பெருமை, உரைகளுக்கும் உண்டு. சில மூல நூல்கள் உரைநூல்களாலேயே பெருமை அடைந்துள்ளன என்னலாம். உரைநூல்கள் இல்லையேல், சிலமூல நூல்கள் விளக்கம் பெறாமல் மறைந்து போய் இருத்தலும் கூடும். இதை உளங் கொண்டு நோக்கினால், மூல நூல்களை மக்களிடையே மதிப்புடன் வாழச் செய்யும் பெருமை உரைநூல்களுக்கே உண்டு என்பது புலனாகும்"[3]

### 4. மு. அருணாசலம்

"பழைய இலக்கிய இலக்கணங்கள், இன்றைய பொதுமாந்தர் புரிந்து கொள்ளும் எல்லைக்கு அப்பாற் போய் விட்டவை. அப்படியே மொழியை உணர்ந்து கொண்டாலும், மொழியில் அடங்கிய நோக்கங்களையும் மரபுகளையும் குறிப்பு களையும் முற்ற உணர்ந்து கொள்வது மிகக் கடினம். இக் கடின நிலையை மாற்றி, பண்டைய நூல்களை எளிதாக உணர்ந்து கொள்ள வழி அமைத்தவர்கள் பண்டைய உரையாசிரியர்களே"[4]

### நால்வகைப் பிரிவுகள்

இவ்வாறு அறிஞர் பெருமக்களின் போற்றுதலைப் பெற்றுள்ள உரையாசிரியர்களின் உரைகளைப் பெற்று இன்றும் வாழ்ந்து வருகின்ற தமிழ் நூல்களை எல்லாம் நான்கு பிரிவிற்குள் அடக்கலாம். அவை,

1. இலக்கியம்
2. இலக்கணம்
3. தத்துவம்
4. கலை

என்பன.

இலக்கியம், இலக்கணம் ஆகிய இருபெரும் பிரிவுகளிலும் மிகுதியான நூல்கள் இடம் பெறுகின்றன. அவற்றிற்கு உரைகளும் மிகுதியாகத் தோன்றியுள்ளன. தத்துவம், கலை ஆகிய பிரிவுகளில் மிகுதியாக நூல்களும் இல்லை; உரைகளும் இல்லை!

சிலவகை நூல்களை எந்தப் பிரிவின் கீழ் அடக்குவது என்ற சிக்கலான வினா எழுகின்றது நீதி நூல்கள், சித்தர்பாடல்கள்

2. உரைநடைக் கோவை; பக்கம் – 26.
3. உரையாசிரியர்கள் (1968) – அறிமுகம்.
4. 13ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாறு, பக்கம் – 145.

நிகண்டுகள், இசை, நாடகம், மருத்துவம், சோதிடம், கணிதம் ஆகியவற்றை எவ்வாறு பாகுபாடு செய்வது?

நீதி நூல்களை இலக்கியத்தில் சேர்க்கலாம். நிகண்டுகளை இலக்கணத்தில் அடக்கலாம். சித்தர்பாடல்களை இலக்கியம் என்று கூறுவதைவிட, தத்துவம் என்று கூறுவது பொருந்தும்.

இசை நாடகம் சிற்பம் மருத்துவம் சோதிடம் கணிதம் முதலிய எல்லாவற்றையும் கலை என்ற பிரிவினுள் கொண்டு வரலாம்.

இலக்கிய நூல்கள் சிலவற்றை உரையின்றிக் கற்று அறிய முடியும் எனினும், ஏனையவற்றை உரைகளின் உதவி இல்லாமல் அறிய முடியாது. கால இருள் படிந்துள்ள நூல்களின் விளங்காத பகுதிகளை விளக்கும் ஒளி விளக்குகளாக உரைகள் உள்ளன.

**உரைகள் தமிழின் உயிர் நாடிகள்**

தமிழ் இலக்கிய வரலாற்றை முன்னும் பின்னும் அரிமாநோக்குடன் கவனித்தால், உரையாசிரியர்களின் பணி, தமிழ் நூல்களின் வாழ்விற்கு எவ்வளவு முதன்மை வாய்ந்தது என்பதை உணரலாம்.

இறையனார் களவியலுரை தோன்றிய காலத்தில் மறைந் திருந்த தொல்காப்பியப் பொருளதிகாரத்தையும் மற்றப் பகுதி களையும் பேணிக் காத்து விளக்கம் தந்து இளம்பூரணர் வெளிப் படுத்தினார்.

கால மாறுபட்டால் அரசு நிலை திரிந்து தமிழ்க் கல்வி வீழ்ச்சி அடைந்ததால், பரிபாடலில் இடைச் செருகலும் பாட வேறுபாடுகளும் புகுந்து நூல் சிதைந்துவிட்டது. அந்த நிலையில் அதனைத் தூய்மை செய்து அதன் பண்டைய பெருமை மாறாமல் உரையுடன் தந்தவர் பரிமேலழகர். ஏனைய சங்கத்தமிழ் நூல் களுக்கும் உரை எழுதி அவற்றைக் காத்துத்தந்தவர்கள் உரையாசிரியர்களே.

ஜைன சமயக் காப்பியமாகிய சீவக சிந்தாமணிக்குப் போட்டியாகச் சைவ சமயம் பெரிய புராணத்தைத் தோற்றுவித்துச் சிந்தாமணியை ஒளி இழக்கச் செய்த பின், நச்சினார்க்கினியர் அந்தக் காப்பியத்திற்குச் சிறந்த உரை எழுதி ஒளி பெறச் செய்தார்.

இவற்றிற்கு மறுதலையாகப் பழைய உரைகள் இல்லாததால், நூல்கள் இழந்த நலன்களை எண்ணிப்பார்ப்போம்.

கம்பராமாயணத்தில் காண்டந்தோறும் இடைச்செருகல் என்ற பெயருடன் பல நூறு போலிப்பாடல்கள் நுழைந்தும்,

பாடல் தோறும் கணக்கற்ற பாட வேறுபாடுகள் இடம் பெற்றும் நூலின் வடிவமும் வண்ணமும், அமைப்பும் அழகும் கெட்டதற்குக் காரணம், அந்த நூலிற்குப் பழைய உரைகள் தோன்றாமையே ஆகும்.

மூவாயிரம் பாடல்கள் இருக்க வேண்டிய திருமந்திரத்தில் நூற்றுக்கு மேற்பட்ட இடைச் செருகல் பாடல்கள் நுழைந்த தற்கும், பல பாடல்கள் மூடுமந்திரமாக இருப்பதற்கும் காரணம், அந்த நூலுக்குப் பழைய உரைகள் இன்மையே ஆகும்.

பெருங்கதை முதலும் முடிவும் இழந்து விளங்காத அருங்கதையாக இருப்பதற்குக் காரணம், அதற்குப் பழைய உரை ஒன்றும் ஏற்படாமையே ஆகும்.

இவற்றை எல்லாம் எண்ணிப் பார்த்த தமிழறிஞர் மு. அருணாசலம் உரையாசிரியர்களின் நற்பணியை,

"இடைக்காலத்தில் உரைகாரர்கள் தோன்றாமல் போயிருப் பாரானால், பழந்தமிழ் இலக்கணங்களும் இலக்கியங்களும் மேலும் பல, கிடைக்காமல் கால வெள்ளத்தில் அழுந்தி இருக்கும்." என்று போற்றிப் புகழ்கின்றார்.

## உரை ஆய்வுகள்

இத்தகைய சிறப்புவாய்ந்த உரைகளைப் பற்றிய ஆய்வின் முதற்கட்டம், இறையனார் களவியலுரையிலிருந்து தொடங்கி, சிவஞான முனிவரின் உரைகளுடன் முடிகின்றது. அதற்கு அடுத்த கட்டம், 19-ஆம் நூற்றாண்டிலிருந்து தொடங்குகிறது.

அந்த நூற்றாண்டிலிருந்துதான் பழந்தமிழ் நூல்கள் உரைகளுடன் பதிப்பிக்கப் பெற்றன. 1819-ஆம் ஆண்டில் எல்லீஸ் துரை, திருக்குறளின் முதல் 13 அதிகாரங்களுக்கு உரை எழுதி முதன் முறையாக அச்சிட்டுப் புத்தக வடிவில் தந்தார். இதுவே அச்சுவடிவம் பெற்ற முதல் பழந்தமிழ் நூலாகும். அதன் பின்னரே தமிழறிஞர்கள் முயன்று, தமிழ் இலக்கண இலக்கியங்களை ஒவ்வொன்றாக வெளியிட்டனர்.

19-ஆம் நூற்றாண்டில் பழைய உரைகளும் புதிய உரைகளும் மூல நூல்களோடு பதிப்புக்கலையுடன் இணைந்து வெளிவந்தன. உரையும் பதிப்பும் ஒட்டிப் பிறந்த இரட்டைக் குழந்தைகளைப் போல, சேர்ந்தே வெளிப்பட்டன. ஆதலின் உரைகளைப் பற்றிய ஆய்வு பதிப்புக்கலையுடன் தொடர்புடையதாக உள்ளது:

சிறந்த பதிப்பு நூல்களில் உரைகளைப் பற்றிய ஆய்வு, நூலின் முன்னுரையிலும் பக்கங்களின் அடிக்குறிப்பிலும் பிற் சேர்க்கையிலும் இடம் பெற்றது. இவ்வாறு, ஏட்டுச் சுவடியில்

இருந்து, அச்சு வடிவம் பெற்ற நூல்கள், மூலம் உரை பதிப்பு ஆய்வு ஆகிய நான்கு கூறுகளிலும் சிறந்து விளங்குகின்றன.

பழைய உரைகள் அச்சுவடிவம் பெற்று வெளிவந்த பின்னரே, அவற்றின் தேவையும் முதன்மையும் சிறப்பும் தமிழுலகிற்குத் தெரிந்தன. அதன் பின்னரே உரை ஆய்வுகள் பல வகையாய்த் தோன்றின. உரையாசிரியர்களின் வரலாறு அறிதல், உரைகளில் உள்ள பாட வேறுபாடு, பிழை ஆகியவற்றை அடையாளம் காட்டுதல், தவறான உரைகளை மறுத்தல், மறுப்புக்கு மறுப்பு உரைத்தல், உரைகளுக்குச் சரியான பொருளும் விளக்கமும் கூறுதல் முதலிய பல வடிவங்களில் - முற்கால இதழ்களில் உரை ஆய்வுகள் வெளிப்பட்டன.

## விடிவெள்ளி

இந்த நிலை இருபதாம் நூற்றாண்டின் நடுவில் மாறியது. ஒரு நூலுக்குத் தோன்றியுள்ள பல உரைகளைத் தொகுத்து 'உரைவளம்' கண்டு, உரை வேற்றுமைகளை அறிந்து உண்மை காணும் முறையான ஆய்வு தோன்றியது. இத்தகைய நல்ல சூழ் நிலையில் உரைகளின் மாண்பைத் தமிழ் கூறும் நல்லுலகம் அறிந்து கொண்டது.

## உரைகளின் மாண்பு

உலக மொழிகளில் வேறு எந்த மொழியிலும் இல்லாத அளவுக்குப் பல வகையான சிறந்த உரைகள் காலந்தோறும் தொடர்ச்சியாக - படிப்படியாக மெதுவாகப் பரிணாம வளர்ச்சியின் அடிப்படையில் தமிழில் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. அவையாவும் கவர்ச்சி மிகுந்த தொடர் கதைகளின் சிறப்பியல்புகளைப் பெற்றுள்ளன.

உரைகள், தமிழ் மக்களின் சிந்தனையில் வேரூன்றிப் பண்பாட்டில் தழைத்து வளர்ந்து செயல்களில் சிறந்து விளங்கு கின்றன. அவர்களின் சிந்தனையை ஒருமுகப்படுத்தி, செயல் களைச்சீர் செய்து, வாழ்க்கையை நெறிப்படுத்தி வருகின்றன.

அவ்வுரைகள் தாம் தோன்றிய காலம் முதல் இன்று வரை, காலப் பாதையில் நெடுக ஒளி வீசி வழி காட்டி வருகின்றன; காலந்தோறும் தம் செல்வாக்கை நிலைநாட்டி வருகின்றன.

மூல நூல்கள் தங்கச் சுரங்கம் என்றால், அவற்றின் உரைகள் தங்கச் சுரங்கத்திற்குள் அமைந்துள்ள மற்றொரு வைரச் சுரங்க மாகும். உரைகள் யாவும் அள்ளக் குறையாத அமுத சுரபிகள்; எப்போதும் வற்றாத ஆறுகள்; கால மாற்றத்தால் நிலை குலையாத

இமயச்சிகரங்கள்; சமயம் அரசியல் முதலியவற்றின் தாக்கத்தால் கலங்காத கடல்கள்.

## இந்தநூல்

இத்தகைய சிறப்பியல்புகளை உடைய உரைகளின் நலன் களையும், அவ்வுரைகளைத் தந்த உரையாசிரியர்களின் சிறப்பை யும் ஆய்வு நோக்கில் இந்த நூலில் தந்துள்ளேன்.

'உரையாசிரியர்கள்' என்ற தலைப்பை உடைய இந்த நூல், உரைகளின் ஆய்வையும் உள்ளடக்கியதாகும். இது மூன்று பகுதிகளாக அமைந்துள்ளது. அவை,

1. அறிமுகம்
2. ஆய்வு
3. நோக்கு

என்பன.

'அறிமுகம்' என்ற முதற்பகுதி, உரைகளைப் பற்றிய பொதுவான செய்திகளைத் தொகுத்து உரைக்கின்றது.

'ஆய்வு' என்ற இரண்டாம் பகுதி, மூல நூலை அறிமுகப் படுத்தி, உரையாசிரியர்களின் வரலாற்றைக் கூறி, அவர்களின் உரைகளை ஆய்ந்துள்ளது. தேவையான இடங்களில் பதிப்பு களையும் நினைவுபடுத்துகின்றது.

'நோக்கு' என்ற மூன்றாம் பகுதி, எல்லா உரைகளையும் சிங்க நோக்காக முன்னும் பின்னும் நோக்கி, ஒட்டு மொத்தமாக மதிப்பிடுகின்றது.

இந்த நூல், வருங்கால ஆய்வாளர்களின் சிந்தனைக்குத் தூண்டு கோலாய் - ஆய்வில் தளர்ச்சி ஏற்படும் இடங்களில் ஊன்று கோலாய் - சரியாக மதிப்பிடும் அளவு கோலாய்ப் பயன் படும் என்று நம்புகிறேன்.

**ஒன்றே நினைந்திருந்தேன் !**
**ஒன்றே துணிந்தொழிந்தேன் !**
**ஒன்றே என் உள்ளத்தில்,**
**உள்ளடைத்தேன் !**

**— காரைக்கால் அம்மையார்**

'காட்டுவித்தால் ஆர் ஒருவர்
காணாதாரே?

–அப்பர்

# 1. உரையின் தோற்றமும் வளர்ச்சியும்

தமிழ் மொழி இலக்கிய வளம் மிகுந்தது; இலக்கண வரம்புடன் வளர்ந்து வரும் இயல்புடையது. சங்கம் வைத்து மொழி வளர்த்த வேந்தர்களும், காலவெள்ளத்தை எதிர்த்து நீந்தி என்றும் வாழும் இலக்கியச் செல்வங்களைப் படைத்து வழங்கிய புலவர் களும் காலந்தோறும் தோன்றி, தமிழ் மொழியைக் காத்து வளர்த்தனர். இத்தகைய சிறப்பியல்புகளை உடைய தமிழ் மொழியை,

பொருப்பிலே பிறந்து, தென்னன்
    புகழிலே வளர்ந்து, சங்கத்(து)
இருப்பிலே இருந்து வையை
    ஏட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று, கற்றோர்
    நினைவிலே நடந்(து)ஓர் ஏன
மருப்பிலே பயின்ற பாவை
    மருங்கிலே வளரு கின்றாள்[1]

என்று புலவர் பெருமக்கள் வாயாரப் போற்றிப் புகழ்ந்தனர்; இலக்கண வரம்புடன் வளர்ந்துவரும் தமிழ் மொழியின் செம்மையை,

கண்ணு தற்பெருங் கடவுளும்
    கழகமோ(டு) அமர்ந்து,
பண்ணு றத்தெரிந்(து) ஆய்ந்தஇப்
    பசுந்தமிழ் ஏனை
மண்ணி டைச்சில இலக்கண
    வரம்பிலா மொழிபோல்
எண்ணி டப்படக் கிடந்ததா
    எண்ணவும் படுமோ[2]

என்று போற்றினர்.

## நூல் அரங்கேற்றம்

தமிழகத்தில் தோன்றிய சான்றோர்கள் உலகத்தை வாழ வைக்கும் உயர்ந்த நோக்கத்துடன், மக்களினம் இன்புற்று வாழ வழிகாட்டும் கொள்கையுடன் இலக்கியம் படைத்தனர்; இலக்கணம் வகுத்தனர்; சமய நூல்கள் இயற்றினர். தம் படைப்பினை நாடறிந்த பேரவையின் முன்வைத்து, நன்மை

1. வில்லி பாரதம் – சிறப்புப்பாயிரம்
2. திருவிளையாடற் புராணம் (பரஞ்சோதியார்) நாட்டுச் சிறப்பு–57.

தீமைகளை-குற்றம் குறைகளை அங்குள்ள சான்றோர்கள் ஆய்ந்து, நல்ல நூல் என்று ஏற்ற பின்னரே மக்களிடம் அதனைப் பரப்பினர். அதன்பின்னரே அந் நூலை ஆசிரியர்கள் தம் மாணவர்களுக்குக் கற்பித்தனர்; கற்றோரும் மற்றோரும் பயின்றனர். இவ்வாறு உயர்ந்த நெறியில் சீரிய நோக்குடன், தமிழ் இலக்கிய இலக்கண சமய நூல்கள் நாட்டில் உலவி அறிவொளி பரப்பின.

## உரை இல்லாத காலம்

நூல்கள் தோன்றிய காலத்தில் அவை எல்லோருக்கும் விளங்கும் நிலையில் இருந்தன. உரையும் விளக்கமும் இல்லாத மூல நூல்களே அனைவரும் கற்று மகிழும் இயல்பினவாய் இருந்தன. பேராசிரியர் தொல்காப்பிய உரையில், "உரையின்றிச் சூத்திரத்தானே பொருள் நிகழ்ந்த காலமும் உண்டு" (மரபியல்—98) என்றும், "உதாரணங்காட்டல் வேண்டாமையை உணர்ந்து உரைநடந்த காலமும் உடையவாகும் முற்காலத்து நூல்கள்" (மரபியல்—101) என்றும் கூறியுள்ள கருத்துக்கள் சிந்திக்கத்தக்கன.

'கற்றலின் கேட்டலே நன்று' என்பது அக் காலத்தவர் கொள்கை. கேள்வி என்று தனியாக ஓர் அதிகாரம் வகுத்துக் கொண்டு 'கற்றிலன் ஆயினும் கேட்க' என்று திருவள்ளுவர் அறிவுரை கூறுகின்றார். 'செந்தமிழும் நாப்பழக்கம்' என்று ஔவையார் பாடியுள்ளார். இவை எல்லாம் உரை எழுதி நூல்களைப் படிப்பதைவிட, ஒருவர் சொல்லக் கேட்டுக் கல்வி பயின்ற வழக்கம் மிகுதியாய் இருந்ததை உணர்த்தும் சான்றுகள்.

அக் காலத்து எழுது கருவிகளும், எழுதும்கலை விரைவில் வளரத் தடையாய் இருந்தன. பனையோலைகளில் எழுத்தாணி கொண்டு ஒரு நூலைப் பல நாட்கள் எழுதிச் சேர்த்து, சுவடியாக்கிப் போற்றிக்காக்க வேண்டிய நிலை இருந்து வந்தது. ஒரே சுவடியைப் பலர் கூடிக் கற்றனர். ஒருவர் படிக்க மற்றவர்கள் காதால் கேட்டு அறிந்தனர். மிகுதியாக எழுதி விளக்க வேண்டியவற்றை எழுதாமல், வாயால் கூறியே விளக்கி வந்தனர். "விரிப்பின் பெருகும். விரிவஞ்சி விடுத்தாம். வல்லார் வாய்க் கேட்டுணர்க. வந்தவழிக் காண்க" என்று உரையாசிரியர்கள் இடையிடையே எழுதிச் செல்லும் வழக்கம், அவர்கள் காலத்தில் எழுதுவதில் இருந்த இடர்ப்பாடுகளை உணர்த்தும். நூல்களுக்கு உரை எழுதாமல், வாயால் விளக்கிச் செவியால் அறிந்து கல்வி கற்றுப் புலமை பெறும் வழக்கம் அக் காலத்தில் நாடெங்கும் பரவியிருந்தது.

நாலடியாரில் (அவையறிதல் என்ற அதிகாரத்தில்) சில பாடல்களில் உள்ள,

நாப்பாடம் சொல்லி நயம் உணர்வார் –312

பாடமே ஓதிப் பயன் தெரிதல் தேற்றாத
மூடர் –316

கற்றதூஉம் இன்றிக் கணக்காயர் பாடத்தால்
பெற்றதாம் பேதை ஓர் சூத்திரம் –34

என்ற வரிகளும், பழமொழி நானூற்றுப் பாடலில் உள்ள,

பல்காலும்
நாடுக தான் கண்ட நுட்பத்தை –195

என்ற வரியும் பழங் காலத்து மக்கள் கல்வி பயின்ற முறையை நமக்கு அறிவிக்கின்றன.

நன்னூற்பாயிரம், பாடம் சொல்லும் முறையைப் பின் வருமாறு கூறுகின்றது:

ஈதல் இயல்பே இயம்பும் காலை,
காலமும் இடமும் வாலிதின் நோக்கி,
சிறந்துழி இருந்து,தன் தெய்வம் வாழ்த்தி,
உரைக்கப் படும்பொருள் உள்ளத்து அமைத்து,
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து,
கொள்வோன் கொள்வகை அறிந்து,அவன் உளங்கொளக்,
கோட்டமில் மனத்தின்நூல் கொடுத்தல் என்ப.

பாடம் கேட்டும் முறை பின்வருமாறு உரைக்கப்படுகின்றது:

நூல்பயில் இயல்பே நுவலின் வழக்குஅறிதல்,
பாடம் போற்றல், கேட்டவை நினைத்தல்,
ஆசாற் சார்ந்துஅவை அமைவரக் கேட்டல்,
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்,
வினாதல் வினாயவை விடுத்தல் என்றுஇவை
கடனாக் கொளினே மடம்நனி இகக்கும்.

இவை, கேள்விச் செல்வத்திற்கு இருந்த முதன்மையை உணர்த்துகின்றன.

## செவிச் செல்வம்

பழைய நூலைக் கற்றறிந்தவர் வழி வழியாகப் பிறருக்கு அந் நூலின் நுட்பங்களை எடுத்துக் கூறி வந்தனர். ஆசிரியர் தம் மாணவர்களுக்கு வாய்மொழியாகப் பழைய நூலுக்கு உரையும் விளக்கமும் கூறிவந்தார். இவ்வாறு ஒருநூல், பல தலைமுறை களைக் கடந்து வரும்போது, ஒவ்வொரு பரம்பரைக்கும் உரிய

கருத்துகளையும் விளக்கத்தையும் சேர்த்துக் கொண்டு வளர்ந்து வந்தது. வழிவழியாகப் பாடம் சொல்லச் சொல்ல நூல்களுக்குரிய விளக்கம் பெருகியது. பின்வந்தோர், முன்னோர் கருத்துடன் சிலவற்றைக் கூட்டினர்; பொருந்தாதவற்றை மறுத்தனர். ஆசிரியர்கள், பாடங் கூறியபோது தம்மாணவர்கள் எழுப்பிய ஐயங்களைப் போக்கினர்; மாணவர்கள் கேட்ட வினாக்களுக்குத் தக்க விடை கூறினர்.

இந்த நிலையில், ஆசிரியர்—மாணவர் என்ற சார்பும், தந்தை—மகன் என்ற பிணைப்பும் பெற்று, கற்ற பரம்பரையிடையே செல்வாக்கு அடைந்து உரைகள் வளர்ந்து வந்தன. ஆசிரியர் தம் மாணவர்களுக்கும், தந்தை தம் மக்களுக்கும் தாம் வழிவழியாகக் கேட்டுவந்த உரைகளை மரபு பிறழாமல் எடுத்துக் கூறி விளக்கினர். மாணவன், ஆசிரியர் ஆனான். மகன், தந்தை ஆனான். ஆனபோது முன்னோர் மொழிந்தவற்றைப் பின்னோர்க்கு அவர்கள் எடுத்துரைத்தனர். இவ்வாறு வாழையடி வாழையாக உரைகள் பரவிவந்தன. கேட்போர் நெஞ்சத்தில் நிலை பெற்று, வாய்மொழியாகப் பரவிவந்த உரைகள் பல உண்டு. புலவர்களின் நினைவாற்றலை நம்பி, செவியும் வாயும் செய்த துணையால் வாழ்ந்துவந்த உரைகள் காலப்போக்கில் ஓலைகளில் எழுதப்பட்டன. இறையனார் களவியலுரை இவ்வாறு பல தலைமுறைகள் வாய்மொழியாக வழங்கிவந்தது என்பதை அவ்வுரையே கூறுகின்றது. பின்வரும் உரைப்பகுதி, அவ்வுரை வந்த வரலாற்றை அறிவிக்கின்றது:

"மதுரை ஆலவாயிற் பெருமானடிகளால் செய்யப்பட்ட நூற்கு நக்கீரனாரால் உரைகண்டு, குமார சுவாமியால் கேட்கப் பட்டது என்க.

"இனி உரை நடந்து வந்தவாறு சொல்லுதும்:

"மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் தம் மகனார் கீரங் கொற்றனார்க்கு உரைத்தார்; அவர் தேனூர் கிழார்க்கு உரைத்தார்; அவர் படியங் கொற்றனார்க்கு உரைத்தார்; அவர் மணலூர் ஆசிரியர் புளியங்காய்ப் பெருஞ் சேந்தனார்க்கு உரைத்தார்; அவர் செல்லூர் ஆசிரியர் ஆண்டைப் பெருங் குமாரனார்க்கு உரைத்தார்; அவர் திருக்குன்றத்து ஆசிரியர்க்கு உரைத்தார்; அவர் மாதவனார் இள நாகனார்க்கு உரைத்தார்; அவர் முசிறி ஆசிரியர் நீலகண்டனார்க்கு உரைத்தார்.

"இங்ஙனம் வருகின்றது உரை". இப்பகுதி, உரை வளர்ந்த வரலாற்றை விளக்கும் சிறந்த சான்றாக உள்ளது.

நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களுக்குத் தோன்றிய வியாக்கியானங்கள், வைணவப் பெரியோர்கள் பொது மக்களிடம், பக்திப் பாடல்களை விளக்கிக்கூறி நிகழ்த்திய சொற்பொழிவுகளே ஆகும்; ஆசிரியர்-மாணாக்கர் முறையில் கூறி வந்த விரிவுரைகளே ஆகும். அவற்றைப் பின்னர் எழுதி வைத்துப் போற்றலாயினர்.

கம்பராமாயணத்திற்கு விளக்கவுரை, பல நூறு ஆண்டு களாக வாய்மொழியாகவே வழங்கி வந்தது என்பதை விநோதரச மஞ்சரி பின்வருமாறு கூறுகின்றது:

"கம்பரையும் அவருடைய மாணக்கரையும் அடுத்துப் பல பெயர்கள் இராமாயணத்திற்குச் **சம்பிரதாயமாகவும் சாதுரியமாகவும்** உரை கேட்டார்கள். அப்புறம் அப் பல பெயரையும் அடுத்துப் பற்பலர் பாடங்கேட்டார்கள். இந்தப் படி, அதன் பின்பும் காலக்கிரமத்தில் அனேகர் கர்ண பரம்பரையாக இராமாயணத் திற்கு, உரைகேட்டு வந்தார்கள்.

"கொஞ்ச காலத்திற்கு முன்பு அவ்வாறு கர்ண பரம் பரையாகப் பாடங்கேட்டுக் கிரமமாய்ப் போதிக்கத் தக்க வல்லமை பெற்றிருப்பவர்கள் ஆர்ஆர் என்னில், தென் தேசத்தில் வசித்திருந்த பெத்த பெருமாள் பிள்ளை என்பவரும், சீகாழி அருணாசலக் கவிராயரும், மயிலை சீனிவாசப் பிள்ளையும், சேதுபதியின் வக்கீலாகிய சோமசுந்தரப் பிள்ளையும், தஞ்சாவூர் ஸம்ஸ்தான வித்துவான் இராமசாமி கவிராயரும், தொல்காப்பிய வரதப்ப முதலியாரும், காலேஜ் திருவேங்கடாசல முதலியாரும், திருத்தணிகைச் சரவணப் பெருமாள் கவிராயரும், புதுவைகுறள் வேங்கடாசல உபாத்தியாயரும், காஞ்சீபுரம் அருணாசல தேசிகரின் பிதாவாகிய சண்முக கவிராயரும், திருநீர்மலைக் காளிங்கராய பிள்ளையும் மற்றும் சிற்சிலருமே.

"இக் காலத்திலும், அப்படிப்பட்ட சாமர்த்தியமுடைய சிலர் சென்னை ராஜதானி முதலான ஸ்தானங்களில் இருக்கிறார்கள்"*

## வாய்மொழியின் செல்வாக்கு

வாய்மொழி வாயிலாக வளர்ந்து வந்த உரை, ஏட்டில் எழுதப்பட்ட பின்னரும் உரையாடுவது போன்ற நிலையிலேயே அமைந்தது. ஆசிரியர் பாடம் கூற, அதைக் கேட்கும் மாணவன் ஐயங்களை எழுப்ப அவற்றிற்கு விடை கூறி ஆசிரியர் விளக்கும்

* விநோதரச மஞ்சரி (1966) பக். 245.
வித்துவான் அஷ்டாவதானம் வீராசாமி செட்டியார்.

2.5.

அமைந்தன. நேரே ஏட்டில் உரை முறையிலேயே உரைகள் எழுதியவர்களும் பழைய மரபைத் தம்மை அறியாமல் மேற்கொண்டனர். வாய்மொழி தன் செல்வாக்கை எழுத்திலும் நிலை நாட்டியது.

இறையனார் அகப்பொருள் உரையும், சேனாவரையர் தொல்காப்பியம் சொல்லதிகாரத்திற்கு எழுதிய உரையும், பேராசிரியர் திருக்கோவையாருக்கு எழுதிய உரையும், காலிங்கர் திருக்குறளுக்கு எழுதிய உரையும் ஆசிரியர் மாணவர்களுக்குப் பாடம் கூறும் வகையில் வினா விடையாக உள்ளன. மற்ற உரையாசிரியர்களின் உரையிலும் ஆங்காங்கே பல இடங்கள் இவ்வாறு அமைந்துள்ளன. பேராசிரியர், திருக்கோவையாருக்கு *(285)* எழுதிய உரையிலிருந்து ஓர் எடுத்துக்காட்டுக் காண்போம்:

"கட்டுவித்தியை வினவ, அவள் அறியாதாள் போலக் இக்கருமம் முடித்தற் பொருட்டு இவ்வகை சொன்னாள். என்னை? வரை பொருட்குத் தலைமகன் போக அவன் வரவு நீட்டித்தலான், இவளது ஆற்றாமையான் உண்டாகிய நோயை முருகனால் வந்தது என்று இவள் கூறலாமோ? இஃது அங்ஙனம் ஆயின், குறி என்பது அனைத்தும் பொய்யேயாம் என்பது கடா. அதற்கு விடை: குறியும் பொய்யன்று; இவளும் பொய் கூறினாள் அல்லள்; அஃது எங்ஙனம் எனின், குறிபார்க்கச் சென்றிருக்கும் பொழுதே தெய்வ முன்னிலையாகக் கொண்டு இருத்தலான், அத் தெய்வத்தின் வெளிப்பாட்டானே தலைமகனுடன் புணர்ச்சி உண்மையை அறிந்தாள். இங்ஙனம் அறிந்தாள் என்பதனை நாம் அறிந்தவாறு யாதினால் எனின், இக் களவொழுக்கம் தெய்வம் இடை நிற்ப, பான்மை வழியோடி நடக்கும் ஒழுக்கம் ஆதலானும், சிற்றம்பலத்தான் இயல்பு தெரிந்திராதே என்று இவள் சொல்லுதலானும் அறிந்தாம்."

இப் பகுதி, வினாவிடை முறையில் — ஆசிரியர் தம் மாணவர்களுக்குப் பாடங்கூறும் வகையில் அமைந்துள்ளது. உரையாடல் வகையில் இதனை அமைப்போம்:

**ஆசிரியர்:** கட்டுவித்தியை வினவ, அவள் அறியாதாள் போல இக்கருமம் முடித்தற் பொருட்டு இவ்வகை சொன்னாள்.

**மாணவர்:** என்னை? வரை பொருட்குத் தலைமகன் போக அவன் வரவு நீட்டித்தலான் இவளது ஆற்றாமையான் உண்டாகிய நோயை முருகனால் வந்தது என்று இவள் கூறலாமோ? இஃது அங்ஙனம் ஆயின், குறி என்பது அனைத்தும் பொய்யேயாம்.

**ஆசிரியர்:** குறியும் பொய்யன்று; இவளும் பொய் கூறினாள் அல்லள்.

**மாணவர்:** அஃது எங்ஙனம்?

**ஆசிரியர்:** குறிபார்க்கச் சென்றிருக்கும் பொழுதே, தெய்வ முன்னிலையாகக் கொண்டு இருத்தலான், அத் தெய்வத்தின் வெளிப்பாட்டானே தலைமகனுடன் புணர்ச்சி உண்மையை அறிந்தாள்.

**மாணவர்:** இங்ஙனம் அறிந்தாள் என்பதனை நாம் அறிந்தவாறு யாதினால்?

**ஆசிரியர்:** இக் களவொழுக்கம், தெய்வம் இடை நிற்பப் பான்மை வழியோடி நடக்கும் ஒழுக்கம் ஆதலானும், சிற்றம்பலத்தான் இயல்பு தெரிந்திராதே என்று இவள் சொல்லுதலானும் அறிந்தாம்.

இவ்வாறு, உரையாடலாய் அமையத்தகுந்த பல பகுதிகள் இறையனார் களவியல் உரையிலும், மற்ற உரைகளிலும் உள்ளன.

உரை, கட்டுரை ஆகிய சொற்களே அவை முதலில் வாய் மொழியாக வழங்கி வந்தவை என்பதை நினைவூட்டுகின்றன. உரையாசிரியர்கள், "இச் சூத்திரம் என்நுதலிற்றோ எனின், முன்னர்க் கூறினாம், பின்னர்க் கூறுதும், எனின் அற்றன்று, நன்று சொன்னாய், அறியாது கடாயினாய், கூறுதும், என்று கூறுவாரும் உளர், வல்லார்வாய்க் கேட்டுணர்க" என்று இடையிடையே தம் உரையில் எழுதிச் செல்லுகின்றனர். என்பது, என்க, என்றவாறு, எனப்படுவது, அறிக, கொள்க, கருதுக, கூறுக போன்ற சொற்களும் அவர்களால் ஆளப்படுகின்றன. இன்று கட்டுரை எழுதுவோரும் ஏன் என்றால், எப்படி எனில், ஏன் என்று கேட்டால், விளக்கமாகக் கூறினால் என்று எழுதிப் பழைய மரபின் செல்வாக்கை நினைவூட்டி வருகின்றனர்.

## உரையின் வளர்ச்சி

வழிவழியாக நூல்களுக்கு உரைகேட்டுப் பழகியவர்களும் தொடக்கத்தில் விரிவான உரையோ விளக்கமோ எழுதவில்லை. முதன்முதலில் அருஞ்சொற்களுக்குப் பொருளும், சொற்களைக் கொண்டுகூட்டி முடிக்கும் வகையும், சில வரலாற்றுக் குறிப்பும் மிகச் சுருக்கமாய் எழுதி வைத்தனர். சிலப்பதிகாரத்திற்கு முதலில் அரும்பதவுரை தோன்றியது. ஐங்குறு நூறு, பதிற்றுப் பத்துப் போன்ற பழந்தமிழ் நூல்களுக்கு முற்காலத்தில் தோன்றிய பழைய உரைகள் மிகச் சுருக்கமாக—குறிப்புரையாக உள்ளன. புறநானூற்றின் பழையவுரை பொழிப்புரையாக உள்ளது. பரிபாடலுக்குப்

பரிமேலழகர் எழுதிய உரை, சுருக்கமாகவே உள்ளது. அக நானூற்றிற்குப் பழைய வுரை (90 பாடல்களுக்கு மட்டும்) குறிப்பு உரையாகவே உள்ளது.

குறிப்புரை எழுதியவர்களின் ஊர் பேர் தெரியவில்லை. அவர்களைப் பற்றிய வரலாறு எதுவும் தெரியவில்லை. குறிப் புரைக்குத் தந்த முதன்மையை அவற்றை இயற்றியவர் பெயருக்கும் வரலாற்றுக்கும் தரவில்லை. புகழை விரும்பாது, பெயரையும் துறந்த பெரியவர்கள் அவர்கள்!

காலம் செல்லச் செல்லக் கருத்துகள் வளர்ந்தன. குறிப்புரையுடன் முன்னோர் சொல்லிவந்த விளக்கம், மேற் கோள் ஆகியவை விரிவடைந்தன. அவற்றையும் ஏட்டில் எழுதும் நோக்கம் ஏற்பட்டது. விரிவுரையும் விளக்க வுரையும் தோன்றின. எடுத்துக்காட்டும் மேற்கோள் விளக்கமும் பெருகின. இவற்றைத் திறம்படக் கூறுவோர் இரண்டொருவரே இருந்தனர். அவர்களே அவற்றை ஏட்டில் எழுதிவைத்தனர். மயிலைநாதர், உரையின் பல்வேறு வகைகளை விளக்கியுள்ளார்.

"நூலுரை, உரைவிரி எனும் இவை, ஆறு தொடர்ச்சிப் பொருள் மயங்கிய ஒரு தொடர்த் தொகை மொழி. இவை,

**நூலை ஒக்கும் உரை**
**நூற்கு உரை**
**நூலது உரை**
**நூற்கண் உரை**
**நூலன்ன உரை**
**நூலும் உரையும்**

என்றும்,

**உரையை விரி**
**உரைக்கு விரி**
**உரையது விரி**
**உரைக்கண் விரி**
**உரைக்கும் விரி**
**உரை விரியுடையது**

என்றும் வரும்" (நன்—372) என்னும் பகுதி உரைகளை விளக்குகின்றது.

## வலியவை வாழ்வுபெறல்

முன்னோர் எழுதிய குறிப்பை மேற்கொண்டு புதிய கருத்துகளை அவற்றுடன் சேர்த்துப் பின் வந்தோர் தர, வாய்ப்பு ஏற்படுவது இயற்கையே. பின் தோன்றியவர்களுக்குப் பல வேறு

உரைகளைக் காணும் வாய்ப்பு ஏற்படவே, பலரிடம் இருந்த நல்ல கருத்தைத் தொகுத்துக் காணும் ஆற்றலைப் பெற்றனர். எல்லா உரைகளிலிருந்தும் நல்லனவற்றை மேற்கொண்டு மாறுபட்ட வற்றையும் தேவையில்லாதவற்றையும் விலக்கித் தாமும் பல நல்ல கருத்தை எழுதும் வாய்ப்பு, பின் வந்தவர்க்கே கிடைத்தது. இதனால் அவர்கள் எழுதிய விளக்கவுரைகள் செல்வாக்கு எய்தின; காலங்கடந்து நின்றன; நிலைத்த வாழ்வு பெற்றன. இக் காரணங்களால் இளம்பூரணருக்குப்பின் தோன்றிய தொல் காப்பிய உரைகள் வாழ்வு பெற்றன; திருவாய்மொழிக்கு 6000 படி, 9000 படி, 24000 படி ஆகிய வியாக்கியானங்களுக்குப் பின் தோன்றிய 36000 படி ஈடு என்ற சிறப்புப் பெற்றது.

ஒன்பது உரைகளுக்குப்பின் தோன்றிய பரிமேலழகர் உரை நிலைபெற்றது. மயிலை நாதருக்கும், சங்கர நமசிவாயருக்கும் பின் தோன்றிய சிவஞான முனிவரின் நன்னூல் உரை செல்வாக்குப் பெற்றது. பல உரைகள் சிவஞான போதத்திற்குத் தோன்றியபின் எழுந்த சிவஞான பாடியம் சிறப்புப் பெற்றது.

## உரைக்கு உரை

உரையாசிரியர்கள் எழுதிய உரைவிளக்கங்கள் காலப் போக்கில் விளங்காத நிலையை அடைந்தன. அதனால் உரைக்கு உரை எழுதவேண்டிய தேவை ஏற்பட்டது. அதன் விளைவாய் உரைக்கு உரை பல தோன்றின.

நாலாயிர திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்களுக்குப் பல அரும்பதவுரைகள் தோன்றியுள்ளன.

பரிமேலழகர் உரையை விளக்கப் பிற்காலத்தில் பல உரைவிளக்கங்கள் தோன்றின. பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருமேனி இரத்தின கவிராயா, பரிமேலழகா உரைக்கு விளக்கமாக 'நுண்பொருள் மாலை' என்ற பெயருடன் ஒரு நூலை இயற்றினார். 1869-ஆம் ஆண்டில் பரிமேலழகர் உரையை, பல விளக்கங்கள் எழுதிச் சரவணப் பெருமாள் ஐயர் பதிப்பித்தார். 1885-இல் முருகேச முதலியார் பரிமேலழகர் உரைக்கு விளக்கம் எழுதி வெளியிட்டார். பின்னர், இராமாநுசக் கவிராயர், வை. மு. சடகோப ராமாநுசாச்சாரியார், கோ. வடிவேல் செட்டியார் (1919), அரசஞ் சண்முகனார், வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் ஆகியோர் பரிமேலழகர் உரைக்கு விரிவுரை எழுதியுள்ளனர்.

தொல்காப்பிய உரைகளுக்கும் இத்தகைய உரை விளக்கங்கள் தோன்றியுள்ளன. தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று பகுதிகளையும் பழைய உரைகளுடன் வெளியிட்ட ஈழத்து அறிஞர் கணேச ஐயர், பலவகை

விளக்கங்களை அடிக்குறிப்பிலும் பிறசேர்க்கையிலும் தந்துள்ளார். தேவநேய பாவாணர், கு. சுந்தர மூர்த்தி, பூவராகம் பிள்ளை ஆகியோர் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் வெளியிட்டுள்ள தொல்காப்பிய உரைகளுக்கு விளக்கவுரைகளை எழுதியுள்ளனர். மயிலம் சிவலிங்கனார், அடிகள் ஆசிரியர் ஆகியோர் இளம்பூரணம் எழுத்ததிகாரத்திற்கு விளக்கவுரை எழுதியுள்ளனர்.

## செய்யுள் வடிவ உரைகள்

உரைநடையில் மட்டுமன்றி, செய்யுள் வடிவிலும் சில உரைநூல்கள் தோன்றின. எல்லாவற்றையும் உரைநடையில் எழுதிக் கற்றுவரும் நமக்கு இது வியப்பூட்டும் செய்தியாக இருக்கலாம். ஆனால், எல்லாவற்றையும் மனப்பாடமாகக் கொண்டு கல்வி கற்றுத் தெளிந்த பழங்காலத்தவர்க்கு, செய்யுள் வடிவில் தோன்றிய உரைநூல் வியப்பினைத் தந்திராது.

டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர், செய்யுள் வடிவில் தோன்றிய உரைகளைப் பற்றிப் பின்வருமாறு கூறுகின்றார்:

"ஒரு செய்யுள் நூலுக்கு வசனத்தில் உரை இயற்றுவதோடு செய்யுள் உருவத்திலேயே உரை இயற்றுவதும் உண்டு. இது வட மொழியில் பெருவழக்கு. தமிழ் நூல்களிலும் சிவஞான போதத்துக்குரிய உதாரண வெண்பாக்களும், சித்தியார் முதலியனவும் உரைநிலையிலேயே உள்ளன. தேவாரப் பதிகங்களில் பாசுரம் முதலிய சிலவற்றிற்குப் பெரிய புராணத்தில் சேக்கிழார் உரை விரித்துச் சொல்கின்றார். இவற்றைப் போலவே திருக்குறளுக்கும் செய்யுள் உருவத்தில் உரையுண்டு. தனியே குறளுரை என்னும் பெயர் பெறாவிட்டாலும், அவை உரைகளின் தன்மையை உடையனவே"*

அகநானூற்றுக்குப் பழங்காலத்தில், அகவற்பாக்களால் ஆன உரை ஒன்று இருந்தது. இச்செய்தியினை உரைச் சிறப்புப்பாயிரம், "'இத்தொகைக்குக் கருத்து அகவலாற் பாடினான், இடையள நாட்டு மணக்குடியான் பால்வண்ண தேவனான வில்லவ தரையன்" என்று கூறுவதால் உணரலாம்.

திருக்குறளுக்குப் பல உரைகள், செய்யுள் உருவில் தோன்றின. குறட்பா ஒன்றைக்கூறி, அதன் கருத்தை விளக்க, ஏதேனும் ஒரு கதையோ வரலாறோ உதாரணம் காட்டி, பாடல் இயற்றும் வழக்கம் இலக்கிய உலகில் தோன்றியது. இத்தகைய

* திருவள்ளுவரும் திருக்குறளும் — பக்கம் 7,8.

நூல்களை 'உரை நூல்கள்' என்றே கருதவேண்டும் என்பது டாக்டர் உ.வே. சா. கொள்கையாகும்.

"இரங்கேச வெண்பா, சிவசிவ வெண்பா, தினகர வெண்பா, வடமலை வெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா முதலியன திருக்குறளுக்கு உதாரணம் கூறும் நூல்கள். உரை வகைகளிலே உதாரணம் கூறுதலும் ஒன்று ஆதலின், முற்கூறிய நூல்கள் திருக்குறளின் உரை நூல்கள் என்றே கூறல் தகும்" என்று அவர் கூறுகின்றார்.[1]

மேலும் சினேந்திர வெண்பா, திருமலை வெண்பா, முது மொழி மேல்வைப்பு, திருப்புல்லாணி மாலை, திருத்தொண்டர் மாலை, வள்ளுவர் நேரிசை, முருகேசர் முதுநெறி வெண்பா, திருக்குறட் குமரேச வெண்பா ஆகிய நூல்கள் திருக்குறளுக்கு உதாரணம் கூறும் வகையில் எழுந்துள்ளன. குமர குருபரரின் நீதி நெறி விளக்கமும் திருக்குறள் கருத்தைச் சுருங்கிய வடிவில் தரும் நூல் ஆகும்.

இவையேயன்றி, பழைய விருத்த நூல் ஒன்றும் உள்ளது. அண்மைக் காலத்தில், திருக்குறள் அகவல் குட்டிக்குறள் திருக்குறள் இசைமாலை ஆகியவையும் செய்யுள் உருவில் திருக்குறளுக்கு உரை நூல்களாகத் தோன்றியுள்ளன.

15-ஆம் நூற்றாண்டின் இறுதியில், ஆண்டிப் புலவர் நன்னூலுக்கு விருத்தப்பாவில் ஓர் உரை இயற்றினார். இவர் 'ஆசிரிய நிகண்டு' இயற்றியவர். இதனை, 'இயம்பிய நிகண்டின் உரையறி நன்னூலினொடு இரண்டுமே செய்து வைத்தான்" என்று ஆசிரிய நிகண்டின் பாயிரம் குறிப்பிடுகின்றது. 'உரையறி நன்னூல்' என்பது உரையைக் குறிக்கும். அது ஆசிரிய விருத்தத்தால் ஆனது.[2]

சிவஞான சித்தியாருக்கு, குருஞான சம்பந்தர் செய்யுள் வடிவில் 'ஞானாவரண விளக்கம்' என்ற பெயரில் சூத்திரக் கருத்துகளை விளக்கி எழுதினார்.

பாவேந்தர் பாரதிதாசன், குறுந்தொகைப் பாடல்கள் சிலவற்றை, இக்காலத்தவர் எளிதில் பொருள் உணர்ந்து கற்கும் வகையில் அகவற்பாக்களில் தந்துள்ளார். அவற்றைப் பாரதிதாசன் கவிதைகள் இரண்டாம் தொகுதியில் காணலாம்.

கவிஞர் கண்ணதாசன் முத்தொள்ளாயிரப் பாடல்கள் சிலவற்றிற்குச் செய்யுள் வடிவில் விளக்கம் தந்துள்ளார்.

1. திருவள்ளுவரும் திருக்குறளும் (பக்கம் 8)
2. தமிழ்ப் புலவர் வரலாறு (13-நூல்) 1956. பக்கம் 15-16.

மு.ரா. பெருமாள் முதலியார் நற்றிணை குறுந்தொகை அகநானூறு ஆகியவற்றிற்கு அகவற்பாவில் உரை எழுதியுள்ளார்.

இவையாவும் பழஞ்செய்யுட்களுக்கு இக்காலத்தவர் செய்யுள் வடிவில் எழுதிய உரைகள் ஆகும்.

## நூலாசிரியரே எழுதிய உரைகள்

ஒருவர் எழுதிய நூலுக்குப் பிறர் உரை எழுதிய மரபு போய், நூலாசிரியரே உரை எழுதும் வழக்கமும் ஏற்பட்டது. பல உரைகள் தோன்றியும், ஒரு நூல் நன்கு விளங்காமல் இருந்த நிலையைக் கண்ட நூலாசிரியர்கள் சிலர் தம் நூலுக்குத் தாமே உரை எழுதி இருக்கலாம். நூலாசிரியர் காலத்திலேயே அவர் நூல், பிறழ உணரப்பட்டதைக் கண்டு நூலாசிரியரே உரையையும் எழுதி யிருக்கலாம்.

நூலாசிரியரே உரை எழுதும் வழக்கம் வடமொழியாள ரிடம் உண்டு. இதனை, "வடநூலார் தாமே பதிகமும் உரையும் செய்வார்" என்று பிரயோக விவேகம் கூறுகின்றது (காரக படலம் 3).

தமிழ் மொழியில், நூலாசிரியரே உரை எழுதும் வழக்கத் திற்குக் கால்கோள் செய்தவர் புறப்பொருள் வெண்பாமாலை இயற்றிய ஐயனாரிதனார் என்னலாம். அவா, புறப்பொருள் இலக்கணத்தைக் கூறும் சூத்திரங்கள் எழுதி, அவற்றின் கீழே துறைகளை விளக்கும் கொளுக்களை அமைத்து, ஒவ்வொரு துறையினையும் விளக்கும் வெண்பா ஒன்றையும் (மருட்பாவும் உண்டு) இயற்றியுள்ளார்; தாம் வகுத்த புறப்பொருள் இலக்கணத்திற்குத் தாமே இலக்கிய மேற்கோளையும் அமைத்துள்ளார். இவ்வாறே கி.பி. 12-ஆம் நூற்றாண்டில் தோன்றிய தண்டியலங்கார ஆசிரியர், அணியிலக்கணத்திற்கு ஏற்ற உதாரணச் செய்யுள்களை இயற்றித் தம் நூலில் சேர்ந்துள்ளார். இதனை, "தண்டியாசிரியர் மூலோதாரணம் காட்டினாற்போல, யாமும் உரை எழுதியது அல்லது மூலோதாரணமும் காட்டினாம்" என்று பிரயோக விவேகம் கூறுகின்றது (பிரயோக-காரக படலம் 3).

கி.பி. 13-ஆம் நூற்றாண்டின் இறுதியில் நாற்கவிராசநம்பி 'அகப்பொருள் விளக்கம்' என்னும் இலக்கண நூலை இயற்றித் தாமே உரையும் எழுதினார். இச்செய்தியை அந்நூலின் சிறப்புப் பாயிரம்,

> அகப்பொருள் விளக்கம்என்று அதற்கொரு நாமம்
> புலப்படுத்து இருளறப் பொருள்விரித்து எழுதினன்

என்று கூறுவதால் அறியலாம்.

17-ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த சுப்பிரமணிய தீட்சிதர், பிரயோக விவேகம் என்னும் இலக்கண நூலை இயற்றி, தாமே அதற்கு உரையும் எழுதினார். அவர், "வடநூலார் தாமே பதிகமும் உரையும் செய்வார். இந்நூலும் வட நூலைத் தற்பவமாகச் செய்தலான், யாமும் பதிகமும் உரையும் செய்து உதாரணமும் காட்டினாம்" என்று கூறுகின்றார் (பிரயோக, காரக படம் - 3).

இவ்வாறே, இலக்கண விளக்கம் இயற்றிய வைத்திய நாத தேசிகரும், இலக்கணக் கொத்து இயற்றிய சாமிநாத தேசிகரும் தம் நூல்களுக்குத் தாமே உரை எழுதியுள்ளனர்.

இலக்கணக் கொத்தின் ஆசிரியரான சாமிநாத தேசிகர்,

**நூல்செய் தவன்அந் நூற்குஉரை எழுதுதல்**
**முறையோ எனிலே அறையக் கேள்நீ**

என்று வினாவும் விடையுமாகத் தொடங்கித் தம் கருத்துகளை விரித்துரைக்கின்றார்:

**முன்பின் பலரே! என்கண் காணத்**
**திருவா ரூரில் திருக்கூட் டத்தில்**
**தமிழுக்கு இலக்கு ஆகிய வயித்திய நாதன்**
**இலக்கண விளக்கம் வகுத்துஉரை எழுதினன்;**
**அன்றியும் தென்திசை ஆழ்வார் திருநகர்**
**அப்பதி வாழும் சுப்பிர மணிய**
**வேதியன் தமிழ்ப்பிர யோக விவேகம்**
**உய்த்துஉரை எழுதினன்; ஒன்றே பலவே!**

**(இலக் - 7)**

என்று நூலாசிரியரே உரை எழுதியுள்ளதைக் கூறித் தாமும் அவ்வாறே செய்ததாகக் கூறுகின்றார்.

தமிழறிஞர் ரா. இராகவ ஐயங்கார், பாரி காதை என்னும் இனிய இலக்கியத்தை வெண்பாக்களால் படைத்து, அதற்குச் சிறந்ததொரு உரையும் இயற்றியுள்ளார். பாவேந்தர் பாரதிதாசன், புதிய ஆத்திசூடி ஒன்றை எழுதி அவரே அதற்கு உரையும் விளக்கமும் எழுதியுள்ளார். செகவீரபாண்டியனார் 'குமரேச வெண்பா' என்னும் நூல் இயற்றி, அதற்குத் தாமே உரையும் செய்துள்ளார்.

நூலாசிரியரே உரையையும் எழுதிவிடுவதால் உண்டாகும் நன்மை தீமைகளைச் சற்றுக் கருதுவோம்:

நூலாசிரியரே தம் கருத்தைத் தாமே இது என்று திட்ட வட்டமாக விளக்கி விடுகின்றார். பின் வருவோர் தம் கருத்தை

மாறுபடக்கொள்வாரோ, தாம் கூறியுள்ள அரிய கருத்து விளங்காமல் போய்விடுமோ என்று நூலாசிரியர் அஞ்சியதாலேயே இவ்வாறு உரை எழுதினார். ஆதலின், அவரது நோக்கம் நிறைவேறியது என்னலாம். இவற்றை நன்மைகள் என்று குறிப்பிடலாம்.

நூலாசிரியரே உரை எழுதிவிட்டால், கட்டி முடித்த கட்டடம்போல், உரை வளர்ச்சி நின்றுவிடும். மற்றோர் உரை தோன்ற வாய்ப்பு இல்லை. நூலைப் படிப்பவர்களுக்கு வேறு வகையான விளக்கமோ, கருத்தோ தோன்றினாலும் அவற்றைக்கொள்ளத் தடையாக இருக்கும். காலந்தோறும் தோன்றும் புதிய கருத்திற்கு அந்நூலில் இடமில்லை என்ற எண்ணம் தோன்றும். நூலின் சிறப்பு, பாடலின் நயம், கருத்தழகு ஆகியவற்றை நூலாசிரியரே வியந்து, தம் உரையில் பாராட்டிக் கொள்வது சிறப்பாக இருக்காது. தம் புலமை மாண்பைத் தாமே பாராட்டிக்கூறும் ஆசிரியரை உலகம் எள்ளி நகைக்கும், மேலும் நூல் எழுதும் ஆசிரியர், நயங்களையும், சிறப்புகளையும் கருதிப் பாடல் இயற்றுவதில்லை.

இவற்றை எல்லாம் நோக்கும்போது, நூலாசிரியரே உரை எழுதுவதால் பயன் மிகுதியாக இல்லை என்னலாம்.

## மறுப்புரை

உரையாசிரியர்கள், தமக்கு முன் உரை எழுதியவர் கூறியுள்ள வேறுபட்ட கருத்திற்கு மறுப்புரை கூறி, தம்கருத்தை நிலைநாட்டுவது வழக்கம். ஆனால், ஒரு நூலை எதிர்த்து — அதன் கொள்கையை மறுத்து — அந்நூல் இயற்றிய ஆசிரியர் கருத்தைத் தாக்கி, தமிழில் ஓர் மறுப்புரை நூல் தோன்றியது.

திருவாரூர் வைத்தியநாத தேசிகர் எழுதிய 'இலக்கண விளக்கம்' என்னும் நூலை மறுத்து, சிவஞான முனிவர் (18ஆம் நூற். இறுதி) 'இலக்கண விளக்கச் சூறாவளி' என்னும் பெயருடன் மறுப்புரை எழுதினார். விளக்கம் என்பதற்கு, விளக்கு (விளக்கு + அம்) என்பது பொருள். சூறாவளி என்பது சுழன்று வீசும் கடுங்காற்று. வைத்தியநாத தேசிகர் ஏற்றிவைத்த இலக்கண விளக்கை அணைக்க, சிவஞான முனிவர் சூறைக்காற்றை —சூறாவளியைக் கிளப்பினார். இந்த மறுப்புரை நூலை, தமிழறிஞர் சி. வை. தாமோதரம் பிள்ளை 'அநியாய கண்டனம்' என்று கூறியுள்ளார். தமிழில், ஒரு நூலை எதிர்த்து எழுதிய மறுப்புரை நூல் இஃது ஒன்றேயாகும்.

## வசனம்

இராமாயணம் பாரதம் கந்தபுராணம் முதலிய புராண இதிகாசக் கதைகளைப் பொது மக்களிடையே பரப்பும் முயற்சியில் ஈடுபட்டவர்கள், பழங்கதை கூறும் வசனநூல்களை இயற்றினர். சிறிதளவு பழஞ்செய்யுள்களைக் கற்று இன்புற இயலாதவர்களும் பயனடையும் பொருட்டு, காப்பியங்களில் உள்ள செய்யுள்களின் கருத்தைத் தொகுத்து வழங்கினர் சிலர். இத்தகைய முயற்சி 19 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே தொடங்கி இன்றும் பயனளித்து வருகின்றது.

இந்த நன்முயற்சியின் பயனாய், சிறந்த காப்பியக் கதைகள், கவிஞர்களின் செய்யுள்நலங்களோடு உரைநடையில் கிடைத்தன. பாடல்களின் கருத்தை மாற்றாமல் - கூட்டாமல் - குறைக்காமல் கதைப் போக்கைத் தழுவிப் பொழிப்புரை ஏற்பட்டதால், பெரும்பயன் விளைந்தது. காப்பியமும் புராண இதிகாசங்களும் மக்களிடையே நன்கு பரவின. ஆர்வமிகுதியால் மூல நூல்களை — பழம் பாடல்களைக் கற்றுப் புலமை பெற்றனர். பொழிப்புரை களாகிய வசன நூல்கள், காப்பிய மாளிகைகளின் மேலே ஏறிப் பார்த்து மகிழ உதவுகின்ற ஏணிகள் ஆயின.

சங்க நூல்களாகிய எட்டுத் தொகையும் பத்துப் பாட்டும் ஒவ்வொன்றாக வெளியானபோது, யாழ்ப்பாணத்துத் தமிழறிஞர் ந. சி. கந்தையா பிள்ளை அந்நூல்களுக்கு வசனம் எழுதி, தமிழ் கற்கும் மாணவர்களுக்கு உதவி செய்தார்.

## உரை எழுதாக் கொள்கை

பக்தி நூல்களுக்கு உரை எழுதுதல் கூடாது என்ற கொள்கை தமிழகத்தில் பல ஆண்டுகளாக இருந்து வந்தது. ஆழ்வார்கள் அருளிய பக்திப் பாடல்களுக்கு உரை எழுதும் முயற்சி தோன்றியபோது, அக்காலத்தில் இருந்த வைணவப் பெரியோர்கள் அம்முயற்சியைக் கண்டித்தனர்; தடுத்தனர். இருப்பினும், மக்களிடைய வைணவச் சான்றோர்கள் பக்திப் பாடல்களுக்குக் கூறி வந்த விளக்கங்களைத் தாம் கேட்டவாறே 'கால் கொம்பு சுழி ஏறாமல்' எழுதி வைத்தனர். இவ்வாறு வைணவ நூல்களுக்கு உரையும் விளக்கமும் வாய்த்து விட்டன.

சைவ சமய நூல்களுக்கு இத்தகைய முயற்சி பழங்காலத்தில் மேற்கொள்ளப்படவில்லை. கற்றறிந்த சைவப் பெரியோர்களும், "அருட்பாடல்களுக்கு நாமா உரை எழுதுவது?" என்று தயங்கி ஒதுங்கி விட்டனர். இதனால், சைவ சமயப் பக்திப் பாடல்கள் உரையின்றியே ஓதப்பட்டு வந்தன. இருபதாம் நூற்றாண்டில்,

எல்லோரும் அருட்பாடல்களைப் படித்துப் பயன்பெற வேண்டும் என்று அறிஞர் சிலர் முயன்று உரை கண்டுள்ளனர்.

## தொகுத்துக் காணுதல்

ஒரு நூலுக்கு வழங்கிய பலவேறு உரைகளையும் தொகுத்துக் காண வேண்டும் என்ற ஆர்வம் இக் காலத்தில் ஏற்பட்டுள்ளது; பலருடைய கருத்துக்களையும் ஒரே இடத்தில் காணும் வேட்கை பிறந்துள்ளது. உரை வேற்றுமைகளைக் கண்டு நல்லனவற்றையும் அல்லனவற்றையும் சீர் தூக்கும் நோக்கம் வளர்ந்து வருகிறது. செல்வாக்கு உடையவர்களின் சொல்லை அப்படியே ஏற்கும் நிலை மாறி நல்லது எது, சிறந்தது எது, பொருத்தமானது எது என்று ஆராயும் திறன் பெருகி வருகின்றது. புகழ்பெற்ற உரை யாசிரியர்களின் பொருந்தாத கருத்துக்களை மறுக்கும் துணிவு தலைதூக்கியுள்ளது. யார் சொல்லுகிறார்கள் என்று பார்க்கும் நிலைமை மாறி, என்ன சொல்லுகிறார்கள் என்று நுணுகி நோக்கும் நிலை ஏற்பட்டு வருகிறது.

திறக்குறளுக்கு உள்ள பழைய உரைகளைத் தொகுத்து, உரைவளம், உரைக்கொத்து, உரை வேற்றுமை ஆகிய பயனுள்ள நூல்கள் வெளிவந்துள்ளன. நாலடியார் உரை வளம் ஒன்றும் வெளிவந்துள்ளது. தொல்காப்பிய உரைவளம் வெளிவந்துள்ளது. இவ்வாறே நன்னூல், சிவஞான போதம், சித்தியார் போன்ற நூல்களுக்கும் உரைவளம் வெளிவரவேண்டும். இப்பணியினைப் பல்கலைக் கழகங்களும் தமிழ் வளர்க்கும் நிலையங்களும் மேற்கொள்ள வேண்டும்.

## புதிய முயற்சிகள்

இக்காலத்தில் பழம்பெரும் நூல்களுக்கு மிக எளிய உரைகள் எழுதி அவற்றை மக்களிடம் பரப்பும் முயற்சி நடைபெறுகிறது. இம் முயற்சி செயலாக மலர்ந்து பெரிதும் வெற்றி பெற்றுவிட்டது.

பழைய உரைகளைத் திருத்தமாக வெளியிடுதல், உரையில் வழுவுள்ள இடங்களை ஆராய்ந்து உண்மை உரைகாணுதல், சிறந்த பாடம் கண்டு போற்றுதல், உரைக்கு விளக்கம் தரல், கடினமான உரைப் பகுதிக்கு எளிய நடையில் விளக்கம் எழுதுதல் போன்ற நல்ல முயற்சிகள் நடைபெறுகின்றன. மாணவர்க்கு ஏற்ற வகையில் அடிக்குறிப்பும், வினாவிடைகளும் அமைத்துத் தரல்; உரையில் வந்துள்ள நயமான பகுதி, உவமைகள், மேற்கோள், பழமொழி ஆகியவற்றைத் திரட்டித் தருதல் போன்ற பயனுள்ள பணிகளும் நடைபெற்று வருகின்றன.

எதையும் எளிதாக விரைவில்பெற நினைக்கும் மக்களின் மனநிலை, பரபரப்பான வாழ்க்கை முறை, ஆழ்ந்து சிந்தித்துத் தெளிய வாய்ப்பில்லாத சுற்றுச் சூழல், பலவேறு செய்திகளையும் அறிந்திருக் வேண்டிய நெருக்கடி ஆகியவற்றை நோக்கும்போது, இக் காலத்துப் புதிய முயற்சிகள் பெரிதும் பயனுள்ளவை என்பது விளங்கும்.

## 2. உரையாசிரியர்கள்

காலந்தோறும் மிகப்பலர், இலக்கிய இலக்கண நூல்களைக் கற்பதில் மிகுந்த ஆர்வமுடையோராய் இருந்திருக்கின்றனர்; புலமை விருந்து நாடிப் புதுப்புது நூல்களைத் தேடி நுகர்ந்திருக்கின்றனர்; அறிதோறும் அறியாமை கண்டும் நவில் தொறும் நூல் நயத்தில் திளைத்தும் தம்மை மறந்திருக்கின்றனர்; கருத்துகளைச் சமன் செய்து சீர்தூக்கி ஆராய்ந்திருக்கின்றனர். ஆனால் அவர்களில் பலர், தம் அனுபவங்களை எழுதி வைக்கவில்லை; இலக்கியச் சுவையை வெளிப்படுத்தி நூலியற்றவில்லை; ஆராய்ச்சிக்கு வடிவம் தரவில்லை. சிலர் மட்டுமே புலமை உலகில் தமக்கு ஏற்பட்ட இன்ப அனுபவங்களை எழுதி வைத்தனர்; இலக்கியச் சுவையை வெளிப்படுத்தி நூலியற்றினர்; தம் ஆராய்ச்சிக்கு வடிவம் தந்தனர்.

இரண்டாம் வகையினரே உரையாசிரியர்கள்.

"இவ்வுலகில் முழுமை அடைந்தவர்கள் இரு வகையினர் ஆவர். உண்மையை அறிந்து பின் பிறரைப் பற்றிய சிந்தனை யில்லாமல் தாம் மட்டும் அவ்வுண்மையை நுகர்ந்து கொண்டு வாளா இருப்பவர் ஒரு சாரார். அறியப் பெற்ற உண்மையைத் தாம் மட்டும் நுகர்வதில் மகிழ்வடையாமல், 'எம்மோடு உண்மையை அனுபவிக்க வாருங்கள்' என்று மற்றவரையும் கூவி அழைக்கும் இயல்புடையோர் இன்னொரு சாரார்" என்று இராமகிருஷ்ண பரமஹம்சர் கூறியுள்ள கருத்து இங்கே நினைவுக்கு வருகின்றது.*

உரையாசிரியர்கள், 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்று உலக மக்களை அறைகூவி அழைத்துப் புலமை விருந்தளித்த நல்லவர்கள்; அறிவுச் செல்வத்தை அள்ளிச் சொரிந்த வள்ளல்கள்; கல்விக் கோயிலின் பெருவாயிலைத் திறந்துவிட்ட மேலோர்கள்.

* வாழ்க்கை விளக்கு – பக். 67, 68. டாக்டர் கு. தாமோதரன்.

## பொலியக் கோத்த புலமை

இளங்கோவடிகள் (அரங்கேற்று காதையில் - 94) யாழாசிரியனை,

பொலியக் கோத்த புலமையோன் என்று குறிப்பிடுகின்றார். 'பொலியக் கோத்த புலமை' என்னும் அழகிய தொடர், சிந்தனைக்கு விருந்தாய் அமைகின்றது.

உரையாசிரியர்கள் அனைவரும் பொலியக்கோத்த புலமையாளர்கள். அவர்கள் தம் வாழ்நாளின் முற்பகுதியை நல்ல நூல்கள் பலவற்றைத் தேடிக்கற்பதிலும் அவற்றின் பொருளைத் தெளிவாக உணர்வதிலும் செலவிட்டுப் பெரும் புலமை பெற்ற பின், தம் வாழ்நாளின் பிற்பகுதியில், சிறந்த நூல் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு அதற்கு ஒப்பற்ற உரை காண்பதில் ஈடுபட்டுத் தொண்டு புரிந்து தம் வாழ்நாளைப் பயனுள்ள முறையில் கழித்தனர்.

"ஒரு நூலின் கருத்தையோ பாட்டின் பொருளையோ காண்பதற்குப் பல அறிவுக்கூறுகள் வேண்டும். இது இன்ன காலத்துத் தோன்றிய நூல் என்ற **கால அறிவும்**, இக்காலத்து இச் சொல்லுக்கு இப் பொருள் என்ற **சொல்லறிவும்**, இன்ன காலத்து இருந்த பழக்க வழக்கங்கள் இவை என்ற **சமுதாய அறிவும்**, இத்தொடர் ஓடிக்கிடக்கும் முறை இது என்ற **நடையறிவும்**, இன்ன பிறவும் இருந்தால்தான் பொருளை முரணின்றிக் காண முடியும்."*

இத்தகைய பல துறை அறிவுக்கூறுகள், எல்லா உரையாசிரியர்களிடமும் உள்ளன. அவர்களின் பல்கலைப் புலமை, அகராதிக் கலையாக—இலக்கண ஆராய்ச்சியாக—இலக்கியச் சுவையாக—திருத்தமான பாடங்காணும் திறனாய்வாக—சமயக் கருத்தாக—வாய்மொழி இலக்கிய ஊற்றாக—நாகரிகம் பண்பாடு பழக்க வழக்கம் ஆகியவற்றை வெளிப்படுத்தும் காலத்தின் குரலாக—போலி உரைக்கு எதிர்ப்புக் குரலாக—நாட்டு வரலாறாக வெளிப்படுகின்றது.

## வானவில்

பலவகையான வண்ணங்கள் வானவில்லில் அமைந்து, காணும்தோறும் களிப்பூட்டுவதுபோல், உரையாசிரியர்களிடம் உள்ள பலவகையான புலமைத் திறன்கள் நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றன. உரையாசிரியர்களில் சிலர் நூலாசிரியராய் இருந்தனர்; கற்பிக்கும் நல்லாசிரியராய் விளங்கினர்; அறிவுக்

* டாக்டர் வ. சுப. மாணிக்கம் சிந்தனைக் களங்கள் (1975) பக். 313

கொடை வழங்கிய ஞான ஆசிரியராய்த் திகழ்ந்தனர். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை சேக்கிழாரை,

நாடிய விரிநூல் சொற்றிடு திறனால்
 நன் **நூலா சிரியன்;**
நகுபாசுர முதல் உரை செய்தலினால்
 நவில் **உரை யாசிரியன்;**
நீடிய பரசம யக்குழி வீழ்ந்தவர்
 நீப்பப் போதனைசெய்
நிலையாற் **போத காசிரியன்;** இவை
 நிகழ்தொறும் நிகழ்தொறும்
ஆடிய ஞானத் திறன் உறலான்
 **ஞானா சிரியனும் நீ!***

என்று போற்றுகின்றார். சிவஞான முனிவரும் இத்தகைய பாராட்டுதலுக்கு உரியவர்.

இருபதாம் நூற்றாண்டு உரையாசிரியர்களில் பலர், பதிப்பாசிரியராய் — கற்பிக்கும் நல்லாசிரியராய் — திறனாய் வாளராய் விளங்கினர். பட்டை தீட்டிய வைரம் போல், அவர்கள் பல வேறு திறன்களை வெளிப்படுத்தி ஒளிவீசுகின்றனர்; ஐந்து உலோகத்தால் ஆன கலைத்திறன் வாய்ந்த சிலைகளைப் போல் அவர்கள் பளிச்சிடுகின்றனர். ஒவ்வோர் உரையாசிரியரும்,

**தமிழே, நீ ஓர்**
**பூக்காடு ! நான் ஓர் தும்பி !**

என்று வியந்து பாடிக் கொண்டே, தமிழ்ச் சோலைக்குள் புகுந்து இலக்கியத்தேன் நுகர்ந்து, தேனைத் திரட்டித் தந்துள்ளார்.

பரஞ்சோதியார், தென்றலுக்கு அறிஞரை உவமை கூறுகின்றார்:

**பொங்கரின் நுழைந்து, வாவி**
 **புகுந்து, பங்கயம் துழாவி,**
**பைங்கடி மயிலை முல்லை**
 **மல்லிகைப் பந்தர் தாவி,**
**கொங்கலர் மணம்கூட் டுண்டு,**
 **குளிர்ந்து மெல்லென்று தென்றல்**
**அங்கங்கே கலைகள் தேரும்**
 **அறிவன்போல் இயங்கும் அன்றே.**

எங்கெங்கே சென்றாலும், அங்கங்கே கலைகளை ஆராய்கின்ற அறிஞரைப்போல் தென்றல், சோலைக்குள் புகுந்து தாமரைத்

* சேக்கிழார் பிள்ளைத் தமிழ் — சப்பாணிப் பருவம், 9.

தடாகத்தில் படிந்து பூப்பந்தர்தோறும் நுழைந்து தேனும் மணமும் நுகர்ந்து குளிர்ந்து மெல்லென்று வீசுவதாய்ப் பரஞ்சோதியார் பாடுகின்றார். ஒவ்வோர் உரையாசிரியரும் அங்கங்கே கலைகள் தேரும் அறிவனாய் விளங்குகின்றார்.

## தமிழ்மீட்சி இயக்கம்

உரையாசிரியர்கள் தோன்றிய இடைக்காலத்தின் நிலைமையைத் தமிழறிஞர் எஸ். வையாபுரிப் பிள்ளை பின்வருமாறு கூறுகின்றார்:

"சங்க காலத் தமிழ் வழக்கு நின்றுபோய் வெகுகாலமாகி விட்டது. அதன் சிறப்பியல்புகளான இனிமை தெளிவு சுருக்கம் நேர்மை முதலிய பண்புகள் யாவும் பெரும்பான்மை இலக்கியங் களின்றும் நீங்கிப் பல நூற்றாண்டுகள் கழிந்து விட்டன. இடைக் காலத் தமிழ் பிறந்து வடமொழிச் சொற்களும் வடமொழிக் காவிய மரபுகளும் தமிழிற் குடிபுகுந்தன. பலவேறு நல்லியல்பு களும் தமிழில் வந்து அமைந்தன. ஆனால் அவற்றோடு சில தீய தன்மைகளும் புகுந்துவிட்டன. சுருக்கம் நேர்மை என்ற இயல்புகள் இரண்டும் ஒழிந்து போயின; அலங்காரங்களும் ஆடம்பரங்களும் தலையோங்கிவிட்டன. வடசொற்கள் பெரும்பான்மை விரவித் தமிழ்ச் சொற்கள் சிறுகி வரத்தொடங்கின. இதனால் தமிழுக்கு இயற்கையாய் அமைந் திருந்த ஆற்றல் சிறுகலாயிற்று. நூற்பொருள் பெரும்பாலும் வடமொழிக்கு உரியனவாய் முடிந்தன. இதனால் தமிழ்க் கவிஞர்களின் புதுவது இயற்றும் ஆற்றல் தடைபட்டுப்போயிற்று."*

இத்தகைய நெருக்கடியான நிலையை—தெளிவில்லாத காலத்தை உரையாசிரியர்கள் மாற்றிப் பழந்தமிழை மீட்டனர் என்பதைப் பிள்ளையவர்கள் கீழே உள்ளவாறு விளக்கு கின்றார்கள்:

"அக்காலத்துக் கல்வியாளர் சிலர், இந் நிலைமைக்கு வருந்தினர். தமிழின் பண்டை நிலையை உன்னியுன்னி அந்நிலையைத் திரும்ப எய்துதல் கூடுமா என்று கருதலாயினர். சங்கத் தமிழின்மீதும், அதன் நன்முறையைக் கைப்பற்றிய பெருநூல்களின்மீதும் பொதுமக்கள் பற்றுக்கொண்டு கற்கும் படி செய்யவேண்டுமென்று எண்ணினர். அவற்றின் நல்லியல்புகள் தமிழில் மீண்டும் தழைக்க வேண்டுமென்று கருதினர். இந் நோக்கங்களைக்கொண்டு கல்வியில் தலைசிறந்தோர் சிலர் உழைத்து வந்தனர். சங்கத் தமிழுக்கு மீட்சியியக்கம் நிகழ்வ

* தமிழ்ச் சுடர்மணிகள் (1968) பக். 197, 198.

தாயிற்று. இம் மீட்சி யியக்கத்திற்கு ஓர் அறிகுறியாகச் சங்க இலக்கியங்களுக்கும் அவற்றோடொத்த பெருமையுடைய குறள் போன்ற பெருநூல்களுக்கும் செவ்விய உரைகள் எழுதப்பட்டன."*

இவ்வாறு உரையாசிரியர்கள் தோற்றுவித்த பழந்தமிழ் மீட்சியியக்கம் 'தமிழ்ப் பண்பாட்டுக் காப்பகம்' ஆயிற்று; தமிழ்ச் சிந்தனையின் பிறப்பிடம் ஆயிற்று; புது இலக்கியம் தோற்றுவிக்கும் மறுமலர்ச்சி இயக்கம் ஆயிற்று; உறங்கிக் கிடந்த தமிழினத்தைத் தட்டி எழுப்பும் வீர முழக்கமாயிற்று.

கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிக்கும் 12-ஆம் நூற்றாண்டின் முற்பகுதிக்கும் இடைப்பட்ட காலமே உரையாசிரியர்கள் காலம். இந்த முந்நூறு ஆண்டுக் காலத்தில், குறிப்பிடத்தக்க புதிய இலக்கண நூலோ அரிய இலக்கியப் படைப்போ எதுவும் தோன்றவில்லை. இக் காலத்தில் தோன்றியவை எல்லாம் உரைகளே. தொல்காப்பியம் சங்க இலக்கியம் திருக்குறள் சிலப்பதிகாரம் திருவாய்மொழி ஆகியவற்றிற்குக் குறிப்புரை எழுதினர் சிலர்; பொழிப்புரை எழுதினர் சிலர்; விளக்கவுரை எழுதினர் சிலர்; பேருரை கண்டனர் சிலர். இதனால் பழமை புதுமை பெற்றது; மறைந்த பழந்தமிழ் மீட்சி பெற்றது.

## தொண்டர் திருக்கூட்டம்

உரையாசிரியர்கள், தமிழ்மொழிக்குச் செய்துள்ள தொண்டு மலையினும் மாணப் பெரிது. தமிழகம், வேற்று இனத்தவர் படையெடுப்பால் தாக்குண்டு அதிர்ந்து, நிலைகுலைந்து, தமிழ்மக்கள் தம் பண்பாட்டை மறந்த போதெல்லாம் பழம்பெரும் இலக்கியச் செல்வங்களை எடுத்துக்காட்டி விளக்கி, தமிழ்மரபை வாழச் செய்த பெருமை உரையாசிரியர்களுக்கு உண்டு. வேற்றுமொழியும் நாகரிகமும் தமிழ்மண்ணில் புகுந்து, கால் கொண்டு தமிழ்ப்பண்பை மறக்கச் செய்த போதெல்லாம் உரையாசிரியர்கள், தமிழ்ப்பண்பை நினைவூட்டி, தமிழ் மக்களைத் தடுத்து ஆட்கொண்டனர். தமிழ்மொழியின் காலங் கடந்த வாழ்விற்கும் வெற்றிக்கும் காரணமாய் இருப்பவர்கள் உரையாசிரியர்களே. இலக்கணக் கொள்கைகளை விளக்கி மொழியை வரம்புகட்டிக் காத்தும், இலக்கியக் கருத்துக்களை விளக்கிக் காலந்தோறும் பண்பாட்டை வளர்த்தும் தமிழினத்திற்குத் தொண்டு செய்த பெருமை உரையாசிரியர்களையே சாரும்.

* தமிழ்ச்சுடர் மணிகள் – (1968) பக். 197, 198.

2.6.

டாக்டர் வ. சுப. மாணிக்கம், "உரைவகை ஒரு முயற்சி, சார்பிலக்கண நூல்வகை ஒருமுயற்சி, இலக்கிய வகை ஒரு முயற்சி. இம் மூவகை முயற்சியாலும் தொன்னூல்கள் இடைக் காலத்துப்பரவின; படிக்கப்பெற்றன" என்று உரையாசிரியர்களின் தமிழ்த் தொண்டை நினைவுபடுத்தியுள்ளார்.*

எழுத்தறியத் தீரும் இழிதகைமை; தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பான் ஆகும் – மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முதல்நூற் பொருள்உணர்ந்து
கட்டறுத்து வீடு பெறும்

என்று மக்களுக்கு அறிவுரை கூறி உரையாசிரியர்கள் இடை விடாது பழந்தமிழ் நூல்களைப் பரப்பி வந்தனர்.

குமரகுருபரர், பாட்டும் பாட்டின் பொருளும், பொருளால் பெறும் பயனும் தமக்கு நல்கும்படி கலைமகளை வேண்டு கின்றார்:

பாட்டும் பொருளும் பொருளால்
பொருந்தும் பயனும்என்பால்
கூட்டும் படிநின் கடைக்கண்நல்
காய்,உளம் கொண்டுதொண்டர்
தீட்டும் கலைத்தமிழ்த் தீம்பால்
அமுதம் தெளிக்கும்வண்ணம்
காட்டும்வெள் ளோதிமட் பேடே!
சகல கலாவல்லியே

(சகலகலாவல்லி மாலை –7)

என்ற பாட்டில், பாட்டிற்குரிய பெருமையை அதன் பொருள் உணர்ச்சிக்கும், பொருளால்பெறும் பயனுக்கும் அவர் அளித்துள்ளார். ஆதலின், ஒருவர் பாட்டை அறிவதோடு நில்லாமல், அதன்பொருளை அறிந்து மகிழவேண்டும்; பொருளின் பயனைப்பெற வேண்டும் என்பது விளங்குகின்றது.

இருட்டறையில் உள்ள எழில்மிக்க ஓவியத்தைக் காணக் கண்கள் மட்டும் இருந்தால் பயனில்லை. இருளைப் போக்கும் ஒளி வேண்டும். பழம் பொருட்காட்சிச் சாலையில் உள்ள பலவகையான கலைச் செல்வங்களைக் கண்டுகளிக்க அவற்றைப் பற்றிய விளக்கவுரை வேண்டும். இனிய பலாப் பழத்தைச் சுவைத்து மகிழ, அதனை முறையாக அறுத்துச் சுளை எடுத்துத் தருபவரின் உதவி வேண்டும். இவ்வாறே பழம்பெரும் இலக்கண இலக்கியச் செல்வங்களைக் கற்று மகிழ்வதற்குத் தக்க

* எந்தச் சிலம்பு, பக்கம் 77 (1964)

உரையாசிரியர்கள் வேண்டும். காட்டுவித்தால் அன்றி அவற்றைக் காண இயலாது.

'காட்டுவித்தால் ஆர் ஒருவர் காணாதாரே' என்று அப்பர் கூறி இருப்பதுபோல, அரிய பொருள்களைக் காட்டுவிப்போர் துணையின்றிக் காண முடியாது.

உரையாசிரியர் செய்யும் உதவியை,

**கண்ணைக் கெடுப்பர் கவிராயர்; அக்கண்ணை**
**எண்ணி உரைகாரர் ஈவாரே—மண்ணுலகில்**
**ஆக்கு பவரோ, அழிப்பவரோ மேலாவார் ?**
**நோக்கிநீ உண்மை நுவல்**

என்ற வெண்பாவில் நயம்படக் கவிமணி உரைக்கின்றார்.

கவிஞர்கள் தம் பாடலில், 'கண்' முதலிய வேற்றுமை உருபுகளை விரிக்காமல் இருப்பர். அதனால் கற்போர் பொருள் விளங்காமல் இடர்ப்படுவர் .உரையாசிரியர்கள் அவற்றை விளக்குவர். இதுவே கவிமணி பாடலின் கருத்தாகும். திருக் குறளில்,

**காலத்தினாற் செய்த நன்றி**

என்பதற்குப் பரிமேலழகர், "ஒருவனுக்கு இறுதி வந்த எல்லைக் **கண்** ஒருவன் செய்த உபகாரம்" என்றும்; காலிங்கர், "தாம் இடருறும் காலத்தின் **கண்** தமக்கு ஒருவர் செய்த நன்மை" என்றும் பொருள் கூறியிருப்பது இங்கே நினைவுக்கு வருகின்றது. குறளில் இல்லாத 'கண்' உருபு, உரையில் இடம்பெற்றுப் பொருள் விளக்கம் தருகின்றது.

பழம்பெரும் நூல்கள், உரையாசிரியர்களின் உதவி இன்றேல் நமக்கு விளங்காமல் போய்இருக்கும்; இலக்கியச் சுவை வெளிப்படாமல் போய் இருக்கும்; ஆழ்ந்த விழுமிய பொருள் தோன்றாமல் போய்இருக்கும். இவ்வுண்மையை நன்கு அறிந்த பண்டிதமணி மு. கதிரேசன்செட்டியார் "நூலாசிரியரின் அரிய கருத்துக்களை எல்லாம் உரையாளர் உதவியாலேயே உலகம் உணர்ந்து இன்புறுகின்றது. பேருபகாரிகளாகிய உரையாசிரியர் களின் உதவி இல்லையாயின் பண்டை உயர் நூல்களாம் கருவூலங்களில் தொகுத்து வைத்த விலை வரம்பில்லாப் பொருள் மணிக் குவியல்களை யாம் எங்ஙனம் பெறுதல் கூடும்?" என்று வினவுகின்றார்.*

## புலமைச் செல்வர்

உரையாசிரியர்களை,

* உரைநடைக் கோவை – பக்கம். 25.

**மதிநுட்பம் நூலோடு உடையவர்**

என்றும்,

**பல்கேள்வித் துறைபோகிய**
**தொல்லாணை நல்லாசிரியர்**

**(பட்டின–169, 70)**

என்றும் பாராட்டுதல் தகும். அவர்கள் நுண்மாண் நுழை புலம் உடையவர்கள்; ஆழ்ந்திருக்கும் கவியுளம் காண வல்லவர்கள். அவர்களின் பண்பட்ட உள்ளம், அறிவுத் திறன், கல்வி மாண்பு, விருப்புவெறுப்பு அற்ற தன்மை ஆகியவற்றை நோக்கும்போது,

**.... இகலோடு**
**செற்றம் நீக்கிய மனத்தினர்; யாவதும்**
**கற்றோர் அறியா அறிவினர்; கற்றோர்க்குத்**
**தாம்வரம்பு ஆகிய தலைமையர்; காமமொடு**
**கடுஞ்சினம் கடிந்த காட்சியர்**

**(திருமுருகு 131–35)**

என்று அவர்கள்ளைப் போற்றத் தோன்றுகிறது.

நூலாசிரியரை ஒத்த புலமை, உரையாசிரியர்களுக்கும் உண்டு.

**புலம்மிக் கவரைப் புலமை தெரிதல்,**
**புலம்மிக் கவர்க்கே புலனாம்!**

**(பழமொழி 8)**

என்ற மணிமொழி, உரையாசிரியர்களின் இயல்பை அறிந்து மதிப்பவர் நினைவுக்கு வரும்.

நூலாசிரியர்களின் ஆற்றலை நன்கு உணர்ந்தவர்கள் உரையாசிரியர்களே. "மிக விரைவாக ஓடிச் செல்லும் ஒரு பேரியாற்றை எதிர்த்து நீந்தி, அந் நீரோட்டத்தின் வன்மையை இற்றென உணர முற்படுவோர் போல, தாம் உரை எழுத மேற்கொண்ட சான்றோர் செய்யுட்களில் உள்ள சொற்களின் செலவை எதிர்த்து ஆராய்ந்து உண்மைப் பொருள்கண்டு உலகிற்கு உதவியவர் (உரையாசிரியர்களே) ஆவர்"[1]

உரையாசிரியர்கள், பல நூல்களைக் கற்றுத் தெளிந்த பின்னர், ஏதேனும் ஒரு நூலைத் தமக்கு உரியதாகத் தேர்ந்து எடுத்துக் கொண்டு, அந்நூலில் மூழ்கினர்; வாழ்நாள் முழுதும் அதில் தோய்ந்து தம் புலமைத் திறன் முழுதும் காட்டி அந்நூலுக்கு உரை கண்டனர்; ஒன்றே செய்து, அதனையும் நன்றே

1. உரைநடைக் கோவை, பக்கம்–13, பண்டிதமணி.

செய்து இறவாப் புகழ் பெற்றனர்; மொழி உள்ளளவும் பெயரை நிலை நாட்டிச்சென்றனர்.

நூலாசிரியரின் உள்ளக் கருத்தினை நுணுகி ஆராய்ந்து, தெளிவு பெற எடுத்து எழுதும் வன்மையாளராய் உரையாசிரியர்கள் விளங்கினர்; யார் யார் எவ்வெத் துறைநூல்களில் மிகுதியான பயிற்சி பெற்றிருந்தனரோ அவரவர் அவ்வத் துறை நூல்களுக்கு உரை எழுதினர். கல்லாத மேற்கொண்டு ஒழுகாமல், கசடற வல்லதையே உலகிற்கு உணர்த்தி நின்றனர். திருக்கோவையார்,

**உள்ளப் படுவன உள்ளி**
**உரைத்தக்க வாக்குஉரைத்து**
**மெல்லப் படிறு துணி**

**(திருக்–87)**

என்று கூறுவது போல, உரையாசிரியர்கள் நன்கு சிந்தித்து, பிறர்க்கு உரைத்து, தவறுகளை ஆராய்ந்து நீக்கி உரை எழுதினர். நூலாசிரியரின் உள்ளக் கருத்தை நன்கு அறிந்துகொள்ளப் பல நூல்களைப் பல நாட்கள் இடைவிடாது கற்றுத் தெளிந்து உரை கண்டனர்; நூலறிவோடு உலகறிவும் பெற்றனர்; நூல் வழக்கோடு பேச்சு வழக்கையும் அறிந்தனர்; பல வேறு சமயங்களையும் கலைகளையும் கற்றுத் தெளிந்தனர்.

இடைக்காலத்தில் தோன்றிப் பேயாட்டம் ஆடிய சமயப் பூசல்களுக்கும், வேற்றுமொழி மரபுக்கும் இடந்தராமல் நடுநிலைமையோடு உரையாசிரியர்கள் உரை கண்டனர்; நூலாசிரியர் சமயம், தம் சமயத்திற்கு மாறானது எனினும் சமயக் காழ்ப்பு இன்றி, நூலாசிரியரின் சமயக் கருத்துகளை நன்கு விளக்கினர்; பிற சமயக் கருத்துக்கள் தம் கொள்கைக்கு முரணாக இருந்தபோதும், அச்சமயக் கருத்துகளைக் கூறும் நூல்களைச் சலிப்பின்றி முயன்று அறிந்து உரை எழுதினர். உரையாசிரியர் களிடம் காணப்படும் இத்தகைய நடுநிலைமையை எண்ணும் போது,

**அறுவர்தம் நூலும் அறிந்துணர்வு பற்றி**
**மறுவரவு மாறாய நீக்கி — மறுவரவின்**
**மாசா ரியனா மறுதலைச்சொல் மாற்றுதலே**
**ஆசா ரியன தமைவு**

**(ஏலாதி–75)**

என்ற ஏலாதிச் செய்யுள் நினைவுக்கு வருகின்றது.

## தமிழ்க்காவலர்

உரையாசிரியர்களின் பணி, பழைய நூல்களுக்கு உரை கண்டதோடு நின்றுவிடவில்லை. பழைய நூல்களில் பிற் காலத்தவர் எழுதிச் சேர்த்த இடைச் செருகல்களை ஆராய்ந்து அவர்கள் நீக்கினர். எழுதியவரால் நேர்ந்த பிழைகளைக் களைந்தனர். படித்தவர் திருத்திய ஒவ்வாப் பாடங்களை ஆராய்ந்து போக்கினர்.

நூலிலுள்ள செய்யுட்களைப் பிழையின்றி மனப்பாடம் செய்வது முற்காலத்தவர் வழக்கம்.*

மூலத்தைக்கற்றுத் தேர்ந்தவர், பிறகு உரைகேட்டுப் பொருள் அறிவர். மூலம் பிழையின்றி அமையவும், ஒரு பாடலுக்கு வேறுபட்ட பாடங்கள் தோன்றாமல் இருக்கவும், பல வேறு பாடங்களில் சரியான பாடம் அறியவும் மூலம்போற்றும் பயிற்சி துணை செய்தது. உரையாசிரியர்கள், தாம் உரை எழுதும் நூலின் மூலச் செய்யுட்கள் பிழையின்றி அமையப் பெரிதும் முயன்று காத்து வந்தனர். இதனை டாக்டர் வ. சுப. மாணிக்கம் பின்வருமாறு கூறுகின்றார்:

"பாடங்கள் மேலும் பெருகாமல், காலந்தோறும் புகாமல் உரையாசிரியர்கள் தடுத்துவிட்டனர். ஒரு பாடத்தை மூலத்தில் தழுவிக்கொண்டு உரை வரைவர். மாறுபாடங்கள் இருக்குமேல் உரையிடைக் காட்டுவர். நல்ல பாடங்களுக்கும் இது உரையென வரைவர். அல்ல பாடங்களாயின் இப்பாடம் சரியன்று என மறுத்து ஒதுக்குவர். இங்ஙனம் பாடம் ஓதுவாரும் உளர் என்று சிற்சில இடங்களில் சுட்டிச் செல்வர். உரையாசிரியர்கள் பண்டைத் தமிழ் நூல்களுக்குச் செய்த ஒரு பெருந்தொண்டு மூலச் செம்மையாகும்" *(கம்பர்-பக்-15)*

உரையாசிரியர்கள் அரிய நூல்கள் அழிந்து போகாமல் காத்து வந்தனர். பொருந்தாத உரைகள் தோன்றிப் பழைய நூலின் கருத்துக்களைப் பிழையாக விளக்கியபோது உண்மையான பொருளை விளக்கினர். ஒரு நூலுக்குப் போலி உரைகள் பல தோன்றித் தடுமாற்றத்தை உண்டாக்கிய போது பொருத்தமான உரை கூறினர்.

பரிபாடலுக்கு உரை எழுதிய பரிமேலழகர், அந்நூலில் இடைக்காலத்தில் வந்து சேர்ந்த பலவகை மாசுகளைப் போக்கி உரை ¬ண்டதாய், உரைச் சிறப்புப்பாயிரம் கூறுகின்றது:

---

* படிறில் கல்வி விரும்பினோன்
பாடம் போற்றும் அதுபோல

— பிரபுலிங்க, மாயை உற் – 49.

**மிகைபடு பொருளை நகைபடு புன்சொலின்**
**தந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பும்,**
**எழுதினர் பிழைப்பும், எழுத்துரு ஒக்கும்**
**பகுதியின் வந்த பாடகர் பிழைப்பும்**
**ஒருங்குடன் கிடந்த ஒவ்வாப் பாடம்**
**திருந்திய காட்சியோர் செவிமுதல் வெதுப்பலின்,**

பரிமேலழகர் அவற்றைப் போக்கி நல்லதோர் உரை இயற்றிய தாய்க் கூறுகின்றது உரை சிறப்புப் பாயிரம்.

திருக்குறளுக்குப் பரிமேழகர்,

**ஓர்உரை இன்றி ஒன்பது சென்றும்**
**ஐயுற வாக நையுறு காலை**

உரை இயற்றியதாய்க் கூறப்பட்டுள்ளது.

பரிப்பெருமாள்,

**அரியவும் பெரியவும் அறிந்தோர் போல**
**வசையில் வள்ளுவன் வாய்மொழிப் பொருளை**
**இசைபட நுவல்வோர் இறந்த பின்னர்**

திருக்குறளுக்கு உரை இயற்றியதாய் உரைச் சிறப்புப் பாயிரம் மொழிகின்றது.

நச்சினார்க்கினியர்,

**பண்டைப் பனுவல்பல இறவாது நிலவ**
**உரை எழுதி ஈந்தோன்**

என்று பாராட்டப் பெற்றுள்ளார்.

இவற்றை எல்லாம் நோக்கும்போது பண்டை உரை யாசிரியர்களைத் "தமிழ்நூற் காவலர்கள்" என்று போற்றத் தோன்றுகிறது.

**ஒத்தமதிப்பு**

நூலாசிரியர்களுக்கு உரிய சிறப்புக்கள் யாவும் உரை யாசிரியர்களுக்கும் உரியவையாகும். மூலநூலைப் போலவே உரையும் சிறந்தது. உரைநூலின் சிறப்பைத் தமிழ்ப்புலவர்கள் அடிக்கடி நினைவூட்டி, மூலநூலைப் போலவே மதிக்குமாறு அறிவுரை கூறியுள்ளனர்.

இலக்கணக் கொத்தின் ஆசிரியரான சாமிநாத தேசிகர்,

**இவ்வுரை பெருகிற்று; சுருங்கிற்று;**
**உரையால் அறிவித்தான்;**
**இவ்வுரையது பெருமைக்கு ஒப்பில்லை;**

**(இலக்–66)**

என்றும்,

உரையை எழுதினான்

(இலக்-80)

என்றும் உதாரணங்கள் கூறி, உரையின் பெருமையை நினைவூட்டியுள்ளார்.

உமாபதி சிவாசாரியர்,

வள்ளுவர்சீர் அன்பர்மொழி வாசகம்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை—ஒல்லியசீர்த்
தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்
தண்டமிழின் மேலாம் தரம்

என்று மூலநூல்களோடு ஒத்த வரிசையில் பரிமேலழகர் உரையையும் வைத்துப் போற்றுகின்றார்.

சிவப்பிரகாசர் வெங்கைக் கோவையுள் (107).

சிந்தா மணியும் திருக்கோ வையும்எழு திக்கொளினும்
நந்தா வுரையை எழுதல்எவ் வாறு நவின்றருளே

என்று உரைகளைப் போற்றுகின்றார்.

டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர், "நூலாசிரியர்களைக் காட்டிலும் உரையாசிரியர்கள் பாஷையில் மிக்க பயிற்சியுள்ள வர்கள் என்பதும் மிக்க உபகாரிகள் என்பதும் ஒரு சாரார் கொள்கை" என்று கூறுகின்றார்.[1]

## உரைகள் – மூல நூல்கள்

தமிழிலக்கிய வரலாற்றில், இடைக்காலத்தை உரையாசிரி யர்களின் காலம் என்று கூறுவதுண்டு. டாக்டர் வ. சுப. மாணிக்கம் இக் காலத்தின் சிறப்பை, "இடைக்காலம் என்பது உரைக்காலம் அன்று; தொன்னூல்களை உரை என்னும் கயிற்றால் பிணித்த உயிர்க்காலம்" என்று குறிப்பிடுகின்றார்.[2]

உரையாசிரியர்கள் பழைய நூல்களின் கருத்தோடு, தம் காலத்து ஆராய்ச்சி இலக்கிய வழக்கு கொள்கை மரபு ஆகிய வற்றையும் இணைத்துத் தந்தனர். புதிய இலக்கண இலக்கிய நூல்கள் தோன்றாக்குறையை உரையாசிரியர்களின் பணி நிறைவு செய்தது. உரைகள், பின்தோன்றிய நூலாசிரியர்களுக்குக் கருத்தும் வடிவமும் தந்த மூல நூல்கள் ஆயின.

1. சங்கத் தமிழும் பிற்காலத்தமிழும் (பக். 154)
2. சிந்தனைக் களங்கள், பக். 6.

உரையாசிரியர்களைப் போற்றி உரைநயங்களில் திளைத்த புலவர்கள், உரையாசிரியர்களின் கருத்துகளைத் தாம் இயற்றிய நூல்களில் எடுத்தாண்டனர். மூலநூல்களைப் போலவே உரை நூல்களையும் மேற்கோளாகக் கொண்டனர். தொல்காப்பிய உரையாசிரியராகிய இளம்பூரணர் கூறிய பல கருத்துகளை நேமிநாதம், நன்னூல், நம்பியகப் பொருள் ஆகிய நூல்களின் ஆசிரியர்கள் தம் நூல்களில் எடுத்தாண்டுள்ளனர். பரிமேலழகர் கருத்துக்கள் சிலவற்றைச் சிவப்பிரகாசர் தம் நூல்களில் மேற் கொண்டுள்ளார்.

நூல்களை அரங்கேற்றிக் குற்றம் குறைகளை ஆராய்ந்து மதிப்பிட்டது போலவே, உரைகளையும் அரங்கேற்றிக் குற்றம் குறைகளை ஆராய்ந்து மதிப்பிடும் வழக்கம் முற்காலத்தில் இருந்தது. நச்சினார்க்கினியர் சீவகசிந்தாமணிக்கு முதன் முறை உரை எழுதிச் சமணச் சான்றோர்களிடம் காட்டியபோது அதில் குறை பல கூறி மறுத்தனர். இரண்டாம் முறையாக அவர் சமண சமய நூல்களை மிக நன்றாகப் பயின்ற பின் புதிய உரை எழுதி அச் சான்றோர்களிடம் காட்டி அவர்களின் போற்றுதலைப் பெற்றார் என்ற வரலாறு இங்கே நினைக்கத்தக்கதாகும்.

## நிலையான பெயர்

ஆக்கியோர் பெயரை நூல்கள் பெற்றது போலவே, உரையாசிரியர்களின் பெயரால் உரைநூல்கள் பெயர்பெற்று வழங்குகின்றன. இளம்பூரணர் உரையை இளம்பூரணம் என்றும், நச்சினார்க்கினியர் உரையை நச்சினார்க்கினியம் என்றும், சேனா வரையர் உரையைச் சேனாவரையம் என்றும், பேராசிரியர் உரையைப் பேராசிரியம் என்றும் வழங்கும் வழக்கம் பல ஆண்டு களுக்கு முன்னரே ஏற்பட்டுள்ளது. இலக்கணக் கொத்தின் பாயிரம்,

**உளங்கூர் உரையாம் இளம்பூ ரணமும்**
**ஆனா இயல்பின் சேனா வரையமும்**
**உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க் கினியமும்**

என்று உரைகளை உரையாசிரியர்களின் பெயராலேயே குறிப் பிடுகின்றது.

நீலகேசி என்னும் சைன நூலுக்கு உரை எழுதியவர் சமய திவாகர வாமன முனிவர் என்பவர். நீலகேசி உரை, உரையாசிரியரின் பெயரோடு, 'நீலகேசி விருத்தி சமய திவாகரம்' என்று வழங்குகின்றது.

நூலாசிரியருக்கு உள்ள சிறப்புகள் யாவும் உரையாசிரி யருக்கும் உண்டு என்பதற்கு இவை தக்க சான்றுகளாகும்.

நக்கீரர் கபிலர் புகழேந்தி முதலிய புலவர்களின் பெயரைத் தமிழ்ப் பற்றுடையோர், தம் மக்களுக்கு இட்டு வழங்கியதைப் போலவே, உரையாசிரியர்களின் பெயரை மக்களுக்கு இட்டு மகிழ்ந்தவர் உண்டு. திருமணம் செல்வக் கேசவராய முதலியார் (1864–1921) தம் மக்கள் மூவர்க்கும் முறையே பரிமேலழகன் நச்சினார்க்கினியன் சேனாவரையன் என்று உரையாசிரியர்களின் பெயரை இட்டார். இன்றும் பலர், இவ்வழக்கத்தை மேற் கொண்டுள்ளனர்.

### வான்புகழ்

சேக்கிழார் தம் நூலை, 'உலகெலாம்' என்று தொடங்கி 'உலகெலாம்' என்று முடித்தவர். நூலின் இறுதிப் பாடலில், "கற்பவர்க்கு என்றும் இன்பம் பெருகவும், கற்பவர் உள்ளம் ஒரு பொருளையே காதலித்து ஓங்கிடவும் சிவனடியார்களின் புகழ் (மிக்க வரலாறு), உலகெலாம் பரவி எங்கும் நிலை பெற்றது" என்று பாடியுள்ளார்:

**என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்**
**ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட**
**மன்று ளார்அடி யாரவர் வான்புகழ்**
**நின்றது எங்கும் நிலவி உலகெலாம்.**

இலக்கிய உலகில் மிகச் சிறந்து விளங்குகின்ற இப் பாடலின் கருத்து, உரையாசிரியர்களுக்கும் பொருந்தும், இதில் உள்ள,

**மன்று ளார்அடி யாரவர் வான்புகழ்**

என்ற அடிக்கு ஈடாக,

**இன்த மிழ்உரை யாசிரி யர்புகழ்**

என்று, ஓர் அடியை இயற்றிச் சேர்த்துப் பாடலை அமைத்தால், அது உரையாசிரியர்கள் புகழை விளக்குகின்ற இனிய பாடலாக இருக்கும்.

# 3. உரையின் வகைகள்

இலக்கியம் பல தோன்றியபின், அவற்றின் இயல்புகளை ஆராய்ந்து கூறும் இலக்கணம் தோன்றுகிறது.

**எள்ளினுள் எண்ணெய் எடுப்பது போல**
**இலக்கியத் தினின்றும் எடுபடும் இலக்கணம்**

என்பது ஆராய்ந்து கூறிய உண்மையாகும்.

அடி மரத்திலிருந்து கிளையும், கிளையிலிருந்து கவையும், கவையிலிருந்து கொம்பும் பிரிந்து வளர்ந்து நிற்பதுபோல நூலுக்குத் தோன்றிய உரை, விளக்கம், விரிவு ஆகியவை ஒன்றிலிருந்து ஒன்று பிரிந்து காலப் போக்கில் பெருகி வளர்ந்து வந்தன. உரைகளின் பல்வேறு வகைகளையும் அவற்றின் இயல்புகளையும் ஆராய்ந்து அறிந்த புலவர்கள், அவற்றிற்கு இலக்கணம் வகுத்தனர். உரையின் இலக்கணத்தை உரை யாசிரியர்களே கூறினர். உரைத்திறம் உணர்த்துதலும் உரையின் இயல்புகளுள் ஒன்றானது.

**வயிர ஊசியும், மயன்வினை இரும்பும்**
**செயிரறு பொன்னைச் செம்மைசெய் ஆணியும்**
**தமக்கமை கருவியும் தாம்ஆம்; அவைபோல்**
**உரைத்திறம் உணர்த்தலும் உரையது தொழிலே**

என்ற பாடல் இங்கே நினைக்கத்தக்கதாகும்.

## பாயிரம்

நூலுக்கு உரை எழுதத் தொடங்குமுன், உரையாசிரியர்கள் நூலைப்பற்றிய பொதுவான செய்திகளைத் தொகுத்துக் கூறினர். நூல் உரைக்கும் ஆசிரியன் இயல்பு, நூல்கேட்கும் மாணாக்கன் தகுதி, பாடம் சொல்லும் முறை, பாடம் கேட்கும் முறை ஆகிய வற்றையும், நூலின் வரலாறு, ஆசிரியர் வரலாறு ஆகியவற்றையும் விளக்கமாகக் கூறியபின் நூலுக்கு உரை எழுதத் தொடங்கினர். இவற்றோடு உரையின் வகைகளையும் அவற்றின் இயல்புகளையும் விளக்கினர். தம் கருத்துகளைச் சூத்திரங்களாக இயற்றி உரையின் இடையில் தாமே சேர்த்து வழங்கினர். உரையாசிரியர்கள் இயற்றியவை உரைச் சூத்திரங்கள் எனப்பட்டன. நூலுக்கு உரை எழுதத் தொடங்குமுன், உரையாசிரியர்கள் எழுதிய பொது விளக்கம் பாயிரம் என்று பெயர் பெற்றது. பின்னர்ப் பாயிரம் பலவகையாய் விரிவடைந்தது. இறையனார் களவியல் உரையே, பாயிரம் எவ்வாறு அமைய வேண்டும் என்று பிற்காலத்தவர்க்கு வழி காட்டியது.

## பாயிர வகை

பாயிரம் பொது, சிறப்பு என இரண்டாய்த் தொடக்கத்தில் இருந்தது. பின் சிறப்புப் பாயிரம், தற்சிறப்புப் பாயிரம் நூற் சிறப்புப் பாயிரம் என இரண்டாயிற்று. உரையாசிரியர்கள் நூலுக்குமுன், எழுதிய முகவுரை உரைப் பாயிரம் என்றும், உரையாசிரியர்களையும் உரைகளையும் சிறப்பிக்கும் பாயிரம் உரைச் சிறப்புப் பாயிரம் என்றும் வழங்கின. நூல் கூறும்

பொருளைத் திரட்டிக் கூறுவது, நூற்பாயிரம் அல்லது பதிகம் என்றும் வழங்கலாயிற்று.[1]

இவற்றின் விளக்கத்தை இறையனார் களவியல் உரை, தொல்காப்பிய இளம்பூரணர் உரை, யாப்பருங்கல விருத்தியுரை ஆகியவற்றின் பாயிரப் பகுதிகளில் கண்டு மகிழலாம்.

உரையாசிரியர்கள், பாயிரத்தில் இயற்றிச் சேர்த்த உரைச் சூத்திரங்கள் பலவாகும். அவை நாளடைவில் இயற்றியவர் பெயர் அறியாத வகையில் ஒன்று தொகுக்கப்பட்டு நன்னூலில் பொதுப் பாயிரமாக உருவெடுத்தன. நன்னூல் பொதுப்பாயிரச் செய்யுள்களில் பல, பிற உரையாசிரியர்கள் இயற்றியவை; மேற்கோளாக எடுத்தாளப் பட்டவை; நன்னூலின் பொதுப் பாயிரம் பவணந்தி முனிவர் இயற்றியது அன்று என்பதற்குத் தக்க சான்றுகள் கூறி அறிஞர்கள் தெளிவுபடுத்தியுள்ளனர்.[2]

பிற்கால உரையாசிரியர்கள், தாம் இயற்றிய பொதுப் பாயிரத்தில் கூறிய செய்திகள், தொல்காப்பிய மரபியலில் கூறப் பட்டுள்ளன. மரபியல் தொல்காப்பியத்தின் இறுதியியல். இதனுள் தொல்காப்பியர், சொற்கள் தோன்றி தொட்டு வழங்கிவரும் மரபினைக் கூறுகின்றார். இளமைப் பெயர், ஆண்பாற் பெயர், பெண்பாற் பெயர் இவற்றிற்குரிய மரபுகளைக் கூறிய பின், மரம் புல் ஆகியவற்றின் உறுப்புகளுக்குரிய பெயர்களின் மரபைக் கூறி விளக்குகின்றார். மரபியல் என்பதற்குப் பொருத்தமாக இவற்றின் மரபுகளைக் கூறுகின்றார் எனலாம். ஆனால் நூலின் வகைகள், உரையின் வகைகள் ஆகியவற்றைக் கூறும் சூத்திரங்கள் மரபியலின் இறுதியில் இடம் பெறுவது பொருந்தாது என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். அவை, பிற்காலத்தில் எழுந்த இடைச் செருகல்களோ என்று ஐயுறுகின்றனர். அவர்கள் அவ்வாறு எண்ணுதற்குரிய காரணங்களைக் கூறியுள்ளனர்.

1. "செய்யுளியலுள் நூலைப்பற்றியும் அதன் பகுதிகளாகிய சூத்திரம், ஓத்து, படலம் என்பவற்றைப் பற்றியும் உரைவகை நடையைப் பற்றியும் விளக்கிய ஆசிரியர், மீண்டும் அவற்றின் இயல்பினை ஈண்டுக் கூறுதல்", கூறியது கூறலாம்.

2. இப்பொருள்பற்றிச் செய்யுளியலில் அமைத்த சூத்திரங்களையும் இவ்வியலில் உள்ள சூத்திரங்களையும் ஒப்பவைத்து நோக்குங்கால், இவ்விருவகைச் சூத்திரங்களும்

1. Journal of the Annamalai University Vol. XII. பக்கம் 140–144 டாக்டர் வ.சுப. மாணிக்கம்.
2. தொல்காப்பியம் – க. வெள்ளைவாரணன், பக். 306.

சொல் நடையாலும் பொருள்அமைப்பாலும் தம்முள் வேறுபாடு உடையவாதல் நன்கு புலனாகும்.

3. நூன்மரபு பற்றிய இச்சூத்திரங்கள், தொல்காப்பியனார் காலத்திற்குப் பின்பு இயற்றப் பெற்று வழங்கியவை, பிற்காலத் தவரால் எல்லா நூற்கும் உரிய பொதுப்பாயிர மரபாக இந்நூலின் இறுதியில் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும்.

4. பின்வந்த உரையாசிரியர்கள் இச்சூத்திரங்களையும் தொல்காப்பியனார் வாய்மொழி எனவே கொண்டு எழுத நேர்ந்ததையும் எண்ணுதற்கு இடமுளது."[1]

## உரை வகை

தொல்காப்பியர் செய்யுளியலில்,

**நூல்எனப் படுவது நுவலும் காலை**
**முதலும் முடிவும் மாறுகோள் இன்றித்**
**தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி**
**உள்நின்று அகன்ற உரையொடு புணர்ந்து**
**நுண்ணிதின் விளக்கல் அதுவதன் பண்பே,**

**(செய். 159)**

என்று கூறுகின்றார். "உள் நின்று அகன்ற உரை" என்று கூறி இருப்பது உற்று நோக்கத் தக்கது. செய்யுளியலில் 'அகன்ற உரை' என்று கூறினரே அன்றி உரையின் வகைகளைக் கூறவில்லை. ஆனால் மரபியலில் உள்ள சூத்திரங்கள் உரையினைக் காண்டிகை, உரை என இரண்டாகக் கூறி விளக்குகின்றன. உரை என்ற சொல், விருத்தி என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது.

**பழிப்பில் சூத்திரம் பட்ட பண்பிற்**
**கரப்பின்றி முடிவது காண்டிகை யாகும்**

**(மர. 102)**

**விட்டகல் வின்றி விரிவொடு பொருந்திச்**
**சுட்டின சூத்திரம் முடித்தற் பொருட்டா**
**ஏது நடையினும் எடுத்துக் காட்டினும்**
**மேவாங்கு அமைந்த மெய்ந்நெறித் ததுவே**

**(மர 104)**

என்ற சூத்திரங்கள் இரண்டும் காண்டிகை உரையின் இயல்பினைக் கூறுகின்றன.

1. தொல்காப்பியம் – க. வெள்ளைவாரணன், பக். 305.

**சூத்திரத்து உட்பொருள் அன்றியும் யாப்புற**
**இன்றி யமையாது இயைபவை எல்லாம்**
**ஒன்ற உரைப்பது உரைஎனப் படுமே.**

**(மர. 105)**

**மறுதலைக் கடாஅ மாற்றமும் உடைத்தாய்த்**
**தன்னூ லானும் முடிந்தநூ லானும்**
**ஐயமும் மருட்கையும் செவ்விதின் நீக்கித்**
**தெற்றென ஒருபொருள் ஒற்றுமை கொளீஇத்**
**துணிவோடு நிற்றல் என்மனார் புலவர்.**

**(மர. 106)**

– இவை (விருத்தி) உரை பற்றியவை.

இச்சூத்திரங்கள் நான்கிற்கும் பேராசிரியர் எழுதியுள்ள விளக்கம் படித்து இன்புறத் தக்கதாகும்.

இறையனார் களவியலுரை, உரை நான்கு வகைப்படும் என்று கூறுகின்றது:

''சூத்திரம் உரைக்கின் அது நான்கு வகையான் உரைக்கப்படும்: கருத்துரைத்து, கண்ணழித்து, பொழிப்புத் திரட்டி அகலம் கூறல் என''.

நம்பியகப்பொருள் உரை நான்கு வகை உரைகளின் தன்மையையும் பின்வருமாறு விளக்குகின்றது:

“பொருளுரை நான்கு வகைப்படும்: கருத்து உரைத்தலும், கண்ணழித்து உரைத்தலும், பொழிப்புத் திரட்டலும், அகலங் கூறலும் என.

“அவற்றுள் கருத்து உரைத்தலாவது, சூத்திரத்தின் உட்கோள் உரைத்தல்.

“கண்ணழித்தலாவது, சூத்திரத்துள் சொற்றோறும் பொருள் உரைத்தல்.

“பொழிப்புத் திரட்டலாவது, சூத்திரப் பொருளை எல்லாம் தொகுத்து உரைத்தல்.

“அகலங் கூறலாவது, சூத்திரப் பொருளைத் தூய்மை செய்தற்குக் கடாவும் விடையும் உள்ளுறுத்து விரித்து உரைத்தல்”.

நாலடியார், ஒரு நூலுக்குச் சிறந்தவுரை எவ்வாறு அமைந்திருக்கவேண்டும் என்பதை,

**பொழிப்புஅகலம் நுட்பம்நூல் எச்சம்என்று ஆற்றக்**
**கொழித்துஅகலம் காட்டாதார் சொற்கள் — பழிப்பில்**

நிரைஆமா சேக்கும் நெடுங்குன்ற நாட!
உரைஆமோ நூலிற்கு நன்று

(நாலடி. 319)

என்று கூறுகின்றது. இச் செய்யுளுக்குப் பழைய வுரையாசிரியராகிய பதுமனார், "திரண்ட பொருளைச் சொல்லலும் விரித்து உரைத்தலும், கடாவும் விடையுமாகச் சொல்லுதலும், இலேசானே பொருளை உரைத்தலும், எச்சவும்மைகளால் எஞ்சிய பொருளை உரைத்தலும் ஆகிய இந் நான்கு வகையானும் ஆராய்ந்து, விரிவான பொருளைக் காட்ட மாட்டாதார் சொற்கள், காட்டுப் பசுக்கள் நிரை நிரையாகத் தங்கும் உயர்ந்த மலை நாடனே! நூலிற்குப் பழிப்பில்லாத நல்ல உரையாமோ என்றவாறு" என்று பொருள் கூறுகின்றார்.

நீதி நூலாகிய நாலடியார், ஒரு நூலிற்கு அமைய வேண்டிய உரையின் சிறப்பியல்புகளைக் கூறுவது வியப்பாக உள்ளது. உரையின் பல்வேறு இயல்புகளைப் பொதுவாக எல்லோரும் அறிந்திருந்தனர்; சிந்தித்து வந்தனர் என்று கருத நாலடியார் இடந்தருகின்றது.

நன்னூலின் பொதுப்பாயிரம் உரையின் பொது இலக்கணத்தைப் பின் வருமாறு கூறுகின்றது:

பாடம் கருத்தே சொல்வகை சொற்பொருள்
தொகுத்துரை உதாரணம் வினாவிடை விசேடம்
விரிவு அதிகாரம் துணிவு பயனோடு
ஆசிரிய வசனம்என்று ஈரேழ் உரையே.

(பொதுப்–20)

இச் சூத்திரத்திற்கு மயிலைநாதர் பின்வருமாறு பொருள் கூறுகின்றார்: "பாடம் சொல்லலும், கருத்துரைத்தலும், சொல் வகுத்தலும், சொற்பொருள் உரைத்தலும், பொழிப்புரைத்தலும், உதாரணம் காட்டலும், வினாத் தோற்றலும், விடை கொடுத்தலும், விசேடம் காட்டலும், விரிவு காட்டலும், அதிகார வரவு காட்டலும், துணிவு கூறலும், பயனொடு படுத்தலும், ஆசிரிய வசனம் காட்டலும் என்னும் இப்பதினான்கு பகுதியானும் உரைக்கப்படும் சூத்திரப் பொருள்"

இவற்றுள் சிலவற்றைச் சங்கர நமசிவாயர் விளக்குகின்றார். அவர் விளக்கம் பின்வருமாறு:

"இவற்றுள், விசேடமாவது — சூத்திரத்து உட்பொருளன்றி ஆண்டைக்கு வேண்டுவன தந்து உரைத்தல்.

விரிவாவது—வேற்றுமை முதலிய தொக்கு நிற்பனவற்றை விரிக்க வேண்டுழி விரித்து உரைத்தல்.

அதிகாரமாவது—எடுத்துக்கொண்ட அதிகாரம் இது வாதலின், இச் சூத்திரத்து அதிகரித்த பொருள் இது என அவ்வதிகாரத்தோடு பொருந்த உரைக்க வேண்டுழி உரைத்தல்.

துணிவானது-ஐயுறக் கிடந்துழி இதற்கு இதுவே பொருள் என உரைத்தல்.

ஏனை, பொருள் விளங்கிக் கிடந்தன"

மேலே காட்டிய 'பாடம் கருத்தே' என்ற சூத்திரவுரையின் கீழ் மயிலைநாதர் உரையின் வேறு வகைகளைத் தொகுத்துக் கூறுகின்றார். அவர் உரை பின்வருமாறு:

1. "தொகுத்துக் கண்ணழித்தல், விரித்துக் கொணர்ந்து உரைத்தல் என்னும் இரு கூறும்;

2. பொழிப்பு, அகலம், நுட்பம் என்னும் மூவகையும்;

3. எடுத்துக் கோடல், பதங் காட்டல், பதம் விரித்தல், பதப்பொருள் உரைத்தல், வினாதல், விடுத்தல் என்னும் அறுகூறும்;

4. பொழிப்பு, அகலம், நுட்பம், நூல்எச்சம், பதப் பொருள் உரைத்தல், ஏற்புழிக் கோடல், எண்ணல் என்னும் ஏழும்;

5. சொல்லே, சொல்வகை, சொற் பொருள், சோதனை, மறை நிலை, இலேசு, எச்சம், நோக்கே, துணிவே, கருத்தே செலுத்தல் என்று ஈரைந்து கிளவியும் நெறிப்பட வருவது பனுவல் உரையே என்னும் இப்பத்தும்;

6. சூத்திரம் தோற்றல், சொல் வகுத்தல், சொற் பொருள் உரைத்தல், வினாதல், விடுத்தல், விசேடங் காட்டல், உதாரணங் காட்டல், ஆசிரிய வசனங் காட்டல், அதிகார வரவு காட்டல், தொகுத்து முடித்தல், விரித்துக் காட்டல், துணிவு கூறல், பயனோடு புணர்த்தல் என்னும் இப் பதின் முப்பகுதியுமான - இம்மத விகற்பம் எல்லாம் இப் பதினான்கினுள்ளே ('பாடம் கருத்தே' என்னும் சூத்திரத்தில் கூறப்பட்டவை) அடங்கும் எனக் கொள்க."

மயிலைநாதர் மேலே ஆறாவதாகக் கூறிய சூத்திரம் தோற்றல், சொல் வகுத்தல் முதலிய பதின்மூன்றினோடு கருத்துரைத்தல் என்ற ஒன்றைக்கூட்டி உரை பதினான்கு வகைப்படும் என்று வீரசோழியம் கூறுகின்றது (வீர—178).

யாப்பருங்கல விருத்தியுரை உரையின் வகைகளை,

முத்திறத் தானும், மூவிரு விகற்பினும்,
பத்து விதத்தானும், பதின்மூன்று திறத்தானும்,
எழுவகை யானும், இரண்டு கூற்றானும்,
வழுவுநனி நீங்க, மாண்பொடும், மதத்தொடும்
யாப்புறுத்து உரைப்பது சூத்திர வுரையே

என்று உரைக்கின்றது. பின்னர், முத்திறம் மூவிரு விகற்பம் முதலியவற்றை மயிலைநாதர் விளக்கியது போல, விளக்கிச் செல்லுகின்றது. வழு என்பது குன்றக் கூறல் முதலியபத்துக் குற்றம் என்றும், மாண்பு என்பது சுருங்கச் சொல்லல் முதலிய பத்து அழகு என்றும், மதம் என்பது உடன்படல் மறுத்தல் முதலிய ஏழுவகை என்றும் யாப்பருங்கல விருத்தியுரை விளக்குகின்றது.

நன்னூலின் பாயிரத்தில் உள்ள இரு சூத்திரங்கள், காண்டிகையுரை விருத்தியுரை என்பனவற்றை விளக்குகின்றன.

கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்
அவற்றொடு வினாவிடை ஆக்க லானும்
சூத்திரத்து உட்பொருள் தோற்றுவ காண்டிகை

(பொதுப்பாயிரம்–21)

என்பது காண்டிகை யுரையை விளக்கும் சூத்திரம்.

சூத்திரத்து உட்பொருள் அன்றியும் ஆண்டைக்கு
இன்றி யமையா யாவையும் விளங்கத்
தன்னுரை யானும் பிறநூ லானும்
ஐயம் அகலஐங் காண்டிகை உறுப்பொடு
மெய்யினை எஞ்சாது இசைப்பது விருத்தி

(பொதுப்பாயிரம்–22)

என்பது விருத்தியுரையின் இலக்கணம் கூறும் சூத்திரம்.

பலவேறு நூலாசிரியர்களும் உரையாசிரியர்களும் உரையின் வகைகளைப் பற்றிக் கூறியுள்ள விளக்கங்கள் நமக்கு மலைப்பைத் தரலாம்; மிகுதியானவை என்று எண்ணத் தூண்டலாம். ஆனால், உரை செய்யும் முயற்சியில் மிகுதியாக ஈடுபட்டுப் பெரிதும் உழைத்தவர்கள், நுணுகி நுணுகிச் செய்த ஒப்பற்ற கலைக் கருவூலமே உரை நூல்கள் என்ற எண்ணத்தையும் அவை உண்டாக்காமல் இல்லை.

2.7.

# 4. உரை செய்யும் உதவி

இலக்கிய வரலாற்றில் உரைகளுக்கு மிக உயர்ந்த இடமுண்டு. தமிழ்மொழி வளர்ச்சிக்கும், இலக்கணஇலக்கியப் பயிற்சிக்கும் உரைகள் பேருதவி புரிந்திருக்கின்றன. உரைகள் தோன்றியது நமது நற்பேறேயாகும். அவை தோன்றி இராவிடில், பழம்பெரும் இலக்கண இலக்கியச்செல்வங்கள் அழியாமல் இருந்திருப்பினும் விளங்காமல் இருந்திருக்கும்; இருளடர்ந்து உள்ளே நுழையாதபடி வாயில்கள் இறுக மூடி மண்மேடிட்டு முட்செடி கொடிகள் முளைத்துக் கொடிய நச்சுயிர்கள் வாழ்கின்ற பழங்கோட்டைக்குள் அகப்பட்டுக்கொண்ட பொற்குவியல்போல் பயனற்றுப் போயிருக்கும்.

ஆங்கிலப் புலமைச் செல்வியும் ஆய்வாளரும் ஆகிய ரிஸ் டேவிட்ஸ் (Mrs Rhys Davids) என்னும் அம்மையார், "இந்திய நாட்டில் உள்ள பௌத்த சமய நூல்கள், இக் காலத்தவர் படித்து இன்புறுதற்கு ஏற்ற உரை விளக்கங்கள் இல்லாத காரணத்தால் விளங்காமல் இருக்கின்றனவே!" என்ற ஏக்கத்தால் பின் வருமாறு துன்பக்குரல் எழுப்புகின்றார்:

"அந்நியர் செல்ல முடியாத இருளடர்ந்த குகைமடம் போன்றுள்ளன இந் நூல்கள். இவைபற்றிய பரம்பரை வரலாறு, எங்கும் சுவர்வைத்து மூடப்பட்டுள்ளன. பண்டைக்காலம் தன்னளவில் நில்லாது, நிகழ் காலத்தையும் எதிர் காலத்தையும் அடக்கி ஆட்சி புரிகின்றது. இவற்றை எல்லாம் நோக்கும்போது, நன்றாகத் திருவலகிட்டுச் சுத்தம் பண்ணி, அலங்கரித்துள்ள ஓர் அறை, பலகணிகள் எல்லாம் நன்றாக அடைக்கப்பட்டுத் திரையிட்டு உதய திசை சிறிதும் புலப்படக்கூடாத வண்ணம் அமைந்துள்ளது போல் தோன்றுகிறது"*

இத்தகைய ஏக்கமும் துன்பமும் நமக்குச் சித்தர் பாடல் களைக் கற்கும்போது ஏற்படுகின்றன; மருத்துவ நூல்களைக் காணும்போது எழுகின்றன; உரையில்லா நூல்களை நோக்கும் போதெல்லாம் உண்டாகின்றன.

## பலவகைப் பயன்கள்

தமிழ் மொழியும் இலக்கியமும் உரையாசிரியர்கள் இயற்றிய உரைகளால் செழித்து வளர்ந்து வந்துள்ளன. இன்றும் புதுப்புது வகையாய்ச் சிந்திக்கும் ஆராய்ச்சியாளர்களுக்கு உரைகள் பெரிதும் துணைசெய்து வருகின்றன. மொழியியல் ஆராய்ச்

* இலக்கிய உதயம் II (1963) பக். 235 எஸ். வையாபுரிப் பிள்ளை.

சிக்கும், இலக்கியத் திறனாய்வுக்கும் உரைகள் செய்துவரும் உதவியைப் பின்வருமாறு வகைப்படுத்திக் கூறலாம்:

1. உரையாசிரியர்கள், தாம் கற்றுத் தேர்ந்து பெற்ற புலமைச் செல்வத்தை எல்லாம் தம் உரைகளில் கொட்டி நிரப்புரவதால் நாம் அறிவுக் களஞ்சியத்தினுள் எளிதில் புகுந்து இன்புற முடிகிறது.

2. சில பாடல்களுக்கு உரையாசிரியர்கள் மிகவிரிவான உரையும் நயமிக்க விளக்கமும் எழுதியிருப்பதால் அவை இலக்கியப் பயிற்சிக்கு வழிகாட்டியாய் அமைகின்றன. விளங்காமல் இருந்த—ஐயத்திற்கு இடமாக இருந்த எத்தனையோ செய்திகள் வெளிப்படுகின்றன.

3. காலந்தோறும் வளர்ந்து வந்துள்ள தமிழ் உரைநடையின் இயல்பு, தனித்தன்மை ஆகியவற்றை உரை கொண்டே நாம் அறிய முடிகின்றது.

4. தமிழ் மொழியின் அமைப்பு, காலந்தோறும் எவ்வாறு மாறுதல் அடைந்து வந்துள்ளது என்பதையும், தமிழ் மக்களின் வாழ்க்கைநிலை, அரசியல்மாறுதல், பழக்கவழக்கம் ஆகியவற்றையும் உரைகள் உணர்த்துகின்றன.

5. கிடைத்தற்கரிய — இலக்கியச் சுவை மிகுந்த தனிப் பாடல்களைத் திரட்டி உரைகளே நமக்கு உதவுகின்றன.

6. ஏடுகளில் இருந்த பழைய நூல்களைப் பதிப்பித்தவர்களுக்கு, மூலத்தை அறிய உரைகளே துணைபுரிந்து வந்தன. "உரையைக் கொண்டு மூலத்தையும், மூலத்தைக் கொண்டு உரையையும் பல சமயங்களில் அறிந்துகொண்டதுண்டு"*

7. உரையாசிரியர்கள் மேற்கோளாகத் தரும் பாடல்கள், மூல நூல்களில் ஏற்படும் ஐயத்தைப் போக்கவும் நல்ல பாட வேறுபாடு அறிந்து பாடல்களின் பொருளைத்துணியவும் பயன்படுகின்றன.

8. சில பழைய நூல்களில் மறைந்தும் குறைந்தும் உள்ள பகுதிகளுக்கு உரிய பாடல்களை உரைகளே நமக்குத் தந்துள்ளன. தொல்காப்பியம், குறுந்தொகை, திருக்குறள், சிந்தாமணி, நன்னூல் ஆகிய நூல்களின் பழைய அமைப்பு, அளவு, உட்பிரிவு ஆகியவை பற்றி உரைகள் நமக்கு அறிவிக்கின்றன.

9. மறைந்துபோன தமிழ் நூல்களின் பெயர், அவற்றை இயற்றிய புலவர்களின் பெயர், அந்நூல்களின் சிலபகுதிகள் ஆகியவற்றைப் பேணிக்காத்து வருபவை உரைகளேயாகும்.

* சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும் (1953) பக்கம் 174, டாக்டர் உ.வே.சா.

இத்தகைய உதவிகள் பல செய்யும் உரைகளைத் தந்த உரையாசிரியர்களைப் பெருந் தொண்டர்கள் என்று போற்ற வேண்டும்.

இனி, அடுத்து வரும் பகுதிகளில் உரை செய்யும் உதவிகள் சிலவற்றை விரிவாகக் காண்போம்.

தொல்காப்பிய எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் ஆகிய இரண்டிற்கும் அமைந்துள்ள உரை விளக்கங்கள் மொழியியல் ஆராய்ச்சிக்குத் துணைபுரிகின்றன. இவ்வாறே பிற்கால இலக்கண உரைகளும் அவ்வக்காலத்துத் தமிழ் மொழி அமைப்பை அறிவிக்கின்றன. தொல்காப்பியப் பொருளதிகார உரைகள் இலக்கியத் திறனாராய்ச்சிக்குப் பெரிதும் பயப்படுகின்றன. யாப்பு, அணி, பாட்டியல் பற்றிய உரை விளக்கங்கள் செய்யுளின் வடிவம் பற்றி அறிய உதவுகின்றன.

## உரைகள் – இலக்கியங்கள்

மூல நூல்களைப் போலவே உரை நூல்களும் இலக்கியம் போல் இன்பம் ஊட்டுகின்றன. மூல நூல்களில் உள்ள எல்லாச் சிறப்புக் கூறுகளும் உரை நூல்களில் உள்ளன. உரைகளில், கற்பனைச்சிறப்பு வாய்ந்த உவமைகள் உள்ளன; எண்ண எண்ண இனிக்கின்ற இலக்கியச் சுவை மிகுந்த பகுதிகள் உள்ளன. சிந்தனையாளர்களை வியப்பில் ஆழ்த்துகின்ற பல வகையான ஆராய்ச்சிகள் உள்ளன. எதுகை மோனைகள் அமைந்த – ஓசையின்பம் தருகின்ற வகை வகையான அழகிய உரை நடை, நூல் முழுதும் கொஞ்சி விளையாடுகின்றது.

இறையனார் களவியல் உரையைப் படித்துக் கொண்டு வரும் போது, நூலாசிரியர் செய்த 60 சூத்திரங்களும் நம்நினைவிலிருந்து நீங்கி, உரையே நெஞ்சில் நிரம்பிவிடுகின்றது. நூலாசிரியர் குரலைவிட உரையாசிரியர் குரலே உரக்கக் கேட்கின்றது. உரையே தனி இலக்கியமாய்ப் பொலிகின்றது. மற்ற உரைகளும் இத்தகைய சிறப்பியல்பைப் பெற்று விளங்குகின்றன. தமிழறிஞர் அ. மு. பரமசிவானந்தம் உரைகளில் ஈடுபட்டு அவற்றைப் பின்வருமாறு போற்றுகின்றார்:

"உரைகள் மூலங்களுக்கு உரைகளே என்னும் நினைவை மறப்பித்து, தாமே பேரிலக்கியங்களோ என்னும் நினைவையும் சிற்சில இடங்களில் உண்டாக்குகின்றன என்பதைப் பயின்றோர் நன்கு உணர்வர். ஒரு சில இடங்களை நோக்கின், 'நூலாசிரியர் இத்தகைய நுண்ணுணர்வுடன் பாடினாரா? அன்றி உரை யாசிரியர் உள வண்ணமும் உரை வண்ணமும் இத்தகைய ஏற்றத்தைத் தருகின்றனவா?" என்று வியக்கத் தோன்றும்.*

* 19–ஆம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சி (1966) பக். 30.

சுருங்கக் கூறின், நூலியற்றிய ஆசிரியர் கருத்து, காலந் தோறும் அந்த நூலைப் பயின்றவர் போற்றி உரைத்த நயம், காலவேறுபாட்டால் தோன்றிய கருத்துப் புதுமை, மாறுபட்ட கருத்தினர் தோற்றுவித்த சிந்தனைவளம் ஆகிய அனைத்தும், ஓரிடத்தில் திரண்டு நிற்கும் புலமைக் களஞ்சியமே உரை நூல்கள்.

## புலமைக் களஞ்சியம்

ஒரு நூலில் உள்ள ஏதேனும் ஒரு பாடலோ பகுதியோ உரையாசிரியர்களால் நன்கு விளக்கப்பட்டிருத்தலும் உண்டு. பேராசிரியர் உவம இயலுள், 'வேறுபட வந்த உவமத் தோற்றம்' (உவம-32) என்னும் சூத்திரத்தின் கீழ், 'வையங்காவலர்' என்று தொடங்கும் புறநானூற்றுப் பாடலுக்கு (புறம்.8) மிக விரிவாகப் பொருள் எழுதியுள்ளார். மேலும் அவர், செய்யுளியலில், 'நோக்கு' என்ற செய்யுள் உறுப்பை விளக்கும்போது (செய். 104) 'முல்லை வைந்நுனை' என்ற அகப்பாட்டை (அக. 4) எடுத்துக் கொண்டு அரும்பெரும் விளக்கம் ஒன்றை எழுதியுள்ளார். இவ்விரு விளக்கங்களும் புலமைக்கும் விருந்தாய் அமைந்து, இலக்கியச் சுவை நல்கிக் கற்போரை இன்பக் கடலுள் ஆழ்த்துகின்றன.

திருக்குறளுக்கு உரை எழுதாத - வேறு நூல்களுக்கு உரை கண்ட உரையாசிரியர்கள் சிலர், திருக்குறள் சிலவற்றிற்குச் சிறந்த விளக்கம் தந்துள்ளனர். அவை புதிய கருத்துடையனவாய்— சிறந்தவையாய் உள்ளன. நச்சினார்க்கினியர், 'அகர முதல' என்னும் முதற் குறளுக்கு எழுத்ததிகாரத்தில் சிறந்த விளக்கம் தருகின்றார். மேலும் அவர் சீவக சிந்தாமணியில், "சங்கு உடைந்தனைய" (சீவக-547) என்னும் செய்யுள் உரையில், "சங்கு சுட்டாலும் நிறம் கெடாததுபோலக் கெட்டாலும் தன் தன்மை கெடாத குடியும் ஆம்; நத்தம் போறகேடும் (குறள்-235) என்ப" என்று எழுதுகின்றார். 'நத்தம் போற கேடும்' என்ற குறளுக்கு நச்சினார்க்கினியர், பரிமேழலகர் உரைக்கு மாறுபட்டதொரு கருத்தினைக் கொண்டுள்ளார். மயிலைநாதர், நன்னூல் உரையில், 'பெயர் வினை' என்னும் சூத்திரத்தின் (நன்-359) கீழ் பல குறட்பாக்களுக்குப் பொருள் கூறுகின்றார். அவற்றைத் திருக்குறள் உரையாசிரியர்களின் கருத்தொடு ஒப்பிடும் போது சில அரிய விளக்கங்கள் மயிலைநாதர் உரையில் வெளிப்படுவதைக் காணலாம். சங்கர நமசிவாயர் நன்னூல் உரையில் (நன்-360) 'இணர் எரி தோய்வன்ன' என்ற குறட்பாவுக்கு எழுதியுள்ள விளக்கம் பலமுறை கற்று மகிழத் தக்க வகயில் நுண்பொருள் பொதிந்துள்ளது.

## இருளில் ஒளி

சில சொற்றொடர்களின் அரிய பொருளும் உரையாசிரியர்கள் உரையால் வெளிப்படுகின்றது. திருமுருகாற்றுப் படையின் பழைய உரையாசிரியர், 'தலைக்கை தருதல்' என்பதனை நன்கு விளக்கியுள்ளார். அப்பாடலில் குறிக்கப்படும் ஏரகம் என்னும் இடம், தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள சுவாமிமலை என்பது அருணகிரிநாதர் கருத்தாகும். ஆனால் சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர், அவ்வாறு கருதவில்லை. ஏரகமும் சுவாமி மலையும் வேறு வேறு என்பது அவர் கருத்து (குன்றக் குரவை-தெய்வம் பராஅயது). நச்சினார்க்கினியரும் ஏரகம், மலைநாட்டில் உள்ள இடம் என்றே கூறியுள்ளார் (முருகு. 189). தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்கு, இயற்றியவர் பெயர் அறியப்படாத பழைய உரை ஒன்று உண்டு. அவ்வுரையின் வாயிலாக, வெண்களமர், கருங்களமர் என்ற சொற்களின் பொருள் விளங்குகின்றது.

உரையாசிரியர்கள், பிற நூலில் உள்ள செய்யுட்களை மேற்கோளாகக் காட்டி எழுதிய இலக்கணக் குறிப்பும், விளக்கமும், ஆராய்ச்சி உலகில் நிலவி வந்த பல குழப்பங்களையும், முரண்பாடுகளையும் நீக்கி, புதிய ஒளி தந்துள்ளன.

நற்றிணையில்,

**கொக்கினுக்கு ஒழிந்த தீம்பழம், (கொக்கின்**
**கூம்புநிலை யன்ன முகைய ஆம்பல்)**
**தூங்குநீர்க் குட்டத்துத் துடும்என வீழும்**

—(நற். 280)

என்று வரும் பாட்டிற்கு, உரையாசிரியர் (பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர்), "கொக்கு வந்து இருந்ததனால் கிளை அசைதலின் உதிர்ந்த இனிய மாங்கனியானது ... ஆழமான நீரிலே துடுமென வீழா நிற்கும்" என்று பொருள் எழுதுகின்றார். கொக்கு வந்து உட்கார்ந்ததால் மாங்கனி வீழ்ந்தது என்று கூறுவது பொருத்தமாகத் தெரியவில்லை. கொக்கு என்ற சொல்லுக்கு மாமரம் என்ற பொருள் உண்டு. இதை நினைவில் கொண்டு, நச்சினார்க்கினியர் தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் இந்த அடிக்குக் கூறியுள்ள இலக்கணக் குறிப்பையும் நோக்கினால் பாடலின் பொருள் நன்கு விளங்குகின்றது. நச்சினார்க்கினியர்,

**யாதன் உருபிற் கூறிற் றாயினும்**
**பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்**

(சொல்–107)

என்ற சூத்திரத்தின் கீழ்,

"கொக்கினுக்கு ஒழிந்த தீம்பழம்" என்புழியும் கொக்கினின்றும் என ஐந்தாவதன் பொருளாயிற்று" என்று உதாரணம் காட்டி விளக்கியுள்ளார்.*

எனவே, "கொக்கினுக்கு ஒழிந்த தீம்பழம்" என்ற அடிக்கு, "மாமரத்திலிருந்து உதிர்ந்த இனிய பழம்" என்று பொருள் கொள்வதே பொருத்தமாக உள்ளது. இத்தகைய சிறந்த பொருள் விளக்கத்திற்கு நச்சினார்க்கினியர் உரை பேருதவி புரிகின்றது.

குறுந்தொகையில், 'அரிற்பவர்ப் பிரம்பின்' (குறுந்-9)

என்ற பாட்டில்,

— நெடுந்தேர் அஞ்சி
கொன்முனை இரவூர் போலச்
சிலவா குகநீ துஞ்சும் நாளே

என்ற அடிகளுக்கு டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் பின்வருமாறு பொருள் எழுதுகின்றார்: "அதியமான் அஞ்சி என்னும் உபகாரியினது, அச்சத்தைச் செய்யும் போர்க்களத்தில் உள்ள இரவையுடைய ஊரில் உள்ளார் போல நீ துயிலும் நாட்கள் சிலவே ஆகுக."

'இரவூர்' என்பதற்கு அவர் கொண்ட பொருள் இரவை யுடைய ஊர்' என்பதாகும். ஆனால், இரவூர் என்பது ஓர் ஊரின் பெயர் என்றும், அவ்வூர் அதியமான் நெடுமானஞ்சிக்கும் பெருஞ் சேரல் இரும்பொறை என்னும் சேர மன்னனுக்கும் போர் நடந்த இடத்திற்கு அருகே இருந்தது என்றும், போரின் முடிவில் அவ்வூர் பாழ்பட்டது என்றும் தகடூர் யாத்திரையிலிருந்து உரையாசிரியர்கள் காட்டும் மேற்கோள் பாடல்கள் அறிவிக் கின்றன.

இரவூர் எறிந்து நிரையொடு பெயர்ந்த
வெட்சி மறவர்

(புறத்–3 உரை)

என்பது நச்சினார்க்கினியர் மேற்கோளாகக் காட்டும் பாடலின் பகுதியாகும். இங்கே இரவூர் என்பது ஐயத்திற்கு இடமின்றி ஓர் ஊரின் பெயராகவே உள்ளது.

சீவக சிந்தாமணியில் 'காவில் வாழ்பவர்' என்ற பாடல் உரையின் கீழ், நச்சினார்க்கினியர், "ஏவல் முரணும் என்றாற் போல" என்று எழுதுகின்றார். மேற்கூறிய பாட்டில் 'ஏவல்' என்ற

* கொக்கினுக் கொழிந்த தீம்பழம்; நாகுவேயொடு நகுபு வீங்குதோள் – இவற்றுள் நான்கும் மூன்றும் ஐந்தாவதன் பொருட்டாயும் இரண்டாவதன் பொருட்டாயும் நின்றன. (பிரயோக விவேகம் காரகபடலம், உருபுமயக்கம்.)

சொல் இடம் பெற்றுள்ளது. அதற்குப் பொருள் 'ஏவன் முரணும்' என்ற இடத்துப் பொருள் உரைப்பது போல உரைக்க வேண்டும் என்ற கருத்தில், நச்சினார்க்கினியர் 'ஏவன் முரணும் என்றாற் போல' என்று சுருக்கமாக எழுதியுள்ளார். 'எவன் முரணும்' என்பதனை விளங்கா மேற்கோளாக டாக்டர். உ.வே.சா. குறித்துள்ளார்.

யாப்பருங்கலக் காரிகையில், 'உதாரண இலக்கிய முதல் நினைப்புக் காரிகை' ஒன்றில் (காரிகை-18) 'ஏவின் முரணும் இருள் பரந்து' என்று அடி உள்ளது. இதில் உள்ள 'ஏவின் முரணும்' என்பது ஏவன் முரணும் என்றும், நச்சினார்க்கினியர் இவ்விடத்தையே தம் உரையில் எடுத்துக் காட்டினார் என்றும் பெரியோர்கள் கருதுகின்றனர். இவ்வாறு கருதுவது பொருத்த மாகவே உள்ளது.

பரிமேலழகர் "எந்நன்றி கொன்றார்க்கும்" (குறள் 110) என்ற குறள் உரையின் கீழ் "பெரிய அறங்களைச் சிதைத்த லாவது: ஆன்முலை அறுத்தலும், மகளிர் கருவினைச் சிதைத்தலும், **குரவர்த் தபுதலும்** முதலிய பாதகங்களைச் செய்தல்" என்று விளக்குகின்றார்.* "ஆன்முலை அறுத்த" என்ற புறநானூற்றுப் பாடலை (புறம்: 34). கருத்திற் கொண்டு இவ்வாறு எழுதுகின்றார். அப்பாடலில்,

**பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்**

என்ற அடியை,

**குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்**

என்ற பாடத்துடன் பரிமேலழகர் குறிப்பிடுகின்றார். பரிமேலழகர் கொண்ட பாடம் எல்லோராலும் போற்றி மேற்கொள்ளப்படு கின்றது.

## காப்புப் பெட்டகம்

பல நூறு ஆண்டுகள் கடந்து, பலப்பல தலைமுறையினரின் கையில் தவழ்ந்து, கால வெள்ளத்தை நீந்தி நம்மிடம் வந்து சேர்ந்துள்ள பழம்பெரும் நூல்கள், தோன்றிய காலத்தில் இருந்த அமைப்புடன் இன்று இல்லை. நூலின் பெயர் மாறியிருக்கிறது; நூலில் உள்ள பகுதிகளில் மாற்றம் ஏற்பட்டுள்ளது; நூலில் இடம் பெற்றுள்ள பாடல்களின் எண்ணிக்கை கூடி இருக்கிறது; குறைந் திருக்கிறது. நூலின் பகுதிகள் சில—முன்னும் பின்னும் நடுவும்—மறைந்திருக்கின்றன. பல நூல்கள் மறைந்து போய்விட்டன.

இத்தகைய அரிய செய்திகள் பலவற்றை உரைவாயிலாகவே நாம் அறிய முடிகின்றது.

* ஆறுமுக நாவலர் பதிப்பு

திருக்குறளுக்கு 'முப்பால்' என்ற பெயரே அது தோன்றிய காலம் முதல் பரிமேலழகர் காலம் வரை வழங்கி இருக்கிறது.

**பொய்யற்ற முப்பாற் பொருள்உரைத்தான் தென்செழுவைத்**
**தெய்வப் பரிப்பெருமாள் தேர்ந்து**

என்றும்,

**முப்பாலுக்கு, விழுப்பொருள் தோன்ற விரித்தினிது**
**உரைத்தனன், பரிமேலழகன்**

என்றும் உரைச் சிறப்புப்பாயிரங்களில் திருக்குறள் முப்பால் என்றே வழங்கப்படுகிறது.

திருக்குறளில் பாலின் உட்பிரிவாகிய இயல்கள் பலப்பல மாறுதல்களை அடைந்திருக்கின்றன. அம்மாறுதல்களைத் திருக் குறள் உரைகளில் காணலாம்.

இன்று, பொருளதிகாரத்தில் ஒன்பதாவது இயலாக உள்ள மரபியல், செய்யுள் இயலுக்கு முன் அமைந்து, செய்யுள் இயல் இறுதி இயலாக வழங்கி வந்தது என்பதற்குப் பேராசிரியர் உரை சான்றாக உள்ளது.

மேலும் தொல்காப்பியத்தின் உட்பிரிவாகிய அதிகாரம், படலம் என்றும் வழங்கி இருக்கிறது என்றும், அதிகாரத்தின் உட் பிரிவாகிய இயலுக்கு ஒத்து என்ற பெயரும் வழங்கியுள்ளது என்றும் பேராசிரியர் உரை நமக்கு அறிவிக்கின்றது.

உரையாசிரியர்களால் சுட்டப் பெறும் குறுந்தொகைப் பாடல்கள் சில, இன்று வெளிவந்துள்ள குறுந்தொகையில் இடம் பெறவில்லை.

நச்சினார்க்கினியர் குறிஞ்சிக்கலியின் இரண்டாவது பாட்டு உரையில் 'நன்றே என்னும் குறுந்தொகையும் அது' என்று கூறுகின்றார். 'நன்றே' என்று தொடங்கும் குறுந்தொகைப் பாடல் இன்று கிடைக்கவில்லை.

தக்கயாகப் பரணி உரையாசிரியர்,

"சிலம்பிபொதி செங்காய் — இது குறுந்தொகை" (தக்க-54) என்று கூறுகின்றார். இப்பாடல் மறைந்துவிட்டது.

அ. குமார சுவாமிப்பிள்ளை பதிப்பித்த நம்பியகப் பொருள் விளக்கவுரை, பாங்கி தலைமகளைத் தலைமகற்குக் கையடை கொடுத்ததற்கு உதாரணச் செய்யுளாக,

**இவளே நின்னல திலளே யாயும்**
**குவளை உண்கண் இவளல திலளே**
**யானும் ஆயிடை யேனே**
**மாமலை நாட மறவா தீமே**

என்பதைக் காட்டி "இது குறுந்தொகைச் செய்யுள்" என்று கூறுகின்றது. இதுவும் குறுந்தொகையில் இடம் பெறவில்லை.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று, இன்னிலையா, கைந்நிலையா என்ற குழப்பம் வந்தபோது, இளம் பூரணர் உரையே 'கைந்நிலை' என்பது அகப்பொருள் நூல் என்றும், பழைய நூல் என்றும் அறிவித்து நான்கு செய்யுட்களை மேற் கோளாகக் காட்டி உண்மையை அறிவித்தது.

சீவகசிந்தாமணியில் 3145 பாடல்கள் உள்ளன. ஆனால் 'முந்நீர் வலம்புரி' என்னும் பாடல் (3143) உரைக் கீழ் நச்சினார்க் கினியர், "தேவர் அருளிச் செய்த செய்யுள் இரண்டாயிரத்து எழுநூறு என்றே கொள்க" என்று கூறுகின்றார். ஏனைய பாடல்கள் (445) கந்தியார் என்னும் பெண் புலவரால் இடையிடையே பாடிச் சேர்க்கப்பட்டன என்று சிலர் கூறுகின்றனர். அச் செய்யுட்கள் இன்னவை என்று புலப்பட வில்லை.

எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் கூறும் நன்னூல், ஐந்திலக்கணமும் (பொருள், யாப்பு, அணி) கூறும் பெரு நூலாக இருந்தது என்பதை மயிலை நாதர் உரை அறிவிக்கின்றது.

பழந்தமிழ் நூல்களில் பரிபாடலும் பதிற்றுப்பத்தும் குறைந்தும் சிதைந்தும் கிடைத்துள்ளன. அவற்றிற்குரிய— மறைந்ததாய்க் கருதப்படும் பகுதிக்குரிய பல செய்யுள்களை உதாரணங்களாக எடுத்துக்காட்டி உரையாசிரியர்கள் பேணிக் காத்துள்ளனர்.

"பரிபாடலின் முதற்பாடல் இளம்பூரணர் உரையினாலும்; பதிற்றுப் பத்துப் பாடல்கள் சில, நச்சினார்க்கினியர் உரையினாலும்; பழமொழியின் முதற்பாடல் மயிலை நாதர் உரையினாலும் கிடைத்துள்ளமை. மேற்கோள் ஆட்சியின் பயன் அல்லவா? களவியலில் காணப்பட்ட பாடல்கள் பாண்டிக் கோவையைச் சார்ந்தவை என்பதும்; சிற்றடக்கம் எனவும் சிற்றடகம் எனவும் பிழைபட வழங்கப்பட்டுவந்த நூற்பெயர் சிற்றெட்டகம் எனத் திருத்தமுற்றதும் களவியற் காரிகையின் மேற்கோள் ஆட்சியினால் அல்லவா? தரவு கொச்சகம் முதலிய உறுப்புக்களின் பாகுபாடு அறிய இயலாதவாறு சிதைந்த நிலையில் கிடைத்துள்ள பரிபாடலில் இரு பாடல்களுக்காவது, உறுப்பமைப்புக் கிடைத்தது இளம்பூரணரின் மேற்கோள் ஆட்சியினால் அன்றோ? 'ஒண்டொடி அரிவை' என்னும் ஐங்குறு நூற்றுப் பாடலின் (172) 'உரவுக் கடல் ஒலித் திரை போல' என்ற திருந்திய பாடத்திற்கு இளம்பூரணரின் மேற்கோள் ஆட்சி

அல்லவா காரணம்? இவற்றை எல்லாம் மேற்கோள் ஆராய்ச்சியின் பயன்கள் என்னாமல் வேறு எங்ஙனம் குறிப் பிடுவது"*

இவையே யன்றி, தகடூர் யாத்திரை குண்டலகேசி வளையாபதி முதலிய இலக்கியங்களிலும், அவிநயம் இந்திர காவியம் அமுத சாரம் காக்கை பாடினியம் ஆகிய இலக் கணங்களிலும் குறைப்பகுதிகளாவது வெளிவந்திருப்பது மேற் கோள் பாடல்களால் விளைந்த நற்பயன் அல்லவா?

கடல்கோளுக்கும், நெருப்புக்கும், நீருக்கும், கறையா னுக்கும், கல்லாத மக்களின் பொல்லாத அறியாமைக்கும் இரையாகி, கணக்கற்ற தமிழ் நூல்கள் மறைந்துவிட்டன. அந்நூல்களின் சில பகுதிகளையும், பெயர்களையும் உரையா சிரியர்களே நமக்கு வழங்கிப் பேருதவி புரிந்துள்ளனர். இலக்கணம், இலக்கியம், இசை, நாடகம் ஆகிய பல வேறு துறை களுக்கு உரிய மறைந்த நூல்கள், உரைகளிலிருந்து திரட்டப் பெற்று 'மறைந்துபோன தமிழ் நூல்கள்' என்ற பெயரில் பயனுள்ள அரிய நூலொன்று வெளியாகியுள்ளது.

## சேம நிதி

ஏட்டில் எழுதாத இலக்கியச் செல்வங்களைக் காத்த பெருமையும் உரையாசிரியர்களுக்கு உண்டு. அவர்கள் தம் காலத்துப் பேச்சுமொழி, வட்டார வழக்கு, மரபுத் தொடர், பழமொழி ஆகியவற்றை அறிந்து, ஏட்டில் எழுதிவைத்து அழியா வாழ்வு நல்கினர்.

வாய்மொழியாக வந்த சிறந்த தனிப் பாடல்களை—பெரும் புலவர்கள் பாடிய தனியன்களை—திரட்டித் தந்த பெருமை உரையாசிரியர்களுக்கு உண்டு. நாட்டிலே வழங்கி வந்த கதைகள் சிலவற்றை உரைகளில் தந்தனர். தமிழகப் பழங் கதைகளில் தமிழர் நாகரிகம், நெஞ்சப் பாங்கு, குறிக்கோள் யாவும் அடங்கியுள்ளன.

இவற்றிற்கு மேலாக உரையாசிரியர்கள் செய்த பணி யொன்று உண்டு. நாட்டுப் பாடல்கள் சிலவற்றை எழுதி வைத்துள்ளனர்; விடுகதைப் பாடல்களைத் தந்துள்ளனர். இவை மிகுதியாக இல்லை என்றாலும், ஆற்றங்கரையில் ஒதுங்கிக் கிடக்கும் பொன் மணல் போலப் பளிச்சிடுகின்றன. வாய்மொழி இலக்கியத்திற்கு வாழ்வு தந்து போற்றிவந்த உரையாசிரியர்கள் என்றும் போற்றத்தக்கவர்கள்.

* திருக்குறள் மேற்கோள் விளக்கம் (1970). பக். 64, 65
— டாக்டர் அ. தாமோதரன்.

உரையாசிரியர்கள் தம் காலத்து மக்கள் நிலை, வாழ்க்கை முறை, நாகரிகம், பழக்கவழக்கம், பண்பாடு, அரசியல் போக்கு ஆகியவற்றை ஆங்காங்கே சுட்டிச் செல்கின்றனர். தமிழ் நாட்டு வரலாறு எழுதுவோர், பழைய உரைகளின் வாயிலாகக் காலத்தின் குரலைக் கேட்கலாம்; வரலாற்று நிகழ்ச்சிகளைக் கண்டு மகிழலாம். வரலாற்று ஆசிரியர்கள் பழைய உரைகளைச் சிறந்த வரலாற்று மூலங்களாகக் கருதி அவற்றைக் கற்றுத் தெளிந்து, தமிழக வரலாற்றை உருவாக்க வேண்டும்.

பழைய உரைகள் ஆராய்ச்சி உலகத்தின் திறவுகோல்; இலக்கியம், இலக்கணம் கற்க முயன்று தளர் நடை போடும் மாணாக்கனின் கைகளைப் பற்றி நடத்திச் செல்லும் தந்தை; அறிவு செழிக்குமாறு ஊட்டி வளர்க்கும் தாய்; காலத்தையும் இடத்தையும் கடந்து வந்து, விரும்பிய போதெல்லாம் அறிவு புகட்டும் பேராசான்.

உரையாசிரியர்கள் வாழ்ந்த காலம் பழமையானது. ஆனால், அவர்களிடம் புதிய சிந்தனைகள் தோன்றியுள்ளன. காலத்தின் பிடிப்புக்குள் சிக்கிக் கொள்ளாமல் சுதந்திரமாய்ச் சிந்தித் துள்ளனர். அவர்கள் வாழ்ந்த இடம், புறவளர்ச்சிக்குரிய அறிவியல் கருவிகளும் முன்னேற்றத்திற்கு உதவும் புதிய வசதிகளும் இன்றிப் பிற்போக்கில் இருந்தது. ஆனால், அவர்கள் எண்ணமும் எழுத்தும், செயலும் சிந்தனையும் முற்போக்கானவை. இலக்கிய மரபுக்கும் இலக்கண நெறிக்கும் சமயக் கொள்கைக்கும் உட்பட்டு அவர்கள் உரை எழுதினர். ஆனால் சுதந்திரத்தை இழந்துவிடவில்லை. அவர்கள் மொழிக் கலையின் முழுமையைக் கண்டு உயர்ந்து சென்றும், கருத்துக் கடலில் மூழ்கியும் திளைத்தவர்கள். ஆனால், சிறிதளவு கற்றவரும் அவர்களிடம் சென்று நெருங்கிப் பழகி உரைகளைப் பயின்று பயன் பெற முடிகின்றது. அவர்கள் பழைய நூல்களுக்கு உரை எழுதி, பழைய மரபை வளர்க்கவும் முன்னோர் கருத்துக்களை வெளிப் படுத்தவும் முயன்று வெற்றி பெற்றனர். ஆனால், தம் காலத்து எண்ணத்தையும் எழுத்தையும் புறக்கணிக்கவில்லை. பலவேறு துறைகளில் அவர்கள் ஆற்றியுள்ள பணிகள், மிக உயர்ந்து விளங்கு கின்றன. ஆனால், அவை கருத்துலகிற்குச் சென்று கண்டு மகிழ உதவுகின்ற எளிய படிகளாய் உள்ளன. அவர்கள் உரைநடை கடுமையும் செறிவும் உடையது. ஆனால் அதுதான் தமிழ் மொழியின் உயர்வுக்கும் சிறப்புக்கும் காரணமாய் உள்ளது.

**கல்லாதேன் ஆனாலும்**
**கற்றுணர்ந்த மெய்யடியார்**
**சொல்லாலே நின்னைத்**
**தொடர்ந்தேன் பராபரமே!**

**– தாயுமானவர் (பராபரக். 383)**

# 5. உரையும் உரைநடையும்

'தமிழ் உரைநடை வரலாறு' தொன்மையும் சிறப்பும் வாய்ந்தது. பலநூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்தே திட்ப நுட்பம் வாய்ந்த செவ்விய உரை நடை, தமிழ் மொழியில் வளர்ந்து பெருகிச் சிறப்பெய்தியுள்ளது. உரைநடையை வளர்த்துச் செப்பனிட்டுப் போற்றி வந்தது உரையாசிரியர்கள் செய்த ஒப்பற்ற பணியாகும். தமிழ் மொழியில் பல வேறு காலங்களில் வழங்கி வந்த உரைநடையின் சிறப்பியல்புகளை அறிந்துகொள்ள, உரை யாசிரியர்களின் உரை நடையை நோக்குதல் வேண்டும்.

செய்யுள் நூலுக்கு இடையிடையே எழுதிய உரைகளே அல்லாமல், தனியாக உரைநடையில் எழுந்த நூல்கள் சில உலவின. ஸ்ரீ புராணம், குருபரம்பரா பிரபாவம் போன்றவை மணிப்பிரவாள நடையில் எழுந்த உரைநடை நூல்களாகும். உரையாசிரியர்கள் முயன்றிருந்தால் தனியாக உரைநடை நூல்கள் பல எழுதியிருக்க முடியும். அவர்களிடம் அதற்கு வேண்டிய தகுதிகள் யாவும் இருந்தன.

'அகவற்பா, பழந்தமிழர் கொண்ட ஒருவித உரைநடை' என்பது, தமிழ்ப்பெரியார் திரு.வி.க. கருத்தாகும்.* இக்கருத்தை வலியுறுத்தும் வகையில் சங்க இலக்கியத்தில் உள்ள பல அகவற் பாடல்கள், உரைநடை போன்றே உள்ளன. அப்பாடல்களில் உள்ள ஏகாரம், மற்று என்ற அசைச் சொல் முதலியவற்றை நீக்கி விட்டுச் சீர் பிரிக்காமல் எழுதினால், 'அகவற் பாடல்கள், உரைநடையே' என்பது விளங்கும்.

குறுந்தொகைப் பாட்டில் உள்ள,

**யானே ஈண்டை யேனே; என் நலனே**
**ஆனா நோயொடு கான லஃதே**
**துறைவன் தம்மூ ரானே**
**மறைஅல ராகி மன்றத் தஃதே**

**(குறுந்–97)**

என்ற பாடலில் உள்ள ஏகாரங்கள் ஆறினையும் நீக்கிவிட்டு,

"யான் ஈண்டையேன்; என் நலன் ஆனா நோயொடு கானலஃது; துறைவன் தம் ஊரான்; மறை அலராகி மன்றத்தஃது" என்று எழுதினால், உரைநடையாகவே அப்பாடல் அமைந்து விடுகின்றது. இத்தகைய எடுத்துக் காட்டுகள் பல தரலாம்.

---

* பொருளும் அருளும் – முன்னுரை (1951)

சிலப்பதிகாரத்தில் உள்ள உரை நடையும், இறையனார் களவியல் உரையும் மற்ற உரையாசிரியர்களின் உரையும் எதுகை மோனைகள் சிறப்புற அமையப் பெற்று ஓசைச் சிறப்பு வாய்ந்த இனிய அகவற் பாக்களாக அமையும் இயல்புடையவை. இதற்குக் கணக்கற்ற எடுத்துக்காட்டுகள் உள்ளன.

இறையனார் களவியலில், "இந்நூல் செய்தார் யாரோ எனின், மால்வரை புரையும் மாடக் கூடல் ஆலவாயிற் பால்புரை பசுங்கதிர்க் குழவித் திங்களைக் குறுங்கண்ணியாக வுடைய அழலவிர் சோதி அருமறைக் கடவுள்" என்ற பகுதியில், எதுகை மோனைகள் அமைந்து அகவல் ஓசை வாய்ந்த அகவற்பா உள்ளது. இப்பகுதியை எதுகை மோனைகளின் இயைபு நோக்கி அடிகளை அமைத்து, வேற்றுமை உருபுகளை நீக்கி,

**மால்வரை புரையும் மாடக் கூடல்**
**ஆல வாயிற் பால்புரை பசுங்கதிர்க்**
**குழவித் திங்களைக் குறுங்க(ண்)ணியாக (உடைய)**
**அழலவிர் சோதி அருமறைக் கடவுள்**

என்று ஓர் அகவற் பாடலை அமைக்கலாம்.

இன்னும், மற்ற உரைகளிலும் அகவலாய் அமையத்தக்க இடங்கள் பல உள்ளன.

செய்யுளுக்குரிய சிறப்புகள் யாவும் உரைநடைக்கு உண்டு. வல்லவன் கைத்திறனால் உரைநடையும் கவிதை போல இனிக்கின்றது; உள்ளத்தைக் கவர்கிறது; உணர்ச்சி ஊட்டுகிறது. கவிஞர்களைப் போலவே உரைநடை ஆசிரியர்களும் மக்களிடம் பெரு மதிப்புப் பெறுகின்றனர். செல்வக் கேசவராய முதலியார், உரை நடை ஆசிரியரின் சிறப்பைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

"கவிகள் போலவே கட்டுரை எழுதுவோரும், கருவிலே திருவுடையவர். நாநலமுடைமை பிறவிக் குணங்களில் ஒன்று. 'தெய்வப் புலவனுக்கு நா உணரும்; சித்திர ஓடாவிற்குக் கை உணரும்' என்பது கவி நடைக்கு மாத்திரமேயன்றிக் கட்டுரை நடைக்கும் பொருந்துவது என்பது, சிறந்த வசன நடையின் திறங்களைக் கூர்ந்து உய்த்து உணர்ந்தவர் கண்டபடி. வசனத்தில், உரிய சொற்களாகிய நன்மொழி புணர்த்தியும், நவின்றோர்க்கு இனிமை தருவதான ஓசையூட்டியும் செவ்வி செய்த நடையாகிய நவநீதம் தெய்வப் புலவர் எனப்படும் வாக்கிகட்கே கைவல்யம்"[1]

இப்பகுதியைப் படிக்கும்போது ஆர்.எல்.ஸ்டீவன்சன் என்னும் ஆங்கிலநாட்டு அறிஞர், உரை நடை எழுதுபவர்க்குக்

1. தமிழ் வியாசங்கள் – பக்கம் 120.

கூறிய அறிவுரைகள் நினைவுக்கு வருகின்றன. சிறந்த உரைநடைக்கு அமையவேண்டிய நல்ல இயல்புகளை அவர் பின்வருமாறு கூறுகின்றார்:

"உரை நடை எழுதுபவர் முதலாவதாக, கேட்போர் செவிக்கு இனிமையும், விழுமிய ஓசையும் பயக்கும் சொற்களை எடுத்தாள வேண்டும். இரண்டாவதாக, கற்பவர் வாய் மணக்கும் வகையில் இன்னிசையோடு தொடர்களை அமைக்க வேண்டும். மூன்றாவதாக, சிறந்த கருத்துக்களை அழகாகவும் முறையாகவும் வெளியிட வேண்டும். இறுதியாக, பொருத்தமும் தெளிவும் பெற்று நெஞ்சத்தில் ஆழப்பதியும் இயல்புடைய சொற்களைக் கையாளுவதில் வல்லவராக விளங்கவேண்டும்."[1]

உரையாசிரியர்களின் நடை, பல்வேறு வகையாய் உள்ளன. ஒவ்வொருவரும் தமக்கென்று சில இயல்புகளை வளர்த்து, சில வரம்புகளை ஏற்படுத்திக் கொண்டு தம்தம் தனிச் சிறப்புக்களை நிலைநாட்டிச் செல்கின்றனர். நடை என்பதைச் செல்வக் கேசவராய முதலியார் பின்வருமாறு விளக்குகின்றார்:

"நூல் நடையின் கூறுகளாவன கருத்தும் சொல்லும் என இரண்டு. கருத்தாவது கருதிய பொருள்; சொல்லாவது அப்பொருளை உரைக்கும் உரை. ஒரு நூலின் நடை சிறந்தது என்பார் குறிப்பாவது, அந்நூல், தான் கருதிய பொருளை உரைக்கும் செவ்வி சிறந்தது என்பதாம். உரிய சொற்கள் உரிய இடங்களில் பொருந்தி நடப்பதே நடை. கருதிய பொருளுக்குரிய சொற்களும் அவற்றிற்குரிய இடங்களில் பொருந்தி நடப்பதே, முற்றுத் தொடர்மொழி என்பதான வாக்கிய நடை"[2]

பழங்கால உரையாசிரியர்களின் நடை எல்லோருக்கும் விளங்கும் வகையில் இல்லை என்றும், கற்றறிந்தவரும் இடர்ப்பட்டுப் பலமுறை முயன்று கற்றுத் தெளிய வேண்டி இருக்கின்றது என்றும் கூறுவோர் சிலர் உள்ளனர். நடை என்பது எழுதுபவரின் திறமைக்கும் புலமைக்கும் ஏற்றவாறு வேறுபடும்; வெளியிடும் கருத்திற்கும் பொருளிற்கும் தக்கவாறு வேறுபடும்; யாருக்காக எழுதப்படுகிறதோ அவர்களுக்குத் தக்கவாறு வேறுபடும். ஆதலின், தமிழ்க் கடலில் மூழ்கி அரும்பெரும்

1. First the phrases should be rhythmical and pleasing to the ear; secondly the phrases should be musical in the mouth; thirdly the writer should weave the argument into a patern, both beautiful and logical and lastly, he should master the art of choosing apt, explicit and communicative words.
–Robert Louis, Stevenson in "On some Technical Elements of Style."

2. தமிழ் வியாசங்கள் (1926) பக்கம் 116.

செல்வங்களைக் கண்டு திளைத்து, அக்கடலின் கரைகளையும் தொட்டு மகிழ்ந்த புலமைச் செல்வர்களாகிய உரையாசிரியர் களின் உரைநடை, பெருமிதத்தோடு ஈடும் எடுப்பும் அற்றதாய் இருப்பது இயல்பே. அவர்கள் கூற எடுத்துக்கொண்ட கருத்துகள் எளியவை அல்ல. திட்ப நுட்பம் வாய்ந்த இலக்கண, இலக்கிய, சமயக் கருத்துகளை எல்லோருக்கும் விளங்கும் வகையில் கூற இயலாது. மேலும் அவர்கள், பல ஆண்டுகள் முறையாகப் பயின்று மொழித் திறனும் கருத்துத் தெளிவும் வாய்க்கப்பெற்ற மாணாக் கர்களுக்கு உரை எழுதினர். இவற்றை நாம் நினைவில் கொண்டு உரையாசிரியர்களின் உரை நடையை நோக்குதல் வேண்டும்.

உரையாசிரியர்களின் நடையை, காலத்திற்கு ஏற்ற நடை—கற்ற புலமைக்கு ஏற்ற நடை—கருத்திற்கு ஏற்ற நடை—கற்பவர் தகுதிக்கு ஏற்ற நடை என்று மதித்துப் போற்றிக் கற்கவேண்டும். பலப்பல ஆண்டுகளாக உரை நடையை வளர்த்துச் செப்பனிட்ட பெருமை உரையாசிரியர்களுக்கு உரியதாகும்.

## உரையாசிரியர்களின் உரைநடை

உரையாசிரியர்களின் பல்வேறு வகையான உரைநடை களை உற்று நோக்கிய டாக்டர் மு. வரதராசனார், "உரையாசிரியர் ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொரு நடை அமைந்தது; அவர்தம் உரைகளும் ஒவ்வொரு வகையில் சிறப்புடையனவாக உள்ளன" என்று கூறுகின்றார்.*

பன்மொழிப் புலவர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், உரை யாசிரியர்களின் உரைநடை இயல்பை ஆராய்ந்து பின்வருமாறு கூறுகின்றார்:

"இறையனார் அகப்பொருள் உரை ஒரு சிறந்த உரை நடை நூல். சூத்திரத்திற்குப் பொருள் கூறுவதோடு சோலை முதலிய வற்றைப் பற்றிய புனைந்துரையும், அன்பு முதலியவற்றைப் பற்றிய தத்துவ விளக்கமும் அங்கு உண்டு. ஆனால், அங்குப் பாட்டு நடை காதில் கேட்காமல் இல்லை. எதுகை மோனைகள் அளவுக்குமீறி இன்ப மூட்டுகின்றன."[1]

"தொல்காப்பியத்தின் முதல் உரையாசிரியான இளம் பூரணரின் நடை எளிமை வாய்ந்தது. சேனாவரையரின் இலக்கண வுரையில் புனைந்து கூற மிகுந்த இடம் இல்லையாயினும், அவரது நடையில் மிகுந்த பொலிவும் புனைவும் இடம்பெறுகின்றன. திருக்குறள் உரையாசிரியரான பரிமேலழகர் நடை தெளிவாக

* கலைக் களஞ்சியம் 5, பக்கம் 486.
1. நீங்களும் சுவையுங்கள் (1954) பக்கம், 195.

இருப்பினும் செறிவுமிக்கது. பேராசிரியர் நடை பெருமிதமானது. நச்சினார்க்கினியர் கருத்து வெளிப்பாட்டில் தம்மை மறந்து ஆரவாரமற்ற நடையில் எழுதுகின்றார்."[1]

"வைணவர்களும் சைனர்களும் வடமொழியும் தமிழும் பாதிப்பாதி கலந்து, மணிப்பிரவாள நடை எழுதினர்; உரைகளும் தத்துவங்களும் எழுதினர். இவற்றில் ஓர் அழகு உண்டு. ஆனால், இங்கும் சூத்திர நடையையே காண்கின்றோம்."[2]

ஒவ்வோர் உரையாசிரியரின் உரைநடைக் குரிய சிறப் பியல்புகளைக் காண்போம்.

## இறையனார் அகப்பொருள் உரை

இறையனார் அகப்பொருள் உரையே தமிழ்மொழியில் தோன்றிய முதல் உரை நூலாகும். பழந்தமிழ் உரை நடையின் சிறப்பை எல்லாம் இந் நூலில்தான் காணமுடிகின்றது. எடுத்துக் கொண்ட பொருளைத் தெளிவாக விளக்குவதிலும், பிறர் கருத்தைக் காரணத்தோடு மறுப்பதிலும் இவ்வுரையாசிரியரின் திறமை ஒப்புயர்வற்றது. வலிவும் வனப்பும் ஒருங்கே வாய்ந்த இதன் உரைநடை, தமிழிலக்கியவுலகம் அதற்குமுன் கண்டிராத ஒரு புதுமையாய் அமைந்தது. இந்த உரைநடையைத்தான் பிற் காலத்தில் தோன்றிய உரையாசிரியர்கள் அனைவரும் கற்றுத் தேர்ந்து, பின்பற்றினர்.

இறையனார் களவியல் உரையின் இயல்பை அறியக் கீழுள்ள பகுதி துணை செய்யும்:

"தலைமகள், 'எம்பெருமான் நின்னிற் பிரியேன், பிரியினும் ஆற்றேனாவல்' என்கின்றானால், பிரிவு என்பதும் ஒன்று உண்டு போலும்; கேட்ட தகைமையால் அது தம் காதலரைக் காணாதும் கேளாதும் கையின் அகன்று மெய்யின் நீங்குவது எனக் கலங்கி, கார் மருங்கின் மின்னுப் போலவும், நீர் மருங்கின் கொடி போலவும், தளிரும் முறியும் தகைந்து குளிரும் நளிரும் கவினி எழா நின்றதோர் கவின் பெறு கொடிப்போலும் காரிகை, கண்ணாடி மண்டிலத்து ஊது ஆவி போலக் காண ஒளி மழுங்கி,

1. The style of Ilampuranar, the first commentator on Tolkappiam is simple. Cenavaraiyar's is more elegant and descriptive, though there is not much scope for description in his grammatical writing. The style of Parimelalakar, the commentator on Kural, is very terse though crystal clear. Peraciriyar's style is dignified. Naccinarkkiniyar uses no tricks of style; he forgets himself in his exposition. — A History of Tamil Literature P. 174.

2. நீங்களும் சுவையுங்கள் (1954) பக்கம் 6.

உ.8.

கனல் முன் இட்ட மெழுகுப் பாவைபோல மனம் உருகிப் பசந்து காட்டினாள்.”

(இறையனார் கள. 2)

## இளம்பூரணர்

இளம்பூரணர் உரைநடை, எளிய சொல்லும் இனிய ஓசையும் தெளிந்த கருத்தும் அமையப்பெற்று ஆழமான ஆறுபோல அமைதியாகச் செல்லுகின்றது. இவரது உரை நடைக்குக் கீழுள்ள பகுதியை உதாரணமாகக் காட்டலாம்:

“இவ் அறுவகைப் பருவமும் அறுவகைப் பொழுதும் இவ் ஐந்திணைக்கு உரியவாறு என்னை எனின், சிறப்புநோக்கி என்க. என்னை சிறந்தவாறு எனின்—முல்லையாகிய நிலனும் வேனிற்காலத்து வெப்பம் உழந்து மரனும் புதலும் கொடியும் கவினழிந்து கிடந்தன; புயல்கள் முழங்கக் கவின் பெறும் ஆதலின், அதற்கு அது சிறந்ததாம். மாலைப்பொழுது இந்நிலத்திற்கு இன்றியமையாத முல்லை மலரும்காலம் ஆதலானும், அந் நிலத்துக் கருப்பொருளாகிய ஆனிரை வரும்காலம் ஆதலானும், ஆண்டுத் தனி இருப்பார்க்கு இவை கண்டுழி வருத்தம் மிகுதலின் அதுவும் சிறந்தது ஆயிற்று.”

## சேனாவரையர்

செறிவும் திட்பமும் வாய்ந்த சேனாவரையர் நடை, உற்று நோக்கிப் பலமுறை பயின்று தெளியும் வகையில் உள்ளது.

**ஒல்லேம் குவளைப் புலாஅல் மகன்மார்பிற்**
**புல்லெருக்கங் கண்ணி நறிது**

என்புழி, குவளை புலால் நாறுதற்கும் எருக்கங்கண்ணி நறிதாதற்கும் காரணம் கூறாமையின் வழுவாம் பிற எனின், புதல்வற் பயந்த பூங்குழல் மடந்தை பரத்தையிற் பிரிந்து வந்த கிழவனோடு புலந்து உரைக்கின்றாளாகலின் குவளை புலால் நாறுதற்கு அவன் தவற்றோடு கூடிய அவள் காதல் காரணம் என்பதூஉம், எருக்கங்கண்ணி நறிதாதற்கு மகிழ்நன் செய்த துனிகூர் வெப்பம் முகிழ் நகை முகத்தால் தணிக்கும் புதல்வன் மேல் ஒருகாலைக்கு ஒருகால் பெருகும் அன்பு காரணம் என்பதூஉம் பெறப்படுதலின் வழுவாகாது என்பது.” (சொல்—55)

## பேராசிரியர்—1

பேராசிரியரது நடை இலக்கணமுடையது; தெளிவும் எளிமையும் வாய்ந்தது. செப்பமும் எளிமையும் உடைய உரை

நடைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இவரது உரை நடையைக் கூறலாம்.[1] இவரது உரைநடைக்கு உதாரணம் கீழே தரப்படுகின்றது:

"குடிமையொடு பிறப்பிடை வேற்றுமை என்னை எனின், பிறப்பு என்பது குடிப்பிறத்தல்; அதற்குத் தக்க ஒழுக்கம் குடிமை எனப்படும்; குடிப்பிறந்தாரது தன்மையைக் குடிமை என்றார் என்பது; அதனை ஊராண்மை எனவும் சொல்லுப. ஆண்மை புருடர்க்காம். அஃது ஆள்வினை எனப்படும். இது தலைமகட்கு ஒப்பது அன்றால் எனின், குடியாண்மை என்புழி ஆண்மை என்பது இருபாற்கும் ஒக்கும் ஆதலின் அமையும் என்பது. யாண்டு என்பது ஒத்தவாறு என்னை எனின், பன்னீர் யாண்டும் பதினாறியாண்டுமே பெண்மையும் ஆண்மையும் பிறக்கும் பருவம் என்பது, ஒத்தினுள் ஒப்ப முடிந்தமையின் அதுவும் ஒப்பு எனவே படும். 'உருவு நிறுத்த காம வாயில்' என்பது, பெண்மைவடிவம், ஆண்மைவடிவம் பிறழ்ச்சியின்றி அமைந்தவழி அவற்றுமேல் நிகழும் இன்பத்திற்கு வாயிலாகிய அன்பு என்றவாறு." *(மெய்ப்-25)*

## பேராசிரியர்—2

திருக்கோவையாருக்கு உரைகண்ட பேராசிரியரின் உரைநடை சொல்லோவியம் உடையது; இனிய ஓசை உடையது; செறிவான கருத்தை எளிய முறையில் தருவது.

பின்வரும் பகுதி இவரது நடையை விளக்கும்:

"செவிலிக்குத் தோழி அறத்தொடு நிற்றல் என்பது, வெறி விலக்கி நிற்ப, நீ வெறி விலக்குதற்குக் காரணம் என்னோ என்று கேட்ட செவிலிக்கு நீ போய்ப் புனங்காக்கச் சொல்ல, யாங்கள் போய்த் தினைக்கிளி கடியா நின்றோம்; அவ்விடத்து ஒரு யானை வந்து நின் மகளை ஏதஞ் செய்யப் புக்கது; அது கண்டு அருள் உடையான் ஒருவன் ஓடிவந்து அணைத்துப் பிறிது ஒன்றும் சிந்தியாமல் யானையைக் கடிந்து அவளது உயிர்கொடுத்துப் போயினான்; அறியாப்பருவத்து நிகழ்ந்ததனை இன்று அறியும் பருவம் ஆதலான், 'உற்றார்க்கு உரியர் பொற்றொடி மகளிர்' என்பதனை உட்கொண்டு இவ்வாறு உள்மெலியா நின்றாள்; இனி அடுப்பது செய்வாயாக எனத் தோழி அறத்தொடு நில்லா நிற்றல்." *(திருக்கோவையார்—293)*

1. His (perasiriyar's) style is grammatical graphic and simple. This is the best specimen of elegant and simple prose. – V.V.S. Aiyar. Tamil – The Language and Literature (1950) Page 4.

## அடியார்க்கு நல்லார்

அடியார்க்கு நல்லார் உரைநடை சில இடங்களில் செய்யுள் போல இருக்கும்; சில இடங்களில் இலக்கியச் சுவை வெளிப்படும்; உணர்ச்சியும் உயிர்ப்பும் தோன்றும்.

கீழே உள்ள பகுதி இவரது உரைநடைக்கு நல்ல எடுத்துக்காட்டாகும்:

"குமரியொடு வட இமயத்து ஒரு மொழி வைத்து உலகாண்ட சேரலாதற்கு, திகழ் ஒளி ஞாயிற்று ஏழ்பரி நெடுந்தேர்ச் சோழன் தன் மகள் நற்சோணை ஈன்ற மக்கள் இருவருள், முன்னோன் தன்னைப் பின்னர் இயற்றிப் பின்னோன் தன்னையும் பெருநம்பியாகு என அன்னவர் தம்மொடு, தென்னர் செம்பியர் தன்னடி போற்ற தமனிய மண்டபத்துச் சிங்கம் சுமந்த பொங்கணைமீமிசை உவரித்திரையின் கவரி இரட்ட வேந்தன் இருந்துழிச் சார்ந்த நிமித்திகன், அடி முதல் முடிவரை நெடிது நோக்கி இன்தோள் கழியப் பொன்திகழ் உலகம் சேர்த்தி நீ எனச் சேரலற்கு உரைத்து, அவன் மைந்தரை நோக்கி, 'நந்தாச் செங்கோல் அந்தமில் இன்பத்து அரசாள் உரிமை இளையோற்கு உண்டு' என, உளைவனன் நனி வெகுண்டு அழுக்காற்று ஒழுக்கத்து இழுக்கும் நெஞ்சினன் கண் எரி தவழ அண்ணலை நோக்கும்; கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தேர்த்தானைச் செங்குட்டுவன் தன் செல்லல் நீங்கப் பகல் செல்வாயிற்படியோர் தம்முன் அகலிடப்பாரம் அகல நீக்கிச் சிந்தை செல்லாச் சேண் நெடுந்தூரத்து அந்த மில் இன்பத்து அரைசாள் வேந்தன் ஆயினான் என்பது."

## பரிமேலழகர்

பரிமேலழகர் உரை நடையின் சிறப்பை வ.வே.சு. ஐயர் பின்வருமாறு புகழ்கின்றார்.* "பரிமேழலகரின் உரை நடை (நச்சினார்க்கினியர்க்கு மாறாக) மிகுந்த அழுத்தமும் சில இடங் களில் எளிதில் புரிந்துகொள்ள முடியாத அளவுக்கு சுருக்கமும் வாய்ந்தது. குறிப்பிடத்தக்கதோர் சிறப்பு இவரது உரைநடையில் உண்டு. உயர்ந்த கவிஞர்களைப்போல இவரது நடையில் உள்ள செறிவே அச் சிறப்பாகும். இவர் அமைத்த வாக்கியத்திலிருந்து

* His (Parimelalakar's) prose, unlike that of Naccinarkiniyar is very tense and in some places too brief to be easily inteligible. There is one thing very remarkable about his style in his commentary. Like the style of the great poet whose work he had taken to annotate, his style also is so much compressed in from that one word in a sentence cannot be removed or substituted without at the same time damaging compactness of style. Not a single word he uses unnecessarily. V.V.S. Aiyar. Tamil – The Language and Literature (1950) Page–42.

ஒரு சொல்லைக்கூட எடுத்துவிட்டு அதற்கு இணையாக வேறு ஒரு சொல்லை அமைக்க முடியாது. தேவையற்ற சொல் ஒன்றினையும் இவர் ஆளுவதில்லை."

பரிமேலழகர் உரைக்கு உதாரணம் கீழே தரப்படுகின்றது:

"இந்திரன் முதலிய இறையவர் பதங்களும், அந்தமில் இன்பத்து அழிவில் வீடும், நெறியறிந்து எய்துதற்கு உரிய மாந்தர்க்கு உறுதியென உயர்ந்தோரான் எடுக்கப்பட்ட பொருள் நான்கு. அவை அறம் பொருள் இன்பம் வீடு என்பன. அவற்றுள் வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்து ஆகலின், துறவறமாகிய காரணவகையாற் கூறப்படுவது அல்லது இலக்கண வகையாற் கூறப்படாமையின் நூல்களாற் கூறப்படுவன ஏனை மூன்றும் ஆம்.

"அவற்றுள், அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும் ஆம். அஃது ஒழுக்கம் வழக்கு தண்டம் என மூவகைப்படும்." (உரைப் பாயிரம்)

## நச்சினார்க்கினியர்

சேனாவரையர் உரையில் காணப்படும் தருக்க முறையாக விளக்கும் பண்பையோ, பரிமேலழகர் உரையில் உள்ள செறிவையோ, நாம் நச்சினார்க்கினியர் உரையில் காண இயலவில்லை. கல்வி காரணமாக இவருக்கு ஏற்பட்டிருக்கும் பெருமிதத்தை இவரது உரைநடையில் காணலாம். இவரது உரைநடை எழிலும் எடுப்பும் உடையது; கலைப் பொலிவும் கவிதைச் சுவையும் வாய்ந்தது; கற்போர்க்குப் பேரின்பம் ஊட்ட வல்லது. தமிழ் உரைநடையை வளம் பெறச் செய்தவர் இவர் என்னலாம்; இவரை இலக்கண உரையாசிரியர் என்று கூறுவதை விட, கவிநயம் கண்டு நுண்ணிதாக ஆய்ந்து கூறும் சிறந்த இலக்கிய உன்ரயாசிரியர் என்பது பொருந்தும்.

இவரது உரைநடையை, இ. மு. சுப்பிரமணிய பிள்ளை பின் வருமாறு புகழ்கின்றார்:

"செய்யுள் நடை வாய்ந்த நக்கீரர் உரை நடையும், விளக்கம் குறைந்த இளம்பூரணமும், கட்டுரைச் சுவை செறிந்த சேனாவரையரது இலக்கண நடையும், பொருட் செறிவுடைய பேராசிரியர் உரைநடையும் இவரது உரை நடைக்குப்பின் விளங்குவன அல்ல. ஆயின், நச்சினார்க்கினியர் உரை நடையில் தெளிவும் சந்தர்ப்பத்திற்கு ஏற்ற மேற்கோளும் பொருந்தி இருக்கின்றன."*

* தமிழ் இலக்கியத் திரட்டு (1939) பக். 37.

வ.வே.சு. ஐயர் நச்சினார்க்கினியர் நடையைப் பின்வருமாறு பாராட்டுகின்றார்:

"இவரது நடை எளிமையும் எழிலும் உடையது. சில இடங்களில் கவிதையாய்ப் பொலியும்; தங்குதடையற்ற உயிரோட்டம் நிறைந்திருக்கும். நச்சினார்க்கினியரிடமிருந்தே சிறந்த உரைநடை தொடங்கிற்று என்று நன்றாகக் கூறலாம்."[1]

நச்சினார்க்கினியர் நடையின் இயல்பை உணரப் பின் உள்ள பகுதி துணை புரியும்:

"பரத்தையிற் பிரிந்த தலைவன் ஆடலும் பாடலும் கண்டும் கேட்டும் பொழுது கழிப்பி, பிறர்க்குப் புலனாகாமல் மீளும் காலம் அது (வைகறை) ஆதலானும், தலைவிக்கும் கங்குல் யாமம் கழியாது நெஞ்சழிந்து ஆற்றாமை மிகுதலான் ஊடல் உணர்தற்கு எளிது ஆவதோர் உபகாரம் உடைத்து ஆதலானும், வைகறை கூறினார். இனித் தலைவி விடியற்காலம் சிறு வரைத்து ஆதலின் இதனாற் பெரும்பயன் இன்றெனமுனிந்து வாயிலடைத்து ஊடல் நீட்டிப்பவே அவ்வைகறைவழித் தோன்றிய விடியற்கண்ணும் அவன் மெய்வேறுபாடு விளங்கக் கண்டு வாயில் புகுத்தல் பயத்தலின் விடியல் கூறினார்." *(அகத்—8)*

## மணிப்பிரவாள உரை

மணிப்பிரவாள நடையில் கற்பனை வளனும் உணர்ச்சியும் உடைய சொல்லோவியங்களைக் காணலாம். குருபரம்பரா ப்ரபாவம் என்னும் நூலில் ஆண்டாளின் வரலாறு மிகச் சுவையாகக் கூறப்பட்டுள்ளது. பெரியாழ்வாரும் ஆண்டாளும் தம் ஊரிலிருந்து திருவரங்கத்திற்கு வந்து சேர்ந்ததையும், ஆண்டாள் அரங்கநாதர் திருவடியை அடைந்ததையும் இலக்கியச் சுவை சொட்டச் சொட்டப் பின் வருமாறு கூறுகின்றது:

"ஆழ்வாரும் திருமகளாரும் அதிப்ரீதியுடன் அங்கிருந்தும் புறப்பட்டு, திருவரங்கன் திருப்பதியுள் எழுந்தருளினவாறே, 'சூடிக் கொடுத்தாள் வந்தாள்! சுரும்பார் குழற்கோதை வந்தாள்! ஆண்டாள் வந்தாள்! ஆழ்வார் திருமகளார் வந்தார்! திருப்பாவை பாடிய செல்வி வந்தாள்! தென்னரங்கம் தொழும் தேவி வந்தாள்!' என்று பல சின்னங்கள் பரிமாற எழுந்தருள்வித்துக் கொண்டு, அழகிய மணவாளன் திருமண்டபத்துள் சென்று நின்று திருப்பல்லக்கின் பட்டுத் திரையை வாங்க, அப்போதே நாச்சியார்

1. "His style is simple and fine; The occasional poetic flow, the balance of style, and the unembarrassed flow of diction are outstanding features of his writings and it may well be said that good prose writing commences with Naccina:kiniyar." – V.V.S. Aiyar. Tamil language and literature – Page 41.

அகிலம் காணும் படி, உதறி உடுத்த பட்டுச் சேலையும் பருத்த செங்கழுநீர் மாலையும் திருநுதற் கஸ்தூரி நாமமும் கயல்போல் மிளிர்ந்து காதளவோடிய கடைக்கண் விழியும் ப்ரகாசிக்க, சிலம் பார்ப்ப, சீரார் வளை ஒலிப்ப, அன்னமென்னடை கொண்டு, அணி அரங்கநாதன் திருமுன்பே சென்று கண்களாரக் கண்டு களித்து, கேசவ நம்பியைக் கால் பிடிப்பாள் என்னும் பேர்பெற்று உள்ளே புகுந்து, நாகபர்யங்கத்தை மிதித்தேறி, திருவரங்கச் செல்வனைச் சேர்ந்து, அவன் திருவடிகளிலே அந்தர்ப்வித் தருளினார்."

## மயிலைநாதர்

மயிலைநாதரின் உரைநடை, பரந்த இலக்கியப் புலமையில் மலர்ந்துள்ளது. இலக்கியமணம் அதில் கமழும்; இலக்கண நுட்பம் ஒளிவிடும்; தூய்மை நிலவும்.

நன்னூலின் சிறப்புப் பாயிரத்தில் வரும்,

**கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்**
**திருந்திய செங்கோல் சீய கங்கன்**

என்ற இரண்டு அடிகளுக்கு மயிலைநாதர் பின்வருமாறு உரை எழுதியுள்ளார்:

"கூடாதாரைக் கொன்று கட்டின குரை கழலினையும், பற்றலர் பகரும் பழி மாசு அறுத்து, மற்று உலகு அளிக்கும் மணிமுத்தக் குடையினையும் விளைபயன் கருதாது மேதினிய வர்க்கு மழைபோல் உதவும் மாமலர்க் கையினையும், குற்றம் அற்று உலகில் கொடுங்கலி துரந்து செப்பம் வளர்க்கும் செய்ய கோலினையும் உடையவனான தங்கலர் குலமாம் வெங் கயமனுக்கும் சிங்கமாகிய கங்கன் என்பான்.

## சங்கர நமசிவாயர்

சங்கர நமசிவாயரின் உரை நடை சிவஞான முனிவரால் போற்றி மேற்கொள்ளப்பட்ட பெருமையுடையது. அதில் தமிழ் மணத்துடன் சைவமணமும் இணைந்து கமழும்; அன்பும் அறனும் எங்கும் வெளிப்படும்.

பின் வரும் பகுதி இவர் நடையின் இயல்பை விளக்கும்:

**இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்**
**புணரின் வெகுளாமை நன்று**

**(குறள்–308)**

என்புழிப் பிற உயிர்க்கு இன்னா செயின் அவை பிழையாது தமக்கு வருதல் கருதித் தம்மாட்டு அன்பும், பிற உயிர்கள் மாட்டு

அருளும், இன்னா செய்தலான் மேன்மேல் வளரும் பிறப்பு இறப்பின் அச்சமும் நம்மால் இன்னா செய்யப்பட்டாரை நாம் அடைந்து இரத்தல் கூடினும் கூடும்; அதலால் யார் மாட்டும் இன்னா செய்யக் கடவேம் அல்லம் என்னும் வருங்கால உணர்ச்சியும் இலராய் ஒருவர், தன்னால் ஆற்றக்கூடாத இன்னாதனவற்றைத் தன்கண் செய்தார் ஆயினும் அவர் தமக்கு வேண்டுவதொரு குறை முடித்தல் கருதி நாணாது தன்னை அடைந்தாராயின் அவர் செய்த இன்னாமை கருதி அவரை வெகுளாது அவற்றை மறந்து அவர் வேண்டும் குறைமுடித்து முன்செய்த இன்னாமையால் அவர் கூசி ஒழுகுதல் தவிர்தற்குக் காரணமாகிய மெய்ப்பாடு முதலியன தன்கண் குறிப்பின்றி நிகழ அவர்க்கு இனியனாகி இருத்தல் தன் சால்புக்கு நன்று என நால்வகைச் சொற்களுள் வேண்டுவன எல்லாம் தந்து அகலம் கூற வேண்டி நிற்பன இசை எச்சமாம் என்க." *(நன்: 360)*

## சிவஞான முனிவர்

உயர்ந்த பொருளைப் பற்றி, தெளிவாக விளங்கக் கூடிய வகையில், தனித்தமிழில் விளக்கமாக ஆராய்ந்து கூறும் உரை நடைக்கு வித்திட்டு வளர்த்துப் பரப்பியவர் சிவஞான முனிவர். இவருடைய நடை எப்பொருள் பற்றியும் தெளிவாகச் சிந்திக்கவும், வன்மையான கண்டனம் எழுதவும் மரபு வழுவாமல் மொழி பெயர்க்கவும் ஏற்றதாய் உள்ளது. இவர் நடை பின் வருமாறு:

"அதிகாரம்—அதிகரித்தல். அஃது இருவகைப்படும். அவற்றுள் ஒன்று, வேந்தன் இருந்துழி இருந்து தன் நிலம் முழுவதும் தன் ஆணையின் நடப்பச் செய்வதுபோல ஒரு சொல் நின்றுழி நின்று பல சூத்திரங்களும் பல ஓத்துக்களும் தன் பொருளே நுதலிவரச் செய்வது. ஒன்று சென்று நடாத்தும் தண்டத் தலைவர் போல ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்களோடும் சென்று இயைந்து தன் பொருளைப் பயப்பிப்பது. இவற்றிற்கு முறையே வட நூலார் யதோத்தேச பக்கம் எனவும், காரிய காலபக்கம் எனவும் கூறுப. இது சேனாவரையர் உரையானும் உணர்க."

## ஆறுமுக நாவலர்

ஆறுமுக நாவலர் பழைய நூல்களுக்கு உரை இயற்றி உரையாசிரியர் என்ற பெயரைப் பெற்றதோடு, தனியாக உரை நடை நூல்கள் இயற்றிப் புகழ் பெற்றார். பழங்கால உரைநடையை மாற்றியமைத்துப் புதிய உரை நடைக்குக் கால்கோள் செய்தார். இவர் உரைநடையில் செய்த மாறுதல்களைப் பின்வருமாறு வரிசைப்படுத்திக் கூறலாம்:

1. கடினமான சந்திகளை விலக்கிப் பிரித்து எழுதி உரை நடையை எளிமையாக்கினார்.

2. எல்லோருக்கும் விளங்கவேண்டும் என்பதற்காகப் பேச்சு மொழியை, (மணிப்பிரவாள உரையாசிரியரைப் போல்) பயன்படுத்தாமல் திருத்தமான சொற்களையே ஆண்டார்.

3. ஆங்கிலேயர் உரைநடைக்குப் பயன்படுத்திய நிறுத்தக் குறிகளை இடமும் பொருளும் அறிந்து பயன் படுத்தினார்.

4. பெயரெச்சம் வினையெச்சங்களை அடுக்கிக் கொண்டே போய் மிக நீளமான வாக்கியங்கள் எழுதாமல் சிறு சிறு வாக்கியங் களே எழுதினார்.

5. பொருள் இயைபு கருதிப் பத்தி பிரித்து எழுதினார்.

இவரது உரை நடையின் சிறப்பியல்புகளைப் பன்மொழிப் புலவர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் பின் வருமாறு கூறுகின்றார்:

"சிறு சிறு வாக்கியங்களின் திட்பம், அவை கோவையாகப் பத்தி பத்தியாக ஒற்றுமை நயம்பட்டு விளங்கும் நுட்பம், கட்டுரை முழுதும் ஒரே பொருளாய் அமையும் இனிமை, கருத்தின் தெளிவு, சொற்களின் எளிமை, அழகு, ஆரவாரம் இல்லாது பிறர் அறியாமல் உள்ளுக்குள்ளேயே அமைந்து விளங்கும் இலக்கண நயம்" — இவை எல்லாம் இவர் உரைநடையில் உண்டு.

"இவரது உரை நடையில், உரைநடை ஓவியங்களைக் காண முடியாது. சிவஞான யோகிகளது சினம் தோன்றினாலும் அதுவும் அடங்கி ஒடுங்கியே மெல்ல ஊர்ந்து வருகின்றது. இவருடைய நடையில், உணர்ச்சி என்பதற்கே ஒரு சிறிதும் இடமில்லாமல் இவரது உரை நடை ஓடுகிறது. முதலிலிருந்து முற்ற முடியும் வரை ஒரே நடைதான்: ஒரு வேற்றுமையும் இல்லை."[1]

நாவலரின் நடைக்குக் கீழுள்ள பகுதி சிறந்த எடுதததுக் காட்டாய் உள்ளது:

"உலகை வென்ற உத்தமச் சிறுத் தொண்டர், திருத் தொண்டரை ஊட்டவேண்டி உண்ணப்புகலும் வைரவர் அவரைத் தடுத்து, "ஆறு மாதத்திற்கு ஒரு முறை உண்ணும் யாம் உண்ணும் அளவும் பொறுக்காது, தினந்தோறும் அன்னம் உண்ணும் நீவிர் எமக்குமுன் உண்ணப்புகுதல் என்னை? நம்மோடு அமுது செய்ய உமக்குப் புத்திரன் இருப்பின் அழையும்" என்றார். அதற்கு நாயனார் பெருமான், "என் புதல்வன் இங்கு உதவான்"

1. நீங்களும் சுவையுங்கள் – 202.

என்று சொன்னார். வைரவர், "அவன் வந்தாலன்றி நாம் உண்ணேம். தேடி அழைத்து வாரும்" என்றார். அது கேட்டுச் சிறுத்தொண்டரும் மனைவியாரும் வருத்த முற்று வெளியே போய், "மைந்தா வாராய்; செய்ய மணியே வாராய்; சீராளா வாராய்; வைரவர் உன்னோடு அமுது செய்ய அழைக்கின்றார்; வாராய்; வாராய்" என்று ஓலமிட்டு அழைத்தார்கள். அதுகாலை அம்பலத்தில் ஆனந்த நடம்புரியும் அருட்பிரகாசரது திருவருளால் சீராள தேவர் பள்ளியினின்றும் ஓடிவருபவரைப் போன்று வந்தார்."

## உரைநடை வகை

எல்லாம் செய்யுள் வடிவிலேயே இருந்த இலக்கியவகைகள் உரை நடைக்கு மாறவும். மாறிப் பலவழிகளில் வளரவும் உரை யாசிரியர்கள் பேருதவி புரிந்துள்ளனர். பழைய உரையாசிரியர்கள் போற்றி வளர்த்த உரைநடையைப் பற்றி விரிவாக ஆராய்ந்து பெருநூல் ஒன்று எழுதலாம். அந்தத் துறை, அவ்வளவு பரந்தும் ஆழ்ந்தும் அமைந்துள்ளது.

உரையாசிரியர்கள் படைத்துள்ள வாக்கியத்தின் செப்பமும், நடை நலமும் கற்போரைப் பெரிதும் கவர்கின்றன. அவற்றின் இயல்புகளை—பலவேறு வகையான வாக்கிய அமைப்புகளைக் காண்போம்:

1. முன் வாக்கியத்தின் முடிவில் உள்ள சொல்லே, அடுத்த வாக்கியத்தின் தொடக்கத்தில் அமைந்த அந்தாதி நடை ஒரு வகை. இந்த வகை இறையனார் களவியல் உரையில் மிகுதியாக உள்ளது.

2. ஒரு பத்தி முழுதும் ஒரே வாக்கியமாய் நீண்ட தொடராய்ச் சங்கிலிபோல் அமைதல் மற்றொரு வகை. அடியார்க்கு நல்லார் உரையிலும் யாப்பருங்கல விருத்தி யுரையிலும் இத்தகைய வகை உண்டு.

3. எதுகை மோனைகள் அமைந்து, சீரமைப்பில் சிறந்து, ஓசை நயம் பெற்று ஆசிரியப் பாவாய்—வஞ்சிப் பாவாய் அமையத் தக்க, பா நடை உண்டு. களவியல் உரையும் காளிங்கர் (திருக்குறள்) உரையும் பல இடங்களில் பா நடை உடையவை.

4. கண்ணுக் கினிய காட்சி, சிந்தைக் கினிய கருத்து, எண்ணி மகிழத்தக்க நிகழ்ச்சி ஆகியவற்றைக்கொண்ட சொல்லோவி யங்கள் உடைய நடை உண்டு. பேராசிரியர் உரையும் களவிய லுரையும் இத்தகைய நடையில் அமைந்தவை.

5. அரசு ஆணை போன்ற—சட்ட மொழிகளால் அமைந்த—திட்ப நுட்பம் எளிமை தெளிவு ஆகியவற்றைக் கொண்ட—தருக்க நெறி தழுவிய செறிவு நடை உண்டு. பரிமேலழகர் சேனாவரையர் சிவஞான முனிவர் ஆகியோர் உரைகள் இத்தகைய நடை நலம் வாய்ந்தவை.

6. சின்னஞ்சிறு சொற்களும் அங்கங்கே முடிந்துவிடும் துண்டு வாக்கியமும் கொண்ட நடை உண்டு. இதனை நச்சினார்க்கினியர் உரையில் காணலாம்.

7. எளிமையை உயிர்ப்பண்பாகக் கொண்ட தெளிவான பொருள் புலப்பாட்டை இயல்பாக உடைய ஆரவாரம் சிறிது மற்ற எளிய நடை உண்டு. இதனை இளம்பூரணர் மணக்குடவர் மயிலைநாதர் ஆகியோரிடம் காணலாம்.

8. வட சொல்லும் தமிழ்ச் சொல்லும் கலந்த மணிப்பிரவாள நடை உண்டு. நாலாயிர திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்கள் இந்த நடையில் அமைந்தவை.

**வாழையடி வாழை**

இந்த வகைகள் அனைத்தையும், உரை நடை சிறந்து விலங்குகின்ற இருபதாம் நூற்றாண்டு உரை நடை நூல்களில் காணலாம். இன்றைய உரை நடைக்குப் பழந்தமிழ் உரைகளே ஆணிவேர்; அடிப்படை. நமக்கு முன் வாழ்ந்த உரைநடை எழுத்தாளர்கள், உரையாசிரியர்களை வழி காட்டிகளாய்க் கொண்டு அவர்கள் நடையைப் பின் பற்றியுள்ளனர்.

இறையனார் களவியலுரையைத் திரு.வி.க., ரா.பி. சேது பிள்ளை, டாக்டர் மு.வ. ஆகியோர் பின்பற்றியுள்ளனர். இளம்பூரணர் நடையை டாக்டர் உ.வே. சாமிநாத ஐயரும் ஆறுமுக நாவலரும் போற்றியுள்ளனர். சேனாவரையர் நடையை மறைமலையடிகள் பரிதிமாற் கலைஞர் சோமசுந்தர பாரதியார் ஆகியோர் தழுவியுள்ளனர். பேராசிரியர் நடை விநோத ரச மஞ்சரி இயற்றிய வீராசாமிச் செட்டியார் விபுலாநந்தர் ஆகியோர் நடையில் எதிரொலிக்கின்றது. பரிமேலழகர் நடை, பண்டித மணியிடமும் ந.மு. வேங்கடசாமி நாட்டாரிடமும் வெளிப்படுகின்றது. மணிப்பிரவாள நடை செல்வக் கேசவராய முதலியார் கல்கி போன்றவர்களிடம் அமைந்துள்ளது.

இவ்வாறு, நம் காலத்திலும் உரையாசிரியர்கள் செல்வாக்குடன் ஆட்சி செலுத்தி வருகின்றனர்; அவர்கள் நடை, ஆணையிட்டுத் தமிழை இயக்கி வருகின்றது.

# 6. உரையும் திறனாய்வும்

முற்காலத்தில் புதிய நூல் இயற்றிய ஆசிரியர் தமிழறிந்த மன்னன் தலைமை தாங்கிய புலவர் பேரவையில் தம் நூலைப் படித்துக் காட்டிப் பொருளை விளக்கிக் கூறுவார். அப்போது தேவையான இடங்களில் அவைப் புலவர்கள் வினா எழுப்புவர்; அதற்கு நூலாசிரியர் விடை கூறுவார். திருத்த வேண்டிய—மாற்ற வேண்டிய பகுதி இருப்பின் அவையோர் சுட்டிக்காட்டிக் குற்றங் குறைகளை நீக்குவர். நூல் திருத்தம் பெற்றபின் அவையோர் அந்த நூலை ஏற்பர்; அதன் அருமை பெருமைகளை விளக்கியும், அதனை இயற்றியவர் புலமைத் திறனைப் போற்றியும் சாற்றுக் கவிகள் வழங்குவர். சாற்றுக் கவிகள் பெற்ற நூலே நல்ல நூல் என்று பலராலும் கொண்டாடப்படும்; நாடெங்கும் பரவும்; பள்ளிதோறும் பயிலப்படும்; மாணவர் உலகம் கற்றுப் பயனடையும்.

நூல் அரங்கேற்றம் பற்றி வி. நா. மருதாசலக் கவுண்டர் பின்வருமாறு விளக்கிக் கூறியுள்ளார்:

"முற்காலத்தில் நூல் அரங்கேற்றம் என்பது, இக்காலத்தில் நூல் மதிப்பீடு எனப் பெரும்பாலும் மாறி வருகின்றது. முற்காலத்தில் செய்யுள் நூல்கள் அரங்கேற்றப்படும் (மதிப்பீடு செய்யப்படும்) வழக்கம் இருந்து வந்தது. நல்லிசைப் புலவர்கள், அவைக்கு வரும் நூல்களை நுணுகி ஆராய்ந்து அவற்றின் பொருட் செவ்விகளைத் தம் அறிவென்னும் துலாக்கோலில் இட்டு மதிப்பிட்டனர். நூலின் அரங்கேற்றத்தால் நூல்களை நுணுகி ஆராயும் முறைமையும், சிறந்த பகுதிகள் இவை; சிறவாத பகுதிகள் இவை எனப் பகுத்துக் காட்டும் நெறியும், நூலின் முழுத் தகுதியும் காணும் நல்ல ஆராய்ச்சி நெறி முறையும் செவ்விதின் நாட்டப் பெற்றன. அரங்கேற்ற வழி வகைகளால் நூல்கள் நுணுகி ஆராயப் பட்டன; நல்லன விரும்பிக் கொள்ளப் பட்டன; அல்லன வெறுத்துத் தள்ளப்பட்டன"*

நூல் அரங்கேறும் அவையே திறனாய்வுக்களமாக அக்காலத்தில் விளங்கியது. நூல் அரங்கேற்றம் பற்றியும், அரங்கேறும்போது நடந்த நிகழ்ச்சிகள் பற்றியும் அபிதான சிந்தாமணி, விநோதரச மஞ்சரி, உ.வே. சாமிநாதய்யரின் வாழ்க்கை வரலாறு, அவரது மற்ற உரை நடை நூல்கள் ஆகியவை விளக்கமாகக் கூறுகின்றன. நூல் அரங்கேற்றத்தின்போது எழுந்த வினா விடைகள், சிறந்த திறனாய்வுகளாய் உள்ளன.

* புலமை நூல் (1952) பக்–207, 209, 211.

மூல நூல்களைப்போலவே உரையும் அரங்கேற்றப்பட்ட செய்தியை நச்சினார்க்கினியரின் சிந்தாமணி உரை பற்றிய வரலாறு வாயிலாக அறிய முடிகின்றது. முதன் முறை அவர் இயற்றிய உரையை ஜைன சமயப் புலவர்கள் ஏற்க மறுத்தனர் என்றும், பின்னர் அவர் ஜைன சமய நூல்களை ஆழ்ந்து பயின்று மறுமுறை எழுதிய உரையை ஜைன சமயச் சான்றோர் பாராட்டி ஏற்றனர் என்றும், இரு வேறு உரைகள் எழுதப்பட்டமைக்குச் சான்றுகள் உள்ளன என்றும் டாக்டர் உ.வே.சா. கூறுகின்றார்.

இலக்கிய இலக்கணங்களைக் கற்றவர்களும், அவை பற்றிய மதிப்புரைகளைக் காலந்தோறும் செய்யுள் வடிவில் எழுதிச் சென்றுள்ளனர்; நூலியற்றிய புலவர்களைப் போற்றிப் பாடியுள்ளனர். பத்துப் பாட்டிலும் சிலப்பதிகாரத்திலும் உள்ள வெண்பாக்கள், சுவைத்தவர் வியந்து பாடியவை. திருவள்ளுவ மாலை, திருக்குறள் இன்பத்தில் மூழ்கித் திளைத்தவர் இயற்றிய வெண்பாக்களின் தொகுப்பு. நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களில் உள்ள தனியன்கள் ஆழ்வார்களைப் புகழ்கின்றன. கம்பர் புலமைத் திறனைப் புகழும் தனிப் பாடல்கள் பல உள்ளன. குமரகுருபரர், தாயுமானவர், வள்ளலார் ஆகியோர் தம் நூல்களில் தமக்கு முன் இருந்த அருட் கவிஞர்களைப் பலவாறு புகழ்ந்துள்ள னர். நால்வர் நான்மணிமாலை, தமிழ்விடு தூது ஆகியவை புலவர்களையும் அவர்தம் பாநலனையும் பாரட்டும் இனிய நூல்கள். தனிப்பாடல்கள் இயற்றிய புலவர்களைப் போற்றும் சிறந்த பாடல்கள் உள்ளன. பாரதியாரைப் பற்றி, பாரதிதாசன் கவிமணி நாமக்கல்லார் போன்ற கவிஞர்கள் போற்றிப் பாடியுள்ளனர்.

இவையேயன்றி, தொல்காப்பியம் நன்னூல் ஆகிய இலக்கண நூல்களையும், உரையாசிரியர்களையும் போற்றியவர் உள்ளனர். மயிலைநாதரும் மற்ற உரையாசிரியர்களும் இப் பணியைச் செய்து சிறப்பு எய்தியுள்ளனர்.

இவை யாவும் "போற்றும் திறனாய்வு" (Appreciative criticism)வகையைச் சேர்ந்தவை.

முற்காலத்துத் திறனாய்வின் வகைகளையும் முறைகளையும் அறிவிக்கின்ற சொற்கள் பல உள்ளன. நூல்நயம், பா நயம், செய்யுள்நலன் பாட்டுத்திறன் போன்ற தொடர்கள் உள்ளன. சுவை ஆய்வு ஆராய்ச்சி நோக்கு போன்ற சொற்கள் உள்ளன. அழகு நடை ஆழம் திட்பநுட்பம் செறிவு போன்ற சொற்கள் உள்ளன. மரபு முறை வழக்குநெறி போன்ற சொற்கள் உள்ளன. இச் சொற்கள் ஆளப்பட்டுள்ள இடங்களை எல்லாம் தேடிக்

கண்டு தொகுக்க வேண்டும்; அவற்றிற்குப் பொருள்விளக்கம் காண வேண்டும்.

நூலில் அமைய வேண்டிய பத்து அழகுகளைத் தொகுத்துக் கூறியவர்கள் சிறந்த திறனாய்வாளர்களே.

**சுருங்கச் சொல்லல்**
**விளங்க வைத்தல்**
**நவின்றோர்க்கு இனிமை**
**நன்மொழி புணர்த்தல்**
**ஓசை யுடைமை**
**ஆழம் உடைத்தாதல்**
**முறையின் வைப்பே**
**உலக மலையாமை**
**விழுமியது பயத்தல்**
**விளங்கு உதாரணத்தது ஆகுதல்**

என்று அவற்றை நன்னூல் அடுக்கிக் கூறுகின்றது. நூலில் இடம் பெறக் கூடாத பத்துக் குற்றங்கள் பின்வருமாறு கூறப்பட்டுள்ளன:

**குன்றக் கூறல்**
**மிகைபடக் கூறல்**
**கூறியது கூறல்**
**மாறுகொளக் கூறல்**
**வழூச்சொற் புணர்த்தல்**
**மயங்க வைத்தல்**
**வெற்றெனத் தொடுத்தல்**
**மற்றொன்று விரித்தல்**
**சென்றுதேய்ந்து இறுதல்**
**நின்று பயனின்மை.**

இவை யாவும் திறனாய்வு உலகில் பயன்படவேண்டிய அருமையான கலைச் சொற்கள்.

இவையேயன்றி திறனாய்வுடன் தொடர்புடைய பகுதிகள் உள்ளன. 'பாட்டு ஆராய்ந்தான்' என்ற தொடரை உதாரணம் காட்டுகின்றார் இளம்பூரணர் (எழுத்-195). திருக்குறளுக்கு உரை கண்ட பதின்மரைக் குறிப்பிடுகின்ற வெண்பா, அவர்கள் 'எல்லைஉரை' கண்டதாகக் கூறுகின்றது. மிகாமலும் குறையாமலும் அளவோடு அமைந்த உரை என்ற கருத்தை 'எல்லை உரை' என்ற தொடர் கொண்டுள்ளது.

**ஆயும் தொறும் தொறும் இன்பம் தரும் தமிழ்**

என்ற சான்றோர் வாக்கு எண்ணிப் பார்க்கத் தகுந்ததாகும்.

முற்காலத்தவர் ஆய்வுமுறை இருவகையாய் அமைந்துள்ளன. ஒன்று: புற ஆய்வு. மற்றொன்று: அக ஆய்வு. இவ்விரு பிரிவுகளிலும் பல உட்பகுதிகள் உள்ளன:

| | | |
|---|---|---|
| ஆய்வு | புற ஆய்வு | மூலம்<br>வகை<br>அமைப்பு<br>மரபு |
| | அக ஆய்வு | பொருள்<br>சுவை<br>அழகு<br>நயம் |
| | | குறிப்பு<br>உள்ளுறை<br>இறைச்சி<br>வேறுபொருள் |

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் வளர்த்த வள்ளலாய் — கவிபாடும் வித்தகராய் விளங்கிய பொன்னுசாமித் தேவரின் (1837-1870) கவித்திறனை, மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை வியந்து பின்வருமாறு பாடியுள்ளார்:

**சொன்னயமும் பொருள்நயமும் அணிநயமும்**
**கற்பனையாச் சொல்லா நின்ற**
**நன்னயமும் தொடைநயமும் வனப்புநய**
**மும்பிறிது நாட்டா நிற்கும்**
**எந்நயமும் சிற்சிலவே பிறர்க்மையும்;**
**நினக்கமைந்த எல்லாம் என்னில்,**
**பன்னயமும் உணர்பொன்னுச் சாமிமகி**
**பா ! நினது பாட்டுளற் றாமே !**

எத்தனை வகையில் நயம் நோக்கப்பட்டது என்பதை இந்தப் பாடல் அறிவிக்கின்றது.

## உரை திறனாய்வே

புலமை நூல் என்னும் சிறந்த ஆய்வு நூலை இயற்றியுள்ள வி.நா. மருதாசலக் கவுண்டர், பண்டைய உரையாசிரியர்களைத் திறனாய்வாளர்கள் என்றும், உரைகள் யாவும் திறனாய்வு நூல்கள் என்றும் விளக்கியுள்ளார்:

"உயர்தர நூல்களெல்லாம், அறிவென்னும் செம்பொன்னால் ஆக்கப்பட்டு இயல்பான உரையாணியால் ஒளி வீசப்படுவன. நூலின் மாற்றினைக் காண்பதற்கு நல்லாசிரியர்கள்

உரைகல் வேண்டினர். அவ் வுரைகல்லே தமிழில் மதிப்பீடு அல்லது மதிப்புரை எனப்படுகின்றது."[1]

"உரையாசிரியர்கள் மதிப்பீட்டு முறையில் (திறனாய்வில்) மிக மேம்பாடுற்றனர். அன்னார், பயில்வார்க்குத் தத்தம் கருத்துக்களை அறிவியலாதவழி காட்சியளித்தும், பலவேறு கருத்துக்களில் துணிவான கருத்துக்களைக் கூர்ந்தறியும் நெறிமுறைகளைச் சுட்டிக் காட்டியும் மதிப்பீட்டுக் கோட் பாடுகளை (Principles of criticism) உலகறிந்து வியக்கச் செய்தனர்."[2]

தமிழ் இலக்கணக் கொள்கைகளைத் தமிழ் இலக்கியத் திலிருந்து உருவாக்குவதுபோல், தமிழுக்குத் தேவையான திறனாய்வு நெறிகளைத் தமிழிலிருந்தே எடுத்து உருவாக்க வேண்டும்.[3] இக் கருத்துடைய எவரும் பழைய உரைகளில் திறனாய்வுக் கூறுகளைக் கண்டு போற்றுவர்; உரையா சிரியர்களைத் திறனாய்வாளர்கள் என்று மதிப்பர்.

உரையாசிரியர்கள், கவிதையைச் சுவைக்கும் முறை, தாம் சுவைத்த முறை, சுவைத்தபோது தமக்கு ஏற்பட்ட இலக்கிய அனுபவம் ஆகியவற்றைத் தம் உரைகளில் கூறியுள்ளனர். இலக்கிய ஆராய்ச்சியில் ஈடுபட்ட புலவர்கள் தம் ஆராய்ச்சி முடிவுகளை, உரைகளின் வாயிலாக வெளிப்படுத்தினர். தம் ஆராய்ச்சிக்கு, அகலவுரை விரிவுரை விருத்தி வியாக்கியானம் முதலிய பெயர்களைச் சூட்டினர். இன்றைய திறனாய்வுத் துறையில் எத்தனை பிரிவுகளும் வகைகளும் உள்ளனவோ அவற்றின் அடிப்படையை—உயிர்ப்பண்பை—மூலவடிவத்தைச் சுருக்கமாக உரைகளில் காணலாம்.

உரையாசிரியர்கள், கற்போரை மேன்மேலும் ஆராயத் தூண்டுகின்றனர்; வினாக்களைத் தாமே எழுப்பிக் கொண்டு விடை கூறுகின்றனர்; ஐயந்தோன்ற வேண்டிய இடங்களைச் சுட்டிக் காட்டுகின்றனர்; ஐயங்களைப் போக்கி அறிவை வளர்க்கின்றனர்.

உண்மையான திறனாய்வாளர், விழிப்பு உணர்ச்சியும் நெகிழ்ந்து கொடுக்கும் இயல்பும் உள்ளவராய்—ஊடுருவிக்

1, 2. புலமை நூல் (1752) பக் – 208, 214.

3. இலக்கியம் இன்றி இலக்கணம் இன்றே;
எள்ளின் றாகில் எண்ணெயும் இன்றே;
எள்ளினின்று எண்ணெய் எடுப்பது போல
இலக்கியத்தி னின்று எடுபடும் இலக்கணம். — அகத்தியர்

காணும் நுண்நோக்கு உடையவராய்—எல்லா உள்ளுணர்வு களையும் விரைவில் அறியும் திறன் வாய்ந்தவராய்—மெய்ப்பொருளை உறிஞ்சிக் கொள்வதில் வல்லவராய் விளங்குதல் வேண்டும் என்பர்.* உரையாசிரியர்கள் இத்தகைய திறன்களை உடையவராய் விளங்குகின்றனர்.

டாக்டர் மு. வரதராசனார், பண்டைய உரைகளையும் திறனாய்வையும் தொடர்புபடுத்திச் சிறந்த கருத்துக்களைக் கீழ் உள்ளவாறு கூறுகின்றார்:

"இலக்கியம் தோன்றியவுடனே ஆராய்ச்சியும் தோன்றியது. தமிழ் இலக்கிய ஆராய்ச்சி பழமையானது. இலக்கிய விருந்தை நம் முன்னோர்கள் வாரி வழங்கியுள்ளனர். தலைமுறை தலை முறையாக—வழிவழியாக அதை நாம் பார்த்து நுகர்ந்து வருகிறோம். எழுத்தினால் எழுதிவைக்கும் பழக்கும் பிற்காலத்தில் ஏற்பட்டதே என்றாலும், ஆராய்ச்சி தொன்று தொட்டு இருந்து வருகிறது. பாட்டை, ஆராய்ச்சியாளர் புகழ்ந்தனர். அதை உலகிற்கு விளம்பரப்படுத்த முயன்றனர். உரையாசிரியர்கள் ஒருபடி முன்னே போய் இது தங்கள் கருத்து, இது இதரர் கருத்து என்று காட்டினர்."[1]

## தகுதியும் பண்பும்

திறனாய்வாளர்களிடம் இயல்பாகவே இருக்க வேண்டிய பண்புகளைப் பற்றிக் குறிப்பிடும்போது, அவர்கள் விருப்பு வெறுப்பு அற்றவராய்-குற்றம் குணம் இரண்டையும் ஆராயும் பண்புடையவராய் இருத்தல் வேண்டும் என்பர். தமிழிலக்கிய உலகில் நடுநிலைமையின் சிறப்பைக் காலந்தோறும் எடுத் துரைக்கும் குரல்கள் ஒலித்துள்ளன:

**காமம் செப்பாது கண்டது மொழிமோ,**

**—குறுந். (2)**

**குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்**
**மிகைநாடி மிக்க கொளல்.**

**—குறள் (504)**

**வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம்**
**தீரக் காய்ந்துழி நல்லவும் தீயவாம்.**

**—சீவக சிந்தாமணி (888)**

* The true critic must be mentally alert and flexible, keen in insight, quick in response to all impressions, strong in grasp of essentials—Husden.

1. தமிழ்த் தாத்தா (1959) பக். 64.

2-9.

காய்தல் உவத்தல் அகற்றி ஒருபொருட்கண்
ஆய்தல் அறிவுடையார் கண்ணதே—காய்வதன்கண்
உற்ற குணம்தோன்றா தாகும் உவப்பதன்கண்
குற்றமும் தோன்றாக் கெடும்

—அறநெறிச்சாரம் – 23

## நடுநிலைமை

விருப்பு வெறுப்பு அற்ற நிலையில் இருந்து, ஆராய்ச்சியில் ஈடுபட்டு, குற்றமும் குணமும் நாடி மதிப்பிட்ட திறனாய்வாளர்கள் உரையாசிரியர்கள். சமயப்பற்று மிகுந்திருந்த காலத்தில்—சமயமே வாழ்வின் உயிர் என்று கருதிய மக்கள் நடுவில்—தம்மை ஆதரிக்கின்ற புரவலர் கருத்திற்கு மாறுபடும் சூழலில் வாழ்ந்து கொண்டு உரையாசிரியர்கள் நடுநிலைமை தவறாமல் திறனாய்வுப் பணியாற்றினர்.

சிலப்பதிகாரத்திற்கு உரை கண்ட அரும்பத வுரையாசிரியரும், அடியார்க்கு நல்லாரும் எல்லாச் சமயத்தையும் ஒரே வகையாய் நோக்கி, அந்த அந்தச் சமயங்களுக்குரிய தெய்வங்களையும் சமயச் சான்றோர்களையும் போற்றி மரபு மாறாமல் உரை எழுதியுள்ளனர். சைவராகிய நச்சினார்க்கினியர் ஜைன காப்பியமாகிய சீவகசிந்தாமணிக்கு மிகச் சிறந்த உரை எழுதினார். ஜைனப் புலவர் பவணந்தியாரின் நன்னூலுக்குச் சைவராகிய சங்கர நமசிவாயரும் சிவஞான முனிவரும் நல்லுரை கண்டுள்ளனர். உரையாசிரியர்கள், தாம் எந்தச் சமயத்தவர் ஆயினும் தாம் உரை எழுத மேற் கொண்ட நூல்களின் சமயக் கருத்துக்களைத் தெளிவாக அறிந்து விளக்கினர்.

இருபதாம் நூற்றாண்டில் டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் நடுநிலைமை தவறாதவராய் விளங்கினார். தாம் சைவராய் இருந்தும் பல வேறு சமய நூல்களைப் பதிப்பித்தார். அந் நூல்களில் உள்ள சமயக் கருத்துக்களை அறியப் பெரிதும் முயன்றார்; நன்றாக அறிந்து தெளிவு பெற்ற பின்னரே விளக்கம் எழுதினார். அவர் பதிப்பித்த நூல்களில் சீவக சிந்தாமணி, நன்னூல் மயிலை நாதர் உரை ஆகியவை ஜைன சமயத்தவர் படைத்தவை. மணிமேகலை பௌத்த சமய நூல். இவற்றில் பிற சமயத்தவர் கொள்கைகளை மறுக்கும் இடங்கள் பல உள்ளன. இருப்பினும் அவற்றைப் பொருட்படுத்தாமல், அவற்றிற்கு விளக்கம் எழுதிப் பதிப்பித்தார். டாக்டர் உ. வே. சா. தலைசிறந்த சைவப் பெரியாரிடம் கல்வி பயின்றவர்; சைவக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவர்; கடைசிவரை சைவ சமயப்பற்று உடையவராய் வாழ்ந்தவர். அவர் வாழ்ந்த காலம், சுற்றுச் சூழல்,

மக்களின் போக்கு, மேற்கொண்ட சமயம், குடும்பத்துப் பழக்க வழக்கங்கள் ஆகியவற்றைக் கடந்து, தமிழுக்குத் தொண்டு செய்த பெரியவரைத் தமிழினம் என்றும் போற்றும். அவரைக் கவிமணி,

**சித்திரத்திற் பார்ப்போம் சிலைசெய்து கும்பிடுவோம்**
**புத்தகத்திற் போற்றிப் புகழ்த்திடுவோம்—இத்தரையில்**
**சந்தப் பொதிகைத் தமிழ்முனிஎன் றுன்னைநிதம்**
**சிந்தையிற் கொண்டு தெளிந்து**

என்று போற்றுகின்றார்.

### சமன் செய்து சீர்தூக்கல்

நல்லாசிரியர், துலாக்கோல் போன்ற இயல்புடையவராய் இருக்க வேண்டும் என்று நன்னூற்பாயிரம் கூறி, துலாக்கோலின் இயல்பை,

**ஐயந் தீரப் பொருளை உணர்த்தலும்**
**மெய்ந்நடு நிலையும் மிகுநிறை கோற்கே**

என்று விளக்குகின்றது. திருவள்ளுவர்,

**சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்**
**கோடாமை சான்றோர்க்கு அணி**

**(குறள்: 118)**

என்று கூறுகின்றார். இதற்குப் பரிமேலழகர், உரையும் விளக்கமும் பின் வருமாறு உரைக்கின்றார்:

"முன்னே தான் சமனாக நின்று பின் தன்கண் வைத்த பாரத்தை வரையறுக்கும் துலாம் போல, இலக்கணங்களான் அமைந்து ஒரு பக்கத்துக் கோடாமை சான்றோர்க்கு அழகாம்.

"உவமையடையாகிய சமன் செய்தலும் சீர்தூக்கலும் பொருட்கண்ணும், பொருளடையாகிய அமைதலும் ஒரு பால் கோடாமையும் உவமைக் கண்ணும் கூட்டி, சான்றோர் சீர்தூக்கலாவது தொடை விடைகளால் கேட்டவற்றை ஊழான் உள்ளவாறு உணர்தலாகவும், ஒரு பால் கோடாமையாவது அவ் உள்ளவற்றை மறையாது பகை நொதுமல் நட்பு என்னும் மூன்று திறத்தார்க்கும் ஒப்பக் கூறுதலாகவும் உரைக்க. இலக்கணங்களால் அமைதல் இருவழியும் ஏற்பன கொள்க"

உரையாசிரியர்கள் நடுநிலை தவறாத சான்றோர்கள். அவர்களிடம் மேலே கூறியுள்ள பண்புகள் யாவும் நிறைந்துள்ளன.

### நூலாசிரியர் கருத்தறிதல்

நூலாசிரியரின் உள்ளக் கருத்தை நன்கு அறிந்து உரையாசிரியர்கள் தம் விளக்கத்தில் வெளிப்படுத்தினர். தமக்கு முன்

இருந்த பொருந்தா உரைகளை மறுக்கின்ற இடங்களில் 'இது ஆசிரியர் கருத்தன்று'; 'இது, ஆசிரியர் கொள்கைக்கு முரண்' என்று தக்க சான்று காட்டியுள்ளனர்.

அதிவீரராம பாண்டியன்,

**நூல்பல கற்றா னேனும்**
**பொருள்நுனித் தறியான் என்னில்**
**மாலொடு வாளா கத்தும்**
**மால்நிறக் காகம் போல்வான்**

என்றும்; பாரதியார்,

**அணிசெய் காவியம் ஆயிரம் கற்கினும்**
**ஆழ்ந்திருக்கும் கவியுளம் காண்கிலார்**

**(சுயசரிதை—23)**

என்றும் கூறியுள்ள கருத்துகள் உரையாசிரியர்களின் உள்ளத்தில் நிலவி வந்தன.

திருவள்ளுவர் நூலின் பொருளை நுனித்து அறிந்து, ஆழ்ந்திருக்கும் கவியுளம் கண்ட பரிமேலழகர், 'எல்லா நூல்களிலும் நல்லன எடுத்து எல்லார்க்கும் பொதுப்படக் கூறுதல் இவர்க்கு இயல்பு' (குறள்—322) என்று கூறியுள்ளார்.

**சான்றோர் நூல்**

முற்காலத்தில் நாடறிந்த பெரும் புலவர்கள்—கற்றுத் தேர்ந்த புலமைச் செல்வர்கள்—தாம் கண்டறிந்த பல உண்மைகளை உலகிற்கு உணர்த்தி, மக்களை வாழ்விக்க எண்ணி நூல் இயற்றும் பணியில் ஈடுபட்டனர். பல காலம் முயன்று எழுதிய விழுமிய நூலைச் சான்றோர் நிறைந்த மன்னர் பேரவையில் அரங்கேற்றினர். அரங்கேற்றும்போது நூலைப் பற்றிச் சான்றோர் ஐயங்களை எழுப்பி, குறை நிறை கண்டு அந்நூலைத் தேர்ந்தெடுத்தனர். பின்னரே அந்நூல் நாட்டு மக்களிடையே பரவியது. குற்றமுள்ள நூல் அரங்கேற்றத்தின் போதே தடை செய்யப்பட்டது. குற்றங்குறை உள்ள பகுதிகள் நீக்கப்பட்டன; திருத்தப்பட்டன. அரங்கேறாத புதுநூல் நாட்டில் தலை காட்ட முடியாத சூழல் அக் காலத்தில் இருந்தது. எனவே பல நூறு ஆண்டுகள் மக்களிடம் பரவி, கற்றவரால் போற்றப்பட்டு வரும் சிறந்த நூலே உரையாசிரியர்களின் உரையைப் பெற்றது. ஆதலின் மூல நூலில் குறை காணும் நோக்கம் உரையாசிரியர்களிடம் ஏற்படவில்லை.

நூலாசிரியர்களிடம் உரையாசிரியர்களுக்கு அளவற்ற மதிப்பு உண்டு.

**வினையின் நீங்கி விளங்கிய அறிவின்**
**முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்**

என்பது அவர்கள் கருத்து. நூலாசிரியர்களை உரையாசிரியர்கள் பின்வருமாறு போற்றியுரைக்கின்றனர்:

**ஒல்காப் பெருமைத் தொல்காப்பியனார்**

**—மயிலை நாதர்.**

**வள்ளுவக் கடவுள்**

**பல்கலைக் குரிசில் பவணந்தி**

**—சங்கர நமசிவாயர்.**

நூலாசிரியர்களிடம் அளவு கடந்த மதிப்பு வைத்திருந்த உரையாசிரியர்கள், தம் காலத்திற்கு முரணான கருத்துக்கள் மூல நூலில் இருப்பினும் அவற்றிற்கு அமைதி கூறினர். வழுவமைதி காட்டி மேற்கொண்டனர். இன்னும் ஒருபடி மேலே சென்று, தம் காலத்தில் நிலவி வந்த புதுக் கருத்துக்களையும், புது மரபுகளையும் 'மிகை'யினாலும் 'உரையிற் கோடல்' என்பதனாலும் தம் உரையில் சேர்த்து எழுதி நூலாசிரியர்களுக்குப் புகழ் தேடினர்; நூலாசிரியர் சொல்லாத கருத்து எதுவும் இல்லை என்று உணர்த்த முற்பட்டனர்.

தொல்காப்பியம் செய்யுளியலில் யாப்பருங்கலத்தின் கருத்தையும், உவமையியலில் அணி நூற் கொள்கையையும் உரையாசிரியர்கள் இடையிடையே புகுத்தி இருப்பது இங்கே நினைவுக்கு வருகின்றது. திருக்குறள் உரையாசிரியர்களும் தம் கருத்தை உரைகளில் புகுத்திய இடங்கள் பல உள்ளன.

தம் கருத்திற்கு மாறானவற்றை நூலாசிரியர் கூறி இருப்பினும் உரையாசிரியர்கள் அவற்றை மறுப்பதில்லை. பெரியோர் பாட்டில் பிழை கூற - சான்றோர்களைக் குறை கூற அவர்கள் அஞ்சினர்.

இராமலிங்க அடிகள், 'மனுமுறை கண்ட வாசகம்' என்னும் உரைநடை நூலில், மகனை முறை செய்த சோழன், தன் மகன் ஆவின் கன்றைக் கொல்லக் காரணமமாய் இருந்தமைக்குப் பெரிதும் நொந்து, "நான் இதற்கு, முன் என்ன தீவினை செய்தேனோ! எனக்கு இத்தகைய பழி நேர்த்ததே!" என்று கூறும்போது, "பெரியோர் பாட்டில் பிழை சொன்னேனோ!" என்று உரைப்பதாய் அமைத்துள்ளார். பெரியோர் பாட்டில் பிழை காண்பது கொடிய செயல் என்ற வள்ளலாரின் கருத்து இங்கே வெளிப்படுகின்றது.

## குறையறிதல்

வள்ளலாரைப் போன்றே உரையாசிரியர்கள் அனைவரும் பெரியோர் பாட்டில் பிழை சொல்ல அஞ்சினர். ஆனால், அவர்களிடம் மற்றொரு பண்பு இருந்தது என்பதை இங்கே மறந்துவிடக் கூடாது. தாம் உரை எழுத மேற் கொண்ட ஒப்புயவர்வற்ற நூல்களில் — தெய்வப் புலமை வாய்ந்தவராய்த் தாம் மதிக்கின்ற சான்றோர் செய்த நூல்களில் உள்ள கருத்துக்கள் யாவும் மாசு மறுவற்றவை என்றோ, குற்றம் குறை இல்லாதவை என்றோ, மாறுபாட்டிற்கு இடம் இல்லாதவை என்றோ உரையாசிரியர்கள் கருதியதில்லை.

> **அரியகற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால்**
> **இன்மை அரிதே வெளிறு**

என்ற திருவள்ளுவர் வாக்கு அவர்கள் உள்ளத்தில் எப்போதும் எதிரொலித்த வண்ணமாய் இருந்தது. இலக்கணக் கொத்தின் ஆசிரியர் *(பாயிரவியல்-6)*,

> **நூல்உரை போதக ஆசிரியர் மூவரும்**
> **முக்குண வசத்தான் முறைமறந்து அறைவரே**

என்று கூறுகின்றார். உரையாசிரியனரைப் பற்றி,

> **நூலா சிரியர் கருத்தினை நோக்காது**
> **ஒருசூத் திரத்திற்கு ஒவ்வோர் ஆசிரியர்**
> **ஒவ்வொரு மதமாய் உரைவகுக் குவரே**

என்றும், உரைக்கு விளக்கம் கூறுவோரைப் பற்றி,

> **அவ்வுரை அதனுள் அடுத்த வாசகங்கட்கு**
> **அவர்கருத்து அறியாது அவரவர் கருத்தினுள்**
> **கொண்ட பொருள்படப் பொருள் கூறுவரே**

என்றும் கூறி நம்மைச் சிந்திக்க வைக்கின்றார். அவரே தம் நூலில் மற்றோரிடத்தில், "இறைவன் நீங்கலான எல்லா ஆசிரியர்க்கும் 'மறவி இனைய உடல்கொள் உயிர்க் குணம்' என்பதனாற் பொது. அவரவர் மறவிகளை விரிக்கின் பெருகுதலானும், அறிதல் அருமையானும், பெரியோர்க்குக் குற்றம் கூறினான் என்னும் குற்றம் வருதலானும் விரித்திலம் என்க" *(இலக்.89)* என்று கூறுகின்றார்.

இத்தகைய கருத்துத் தெளிவு, எல்லா உரையாசிரியர்களிடமும் உள்ளது.

தொல்காப்பியரின் தெய்வப் புலமையைப் போற்றி வியந்த உரையாசிரியர்கள். அவரது நூலில் உள்ள முரண்பட்ட கருத்துகளை உணர்ந்து கூறியுள்ளனர். சேனாவரையர், 'எல்'

என்பது, உரிச் சொல் என்ற கருத்துடையவர். ஆனால், அதனைத் தொல்காப்பியர் இடைச் சொல்லாகக் கூறியுள்ளார் (சொல்.269). இந்த இடத்தில் சேனாவரையர், "எல் என்பது உரிச்சொல் நீர்மைத்து ஆயினும், ஆசிரியர் இடைச்சொல்லாக ஓதினமையின், இடைச்சொல் என்று கோடும்" என்று கூறுகின்றார். 'நும்மின் திரிபெயர் நீயிர்' என்ற தொல்காப்பியர் கருத்திற்கு மாறாக 'நீயிர் என்பதன் திரிபு நும்' என்ற கருத்துடையவராய் இருந்தும், நூலாசிரியரைக் கூறை கூறாமல், சேனாவரையர் உரை கண்டுள்ளார் (சொல். 98, 143).

பேராசிரியர், நண்டிற்கு மூக்குப்பொறி உண்டு என்று மரபியலில் தொல்காப்பியர் கூறியுள்ள கருத்தை உடன்பட வில்லை. என்றாலும் அவர், "நண்டிற்கு மூக்கு உண்டோ எனில், அஃது ஆசிரியன் கூறலால் உண்டு என்பது பெற்றாம்" என்று எழுதுகின்றார்.

நன்னூல் உரையாசிரியர் மயிலைநாதர், தொல்காப்பியர் கருத்துகள் இரண்டினை மறுத்துள்ளார். சகரம் மொழிக்கு முதலில் வராது என்ற கருத்தை மறுத்து, சகரத்தை முதலாக உடைய சொற்களை அடுக்கிக்கூறி, வெண்பா ஒன்றை இயற்றி யுள்ளார். மேலும், நுந்தை என்பதில் உள்ள உகரம், மொழி முதற் குற்றுகரம் என்ற தொல்காப்பியர் கருத்தை மறுத்துள்ளார் (நன். 105).

இலக்கணக் கொத்தின் ஆசிரியர், நன்னூலார் கருத்தை மறுக்கின்ற இடம் ஒன்று உள்ளது:

> **"அன்றி இன்றிஎன் வினைஎஞ்சு இகரம்**
> **தொடர்பினுள் உகரமாய் (த்திரியும்)**

என்று (நன்னூலார்) முறை கூறினார். அம் முறையே,

> **வினையெச்சமே வினைமுற்று ஆகலும்**

எனல் வேண்டும். அது மறந்து,

> **வினைமுற்றே வினையெச்சம் ஆகலும்**

என்றார். இம் மறவி உரையாசிரியர் போதக ஆசிரியரோடு மூவர்க்கும் பொது". (பாயிரவியல்-6)

இலக்கிய உரையாசிரியர்களும் நூலாசிரியரின் மாறான கருத்தை அறிந்து செப்பனிட்டுள்ளனர். நச்சினார்க்கினியர் குறிஞ்சிப் பாட்டிலும், சிந்தாமணியிலும் உள்ள முரண்களை அறிந்து அவற்றைச் சரிசெய்துள்ளார்.

குறிஞ்சிப்பாட்டில் 99 வகையான பூக்களைத் தலைவியும் தோழியும் பறித்து வந்து மாலை கட்டிச் சூடிக் கொள்வதாய்க்

கபிலர் பாடியுள்ளார். அப்பூக்கள் ஒரே இடத்தில் கிடைப்பவை அல்ல; ஐந்து நிலங்களிலும் பூப்பவை. ஒரு பருவத்தில் பூப்பவை அல்ல; ஆறு பருவங்களிலும் பூப்பவை. ஒரே நேரத்தில் பூப்பவை அல்ல; சில காலையிலும் சில மாலையிலும், சில நண்பகலிலும், சில நள்ளிரவிலும் பூப்பவை. இவ்வாறு நிலம் பருவம் சிறு பொழுது ஆகிய மூன்றிலும் ஒற்றுமைப் பட்டு மலராத பூக்கள், மலை நிலத்தில்—கார் காலத்தில்—நண்பகலில் பூத்திருந்தன என்று கூறுவது பொருந்தாது. இதனை ஆராய்ந்து பார்த்த நச்சினார்க் கினியர், 'எந்நில மருங்கின்' என்னும் அகத்திணை *(19)* நூற்பா உரையில், "கபிலர் பாடிய பெருங் குறிஞ்சியில் வரைவின்றிப் பூ மயங்கியவாறு காண்க" என்று குறிப்பிடுகின்றார்.*

சிந்தாமணிக் காப்பியத்தில், திருத்தக்க தேவர்க்குப் பெருமைதரும் வகையில், நச்சினார்க்கினியர் உரை கண்டுள்ள இடங்கள் சில உள்ளன.

பதுமையைப் பாம்பு தீண்டிய செய்தியைச் சீவகனுக்குக் கூறுபவன், முதலில் தான் கூற வேண்டிய செய்தியை விரைவிற் சொல்லாமல், பதுமையின் பிறப்பு வளர்ப்புகளை உரைத்து, பிறகு அவள் முல்லைக்கொடி வளர்த்த நிகழ்ச்சியைக் கூறி, கொடி அருகே பதுமை சென்றபோது பாம்பு தீண்டிற்று என்ற செய்தியை உரைக்கின்றான். இவ்வாறு உரைப்பது உலகியலுக்குமாறாய்—மக்கள் இயல்புக்குப் பொருத்தமற்றதாய் உள்ளது.

இதனை உணர்ந்து நச்சினார்க்கினியர், பல பாடல்களை ஒருதொடராக்கி, "இது *(1266)* முதலாகப் 'பதுமை' என்னும் கவியளவும் *(1273)* ஒரு தொடர்" என்று குறிப்பிட்டு, பாம்பு தீண்டிய செய்தியை முதலில் கூறுவதாய் அமைத்து மற்றச் செய்தி களைப் பின்னர் உரைக்கின்றார். நூலாசிரியர் கருத்திற்கு மாறாகத் தாம் உரைப்பதற்குக் காரணமும் கூறுகின்றார். "இங்ஙனம் மாட்டு றுப்பாகக் கடுகக் கூறாது செவ்வனே கூறின், பாம்பு கடித்தமை கடுகக் கூறிற்று ஆகாமை உணர்க." என்று அமைதி கூறுகின்றார்.

மேலும், "திங்கள் வாள் முகமும் நோக்கான்" *(1705)* என்ற பாடலுக்கு நச்சினார்க்கினியர் எழுதியுள்ள உரை விளக்கம் திருத் தக்க தேவரை உயர்த்துகின்றது.

மூல நூல்களில் உள்ள குற்றங்குறைகளுக்கு அமைதி கூறி, முரண்களைச் சரிசெய்வதைச் சிலர் விரும்புவதில்லை. அவர்களில் பாவேந்தர் பாரதிதாசனும் ஒருவர். அவர்,

* இக் கருத்து, களவியலுரையில் கூறப்பட்டுள்ளது.

பண்டிதர்கள் பழங்கதையின் ஓட்டைக் கெல்லாம்
பணிக்கையிடல் போல்

குடும்ப விளக்கு – I

என்ற உவமை வாயிலாகத் தம் கருத்தை வெளிப்படுத்தியுள்ளார்.

### காப்பியத் திறனாய்வு

சிவப்பிரகாசர், முந்தையோர் செய்யுளைத் திருக் கோயிலுக்கு உவமை கூறுகின்றார். இந்த அரிய உவமை நம் சிந்தனையைத் தூண்டுகின்றது:

சந்தி பொருத்தி, தகும்சீர் கெடாது அடுக்கி,
புந்தி மகிழ் அற்புத அணித்தாய்—முந்தையோர்
செய்யுள் போல் செய்த திருக்கோயில்

(திருவெங்கையுலா)

என்று செய்யுளையும் கோயிலையும் ஒப்பிட்டு உரைக்கின்றார்.

பெருங்கோயில்களைக் கட்டுவோர், நல்ல கற்களைத் தேர்ந் தெடுத்து வைத்து, இடைவெளி தோன்றாமல் சந்தி பொருத்துவர்; சீர்(வரிசை) கெடாமல் அடுக்குவர்; காண்பவர் உள்ளம் மிகிழுமாறு அற்புதமான அழகிய சிற்பங்களையும் ஓவியங் களையும் உருவாக்குவர். பெருங்காப்பியம் இயற்றும் கவிஞர்கள் சிறந்த சொற்களை ஆராய்ந்தெடுத்துச் சந்திப்பிழை தோன்றாமல் பொருத்துவர்; சீர்கெடாது அடுக்குவர்; கற்போர் உள்ளம் களிக்கு மாறு அற்புதமான அணிகளை அமைப்பர். ஆதலின் திருக்கோயில், முந்தையோர் செய்யுள் போல் பொலிகின்றது. பெருங்கோயிலைக் காணும்போது ஏற்படும் இன்பம், பெருங் காப்பியம் கற்கும் போதும் ஏற்படுகின்றது.

வரலாற்றுச் சிறப்பும் பழம் பெருமையும் கலை வளமும் உடைய பெருங்கோயிலின் பலவேறு பகுதிகளை நன்கு அறிமுகப் படுத்தி அழைத்துச் செல்லும் சிறந்த வழிகாட்டிகளைப் போல், பெருங்காப்பியத்திற்கு உரை எழுதிய சான்றோர்கள் கற் போர்க்குத் துணை செய்கின்றனர். அவர்கள் காப்பியத்திறனாய்வு நெறியில், தலைசிறந்து விளங்குகின்றனர். கதை நிகழ்ச்சி முழு வதையும் எவ்விடத்திலும் மறவாமல் இருக்கின்றனர். முன் பின் நிகழ்ச்சிகளைத் தொடர்படுத்தி முரண்பாடுகளை அகற்று கின்றனர்; கதை நிகழ்ச்சிகளுக்குரிய இடம் காலம் ஆகியவற்றை ஆராய்ந்து தெளிவுபடுத்துகின்றனர். காப்பியத்தில் உள்ள சின்னஞ் சிறு குறைகளையும் மாசுகளையும் நீக்கி நிறைவு செய்கின்றனர். காவியமாந்தரின் பண்புகளை ஆராய்கின்றனர். கவிஞரின் சொல்லழகில் ஈடுபட்டு, உவமைகளைச் சுவைத்து, கற்பனையில்

திளைத்து இயற்கைக் காட்சிகளில் மூழ்கி இலக்கிய இன்பத்தை வெளிப்படுத்துகின்றனர்.

காப்பியம் முழுவதும் ஊருவிக்கிடக்கின்ற உட்கருத்தை உரையாசிரியர்கள் நன்கு உணர்ந்திருந்தனர்.

காப்பியப் பண்பைத் தண்டியலங்காரம்,

**பாவிகம் என்பது காப்பியப் பண்பே**

என்று குறிப்பிடுகின்றது. இதனை, உரை பின்வருமாறு விளக்கு கின்றது:

“பாவிகம் என்பது பொருட்டொடர் நிலைச்செய்யுள் திறத்து, கவியாற் கருதிச் செய்யப்படுவதொரு குணம். அஃது, அத் தொடர்நிலைச் செய்யுள் முழுவதும் நோக்கிக் கொள்ளப்படுவது அல்லது, தனித்து ஒரு பாட்டில் நோக்கிக்கொள்ளப் புலப் படாதது.”

காப்பியப் பண்பை உரையாசிரியர்கள் உணர்ந்து விளக்கியுள்ளனர். அடியார்க்கு நல்லார், சிலப்பதிகார உரையில் ‘பத்தினியைப் பரவுதலே காப்பியத்தின் உட்கோள்’ என்று உரைக்கின்றார். பிள்ளை லோகாசாரியர் ‘இராமாயணம் சிறை இருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது’ என்றும், மகாபாரதம் ‘தூது போனவன் ஏற்றம் சொல்லுகிறது’ என்றும் கூறுகின்றார்.

உரையாசிரியர்கள் இலக்கண இலக்கிய உலகங்களின் வழிகாட்டிகள். தொண்டை மண்டலச் சதகம் *(41)* பரிமேலழகரைக் குறிப்பிடும்போது,

**திருக் காஞ்சிவாழ் பரிமேலழகன்**
**வள்ளுவர் நூற்கு வழிகாட்டினான்**

என்று கூறுகின்றது. பரிமேலழகரைப்போலவே எல்லா உரை யாசிரியர்களும் நல்ல வழிகாட்டிகளாய் உள்ளனர்!

## ஒப்பியல் ஆய்வு

ஒப்பியல் ஆய்விலும் உரையாசிரியர்கள் ஈடுபட்டுள்ளனர். அவர்கள் காலத்தில் வடமொழி ஒன்றே தமிழுடன் கலந்து உறவாடியது. தமிழ்ப் புலவர்கள், வடமொழி இலக்கண இலக்கியங்களையும் சாத்திரங்களையும் கற்று, அவற்றிலுள்ள கருத்துக்களைத் தமிழுடன் ஒப்பிட்டு ஆராய்ந்துள்ளனர்.

சேனாவரையர், (வீரசோழிய உரையாசிரியராகிய) பெருந் தேவனார், சாமிநாத தேசிகர், சிவஞான முனிவர் ஆகியோர் தம் உரைகளில் வடமொழி இலக்கணத்தைத் தமிழுடன் ஒப்புமை காட்டி விளக்கியுள்ளனர். எழுத்து பெயர்ச்சொல் வேற்றுமை

வினைச்சொல் ஆகியவை பற்றிய உரைகளில் வடமொழிக் கருத்துக்கள் நினைவூட்டப்படுகின்றன.

பேராசிரியர் அடியார்க்கு நல்லார் ஆகியோர் தம் உரைகளில், மெய்ப்பாடு அணி தொனி நாடகப் பண்பு காப்பிய இயல்பு ஆகியவற்றை விளக்க வடமொழி நூல்களிலிருந்து கருத்துக்களை எடுத்துரைக்கின்றனர்.

பரிமேலழகர் அறம் பொருள் இன்பம் பற்றிய வடநூற் கருத்துகளையும், சமய உண்மைகளைக் கூறும் வடமொழிச் சாத்திரங்களையும், அரசியலைப் பற்றிக் கூறும் வடமொழி நூல் களையும் உரைகளில் குறிப்பிட்டு அவற்றின் கருத்துகளைத் திருக் குறளோடு ஒப்புமை காட்டுகின்றார்.

நச்சினார்க்கினியரும் சமயக் கருத்துகளை விளக்குதற்கு வடநூற் கருத்துகளை ஒப்புமை காட்டுகின்றார்.

உரையாசிரியர்கள் ஒப்புமை காட்டுகின்ற பகுதிகளில் சில பொருத்தமில்லாதவை; தமிழுக்கு முரணானவை; தேவை யற்றவை. என்றாலும் அவர்கள் இருமொழிக் கருத்துக்களில் வேற்றுமையும் கண்டுள்ளனர். கண்டு, தம் உரைகளில் விளக்கி யுள்ளனர்.

பரிமேலழகர், மானத்தைப் பற்றிக் கூறும்போது *(961)*,

> **'இறப்ப வருவழி இளிவந்தன செய்தாயினும் உய்க**
> **என்னும் வடநூல் முறையை மறுத்து, உடம்பினது**
> **நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையும்**
> **தூக்கி அவை செய்யற்க என்பதாம்'**

என்று கூறியுள்ளார்.

நச்சினார்க்கினியர் களவியலுரையில் *(1)*, கற்பின்றிக் கந்தருவம் அமையவும் பெறும் என்றும், கற்பின்றிக் களவு அமையாது என்றும் வேறுபாட்டை உணர்த்துகின்றார்.

'இலக்கணக்கொத்து' நூலை இயற்றிய சாமிநாததேசிகர், வடமொழிக்கும் தமிழுக்கும் உள்ள வேறுபாட்டைப் பின் வருமாறு குறிப்பிடுகின்றார்:

> **இருதிணையும், ஆண்பால் பெண்பால்**
> **வினை ஈறும் வடமொழிக்கு இல்லை. மூன்று இலிங்கமும்,**
> **முதலீற்று வேற்றுமைகட்கு உருபுகளும் தமிழிற்கு இல்லை**
> **(இலக்.7)**

சுப்பிரமணிய தீட்சிதர், 'பிரயோக விவேகம்' நூலில்,

> **சாற்றிய தெய்வப் புலவோர் மொழிக்கும் தமிழ்மொழிக்கும்**
> **வேற்றுமை கூறின், திணைபால் உணர்த்தும் வினைவிகுதி**

மாற்றறும் தெய்வ மொழிக்குஇல்லை; பேர்க்குஎழு வாய்உருபும்
தேற்றிய லிங்கம் ஒருமூன்றும் இல்லை செந்தமிழ்க்கே

என்று இருமொழி இலக்கணங்களையும் வேறுபடுத்திக் கூறுகின்றார். (திங்குப்படலம். 15)

சிவஞானமுனிவர், வடமொழி தமிழ் இரண்டின் இயல்பு களையும் முழுமையாக ஒப்பிட்டு நோக்கி இரண்டிற்கும் உள்ள வேறுபாடுகளைப் பின்வருமாறு தொகுத்துரைக்கின்றார்:

"தமிழ் மொழிப் புணர்ச்சிக்கண் படும் செய்கைகளும் குறியீடுகளும், வினைக் குறிப்பு வினைத்தொகை முதலிய சில சொல்லிலக்கணங்களும், உயர்திணை அஃறிணை முதலிய சொற் பாகுபாடுகளும், அகம் புறம் என்னும் பொருட்பாகு பாடுகளும், குறிஞ்சி வெட்சி முதலிய திணைப்பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும் வெண்பா முதலிய செய்யுள் இலக்கணமும் இன்னோ ரன்ன பிறவும் வடமொழியாற் பெறப்படா"

இவ்வாறே உரையாசிரியர்கள், தொல்காப்பியர் கருத்துக் களைப் பிற்காலத்து இலக்கண நூற் கருத்துக்களோடு ஒப்பிட்டு மிக விரிவாக ஆராய்ந்துள்ளனர்.

## உரைத் திறனாய்வு

உரையாசிரியர்களின் திறனாய்வு முறைகள் இருவகையாய் அமைந்துள்ளன:

1. மூல நூலை ஆழ்ந்து கற்று, நூலாசிரியன் உள்ளக் கருத் தறிந்து நூலுக்குப் பொருள் கூறி விளக்குதல்.

2. தமக்கு முன் இருந்த உரையாசிரியர்கள் எழுதிய உரைகளை மதிப்பிட்டுக் கூறுதல்.

இரண்டாம் வகைத் திறனாய்வு பற்றி ஆராய்ந்த வி. நா. மருதாசலக் கவுண்டர், ஒவ்வோர் உரையாசிரியரின் தனித் தன்மையைப் பற்றிப் பின்வருமாறு கூறுகின்றார்:

"உரையாசிரியர்களின் மதிப்பீட்டுமுறை பல திறப்பட்டன. பேராசிரியர் அழகொழுக மதிப்புரைப்பார். பரிமேலழகர் அமயம் நோக்கி நயந்தும் இகழ்ந்தும் கூறுவர். சேனாவரையர் பணிவும் தருக்க முறையும் காட்டுவர்.

"சிலர் உரையாசிரியர்களின் பெயர் கூறாது மதிப்பிட்டனர். சிவஞான முனிவர், நச்சினார்க்கினியர் முதலிய சிலர், பெயர் கூறாமல் உரையாசிரியர் கூற்றைச் சீர்தூக்கி உரைப்பது பெருவழக்கு.

"நச்சினார்க்கினியர் காலத்திலேதான் மதிப்பீட்டுத் துறையில் அருமை பெருமைகள் செழித்தோங்கி வளர்ந்தன. தமிழ் உரைநடை அவர் காலத்திலே சிறந்து வளர்ந்த படியால் அவருடைய கலையறிவும் உலகியல் அறிவும் மதிப்புரை வழங்கு வதில் புலனாயின. முற்கால உரையாசிரியர்களுள், கருத்துக் களைச் சீர்தூக்கும் மதிப்பாளரில் (critics)நச்சினார்க்கினியர் தலைசிறந்தவர்.

"பிற்காலத்தவருள் அவஞானம் போக்கும் சிவஞான முனிவர் ஒருவரே மதிப்பாளர் உலகில் உச்ச நிலை அடைந்தவர் ஆவர்."

உரையாசிரியர்கள், தமக்கு முன் இருந்த உரைகளை ஆழ்ந்து கற்றனர். அவற்றில் இருந்து நல்லனவற்றை எடுத்துக்கொண்டனர்; சுருக்கமாய்க் கூறியிருந்த கருத்தை விரிவுபடுத்தினர்; எளிய நடையை மாற்றி வலிவும் வனப்பும் உடைய நடையை அமைத்தனர்.

முன்னோர் கூறியிருந்த மாறான கருத்தை—தவறான விளக்கத்தை உரையாசிரியர்கள் நீக்கிவிட்டனர். மறுக்க வேண்டிய கருத்தை எடுத்துரைத்துத் தக்க காரணங்களைக் காட்டி மறுத்தனர். மறுக்கும்போது ஆசிரியர் கருத்திற்கு மாறானது என்று நூலிலிருந்தே சான்று காட்டினர்; மரபுக்கு ஒவ்வாது என்று நினைவூட்டினர்; பிற நூல்களிலிருந்து மேற்கோள் காட்டித் தம் கருத்திற்கு அரண் செய்தனர்; இலக்கணக் கொள்கையை—சொற் பொருளை எடுத்துரைத்துத் தம் கருத்தை நிலைநாட்டினர்.

பிறர் கருத்தும் கொள்ளத் தகுந்ததே என்று கருதினால் உரையாசிரியர்கள், அதைக் கூறி 'என்ப, என்பதும் ஒரு கருத்து, என்றும் கூறுப' என்று உரைத்தனர்; பல வேறு பொருள்களைத் தந்து 'இவை பொருந்துமாயின் கொள்க' என்றனர்.

## மூலநூல் மறுப்பு

மூல நூலையே மறுத்து அதில் உள்ள குற்றங் குறைகளை எடுத்துக்காட்டியவர் சிவஞான முனிவர். 'இலக்கண விளக்கம்' என்னும் நூலை மறுத்து, அவர் இலக்கண விளக்கச் சூறாவளி இயற்றினார். பத்தொன்பதாம் நூற்றாண்டில் உள்ள உரை நடையில் பல மறுப்புரைகள் வெளிவந்துள்ளன. அவற்றுள் பெரும்பான்மையானவை சமயச் சார்பானவை; இலக்கணத் தொடர்புடையவை.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் செந்தமிழ் இதழில் இலக்கண மறுப்புக் கட்டுரைகள் தொடர்ச்சியாய்

வந்துள்ளன. சில பாடல்களுக்குப் பொருத்தமான பொருள் எது என்ற புலமைப் பூசலில் மலர்ந்தன சில ஆய்வுகள்; பொருத்தமான பாடம் தேர்ந்தறியும் முயற்சியில் தோன்றின சில படைப்புகள். இவற்றை எல்லாம் தொகுத்தால் 'ஆராய்ச்சிக் களஞ்சியம்', தமிழுக்குக் கிடைக்கும்; ஆய்வுலகில் 'புலமைப் புதையல்' வெளிப்படும்.

## இருமொழிப் புலமையின் விளைவு

தமிழோடு வடமொழியோ, ஆங்கிலமோ பயின்ற புலமைச் செல்வர்களுக்கு,

**பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்**
**தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்**

என்று பாரதியார் வேண்டுகோள் விடுத்தார். இருமொழிப் புலமையாளர்கள், தமிழ் மொழியை வளப்படுத்தப் பிற மொழிப் புலமையைப் பயன்படுத்தல் வேண்டும். பிற மொழியில் எழுத்தும் சொல்லும் பயின்றதோடு நில்லாமல், பொருளும் அறிந்து நல்லனவற்றைத் தமிழுக்குக் கொண்டு வருதல் வேண்டும். அதுதான் இருமொழிப் புலமையின் பயன். அவ்வாறு செய்யாமல், தமிழுக்கு எந்த அளவிலும் நன்மை செய்யாது, பிறமொழிப் புலமையை எண்ணி எண்ணித் தம்மைத் தாமே வியந்து கொள்வதில் பயனில்லை! தமிழ் ஒன்றையே முறையாக—செப்பமாக—ஆழ்ந்து கற்றவர்களால் தமிழுக்கு ஏற்படும் பயன்கள் கூட இரு மொழிப் புலமையாளர்களால் ஏற்படா.

பன்னெடுங் காலமாகத் தமிழ் நாட்டில் வட மொழியும் தென் மொழியும் பயின்றவர்கள் பலர் இருந்திருக்கின்றனர். அவர்கள் தமிழ் மட்டும் அறிந்தவர்களிடம் வடமொழிக் கருத்தைக் கூறி மருட்டினர்; வடமொழி அறிந்தவர்களிடம் தமிழ்க் கருத்தை எடுத்துரைத்து மயக்கினர். இந்த நிலையைத் தாயுமானவர்,

**..வடமொழியிலே**
**வல்லான் ஒருத்தன் வரவும் த்ராவிடத்திலே**
**வந்ததா விவகரிப்பேன்**
**வல்லதமிழ் அறிஞர்வரின் அங்ஙனே வடமொழியின்**
**வசனங்கள் சிறிது புகல்வேன்;**
**வெல்லாமல் எவரையும் மருட்டிவிட வகைவந்த**
**வித்தை என் முத்தி தருமோ !**

**சித்தர்கணம்: 10.**

என்று தம் மீது ஏற்றிக் கூறி நகைக்கின்றார். அவர்களை நோக்கி,

கற்றதும் கேட்டதும் தானே ஏதுக்காக,
கடபட என்று உருட்டுதற்கோ ?

என்று வினவுகின்றார்.

இருபதாம் நூற்றாண்டிலும் இந்த அவல நிலை—வெல்லாமல் எவரையும் மருட்டுகின்ற வித்தை நிலவி வந்தது. இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆங்கிலம் பயின்ற தமிழர்கள், ஆங்கிலத் திறனாய்வு நூல்களைக் கற்று, தமிழ் மட்டும் வல்ல புலவர்களைக் குறை கூறினர். ஆனால், ஆங்கிலேயர்களிடம் தமிழின் பெருமையைப் பேசிச் சிறப்படைந்தனர். இந்த நிலையில், பழைய உரைகளில் பொதிந்து கிடக்கின்ற திறனாய்வுக்கூறுகள் போற்றுவா ரின்றிப் புறக்கணிக்கப் பட்டன. திறனாய்வாளர் களாகிய உரையாசிரியர்கள் ஆராய்ச்சி அரங்கிலிருந்து மறைந்து திரைக்குப் பின்னால் வந்து சேர்ந்தனர். உரையாசிரியர்களின் குரல், போலிப் புலமையாளர்களின் ஆரவாரக் குரல்களை விட்டு மோலோங்கி, புலமை உலகிற்குச்சென்று எட்டவே இல்லை!

## காலத்திற்கேற்ற கருத்து

பழைய உரைகளைத் திறனாய்வு என்றும், உரையாசிரியர் களைத் திறனாய்வாளர் என்றும் கூறும் கருத்துக்களை ஏற்கத் தயங்குபவர் சிலர் உள்ளனர். அவ்வாறு தயங்குபவர்களுக்கு ஆங்கில அறிஞர் டி.எஸ். எலியட் (Function of criticism என்னும் கட்டுரையில்) கூறும் கருத்துக்கள் பெரும் பயனைத் தரும். பன்மொழிப் புலவர் தெ.பொ.மீ. 'பாட்டிலே புரட்சி' என்னும் நூலில் (பக்கம்—82) எலியட் அவர்களின் கருத்துக்களைத் தந்துள்ளார்:

"கலையில் எந்தப் பரம்பரையும் முன்சென்ற பரம்பரை யைப்போல ஒரே வகையான ஈடுபாடு கொள்வதில்லை. கலையில் திளைக்கும்பொழுது தனித்தனி ஆட்களைப்போல ஒவ்வொரு தலைமுறையும் தனக்கே சிறப்பாக அமைந்த சுவை வகையினைத் தன் அனுபவ நிலையில் தன்னோடு கொண்டு வருகிறது; தான் வேண்டியதனையே கலையிடமிருந்து கேட்கிறது; தனக்கு வேண்டிய கலையைப் பயன்படுத்திக் கொள்ளுகிறது."

இந்தக் கருத்துக்களை நினைவில் கொண்டு உரையாசிரி யர்கள் தம்காலத்திற்கு ஏற்றவாறு ஆராய்ச்சிகளை எழுதினர் என்றும், உரைகளும் காலத்திற்கேற்ற தேவையான ஆராய்ச்சிகள் என்றும் தெளியவேண்டும்.

இன்றைய ஆராய்ச்சியாளர்கள் தமக்குமுன் தோன்றி உரை எழுதி ஆராய்ச்சி நிகழ்த்திய உரையாசிரியர்களைப் போற்ற

வேண்டும். அவர்கள் என்ன கருதினார்கள் என்று அறிய வேண்டும். அப்போதுதான் புதுமையும் பழமையும் இணையும். முன்னோர்கள் விட்டதிலிருந்து நாம் தொடர முடியும். இத்தகைய முயற்சியில் ஆராய்ச்சியாளர்கள் ஈடுபடுமாறு அறிஞர் டி.எஸ். எலியட் கூறுகின்றார்:

"கலைத் தொண்டாற்ற வேண்டுமானால் ஒவ்வொரு தலை முறைக்கும்-ஒவ்வொரு கலைஞனுக்கும் ஒவ்வொரு வகையான கலவைப்பொருள் (கலையின் ஊடுநிலை) வேண்டும். ஒவ்வொரு தலைமுறையும் முன்சென்ற தலைமுறை பயன் படுத்திய கலவையைவிடத் தான் புதிதாக அமைக்கும் கலவையையே மிகமிக விரும்பும். இங்குதான் புதிய இலக்கியத் திறனாய்வாளர் பயன் நிறைந்த தொண்டினைச் செய்கின்றனர். எப்படி? இவருடைய குற்றங்கள் முன் சென்ற தலைமுறையின் குற்றங்களின் வேறாம். இத்தகைய ஆராய்ச்சிவாணர்கள் இடை யீடின்றி எவ்வளவுக்கு எவ்வளவு தொடர்ந்து வருகின்றனரோ அவ்வளவுக்கு அவ்வளவு கலைத் திருத்தங்கள் மிகமிகச் சிறந்துவரும்*"

# 7. புது உலகம் படைப்போம்

பழைய நூல்களைக் கற்க அஞ்சும் மாணவனை நன்னூலின் பாயிரம் 'தொன்னூற்கு அஞ்சித் தடுமாறும் உளத்தன்' என்று குறிப்பிடுகின்றது. பழைய உரைகள், புதிய கொள்கைகளுக்குப் பொருந்தி வராதவை என்று நினைக்கும் மனப்போக்குச் சிலரிடம் காணப்படுகிறது. அவற்றை ஆழ்ந்து பயின்றால் படைக்கும் திறனும், கற்பனை வளமும், புதுமை நாட்டமும் போய்விடும் என்ற அச்சமும் சிலரிடம் உண்டு. அந்த அச்சம், அறியாமையால் ஏற்படுவதாகும்.

தமக்கு முன் தோன்றியிருந்த முத்தமிழ் நூல்கள் அனைத்தையும் கற்றுத் தேர்ந்து விழுமிய புலமை பெற்ற இளங்கோவடிகள், சிலப்பதிகாரம் இயற்றினார். 'கல்வியிற் பெரியவர் கம்பர்' என்று புலவர் உலகம் பாராட்டும் அளவிற்கு, கல்விக் கடலில் மூழ்கித் திளைத்த கம்பர், இராமாயணம் இயற்றினார். சிற்றிலக்கியச் செல்வராய் விளங்கும் குமர குருபர அடிகள் முன்னோர் நூல்களை ஆழ்ந்து பயின்று, கற்பனைச் சிறப்புமிக்க பாடல்களைப் பாடினார். இலக்கணப் புலமையும்

* பாட்டிலே புரட்சி – (1963) தெ. பொ. மீ–ப்க் – 83

இலக்கியக் கல்வியும் குறைவின்றிப் பெற்றிருந்த பாரதிதாசன் புதுமைக் கவிதைகளைப் படைத்து, புரட்சிக் கவிஞர் என்று போற்றப் பெற்றார்.

புதியன, பழையன என்பவை காலத்தில் இல்லை! கால இடைவெளிக்கு எவ்வித ஆற்றலும் இல்லை! கருத்திற்கே ஆற்றல் உண்டு. புதுமை, பழைமை என்பன எல்லாம் கருத்தில்தான் உள்ளன. இன்றைய எழுத்தாளனின் சிந்தனை மிகப் பிற்போக்காக இருக்கலாம். பல நூறு ஆண்டுகளுக்கு முன் தோன்றிய நூலில் புதுமை மிளிரலாம்.

நேற்று வாழ்ந்தவரை இன்று வாழ்வோர் மறந்தால், இவர்களை நாளை வருவோர் மறந்து விடுவர். நேற்றைய கருத்துகள் பழையவை எனின், இன்றைய கருத்தும் நாளைக்குப் பழைமையாகிவிடும்!

## உரைகளைப் போற்றுக

அமுதக் கடல் இருக்கப் பசியால் இளைப்பது மடமை! கற்கண்டு மலை இருக்க ஆங்காங்கே சிந்திக் கிடக்கும் சர்க்கரைத் தூளை நாடுவது பேதைமை! நன்னீர்ப் பொய்கை இருக்கத் தண்ணீருக்கு நாவறண்டு நிற்பது அறியாமை! காய்கதிர்ச் செல்வன் இருக்க மின்மினியிடம் ஒளி பெற எண்ணுவது சிறுபிள்ளைத்தனம்! முன்னோர் தேடிவைத்துள்ள பெருஞ் செல்வம் வீட்டில் இருக்க அதனை அறிந்துகொள்ளாமல், மற்றவரிடம் கடன் கேட்டுத் தாழ்மையுற்று வாழ்வது இழிந்த நிலை!

ஆராச்சி அறிஞர் டி.எஸ்.எலியட் கூறும் கருத்துகளை இங்கே நினைக்கவேண்டும்:

“அவ்வவ்போது ஒரு நூற்றாண்டுக்கு ஒரு முறையேனும் இலக்கிய ஆராய்ச்சிவாணன் தோன்றி, நம் இலக்கியத்தின் சென்ற காலத்தைத் திரும்பிப் பார்த்து ஆராய்ந்து, பாவாணரையும் பாக்களையும் புதியதொரு முறையில் பொருத்த முறும்படி அமைத்துக் காட்டுதல் வேண்டும். இது, ஒரு புரட்சி வேலையன்று. முழு நோக்கில் கணக்கைச் சரிபார்த்தல் போலாகும் இது.”[1]

டாக்டர் வ.சுப. மாணிக்கம் இக்காலத்தவர்க்குப் பழைய நூல்களைப் பயிலுமாறு கூறும் அறிவுரை, பொன்னே போல் போற்றிக்கொள்ளத் தக்கதாகும்:

1. பாட்டிலே புரட்சி — தெ. பொ. மீ. (1963) பக்கம் 30.

2.10.

"தமிழ் மொழி வளரும் இக்காலத்து முன்னூல்களை ஒதுக்கிப் படிக்கும் வழக்கம் வளரக்கூடாது. எல்லாரும் எல்லா நூல்களையும் படிப்பது என்பது முடியாது. எனினும், சிலர் சில துறை நூல்களைக் கற்கலாம்; வேறு சிலர் வேறு சில துறை நூல்களைக் கற்கலாம். ஆகக்கூடி எல்லா நூல்களும் நாட்டில் கற்கப்பட வேண்டும். அப்போதுதான் குறைவற்ற வளர்ச்சி தமிழுக்கு உண்டாகும். கற்கும் முயற்சியும் அன்பும் ஆர்வமும் பெருகினாற்றான் நூல்கள் வாழும். தமிழர் வாழ்வும் உயர்வும் நிலையும் எல்லாம் தமிழின் வாழ்வையும் உயர்வையும் நிலையையும் பொறுத்தன என்பது கண்கூடு. மொழிக் காப்பு என்பது அம்மொழியில் தோன்றிய நூற் காப்பாகும்."[1]

## திறனாய்வாளர் பணி

கடந்த காலம் உருவாக்கித் தந்த விழுமிய இலக்கியச் செல்வம் நமக்கு முன்னே குவிந்து கிடக்கின்றது. நிகழ்காலத்தில் நாள் தோறும் புத்தம் புதிய இலக்கியச் சிந்தனைகள் தோன்றி, தொடுவானத்தை நோக்கிச் சென்று கொண்டே இருக்கின்றன. இறந்த காலமும் நிகழ் காலமும் இணைந்து எதிர்காலத்தைப் படைக்க வேண்டும். ஆதலின், இரண்டையும் இணைக்கின்ற திறனாய்வாளர் பலர் வேண்டும்.

முழு நோக்கும் சிந்தனைத் திறனும் ஒருங்கு வாய்க்கப் பெற்ற திறனாய்வாளர்கள் தம் பேராற்றலால், மிகத் தொலைவில் உள்ள கடந்த காலத்துக் கருத்துக்களை, நிகழ்காலத்திற்குள்- அண்மைக் காட்சியின் எல்லைக்குள், கொண்டு வருகின்றனர். கொண்டு வந்து அவற்றின் முன் தாம் நின்று அவற்றை நமக்கு விளக்கிக் காட்டுகின்றனர்; கடல் போல் விரிந்து கிடக்கும் கருத்துலகிற்கு நம்மை அழைத்துச் சென்று வியப்பூட்டும் கலைச் செல்வங்களை அறிமுகப்படுத்தி நம்மைக் களிப்பில் ஆழ்த்து கின்றனர். இவற்றின் விளைவாய், புதிய உலகம் உருவாகி, அங்கே ஒழுங்கு முறை, செங்கோல் செலுத்துகின்றது. பழமை, புதுமைக் கோலம் புனைகின்றது.

இவ்வாறு கருத்துலகம் இயங்கி வருவதால், காலந்தோறும் முன்னும் பின்னும் நோக்கிப் புத்தம் புதிய கலைகளை உருவாக்குவது படைப்பாளர்களின் முதன்மையான பணியா கின்றது. ஏனெனில், வாழும் தலைமுறை, முன் வாழ்ந்த தலைமுறை நுகர்ந்த கலைச்சுவையை விட, தான் புதிதாகப் படைக்கின்ற கலைதரும் சுவையையே பெரிதும் விரும்புகின்றது;

1. எந்தச் சிலம்பு (1964) பக்கம் 97.

இறந்த காலத்தை நினைக்கவும், எதிர் காலத்தை எண்ணவும் மறுக்கின்றது. இந்த நிலையை மாற்றி இரண்டு காலங்களையும் நிகழ்காலத்துடன் இணைக்கின்றவர் வேண்டும்.

பொதுமக்கள் வாழ்வில் காலமும் இடமும் முதன்மை பெறுவதால் அவற்றை அவர்கள் புறக்கணித்து வாழ முடியாது. அவர்கள் எல்லாமாகி எங்கும் நிறைந்திருப்பவர் அல்லர். அவர்கள் ஓர் எல்லைக்கு உட்பட்டவர்களே. எதிர்காலத்தை உருவாக்குகின்ற நெடுநோக்கும் (தீர்க்க தரிசனமும்), வாழும் இடத்தின் சூழலை வென்று செயலாற்றும் திறனும் உடைய திறனாய்வாளர்கள் பொது மக்களுக்கு வழிகாட்டுகின்றனர்; இருண்ட பாதையிலும் ஒளி விளக்கைக் கையில் ஏந்திக்கொண்டு எதிர் காலத்தை நோக்கிச் செல்கின்றனர்; கடந்த காலத்தின் தீமைகளை அகற்றி, நிகழ் காலத்தின் குறைகளைக் களைந்து எதிர் காலத்தை உருவாக்கும் பணியை ஆற்றுகின்றனர்.

## புது உலகம் படைப்போம்

நம்முடைய பழம்பெரும் இலக்கியச் செல்வங்கள் ஆழ்ந்தகன்ற நுட்பமான கருத்துக்களைக் கொண்டவை; என்றென்றும் நிலைபெற்று வாழக்கூடிய பேருண்மைகளை உரைப்பவை; முறையான இலக்கண வரம்புகளை ஏற்படுத்திக் கொண்டு காலந்தோறும் வளர்ந்து வந்தவை. இத்தகைய அழியாச் செல்வங்களை நமக்கு அளித்த முன்னோர்களை நாம் நன்றியுடன் போற்றிப் பெருமைப்பட வேண்டும்.

நூலாசிரியர்களை மதித்துப் போற்றுவதைப் போலவே அந்நூல்களின் கருத்துவளம், செப்பம், சுவை ஆகியவற்றை எடுத்து விளக்கும் திறனாய்வாளர்களாகிய உரையாசிரியர்களைப் போற்றி மதிக்க வேண்டும். அவர்கள் நம் இலக்கியச் செல்வங்களைப் பேணிக் காத்தவர்கள். இன்றும் காத்துவருபவர்கள். அவற்றின் அருமை பெருமைகளை எடுத்துரைக்கும் திறன்படைத்தவர்கள். முறையாகத் தமிழ் பயின்று புலமை எய்தி, உரைஎழுதும் பணியை மக்கட் பணியாகக் கருதித் தொண்டாற்றிய உரையாசிரியர்களே, இன்று இந்த அளவிற்குப் பழம் பெருமைகளை நமக்கு உணர்த்தியவர்கள். அவர்கள் தரும் ஒளியிலேயே நாம் கலைக் கருவூலங்களைக் கண்டு திளைக்கின்றோம்.

புலமைத் துறையில் எதனைக் கற்கிறோம் என்ற தெளிவும், கற்றபின் இதனைக் கற்றோம் என்று அறுதியிட்டு உரைக்கும் திறனும் பெறுதல் வேண்டும். ஆதலின் பழைய உரைகளை ஆழ்ந்து கற்போம்; கற்று அவற்றிலிருந்து எதிர் கால வாழ்வுக்குத் தேவையான நற்கருத்துக்களைப் பெறுவோம்; இறந்த

காலத்தையும் நிகழ் காலத்தையும் இணைத்து நோக்கி வருங் காலத்தில் புதியதோர் உலகம் படைப்போம்.

# தொடுவானத்தை நோக்கி...!

"தமிழில் உரையாசிரியர்களின் பணி, முடிவில்லாத தொடராக நீண்டு சென்று கொண்டிருக்கிறது!"*

–தமிழறிஞர் மு.சண்முகம் பிள்ளை.

"உலகமெல்லாம் உறக்கத்தில் ஆழ்ந்து கிடக்கின்ற நள்ளிரவில், நாம் விழித்து எழுகின்றோம்!"

1947–ஆம் ஆண்டு; ஆகஸ்டு மாதம், 15–ஆம் தேதி; இரவு ஒரு மணி.

அசோகச் சக்கரவர்த்தியின் தர்மச் சக்கரம் பொறித்த மூவண்ணக் கொடியைச் சுதந்திர வானத்தில் உயர்த்திப் பறக்க விட்ட ஆசியஜோதி பண்டித நேரு, மேலே உள்ள எழுச்சி மிக்க வாக்கியத்துடன் இந்தியச் சுதந்திர தின விழாவின் தொடக்க வுரையை நிகழ்த்தினர்.

அந்த எழுச்சிமிக்க வாக்கியம் சுதந்திர முரசின் மங்கல முழக்கமாகி ஒவ்வொரு இந்தியனின் இதய ஒலியுடன் கலந்து என்றும் ஒலித்துக் கொண்டே இருக்கின்றது.

நேருவின் எழுச்சிக்குரல், காலந்தோறும் தமிழில் புதிய உரை தோன்றியதை அறியும் போதெல்லாம் நம் நினைவுக்கு வருகின்றது.

ஒவ்வோர் உரையாசிரியரும் தமிழினம் உறங்கிக் கொண்டிருந்தபோது விழித்தெழுந்து, எழுச்சிக்குரல் கொடுத்த முற்போக்குச் சிந்தனையாளர்கள். அவர்கள் எழுதியுள்ள உரைகள் யாவும் காலத்தின் குரல்கள்; சமுதாயத்தின் எதிர்பார்ப்புகள்; தமிழ் இன வளர்ச்சிக்கு இன்றியமையாத தேவைகள்; நெருக்கடியின் வெளிப்பாடுகள்.

இறையனார் களவியலுரையின் ஆசிரியரான நக்கீரர் முதல், சிவஞான முனிவர் வரையில் உள்ளவர்களும், அவருக்குப் பின் வந்த உரையாசிரியர்களும் தமிழ் மக்களின் இலக்கியம் இலக்கணம் சமயம் கலை ஆகிய துறைகளின் வளர்ச்சிக்கு

* உலகத் தமிழ் – 1981; பக்கம் – 76, மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம்.

உதவிசெய்து, தமிழ்ப் பண்பாட்டின் மலர்ச்சிக்கும் உயர்ச்சிக்கும் நற்பணி ஆற்றியுள்ளனர்.

அவர்களின் உரைகள் யாவும், பழைய இலக்கியக் கருவூலத்தின் வாயில்களைத் திறக்கின்ற திறவுகோல்கள்; இலக்கணப் புதையலைத் தோண்டி எடுத்துத் தருகின்ற கருவிகள்; சமயச் சிந்தனைக்கு ஒளியூட்டும் தூண்டுகோல்கள்; கருத்துச் சிகரங்களுக்கு நம்மை ஏற்றிவிடுகின்ற ஏணிப்படிகள்; கலைக்கோயில்களில் சுடரொளி பரப்புகின்ற நந்தா விளக்குகள்; வரலாற்றுப் பாதையைக் கடக்க உதவுகின்ற ஊர்திகள்.

இத்தகைய சிறப்புவாய்ந்த உரைகளைக்கொண்டு, தமிழரின் இலக்கியக் கொள்கையையும், திறனாய்வு முறைகளையும் உருவாக்கமுடியும். அவற்றிற்குத் தேவையான கருத்தும், கலைச் சொற்களும் உரைகளில் ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன.

உரைகளைப் பற்றிய ஆய்வு, உரைகளின் உள்ளடக்க விவரக்குறிப்புகளின் தொகுப்பாகவோ, பதிப்பு நூல்களின் பட்டியலாகவோ அமைவதால் பயனில்லை.

உரையாசிரியர்களில் எவரையும் நாடுமொழி இனம் சமயம் காலம் ஆகியவற்றின் சார்புகளைக் கொண்டு மதிப்பிடக்கூடாது. அவர்களுக்குள் உயர்வு தாழ்வு கற்பித்து, அவர்களை வேறுபடுத்தி உரைத்திறனை மிகுதிப் படுத்தவோ, குறைக்கவோ கூடாது. அதே சமயத்தில் அவர்களிடம் காணப்படும் பிற்போக்கான கொள்கை களை மறைக்கவோ, இருட்டில் தள்ளவோ கூடாது. நம்மால் விரும்பப்படுபவர் என்பதற்காகவோ, அனைவராலும் போற்றப் படுபவர் என்பதற்காகவோ அவர்களிடம் உள்ள தாழ்வான சிந்தனைகளை ஏற்கக்கூடாது. கால மாறுபாட்டிற்கும் பண் பாட்டின் முன்னேற்றத்திற்கும் பொருந்திவராத கருத்துகள் எவரிடம் காணப்படினும் புறக்கணிக்கத் தயங்கக்கூடாது.

உரையாசிரியர்களுக்கும் உரைகளைக் கற்பவர்களுக்கும் நடுவே ஆய்வாளர் இருந்து கொண்டு, நந்தனாரின் சிதம்பர தரிசனத்திற்கு இடையூறாக நின்ற நந்தியைப்போல் மறைக்கக் கூடாது. உரைகளை முறைப்படி அறிமுகம் செய்து, உரைத் திறன்களை வெளிப்படுத்தி, ஆய்வுச் சிந்தனைகளை வாசகர்களின் உள்ளத்தில் விதைத்துவிட்டு ஆய்வாளர்கள் ஒதுங்கிவிட வேண்டும்.

உரை ஆய்வில், நமக்கு முன்னோடிகளாய் இருந்து, வழி காட்டியவர்களை, காலப்பாதையில் நமக்கு முன்னே சென்று புதிய சுவடுகளைப் பதித்தவர்களை மறக்கக் கூடாது. பழைய உரைகளைத் தேடிக் கண்டுபிடிக்கவும், அவற்றைப் படித்துப்

புரிந்து கொள்ளவும் நமது முன்னோர்கள் பட்ட தொல்லைகளை நாமும் நமக்குப் பின்னால் வருபவர்களும் படக்கூடாது என்று ஒவ்வோர் ஆய்வாளரும் எண்ணிச் செயலாற்றவேண்டும். உரைகளில் கருத்துச் சுரங்கம் உள்ள இடங்களையும், புதிய சிந்தனை உள்ள பகுதிகளையும், சமன் செய்ய வேண்டிய மேடு பள்ளங்களையும், நிரவல் செய்ய வேண்டிய கரடுமுரடான தடங்களையும் புதிய பாதை அமைக்கவேண்டிய இடங்களையும் அடையாளம் காட்டுவது ஆய்வாளரின் கடமையாகும்.

தரையில் கொட்டிக் கிடக்கின்ற செங்கற் குவியல்களில் உள்ள ஒவ்வொரு செங்கல்லும் கைமாறிமாறி உயரச்சென்று கட்டடக் கலைஞர்களிடம் போய் உயரமான கோபுரம் உருவாவதைப்போல், காலந்தோறும் தோன்றியுள்ள உரைகளில் சிதறிக் கிடக்கின்ற சிந்தனைச் செல்வங்கள் ஆய்வுலகில் மேலே சென்று புதிய கோட்பாடுகள் உருவாக வேண்டும்.

நமக்கு முன்னே குவிந்து கிடக்கும் பழம் பெருஞ் செல்வங்களாகிய உரைகளைப் பற்றிய முறையான ஆய்வுகள் தோன்றி வளரத்தொடங்கிவிட்டன. அவை இன்னும் வளரும்; இனியும் வளரும்; வளர்ந்து எல்லையற்ற தொடுவானம் போல நீண்டு சென்று கொண்டே இருக்கும்.

**இன்னும்**
**நீண்டவழி போக வேண்டும், அம்மா !**

**–கவிமணி**

"கூடலின் ஆய்ந்த
ஒண்தீந் தமிழ்!"

– மணிவாசர்

1

# இலக்கண உரையாசிரியர்கள் – I

## 1. இறையனார் அகப்பொருளுரை

உரைகளில் காலத்தால் முற்பட்டது 'இறையனார் அகப் பொருளுரை' யாகும். இதுவே தமிழில் தோன்றிய முதல் உரைநூல். பின்னர்த் தோன்றிய மற்ற எல்லா உரைகளுக்கும் இது வழிகாட்டியாய் விளங்குகின்றது. இந்த உரையிலிருந்து, உரைகளைப் பற்றிய பல பொதுவான செய்திகளை அறிந்து கொள்ளலாம். இது மிகச் சிறந்த இலக்கியமாய் அமைந்து, கற்போர்க்குப் பேரின்பம் தருகின்றது.

'இறையனார் அகப்பொருள்' சிறந்த அகப் பொருள் இலக்கண நூல். இதனை இறையனார் களவியல் என்றும் வழங்குவதுண்டு. களவியல் என்பது சிறப்பினாற் பெற்ற பெயர் என்றும், 'களவு கற்பு என்னும் கைகோள் இரண்டனுள் களவினைச் சிறப்புடைத்தென்று வேண்டும் இவ்வாசிரியன்' என்றும் இந்நூலின் உரையாசிரியர் கூறுகின்றார். இந்நூல் களவு கற்பு என்ற இரு பிரிவுகளை உடையது. களவினுள் 33 நூற்பாக் களும், கற்பினுள் 27 நூற்பாக்களுமாக 60 நூற்பாக்கள் உள்ளன. ஒட்டக்கூத்தர், இதனை 'அமுத சூத்திரம் அறுபதாய்ச் சமை நூல்' என்று போற்றியுள்ளார்.*

இந் நூலை இயற்றியவர் இறையனார். இறையனாரை இந் நூலின் உரை, மதுரை ஆலவாய்ச் சோமசுந்தரக் கடவுள் என்று குறிப்பிடுகின்றது. நூல் தோன்றிய வரலாற்றை, "அக்காலத்துப் பாண்டியனும் சங்கத்தாரும் பொருளிலக்கணம் பெறாது, இடர்ப்படுவாரைக் கண்டு ஆலவாயிற்பெருமான் அடிகளால் வெளிப்படுத்தப்பட்டது" என்று சுருக்கமாகக் கூறுகின்றது.

* குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழ் – காப்புச் செய்யுள்.

இந்நூலினை இறையனார் என்னும் பெயருடைய புலவர் இயற்றி இருக்கக்கூடும். இறையனார் என்ற பெயர், நூல் தோன்றிய கதை பிறப்பதற்குக் காரணமாய் இருந்தது எனலாம். குறுந்தொகையுள் (பாடல் 2) இறையனார் என்னும் புலவர் இயற்றிய 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற அகப்பாட்டு, நக்கீரரையும் விரிசடைக் கடவுளரையும் பாண்டியனையும் இணைத்துக் கதை புனைய இடந்தந்தது. அவ்வாறே இந் நூலாசிரியர் பெயரும் கதை தோன்ற இடந்தந்தது. இக்கதை தெய்வத்தோடு தொடர்புபடுத்தி நூலின் பெருமையை மிகுதிப் படுத்த எண்ணிய காலத்தில் உருவாகி இருக்கலாம்.. நூல் தோன்றிய கதையை விரிவாகப் பின்வருமாறு உரை கூறுகின்றது:

"அக்காலத்துப் பாண்டியனாடு பன்னீரியாண்டு வற்கடஞ் சென்றது. செல்லவே பசிகடுகுதலும், அரசன் சிட்டரையெல்லாங் கூவி, "வம்மின், யான் உங்களைப் புறந்தரகில்லேன்; என் தேயம் பெரிதும் வருந்துகின்றது. நீயிர் நுமக்கு அறிந்தவாறு புக்கு, நாடு நாடாயின ஞான்று என்னை யுள்ளி வம்மின்" என்றான். என, அரசனை விடுத்து எல்லாரும் போயின பின்றைக் கணக்கின்றிப் பன்னீரியாண்டு கழிந்தது. கழிந்த பின்னர், நாடு மலிய மழை பெய்தது. பெய்தபின்னர் அரசன், "இனி நாடு நாடாயிற்றாகலின், நூல் வல்லாரைக் கொணர்க'' என்று எல்லாப்பக்கமும் ஆட்போக்க, எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் யாப்பதி காரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து, பொருளதி காரம் வல்லாரை எங்கும் தலைப்பட்டிலேம்" என்று வந்தார். வர அரசனும் புடைபடக்கவன்று, "என்னை, எழுத்தும் சொல்லும் யாப்பும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே; பொருளதிகாரம் பெறேமேயெனின், இவை பெற்றும் பெற்றிலேம்" எனச் சொல்லா நிற்ப, மதுரை ஆலவாயில் அழல்நிறக் கடவுள் சிந்திப்பான்: "என்னை பாவம்! அரசர்க்குக் கவற்சி பெரிதாயிற்று; அது தானும் ஞானத்திடைய தாகலான், யாம் அதனைத் தீர்க்கற் பாலம்" என்று இவ்வறுபது சூத்திரத்தையும் செய்து மூன்று செப்பிதழகத்து எழுதிப் பீடத்தின் கீழிட்டான்."

இவ்வாறு சோமசுந்தரக் கடவுள் அருளியதாகக் கூறி இந் நூலை, 'முதல்நூல்' என்றே உரை குறிப்பிடுகின்றது. ஆனால், இவ் அகப்பொருள் இலக்கணம், தொல்காப்பியத்தைப் பின்பற்றி அமைந்துள்ளது. தொல்காப்பியம் கூறும் அகப்பொருள் இலக்கணத்தைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் எளிமையாகவும் இந்நூல் கூறுகின்றது. எனவே, இதனைத் தொல்காப்பியத்தின் வழி நூல் என்பது பொருந்தும்.

## உரையின் இயல்புகள்

இறையனார் அகப்பொருளுரை சிறப்பியல்புகள் பல வாய்ந்ததாகும். இவ்வுரையை நக்கீரர் இயற்றியதாக உரை தோன்றிய வரலாறு குறிப்பிடுகின்றது.

இவ்வுரையைப் படிக்கும் போது, இலக்கண உரையைப் படிக்கின்றோம் என்ற நினைவே எழுவதில்லை. இனிய இலக்கியம் போல், தொட்ட இடமெங்கும் இவ்வுரையில் இலக்கியச்சுவை தேங்கிக் கிடக்கின்றது. எண்ணுந்தோறும் இனிக்கின்ற உவமை, எளிதில் பொருளுணர்ந்து மகிழத்தக்க வகையில் அமைந்த தெளிவான போக்கு, அறிவிற்கு விருந்தாய் உள்ள சிறந்த மேற்கோள், வாகை சூடி வெற்றிப் பெருமிதத்துடன் நடந்து செல்லும் வீரனின் பீடு நடை ஆகியவை யாவும் இவ்வுரையில் உண்டு. பிற உரையாசிரியர்களின் கருத்தைக் கூறி மறுக்கும் கடினமான மறுப்பு, தடை விடை பல எழுப்பி ஆராய்ந்து வலியுறுத்தும் கருத்து, முன்னும் பின்னும் உள்ள கருத்துக்களை நினைவில் கொண்டு பலமுறை ஆழ்ந்து கற்றுத் தெளியும் பகுதி ஆகியவை இவ்வுரையில் இல்லை.

தென்றல் தவழும் இனிய மலர்ச்சோலையுள் புகுந்து வண்ண வண்ண மலர்களையும் செடி கொடிகளையும் கண்டு மகிழும்போது ஏற்படும் இன்ப உணர்வே, இவ்வுரையைக் கற்கும்போது ஏற்படுகின்றது. இந்நூலைப் படித்துவிட்டு மூடும் போது நம் நெஞ்சத்தில் செந்தமிழ் தந்த இன்பம் மண்டிக் கிடக் கின்றது. நூல் முழுவதும் நூலாசிரியரின் குரலைவிட, உரையாசிரியரின் குரலே மேலோங்கி நிற்கின்றது; உரையாசிரியர் கூறும் கருத்தும் விளக்கமுமே கற்போர் நெஞ்சத்தில் ஆழப் பதிகின்றன. உரையாசிரியர் நம் எதிரே நின்று உரையாடுவது போன்ற மன நிலையை உரையின் வாயிலாக உண்டாக்கிவிடு கின்றார்.

இவ்வுரையின் நடையழகும், இலக்கியச் சுவையும் காலந்தோறும் புலவர் உள்ளத்தைக் கவர்ந்திருக்கின்றன. செந்தமிழ் உரைநடை எழுதுவதில் வல்லவராய்—பிறர்க்கு வழி காட்டியாய் விளங்கிய மறைமலையடிகள் இவ்வுரையைப் பின் வருமாறு போற்றிப் புகழ்கின்றார்:

"பளபளப்பான பல நிறச் சலவைக் கற்கள் அழுத்திப் பொன் மினுக்குப் பூசிப் பல பல அடுக்கு மாடங்கள் உடைத்தாய் வான்முகடு அளாய், காண்பார் கண்ணுங் கருத்தும் கவரும் நீர்மைத்தாய் உயர்ந்தோங்கி நிற்கும் எழுநிலை மாடம்போல், ஆசிரியர் நக்கீரனாரது உரை நிவந்து நிற்றலும், அம்மாடத்தின்

அருகே புல் வேய்ந்த குடிலும், ஒடு மூடியதொரு சிற்றிலும் ஏழைமைத் தோற்றமும் உடையவாய்த் தாழ்ந்து நிற்றல்போல், இளம்பூரணர் பேராசிரியர் உரைகள் பீடு குறைந்து நிற்றலும், பிரிந்து இனிது விளங்கா நிற்கும்."[1]

தமிழறிஞர் க. வெள்ளை வாரணனார், இவ்வுரையைச் சிறந்த உரை நடை இலக்கியம் என்று பாராட்டுகின்றார்:[2]

"நூலின் பொருளை வினாவிடைகளால் விளக்கும் தருக்க நூல் மரபும், இயற்கைக் காட்சிகளையும் ஆடவர் மகளிராகிய இருபாலாரின் உள்ளத் துணர்வுகளையும் சொல்லோவியமாகப் புனைந்துரைக்கும் கற்பனைத் திறமும், பாடல்களின் பொருள்களை நயம்பெற விளக்கும் இலக்கியச்சுவை நலமும், உலக வாழ்க்கையின் நுட்பங்களைச் சிறந்த உவமைகளாலும் பழமொழிகளாலும் புலப்படுத்தும் நுட்பமும், தமிழ்மொழியின் இலக்கணங்களைத் தெளிய விளக்கும் திட்பமும் ஒருங்கே பெற்றுத் திகழும் சீரிய உரைநடை இலக்கியம் இறையனார் களவியலுரையாகும்."

## வழிகாட்டி

இவ்வுரையாசிரியர், பின்வந்த உரையாசிரியர்களுக்குச் சிறந்த வழிகாட்டியாக விளங்குகின்றார். பெரும்பாலும் எல்லா உரையாசிரியர்களும் பாயிரம் பற்றி இவர் கூறிய கருத்துக்களையே, இவர் கூறிய முறையிலேயே கூறுகின்றனர். இளம்பூரணர், நச்சினார்க்கினியர், அடியார்க்கு நல்லார், மயிலைநாதர் ஆகியோர், தாம் எழுதிய உரையின் தொடக்கத்தில் எழுதும், பொதுப் பாயிர விளக்கங்களில் இவ்வுரையாசிரியர் குரலின் எதிரொலியே கேட்கின்றது. இவர் கூறிய பல உவமைகளும் சொற்பொருள் விளக்கமும் பிற்கால உரைகளில் சென்று பரவிச் செல்வாக்குடன் பொலிகின்றன. இவ்வுரையாசிரியரின் உரை நடையைப் பின்பற்றி எழுத முயன்றவர் பலர். ஆனால், அம்முயற்சியில் அவர்கள் வெற்றிபெற முடியவில்லை. பல ஆண்டுகளுக்குப் பின்னரும், இறையனார் அகப் பொருளுரை தலைமையும் பெருமையும் பெற்று, ஈடு இணையற்று விளங்குகின்றது.

'என்மனார்' என்னும் சொல்லுக்கு இவர் கூறிய இலக்கணக் குறிப்பை, இளம்பூரணர் அப்படியே மேற் கொள்ளுகின்றார்.

1. மணிவாசகர் வரலாறும் காலமும் – பக். 628.
2. இலக்கணச் சிந்தனைகள் (1973) பக். 142, 145.

முதன் முதலில் அகப்பொருளைக் கற்பனை வளம் செறிந்த இன்ப நாடகமாக ஆக்கி மகிழ்ந்தவர் இவ்வுரையாசிரியரே. கோவை நூல்களுக்கு வித்திட்டவர் இவரே. காலமும் இடமும் அமைத்து நாடக உறுப்பினரைப்படைத்து ஒன்றன் பின் ஒன்றாகப் பல நிகழ்ச்சிகளைக் கதைப் போக்கில் உருவாக்கி இவ்வுரை யாசிரியர் காட்டும் திறன் மகிழ்தற்குரியது.

நம்பி அகப்பொருளும், அதற்குப்பின் தோன்றிய பல அகப் பொருள் இலக்கணங்களும் இவ்வுரையின் ஒளியால் விளக்கம் அடைந்தன.

## உரை தோன்றிய கதை

நூல் தோன்றியதற்குக் கதை உள்ளதுபோலவே உரை தோன்றியதற்கும் கதை உள்ளது.

சோமசுந்தரக் கடவுள் வழங்கிய அகப்பொருள் இலக் கணத்தைப் பாண்டிய மன்னன் பெற்றபின், சங்கப் புலவர்களை அழைத்து, அதற்குச் சிறந்த உரை ஒன்று எழுதுமாறு வேண்டினான். சங்கத்தில் இருந்த புலவர்கள் எல்லாரும் உரை எழுதி, தாம் உரைத்த உரையே நல்லதென்று கூறினர். அதனால் நல்ல உரையினைத் தேர்ந்தெடுக்கக் காரணிகன் ஒருவனைத் தரவேண்டும் என்று புலவர்கள் பாண்டிய மன்னனை வேண்டினர். மன்னன், அப்புலவர்களுக்கு நிகராவார் யாரும் இல்லை என்று கூறிக் காரணிகளை நியமிக்க இயலாமல் வருந்தினான். பின்னர் அப் புலவர்கள், எவ்வாறு சிறந்த உரையைத் தேர்ந்தெடுத்தனர் என்பதைப் பின்வருமாறு களவியலுரை கூறுகின்றது:

"அரசனும் இது சொல்லினான்; யாம் காரணிகனைப் பெறுமாறு என்னை கொல்? என்று சிந்திப்புழி, சூத்திரஞ் செய்தான் ஆலவாயில் அவிர்சடைக் கடவுளன்றே, அவனையே காரணிகனையும் தரல் வேண்டும் எனச் சென்று வரங்கிடத்தும் என்று வரங்கிடப்ப, இடை யாமத்து, 'இவ்வூர் உப்பூரி குடிகிழார் மகனாவான் உருத்திரசன்மன் என்பான் பைங்கண்ணன், புன்மயிரன், ஐயாட்டைப் பிராயத்தான், ஒரு மூங்கைப் பிள்ளை உளன்; அவனை அன்னன் என்று இகழாது கொண்டு போந்து, ஆசனத்தின் மேல் இரீஇக் கீழிருந்து சூத்திரப் பொருள் உரைத்தாற் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்க்கும், மெய்யாயின உரை கேட்டவிடத்து; மெய்யல்லா உரை கேட்டவிடத்து வாளா இருக்கும். அவன் குமார தெய்வம்; அங்கோர் சாபத்தினால் தோன்றினான் என முக்கால் இசைத்த குரல் எல்லார்க்கும் உடன் பாடாயிற்று. ஆக எழுந்திருந்து, தேவர் குலத்தை வலங்கொண்டு

போந்து, உப்பூரி குடி கிழாருழைச் சங்கமெல்லாம் சென்று, இவ்வார்த்தை எல்லாம் சொல்லி, 'ஐயனாவான் உருத்திர சன்மனைத் தரல் வேண்டும்' என்று வேண்டிக் கொடு போந்து, வெளியது உடீஇ, வெண்பூச் சூட்டி, வெண்சாந்து அணிந்து கல்மாப்பலகை யேற்றிக் கீழிழுந்து சூத்திரப் பொருள் உரைப்ப எல்லாரும் முறையே பொருளுரைப்பக் கேட்டு வாளா இருந்து, மதுரை மருதனிளநாகனார் உரைத்தவிடத்து ஒரோவிடத்துக் கண்ணீர் வார்ந்து, மெய்ம்மயிர் நிறுத்தி, பின்னர்க் கணக்காயனார் மகனார் நக்கீரனார் உரைத்தவிடத்துப் பதந்தொறுங் கண்ணீர் வார்ந்து, மெய்ம்மயிர் சிலிர்ப்ப இருந்தான்.* இருப்ப, ஆர்ப்பெடுத்து, 'மெய்யுரை பெற்றாம் இந்நூற்கு!' என்றார்."

இவ்வாறு உரையும் தெய்வத்தோடு தொடர்புபடுத்திச் சிறப்பிக்கப்படுகின்றது.

## முச்சங்க வரலாறு

இவ்வுரைதான் முதன்முதலில், பாண்டிய மன்னர்கள் தமிழ் வளர்க்க நிறுவிய மூன்று சங்கங்களைப் பற்றி விரிவாகக் கூறுகின்றது. ஒவ்வொரு சங்கத்திலும் இருந்த புலவர் பெருமக்கள், அவர்கள் இயற்றிய நூல்கள், சங்கத்தை நிறுவி நடத்திய பாண்டிய மன்னர்கள், சங்கம் இருந்த இடம் போன்ற செய்திகளை விரிவாகக் காணலாம். அப்பகுதி படித்து இன்புறத் தக்கதாகும்.

முச்சங்கங்களின் வரலாற்றினைக் கூறி, இறையனார் அகப் பொருளும் அதன் உரையும், கடைச் சங்க காலத்தை அடுத்துத் தோன்றியவை என்று கூறுகின்றது இவ்வுரை.

அடியார்க்கு நல்லார், இவ்வுரை கூறும் முச்சங்க வரலாற்றினை மேற்கொண்டு மேலும் சில செய்திகளைச் சேர்த்துக் கூறுகின்றார்.

## சில ஐயங்கள்

புலவர் உலகம், இறையனார் அகப்பொருளுரை பற்றிக் காலந்தோறும் பல ஐயங்களை எழுப்பி, ஆராய்ச்சியில் ஈடுபட்டு வந்துள்ளது; உரை கூறும் பல செய்திகளை மறுக்கும் வகையில் வினாக்களை எழுப்பியுள்ளது.

1. இறையனார் அகப்பொருள் நூலை, முதல் நூல் என்று அதன் உரை கூறுகின்றது. ஆனால் தொல்காப்பியம் கூறும் அகப் பொருள் கருத்துகள், பலஇடங்களில் இடம் பெற்றுள்ளன.

* ஊமைக்குக் காது கேட்காது. காது கேட்காத ஊமைச் சிறுவன், சிறந்த அகப்பொருளுரையைக் கேட்டு மதிப்பிட்டான் என்பது விந்தையாக உள்ளது.

எனவே, இதனை வழிநூல் என்று கொள்ளாமல் முதல் நூல் என்று கூறுவது எங்ஙனம் பொருந்தும்?

2. இந்நூல், என்மனார் புலவர் (1,54), என்ப (6,12,25,30,52), மொழிப (18) என்று பல சூத்திரங்களில் முன்னோர் கருத்தையும் மரபையும் (3) சுட்டுகின்றது. இவற்றால், இந்நூலுக்குமுன் வேறு சில அகப்பொருள் நூல்கள் இருந்திருக்கக் கூடும் என்று கருத இடமுண்டு. மேலும் இவ்வுரை, பல தொல்காப்பிய நூற்பாக்களை எடுத்து மேற்கோளாகக் காட்டுகின்றது. அதனால் தொல் காப்பியப் பொருளதிகாரம் இவ்வுரை தோன்றிய காலத்தில் வழங்கி வந்தது என்று உறுதியாகக் கூறலாம். ஆனால், பாண்டிய மன்னன் பொருளதிகாரம் வல்லாரை எங்கும் தேடிக் காணாது வருந்தினான் என்று உரை கூறுகிறது. இவ்வுரை தோன்றிய காலத்திலும் அதற்குப் பல நூற்றாண்டுகள் கழிந்து நமக்கு இக்காலத்திலும் கிடைக்கின்ற தொல்காப்பியப் பொருளதிகாரம் இந்நூல் தோன்றிய காலத்தில் மட்டும் மறைந்து விட்டிருக்குமா?

3. பொருளதிகாரம் வல்ல புலவர் ஒருவரும் இல்லாத போது, இறைனார் அகப்பொருளுக்குச் சங்கப் புலவர் எல்லாரும் சிறந்த உரை எழுதுதலும், தம்தம் உரையே சிறந்தது என்று பாராட்டிக்கொள்ளுதலும் எங்ஙனம் இயலும்? மேலும் அகப் பொருளுக்குச் சிறந்ததொரு உரையினைக் கூறி, தக்க மேற்கோளும் விளக்கமும் காட்டி, விழுமிய பொருளை இனிது விளக்கிய நக்கீரரைப் பொருளதிகாரம் வல்லவர் அல்லர் என்று கூற முடியுமா?

4. இவ்வுரை தோன்றிய காலத்தில், தமிழ் இலக்கணம் நான்காகப் பிரிந்துவிட்டது. தொல்காப்பியர் காலத்தில் இருந்த எழுத்து, சொல், பொருள் என்ற மூன்றுடன் 'யாப்பு' என்ற ஓர் இலக்கணமும் தோன்றி நான்கு பகுதியாகிவிட்டது. "தமிழ் நான்கு வகைப்படும்: எழுத்தும் சொல்லும் பொருளும் யாப்பும் என" என்றும், "எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து'' என்றும் வரும் உரைப்பகுதிகள், 'யாப்பு' என்ற நான்காவது பகுதி தோன்றியதை உணர்த்தும். அகப்பொருளை மட்டுமே பொருளதிகாரம் என்று இவ்வுரை குறிப்பிடுகின்றது. ஏனைய புறப் பொருளும் அணியும், மெய்ப்பாடும், மரபும் என்ன ஆயின? அகப்பொருள் ஒன்றைமட்டும் பொருளதிகாரம் என்பது பொருந்துமா?

5. இவ்வுரை பிற ஆசிரியர்களின் கருத்துகளைப் பல இடங் களில் சுட்டுகின்றது. இனி ஒரு சாரார் என்ப, இனி ஒருவன் சொல்வது, ஒரு சாரார் உரைக்குமாறு, ஒரு திறத்தார் என்ப,

ஒருசார் ஆசிரியர் என்ப-என்று பல இடங்களில் இவ்வுரை குறிப்பிடுகின்றது. ஆதலின் இவ்வுரை தோன்றிய காலத்தில், வேறு பல புலவர்கள் இருந்தனர் என்று கருதலாம். அவர்களுடைய கருத்தும் எழுத்தும் நூல் வாயிலாகவோ உரை வழியாகவோ நாட்டில் பரவிச் செல்வாக்குப் பெற்றிருந்தன என்று கருதுவது பொருந்தாதா?

6. இவ்வுரை செய்தவர் கணக்காயனார் மகனார் நக்கீரர் என்று உரை கூறுகின்றது.

"உப்பூரி குடிகிழார் மகனாவான் உருத்திரசன்மனாவான் செய்தது இந்நூற்கு உரை என்பாரும் உளர்" என்று வேறோர் இடத்தில் குறிக்கப்பட்டுள்ளது. நக்கீரனார் உரை எழுதி, அவர் எழுதியபடியே உரை வழங்கி வந்திருப்பின் இத்தகைய முரண் பட்ட கருத்து எழுந்திருக்குமா?

### காலத்தைப்பற்றி எழும் வினாக்கள்

இறையனார் அகப் பொருளும் அதன் உரையும், கடைச் சங்க காலத்தை அடுத்துத் தோன்றியதாக உரை குறிப்பிடுகின்றது. அக் கருத்தை ஏற்கத் தடைகள் பல உள்ளன.

1. இந் நூலின் உரையில், வார்த்தை, சிட்டர், பிராமணன், சுவர்க்கம், சனம், குமாரசுவாமி, வாசகம், காரணிகன் போன்ற வடசொற்கள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. இவை சங்க இலக்கியங்களில் காணமுடியாதவை.

நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும்
பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே

என்றும், களவொழுக்கத்தினை, "'இல்லது இனியது நல்லது என்று புலவரால் நாட்டப்பட்டதோர் ஒழுக்கம்" என்றும் களவியலுரை கூறும் கருத்துகள் பழந்தமிழ் இலக்கியங்களில் இல்லாதவை.

3. பரத்தையர் பற்றியும் பரத்தையிற் பிரிவு பற்றியும் இவ்வுரை கூறும் கருத்து விந்தையானது. பரத்தையர், தலை மகனின் பெற்றோரால் தலைமகனுக் கென்று வளர்த்து வைக்கப் பட்ட உரிமை என்றும், த்க்க பருவம் வந்ததும் தலைமகனை அப் பரத்தையர் குழலும் யாழும் முழவும் கொண்டு இசை யெழுப்பி அழைப்பர் என்றும், தலைமகன் குரவரது பணி மாறுகொள்ள லாகாது' என்று பரத்தையரைக் காணச் செல்வான். என்று கூறு கின்றது. இக்கருத்துகளையும் சங்க நூல்களில் காண இயலாது.

4. இவ்வுரை, பாண்டிக் கோவையிலிருந்து 325 பாடல்களை மேற்கோளாகத் தருகின்றது.

அக் கோவையின் தலைவனான பாண்டிய மன்னன், நெல்வேலி, வல்லம், விழிஞம், சேவூர், கடையம் முதலான இடங்களில் தன் பகைவரை வென்ற நெடுமாறன் என்றும் சிறப்பிக்கப் படுகின்றான்.* இவன் செங்கோலோச்சிய காலம் (710—765) எட்டாம் நூற்றாண்டு என்பர். அப் பாண்டிய மன்னன்மீது பாடப்பட்ட கோவை தோன்றியது கி.பி. எட்டாம் நூற்றாண்டு ஆயின், அந்நூலிலிருந்து பாடல்களை மேற்கோள் காட்டும் உரையின் காலம் அதற்குப் பிற்பட்டது என்பது விளங்கும்.

நக்கீரர் உடை கண்டபின், ஒன்பது தலைமுறைவரை வாய் மொழியாகவே உரை வழங்கி வந்ததால், காலந்தோறும் பல கருத்துகள் உரையில் சேர்ந்திருக்கும் என்றும், வட சொற்கள் கலந்திருக்கும் என்றும், உரையை ஏட்டில் எழுதிய காலத்தில் பாண்டிக் கோவையிலிருந்து பல பாடல்களை மேற்கோளாகச் சேர்ந்திருக்கக்கூடும் என்று சிலர் கூறுகின்றனர்.

## ஆராய்ச்சியாளர் கருத்து

இறையனார் அகப்பொருள் உரையாசிரியரைப் பற்றி ஆராய்ச்சியாளர்கள் கூறியுள்ள கருத்துகள் நம்மைமேலும் சிந்திக்கத் தூண்டுகின்றன. அவற்றைக் காண்போம்:

**டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர்:** "இறையனார் அகப் பொருளுக்கு இப்பொழுதுள்ள உரை நக்கீரரால் இயற்றப் பட்டதன்று. சிலப்பதிகாரப் பாடல்கள் அதில் மேற்கோள்களாக வந்துள்ளன. ஆகையால், நக்கீரர் அதை இயற்றியிருக்க மாட்டாரென்று நினைக்கிறேன். அவர் மாணாக்கர் பரம்பரையில் உரை மட்டும் வந்ததென்று தோற்றுகின்றது. மேற்கோள்கள் பிற்காலத்து ஒருவரால் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும்".[1]

**தஞ்சை சீனிவாசப் பிள்ளை:** "ஊர் பெயர் தெரியாத ஒருவரால் களவியலுரை பிற்காலத்து எழுதப்பட்டது என்றும், நக்கீரர் எழுதியது அன்று என்றும் புலப்படும்"[2]

**டாக்டர் மு. வரதராசனர்:** "இறையனார் அறுபது சூத்திரங் களில் களவியல் என்ற அகப்பொருள் இலக்கணம் எழுதினார். நக்கீரர் என்னும் பெயர் பூண்ட பிற்காலப் புலவர் ஒருவர் இதற்கு விரிவான உரை எழுதியுள்ளார்[3]."

---

* அரிகேசரி பராங்குச வர்மன்
1. சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும், பக்கம் – 159.
2. தமிழ் வரலாறு 1. பக்கம் – 27.
3. கலைக் களஞ்சியம் 5, பக்கம் 484.

2.11.

### வாக்கியப் பிணைப்பு

பிற உரைகளுக்கு இல்லாத சிறப்புகள் பல, இவ்வுரைக்கு உண்டு. அதனால்தான் இது, மற்ற உரைகளைவிடக் கற்றோர் நெஞ்சத்தில் சிறந்த இடத்தைப் பெற்றுள்ளது.

ஒரு வாக்கியத்தை முடித்து மற்றொரு வாக்கியத்தைத் தொடங்கும்போது, முடித்த வாக்கியத்தின் இறுதியில் உள்ள வினைமுற்றுச் சொல்லை, வினையெச்சமாக்கி அதனைத் தொடங்கும் வாக்கியத்தின் முதலில் வைத்துச் செல்வதை இவ் வுரை முழுவதும் காணலாம்.

"ஒரு ஞான்று நீயும் ஆயமும் என்னிற் சிறிது நீங்கினாயாக, ஈங்கு நின்றேன் ஒரு மணிச்சுனை **கண்டேன்; கண்டு,** வேட்கையான் ஆடுவான் **இழிந்தேன்;** இழுச்சிக் குட்டம் **புக்கேன்; புக்குத்** "தோழியோ!" என நீ கேளாயாயினாய் ஆக, ஒரு தோன்றல் வந்து தோன்றி எனது துயர் நீக்குதற்காகத் தன்கை **நீட்டினான்; நீட்ட** யானும் மலக்கத்தான் நின்கையெனப் **பற்றினேன்; பற்ற** வாங்கிக் கரை மேல் நிறீஇ நீங்கினான்."

இப்பகுதியில் வினைமுற்றும் வினையெச்சமும் தொடர் புடன் அமைந்திருப்பதைக் காணலாம்.

### தெளிவு

நுட்பமான பொருளையும் அரிய கருத்தையும் இவ்வுரை மிகவும் தெளிவாக விளக்குகின்றது. ஒருமுறை கற்றவுடன் கருத்து விளங்கிவிடுகின்றது.

களவொழுக்கம் நன்மை பயக்கும் இயல்பினது என்பதைப் பின்வருமாறு விளக்குகின்றது:

"களவு என்னும் சொற் கேட்டு, காமம் தீதென்பதூஉம் அன்று; மற்றும் அவை நல்ல ஆமாறும் உண்டு; என்னை, ஒரு பெண்டாட்டி தமரொடு கலாய்த்து நஞ்சுண்டு சாவல் என்னும் உள்ளத்தளாய் நஞ்சு கூட்டி வைத்து, விலக்குவாரை இல்லாத போழ்து உண்பல் என்றவிடத்து, அருளுடையான் ஒருவன் அதனைக் கண்டு, 'இவள் இதனை உண்டு சாவாமற் கொண்டு போய் உகுப்பல்' என்று அவளைக் காணாமே கொண்டுபோய் உகுத்திட்டான்; அவளும் சன நீக்கத்துக்கண் நஞ்சுண்டு சாவான் சென்றாள்; அது காணாளாய்ச் சாக்காடு நீங்கினாள். அவன் அக் களவினான் அவளை உய்யக் கொண்டமையின் நல்லூழிற் செல்லும் என்பது. மற்றும் இதுபோல்வன களவாகா, நன்மை பயக்கும் என்பது."

## செய்யுள் நடை

*எதுகை மோனைகள் அமைந்து, இனிய ஓசையுடைய செஞ்சொற்களால் ஆன செய்யுள் நடை பல இடங்களில் உள்ளன.*

**கூழைப் பருவத்து மாழை கலந்த ஏழ்மை நீர்மை**

*என்றும்,*

**அந்தி வானகட்டுச் செங்கோட்டு**
**மதர்வைக் குழவித் திங்களைக் கண்டு**

*என்றும் வருகின்ற இடங்கள் உள்ளத்தைக் கவர்கின்றன.*

*வஞ்சிப்பாவும் அகவற்பாவும் பல அடிகளாகத் தொடர்ந்து வருகின்றன:*

கருவமைந்த மாநகரிற்கு
உருவமைந்த வாயில்மாடம் போலவும்,
அளப்பரிய ஆகாயத்திற்கு
விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும்
வகைமாண்ட நெடுஞ்சுவர்க்குத்
தகைமாண்ட பாவை போலவும்

*என்றும்,*

புதையிருள் இரியல் போக,
பொன்தாழ் அருவி மணிநெடுங்கோட்டு
உதயம் என்னும் மணிவரை யுச்சி
உலகு துயில் பெயர்த்துத் தோன்றிய
வளர்ஒளி இள ஞாயிற்றின்
வனப்பொழித்த திருவொளி மழுங்கியது

*என்றும்,*

பொரிப்புன்கும் புன்னாகமும்
முருக்கொடு முகைசிறந்து
வண்டறைந்து தேனார்ந்து
வரிக்குயில்கள் இசைபாட,
தண்தென்றல் இடைவிராய்த்
தனியவரை முனிவுசெய்யும்
பொழிலது நடுவண்

*என்றும் வருகின்ற இடங்களில் வஞ்சிப்பா நடை உள்ளது.*

*அகவற்பா நடை காணப்படும் இடங்கள் உள்ளன. அவற்றுள் சில:*

**கோங்கும் வேங்கையும் குரவமும் விரிந்து**
**நாகமும் திலகமும் நறவும் நந்தியும்**

*என்றும்,*

விசும்பு துடைத்துப் பசும்பொன் பூத்து
வண்டு துவைப்பத் தண்டேன் துளிப்பதோர்
வெறியுறு நறுமலர் வேங்கை கண்டாள்

என்றும்,

கருங்குழற் கற்றை மருங்கு திருத்தி
அளகமும் நுதலும் தகைபெற நீவி
ஆகமும் அணிபெறத் தைவந்து
குளிர்ப்பக் கூறித் தளிர்ப்ப முயங்கி

என்றும் வருகின்ற இப் பகுதிகளில், விழுமிய ஓசை, வளமான சொற்கள், நயமான கற்பனை, கற்கும் தோறும் இன்பம் பயக்கும் இலக்கியச் சுவை ஆகிய யாவும் உள்ளன.

## பொருளும் விளக்கமும்

சில சொற்களின் பொருளைத் தெளிவாக இவ்வுரை விளக்குகின்றது. 'அன்பு' என்பதற்குப் பின்வருமாறு விளக்கம் தருகின்றது.

"குடத்துள் விளக்கும், தடற்றுள் வாளும் போல இதுகாண் அன்பு என்று போதத் திறந்து காட்டலாகாது. அன்புடையரான குணங்கண்ட விடத்து இவை உண்மையான் ஈங்கு அன்பு உண்டென்று அனுமித்துக் கொள்ளற்பாற்று. அன்புடையரான குணம் யாவையோ எனின்—சாவிற் சாதல், நோவின் நோதல், ஒண்பொருள் கொடுத்தல், நன்கினிது மொழிதல், புணர்வு நனி வேட்டல், பிரிவு நனியிரங்கல் என இவை".

இவ்வாறே இவ்வுரை தலைமகனுக்குரிய அறிவு நிறை ஓர்ப்பு கடைப்பிடி என்ற நான்கு குணங்களையும், தலைமகளுக்குரிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்ற நான்கு குணங்களையும் விளக்கிக் கூறுகின்றது (சூத்-2).

தமிழ் என்பதற்கு, இவ்வுரை அகப்பொருள் என்று பொருள் கூறுகின்றது. "இந்நூல் என்நுதலிற்றோ எனின், தமிழ் நுதலிற்று" என்று கூறுவதால் இக்கருத்தை அறியலாம்.

## இலக்கணக் குறிப்புகள்

இவ்வுரையில் பல இலக்கணக் குறிப்புகள் உள்ளன. பல இலக்கணத் தொடர்களுக்கு நல்ல விளக்கம் கூறப்பட்டுள்ளன.

பொதுப்பாயிரம், சிறப்புப்பாயிரம் ஆகியவற்றை இனிது விளக்கி அவற்றின் உட் பிரிவுகளையும் உரை கூறுகின்றது. ஐந்திணைக்கும் உரிய முதல், கரு, உரிப் பொருள்களும், எண்வகை மணமும் விரிவாக விளக்கப்படுகின்றன.

ஆற்றொழுக்கு முதலிய நான்கு வகையான சூத்திரக் கிடக்கையும் பொருள் கோளும் தக்க எடுத்துக்காட்டுகளுடன் விரித்துரைக்கப்படுகின்றன. விற்பூட்டு, விதலை யாப்பு, பாசி நீக்கு, கொண்டு கூட்டு, ஒருசிறைநிலை என ஐந்து வகையாகப் பொருள்கோள் கூறப்பட்டுள்ளன. இவற்றை ஏனைய உரை யாசிரியர் கூறும் கருத்துக்களுடன் ஒப்பிட்டுக் காணலாம். கருத்தன், ஏதுக் கருத்தன், கருமக் கருத்தன் ஆகியவற்றிற்கு நல்ல விளக்கம் இவ்வுரையில் கூறப்பட்டுள்ளது.

## உவமைக் களஞ்சியம்

இவ்வுரை முழுவதும் சிறந்த உவமைகள் பல உள்ளன. வேறு எவ்வுரையிலும் இத்தனை உவமைகள் இல்லை என்னலாம். உவமைகளின் சிறப்பே, உரையாசிரியரின் புலமை மாண்பை வெளிப்படுத்தும் சிறந்த கருவியாய் உள்ளது. இவ்வுரையில் உள்ள பல உவமைகளை, பிற்கால உரையாசிரியர்கள் எடுத்தாண் டுள்ளனர்.

'கொழுச் சென்றவழித் துன்னூசி இனிது செல்லுமாறு போல'; கருவமைந்த மாநகர்க்கு உருவமைந்த வாயில் மாடம் போலவும் அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும் தகைமாண்ட நெடுஞ்சுவர்க்கு வகைமாண்ட பாவை போலவும்—என்று பாயிரத்தின் சிறப்பை விளக்க இவ் வுரையாசிரியர் கூறிய உவமைகளை நச்சினார்க்கினியர் தொல் காப்பியப் பாயிர உரையில் எடுத்தாளுகின்றார்; ஏனைய உரை யாசிரியர்களும் மேற்கொள்ளுகின்றனர்.

கடுத்தின்னாதானை, கட்டிபூசிக் கடுத்தீற்றியவாறு போல என்ற உவமையால் அக்கால மருத்துவ முறையினை அறியலாம்.

"இருட்டகத்து விளக்குக் கொண்டு புக்கால், விளக்கு வாராத முன்னரும் இருள் நீங்காது; விளக்குவந்த பின்னரும் இருள் நீங்காது; விளக்கு வருதலும் இருள் நீக்கமும் உடனே நிகழும். அதுபோலக் காட்சியும் ஞானமும் ஒழுக்கக் குணங்களது தன்மையழிவும் உடனே நிகழும். விளக்கினைக் காட்சியாகக் கொண்டு, ஞானவொழுக்கங்களை இருளாகக் கொள்க" என்று, உவமை, பொருள் ஆகிய இரண்டையும் இனிது விளக்குகின்றார் உரையாசிரியர்.

தலைவனும் தலைவியும் ஒன்று சேர்தல், "வடகடலிட்ட ஒரு நுகம் ஒரு துளை, தென்கடலிட்ட ஒரு கழி சென்று கோத்தாற் போலவும், வெங்கதிர்க் கனலியும் தண்கதிர் மதியமும் தம் கதி வழுவித் தலைப் பெய்தாற் போலவும்" அரிதின் நிகழும் என்று கூறப்பட்டுள்ளது (சூத்.2). "வேட்கை எல்லா உணர்வினையும்

நீக்கித் தானேயாய் நாண்வழிக் காசு போலவும், நீர்வழி மிதவை போலவும் பான்மை வழியோடி இருவரையும் புணர்விக்கும்" என்று தக்க உவமைகளால் விளக்கப்படுகின்றது. தலைமகனைப் பிரிந்து வருந்தும் தலைமகள்நிலை பல உவமைகளுடன் புனையப் படுகின்றது.

"கார் மருங்கின் மின்னுப் போலவும், நீர் மருங்கிற் கொடிபோலவும், தளிரும் முறியும் ததைந்து, குளிரும் நளிரும் கவினி எழா நின்றதோர் கவின்பெறு கொடிப் போலும் காரிகை, கண்ணாடி மண்டிலத்து ஊது ஆவி போலக் காண ஒளி மழுங்கி, கனல் முன் இட்ட மெழுகுப்பாவை போல மனம் உருகிப் பசந்து காட்டினாள்."

தலைவியைக் காணாது வருந்தும் தலைவனைப் பாங்கன் இடித்துரைக்கும் பகுதி, பல இனிய உவமைகளுடன் பொலி கின்றது: "குன்றம் உருண்டால் குன்றி வழியடை யாகாதவாறு போலவும், யானை தொடுவுண்ணின் மூடுங்கலம் இல்லது போலவும், எம்பெருமான் நின் உள்ளம் அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடியின் வரைத்தன்றிக் கைம்மிக்கு ஓடுமேயெனின் நின்னைத் தெருட்டற் பால நீர்மையார் உளரோ?" (சூத்.3)

"மூடியிருந்து வேவதோர் கொள்கலம் மூடியது திறந்த விடத்து, ஆவி எழுந்து முன் நின்ற வெப்பம் நீங்கினாற் போல" என்ற சிறந்த உவமை இருமுறை இடம் பெறுகின்றது (சூத். 18,30).

'வேலேறுபடத் தேளேறு மாய்ந்தாற் போல' (சூத். 2), 'பள்ளத்து வழி வெள்ளம் போல' (சூத்.3), 'கோடையால் தெறப்பட்டு வாடி நின்ற சந்தன மரம் மழை பெற்றுத் தளிர்த்தாற் போல' (சூத்.3), 'கெடுத்துத் தேடும் நன்கலம் எடுத்துக் கொண்டாற் போன்று' (சூத்.3) ஆகிய உவமைகள் மிகச் சிறப்பாய்ப் பொருளை விளக்குகின்றன.

## மேற்கோள் செய்யுட்கள்

இவ்வுரை, அகநானூறு நற்றிணை குறுந்தொகை ஆகிய தொகை நூல்களிலிருந்து பல செய்யுள்களை ஆங்காங்கே மேற்கோள் காட்டியுள்ளது.

இடம்விளங்கா மேற்கோள் பாடல்கள் சில உள்ளன. அவை இலக்கியச்சுவை மிகுந்தவை; கற்கும் தோறும் இன்பமூட்ட வல்லவை. "பையுள் மாலை" (சூத்.7), 'ஏனல் காவல்' (சூத்.7), 'வெள்ளாங் குருகின்' (சூத்.9), 'நெருநலு முன்னாள்' (சூத்.12) என்னும் தொடக்கத்தையுடைய அகப் பாடல்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. அவை, தொகை நூலில் இடம் பெறாத

பழைய அகப்பாடல்கள். தொகுத்தவை போக எஞ்சிய பாடல்களாக இவை இருந்திருக்கக்கூடும். பிற உரையாசிரியர் களும் பல பழம் பாடல்களை எடுத்துக் காட்டுகின்றனர்.

## காலத்தின் அடிச்சுவடு

இவ்வுரை, பலவிடங்களில் தான் தோன்றிய காலத்து மக்களின் வாழ்க்கை, நாகரிகம், அரசியல், பழக்கவழக்கம் ஆகிய வற்றைக் குறிக்கின்றது.

கணவனை இழந்த பெண்டிர்க்கு அக்கால மக்களிடம் மதிப்பும் செல்வாக்கும் இல்லை என்பதையும், கைம்பெண்டிர் புறக்கணிக்கப்பட்டனர் என்பதையும் பின்வரும் உரைப்பகுதி உணர்த்தும்:

''கண்டீரன்றே, குடுமிக்கூந்தலில் நறுநெய் பெய்து, கொண்டானிற் பின்னையும் இருந்து, சோறு தின்று வாழ்கின்றாள்; ஓ கொடியளே காண்' என்று நித்தல் பழிதூற்றப்பட்டிருந்து பின்னுமே ஒருநாட் சாவல்; அதனான் இன்றே சாவல்' எனச் சாவவும் பெறும்'' *(சூத்.1)*

அக்காலத்தில் இருந்த தண்டனைகளைக் கீழேவரும் பகுதி உணர்த்துகின்றது:

“மற்று உலகத்துக் களவாயின எல்லாம், கைகுறைப்பவும் கண் சூலவும் கழுவேற்றவும் பட்டுப் பழியும் பாவமும் ஆக்கி நரகத் தொடக்கத்துத் தீக்கதிகளில் உய்க்கும்”

திருச்சிராப்பள்ளியின் ஒரு பகுதியான உறையூர் முற்காலத்தில் சிறப்புடன் விளங்கிற்று என்பதை, “ஊர் எனப் படுவது உறையூர் என்ற விடத்துப் பிறவும் ஊருண்மை சொல்லி, அவற்றுள் எல்லாம் உறையூர் சிறப்புடைமை சொல்லுப” என்ற பகுதியால் உணரலாம்.

அக்கால அரசியலை உணரச் சில பகுதிகள் துணை புரிகின்றன. மன்னன், அரசியல் தலைவர்களில் தகுதி வாய்ந் தவர்க்கு ‘ஏனாதி’ என்ற பட்டம் அளித்து, மோதிரம் அணி வித்தான் என்பதை, “ஏனாதி மோதிரம் செறித்தல் திருவுடையான் ஒருவன், ஏனாதி மோதிரம் செறிக்கும் அத்திரு அவன் செறிகின்ற பொழுதே உண்டாயிற்று அன்று; முற்கொண்டு அமைந்து கிடந்தது” *(சூத்-2)* என்ற பகுதியால் உணரலாம். ஊர்காக்கும் காவலாளர் இரவில் கை விளக்கினோடு திரிந்தனர் என்பதை, “ஊர்காத்தல் இடம் காத்தல் என இவற்றைக் கடிது காத்தும் என்று, காவலாளர் ஏமஞ் சூழ்ந்து கைவிளக்கினோடு திரிவார்” என்ற பகுதி உணர்த்தும் *(சூத்-16)*.

அக்காலப் பெருநகரங்களில் நடந்த திருவிழாக்களை "மதுரை ஆவணி அவிட்டமே, உறையூர்ப் பங்குனி உத்தரமே, கருவூர் உள்ளி விழாவே என இவை போல்வன" என்ற பகுதி குறிப்பிடுகின்றது.

இவ்வாறு இவ் உரையாசிரியர் வாழ்ந்த காலத்தின் அடிச்சுவடு இவர் இயற்றிய உரைநூலில் நன்கு பதிந்துள்ளது.

**உலக அறிவு**

இவ்வுரையாசிரியர் உலக அறிவு மிக்கவர் என்பதற்குச் சான்றுகள் பல தரலாம்.

**பரத்தையிற் பிரிந்த கிழவோன் மனைவி**
**பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்**
**நீத்தகன்று உரைதல் அறத்தாறு அன்றே**

என்ற சூத்திரத்திற்குப் பின் வருமாறு விளக்கம் எழுதித் தம் உலக அறிவைப் புலப்படுத்துகின்றார்:

"பூப்புப் புறப்பட்ட முந்நாளும் உள்ளிட்ட பன்னிரு நாளும் என்னோ எனின்—பூப்புப் புறப்பட்ட கூடி உறைய, படுங்குற்றம் என்னோ எனின்—பூப்புப் புறப்பட்ட ஞான்றுநின்ற கரு, வயிற்றிலே அழியும்; இரண்டாம் நாளின் நின்ற கரு, வயிற்றிலே சாம்; மூன்றாம் நாள் நிற்குங்கரு, குறுவாழ்க்கைத் தாம்; வாழினும் திரு இன்றாம்; அதனால் கூடப்படாது என்ப."

செல்வர் வாழ்ந்த பெரிய இல்லங்களின் பகுதிகளைப் பின்வருமாறு இவர் விளக்குகின்றார்:

"அட்டில் (சமையல் அறை), கொட்ட காரம் (நெல் முதலிய பண்டம் வைக்கும் அறை), பண்டகசாலை (அணிகலன் முதலியவை வைக்கும் மனையகத்து உறுப்பு), கூட காரம் (மேன்மாடம்), பள்ளியம்பலம் (உறங்கும் இடம்), உரிமையிடம் (அந்தப் புரம்), கூத்தப் பள்ளி (நாடக அரங்கு) எனும் மனையகங் களும்; செய் குன்றும் இளமரக்காவும் பூம்பந்தரும் விளையாடும் இடமும் எனும் இல்வரையகங்களும்" (சூத். 21)

**வாய்மொழிக் கல்வி**

பாடம் சொல்லுகின்ற முறையில், மாணவர் எழுப்பும் வினாவும், அதற்கு ஆசிரியர் விடுக்கும் விடையுமாய்ப் பல பகுதிகள் உள்ளன. அவற்றுள் சில:

"பாயிரம் என்ற சொற்குப் பொருள்யாதோ எனின், புறவுரை என்றவாறு. ஆயின் நூல் கேட்பான் புகுந்தோன் நூல் புறவுரை கேட்டு என்பயன் எனின், நூற்குப் புறனாக வைத்தும் நூற்கு இன்றியமையாதது, ஆதலின் என்க. என் போலவோ

எனின், கருவமைந்த மாநகர்க்கு உருவமைந்த வாயில் மாடம் போலவும், அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும், தகை மாண்ட நெடுஞ்சுவர்க்கு வகைமாண்ட பாவை போலவும் என்பது. ஆதலின் பாயிரங் கேட்டே நூல் கேட்கப்படும்."

"புணராத முன்னும் புணர்ந்த பின்னும் ஒத்த அன்பினனாய் நின்ற தலைமகன் பிரியும் என்றுமோ பிரியான் என்றுமோ எனின், பிரியும் என்றுமே எனின், அன்பிலன் ஆயினானாம்; என்னை, பிரிவு அன்பிற்கு மறுதலையாகலான். இனிப் பிரியானே எனினும், அன்பிலன் ஆயினானாம். என்னை? பிரியாதிருப்ப இவ்வொழு கலாறு பிறர்க்குப் புலனாம்; ஆகவே அவள் இறந்து படும்; அவள் இறந்து பாட்டிற்குப் பரியான் ஆயினானாம். ஆகவே மூன்றாவது செய்யப்படுவது இல்லையாலோ எனின் பிரியும் என்பது. ஆயின், அன்பின்மை தங்காதோ எனின், தங்காது. பிரிவும் அன்பினானே நிகழுமாறு சொல்லுதும்."

இப் பகுதிகளை வினா விடை வடிவில் ஒன்றன் கீழ் ஒன்றாக எழுதினால், பாடம் சொன்ன பண்டைய முறையின் அமைப்பு வெளிப்படும்.

## தூண்டுகோல்

களவியலுரைப் பகுதிகளில் சில, ஆராய்ச்சிக்குத் தூண்டு கோலாய் அமைகின்றன.

கடைச்சங்கப் புலவர்கள் இயற்றிய நூல்களைப் பின் வருமாறு உரை கூறுகின்றது:

"அவர்களாற் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும் குறுந்தொகை நானூறும் நற்றிணை நானூறும் புறநானூறும் ஐங்குறு நூறும் பதிற்றுப் பத்தும் நூற்றைம்பது கலியும் எழுபது பரிபாடலும் கூத்தும் வரியும் சிற்றிசையும் என்று இத் தொடக்கத்தன."

இங்கே 'பத்துப்பாட்டு' இடம் பெறவில்லை! இவ்வுரை தோன்றிய காலத்தில் பத்துப்பாட்டு, தொகுக்கப் பெறவில்லை என்பதா?

களவியலுரை, குறிஞ்சிப் பாட்டைப் பெருங் குறிஞ்சி என்ற பெயருடன் மேற்கோள் காட்டுகின்றது. ஆதலின், பத்துப்பாடல் களும் தனித்தனிப் பெயருடன் வழங்கி இருக்க வேண்டும். இவ்வுரை தோன்றிய காலத்திற்குப் பின்னர், பத்துப் பாடல்களும்

தொகுக்கப் பெற்று, 'பத்துப்பாட்டு' என்று பெயர் இடப்பட்டிருக்க வேண்டும்.

களவியலுரை காலத்தில் 'யாப்பிலக்கணம்' பொருள் இலக்கணத்திலிருந்து பிரிந்து, தனி இலக்கணம் ஆயிற்று. தொல்காப்பியர் காலத்தில் மூன்று பகுதியாக இருந்த இலக்கணம், எழுத்து சொல் பொருள் யாப்பு என நான்காயிற்று. இதனை,

> எழுத்ததி காரமும் சொல்லதி காரமும்
> யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து
> 'பொருளதிகாரம் வல்லாரை எங்கும் தலைப்பட்டிலேம்!'
> என்று வந்தார்.

என்ற பகுதியால் உணரலாம்.

தோன்றிப் பூவை (மருதோன்றி-மருதாணி), பிற்காலத்து உரையாசிரியர்கள் 'காந்தள் மலர்' என்று தவறாகக் கருதிப் பொருள் எழுதி விட்டனர். ஆனால் களவியலுரை, காந்தளைக் குறிஞ்சி நிலத்துக்குரிய பூவாகவும், தோன்றியை முல்லை நிலத்துக்குரிய பூவாகவும், (கருப் பொருள்களை விளக்கும் இடத்தில்) குறிப்பிடுகின்றது.

இத்தகைய இடங்கள் ஆராய்ச்சியாளர் சிந்தனையைத் தூண்டுகின்றன.

## புகழ்பூத்த புலமை

இறையனார் அகப் பொருளுரையை வழங்கிய உரையாசிரியரை மறைமலையடிகள் பின்வருமாறு புகழ்கின்றார்:

> இறைவன் கண்ட பொருள்வரம்பு அறிந்து
> சொல்நெறி மாட்சியும் பொருள் நெறிமாட்சியும்
> அளவையின் விளைவும் தெளிவுற விரித்து
> சுவைபெற உரைத்த நவையில் புலமையும்;
> மறைப்பொருள் குறிப்பு நெறிப்பட ஆய்ந்து,
> சிவனையே முதல்எனச் சிவணிய காட்சியும்
> சீரிதின் இயைந்த கீரன்*

இத்தகைய புகழ்மொழி பல கூறிப் புலவர் உலகம் காலந்தாறும் இவரைப் போற்றும்; புகழ் பூத்த புலமையாளராய்—உரையாசிரியர்களுக்குத் தலைவராய் இவர் விளங்குவார்.

* திருவொற்றியூர் மும்மணிக்கோவை – 19 (55–61)

## 2. தொல்காப்பிய உரையாசிரியர்கள்

தொல்காப்பியம் என்னும் பழம்பெரும் இலக்கண நூல் தமிழ் மொழியின் தொன்மைக்கும் சிறப்பிற்கும் சான்றாய் விளங்குகின்றது. வளமாக வாழ்ந்த தமிழினத்தின் உயர்ந்த கொள்கைகளையும் எண்ணங்களையும் உலகிற்கு உணர்த்தும் விழுமிய நூலாய் இது ஒளிர்கின்றது. இதனை இயற்றிய தொல்காப்பியரின் குரல், காலத்தையும் இடத்தையும் கடந்து வந்து தெளிவாக ஒலிக்கின்றது. தொல்காப்பியம் தனக்குப் பின் தோன்றிய பல இலக்கண இலக்கியங்களுக்கு எல்லாம் தலைமை தாங்கி வழி காட்டி நடத்திச் செல்லுகின்றது.

தொல்காப்பியத்தின் கருத்தை உணரவும் உணர்த்தவும் புலவர் பெருமக்கள் காலந்தோறும் முயன்று வந்தனர். அம் முயற்சியின் விளைவாய் உரைகள் பல பெருகின. உரைவளம் கொண்ட பெருநூலாய்த் தொல்காப்பியம் திகழ்கின்றது.

தொல்காப்பியம் தோன்றிய காலத்தைப்பற்றி அறிஞர் பெரு மக்களிடையே கருத்து வேறுபாடு மிகுதியாக உண்டு. இந்நூல் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது என்பது பெரும் பான்மையோர் ஒப்புக்கொண்ட முடிவாகும். தொல்காப்பியர் பொருளதிகாரத்தில், தமிழகத்தை ஆண்ட மூவேந்தர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். கி.பி. 250-க்குப் பிறகு மூவேந்தர்கள் ஆட்சி மறைந்துவிட்டதை வரலாறு கூறுகின்றது. எனவே, தொல் காப்பியர் மூவேந்தரும் செங்கோலாச்சிய காலத்தில் தொல் காப்பியத்தை இயற்றினார் என்னலாம்.

தொல்காப்பியத்திற்கு இளம்பூரணரே முதன்முதலில் உரை கண்டார். இவரது காலம் பதினோராம் நூற்றாண்டு என்பர். இளம்பூரணர் காலம் வரை—தொல்காப்பியம் தோன்றிப் பல நூறு ஆண்டுகள் வரை, உரை இல்லாமலே கற்கப்பட்டு வந்ததா என்ற வினா எழக்கூடியதே. ஆனால் இந்நாள் வரை, இளம்பூரணரே தொல்காப்பியத்தின் முதல் உரையாசிரியர் என்ற கருத்து நிலவி வருகின்றது. இளம்பூரணர் தம் உரைகளில் பிற உரைகளாகச் சில கருத்துகளைத் தெரிவிக்கின்றார். உரை இயற்றியவர் பெயரைக் குறிப்பிடவில்லை.

இளம்பூரணர் தொடங்கி வைத்த உரைப்பணி, பல வகையாக வளர்ச்சி பெற்றது. இவரது கருத்துகளை ஏற்று, புதிய இலக்கண நூல்களைச் சிலர் செய்தனர். எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் ஆகிய இரண்டிலும் இவர் கூறிய கருத்துகளைக் கொண்டு, நேமிநாதமும் நன்னூலும் தோன்றின. பின்னால்

தோன்றிய அகம், புறம், யாப்பு, அணி பற்றிய நூல்களும், ஆங்காங்கே இவரது கருத்துகளை மேற்கொண்டுள்ளன.

தொல்காப்பியம் முழுமைக்கும் முதன் முதலாக உரை இயற்றியதால் இளம்பூரணர்க்கு 'உரையாசிரியர்' என்ற பெயர் ஏற்பட்டது. இவருக்குப் பின் வந்த தொல்காப்பிய உரையாசிரியர்கள் அனைவரும் இவர் உரையைக் கற்றுத் தெளிந்த பின்னரே தம் கருத்தை விளக்கிப் புதிய உரை கண்டனர்.

இளம்பூரணர்க்குப் பின்னர்த் தோன்றிய சேனாவரையர் சொலலதிகாரத்திற்கு மட்டும் சிறந்ததோர் உரை இயற்றினார்.

பேராசிரியர், பொருளதிகாரத்திற்கு விரிவாக உரை இயற்றினார். நச்சினார்க்கினியர், தொல்காப்பியம் முழுமைக்கும் விரிவான உரை கண்டார். இவருக்குப் பின், தெய்வச் சிலையார், கல்லாடர் ஆகிய இருவரும் சொல்லதிகாரத்திற்கு மட்டும் உரை இயற்றினர். பழைய உரை ஒன்றும் சொல்லதிகாரத்திற்கு உள்ளது. பழங்காலத்தில் தோன்றிய உரைகள் இவைகளே ஆகும்.

பழைய உரை ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் இயல்பு உள்ளது. இளம்பூரணர் உரை தமிழ் மரபை உணர்த்தும் உரை என்னலாம். சேனாவரையர் உரை வடமொழி இலக்கணக் கொள்கையைத் தமிழின்மீது திணிக்கும் உரை என்பது பொருந்தும். பேராசிரியர் உரை இலக்கண இலக்கிய ஆராய்ச்சி நிரம்பிய உரையாக உள்ளது. நச்சினார்க்கினியர் உரை இலக்கியச் சுவை நுகர்ச்சிக்கு உறுதுணை புரிகின்றது. தெய்வச்சிலையார் உரையில் சில இடங்களில் புதுமை ஒளி காணப்படுகின்றது. கல்லாடர் உரை முன்னைய உரைகளைத் தழுவி எழுதப்பட்ட சார்பு உரையாக உள்ளது.

பதினேழாம் நூற்றாண்டில் மீண்டும் தொல்காப்பிய ஆராய்ச்சி தொடங்கியது. இதனைத் தொடங்கி வைத்தவர் சிவஞான முனிவர். தொல்காப்பியப் பாயிரம், முதற் சூத்திரம் ஆகிய இரண்டிற்கும் விருத்தியுரை எழுதினார் இவர். இவ்விருத்தியுரை இலக்கண ஆராய்ச்சிக் கருவூலமாய்த் திகழ்கின்றது. இவரை அடுத்துச் சோழவந்தான் அரசன் சண்முகனார் தொல்காப்பியப் பாயிரத்திற்கும் முதற் சூத்திரத்திற்கும் விருத்தியுரை எழுதினார். அரசன் சண்முகனார் எழுத்ததிகாரத்தில் நுன் மரபு, மொழி மரபு என்ற இரு பகுதிகளுக்கும் உரை எழுதினார் என்றும், அவ்வுரைப் பகுதிகள் கிடைக்கவில்லை என்றும் கூறுவர்.[1]

1. தொல்காப்பியச் செல்வம் (1965) பக்கம் 113.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக இருந்து, தமிழ்த்தொண்டு ஆற்றிய டாக்டர் ச. சோமசுந்தர பாரதியார் பொருளதிகாரத்தில் அகத்திணையியல், புறத்திணையியல, மெய்ப்பாட்டியல் ஆகிய மூன்றிற்கும் ஆராய்ச்சி உரை இயற்றியுள்ளார்.

பின்னங்குடி ச. சுப்பிரமணிய சாஸ்திரியார் சொல்லதிகாரத்திற்கு உரை இயற்றியுள்ளார். இவ்வுரையில் வடமொழி இலக்கணக் கொள்கையை வலிந்து புகுத்திய இடங்களும், தமிழ் மொழி மரபுடன் பொருந்தாத முடிபுகளும் உள்ளன.

தொல்காப்பியத்தையும், உரைகளையும் பதிப்பித்த போது அடிக் குறிப்பாகப் பல அரிய ஆராய்ச்சிக் குறிப்புரைகளைப் பலர் எழுதியுள்ளனர். இளவழகனார், சி. கணேசையர் இருவரும் தொல்காப்பியம் முழுமைக்கும் குறிப்புரை எழுதியுள்ளனர். எழுத்ததிகாரத்திற்கு ஞா. தேவநேயப் பாவாணரும், சொல்லதிகாரத்திற்கு ஆ. பூவராகம் பிள்ளையும், கு. சுந்தரமூர்த்தியும் குறிப்புரையும் விளக்கமும் எழுதியுள்ளனர்.

இக்காலத்தில் தொல்காப்பிய ஆராய்ச்சி நூல்களிலும் பல உரைவிளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. மு. இராகவ ஐயங்கார் இயற்றிய பொருளதிகார ஆராய்ச்சி, கா. சுப்பிரமணிய பிள்ளை இயற்றிய பழந்தமிழர் நாகரிகம் (பொருளதிகார ஆராய்ச்சி), கி. வா. ஜகந்நாதன் எழுதிய பயப்படாதீர்கள் (எழுத்ததிகார விளக்கம்), வாழும் தமிழ் (சொல்லதிகார ஆராய்ச்சி), வெங்கடராஜுலு ரெட்டியார் எழுதிய எழுத்ததிகார ஆராய்ச்சி, க. வெள்ளைவாரணனார் எழுதிய தொல்காப்பியம், லெ.ப.கரு. இராமநாதன் செட்டியார் இயற்றிய தொல்காப்பியச் செல்வம், சி. இலக்குவனார் இயற்றிய தொல்காப்பிய ஆராய்ச்சி ஆகிய நூல்கள் குறிப்பிடத் தகுந்தவை. தமிழறிஞர் சுப்பு ரெட்டியாரும் புலவர் குழந்தையும் பொருளதிகாரத்திற்குச் சிறந்த முறையில் ஆய்வுரை எழுதியுள்ளனர்.

## 3. இளம்பூரணர்

பழம்பெரும் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் முழுமைக்கும் முதன்முதலில் உரைகண்டு அதனைத் தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு நன்கு அறிமுகப்படுத்திய பெருமை இளம் பூரணரையே சாரும். "பிறர் உட்புகுந்து காண முடியா வண்ணம், இருண்டு கிடந்த தொல்காப்பியம் என்னும் சரக்கறையுள், தம் அறிவென்னும் அவியா விளக்கைக் கொண்டு துருவி, ஆங்கே

குவிந்துகிடந்த அரதனக் குவியல்களை உலகிற்கு முதலில் விளக்கிக் காட்டிய பெருந்தகையார்; அறிதற்கரிதாகிய தொல்காப் பியக் கடலைத் தம் மதிவலி கொண்டு கடைந்து, முதன் முதலில் இலக்கண அமுதம் அளித்த பெரியார்" என்று புலவர் போற்றும் புகழுக்கு உரிய சான்றோர் இவர்.*

இவருடைய உரை, சேனாவரையரும் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் மிக நயமாகத் தொல்காப்பியத்திற்கு உரை எழுத உறுதுணையாய் அமைந்தது. தொல்காப்பியம் போன்ற பழம்பெரும் இலக்கண நூல்களுக்கு, அவை தோன்றிப் பல நூறு ஆண்டுகள் கழிந்த பின்னர் முதன் முதலில் உரை காண்பது எளிய செயல் அன்று. தகுதி வாய்ந்த ஒருவர் உரை கண்டபின், அவரைப் பின்பற்றி வேறு உரை கண்டு விளக்கம் எழுதுதல் அரிய செயல் அன்று. இளம்பூரணர்க்குப் பின் தொல்காப்பியத்திற்கு உரை கண்ட சேனாவரையர் நச்சினார்க்கினியர் முதலியோர் இவர் உரையினைப் போற்றி, பல முறை பயின்று தெளிவு பெற்று, இவருடைய புலமைச் சிறப்பை நன்கு உணர்ந்துள்ளனர்; இவரிடம் பெருமதிப்புக் கொண்டவராய் இருக்கின்றனர். தொல் காப்பியம், மாபெரும் நூலாக இன்று இத்துணைச் சீரும் சிறப்பும் எய்தித் திகழ இவரது உரை துணை செய்தது என்று கூறுவது வெறும் புகழ்ச்சியன்று.

இளம்பூரணர் ஒருவரே 'உரையாசிரியர்' என்ற சிறப்புப் பெயரால் தமிழிலக்கிய உலகத்திற்கு அறிமுகமானவர். இவரது பெயரைக் கூறாமல், உரையாசிரியர் என்றே சேனாவரையர் நச்சினார்க்கினியர் முதலியோர் குறிப்பிடுகின்றனர். அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்தில் வேனிற்காதையின் தொடக்கத்தில் "உரையாசிரியரான இளம்பூரண அடிகள்" என்று குறிப்பிடு வதால், இளம்பூரணரே உரையாசிரியர் என்று உணரலாம்.

**சமயம்**

மயிலைநாதர் இளம்பூரணரைத் துறவி என்று குறிப்பிடு கின்றார். நன்னூலின் பத்துவகை எச்சங்களையும் குறிக்கும் 'பெயர்வினை' என்னும் (359) சூத்திரத்திற்கு உரையும் விளக்கமும் எழுதிய பின், "இஃது ஒல்காப் புலமைத் தொல்காப்பியத்துள் உளங்கூர் கேள்வி இளம்பூரணர் எனும் ஏதமில் மாதவர் ஓதிய உரை என்று உணர்க" என்று குறிப்பிடுகின்றார்.

தொல்காப்பியரைப் பனம்பாரனார் பாயிரம் 'படிமை யோன்' என்று குறிப்பிடுகின்றது. படிமையோன் என்பதற்குத் 'தவ

* ஆராய்ச்சித் தொகுதி. (1948) பக். 398, 399.

ஒழுக்கத்தையுடையான்' என்று இளம்பூரணர் பொருள் எழுது கின்றார். எழுத்ததிகாரத்தின் முதற் சூத்திர விளக்கத்தில், "னகாரம் வீடு பேற்றிற்குரிய ஆண்பாலை (மகன் என்ற சொல்லை) உணர்த்துதற் சிறப்பான் பின் வைக்கப்பட்டது'' என்று கூறுகின்றார். படிமை என்பது சமண சமயத் துறவிகளின் தவ ஒழுக்கத்தைக் குறிக்கும் சொல் என்பர்.[1] திகம்பர சமண சமயக் கொள்கையின்படி பெண்கள் நேரே வீடுபேறு அடைய இயலாது. தவம் செய்து, பெண் பிறவி நீங்கி அடுத்த பிறவியில் ஆணாய்ப் பிறந்த பின்னரே வீடுபேறு எய்தமுடியும் என்ற கொள்கை உண்டு. இக்கொள்கைகளை இளம்பூரணர் உரைத்திருப்பதால் இவரைச் சமண முனிவர் என்று கருதலாம். இளம்பூரணர் பெயருடன் அடிகள் என்ற சொல் சேர்ந்து வழங்குவதும் இக்கருத்தினை வலியுறுத்திகின்றது.

அகத்திணையியலின் முதற்சூத்திர உரையின் இறுதியில் 'இந்நூலுடையார் காமத்துப் பயனின்மை உய்த்துணர வைத்தவாறு அறிந்துகொள்க" என்று உரைக்கின்றார். இங்கே இவரது துறவுள்ளம் வெளிப்படுகின்றது.

## காலம்

இளம்பூரணர் தம் உரையில் புறப்பொருள் வெண்பா மாலை, யாப்பருங்கல விருத்தி ஆகியவற்றிலிருந்து மேற்கோள் தந்து விளக்குவதால் அந்நூல்களுக்குப்பின் வாழ்ந்தவர் எனலாம். இவரது கருத்தை நன்னூலார் மேற்கொண்டிருப்பதால் இவர் காலம் பதினோராம் நூற்றாண்டாக இருக்கலாம்.

## உரையின் இயல்பு

இளம்பூரணர் உரை, ஆழமான தெளிந்த நீரோடை போன்றது; பற்றற்ற துறவி தூய்மையான வாழ்வு நடத்தி மூத்து முதிர்ந்து காவி உடையுடன் அருள் பழுத்த நெஞ்சத்துடன், முகம்மலர்ந்து நம்மிடம் இன்சொல் பேசுவது போன்ற இன்ப உணர்வை இவர் உரை உண்டாக்குகிறது. ஆரவாரமும் பகட்டும் இவர் உரையில் எங்கும் காண்பது அரிது. மிக மிகச் சுருக்கமாகவே தெளிந்த கருத்தைக் கூறி விளங்க வைக்கின்றார். தாம் கருதியதே சிறந்தது என்று எண்ணும் வகையில் இவர் எவ்விடத்திலும் எழுதவில்லை. பிறர் கருத்தை மதித்தலும், புலமை முதிர்ச்சியும், நடுநிலைமையும் உரை முழுவதும் வெளிப்படுகின்றன.

இளம்பூரணர் பிற மொழிப்பயிற்சி மிகுதியாக இல்லாதவர்; தமிழ்க் கடலுள் பல கால் மூழ்கித் திளைத்தவர்; தமிழ் மரபு நன்கு

1. சமணத் தமிழ் இலக்கிய வரலாறு பக். 12–15.

அறிந்த் சான்றோர். இவரது தமிழ்நெஞ்சம் பல இடங்களில் வெளிப்படுகின்றது. இவரைச் சிவஞான முனிவர், 'தமிழ் நூல் ஒன்றே வல்ல உரையாசிரியர்' என்று தொல்காப்பியச் சூத்திர விருத்தியில் குறிப்பிடுகின்றார்.

இளம்பூரணர் தம் காலத்தில் வழங்கிய புதிய இலக்கணக் கொள்கைகளை ஆங்காங்கே கூறிச் செல்லுகின்றார்; தொல் காப்பியத்திற்குப் பழைய நூல்களில் இருந்து மட்டுமின்றித் தம் காலத்திற்குச் சிறிது முன்னர்த் தோன்றிய நூல்களிலிருந்து மேற் கோள் காட்டவும் தயங்கவில்லை. புறத்திணையியலில், புறப்பொருள் வெண்பா மாலையிலிருந்து பல வெண்பாக்கள் உதாரணமாய்க் காட்டப்படுகின்றன. உவமையியலில் பிற்கால அணிநூல் கருத்துகள் இடம்பெறுகின்றன. செய்யுளியலில் யாப்பருங்கலம் போன்ற பிற்கால யாப்புநூல்கள் எடுத்துக் காட்டப்படுகின்றன. பொருளியலை இவர், அகம் புறம் என்ற இரண்டிற்கும் புறனடை என்று கூறுகின்றார்.

## தயக்கமும் ஐயமும்

தொல்காப்பியர் கருத்தையும் இலக்கணக் கொள்கையையும் தெளிவாகப் புரிந்துகொள்வதற்கு இவர் பெரிதும் முயன்றுள்ளார். காலயிடையீடும், புதிய இலக்கணக் கொள்கைகளும் பழைய இலக்கணம் பற்றிய பல வேறு கருத்தும் இவருக்குத் தயக்கமும் மலைப்பும் உண்டாக்கின என்னலாம். அதனால் நடுநிலைமை பிறழாத உள்ளம் கொண்ட இவர், தாம் உரைத்த கருத்துகளையும், பொருளையும் முற்ற முடிந்த முடிபுகளாகக் கருதவில்லை. பல நூற்றாண்டுகள் கழித்து, அந்நூலின் கருத்தை உள்ளவாறு அறிய முயன்று, முதன்முதலில் உரை எழுதிய இவர்க்கு இத்தகைய தயக்கமும் ஐயமும் ஏற்பட்டதில் வியப்பு ஒன்றுமில்லை.

சொல்லதிகாரத்தில், "நிலப்பெயர் குடிப்பெயர்" என்று தொடங்கும் சூத்திரத்தில் (சொல்-162 இளம்), 'இன்றிவர் என்னும் எண்ணியற் பெயர்' என்ற அடிக்கு "ஒருவர், இருவர், மூவர், என்பன" என்று விளக்கம் எழுதியபின், "இன்றிவர் என்பது, இத்துணைவர் என்னும் பொருட்டுப் போலும்" என்று ஐயத்தோடு கூறுகின்றார். மேலும்,

> கல்வியினாகிய காரணம் வந்தவழிக்கண்டு கொள்க.
> அதுபாடமறிந்து திருத்திக் கொள்க.
> வழக்குப் பெற்றுழிக் கொள்க.
> முதல் சினையாவது வந்தவழிக்கண்டு கொள்க.
> ஓகார ஈறும் ஏகார ஈறுமாய் வருவன

விரவுப் பெயர் உளவேற் கண்டு கொள்க.
செய்ம்மன என்பது இப்போது வழக்கரிது.

என்று எழுதும் இடங்கள் உள்ளன.

'பெயர் நிலைக் கிளவியின்' (சொல்-443) என்ற சூத்திரத்திற்குப் பொருளும் விளக்கமும் கூறியபின், "இச் சூத்திரத்திற்குப் பிறிதுமோர் பொருள் உரைப்பாரும் உளர். இதுவும் மெய்யுரை போலும்" என்று தயக்கத்துடன் எழுதுகின்றார்.

பொருளதிகாரம் அகத்திணையியலில் (45), "தலைமகள் கூற்று உணர்த்திய சூத்திரம், காலப் பழமையால் பெயர்த்து எழுதுவார், விழ எழுதினார் போலும்" என்று பெரியதோர் ஐயத்தைக் கிளப்பிவிடுகின்றார்.

கற்பியலில்,

**மேலோர் மூவர்க்கும் புணர்ந்த கரணம்**
**கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டே**

**(கற்–3)**

என்ற சூத்திரத்தின்கீழ், "இதனால் சொல்லியது, முற்காலத்துக் கரணம் பொதுப்பட நிகழ்தலின் எல்லார்க்கும் ஆம் என்பதும், பிற்காலத்து வேளாண் மாந்தர்க்குத் தவிர்ந்தது எனவும் கூறிய வாறு போலும்" என்று கூறுகின்றார்.

செய்யுளியலில் (106), பரிபாடலுக்குரிய "எருத்து என்பது இவ்வாசிரியர் கருத்தினால் தரவு என்பது போலும்" என்று உரைக் கின்றார்.

இவை யாவும், இளம்பூரணருக்கு ஏற்பட்ட தயக்கத்தையும் ஐயத்தையும் விளக்கும் சான்றுகளாகும்.

### உரைத்திறன்

தொல்காப்பிய மூலத்தைக் கொண்டே தொல்காப்பியர் கருத்தை அறிந்துகொள்ளவேண்டும் என்று கருதுபவர், இளம்பூரணர் செய்த உரை இல்லாதிருந்தால், பல சூத்திரங் களுக்குப் பொருள் தெரியாமல் மயங்குவர். இளம்பூரணர்க்குப் பின்வந்த உரையாசிரியர்களும், இளம்பூரணரையே பின்பற்றி, இவரது பொருள் விளக்கம், மேற்கோள், எடுத்துக்காட்டு ஆகியவற்றைப் போற்றி மேற்கொண்டு உரை எழுதுகின்றனர்.

எழுத்ததிகாரத்தில்,

**அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுத லாகி**
**உளஎனப் பட்ட ஒன்பதிற்று எழுத்தே**

2.12.

**அவை தாம்**
**கசதப என்றா நமவ என்றா**
**அகர உகரமோடு அவைஎன மொழிப**

**(எழுத்-170)**

என்ற சூத்திரம் இளம்பூரணர் உரை இன்றேல் விளங்காது. அளவுப் பெயர்க்கும் நிறைப் பெயர்க்கும் முதலில் வரும் எழுத்துகள் ஒன்பது. அவை: கசதப நமவ அஉ என்பன. இவ் எழுத்துகளை முதலில் கொண்ட அளவுப் பெயர்களாகப் பின் வருவனவற்றை இளம்பூரணர் காட்டுகின்றார்:

கலம், சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி, அகல், உழக்கு.

நிறைப் பெயர்கள்:

கழஞ்சு, சீரகம், தொடி, பலம், நிறை, மா, வரை, அந்தை. (உகரத்தை முதலெழுத்தாகக் கொண்ட பெயர் இளம்பூரணர் காட்டவில்லை. அக்காலத்திலேயே வழக்கிழந்து விட்டது. நச்சினார்க்கினியாரும் இதற்கு உதாரணம் காட்டவில்லை.)

எழுத்ததிகாரத்தில்,

**ஐஅம் பல்என வரூஉம் இறுதி**
**அல்பெயர் எண்ணும் ஆயியல் திரியாது**

**(எழுத்.394)**

என்ற சூத்திரத்திற்கு இளம்பூரணரின் உதவியின்றேல் பொருள் விளங்கி இராது. "பொருட் பெயர் அல்லாத எண்ணுப் பெயராகிய தாமரை, வெள்ளம், ஆம்பல் என்பன" என்று இளம் பூரணர் தரும் விளக்கத்தால் சூத்திரத்தின் பொருள் தெளிவாகின்றது.

**மருவின் தொகுதி மயங்கியல் மொழியும்**
**உரியவை உளவே புணர்நிலைச் சுட்டே**

**(எழுத்.112)**

என்ற சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் உரையைவிட இளம்பூரணர் உரையே பொருத்தமாக உள்ளது. "மரூஉத் திரளாகிய தலை தடுமாறாக மயங்கின இயல்யையுடைய இலக் கணத்தொடு பொருத்தின மரூஉ வழக்கும், உரியன உள புணரும் நிலைமைக் கண்" என்பது இளம்பூரணர் உரை.

'மகன்வினை கிளப்பின் முதனிலை யியற்றே' என்னும் நூற்பாவில் 'மகன் வினை' என்பதற்கு, 'மகற்குத் தாயாற் பயன்படும் நிலைமையன்றி அவளொடு பகைத்த நிலைமை'

என்று எழுதி, ‘மகன்-தாய்க்கலாம்’ என்று உதாரணம் காட்டுகின்றார். இந்த விளக்கமும் உதாரணமும் மிகவும் அரியவை. இளம்பூரணர் உரை இன்றேல், இவை வெளிப்பட்டிரா.

சொல்லதிகாரத்தில்,

**குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி**

**(சொல். 56)**

என்ற சூத்திரத்திற்கும்,

“மிக்கதன் மருங்கின்” (சொல்-237) என்ற சூத்திரத்திற்கும் இளம்பூரணர் உரை இன்றேல் பொருள் அறிதல் அரிது.

‘கடி’ என்னும் உரிச்சொல் முன் தேற்றுப் பொருளில் வந்தமைக்கு அகநானூற்றுப் பாட்டு ஒன்றினை (110) எடுத்துக் கொண்டு, அதில் ‘கடுஞ்சூள் தருகுவன்’ என்று வருவதை மேற்கோளாகக் காட்டியுள்ளார். தமிழிலக்கியத்தில், வேறு எங்கும் இச்சொல் இப்பொருளில் வந்துள்ளதாகத் தெரியவில்லை. இளம் பூரணர் காட்டிய இவ்வரிய மேற்கோளையே பின்வந்த உரையா சிரியர்கள் அனைவரும் தம் உரைகளில் காட்டுகின்றனர்.

இளம்பூரணர் தந்த மேற்கோளையும் கூறிய விளக்கத் தையும் பின்வந்தோர் அப்படியே மேற்கொண்டமைக்குப் பல சான்றுகள் காட்டலாம். உரையாசிரியர் முயன்று அமைத்த பாதையினைப் பின் வந்தோர் அகலப்படுத்தினர் என்று கூறும் அளவிற்கு இளம்பூரணரின் உரைத்திறன் அமைந்துள்ளது.

பொருளதிகாரத்தின் தொடக்கத்தில் (அகத்திணை இயலுக்கு முன்னுரையாக) எழுதும் உரை விளக்கம், அறிவுக்கு விருந்தாய் அமைந்துள்ளது:

“நிலம் எனவே, நிலத்திற்குக் காரணமாகிய நீரும், நீர்க்குக் காரணமாகிய தீயும், தீக்குக் காரணமாகிய காற்றும், காற்றிற்குக் காரணமமாகிய ஆகாயமும் பெறுதும்.”

“காலமாவது மாத்திரை முதலாக நாழிகை, யாமம், பொழுது, நாள், பக்கம், திங்கள், இருது, அயநம், ஆண்டு, உகம் எனப் பலவகைப்படும்.”

“கருப்பொருளாவது இடத்தினும் காலத்தினும் தோற்றும் பொருள்”

“உரிப்பொருளாவது மக்களுக்கு உரியபொருள்”.

பரத்தையர் யார் என்பதற்குக் கூறும் விளக்கமும், ஐம் பூதங்களின் சேர்க்கை பற்றிக் கூறும் விளக்கமும் சிறப்பானவை. அவற்றைக் கீழே காண்போம்:

"பரத்தையர் ஆவார் யார் எனின், அவர் ஆடலும் பாடலும் வல்லராகி, அழகும் இளமையும் காட்டி இன்பமும் பொருளும் வெஃகி, ஒருவர் மாட்டும் தங்காதார்." (கற்பியல்—10)

"உலகம் என்றது உலகினையும் உலகினுட் பொருளையும். உலகமாவது முத்தும் மணியும் கலந்தாற்போல நிலம் நீர் தீ வளி ஆகாயம் என விரவி நிற்கும். உலகினுட் பொருள் பொன்னும் வெள்ளியும் செம்பும் உருக்கி ஒன்றானாற் போல வேற்றுமைபடாது நிற்கும்; அவ்விரண்டனையும் உலகம் உடைத்தாகலின் கலந்த மயக்கம் என்றார்." (மரபியல் - 91)

## சொல்லும் பொருளும்

உரையாசிரியர் சில சொற்களின் பொருளை நன்கு விளக்கிச் செல்லுகின்றார். அத்தகைய விளக்கம் ஆராய்ச்சி உலகிற்குப் புதிய ஒளி தரவல்லவை. அவற்றுள் சிலவற்றைக் காண்போம்:

அம்பல் என்பது முகிழ்த்தல். அஃது ஒருவர் முகக் குறிப்பினால் தோற்றுவித்தல். அலராவது சொல்லுதல். (களவியல்-49)

புலவி அண்மைக் காலத்தது; ஊடல் அதனின் மிக்கது. (கற்பியல்-15)

மடம் என்பதற்கும் பேதமை என்பதற்கும் வேறுபாடு என்னை எனின், மடம் என்பது பொருண்மை அறியாது திரியக் கோடல்; பேதமை என்பது கேட்டதனை உய்த்துணராது மெய்யாகக் கோடல். (மெய்ப்பாட்-4)

மாணாமை என்ற சொல்லிற்கு மிகாமை என்ற பொருள் உரைப்பது இவரது புலமைச் சிறப்பைக் காட்டுவதாகும்.

**மாண மறந்து உள்ளா நாணிலி**

**(கலித்-89)**

என்றாற் போல மாணாமை என்பது மிகாமை என உரைப்பினும் அமையும்." (மெய்ப்-24)

"ஒப்பும் உருவும்" என்று தொடங்கும் சூத்திரத்தின்கீழ் (பொருளியல்-42) ஒப்பு, உரு, வெறுப்பு, கற்பு, ஏர், எழில் முதலிய சொற்களுக்குக் கூறும் பொருள் கற்று மகிழத்தக்கவை.

படிமையோன் என்பதற்குத் 'தவ ஒழுக்கத்தை உடையான்' என்று பாயிரப் பகுதியில் பொருள் கூறிய இவரே, "படிமை என்பது ப்ரதிமா என்னும் வடமொழித் திரிபு" என்று உரைக்கின்றார். (அகத்—30).

யவனர் என்ற சொல்லை ஆரியச் சிதைவு என்று கூறுகின்றார்.* (எழுத்-65)

உயர்வு என்ற சொல்லைப் பின்வருமாறு விளக்குகின்றார்:

"உயர்வுதாம் பல: குலத்தால் உயர்தலும், தவத்தால் உயர்தலும், நிலையால் உயர்தலும், உபகாரத்தால் உயர்தலும் என. (சொல்-87)

"உயர்ந்தோர் என்ற வழிக் குலத்தினான் உயர்ந்தாரையும் காட்டும், கல்வியான் உயர்ந்தாரையும் காட்டும், செல்வத்தான் உயர்ந்தாரையும் காட்டும்" (அகத்-3)

"பிறப்பே குடிமை" என்னும் சூத்திரத்தின் கீழும் 'நிம்பிரி கொடுமை" என்னும் சூத்திரத்தின் கீழும் (மெய்ப்-25,6) இவர் பல சொற்களை இனிது விளக்கியுள்ளார்.

## சூத்திர அமைப்பும் உரைப்போக்கும்

இளம்பூரணர் இரண்டு சூத்திரங்களாக அமைத்தவற்றைப் பின்வந்தோர் ஒன்றாகவே எழுதி உரைகண்டனர்; ஒன்றாகக் கொண்டதைப் பிரித்து இரண்டாக்கியதும் உண்டு.

எழுத்ததிகாரம் பிறப்பியலுள் (19.20),

'எல்லா எழுத்தும்,' என்றும் 'அஃதிவண் நுவலாது' என்றும் தனித்தனியே இளம்பூரணர் பிரித்து உரை கண்டவற்றை நச்சினார்க்கினியர் ஒரே சூத்திரமாக்கி, உரை எழுதுகின்றார்.

இத்தகைய எடுத்துக்காட்டுகள் பலவற்றைத் தரலாம்.

பல சூத்திரங்களை அடுத்து அடுத்து எழுதிக்கொண்டு "இவை, உரை இயைபு நோக்கி ஒன்றாய் எழுதப்பட்டன" என்று இளம்பூரணர் எழுதிச் செல்வதும் உண்டு. (சொல்: 173—176; 223, 224; 337, 338.)

மரபியலில் (35),

'மக்கள் தாமே ஆறறி வுயிரே' என்ற நூற்பாவிற்குப் பின், 'ஒருசார் விலங்கும் உளஎன மொழிப' என்ற நூற்பா இளம் பூரணர் உரையில் மட்டுமே உள்ளது.

* "யவனர் என்பார் கிரேக்கர். அப்பெயர் அவர்கள் பாஷையில் (ஐயோனீஸ்) ஐயோனியர் என வழங்கும். பழைய வட நூல்களிலும் இவர்கள் யவனர் என்றே வழங்கப் பெறுவர். பழைய தமிழ் இலக்கியங்களில் கிரேக்கரையும் ரோமரையும் பொதுவாக யவனர் என வழங்குவர்." — செல்வக்கேசவராய முதலியார், தமிழ் (1906) பக்–84.

## உவமைகள்

இளம்பூரணர் தம் உரையில் மிகச் சில உவமைகளையே எடுத்தாண்டுள்ளார். அவ்வுவமைகள், கூறக்கருதிய பொருளை இனிது விளக்குகின்றன.

எழுத்ததிகாரத்தில் (2), "சந்தனக்கோல் குறுகின விடத்தும் பிரப்பங்கோல் ஆகாது. அதுபோல, இகர உகரங்கள் குறுகின விடத்தும் அவை உயிர் ஆகற் பாலன" என்று தக்க உவமை கூறி விளக்குகின்றார்.

செய்யுளியலில் (79), "துள்ளலோசை கலிப்பாவிற்காம் என்றவாறு. துள்ளுதலாவது ஒழுகு நடைத்தன்றி இடையிடை உயர்ந்து வருதல்: கன்று துள்ளிற்று என்றாற்போலக் கொள்க" என்ற பகுதியில் இனிய உவமை இடம் பெற்றுள்ளது.

மரபியலில் (19) கலத்தல், மயக்கம் என்ற சொற்களை "கலத்தலாவது முத்தும் பவளமும் நீலமும் மாணிக்கமும் விரவினாற் போறல். மயக்கமாவது பொன்னும் வெள்ளியும் செப்பும் உருக்கி ஒன்றாதல் போறல்" என்று ஏற்ற உவமைகளைக் கூறி விளக்குகின்றார்.

## பாட வேறுபாடும் கருத்து வேறுபாடும்

இளம்பூரணர் தொல்காப்பியத்தின் முதல் உரையாசிரியர் ஆதலின், இவர் கொண்ட சில பாடங்கள், மிகப்பழமையானவை; அப்பாடங்களே சிறந்தவை.

சில சொற்களில் இரண்டொரு எழுத்துகள் மாறிவிடுவதால், சூத்திரங்களின் பொருளே பெரிதும் வேறுபட்டுவிடுகின்றது. எனவே, பாட வேறுபாடுகளில் கருத்துச் செலுத்தி உண்மையான பாடத்தைத் துணியும் கடமை நமக்கு ஏற்பட்டுள்ளது. பாட வேறு பாடுகள், பொருளதிகாரத்தில் மிகுதியாகப் பொருளை வேறு படுத்திவிடுகின்றன ஆதலின் சில பாட வேறுபாடுகளையும் அவற்றால் சூத்திரத்தின் பொருள் வேறுபடுவதையும் கீழே காண்போம்:

புறத்திணை இயலுள் (4),

**மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த**
**கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே**

என்பது இளம்பூரணர் கொண்ட பாடம். இதற்கு நச்சினார்க் கினியர்,

மறங்கடைக் கூட்டிய துடிநிலை

என்று வேறு பாடம் கொள்ளுகின்றார். குடிநிலை என்ற பழைய பாடமே சிறந்தது என்பதற்குச் சிலப்பதிகாரத்தில் வேட்டுவ வரி சான்றாக உள்ளது. அதில், வெட்சித் திணையில் மறக்குடியினது நிலைமையும், கொற்றவையின் நிலைமையும் கூறுவதைக் காணலாம்.*

பொருளியலுள் நச்சினார்க்கினியர்,

**இறைச்சி தானே பொருட்புறத் ததுவே**

என்று பாடம் கொண்டுள்ளார். இதுவே இன்று பெருவழக்காய் உள்ளது. இளம்பூரணர், 'உரிப்புறத்ததுவே' என்று பாடங் கொண்டுள்ளார்.

உள்ளுறை உவமம், இறைச்சி முதலிய ஐந்தும் பெரும்பாலும் அகத்திணைப் பாடலுக்கே உரியவையாகும் (பொருள்:45). அகத்திணைப் பாடல்களில் முதல் கரு உரி என்ற மூன்று பொருளும் இடம் பெறும் (அகத்:3). உள்ளுறை உவமம், தெய்வம் ஒழிந்த கருப்பொருளை இடமாகக் கொண்டு பிறக்கும் (அகத்:50). இறைச்சி உரிப்பொருளுக்குப் புறம்பாய் வரும் (பொருள்:43) என்ற தொல்காப்பியர் கருத்துக்களை நினைவில் கொண்டு பார்த்தால் 'உரிப்புறத்தது' என்ற பாடம் பொருத்தமாய் இருக்கும்.

களவியலுள்,

**இருவகைக் குறிபிழைப் பாகிய இடத்தும்**
**... ... ... .... தொகைஇக்**
**கிழவோன் மேன என்மனார் புலவர்**

**(களவி—17)**

என்ற சூத்திரம் தலைவனுக்குரிய கூற்றுகளை உணர்த்துவதாய் இளம்பூரணர் கொண்டு, அதற்கு ஏற்ப விரிவுரை எழுதுகின்றார். ஆனால் நச்சினார்க்கினியர், அச்சூத்திரத்தின் இறுதி வரியில் உள்ள 'கிழவோன்' என்ற சொல்லுக்குக் **'கிழவோள்'** என்று வேறு

* "கொற்றவை நிலையைக் கூறும் 'மறங்கடைக் கூட்டிய' என்னும் நூற்பாவில், மற்றதைக்குடிநிலை என இளம்பூரணரும் துடிநிலை என நச்சினார்க்கினியரும் பாடங் கொண்டுள்ளனர். குடிநிலையாதெனத் தொல்காப்பியர் கூறாததாலும் அது போர் துவங்குவதற்கு இன்றியமையாத நிகழ்ச்சி அன்றாதலாலும் அது நேரான பாடாமாகாதெனக்கண்ட நச்சினார்க்கினியர் அதைத் துடிநிலை என மாற்றிக் கூறினார் போலும்! துடிநிலை மற்றக் கொற்றவை நிலை கொடிநிலை போல் போர் துவங்குவதற்கு முதல் நிகழ்ச்சியாகாததோடு தொல்காப்பியரும் பிற தொன்னூல்களும் அதனை அத்தகைய வெட்சியின் சிறப்பு வகையாகச் சுட்டாததால் அதுவும் நச்சினார்க்கினியர் கொண்டதன்றித் தொல்காப்பியர் கருத்தாகத் தோன்றவில்லை." — ச.சோ. பாரதியார். பழந்தமிழ்நாடு (1958) பக். 85, 86.

பாடம் கொண்டு தலைவிக்குரிய கூற்றுக்களை உணர்த்துவதாய் உரை எழுதுகின்றார்.

இளம்பூரணர் கொண்ட பாடமே பொருத்தமாய் உள்ளது. "காமத் திணையில்" என்று தொடங்கும் சூத்திரம் முதலாக, "மறைந்தவற் காண்டல்" என்ற சூத்திரம் ஈறாக (களவியல்—18-21) உள்ள நான்கு சூத்திரங்களும் தலைமகளுக்கு உரியவை. நாணமும் மடமையும் கொண்ட தலைவி, களவொழுக்கத்தில் உரையாடல் நிகழ்த்துமிடத்தை மிக மிகநுட்பமாய் அமைத்துக் காட்டுகின்றார் தொல்காப்பியர். 'காமத் திணையில்' (18), 'காமஞ்செல்லா' (19), சொல்லெதிர் மொழிதல்' (20) என்ற மூன்று சூத்திரங்களும் தலைவி உரையாடுவதற்கு உரிய அருமைப்பாட்டினைப் பலவாறு விளக்கிக் காட்டிய பின்னர் 'மறைந்து அவற்காண்டல்' (21) என்னும் நீண்ட சூத்திரத்தில் அவள் உரையாடல் நிகழ்த்தும் இடங்களைச் சுட்டுகின்றார். இவையாவும் பெண் உள்ளத்தின் இயல்பறிந்து அமைக்கப்பட்டவையாகும். 'இருவகைக் குறிபிழைப் பாகிய இடத்தும்' என்று தொடங்கும் சூத்திரம் தலைமகனுக்கு உரியது என்று இளம்பூரணர் கொண்டது பொருத்தமே.

இச்சூத்திரத்தை நச்சினார்க்கினியர் கொண்டதுபோல, தலைவிக்குரியதாகக் கொண்டால், தலைவி களொழுக்கத் தின்கண் நாணமும் மடமும் அச்சமும் இன்றி, உரை நிகழ்த்திய நாகரிகக் குறைபாட்டிற்கு ஆளாவாள். களவொழுக்கத்தில் தலைவன் உரை நிகழ்த்தும் இடத்தை உணர்த்தும் சூத்திரம் தொல்காப்பியர் செய்யவில்லை என்ற குறைபாடும் ஏற்படும். எனவே 'கிழவோன்' என்று இளம்பூரணர் கொண்ட பாடமே சிறந்ததாகும்.

மேலும், 'சுடர்த்தொடீஇ கேளாய்', என்னும் கலிப் பாடல் (கலி-51) உரை விளக்கத்தின் இறுதியில் நச்சினார்க்கினியர் எழுதும் விளக்கம், அவர்க்குக் "கிழவோன்மேன" என்ற பாடம் பொருத்தமானது என்று கருத்து இருப்பதைப் புலப்படுத்துகின்றது.

களவியலில், (12)

**பாங்கர் நிமித்தம் பன்னிரண் டென்ப**

என்பது இளம்பூரணர் கொண்ட பாடம். நச்சினார்க்கினியர்.

**பாங்கன் நிமித்தம் பன்னிரண் டென்ப**

என்று பாடங்கொண்டார். குழப்பத்திற்கும் முரண்பாடான கருத்திற்கும் இடங்கொடுக்கும் சூத்திரங்களில் இதுவும் ஒன்று. இளம்பூரணர் பழைய உரையாசிரியர்; அவர் கொண்ட பாடம்

பழைய பாடம் என்று கொண்டு இச்சூத்திரத்தின் பொருளை அறிய முயலுதல் பயன் தரும்.

## தொல்காப்பியர் வரலாற்றுக்குப் புதிய ஒளி

இளம்பூரணர், தொல்காப்பியரைப் பற்றிக் கூறும் கருத்துகள் வரலாற்றுக்குப் புதிய ஒளி தரவல்லவை.

அகத்தியர் சூத்திரங்கள் என்று சிலவற்றை இளம்பூரணர் சிலவிடங்களில் காட்டி இருப்பினும் அகத்தியரையும் தொல்காப்பியரையும் இணைத்து எந்தக் கதையையும் புனைந்துரைக்கவில்லை. "தொல்காப்பியர் அகத்தியரின் பன்னிரு மாணாக்கருள் ஒருவர்; பன்னிரு மாணாக்கரும் ஒவ்வொருவரும் ஒவ்வொரு இயலாக இயற்றித் தொகுத்த நூல், பன்னிரு படலம் என்னும் புறப்பொருள் இலக்கண நூல்; அத்தொகுப்பு நூலுள் முதல் படலமாகிய வெட்சிப் படலத்தை இயற்றியவர் தொல்காப்பியர்" என்பவை போன்ற கதைகளை இளம்பூரணர் நம்பவில்லை. இவர் காலத்தில் அத்தகைய கதைகள் நாடெங்கும் பரவி இருந்திருக்க வேண்டும். இளம்பூரணர் புறத்திணை இயலின் தொடக்கத்தில் பன்னிரு படலம் தொல்காப்பியத்திற்கு மாறுபட்டது என்பதை விளக்கப் பல காரணங்களைக் கூறுகின்றார். மேலும் தொல்காப்பியர் இயற்றியதாகக் கூறப்படும் வெட்சிப் படலம், தொல்காப்பியர் புறத்திணை இயலோடு முரண் படுவதையும் காட்டி, "பன்னிரு படலத்துள் வெட்சிப் படலம் தொல்காப்பியர் கூறினார் என்றல் பொருந்தாது" (புறத்-2) என்று தெளிவுபடுத்துகின்றார்.

இளம்பூரணருக்குப் பின்வந்த உரையாசிரியர்கள் அனை வரும் தொல்காப்பியரையும் அகத்தியரையும் இணைத்துக் கதை களைப் புனைந்து கூறிவிட்டனர்.

## கருத்துக் கொடை

இளம்பூரணர் உரையில் கூறியுள்ள கருத்துகள் பலவற்றை அவருக்குப்பின் தோன்றிய இலக்கண ஆசிரியர்கள் மேற்கொண்டு நூற்பாக்களை அமைத்துள்ளனர். உரையாசிரியரின் கருத்துக் கொடை நூலாசிரியர்களை உருவாக்க முடியும் என்பதற்கு இளம் பூரணரே சிறந்த சான்றாவார்.

இளம்பூரணர் கருத்துகளை நேமிநாதம், நன்னூல், நம்பியகப் பொருள் ஆகிய நூல்கள் ஏற்றுக்கொண்டுள்ளன. இரண்டொரு உதாரணங்கள் மட்டும் காண்போம்:

தொல்காப்பியர் கற்பியலில்,

பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்
நீத்தகன் றுறையார் என்மனார் புலவர்
பரத்தையிற் பிரிந்த காலை யான

(கற்–46)

என்று கூறுகின்றார். இதற்கு உரை எழுதிய இளம்பூரணர், "இதனாற் பயன் என்னை எனின் அது கருத்தோன்றும் காலம் என்க" என்ற கருத்தை எழுதுகின்றார். இளம்பூரணர் சொன்ன கருத்தை மேற்கொண்டு நம்பியகப் பொருள் ஆசிரியர்,

பூத்த காலைப் புனையிழை மனைவியை
நீரா டியபின் ஈராறு நாளும்
கருவயிற்று உறூஉம் காலம் ஆதலின்
பிரியப் பெறாஅன் பரத்தையிற் பிரிவோன்

(நம்பி–91)

என்று கூறியுள்ளார்.

தொல்காப்பியர் உடம்படுமெய் பற்றி,

எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருபுகொளல் வரையார்

(எழுத்–141)

என்று கூறினார். இளம்பூரணர் இச் சூத்திரத்திற்கு உரை எழுதியபின், "உரையிற் கோடல் என்பதனால், உடம்படு மெய்யாவன யகரமும் வகரமும் எனக் கொள்க. இகர ஈறும் ஈகார ஈறும் ஐகார ஈறும் யகர உடம்படுமெய் கொள்வன; அல்லன எல்லாம் வகரமெய் கொள்வன'' என்று உரைத்துள்ளார். நன்னூலார் இளம்பூரணர் கருத்தைத் தழுவி,

இஈ ஐவழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏமுன்இவ் விருமையும்
உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும்

(நன்–162)

என்று சூத்திரம் அமைத்துள்ளார்.

தொல்காப்பியர் சொல்லதிகாரத்தில்,

எப்பொரு ளாயினும் அல்லது இல்எனின்
அப்பொருள் அல்லாப் பிறிதுபொருள் கூறல்

(சொல்–35)

என்று கூறிய சூத்திரத்திற்கு இளம்பூரணர் பின்வருமாறு உரையும் விளக்கமும் கூறுகின்றார்:

"எவ்வகைப்பட்ட பொருளாயினும், **தன்னுழை உள்ளது அல்லதனை** இல்லை எனலுறுமே எனின், அவன் கூறிய பொருளல்லாத பிறிது பொருள் கூறி இல்லை என்க."

"**தன்னுழை உள்ளதன் உண்மை கூறி,** இல்லை என்க என்பது கருத்து. இதன் கருத்து அவன் வினாவப்பட்ட பொருட்கு **இனமாய பிறிது பொருளே கூறுக** என்பது."*

பின்வரும் நன்னூல் சூத்திரத்தில் இளம்பூரணர் கருத்து இடம் பெற்றிருப்பதை அறியலாம்.

**தம்பால் இல்லது இல்லெனின் இனனாய்**
**உள்ளது கூறி மாற்றியும், உள்ளது**
**சுட்டியும் உரைப்பர் சொற்சுருங் குதற்கே.**

**(நன்–406)**

## இளம்பூரணருக்கு முன்

தொல்காப்பியத்திற்கு முதன் முதலில் உரை கண்டவர் இளம்பூரணர் என்று போற்றப்படுகின்றார். ஆனால், அவர் தமக்கு முன் வேறு சில உரைகள் தொல்காப்பியத்திற்கு இருந்ததைப் பலப் பல இடங்களில் சுட்டிக் காட்டுகின்றார். பிறர் கருத்தை மறுக்காமல், உள்ளதை உள்ளவாறே சுட்டி மேலே செல்லுகின்றார். ஏனைய அதிகாரங்களைவிட, சொல்லதிகாரத்தில் பல இடங்களில், இவர் பிறர் உரைகளை மிகுதியாகக் குறிப்பிடுகின்றார்.

என்ப ஒரு சாரர் ஆசிரியர் *(44, 57)*, ஒருவன் சொல்லுவது *(4, 18, 25, 38, 44)*, ஒரு திறந்தார் கூறுப *(1,56,58)*, என்பாரும் உளர் *(30, 33)*, என்பது ஒரு கருத்து *(66, 447)*, ஒரு திறத்தார் ஆசிரியர்

---

* புல்லியோர் பண்டம் கொள்வார்
வினவிய பொருள்தம் பக்கல்
இல்லெனில் இனமாய் உள்ள
பொருள் உரைத்து எதிர்மறுத்தும்
அல்லதுஅப் பொருள்உண்டு என்னின்
விலைசுட்டி அறுத்து நேர்ந்தும்
சொல்லிலும் லாபம் கொள்வார்
தொன்மர பிருக்கை சொல்வோம்
—திருவிளையாடற் புராணம்.

என்ற பாடலில் பரஞ்சோதியார் இளம்பூரணர் கருத்தை மேற்கொண்டுள்ளார்.

உரைப்பர் (122, 421), ஒரு சாரார் கூறுவர் (408, 455, 456) என்று இளம்பூரணர் பிறர் கருத்துகளைக் குறிப்பிடுகின்றார்.

ஒருகால், இளம்பூரணர் காலத்தில், தொல்காப்பியத்திற்குப் பல்வேறு உரைகள் வாய்மொழியாக வழங்கி வந்திருக்கலாம். அவற்றைக் கேட்டுஅறிந்த உரையாசிரியர், தாம் எழுதிய உரையில் அவற்றைவிடாது போற்றிக் குறித்திருக்கலாம்.

## இளம்பூரணருக்குப் பின்

தொல்காப்பியம் பயில்வோர், எழுத்ததிகாரத்திற்கு நச்சினார்க்கினியர் உரையையும், சொல்லதிகாரத்திற்குச் சேனாவரையர் உரையையும், பொருளதிகாரத்திற்கு நச்சினார்க்கினியர் (முன் ஐந்து இயல்கள்), பேராசிரியர் (பின் நான்கு இயல்கள்) ஆகியோர் உரைகளையும் விரும்பிக் கற்பது வழக்கம். இவ்வழக்கம் பல நூற்றாண்டுகளாக இருந்து வருகின்றது. இவ்வுரைகள் மிகுதியாகப் பயிலப்பட்டு வருவதால், தொல்காப்பியம் முழுவதற்கும் உரை கண்ட இளம்பூரணர் உரை வழக்கிழந்தது; பல ஆண்டுகள் இருக்குமிடம் தெியாமல் இருந்து வந்தது.

இளம்பூரணர் உரை செல்வாக்கு இழந்து, தொல்காப்பியம் கற்பவர் பார்வையிலிருந்து விலகிப் பின்தங்கிவிட்டதற்குக் காரணம் சில உண்டு.

1. இளம்பூரணருக்குப் பின் உரைகண்டோர் அவரது கருத்துகள் யாவற்றையும் எடுத்துத் தம் உரைகளுள் பெய்து கொண்டு தம்தம் காலத்திற்கு ஏற்ற புது விளக்கங்கள் பலவற்றைத் தந்து உரையை விரிவுபடுத்தினர். இதனால் இளம்பூரணர் உரை பின்தங்கிவிட்டது.

2. எளிய நடையே நல்லநடை என்ற கொள்கை இளம்பூரணருக்குப்பின் மெல்ல மெல்ல மறைந்துவிட்டது. அதனால், எளிய நடையில் எழுதப்பட்ட இளம்பூரணர் உரை ஒதுங்கியது. பலமுறை கற்று உணரும் நுட்பம் வாய்ந்து, எதுகை மோனைகள் அமைந்து, பல்வேறு வகையான இனிய உவமைகள் விரவி இன்னோசை பொருந்திய பிற்கால உரைகள் செல்வாக்குப் பெற்றுப் பரவின.

3. வடமொழிக்கும் வடமொழிக் கருத்திற்கும் இளம் பூரணருக்குப்பின் சிறந்த வரவேற்பு ஏற்பட்டது. தமிழ் ஒன்றே பயின்று, தமிழ்மரபு பிறழாமல் இளம்பூரணர் எழுதிய உரை, இருமொழிப் புலமை பெற்றவர் இயற்றிய உரைகளுடன் போட்டியிட்டு வெற்றிபெற இயலவில்லை.

4. இளம்பூரணர் சமண சமயத்துறவி ஆதலின், பிற சமயத்தவர் இவர் உரையைப் புறக்கணித்து, புது உரை கண்டு தம் உரையைப் பரப்பினர்.

இளம்பூரணர் உரை, இன்று மீண்டும் கற்றவர் போற்றும் சிறப்பைப் பெற்று வருகிறது. தொல்காப்பியத்தின் முதல் உரையாசிரியர் என்ன கூறினார் என்று அறியும் விருப்பம் பலருக்கும் ஏற்பட்டுள்ளது. தொல்காப்பியத்தின் பல்வேறு உரைகளை ஒப்பிட்டு நோக்கி ஆராய்பவரும், உண்மை உரை கண்டு தெளியும் ஆர்வம் உடையவரும், தமிழ்மொழிக்குத் தமிழ் மரபு அறிந்து எழுதிய உரையே சிறந்தது என்று எண்ணுபவரும் இளம்பூரணர் உரையைப் போற்றிக் கற்று வருகின்றனர்.

## நாகரிகமும் பண்பாடும்

இளம்பூரணர் உரையிலிருந்து அக்காலத்துத் தமிழ் நாட்டு நாகரிகமும் பண்பாடும் அறிய முடிகின்றது. அவற்றைக் கீழே காண்போம்:

எட்டி, காவிதி போன்ற பட்டம் பெற்றவர்களுக்குப் பூ அளித்தலும், புரவு (நிலம்) அளித்தலும் அக்காலத்தில் வழக்கமாய் இருந்தன. அவற்றை இளம்பூரணர், "எட்டிப்பூ, எட்டிப்புரவு, காவிதிப்பூ, காவிதிப் புரவு" (எழுத்ததிகாரம்;155) என்று குறிப்பிடு கின்றார்.

அரசியல் அலுவலர்களையும், தொழிலாளிகளையும் இளம்பூரணர் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

"எல்லாக் கொல்லரும் சேவகரும் தச்சரும் புலவரும் எனவும்; எல்லா நாயகரும் மணியகாரரும், வணிகரும் அரசரும் எனவும் வரும்" (எழுத்.-325).

அக்காலத்தில் அம்புகளை வைக்கக் கொட்டிலும், போர்க் காலத்தில் கோட்டையிலிருந்து பகைவர்மீது எய்ய அம்புப்புழை, துளை முதலியனவும் இருந்தன. அவற்றை இளம்பூரணர், "ஏஎக் கொட்டில், சாலைதுளை புழை" என்று குறிப்பிடுகின்றார் (எழுத்.-277). வில்லும் அம்பும் சிறந்த போர்க்கருவிகளாகப் பயன் பட்டன. குதிரையை மத்திகைக் கோல் (சாட்டை) கொண்டு அடித்து ஓட்டினர் என்ற செய்தியைப் பின்வரும் உரைப் பகுதி யால் உணரலாம்:

"வில் பற்றி நின்று கோல் தா என்றால், கணைக்கோலின் மேல்நிற்கும், அதற்குச் சார்பு அதுவாகலான். குதிரை மேலிருந்து, 'கோல் தா' என்றால், மத்திகைக் கோலாம் ஆகலானும் சுள்ளற்

கோலாம் ஆகலானும் செல்லும், அதற்குச் சார்பு அதுவாகலான்" (சொல்-53).

"பாட்டு ஆராய்ந்தான்' என்று இவர் காட்டும் தொடர் மொழி (எழுத்-195) நம்மைச் சிந்திக்கவைக்கின்றது.

கொங்கத்து உழவு, வங்கத்து வாணிகம் என்ற தொடர்கள் அக்கால உழவுத்தொழிலையும், வாணிகத்தையும் நினைவூட்டு கின்றன.

வட்டம், சதுரம், கோணம் முதலிய வடிவங்கள் அமைக் கவும், கோணத்துள் கோணமும் கோணத்துள் வட்டமும் அமைக்கவும் அக்காலத்தவர் அறிந்திருந்தனர் என்பது நமக்கு வியப்பு அளிக்கிறது. இச் செய்தியினை, "வடிவாவது வட்டம் சதுரம் கோணம் முதலாயின" (உவமையியல் 1) என்றும், "கோணா கோணம் கோணா வட்டம்" (எழுத்.-312) என்றும் இளம்பூரணர் குறிப்பிடுவதால் உணரலாம்.

இளம்பூரணர் காலத்தில், 'ஆசீவகப் பள்ளியும் குமரக் கோட்டமும் இருந்தன (எழுத்.154). பெண்கள் தைந்நீராடினர். மக்கள் அறச்செயலுக்காகத் தம்மிடம் உள்ள பசுக்களின் பாலைக் கறந்து தந்தனர். மாடுகள், தினவுபோகத் தேய்த்துக்கொள்ள மரமோ கல்லோ பொது இடங்களில் நடப்பட்டது (சொல்-50).

அக்காலத் தலைமகன், தனது நாட்டகத்து வழங்காது, பிற நாட்டகத்து வழங்கும் நூலைக் கற்றுவரவும், வாரியுள் யானை காணவும், நாடுகாணவும், புனலாடவும், கடவுளரை வழிபடவும் தலைவியைப் பிரிந்து செல்லுதல் வழக்கமாக இருந்தது (அகத்:27, 47). கணிவன் 'பகலும் இரவும் இடைவிடாமல் ஆகாயத்தைப் பார்த்து ஆண்டு நிகழும் வில்லும் மின்னும் ஊர்கோளும் தூமமும் மீன்வீழ்வும் கோள் நிலையும் மழைநிலையும் பார்த்துப் பயன்' கூறினான் (புறத்-16).

சிற்றூர்களில் கோழிகளை வளர்த்து அவற்றைப் போரிடச் செய்து அவற்றின் வெற்றி தோல்விகளைக் கண்டு மக்கள் மகிழ்ந்தனர் என்பதை, "மேலைச்சேரிக் கோழி அலைத்தது என, கீழைச்சேரிக் கோழி அலைப்புண்டமை சொல்லாமையே முடிந்ததாம்" என்ற உரைப்பகுதியால் அறியலாம் (சொல்-61).

'அண்ணாத்து ஏரி' என்று ஓர் ஏரியை இளம்பூரணர் சுட்டு கின்றார் (எழுத்-134). இது, திருவண்ணாமலையில் இருந்த பெரிய ஏரியைக் குறிக்கலாம் என்பர் மே.வீ. வேணுகோபால பிள்ளை.

'உறையூரிற் பெரியது கருவூர்' என்ற தொடர், கருவூரின் பழஞ்சிறப்பை நினைவூட்டுகின்றது.(சொல்-106).

செப்பும் வினாவும் வழுவாது வருவதற்கு, "நும் நாடு யாது என்றால், தமிழ் நாடு என்றல்'' என்பதை உதாரணங் காட்டுகின்றார் (சொல்-13). தமிழர் வாழும் நாட்டைத் தமிழ்நாடு என்று வழங்கிய வழக்கம் அக்காலத்தில் இருந்தது என்பதை அறியும்போது எல்லையற்ற மகிழ்ச்சி பிறக்கிறது.

வினாவிற்கு விடையாக உறுவது கூறுதலும் வழுவாகாது என்பதற்கு, "சாத்தா, உறையூர்க்குச் செல்லாயோ எனின், கடமுடையார் வளைப்பர்; பகைவர் எறிவர் என்பது" என்று உதாரணம் காட்டுகின்றார் (சொல்-15).

எழுத்ததிகாரத்தில்,

**வெண்ணுக்கரை (வெண்ணாற்றங்கரை)**
**எண்ணுப்பாறு (எள் ஏற்றிய தோணி)**
**எண்ணநோலை (எள் உருண்டை)**
**ஈமக்குடம் (பிணத்தை இடும் மிடா)**

ஆகியவற்றை உதாரணம் காட்டுகின்றார். இவை, இவர் அறிந் திருந்த இடம், மக்கள் உணவு, பழக்க வழக்கம் ஆகியவற்றை நமக்கு அறிவிக்கின்றன.

கூழுக்குக் குற்றவேல் செய்யும் (சொல்-74), பசித்தேன் பழஞ்சோறு தாஎன நின்றாள் (435) என்ற உதாரணங்கள், அக் காலத்தில் வாழ்ந்த ஏழைமக்களின் நிலையினை உணர்த்துகின்றன.

தம் காலத்தில் வழங்கி வந்த விடுகதை (பிசி) ஒன்றை உரையாசிரியர் குறிப்பிடுகின்றார்:

**அச்சுப் போலப்**
**பூ பூக்கும்!**
**அமலே என்னக்**
**காய் காய்க்கும்**

**(பூசுணைக் கொடி)**

### போலிப் பாயிரம்

இளம்பூரணரைப் பற்றி, சிறப்புப் பாயிரச் செய்யுள் ஒன்று, செந்தமிழ் என்னும் இதழில்* வெளிவந்துள்ளது:

**தண்கடல் அசைவளி உறுப்பத் திரைபிதிர்ந்**
**தூங்கலின் பொருட்குவைப் புணரியில் ஐயுற**
**அலைவமன் மயரினை அகற்றல் எழுத்தால்**
**திணைதுறை உட்கோள் இயற்றினன், அறியாக்**

* செந்தமிழ் 20. பக்கம் 503.

கவர்பொருள் மாக்கள் மயக்கினுக்கு இரங்கிப்
பாயிருங் காப்பியச் சுவைபல உணர்ந்தகம்
தோய மடுத்தோர் தொல்காப்பியன் உரை
முத்திற ஒத்தினுக்கு ஒத்தசீர்க் காண்டிகை
சொல்நிலை மேற்கோள் தொகுபொருள் துணிவுடன்
இயல்நூற் பாமுடிபு இணைத்து அடிகாட்டி,
தலைகடை கூட்டித் தந்தனன்; பண்டே
கொங்குவேள் மாக்கதை குறிப்புரை கண்டோன்;
தன்னறிவு அளவையில் நல்லுரை தேவர்
பன்மணிக் குறட்பால் மதிப்பிடப் பொறித்தோன்:
குணகடல் செல்லூர் மணக்குடி புரியான்
தண்முலை முகைஎன வெண்ணூல் சூடி
அந்தணன் அறவோன் அருமறை உணர்ந்த
இளம்போதி பயந்த புனிதன்
இளம்பூரணன் உரை இனிது வாழ்க ஈங்கென்

இப் பாயிரத்திலிருந்து இளம்பூரணர் வரலாற்றினைப் பின் வருமாறு தொகுத்துக் கூறலாம்: இளம்பூரணர் தமிழகத்தின் கிழக்குக் கடற்கரை யோரமாய் உள்ள செல்லூரில் பிறந்தவர்; மணக்குடி புரியான் என்பது அவரது குடிப்பெயர்; அவர் தந்தையார் அந்தணர், அறவோர், அருமறை உணர்ந்தவர், இளம் போதி என்பவர். இளம் பூரணர் தொல்காப்பியம், கொங்குவேள் மாக்கதை, திருக்குறள் ஆகிய மூன்று நூல்களுக்கும் உரை இயற்றியவர்.

மேலே காட்டடப்பட்ட செய்யுள், பிற்காலத்தில் ஒருவர் (சொர்ணம் பிள்ளை)* எழுதிவிட்ட போலிச் செய்யுள் என்பதைத் தமிழறிஞர் மு.அருணாசலம் (12-ஆம் நூற். இலக்கிய வரலாறு) தெளிவுபடுத்தியுள்ளார்.

இந்தச் செய்யுள் கூறும் செய்திகள் பொய்யானவை என் பதைப் பின்வரும் சான்றுகளால் உணரலாம்:

1. தொல்காப்பியம் இளம்பூரணர் உரையைத் தேடிப் பதிப்பித்தவர் எவருக்கும் இந்தச் செய்யுள் கிடைக்கவில்லை. வேறு ஏட்டுச் சுவடிகளிலும் இது இடம் பெறவில்லை.

2. திருக்குறள் உரையாசிரியர்களைக் கூறும் பழைய வெண்பா இளம்பூரணரைக் குறிப்பிடவில்லை.

* இவர் இன்னிலை என்று பெயரால் ஒரு போலி நூலையும் செங்கோன் தரைச்செவு என்ற பொய்ந்நூலையும் இயற்றி ஆராய்ச்சி உலகில் குழப்பம் உண்டாக்கியவர்.

3. பெருங்கதையைப் பதிப்பித்த டாக்டர் உ.வே.சா. அதற்குக் குறிப்புரை இருந்தமை பற்றிக் குறிப்பிடவில்லை.

இந்தப் போலிச் செய்யுள், ஆராய்ச்சி அறிஞர் டி.வி. சதா சிவப் பண்டாரத்தாரையும் மயக்கி விட்டது. அவர் இளம் பூரணரை மணக்குடவர் என்று முடிவு செய்ய முயன்று ஒரு கட்டுரை எழுதியுள்ளார்.[1]

போலிப் புலவரின் பொய்ம்மை எவ்வளவு குழப்பத்தை உண்டாக்கிவிட்டது!

## இறையனார் அகப்பொருள் உரையாசிரியரா ?

இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் இளம் பூரணரே என்ற ஒரு கருத்தைத் தமிழ்ப் பெரியார் மு. இராகவ ஐயங்கார் (ஆராய்ச்சித் தொகுதிக்கண்) வெளியிட்டுள்ளார். களவியல் உரை முதற்சூத்திர விளக்கத்தில், 'என்மனார்' என்ற சொல்லுக்குக் கூறப்பட்டுள்ள இலக்கணக் குறிப்பு, தொல்காப்பியம் சொல்லதிகாரத்தில் முதற் சூத்திர உரையில் இளம்பூரணர் கருத்துடன் ஒத்துள்ளது. களவியல் உரை ஏழாம் சூத்திரத்தில் 'செலவினும்' என்ற தொல்காப்பியச் சூத்திரத்திற்குத் தரும் விளக்கம் இளம் பூரணர் கூறுவது போலவே உள்ளது. ஆதலின் இருநூலின் உரை யாசிரியர்களும் ஒருவரே என்பர். இரண்டொரு இடங்கள் ஒத்துள்ளன என்ற ஒரு சான்று இக்கருத்தை வலிமையுள்ள தாக்கவில்லை. ஆதலின் இக்கருத்து மற்றவர்களால் ஏற்றுக் கொள்ளப்படவில்லை.

## இல்லாத உரைப் பகுதி

இளம்பூரணருக்குப் பின் வந்த உரையாசிரியர்கள் சிலர், அவரது உரைகளைக் குறிப்பிடும் இடங்களில் சில இன்றுள்ள இளம்பூரணர் உரையில் காணப்படவில்லை. மதுரைக் காஞ்சியுரையில் (40...42) நச்சினார்க்கினியர், "(தென் திசையை) இராவணன் ஆளுதல் பாயிரச் சூத்திரத்து உரையாசிரியர் கூறிய உரையானும் உணர்க'' என்று கூறுகின்றார். இங்கே நச்சினார்க்கினியர், உரையாசிரியர் என்று குறிப்பிடுவது இளம்பூரணரை எனின், பாயிரச் சூத்திர உரை என்பது தொல்காப்பியப் பாயிரத்தைக் குறிக்க வேண்டும். ஆனால் இன்றுள்ள இளம்பூரணர் பாயிரச் சூத்திர உரையில் தென் திசையை இராவணன் ஆண்ட செய்தி கூறப்படவில்லை.

1. இலக்கிய ஆராய்ச்சிகளும் கல்வெட்டுகளும் (1961) பக். 58–61.

2.13.

அடியார்க்கு நல்லார், சிலப்பதிகாரத்தில் வேனிற் காதையின் தொடக்கத்தில், குமரிக் கண்டத்தைக் கடல் கொண்ட வரலாற்றையும் அதனை அறிதற்கு உறுதுணையாய் இருந்த சான்றுகளையும் குறிப்பிடுகின்றார். பன்மலை நாடும் காடும் நதியும் பதியும் தடநீர்க் குமரி வடபெருங்கோட்டின் காறும் கடல் கொண்டு ஒழிதலாற் குமரியாகிய பௌவம் என்றார் என்க. இஃது என்னை பெறுமாறு எனின்,

**வடிவேல் எறிந்த வான்பகை பொறாது**
**பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்**
**குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள**

என்பதனாலும், கணக்காயனார் மகனார் நக்கீரனார் உரைத்த இறையனார் பொருளுரையானும், உரையாசிரியராகிய இளம் பூரண அடிகள் முகவுரையானும் பிறவாற்றானும் பெறுதும்' என்று கூறுகின்றார். இளம்பூரணர் எந்த நூலின் முகவுரையில் கூறினார் என்று அடியார்க்கு நல்லார் குறிப்பிடவில்லை. தொல்காப்பிய உரையின் முகவுரையில் குமரிக் கண்டம் கடல்கொண்ட செய்தி இளம்பூரணரால் கூறப்படவில்லை.

நச்சினார்க்கினியர், நூன்மரபில் 'மெய்யோடியையினும்' என்ற சூத்திர உரையில் உரையாசிரியர் கருத்தாகக் குறிப்பிடும் பகுதி இன்றுள்ள இளம்பூரணர் உரையில் இல்லை. இவ்வாறே சேனாவரையர், உரையாசிரியர் கூறியவையாகக் காட்டும் பகுதி (68, 114 சொல். சேனா. உரை) இளம்பூரணர் உரையில் இல்லை.

இத்தகைய இடங்கள் எல்லாம் இளம்பூரணரைப் பற்றி ஆராய இன்னும் இடம் உண்டு என்பதனை நமக்கு அறிவிக் கின்றன.

## 4. சேனாவரையர்

தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்கு உரைகண்ட புலவர் பெருமக்கள் ஐவர்*. இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடர் ஆகிய ஐவரும் ஒருவர்பின் ஒருவராகக் காலந்தோறும் சொல்லதிகாரத்திற்கு விரிவான உரைஎழுதி, தமிழ்மொழிக்குத் தொண்டு புரிந்தனர். ஐவரில் சேனாவரையர் உரையே இன்றுவரை, புலவர்உலகம் போற்றும் பெருமையுடன் விளங்குகின்றது. சேனாவரையர்உரை தோன்றியபின், அதற்குமுன் வழங்கி வந்த இளம்பூரணர்உரை,

* இயற்றியவர் பெயர் அறியப்படாத உரை ஒன்று உள்ளது.

செல்வாக்கு இழந்தது. பயில்வார் இன்றிப் போயிற்று. ஆனால், சேனாவரையர் உரைக்குப்பின் தோன்றிய உரைகள் யாவும் அவ்வுரை முன் நிற்கும் ஆற்றலின்றிப் பீடு குறைந்தன; சேனாவரையர்உரை பெற்ற பெருமையும், போற்றுதலும் பெறாமல் நின்றன.

சேனாவரையர் சொல்லதிகாரத்திற்கு மட்டுமே உரை எழுதியுள்ளார். இவர் வேறு நூலோ, உரையோ எழுதியிருப்பதாகத் தெரியவில்லை. சிவஞான முனிவர், "சேனாவரையர் எழுத்ததிகாரத்திற்கு உரைசெய்தார் ஆயின், இன்னோரன்ன பொருளனைத்தும் தோன்ற, ஆசிரியர் கருத்துணர்ந்து உரைப்பர். அவர், சொல்லதிகாரம் போலப் பெரும்பயன்படாமை கருதி எழுத்ததிகாரத்திற்கு உரை செய்யாது ஒழிந்தமையின் பின்னுள்ளோரும் மயங்குவராயினர்" என்று கூறுகின்றார். மேலும் சேனாவரையர், தம் உரையில், எழுத்ததிகாரத்தை எழுத்தோத்து *(சொல். 143, 420)* என்றும், பொருளதிகாரம் *(250)* என்றும், உவமஇயலை அணியியல் *(சொல்.440)* என்றும் குறிப்பிடுகின்றார். எழுத்ததி காரத்திலிருந்தும் பல சூத்திரங்களை எடுத்து விளக்கிச் செல்லுகின்றார். அவ்விடங்களில், ஏனைய பகுதிக்குத் தாம் உரை எழுதியமை பற்றிக் குறிப்பிடவில்லை.

## பெயர்

சேனாவரையர் என்ற சொல்லுக்குப் படைத்தலைவர் என்பது பொருள். சேனை +அரையர் எனப்பிரித்துப் படைத் தலைவர் என்று பொருள் கொள்வர் நன்னூலின் உரையாசிரியராகிய மயிலைநாதர். சிறப்பால்பெறும் பெயருக்கு 'ஆசிரியன், படைத்தலைவன், சேனாவரையன்' என்பனவற்றை உதாரணமாகக் காட்டியுள்ளார் *(நன். பெய.-19)*. ஆதலின், பண்டைத் தமிழ்மன்னர்கள், தம் படைத்தலைவர்களுக்குச் 'சேனாவரையர்' என்ற சிறப்புப் பெயரை இட்டுவழங்கினர் என்று அறியலாம். சேனாவரையர் என்பது இயற் பெயராகவும் 'கல்வெட்டுகளில் வழங்கியுள்ளது. உரையாசிரியராகிய சேனா வரையரைப் படைத்தலைவர் என்று கொள்வதற்குச் சான்று எதுவும் இல்லை. ஆதலின், அதனை இயற்பெயராகவே கருத வேண்டியுள்ளது. இவரது முன்னோர்கள், படைத்தலைவர்களாக இருந்திருக்கக்கூடும். அக்காரணம் பற்றி, இவருக்குச் சேனா வரையர் என்ற பெயர் வழங்கி இருக்கலாம்.

## வாழ்ந்த இடம்

இவர், தென்பாண்டி நாட்டில் வாழ்ந்தவர் என்பதற்கு இவர் உரையில் சான்றுகள் சில உள்ளன.

திசைச் சொற்களை விளக்கிக் கூறுமிடத்தில், "தென்பாண்டி நாட்டார் ஆ, எருமை என்பவற்றைப் பெற்றம் என்றும், தம்மாமி என்பதனைத் தந்துவை என்றும் வழங்குப" என்று உதாரணம் காட்டுகின்றார் (சொல்.400). ஏனைய நாட்டு வழக்கிற்கு எடுத்துக் காட்டு எதுவும் தரவில்லை.

'பெண்மை யடுத்த மகனென் கிளவி' (164) என்பதற்குப் 'பெண்மகன்' என்று உரை கூறியபின், "புறத்துப்போய் விளையாடும் பேதைப் பருவத்துப் பெண் மகளை மாறோக்கத்தார். இக்காலத்தும் பெண்மகன் என்று வழங்குப" என, அச் சொல் வழங்குமிடத்தைப் பலகாலும் கேட்டு அறிந்தவர் போலத் தெளிவாகக் குறிப்பிடுகின்றார். சொல்லதிகாரத்திற்கு உரை வகுத்த ஏனைய உரையாசிரியர்கள், இவ்வாறு இடஞ்சுட்டி விளக்கவில்லை. சேனாவரையர் குறிப்பிடும் மாறோக்கம் என்பது, தென்பாண்டிநாட்டில், கொற்கையைச் சூழ்ந்த பகுதிக்கு முற்காலத்தில் வழங்கிய பெயராகும்.[1]

**கல்வெட்டின் உதவி:** மாறோக்கத்தில் எவ்வூரில் சேனா வரையர் வாழ்ந்தார் என்பதை அறிந்துகொள்ளக் கல்வெட்டு, பெரிதும் துணைசெய்கின்றது. திருநெல்வேலி மாவட்டத்தில், கொற்கைக்கு அருகில் தாமிரவருணியாற்றின் கரையில், ஆற்றூர் என்னும் ஊர் உள்ளது. அவ்வூர்க்கோயிலில், வரையப்பட்டுள்ள கல்வெட்டுகளில் ஒன்று, ஆற்றூர்ச் சேனாவரையர் என்பவர், ஆசிரியமாணாக்கர் முறையில் தம் முன்னோரிடமிருந்து, தமக்குக் கிடைத்த நிலம் மனை ஆகியவற்றைத் தம் ஊரில் உள்ள சோமநாதக் கடவுளுக்கு வழங்கிய செய்தியைக் கூறுகின்றது.[2] இக் கல்வெட்டில் கூறப்படும் சேனாவரையர், தொல்காப்பிய உரை யாசிரியராகிய சேனாவரையாக இருக்கக்கூடும் என்று அறிஞர் உலகம் கருதுகின்றது.

அக்கோயிலில் உள்ள வேறு இரண்டு கல்வெட்டுகளால், பின்வரும் செய்திகள் தெரிகின்றன. சேனாவரையரின் முன்னோர் ஆற்றூரில், படைத்தலைவர்களின் வழித்தோன்றல்களாகவும், இடம் பொருள் ஏவல் உடைய பெருஞ் செல்வராகவும் இருந்தனர்; அவர்கள் பரம்பரை பரம்பரையாகப் புலமை வாய்ந்த

1. ஆறுமுக நாவலர் குறிப்பு.
2. MER 465 of (1929–30).

குடியினர். ஆசிரியர் மாணாக்கர் வழிமுறையாகத் தம் முன்னோரிடமிருந்து புலமைத்திறம் பற்றித் தமக்குக் கிடைத்த நிலம் மனை ஆகியவற்றையே சேனாவரையர், சிவன்கோயிலுக்கு வழங்கினார்.

**காலம்**

இவ்வாறு ஆற்றூர்ச் சேனாவரையர் தம் சொத்துகளைச் சிவன் கோயிலுக்கு வழங்கிய காலம், மாறவர்மன் குலசேகர பாண்டியனது ஏழாம் ஆட்சியாண்டாகிய கி.பி.1275 ஆகும். இப் பாண்டியனை எம்மண்டிலமும் கொண்டருளிய மாறவர்மன் குலசேகரன் (கி.பி.1268–1311) என்று வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். எனவே, சேனாவரையர், அப் பாண்டிய மன்னன் காலத்தில் 13-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர் என்னலாம்.[1]

**சமயம்**

இவரது உரையைக் கொண்டு, இரது சமயத்தை அறிய இயலவில்லை. 'அரையர்' என்ற பெயர், திருவரங்கத்தில், பள்ளி கொண்ட பெருமாள் கோயிலின்கண், திருவாய்மொழியை அபிநயம் பிடித்துப் பாடுவோருக்கு வழங்குவதால், ஒருகால் சேனாவரையர் திருமாலின் அடியவராய் இருத்தல் கூடுமோ என்று கருதுபவர் உண்டு.

இவரது உரைநூலின் தொடக்கத்தில், வாழ்த்துப் பாடல்கள் நான்கு காணப்படுகின்றன. அவை முறையே விநாயகரையும், மாதொருபாகனையும், கலைமகளையும் அகத்தியரையும் வாழ்த்தி வணங்குகின்றன. அவற்றுள் முதற் பாடலாகிய,

**தன்தோள் நான்கின் ஒன்றுகைம் மிகூஉம்**
**களிறுவளர் பெருங்கா டாயினும்**
**ஒளிபெரிது சிறந்தன்று அளியஎன் நெஞ்சே**

என்ற விநாயகர் வாழத்தை, இளம்பூரணர் மேற்கோளாகக் காட்டுகின்றார் (தொல். பொருள். செய். 50). இளம்பூரணர் சேனாவரையர்க்கு முந்தியவர் ஆதலின், இச் செய்யுளை இளம்பூரணர் உரையிலிருந்து சேனாவரையர் பெற்றுள்ளார். ஏனைய பாடல்களை இயற்றியவர் சேனாவரையரே என்பதில் கருத்து வேற்றுமை இல்லை. பல ஆண்டுகளாக அப் பாடல்கள், சேனாவரையர் உரையோடு சேர்ந்தே வழங்கி வருகின்றன. வேறு ஒருவர் அவற்றை இயற்றியதாக இன்றுவரை யாரும் கருதவில்லை. அவை, இடைச்செருகல் என்பதற்குச் சான்று எதுவும் இல்லை.

1. சாசனத் தமிழ்க் கவிசரிதம் (1987) பக்.108–144. மு. இராகவ ஐயங்கார்.

ஆதலின் அவற்றைச் சேனாவரையர் இயற்றியதாகவே கருத வேண்டும். சேனாவரையர் சிவநெறிச் செல்வர் என்பதற்கு அப் பாடல்களே தக்க சான்றுகள் ஆகின்றன. முன்னர்க் குறிப்பிட்ட ஆற்றூர்க் கல்வெட்டுச் செய்தியும் அவர் சைவர் என்பதை உறுதிப் படுத்துகின்றது.

## ஆசிரியப்பணி

சேனாவரையர் ஆசிரியப் பணி பூண்டு வாழ்ந்தவர் என் பதைக் கல்வெட்டால் மட்டுமின்றி, அவர் உரையாலும் அறியலாம்.

"மாணாக்கர்க்கு உணர்வு பெருகல் வேண்டி வெளிப்படக் கூறாது உய்ந்துணர வைத்தல் அவர்க்கு (உரையாசிரியர்க்கு) இயல்பு'' என்று முதற் சூத்திர உரை விளக்கத்திலேயே மாணாக்கரை நினைவுபடுத்துகின்றார். தம் உரையை, ஓர் ஆசிரியர் தம் மாணாக்கர் பலர்க்குப் பாடம் சொல்லும்போது மாணவர் எழுப்பும் வினாவும் ஆசிரியர் கூறும் விடையும் அமையு மாறு எழுதிச் சொல்கின்றார்.

என் சொல்லியவாறோ எனின் (43), யாதோ மக்கட்சுட்டு உடையவாறெனின், கொள்ளாமோ எனின்-நன்று சொன்னாய் (92). இச் சூத்திரம் வேண்டா எனின் - அஃதொக்கும் (124), உணர்த்தும்வழிச் சிறிய சொல்லுதும் (201), கூறிய கருத்து என்னை எனின்-நன்று சொன்னாய் (204), இச் சூத்திரம் வேண்டா எனின்-இதற்கு விடை ஆண்டே கூறினாம் (432) என்று சேனா வராயர் எழுதிச் செல்கின்றார். பலகாலும் மாணாக்கர்க்குப் பாடம் சொல்லிப் பழகிய பழக்கத்தால் இவ்வாறு எழுதுகின்றார்.

'பொருட்குத் திரிபில்லை உணர்த்த வல்லின்' (392) என்னும் சூத்திரத்திற்கு, நல்லாசிரியர் ஒருவர் தம் மாணாக்கர்க்குக் கற்பிக்கும் முறையில் உரை எழுதுகின்றார்.

"உறுகால் என்புழி உறு என்னும் சொற்குப் பொருளாகிய மிகுதி என்பதன் பொருளும் அறியாத மடவோனாயின், அவ்வாறு ஒருபொருட்கிளவி கொணர்ந்து உணர்த்தல் உறாது, 'கடுங்காலது வலி கண்டாய்' ஈண்டு 'உறு' என்பதற்குப் பொருள்' என்று தொடர் மொழி கூறியாயினும், கடுங்காலுள்ள வழிக் காட்டி யானும், அம் மாணாக்கன் உணரும் வாயில் அறிந்து உணர்த்தல் வல்லனாயின், அப்பொருள் திரிபுபடாமல் அவன் உணரும் என்றவாறு."

இவ்வுரைப் பகுதியிலிருந்து, சேனாவரையர் தம் மாணாக் கர்க்குப் பாடம் சொன்ன முறையையும், அப்போது தமக்கு

ஏற்பட்ட அனுபவத்தையும் இவ்வாறு குறிப்பிடுகின்றார் என்று அறியலாம்.

உரையில் இடம்பெற்றுள்ள வேறு சில உதாரணங்களும் சேனாவரையர், ஆசிரியர் என்பதைத் தெளிவாக உணர்த்துகின்றன.

**நூல்:** கற்கும் நூல் *(234)*, சாத்தனது புத்தகம் *(413)*, நூலின் இடையும் கடையும் தலையும் நின்ற மங்கலத்தை நூற்கண் மங்கலம் என்றும் *(82)* என்பவை போன்ற குறிப்புகள் நூலைப் பற்றியவை.

பொருள் மயக்கமாகிய பிசிச் செய்யுட்கண் (விடுகதைப் பாடலில்) திணை முதலாயின திரிந்து வருவதற்கு,

**எழுதுவரிக் கோலத்தார் ஈவார்க் குரியார்**
**தொழுதிமைக் கண்ணணைந்த தோட்டார்–முழுதகலா**
**நாணிற் செறிந்தார் நலங்கிள்ளி நாடோறும்**
**பேணற் கமைந்தார் பெரிது**

என்ற வெண்பாவைக் காட்டி, "புத்தகம் என்னும் பொருள் மேல் திணைதிரிந்து வந்தவாறு கண்டு கொள்க" என்று கூறுகின்றார். சேனாவரையர் காலத்தில் பனையோலைகளில் வரிவரியாக எழுதி, மை பூசிக் கயிற்றால் கட்டிய ஏட்டுச் சுவடி இருந்தது. அதனை மேற்கூறிய விடுகதைப் பாடல் குறிப்பிடுகின்றது.

**கற்கும் முறை:** கற்பார்க்குச் சிறந்தது செவி *(75)*, உரைத்தெனை உணர்ந்தான் *(228)*, சாத்தனது கற்றறிவு *(80)*, கற்று வல்லன் ஆயினான் *(230)*, நூலது குற்றங் கூறினான் *(111)* என்ற எடுத்துக் காட்டுகள் கற்குமுறையை உணர்த்துகின்றன.

**ஆசிரியரும் மாணாக்கரும்:** திருவீர ஆசிரியன்; ஆசிரியன் பேரூர் கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்தான் *(41)*, மாணாக்கர்க்கு நூற்பொருள் உரைத்தான், மாணாக்கர்க்கு அறிவு கொடுத்தான் *(75)*, ஆசிரியனோடு மாணாக்கர் வந்தார் *(91)* என்பவை ஆசிரியரையும் மாணாக்கரையும் பற்றியவை.

**தந்தையும் மகனும்:** "சாத்தன் கைஎழுதுமாறு வல்லன்; அதனால் தந்தை உவக்கும் *(38)*, ஓதல் வேண்டுமென்ற வழி, வேண்டும் என்பது ஓதற்கு வினை முதலாயிற்றாம். அவன் ஓதலை விரும்பும் தந்தைக்கும் ஏற்றவாறு கண்டுகொள்க'' என்ற உதாரணங்கள், சேனவரையர் காலத்தில் தம் மக்களின் கல்வித்திறன் கண்டு, பெற்றோர் உவந்தனர் என்பதைக் காட்டுகின்றன.

## உரையின் இயல்பு

சேனாவரையர் உரை, திட்பமும் நுட்பமும் வாய்ந்தது. சேனாவரையரின் புலமைப் பெருமிதமும் ஆராய்ச்சி வன்மையும் கருத்துத் தெளிவும் உரை முழுவதிலும் உள்ளன. கற்கண்டை வாயிலிட்டு மெல்ல மெல்லச் சுவைத்து இன்புறுவதுபோல், இவர் உரையை நாள்தோறும் பயின்று மெல்ல மெல்ல உணர்ந்து மகிழ வேண்டும். பலமுறை ஆழ்ந்து பயின்றாலும் இவ்வுரையை முற்றும் பயின்று விட்டோம் என்ற மனநிறைவு ஏற்படுவதில்லை. செங்குத் தான மலைமீது ஏற, கல்லும் முள்ளும், மேடும் பள்ளமும் நிறைந்த குறுகிய வழியில் வெயிலில் நடப்பது போன்ற உணர்ச்சியை, இவ்வுரையைக் கற்கத் தொடங்கும் மாணவர் முதலில் அடைவர்; முடிவில், மலையுச்சிக்குப் போய், மர நிழலில் நின்று, தண்ணென்ற காற்று வீச மெய் குளிர்ந்து, அங்கிருந்தபடியே மண்ணும் விண்ணும் வழங்கும் இன்பக் காட்சியைக் கண்டு மகிழும்போது பெறும் இன்ப உணர்வைப் பெறுவர்.

இவ்வுரை செறிவும், சுருங்கச் சொல்லி உய்த்துணர வைக்கும் இயல்பும் உடையது; ஆற்றல் வாய்ந்த சொற்களை ஆராய்ந்து எடுத்து, ஆழமான பொருளைத் திணித்து, ஆழ்ந்து பலமுறை கற்கும்வகையில் அமைக்கப்பட்டுள்ளது; தருக்கநூல் முறை வழுவாமல் தடை விடைகள் பல எழுப்பி, பிற உரையினை மறுத்தும் கருத்தை நிலைநாட்டுகின்றது. இவ்வுரையைக் கற்கும் போது. சிங்க நோக்காக நூலின் முன்னும் பின்னும் நோக்கி, அவற்றை நன்கு நினைவில் கொண்டு கற்க வேண்டிய பகுதிகள் பல இருப்பதை உணரலாம். தூய தமிழ்நடை, பீடு குன்றாமலும் பொருள் தெளிவுடனும் இனிய கருத்தோட்டத்துடனும் நூல் முழு வதும் அமைந்துள்ளது.

இத்தனை சிறப்புகளும் வாய்ந்த சேனாவரையர் உரை, காலந்தோறும் புலவர் பெருமக்களின் போற்றுதலைப் பெற்று, காலவெள்ளத்தைக் கடந்து வருவதில் வியப்பில்லை. இவ்வுரை யினை நன்கு பயிலாதவரை, தமிழ்ப் புலவர்கள், இலக்கணப் புலமை நிரம்பியவராகக் கருதுவதில்லை.

## முழுநோக்கு

சேனாவரையர் சொல்லதிகாரம் ஒன்றிற்கே உரை கண்டிருப்பினும், தொல்காப்பியம் பற்றி முழுநோக்கு உடையவர். எழுத்தையும் பொருளையும் அவர் சிங்க நோக்காகக் கண்டு விளக்கம் எழுதுகின்றார். சொல்லதிகார அமைப்பையும் முழுமையாக நோக்கி, இயல் அடைவிலும், சூத்திரங்களின் அமைப்பு, பாடவேறுபாடு, ஓசை ஆகியவற்றிலும் ஈடுபடுகின்றார்.

கிளவியாக்கத்திற்குப்பின் வேற்றுமையியலையும் அதன் பின் வேற்றுமை மயங்கியலையும், பின் மற்ற இயல்களையும் வைத்தமை பற்றிச் சேனாவரையர், ஒவ்வோர் இயலின் தொடக்கத்திலும் எழுதும் விளக்கம் படித்து மகிழத்தக்கதாகும்.

## சூத்திரங்களின் அமைப்பு

"இச் சூத்திரத்திற்குக் கருத்தாயின்,.... என்னும் சூத்திரத்தின் பின் வைக்க எனின்" என்று சேனாவரையர் தாமே வினா எழுப்பிக்கொண்டு விடை கூறுவதும் உண்டு *(67)*.

"அவைதாம், தத்தம் பொருள்வயின்" *(115)* என்னும் சூத்திரத்தின் இறுதியடியாகிய

**வேற்றுமை மருங்கின் போற்றல் வேண்டும்**

என்பதைப் பிரித்து, ஒரு சூத்திரமாக உரையாசிரியர் உரைத்ததை எடுத்துக் கூறி, அவ்வாறு பிரித்தது சிறந்தது அன்று என்று விளக்குகின்றார்.

**அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து**
**சீர்நிலை திரியாது தடுமா றும்மே**

**(எச்ச. 407)**

என்னும் சூத்திரத்தையும், அதற்கடுத்த சூத்திரத்தின் *(408)* குறளடியாகிய

**பொருள்தெரி மருங்கின்**

என்பதையும் சேர்த்து,

**அடி மறிச் செய்தி**
**அடிநிலை திரிந்து சீர்நிலை திரியாது**
**தடுமா றும்மே பொருள்தெரி மருங்கின்**

என்று சூத்திரம் அறுப்பாரும் உள்ர் என்று சேனாவரையர் சுட்டுகின்றார்.

வேற்றுமைப் பொருளை *(83)* என்னும் சூத்திரத்தின் முதல் இரண்டடியை ஒரு சூத்திரமாகவும், பின் இரண்டடிகளை மற்றொரு சூத்திரமாக உரைப்பாரும் உளர் என உரையாசிரியர் கூறியதாகச் சேனாவரையர் உரைக்கின்றார்.

பெயரியலில்,

**அவற்றுள், நான்கே இயற்பெயர் (175)**

என்னும் சூத்திர உரையின் கீழ், "கூறப்பட்ட பெயரது பாகுபாடாகிய ஒரு பொருள் நுதலுதல் பற்றிய ஒரு சூத்திரமாயிற்று. நான்காய் விரிதலும் இரண்டாய் விரிதலும் தாமே யாதலுமாகிய பொருள் வேற்றுமையான் மூன்று சூத்திரம் எனினும் அமையும்" என்று எழுதுகின்றார்.

"இச் சூத்திரம் வேண்டா எனின்" என்று சேனாவரையரே வினா எழுப்பிக்கொண்டு, விடைகூறும் இடங்களும் உள்ளன (52, 92, 462).

சூத்திரங்களுக்குரிய ஓசை நயத்திலும் சேனாவரையர் ஈடுபட்டுள்ளார். பலமுறை ஓதிஓதிப் பண்பட்ட அவரது செவி நுட்பம் நம்மை வியக்கச் செய்கின்றது.

"தாமே என்பது கட்டுரைச் சுவைபட நின்றது (63, 199); செய்யுள் இன்பம் நோக்கி அளபெழுந்து நின்றது (210), செய்யுள் இன்பம் நோக்கி....என்றார் (295) என்று சேனாவரையர் கூறும் இடங்கள் குறிப்பிடத் தக்கவையாகும்.

**உரைத்திறன்**

தொல்காப்பியா வகுத்துள்ள இலக்கண விதிகளையும் சூத்திரங்களையும் சேனாவரையர் தம் நுண்மாண் நுழைபுலம் கொண்டு நுணுகி நோக்கி, நூலாசிரியர் ஒவ்வொரு சொல்லையும் பொருளாழத்துடன் அளந்து அமைத்திருக்கின்றார் என்ற கருத்தைப் பல இடங்களில் வற்புறுத்திக் கூறுகின்றார்.

**வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது**
**நினையுங் காலைக் காலமொடு தோன்றும் (198)**

என்ற சூத்திரத்திற்குச் சேனாவரையர் எழுதியுள்ள விளக்கம் பலமுறை கற்று மகிழும் வகையில் உள்ளது:

"வேற்றுமை கொள்ளாது என்னாது காலமொடு தோன்றும் எனின், தொழில் நிலையொட்டும் தொழிற் பெயரும் வினைச் சொல்லாவான் செல்லும் ஆகலானும் காலமொடு தோன்றும் என்னாது வேற்றுமை கொள்ளாது எனின், இடைச் சொல்லும் உரிச்சொல்லும், வினைச்சொல்லெனப்படும் ஆகலானும் அவ்விரு திறமும் நீக்குதற்கு 'வேற்றுமை கொள்ளாது, காலமொடு தோன்றும்' என்றார். வினைச் சொல்லுள், வெளிப்படக் காலம் விளங்காதனவும் உள; அவையாவும் ஆராயுங்கால் காலம் உடைய என்றற்கு 'நினையுங்காலை' என்றார்" என்று சேனாவரையர் எழுதியுள்ள விளக்கம் புலமைக்கு விருந்தளிக்கின்றது.

இவ்வாறே "பெண்மை சுட்டிய" (4) என்னும் சூத்திரத்திற்கு இவர், சொல்லுக்குச் சொல் நுண்பொருள் கண்டு; உரை எழுதும் திறன் வியந்து போற்றுதற்கு உரியதாகும்.

**ஆராய்ச்சித் திறன்**

சேனாவரையர் தொல்காப்பியரிடம் பெருமதிப்புக் கொண்டவர். தொல்காப்பியர் நூலில், தாம் ஏற்றுக்கொள்ள இயலாத சில இலக்கணக் கருத்துகள் இருப்பதைச் சேனாவரையர்

சில இடங்களில் உணர்கின்றார். இருப்பினும், தொல்காப்பியரைக் குறைகூறாமல், தம் கருத்தை எழுதித் தம் ஆராய்ச்சித் திறனைக் காட்டுகின்றார்.

"எல்லே இலக்கம்" என்பது, இடையியலில் உள்ள சூத்திரம் (சொல்.269). 'எல்' என்பதை உரிச் சொல்லாகக் கொள்ளவேண்டும் என்பது சேனாவரையர் கருத்து. ஆனால் தொல்காப்பியரே அதனை இடைச்சொல் என்று கூறுவதால், சேனாவரையர் தம் கருத்தையும் எழுதி நூலாசிரியரையும் மதிக்கின்றார். "எல் என்பது உரிச்சொல் நீர்மைத்து ஆயினும் ஆசிரியர் இடைச்சொல்லாக ஓதினமையின், இடைச்சொல் என்று கோடும்" என்று மிகச் சுருக்கமாக எழுதித் தம் சொல்லாராய்ச்சித் திறனை வெளிப்படுத்துகின்றார்.

மூன்றாம் வேற்றுமையின் உருபுகளாகிய "ஒடுவும் ஆனும் இரண்டு வேற்றுமை ஆகற்பால எனின்" என்று சேனாவரையர் வினா எழுப்பிக்கொண்டு ஆராயும் பகுதி, அவருடைய மொழியாராய்ச்சித் திறனை விளக்கும் சிறந்த சான்றாகும்.

"நும்மின் திரிபெயர் நீயிர்" என்று தொல்காப்பியர் கூறு கின்றார் (எழுத்.326; சொல் 143). ஆனால் சேனாவரையர் "நீயிர் என்பதன் திரிபு நும்" என்னும் கருத்துடையவர். இருப்பினும் தம் இலக்கண ஆராய்ச்சித் திறனை வெளிப்படுத்தி, நூலாசிரியரைப் போற்றியே உரை எழுதியுள்ளார் (சொல்.98, 143).

## இலக்கணக் கொள்கையும் ஆராய்ச்சியும்

சேனாவரையர், இலக்கணத்தில் பயின்றுவரும் சொற் றொடர்களையும் கொள்கைகளையும் நுணுகி ஆராய்ந்து விளக்கு கின்றார். சில சொற்றொடர்களின் வரலாறு, வழக்கு, வடிவம், பொருள் ஆகியவற்றை நன்கு சிந்தித்து நல்ல முடிவுகளை வெளியிடுகின்றார்.

'என்மனார்' என்னும் சொல்லுக்கும் (1), 'மார்' ஈற்று வினைச்சொல்லுக்கும் (7) இவர் கூறும் இலக்கண விளக்கம் படித்து மகிழத்தக்கது.

'எவன்' என்னும் வினாச்சொல் பற்றி விளக்கம் எழுதிய பின், 'எவன் என்பதோர் பெயரும் உண்டு; அஃது இக்காலத்து என் என்றும், என்னை என்றும் நிற்கும். ஈண்டுக் கூறப்பட்டது வினைக்குறிப்பு முற்று என்க" (219) என்று ஆராய்ந்து கூறுகின்றார்.

'எய்யாமை' என்னும் சொல்லைப்பற்றி "அறிதற் பொருட்டால் எய்தல் என்றானும், எய்த்தல் என்றானும்

சான்றோர் செய்யுட்கண் வாராமையின், எய்யாமை எதிர் மறையன்மை அறிக" (342) என்று எழுதுகின்றார்.

'இலம்பாடு' என்னும் சொல்லைப் பற்றிப் பின்வருமாறு எழுதுகின்றார்: 'இலம் என்னும் உரிச்சொல், பெரும்பான்மையும் பாடு என்னும் தொழில் பற்றியல்லது வாராமையின் இலம்பாடு என்றார்" (360).

"கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள" (372) என்னும் சூத்திரத்தின்கீழ், "கறுமை, செம்மை என்னாது கறுப்பு சிவப்பு என்றதனான் தொழிற்பட்டுழியல்லது அவை வெகுளி உணர்த்தாமை கொள்க" என்று விளக்குகின்றார்.

'கடிசொல் இல்லைக் காலத்துப் படினே' (452) என்பதன் கீழ், சம்பு, சள்ளை, சட்டி, சமழ்ப்பு என்பவை பிற்காலத்தே தோன்றிய சொற்கள் என்று குறிப்பிடுகின்றார்.

## இலக்கண விளக்கம்

இலக்கணத் தொடர்களையும், கொள்கைகளையும் சேனா வரையர் திறம்பட விளக்குகின்றார்:

**கிளவியாக்கம்:** "வழுக்களைந்து சொற்களை ஆக்கிக் கொண்டமையான், இவ்வோத்து கிளவியாக்கம் ஆயிற்று. ஆக்கம்-அமைத்துக் கோடல்." (1)

**இரட்டைக் கிளவி:** "ஈண்டு இரட்டைக் கிளவி என்றது, மக்கள் இரட்டை, விலங்கு இரட்டை போல, வேற்றுமை உடையனவற்றை அன்றி, இலையிரட்டையும் பூவிரட்டையும் போல ஒற்றுமையும் வேற்றுமையும் உடையனவற்றை என்று உணர்க" (48).

**முக்காலம்:** இறப்பாவது, தொழிலது கழிவு. நிகழ்வாவது, தொழில் தொடங்கப்பட்டு முற்றுப்பெறாத நிலைமை. எதிர் வாவது தொழில் பிறவாமை. தொழிலாவது, பொருளினது புடைபெயர்ச்சியாகலின், அஃது ஒரு கணம் நிற்பதல்லது இரண்டு கணம் நில்லாமையின், நிகழ்ச்சி என்பது ஒன்று அதற்கு இல்லை யாயினும், உண்டல், தின்றல் எனப் பல்தொழில் தொகுதியை ஒரு தொழிலாகக் கோடலின், உண்ணாநின்றான், வாராநின்றான், என நிகழ்ச்சியும் உடைத்தாயிற்று என்பது" (200).

**இடைச்சொல்:** சார்ந்துவருதல் உரிச்சொற்கும் ஒத்தலின், தமக்கெனப் பொருளின்மை இடைச்சொற்குச் சிறப்பிலக் கணமாம்" (249).

## சொல்லும் பொருளும்

சில சொற்களுக்குச் சேனாவரையர் கூறும் பொருள் சிறப்பாக உள்ளது.

'காலம்' என்பது காலக் கடவுளை.

'உலகம்' என்றது ஈண்டு மக்கள் தொகுதியை.

'பால்வரை தெய்வம்' என்பது எல்லார்க்கும் இன்ப துன்பத்திற்குக் காரணமாகிய இருவினையும் வகுப்பது.

'வினை' என்பது அறத்தெய்வம்.

'சொல்' என்பது நாமகளாகிய தெய்வம் *(57)*.

## வடமொழிப் புலமையும் பற்றும்

சேனாவரையர் தமிழ் இலக்கணத்தில் தேர்ச்சி பெற்றிருப் பதைப் போலவே, வடமொழி இலக்கணத்திலும் வல்லவராக விளங்குகின்றார். இருமொழியிலும் வல்லவரான சிவஞான முனிவர், இவரை 'வடநூற்கடலை நிலைகண்டு உணர்ந்த சேனா வரையர்' என்று வாயாரப் புகழ்ந்து போற்றுகின்றார். வடமொழி பயின்றவர் என்றோ, கற்றவர் என்றோ புலமை பெற்றவர் என்றோ கூறாமல், வடநூற்கடலை நிலைகண்டு உணர்ந்தவர் என்று கூறியுள்ளதால், சேனாவரையருக்கு அம்மொழியில் அளப்பரிய பேராற்றல் இருந்தது என்பது விளங்கும்.

அங்ஙனம் புகழ்வதற்கு ஏற்பச் சேனாவரையர், வடமொழி இலக்கணக் கொள்கைகளைத் தெளிவாக விளக்குகின்றார்; வடமொழி இலக்கண விதிகளை மேற்கோள் காட்டுகின்றார்.

அதிகாரம் *(1)*, ஞாபகம், அநுவாதம் *(10)*, யோக விபாகம் *(11)*, உத்தரம் *(13)*, நேயம் *(55)*, காரகம் *(112)*, கரும கருத்தன் *(246)*, தாது *(246)* ஆகிய வடமொழிச் சொற்களை, தக்கஇடங்களில் எடுத் தாண்டு விளக்கியுள்ளார்.

பிரயோக விவேக நூலாசிரியர், 'வாக்கிய பதீயம், அரிபீடிகை, ஏலாராசீயம் முதலாயின வழங்குங் காலத்து அவ் வுரை நோக்கிச் சேனாவரையர் முதலாயினார் தொல்காப்பியத் திற்கு உரை எழுதினார் என்க" என்று கூறுகின்றார் (திங்கு-16).

பின்னத்தூர் ச. சுப்பிரமணிய சாஸ்திரியார் சேனாவரையர் உரையில் உள்ள வடநூற் கருத்துகளை எடுத்துக்காட்டியுள்ளார்.[1] அவற்றைக் காண்போம்:

1. தொல்காப்பியம் சொல்லதிகார உரை — முன்னுரை.

**இச்சையால் மலர்கள் தூவி**
**இரவொடு பகலும் தம்மை**
**நச்சுவார்க் கினியர் போலும்**
**நாகவீச் சரவ னாரே**

**(திருநா. திருநாகேச்சரம், தே.)**

என்று அப்பரும்,

**நச்சினார்க் கினியாய் போற்றி**
**எனத்துதி நவிலும் காலை**

**(காஞ்சிப்புராணம் – சந்ததான – 11)**

என்று சிவஞான முனிவரும் சிவபெருமானைப் போற்றிப் பாடியுள்ளனர். இப்பெயரைத் தாங்கியுள்ள இவ்வுரையாசிரியர் சைவர் என்பதில் ஐயமில்லை.

இவரது உரையில், இவரைச் சைவ அன்பர் என்று அறிந்து கொள்ளத்தக்க சான்றுகள் உண்டு. தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தில் (25) கண்டன், கந்தன், கம்பன், மன்றன் என்ற பெயர்களை வரிசையாக எடுத்துக்காட்டுகின்றார். மொழி மரபில் (12) "திருச்சிற்றம்பலம்-ஆறு எழுத்து ஒரு மொழி; பெரும்பற்றப் புலியூர்-ஏழ் எழுத்து ஒரு மொழி" என்று குறிப்பிடுகின்றார்.

இவர், சைவ சமயக் கருத்துகளை நன்கு உணர்ந்துள்ளார்; சைவ சமய நூல்களை நன்கு பயின்றுள்ளார். தம் உரைகளில் பலவிடங்களில் இலக்கண இலக்கியப் பொருள்களையும் தத்துவப் பொருள்களையும் விளக்க, சைவ சமய நூல்களாகிய திருவாசகம், திருக்கோவையார், திருவுலாப் புறம் முதலியவற்றிலிருந்து மேற்கோள் காட்டுகின்றார். சீவகசிந்தாமணி உரையில் சில பாடல்களுக்கு (362, 1141) விளக்கவுரை எழுதும்போதும், திருமுருகாற்றுப்படை உரையில் சில நயங்கள் எழுதும்போதும் இவரது சைவநூற்புலமை வெளிப்படுகின்றது.

இவர் பாரத்துவாச கோத்திரத்தார். தொல்காப்பியத்தின் ஒவ்வோர் இயல் முடிவிலும் பத்துப்பாட்டின் முடிவிலும் 'மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர்' என்று இவர் பெயர் குறிக்கப்பட்டுள்ளது. பாரத்துவாச கோத்திரத்தினர் வைணவர், ஸ்மார்த்தர், மாத்துவர் என மூன்று பிரிவினராய் உள்ளனர். அப்பிரிவினருள் நச்சினார்க்கினியர் ஸ்மார்த்த பிராமணர் ஆவர். ஸ்மார்த்தர் ஸ்மிருதியில் கண்ட நெறியை மேற்கொண்ட அத்வைதக் கொள்கையினர். நச்சினார்க்கினியர் ஸ்மார்த்தர் என்பதற்கும் அத்வைதக் கொள்கையினர் என்பதற்கும் இவரது உரையில் சான்று உண்டு.

**'வேண்டிய கல்வி யாண்டுமூன்று இறவாது'** (கற்-47) என்னும் சூத்திரத்திற்கு, "துறவறத்தினைக் கூறும் **வேதாந்தம்** முதலிய கல்வி வேண்டிய யாண்டைக் கடவாது. அக்கல்வி எல்லாம் மூன்று பதத்தைக் கடவாது என்றவாறு."

"மூன்று பதமாவன: அது என்றும், நீ என்றும், ஆனாய் என்றும் கூறும் பதங்கள் தாம். அவை **பரமும் சீவனும் அவ்விரண்டும் ஒன்றாதலின்,** இம் மூன்று பதத்தின்கண்ணே தத்துவங் கடந்த பொருளை உணர்த்தும் ஆகமங்கள் எல்லாம் விரியுமாறு உணர்ந்து கொள்க" என்று உரையும் விளக்கமும் எழுதுகின்றார். இவர் இங்கே, தத்துவமஸி மகாவாக்கியம் சாந்தோக்ய உபநிஷத்தில் கூறிய கருத்துகளை எடுத்துக் கூறுகின்றார் என்றும், இது அத்வைதிகளுக்குச் சிறப்பாக உரியது என்றும் கூறுவர்.[1]

இவர், சமயப் பொது நோக்கு உடையவர். திருமாலை நிலங்கடந்த நெடுமுடி அண்ணல் என்றும், வேங்கட மலையை நிலங்கடந்த நெடுமுடி அண்ணலை நோக்கி உலகம் தவம் செய்து வீடுபெற்ற மலை என்றும் (தொல்காப்பியம்-சிறப்புப்பாயிர உரையில்) குறிப்பிடுகின்றார். புறத்திணையியலில் 'அருளொடு புணர்ந்த அகற்சி' என்பதனை விளக்க, புத்த பெருமானின் துறவைக் குறிப்பிடும் பாடலை மேற்கோள் காட்டுகின்றார்.

சமண சமயக் காப்பியமாகிய சிந்தாமணிக்கு உரை எழுத அச்சமயக் கருத்துகளை எல்லாம் நன்கு கற்றுத் தெளிந்துள்ளார். எழுத்ததிகார முதற் சூத்திர உரையில், 'வீடு பேற்றிற்கு உரிய ஆண் மகனை உணர்த்தும் சிறப்பான னகரம் பின்வைத்தார்' என்று சைனசமயத்தவர் போலக் கூறுகின்றார்.

**காலம்**

நச்சினார்க்கினியர் சில உரையாசிரியர்களின் பெயரையும் உரையையும் குறிப்பிட்டுள்ளதால் அவர்களுக்குப் பின்னர் வாழ்ந்தவர் என்பது விளங்கும். இவர், இளம்பூரணர் சேனா வரையர் பேராசிரியர் ஆகிய மூவரையும் குறிப்பிடுகின்றார். வேறு சில உரையாசிரியர்களைப் பெயர் கூறாமல் அவர்களின் கருத்துக் களைக் குறிப்பிடுகின்றார். இவர் நன்னூலாரின் கருத்துக்களைச் சொல்லதிகார உரையில் (எச்ச-61, 19, 20) குறிப்பிடுகின்றார்.

தொடர்நிலைச் செய்யுள் என்பதனைக் காப்பியம் என்று வழங்கலாம் என்ற அடியார்க்குநல்லார் கருத்தை (சிலப்.-பாயிரவுரை) சீவகசிந்தாமணி யுரையின் தொடக்கத்தில் மறுப்பதால், அவருக்கு இவர் பிற்பட்டவர் என்பது விளங்கும்.

* நச்சினார்க்கினியர் மு. அண்ணாமலை (1956) பக்கம். 6,7.

திருமுருகாற்றுப்படையில் (176)), ஔவையார் பாடல் ஒன்றை மேற்கோள் காட்டுகின்றார்.

சீவக சிந்தாமணியில், முக்தி இலம்பகத்தில் 'நாடக நயந்து காண்பார்' என்னும் செய்யுள் (391) உரையில் கோடகம் என்பதற்கு, "தாமம் மகுடம் பதுமம் கோடகம் கிம்புரி என்னும் ஐவகையிற் சிகரமாய்ச் செய்த முடி" என்று நச்சினார்க்கினியர் உரைப்பது, சூடாமணி நிகண்டு கூறும் கருத்து. (சூடாமணி-ஏழாம் பகுதி: செயற்கை வடிவப் பெயர்த் தொகுதி-22). சூடாமணி நிகண்டு (விசயநகரப் பேரரசர் கிருஷ்ண தேவராயர் காலமாகிய) பதினான்காம் நூற்றாண்டில் தோன்றியதாகும்.

எனவே, நச்சினார்க்கினியர் காலம் பதினான்காம் நூற்றாண்டின் இறுதியாகும்.

## வான்புகழ்

சிறந்த பல நூல்களுக்கு அரிய உரை இயற்றிய இப் பெரியாரைப் புலவர் பெருமக்கள் பெரிதும் போற்றிப் புகழ் கின்றனர். 'உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர்' என்று இலக்கணக் கொத்தின் ஆசிரியரும், 'அமிழ்தினும் இனிய தமிழ்மடவரல் செய் அருந்தவத்தின் பெரும்பயனாக அவதரித்து' அருளியவர் என்று டாக்டர் உ.வே. சாமிநாத ஐயரும், 'செந்தமிழ் மாமுகில் வள்ளல்' என்று மறைமலையடிகளும் இவரைப் புகழ் கின்றனர். இலக்கியச் சுவை சொட்டச் சொட்ட உரைநடை எழுதும் ஆற்றலை வியந்து, 'அமுதவாய் உடையன்' என்று பாராட்டுவர். பல சிறந்த நூல்களை ஆழ்ந்து பயின்று உரை எழுதியதோடு, 82 அரும் பெரும் நூல்களைக் கற்றுத் தெளிந்து அவற்றிலிருந்து மேற்கோள் பல காட்டி இருப்பதால்,

**நச்சினார்க்க கினியன் எச்சில்**
**நறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்**

என்று பாடி, இவரைப் புகழ்வர். இவர் நுழையாத துறை இல்லை. தொட்டுச் சுவைக்காத நூல் இல்லை!

## நச்சர்–நச்சினார்க்கினியரா ?

திருக்குறளுக்கு முற்காலத்தில் உரை எழுதிய பதின்மரில் 'நச்சர்' என்பவரும் ஒருவர். நச்சர் என்பவர், நச்சினார்க்கினியரே என்றும், அவர் செய்த திருக்குறள் உரை இன்று மறைந்துபோனது என்றும் சிலர் கூறி வருகின்றனர். நச்சர் என்ற பெயரே இவ்வாறு கருதத் தூண்டியது. இக் கருத்து உண்மையன்று என்பதற்குப் பின்வரும் காரணங்களைக் கூறலாம்:

1. பரிமேலழகர், திருக்குறள் உரையாசிரியர்களில் இறுதியில் தோன்றியவர். பத்தாவது உரையாசிரியர் அவரே. அவருக்கு முன் நச்சர், மணக்குடவர் முதலிய ஒன்பது உரையாசிரியர்களும் இருந்தனர். நச்சினார்க்கினியர் பரிமேலழகர்க்குப் பிற்பட்டவர். நச்சினார்க்கினியர் பரிமேலழகரை மறுக்கும் இடங்கள் உண்டு. ஆதலின், பரிமேலழகருக்கு முன் தோன்றி, உரைஎழுதிய நச்சர் வேறு; பரிமேலழகரை மறுக்கும் நச்சினார்க்கினியர் வேறு.

2. நச்சினார்க்கினியர் இயற்றிய உரைநூல்களைக் குறிப்பிடும் பழம்பாடலும் உரைச் சிறப்புப் பாயிரமும் நச்சினார்க்கினியர், திருக்குறளுக்கு உரை இயற்றியதாகக் குறிப்பிடவில்லை.

3. நச்சினார்க்கினியர், தாம் இயற்றிய உரைகளில், தமது உரைகளைப் பற்றிக் குறிப்பிடுவதுண்டு. எவ்விடத்தும் அவர், திருக்குறளுக்குத் தாம் உரை இயற்றி இருப்பதாய்க் குறிப்பிடவில்லை.

4. திருக்குறளை எடுத்தாளும் இடங்களிலும், குறட்பாவுக்கு வேறு உரையும், புதுவிளக்கமும் தரும் இடத்திலும் நச்சினார்க் கினியர் திருக்குறளுக்கு உரை எழுதிய குறிப்பு எதுவும் இல்லை.

"சங்கு உடைந்தனைய" (547) என்னும் சீவக சிந்தாமணிப் பாடலுக்கு உரை எழுதும்போது, 'சங்கு சுட்டாலும் நிறம் கெடாதது போலக் கெட்டாலும் தன் தன்மை கெடாத குடியுமாம்; நத்தம் போறகேடும் (குறள் 235) என்ப" என்று திருக் குறளை எடுத்துக்காட்டுகின்றார். இக் குறளுக்கு இவர் ஏனைய உரையாசிரியர்கள் கொண்ட உரையினும் வேறு உரை கண்டுள்ளார்.

முதற் குறளுக்கு இவர் எழுதும் விளக்கம் சுவையானது:

"இறைவன் இயங்குதிணைக்கண்ணும் நிலைத்திணைக் கண்ணும் பிறவற்றின்கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு எல்லார்க்கும் ஒப்ப முடிந்தாற்போல, அகரமும் உயிர்க்கண்ணும் தனிமெய்க்கண்ணும் கலந்து அவற்றின் தன்மையாயே நிற்கு மென்பது சான்றோர்க் கெல்லாம் ஒப்ப முடிந்தது. 'அகர முதல' என்னும் குறளான், அகரமாகிய முதலையுடைய எழுத்துக்க ளெல்லாம்; அதுபோல இறைவனாகிய முதலையுடைத்து உலகம் என வள்ளுவனார் உவமை கூறியவாற்றானும் பிற நூல்களானும் உணர்க." (மொழிமரபு-13)

இவற்றையெல்லாம் நோக்கும்போது, நச்சினார்க்கினியர் வேறு; நச்சர் வேறு என்பது விளக்கும்.

## முதலில் உரை எழுதிய நூல்

பல நூல்களுக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், முதன் முதலில் எந்த நூலுக்கு உரை இயற்றினார் என்று அறியும் ஆர்வம், கற்போர் உள்ளத்தில் எழுவது இயற்கையே.

தொல்காப்பியச் செய்யுள் இயலில் (210) 'அகன்று பொருள் கிடப்பினும்' என்ற சூத்திரத்தின் உரையில், "இனிப் பல செய்யுட்கள் வருமாறு சிந்தாமணியுள் யாம் கூறிய உரையான் உணர்க" என்றும் கூறுகின்றார்.

இதைக் கொண்டு நச்சினார்க்கினியர், தொல்காப்பியத் திற்கு உரை எழுதுமுன்னரே, சீவக சிந்தாமணிக்கு உரை எழுதி முடித்துவிட்டார் என்பதை அறியலாம்.

ஆனால் இக் கருத்திற்கு மாறாக வேறு சில சான்றுகள் சிந்தாமணி உரையுள் உள்ளன. சிந்தாமணியில் உள்ள 72, 892, 1913, 2690 ஆகிய பாடல்களில் நச்சினார்க்கினியர், தாம் தொல் காப்பியத்திற்குச் சிந்தாமணிக்கு உரை இயற்றுமுன்னரே உரை இயற்றி இருப்பதாயும், அவ்வுரையில் தம் கருத்துகளை விளக்கி இருப்பதாயும், அங்கே காணுமாறும் கூறுகின்றார்.

இவர், முதலில் உரை எழுதத் தொடங்கிய நூல் சிந்தாமணியா, தொல்காப்பியமா என்று அறிய இயலவில்லை. இவர் கூற்றே மாறுபாடாய் உள்ளது. இவற்றை எல்லாம் ஆராய்ந்த டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் ஒரு முடிவுக்கு வருகின்றார். சீவக சிந்தாமணிக்கு நச்சினார்க்கினியர் முதன் முதலில் ஓர் உரை இயற்றிச் சைன சமயத்தவரிடம் காட்டினார் என்றும்; அவர்கள் அதனைப் புறக்கணிக்கவே பிறிதோர் உரை இயற்றி, அவர்களின் பாராட்டுதலைப் பெற்றார் என்றும் செவிவழிச் செய்தியாக ஒரு வரலாறு உண்டு. இதனை ஆதாரமாகக் கொண்டு, டாக்டர் உ.வே.சா. முரண்பாட்டைத் தீர்க்க முயலுகின்றார்.

"இந்த இரண்டு பகுதியுள் முற்பகுதி இவர் தொல் காப்பியத்திற்கு உரை இயற்றுமுன் சிந்தாமணிக்கு முதல் முறை உரை இயற்றியதையும், இரண்டாவது பகுதி இவர் அந்நூலுக்கு உரை இயற்றியபின் அதற்கு இரண்டாம் முறை உரை இயற்றியதையும் ஒருவகையாகப் புலப்படுத்தி மேற்கூறிய வரலாற்றை வலியுறுத்தி நிற்றல் காண்க" என்று தெளிவுபடுத்து கின்றார்.

இவற்றால், முதன்முதலில் உரை இயற்ற எடுத்துக் கொண்ட நூல் சீவக சிந்தாமணி என்பதும், அவ்வுரை சைன சமயத்தவரால் புறக்கணிக்கப்படவே தொல்காப்பியத்திற்கு உரை இயற்றியபின்,

மீண்டும் சிந்தாமணிக்குப் புது உரை இயற்றினார் என்பதும் விளங்கும்.

## உரை இயல்பு

நச்சினார்க்கினியர் தம் உரையில் தெளிவும், விளக்கமும் அமையுமாறு எழுதிச் செல்வார். தேவையான இடங்களில் இலக்கணங்கூறி, வினைமுடிபுகளைக்கூறி விளக்குவார். சிறந்த மேற்கோள்களைத் தருவார். ஆனால், மேற்கோளாகக் காட்டப் பெற்றவை எந்த நூலுக்குரியவை என்று பெயர் சுட்டுவது இல்லை. பழைய பாடல்களை உரைநடையாக்கி இவர் எழுதுவதுண்டு. “நல்லார் உறுப்பெலாம் கொண்டு இயற்றியாள்” என்னும் குறிஞ்சிக்கலி அடியைச் சிந்தாமணி உரையில் (2453) ‘நல்லார் உறுப்பெலாம் கொண்டு இயற்றுதலின், தேன்’ என்று உரை நடையாக்கியுள்ளார்.

தாம் உரை எழுத எண்ணிய நூல் பிற சமயத்தைச் சார்ந்தது எனினும், அச் சமயத்தையும், நூலாசிரியர் கொள்கையையும் நன்கு அறிந்தே உரை எழுதுவார் என்பதற்குச் சிந்தாமணி உரையே சான்றாகும்.

மிகுதியாக எழுதி ஆரவாரம் செய்யாமல், சுருங்கச் சொல்லி விளங்க வைப்பார். வெளிப்படையாக எல்லோர்க்கும் விளங்கும் பாடல்களுக்கு இவர் உரை எழுதுவதில்லை. சிந்தாமணியில் உள்ள பல பாடல்களுக்கு உரை எழுதாமல் ‘பொருள் வெளிப்படை’ என்றே எழுதுவார்.

பத்துப்பாட்டு போன்ற மிக நெடிய பாடலாயினும் வினை முடிபு கூறி விளக்குவார்.

தொல்காப்பியம், சிந்தாமணி போன்ற பெரு நூல்களுக்கு உரை எழுதும்போது, அவற்றை முன்னும் பின்னும் சிங்க நோக்காகக் கண்டு, முழுநோக்கு உடையவராக விளங்குகின்றார். தொல்காப்பியத்தில் ஏதேனும் ஒரு நூற்பாவுக்கு உரை காணும்போது, தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று இலக்கணமும் உணர்த்தும் நூல் என்பதை இவர் நினைவில் கொண்டே எழுதுகின்றார். எவ்விடத்தும் இவர் இந்த நினைவோடே இருக்கின்றார்.

சீவகசிந்தாமணிக்கு உரை எழுதும்போது முழுக் கதையையும் நினைவில் கொண்டு எழுதுகின்றார். காப்பியத்தை முழு நோக்குடனே காண்கின்றார். பின்னால் வரும் நிகழ்ச்சியையும், முன்னே நடந்ததையும் சுட்டிச் செல்லுகின்றார். சிந்தாமணிக் காப்பியத்தை இவர் பலமுறை பயின்று தெளிவு

பெற்றிருக்கவேண்டும். கதைக்காக ஒருமுறை-இலக்கியச் சுவைக்காக ஒருமுறை-சமயக் கருத்திற்காக ஒருமுறை-கற்பனைத் திறனுக்காக ஒருமுறை-சொற்பொருள் விளக்கத்திற்காக ஒருமுறை என்று பலமுறை அக் காப்பியத்தை இவர் பயின்று இருக்க வேண்டும்.

இவர் இலக்கிய உரையில் இலக்கணத்தை நினைவூட்டுவார்; இலக்கண உரையில் இலக்கியத்தை நினைவூட்டுவார். தம் உரைகளையே பல இடங்களில் சுட்டிக்காட்டி நினைவூட்டுவார்.

**மாட்டு**

தொல்காப்பியர் செய்யுளுக்கு உரிய உறுப்புகளுள் ஒன்றாக 'மாட்டு' என்பதைக் குறிப்பிடுகின்றார்.

**அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்**
**இயன்றுபொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்**
**மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்**

**(செய்–210)**

என்று மாட்டு என்னும் உறுப்பினை விளக்குகின்றார். இச் சூத்திரத்திற்கு இளம்பூரணர், பேராசிரியர் ஆகியோர் கூறியுள்ள கருத்து வேறு; நச்சினார்க்கினியர் கொள்ளும் கருத்து வேறு. சொல்லதிகாரத்தில், அணுகி வந்த மாட்டு, அகன்று வந்த மாட்டு என்று இருவகை மாட்டுகளைக் குறிப்பிடுகின்றார் *(சொல்-409)*. மேலும், மொழிமாற்றுப் பொருள் கோள் வேறு; மாட்டு வேறு என்பதையும் விளக்கிக் கூறியுள்ளார். "மொழி மாற்றாவது கேட்டோர் கூட்டி உணருமாற்றான் ஈரடிக் கண்ணே வருவது என்றும், மாட்டு என்னும் உறுப்பாவது, இரண்டு இறந்த பல அடிக்கண்ணும் பலப்பல செய்யுள் தொடரின் கண்ணும் அகன்றும் அணுகியும் வரும் என்றும் கொள்க" என்பது அவ் விளக்கம் *(சொல்-409)*.

மாட்டு என்ற பெயரால், நச்சினார்க்கினியர் செய்யுட்களை கலைத்து, அடிகளை மாற்றிச் சொற்களைப் பிரித்து முன் பின்னாகக் கூட்டி வலிந்து பொருள் கொண்டு தம் கருத்தைப் பாட்டில் திணித்து விடுகின்றார்.

பத்துப்பாட்டில் ஒன்றாகிய சிறுபாணாற்றுப் படையின் முதல் இரண்டு அடிகள்,

**மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை**
**அணிமுலைத் துயல்வரூஉம் ஆரம்போல**

என்பவையாகும். இவ்வடிகளை நச்சினார்க்கினியர்

பணைத்தோள் மாநில மடந்தை மணிமலை
அணிமுலை துயல்வரூஉம் ஆரம் போல

என்று சொற்களை முன்பின்னாகத் தம் விருப்பம்போல் மாற்றிப் பொருள் எழுதுகின்றார்.

செல்புனல் உழந்த சேய்வரல் கான்யாற்றுக்
கொல்கரை நறும்பொழில்

ஏன்ற அடிகளை,

சேய்வரல் கரைகொல் கான்யாறு செல்புனல்
உழந்த நறும்பொழில்

என்று மாற்றி விடுகின்றார்.

பட்டினப் பாலையில்,

வசையில்புகழ் வயங்குவெண்மீன்

என்று தொடங்கும் அடியில் உள்ள 'வசையில் புகழ்' என்ற சொற்றொடரைப் பிரித்து ஆறாம் அடியில் உள்ள 'காவிரி' என்பதோடு கூட்டிப் பொருள் எழுதுகின்றார்.

பாட்டு இயற்றிய கவிஞன் கருத்தை அறவே புறக்கணித்து விட்டுத் தம் கருத்தைப் புகுத்தி விடுதலும் உண்டு. முல்லைப் பாட்டில், தலைமகளை ஆற்றுவிக்கக் கருதிப் பெருமுது பெண்டிர் நற்சொற் கேட்கும் நிகழ்ச்சியை,

...நெல்லொடு
அரும்பவிழ் அலரி தூஉய்க் கைதொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப

என்று நப்பூதனார் கூறுகின்றார். ஆனால் நச்சினார்க்கினியர் போர்மேற் செல்ல விரும்பும் மன்னனின் படைத்தலைவர் ஏவலால், நற்சொல் கோடற்கு உரியவர் நற்சொல் கேட்டு நின்றனர் என்று தம் கருத்தைப் பாட்டில் ஏற்றிக் கூற, சொற்களை முன்பின்னாக மாற்றுகின்றார். பதினெட்டாவது அடியில் உள்ள 'நல்லோர்' என்ற சொல்லை எடுத்து ஏழாவது அடியில் கொண்டுபோய் வைத்து

அருங்கடி மூதூர் மருங்கில் நல்லோர் போகி

என்று அமைத்துக் கொண்டு, "படைத்தலைவர் ஏவலால் நற்சொல் கோடற்கு உரியோர் போய், தெய்வத்தை வணங்கி நற்சொல் கேட்டு நிற்ப" என்று பொருள் எழுதுகின்றார். இவ்வாறு எழுதி, பாட்டு எழுதிய ஆசிரியரின் கருத்தைப் புறக்கணித்து விட்டுத் தம் கருத்தைப் பாட்டில் திணித்து விடுகின்றார்.

இலக்கணச் சூத்திரங்களுக்கு உரை எழுதும்போதும் இவர் இம் முறையை மேற்கொள்ளுகின்றார். தொல்காப்பியம் எழுத்ததி காரத்தில்,

**மருவின் தொகுதி மயங்கியல் மொழியும்**

**(புணரியில்-9)**

என்று தொடங்கும் நூற்பா ஆற்றொழுக்காகப் பொருள் கொள்ளு மாறு அமைந்திருப்பினும், அவ்வாறு பொருள் கொள்ளாமல் மேற் காட்டிய அடியை,

'மருமொழியும்' என்றும் 'இன் தொகுதி மயங்கியல் மொழியும்' என்றும் இருவகையாகப் பிரித்துப் பொருள் கூறுகின்றார்.

யகரமெய்யின் பிறப்பை விளக்குகின்ற,

**அண்ணம் சேர்ந்த மிடற்றெழு வளியிசை**
**கண்ணுற்று அடைய யகாரம் பிறக்கும்**

என்னும் நூற்பாவை *(99)*,

**எழுவளி மிடற்றுச் சேர்ந்த இசை**
**அண்ணங் கண்ணுற்று அடைய யகாரம் பிறக்கும்**

என்று மாற்றிப் பொருள் கூறுகின்றார்.

மொழிமரபில் (எழுத்-40) ஆய்தத்தின் இயல்பைக் குறிப்பிடும் நூற்பாவில் உள்ள 'மொழிக் குறிப்பெல்லாம்' என்பதற்கு இளம்பூரணர், 'குறிப்பு மொழி எல்லாம்' என்று பொருள் கொண்டதை மாற்றி நச்சினார்க்கினியர், குறிப்பு மொழியும்; எல்லா மொழியும்-என்று பிரித்துக் கூட்டிப் பொருள் எழுதுகின்றார்.

பெயர்ச் சொல்லுடன் இணைந்து நிற்கின்ற இடைநிலை களைக்கூடப் பிரித்து எடுத்து, தாம் விரும்பும் இடத்தில் சேர்த்துக் கொண்டு உரை எழுதுகின்றார்.

பாலைக்கலிப் பாடலில் *(28)*,

**பாடல்சால் சிறப்பிற் சினையவும் சுனையவும்**
**நாடினர் கொயல்வேண்டா நயந்துதாம் கொடுப்பபோல்**

என்ற அடிகளில், முதல் அடியில் சினையவும் சுனையவும் என்ற இரு சொற்களிலும் உள்ள உம்மையைப் பிரித்து எடுத்து, அடுத்த அடியில் உள்ள கொயல், நயந்து என்ற சொற்களுடன் இணைத்து விடுகின்றார்:

**பாடல்சால் சிறப்பிற் சினைசுனை**
**நாடினர் கொயலும் வேண்டா நயந்தும் தாம் கொடுப்பபோல்**

என்று மாற்றி அமைத்துக் கொள்கின்றார்.

இவ்வாறு இவர் பாடல்களை அலைத்து வலிந்து பொருள் கூறும் இடங்கள் பலவற்றைக் காணலாம்.

இவர் காலத்திற்கு முற்பட்ட உரையாசிரியர்கள் யாரும் இவர் போலப் பாடல்களைச் சிதைத்துப் பொருள் கொண்டதில்லை. இவருக்குப் பின் தோன்றிய உரையாசிரியர்களும் இவரது உரைப்போக்கைக் கண்டித்துப் புதுஉரை காணத்தயங்கவும் இல்லை.

பத்துப்பாட்டில் இரண்டு பாடல்களுக்கு ஆராய்ச்சியுரை எழுதிய மறைமலையடிகள், நச்சினார்க்கினியர் உரைப்போக்கைத் தக்க காரணம் பல காட்டி மறுக்கின்றார்.

"மாட்டு என்னும் செய்யுள் உறுப்பின் பயனாம் என்பது நுண்ணறிவுடையார்க்கு எல்லாம் இனிது விளங்கிக் கிடப்பவும், இதன் கருத்துப் பொருள் இதுவாதல் அறியமாட்டாத நச்சினார்க் கினியர், செய்யுளில் இடையற்று ஒழுகும் பொருள் ஒழுக்கம் அறிந்து உரை எழுதாராய்-ஓர் அடியில் ஒரு சொல்லையும் தொலைவிற் கிடக்கும் வேறோர் அடியில் வேறொரு சொல்லையும் தமக்குத் தோன்றியவாறெல்லாம் எடுத்து இணைத்துத் தாமோர் உரை உரைக்கின்றார்."[1]

"அங்ஙனம் உரை கூறுதல், நூலாசிரியன் கருத்துக்கு முற்றும் முரண் ஆதலானும், இவர்க்கு முன் இருந்த நக்கீரனாரை உள்ளிட்ட தொல்லாசிரியர் எல்லாம் இவ்வாறு உரை உரைப்பக் காணாமையானும் நச்சினார்க்கினியர் உரைமுறை கொள்ளற் பாலது அன்று என மறுக்க"[2]

"செய்யுளுக்கு இசைய உரை எழுதுதல் வேண்டுமேயன்றி உரைக்கு ஏற்பச் செய்யுளை அலைத்து மாற்றல் வேண்டும் என்றல் 'முடிக்குத் தக்க தலை செய்துகொள்வோம்' என்பார் சொற்போல் நகையாடுவதற்கே ஏதுவாம் என்று ஒழிக".[3]

இத்தகைய வன்மையான மறுப்பு எழுப்பிய மறைமலை அடிகள், புது உரை கண்டு வழிகாட்டியாக விளங்குகின்றார்கள்.

தமிழ் மரபுக்கு ஒவ்வாத முறையில் உரை எழுதிய நச்சினார்க்கினியர் அவ்வாறு உரை எழுதுதற்குரிய காரணத்தை மறைமலையடிகள் எடுத்துக்காட்டவும் தவறவில்லை. முல்லைப் பாட்டு ஆராய்ச்சியுரையில் அவர், "அற்றாயின், மிக்க செந்தமிழ் நூற்புலமையும் நுணுகிய அறிவும் உடைய நச்சினார்க்கினியர்

1. முல்லைப் பாட்டு ஆராய்ச்சியுரை (1937) பக். 35.
2. பட்டினப்பாலை ஆராய்ச்சி உரை (1919) பக். 85.
3. முல்லைப் பாட்டு ஆராய்ச்சி உரை (1937) பக். 36.

அவ்வாறு இணங்கா உரை எழுதியதுதான் என்னையோ எனின், வடமொழியில் இங்ஙனமே செய்யுட்களை அலைத்துப் பாட்டு ஒரு பக்கமும், உரை ஒருபக்கமுமாக இணங்காவுரை எழுதிய சங்கராசிரியர் காலத்திற்குப் பின்னே இருந்த நச்சினார்க்கினியர், வட மொழியில் அவர் எழுதிய உரைகளைப் பன்முறை பார்த்து அவைபோல், தமிழிலும் உரை வழங்கப் புகுந்து தமிழ்ச் செய்யுள் வரம்பழித்துவிட்டார் என்று உணர்க. வேதாந்த சூத்திரத்திற்குச் சங்கராசிரியர் இயற்றிய பாடியவுரை அச்சூத்திரத்திற்குச் சிறிதும் ஏலா உரை என்பது, ஆசிரியர் இராமாநுசர் பாடிய உரையானும், தீபா (Thibaut)பண்டிதர் திருப்பிய ஆங்கில மொழிபெயர்ப்பானும் உணர்க"[1] என்று தம் ஆராய்ச்சித்திறன் வெளிப்படும் வகையில், உண்மையை அறிந்து கூறுகின்றார்.

## இலக்கியப் புலமையும் நினைவாற்றலும்

பல இலக்கியங்களை நுண்ணிதின் ஆய்ந்து கற்ற நச்சினார்க் கினியர், நினைவாற்றலோடு ஆராய்ந்து அறிந்தவற்றை ஏற்ற இடங் களில் கூறி விளக்குகின்றார்.

மதுரைக் காஞ்சியும், நெடுநல்வாடையும் தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பற்றியவை. நச்சினார்க்கினியர் அப்பாண்டிய மன்னன் வரலாற்றினை, புறநானூறு அகநானூறு முதலிய தொகை நூல் களின் துணையால் நன்கு அறிந்து, வேண்டிய இடங்களில் அவ்வரலாற்றுச் செய்திகளை நினைவூட்டி உரை எழுதுகின்றார்.

பாண்டியன் நெடுஞ்செழியன் தலையாலங்கானம் என்னும் இடத்தில் இருபெரு வேந்தரையும் ஐம் பெரு வேளிரையும் வென்ற செய்தியை அகநானூறும் *(175, 209)* புறநானூறும் (19) விளக்கமாகக் குறிப்பிடுகின்றன. ஆனால் மதுரைக் காஞ்சியோ, நெடுநல் வாடையோ அம்மன்னன் போரிட்ட வரலாற்றினை விளக்க மாகக் கூறவில்லை. எனினும் அப்பாடல்களுக்கு உரை எழுதும் நச்சினார்க்கினியர் தேவையான இடங்களில் அம்மன்னனுடன் தொடர்புடைய வரலாற்றுச் செய்திகளைக் குறிப்பிட்டு விளக்கு கின்றார்.

நெடுநல்வாடையில்,

**பலரொடு முரணிய பாசறைத் தொழில் (188)**

என்ற அடிக்குச் 'சேரன் செம்பியன் முதலிய எழுவரோடே மாறுபட்டுப் பொருகின்ற பாசறை இடத்துப் போர்த் தொழில்' என்று எழுதுகின்றார். மதுரைக் காஞ்சியில்,

---

1. முல்லைப்பாட்டு ஆராய்ச்சி உரை (1937) 37.

இருபெரு வேந்தரொடு வேளிர் சாய (55)

என்ற அடிக்குச் 'சேரன் சோழன் ஆகிய இருவராகிய பெரிய அரசருடனே குறுநில மன்னரும் இளைக்கும்படி' என்று எழுதியபின், மேலும் விரிவாக விளக்குகின்றார்.

அரசுபட அமர் உழக்கி
முரசு கொண்டு களம்வேட்ட
அடுதிறல் உயர்புகழ் வேந்தே (128–130)

என்ற அடிகளுக்கு "நெடுநில மன்னர் இருவரும் குறுநில மன்னர் ஐவரும் படும்படிப் போரிலே வென்று" என்று பொருள் உரைக்கின்றார். "எழுவராவர்: சேரன், செம்பியன் திதியன் எழினி எருமையூரன் இளங்கோ வேண்மான் பொருநன் என்பர்" என்றும்; "இது தலையாலங் கானத்து வென்றமை கூறிற்று" என்று கூறித் தம் வரலாற்றுப் புலமையை வெளிப்படுத்துகின்றார்.

இவ்வாறே திருமுருகாற்றுப்படையில் முருகனோடு தொடர்புடைய புராணச் செய்திகளை நினைவுடன் குறிப்பிடும் இடங்கள் பல உள்ளன.

தொல்காப்பிய உரையிலும் இத்தகைய எடுத்துக் காட்டுகள் பல உள்ளன.

பதிற்றுப்பத்தில் பாட்டுடைத் தலைவனாகிய பெருஞ் சேரல் இரும்பொறை, அதியமான் அஞ்சியின் தகடூரை முற்று கையிட்ட செய்தியைத் தொகை நூல்களும், தகடூர் யாத்திரைப் பாடல்களும் குறிப்பிடுகின்றன. நச்சினார்க்கினியர் புறத்திணை யியலில் (7) 'ஒருவன் மேற் சென்றுழி ஒருவன் எதிர்செல்லாது தன் மதிற்புறத்து வரும் துணையும் இருப்பின் அஃது உழிஞையின் அடங்கும். அது சேரமான் செல்வுழித் தகடூரிடை அதியமான் இருந்ததாம்' என்று தகடூர் முற்றுகையை நினைவூட்டுகின்றார்.

அகத்திணை இயலில் (54), வெள்ளி வீதியார், ஆதிமந்தியார் ஆகிய இரு பெண்பாற் புலவர்களின் வாழ்க்கை வரலாற்றினை, அகப்பாடல்களின், துணைகொண்டு நுணுகி ஆராய்ந்து வெளியிடுகின்றார்.

**கன்றும் உண்ணாது.....கவினே**

(குறுந். 27)

—இது, வெள்ளி வீதியார் பாட்டு.

**மள்ளர் குழீஇய.....மகனே**

(குறுந். 31)

—இது, காதலற் கெடுத்த ஆதிமந்தி பாட்டு.

இவை தத்தம் பெயர் கூறின், புறமாம் என்று அஞ்சிவாளாது கூறினார்.

"ஆதிமந்தி தன் பெயரானும் காதலனாகிய ஆட்டனத்தி பெயரானும் கூறின் காஞ்சிப் பாற்படும்" என்று எழுதும் விளக்கம் சங்க இலக்கியங்களில் இவர்க்கு உள்ள புலமையையும் ஆராய்ச்சித் திறனையும் வெளிப்படுத்தும்.

அகநானூற்றிப் பாடல் ஒன்றில் (236) உள்ள "காதலற் கெடுத்த ஆதிமந்தி போல" என்ற தொடரை உரைநடையாக்கி எழுதுவதையும் நாம் இங்கே நினைக்க வேண்டும்.

புறத்திணையியலில் நக்கண்ணையார் வரலாற்றை எடுத்துக் காட்டியுள்ளார்.

## முரண்பாடு

இவரது உரையில் சில இடங்களில் முன்னுக்குப் பின் முரணாக இருக்கும் இடங்களும் உண்டு. சிறந்த நினைவாற்றல் உடைய இவர் இங்ஙனம் முரணாக எழுதுவது நமக்கு வியப்பைத் தருகின்றது.

அகத்திணையியலுள் (23) 'ஏஎ இஃதொத்தன்' என்னும் குறிஞ்சிக்கலிப் பாடலை (கலி.62) எடுத்துக்காட்டி, 'தீயகாமம் இழிந்தோர்க்கு உரிமையின், இதுவும் அடியோர் தலைவராக வந்த கைக்கிளை' என்று கூறிய இவர், கலித்தொகை உரையில் இப் பாடலைப் பெருந்திணை என்று குறிப்பிடுகின்றார்.

## நெடுநல்வாடை–திணை ஆய்வு

நெடுநல்வாடை திணை ஆராய்ச்சி அறிஞர் பலருடைய உள்ளத்தில் தோன்றி, பலப்பல வினாவிடைகளைத் தந்து வருகின்றது. இந்த ஆராய்ச்சிக்கு வித்திட்டு, தாமே ஒரு முடிவுக்கு வராமல் ஒதுங்கியவர் நச்சினார்க்கினியர்.

'வேம்புதலை யாத்த நோன்காழ் எஃகம்' (176) என' (பாண்டியனுக்கு உரிய) அடையாளப் பூ கூறினமையின் இப் பாடல் புறத்திணைக்கு உரியது என்கின்றார். பாடலுக்கு உரை எழுதப் புகுமுன், முன்னுரையாகச் சிலவற்றைக் கூறி, பாடலின் திணை துறை பற்றி ஆராய்கின்றார். 'பாலைக்குப் புறனாகக் கூறிய வாகைத்திணையாய் அதனுள்.....கூதிர்ப் பாசறையே ஆயிற்று' என்று கூறுகின்றார். பாட்டின் இடையில் (168) 'அம்ம— கேட்பாயாக; இஃது, இவள் வருத்தம் மிகுதி தீரவேண்டிக் கொற்றவையை நோக்கிப் பரவுகின்றவள் கூற்றாயிற்று. கேட்பாயாக என்றது கொற்றவை நோக்கி' என்று எழுதுகின்றார். பாடலின் இறுதியில் "இப்பாட்டுத் தலையானங்கானத்துச் செரு

வென்ற நெடுஞ்செழியன் மண்ணாசையாற் சென்று பொருதலின் இப்போர் வஞ்சியாகலின், வஞ்சிக்குக் கொற்றவை நிலை உண்மையின் கொற்றவையை வெற்றிப் பொருட்டுப் பரவுதல் கூறினார், அது பாலைத் திணைக்கு ஏற்றலின்'' என்று கூறுகின்றார்.

இக் கருத்துக்களை நோக்கும்போது இவர், நெடுநல் வாடை இன்ன திணைக்கு உரிய பாடல் என்று அறுதியிட்டுக் கூற எத் துணையோ நாட்கள் ஆராய்ச்சி செய்துள்ளார்; அத்தகைய நெடிய ஆராய்ச்சி செய்தும் வெற்றி காணமுடியாது குழப்பம் எய்தி இருக்கின்றார்; அக் குழப்பம் காரணமாகத் திணையில் துணிவு பிறவாது வாகைத்திணை என்றும் பாலைத் திணை என்றும் கூறிய தோடு கூதிர்ப்பாசறை என்றும் கொற்றவை நிலை என்றும் துறை யிலும் துணிவு பிறவாது கூறிச் சென்றுள்ளார் என்று தெளியலாம்.*

## பாரதக் கதையில்—முரண்பாடு

கலித்தொகையில் (101), முல்லைக்கலிப் பாடல் ஒன்றில்,

> **ஆரிருள் என்னான் அருங்கங்குல் வந்துதன்**
> **தாளிற் கடந்தட்டு, தந்தையைக் கொன்றானைத்**
> **தோளின் திருகுவான் போன்ம்**

என்ற பகுதிக்கு நச்சினார்க்கினியர் பின்வருமாறு உரை எழுது கின்றார்:

"வருதற்கரிய கங்குலிலே அரிய இருள் என்று கருதானாய் வந்து, துரோணாசாரியனைக் கொன்ற சிகண்டியைத் தன் முயற்சி யாலே வென்று கொன்று தன் தோளால், தலையைத் திருகும் அச்சுவத்தாமாவைப் போலும்."

இங்கே நச்சினார்க்கினியர் துரோணாசாரியனைக் கொன்ற வள் சிகண்டி என்று கூறுகின்றார். இக் கூற்று, பாரதக் கதையுடன் மாறுபாடாய் உள்ளது. துரோணரைக் கொன்றவன் திட்டத் துய்மன்; வீடுமனைக் கொன்றவள் சிகண்டி என்று பாரதக் கதை கூறுகின்றது (வில்லி-பதினெட்டாம் 213-215).

நச்சினார்க்கினியர் உரையில் இத்தகைய மாறுபாடு ஏற்படக் காரணம் என்ன என்பது புலப்படவில்லை.

## ஆராய்ச்சித் திறன்

குறிஞ்சிப் பாட்டில் கபிலர் 99 வகையான பூக்களைக் குறிப் பிடுகின்றார். (61-97). அப் பூக்களை எல்லாம் குறிஞ்சி நிலத்

* புனையா ஓவியம் – பக்கம். 19. செ. வேங்கடராமச் செட்டியார்.

தலைமகளும் தோழியும் பறித்துக் கொண்டுவந்து பாறையிலே குவித்து, மாலை தொடுத்துத் தம் தலையில் சூட்டிக் கொண்ட தாய் அப்புலவர் பாடுகின்றார். அப்பூக்கள் யாவும் குறிஞ்சி நிலத்திற்கு மட்டும் உரியவை அல்ல; ஐவகை நிலங்களுக்கும் உரியவை. அவை யாவும் ஓரிடத்தில்-மலை நிலத்தில்-இருந்தன என்பது பொருந்தாது.

மேலும் அப்பூக்கள் ஒரு காலத்தில் பூப்பனவும் அல்ல. வேனிற் காலத்தில் சிலவும், கார்காலத்தில் சிலவும் பனிக் காலத்தில் சிலவும் பூப்பன. அவையாவும் ஒரே காலத்தில் பூத்திருந்தன என்பதும் பொருந்தாது.

எல்லாப் பூக்களும் ஒரே நேரத்தில் பூப்பதும் இல்லை. காலையில் சிலவும், நண்பகலில் சிலவும், மாலையில் சிலவும், நள்ளிரவில் சிலவும் பூக்கும் இயல்புடையவை.

இவ்வாறு நிலம், பெரும்பொழுது, சிறுபொழுது ஆகிய மூன்றினாலும் ஒற்றுமைப்படாத பூக்கள், ஓரிடத்தில்-ஒரு காலத்தில்-ஒரு நேரத்தில் பூத்திருந்தன என்று கூறுவது பொருந்தாது. நச்சினார்க்கினியர் இவற்றை நன்கு ஆராய்ந் துள்ளார். இத்தகைய எண்ணங்கள் அவர் உள்ளத்தில் எழுந்துள்ளன. தொல்காப்பியம் அகத்திணை இயலில்,

**எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்**
**அந்நிலம் பொழுதொடு வாரா ஆயினும்**
**வந்த நிலத்தின் பயத்த ஆகும்**

**(அகத்–19)**

என்ற சூத்திரத்திற்கு உரை எழுதியபின், "கபிலர் பாடிய பெருங் குறிஞ்சியில் (குறிஞ்சிப் பாட்டு) வரைவு இன்றிப் பூ மயங்கியவாறு காண்க" என்று மிகச் சுருக்கமாக எழுதியுள்ளார். இங்கே அவரது ஆராய்ச்சித் திறன் வெளிப்படுகின்றது.

அப்பாட்டில் கூறப்பட்டுள்ள 99 வகையான பூக்களைப் பற்றியும் அவர் நன்கு அறிந்தே பொருள் எழுதுகின்றார். அப் பூக்களைப்பற்றி அவர் அறிந்துள்ள் செய்திகளும் விளக்கமும் நமக்கு வியப்பு அளிக்கின்றன.

காந்தள், தோன்றி இரண்டையும் சிலர் ஒன்றாகவே கருது கின்றனர். ஆனால் கபிலர்,

**வள்ளிதழ் ஒள்செங் காந்தள் (61)**

என்றும்,

**சுடர்ப்பூந் தோன்றி (90)**

என்றும் தனித்தனியே கூறுகின்றார். நச்சினார்க்கினியரும் இவற்றை வேறுபடுத்தி, "பெரிய இதழையுடைய ஒள்ளிய சிவந்த கோடற்பூ" என்றும், "விளக்குப் போலும் பூவினையுடைய தோன்றிப்பூ" என்றும் உரைக்கின்றார்.

தாழை (80) என்பதற்குத் 'தெங்கின் பாளை' என்றும், கைதை (83) என்பதற்குத் 'தாழம்பூ' என்றும் உரை எழுதி நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றார். சங்க இலக்கியப் புலவர் கூறிய பூப்பெயரைத் தம் காலத்தில் வழங்கும் பெயருடன் இணைத்துக் காட்டி, நமக்கும் அப்பெயர் அறிமுகம் ஆகும் அளவிற்கு அவர் உரை அமைந்துள்ளது:

சுள்ளி(66)—மராமரப் பூ
குடசம்(67)—வேட்பாலைப் பூ
வகுளம்(70)—மகிழம் பூ
போங்கம்(74)—மஞ்சாடி மரத்தின் பூ
சேடல்(82)—பவழக்கால் மல்லிகைப் பூ
நள்ளிருள் நாறி(94)-இருவாட்சிப் பூ

என்ற விளக்கம் இன்று நமக்குப் பெரிதும் பயன்படுகின்றன.

எழுத்துகளின் வடிவம்பற்றி இவர் ஆராய்ந்து கூறும் இடங்களும் உண்டு.

"ஆய்தம் என்ற ஓசைதான் அடுப்புக் கூட்டுப் போல மூன்று புள்ளி வடிவிற்று என்பது உணர்த்தற்கு ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும் என்றார். அதனை இக்காலத்தார் நடுவு வாங்கியிட்டு எழுதுப" (எழுத்:2) என்று ஆய்த எழுத்தின் வடிவத்தை ஆராய்கின்றார்.

உயிர்மெய் எழுத்துக்களின் வடிவம் பற்றிப் பின் வருமாறு கூறுகின்றார்:

"உருவு திரிந்து உயிர்த்தலாவது மேலும் கீழும் விலங்கு பெற்றும், கோடு பெற்றும், புள்ளி பெற்றும், புள்ளியும் கோடும் உடன் பெற்றும் உயிர்த்தலாம். கி கீ-முதலியன மேல் விலங்கு பெற்றன. கு கூ-முதலியன கீழ் விலங்கு பெற்றன. கெ. கே-முதலியன கோடு பெற்றன. கா ஙா-முதலியன புள்ளி பெற்றன: அருகே பெற்ற புள்ளியை இக் காலத்தார் காலாக எழுதினார். மகரம் உட்பெறு புள்ளியை வளைத்து எழுதினார். கொ கோ ஙொ ஙோ முதலியன புள்ளியும் கோடும் உடன் பெற்றன."

## உடம்படு மெய்

ய், வ் இரண்டு மட்டுமின்றி ஏனைய மெய்களும் உடம்படுமெய்யாக வரும் என்றும், உயிரீற்றின் பின்வருவதோடு

மெய்யீற்றின் பின்னும் உடம்படுமெய் வரும் என்றும் மொழி யியலார் கூறுவர்.

இக் கருத்தை நச்சினார்க்கினியர் கூறியுள்ளார்: "ஒன்றின முடித்தல் என்பதனால், 'விண்வத்துக் கொட்கும்' எனச் சிறுபான்மை புள்ளி யீற்றினும் வரும். செல்வுழி, உண்புழி என்பன, வினைத்தொகை என மறுக்க." (எழுத்-140)

## புனைந்து கூறிய கதைகள்

மூல நூல்களில் இல்லாத கதைகளை இவர் புனைந்து கூறுதலும் உண்டு. தொல்காப்பியம், சிறப்புப் பாயிரத்துள் தொல் காப்பியரையும் அகத்தியரையும் இணைத்து இவர் புதிய கதை யொன்றைப் புனைந்து உரைக்கின்றார்.

"தேவர் எல்லாம் கூடி, 'யாம் சேர இருத்தலின், மேருத் தாழ்ந்து தென்திசை உயர்ந்தது; இதற்கு அகத்தியனாரே ஆண்டு இருத்தற்கு உரியர்' என்று அவரை வேண்டிக்கொள்ள, அவரும் தென்திசைக்கண் போதுகின்றவர் கங்கையாருழைச் சென்று காவிரியாரை வாங்கிக் கொண்டு" என்று இவர் கட்டிவிட்ட கதை நீண்டு செல்கின்றது.

சிவஞான முனிவர், இந்தக் கதை எந்தப் புராணத்திலும் இல்லாமை கண்டு, நச்சினார்க்கினியர் சொந்தக் கதை என்று உணர்ந்து இதனை மறுக்கின்றார்; "அகத்தியரோடு முரணிச் சபித்தாராயின் அவ்வாறு ஓர் ஆசிரியரும் கூறாமையானும், அது வேத வழக்கோடும் ஆன்றோர் வழக்கோடும் மாறு கொள்வார் கூற்றேயாம் என மறுக்க" என்பது அவரது மறுப்புரை.

பத்துப் பாட்டில் இவர். கதை புனைந்து கூறும் இடங்கள் சில உள்ளன.

சிறுபாணாற்றுப் படையில், (172-173)

**திறல்வேல் நுதியின் பூத்த கேணி**
**விறல்வேல் வென்றி வேலூர்**

என்ற அடிகளுக்கு நச்சினார்க்கினியர், "முருகன் கையில் வலியினை யுடைத்தாகிய வேலின் நுதிபோல கேணி பூக்கப்பட்ட வெற்றியையுடைய வேலாலே வெற்றியையுடைய வேலூர்" என்று பொருள் எழுதி, பின்வரும் கதையைக் கூறுகின்றார்:

"'நல்லியக் கோடன், தன் பகை மிகுதிக்கு அஞ்சி, முருகனை வழிபட்டவழி அவன், 'இக் கேணியிற் பூவை வாங்கிப் பகைவரை எறி' என்று கனவிற் கூறி, அதிற் பூவைத் தன் வேலாக நிருமித்த தொரு கதை கூறிற்று" என்று எழுதுகின்றார். மூல நூலில் இல்லாத கதையை இவரே புனைந்து உரைக்கின்றார்.

பெரும்பாணாற்றுப் படையில் (வரி. 31) தொண்டைமான் இளந்திரையனைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார்,

திரைதரு மரபின் உரவோன்

என்று குறிப்பிடுகின்றார். இந்த வரிக்கு நச்சினார்க்கினியர் "கடலின் திரை கொண்டு வந்து ஏறவிட்ட மரபால்...திரையன் என்னும் பெயரை யுடையவன்" என்று பொருள் கூறி, கதை ஒன்றைக் கூறுகின்றார்.

"நாகபட்டினத்துச் சோழன், பிலத்துவாரத்தால் நாக லோகத்தே சென்று நாக கன்னியைப் புணர்ந்த காலத்து அவள் 'யான் பெற்ற புதல்வனை என்ன செய்யக் கடவேன்?' என்ற பொழுது, "தொண்டையை அடையாளமாகக் கட்டிக் கடலிலே விட, அவன் வந்து கரை ஏறின், அவற்கு யான் அரசவுரிமையை எய்துவித்து நாடாட்சி கொடுப்பல்!" என்று அவன் கூற, அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிடத் திரை தருதலின், திரையன் என்று பெயர் பெற்ற கதை கூறினார்".

இக் கதையினை மறுத்து, 'திரை தரு மரபின் உரவோன்' என்பதற்கு ந.மு. வேங்கடசாமி நாட்டார் வேறு பொருள் கூறுகின்றார்.

"முந்நீர் வண்ணன் புறங்கடை அந்நீர்த் திரைதரு மரபின் உரவோன் உம்பல்' 'என்பதற்கு, கடல் வண்ணனாகிய திருமாலின் பின் வந்தோனும், கடல் நீர்த் திரையால் தரப்பட்ட மரபினையுடைய உரவோனும் ஆகிய சோழனது வழித் தோன்றல் -என்பதே நேரிய பொருளாகும். நச்சினார்க்கினியர், இளந் திரையன் திரையால் தரப்பட்டவன் ஆதல்வேண்டும் என்னும் கொள்கை உடையராய், அதற்கு ஏற்பச் சொற்களை மாற்றி வலிந்து பொருள் கூறினர். திரையன் என்பது சோழனுக்கு உரிய தோர் பெயர் எனக் கொள்ளவேண்டும்".*

## நச்சினார்க்கு இனியரா ?

நச்சினார்க்கினியர் என்ற இனிய பெயரை உடைய இவர், இன்னாத கருத்துகள் சிலவற்றை எழுதி, தமிழறிஞர்களின் வெறுப்பைத் தேடிக் கொண்டுள்ளார். நால்வருணக் கொள்கை. பிறப்பால் உயர்வு தாழ்வு கற்பிக்கும் குலமுறைக் கோட்பாடு, வேத நெறிக்கு மக்களை இணங்க வைக்கும் நோக்கம், வடமொழிக் கொள்கைகளின் மீது கொண்டுள்ள கடும் பற்றுள்ளம் ஆகியவற்றை இவரிடம் காணலாம். பழம் பெரும் தமிழ் இலக்கண நூலாகிய தொல் காப்பியத்திற்கு உரை எழுதும்போது, பிற்காலக்

* கள்ளர் சரித்திரம் (1928) பக்கம். 32.

கொள்கையையும் தம் கருத்தையும் இடையிடையே புகுத்தி விடுகின்றார். தமிழர் பண்பாட்டிற்கு மாறுபட்ட கொள்கைகளைக் கூறும்போது, தமிழறிஞர்களின் நெஞ்சம் புண்படுகின்றது. நச்சினார்க்கு இனியவராக இருக்கவேண்டிய இவர், இன்னாதவராக மாறி, தமிழ்நெஞ்சங்களில் வெறுப்பை வளர்த்து விட்டார்.

தொல்காப்பியம் அகத்திணை இயலில்,

**ஏவல் மரபின் ஏனோரும் உரியர்**
**ஆகிய நிலைமை அவரும் அன்னர்**

**(அகத்–24)**

என்ற சூத்திரத்திற்குப் பின்வருமாறு பொருள் எழுதுகின்றார்.

"வேத நூலுள் கூறிய இலக்கணத்தானே, பிறரை ஏவிக் கொள்ளும் தொழில் தமக்கு உளதாகிய தன்மையை உடைய அந்தணர் அரசர் வணிகரும் அம் மூவரைப்போல பிறரை ஏவிக் கொள்ளும் தன்மையராகிய குறுநில மன்னரும் அரசராற் சிறப்புப் பெற்றோரும் நால்வகை வருணம் என்று எண்ணிய வகையினால் ஒழிந்துநின்ற வேளாளரும் உரிப்பொருள் தலைவர் ஆவதற்கு உரியர் என்றவாறு."

இவ்வாறு பொருள் எழுதியபின், சங்க இக்கிய அகத்திணைப் பாடல்களுக்கு உரிய தலைமக்கள் மீது நால்வகை வருணப் பாகுபாட்டைத் திணிக்கின்றார்.

'முளிதயிர் பிசைந்த' (குறுந்-166) என்ற குறுந்தொகைப் பாடலைக் காட்டி "இது பார்ப்பானையும் பார்ப்பனியையும் தலைவராகக் கூறியது" என்று குறிப்பிடுகின்றார். இவ்வாறே ஏனைய வருணத்தாரையும் சங்கப் பாடல்களில் சுட்டிக் காட்டுகின்றார். கலித்தொகைப் பாடல்களில் வரும் தலைவன் தலைவிக்கும் இவர் நால்வருண வண்ணத்தைப் பூசி வேறுபடுத்திக் காட்டுகின்றார். தலை மக்களை நால்வருண வேறுபாட்டால் பிரித்து அறியும்முறை முற்காலத்தில் இல்லை. ஆதலின் இவ்வாறு உரை காண்பது பொருந்தாது.

நால்வருண வேறுபாட்டையும், பிறப்பால் கற்பிக்கப் படும் உயர்வு தாழ்வுகளையும் விளக்கமாக இவர் கூறும் இடங்களும் உள்ளன.

களவியலுள்,

**ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப;**
**மிக்கோன் ஆயினும் கடிவரை இன்றே**

என்ற சூத்திர உரையின் கீழ், "மிகுதலாவது, குலம் கல்வி பிராயம் முதலியவற்றான் மிகுதல். எனவே அந்தணர் அரசர் முதலிய வருணத்துப் பெண் கோடற்கண் உயர்தலும், அரசர் முதலியோர் அம்முறை உயர்தலும் கொள்க" என்று விளக்கம் எழுதியுள்ளார்.

பொருளியலுள்,

பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே

(பொரு-30)

என்ற சூத்திரத்தின் உரைக்கீழ், 'அந்தணர்க்கு நால்வரும் அரசர்க்கு மூவரும், வணிகர்க்கு இருவருமாகிய தலைவியர் ஊடற்கு உரியர்' என்று எழுதியுள்ளார்.

கற்பியலில், (6) "அந்தணர்க்கு நால்வரும் அரசர்க்கு மூவரும் வணிகர்க்கு இருவரும் தலைவியர் ஆகிய வழித் தம் குலத்திற் கொண்டவரே வேள்விக்கு உரியர்; ஏனையோர் வேள்விக்கு உரியர் அல்லர்" என்று எழுதியுள்ளார்.

இவை நச்சினார்க்கினியரின் நால்வருணப் பற்றையும், குல முறையால் வரும் ஏற்றத்தாழ்வுக் கொள்கையையும் நன்கு வெளிப்படுத்தும்.

பாட்டிற்குரிய தலைமகளுக்கு நால்வருணம் கூறிய இவரே, பாடல்களில் கூறப்படாத பிரமசரியம், கிரகஸ்தம், வானப் பிரத்தம், சன்னியாசம் ஆகிய நால்வகை நிலைகளையும் அகத்திணைத் தலைமக்கள் வாழ்வில் புகுத்தியுள்ளார்.

கலித்தொகையில், 'செல்வம் என்றது துறவறத்திற் சேறற்குக் கற்ற கல்வியை; அது வானப்பிரத்தம் (15)' என்றும், 'இல்லறம் நிகழ்த்தி வானப்பிரத்தம் நிகழ்த்துங்கால் உடனுறைதலின் உடனுறை வாழ்க்கை என்றான் (94). என்றும் கூறியுள்ளார். பாட்டில் இல்லாத செய்தியைத் இவர் கூறித் தம் கருத்தைத் திணிக்கின்றார்.

பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப

(கற்-4)

என்ற சூத்திரத்திற்குப் பொருந்தாவுரை எழுதுகின்றார். 'இருடிகள், மேலோர் கரணமும் கீழோர் கரணமும் வேறுபடக்காட்டினார்' என்று எழுதி, தமிழ் பண்பாட்டிற்கு மாசு தேடுகின்றார்.

கற்பு என்பதை விளக்கும்போது, 'இவளை இன்னவாறு பாதுகாப்பாய் எனவும், இவற்கு இன்னவாறே நீ குற்றேவல் செய்து ஒழுகுக எனவும் அங்கியங் கடவுள் அறிகரியாக மந்திர

வகையால் கற்பிக்கப்படுதலின், அத் தொழிலைக் கற்பு என்றார்' (கற்-1. உரை) என்று உரை எழுதி, வேத நெறியைப் புகுத்துகின்றார்.

தமிழ் மக்கள் கனவிலும் நினையாத ஒரு வழக்கத்தை-மரபை-நச்சினார்க்கினியர் தமிழ்மக்கள் மீது சுமத்துகின்றார்.

கற்பியலில் (5),

**கரணத்தின் அமைந்த முடிந்த காலை**

என்ற அடிக்கு, "ஆதிக் கரணமும் ஐயர் யாத்த கரணமும் என்னும் இருவகைச் சடங்கானும் ஓர் குறைபாடு இன்றாய், மூன்று இரவின் முயக்கம் இன்றி, ஆன்றோர்க்கு (மதி கந்தருவர் அங்கி) அமைந்த வகையால் பள்ளி செய்து ஒழுகி நான்காம் பகல் எல்லை முடிந்த காலத்து" என்று பொருந்தாவுரை எழுதித் தமிழறிஞர்களின் வெறுப்புக்கு ஆளாகின்றார்.

**அல்லல் தீர ஆர்வமொடு அளைஇச்**
**சொல்லுறு பொருளின் கண்ணும்**

(கற்–5)

என்ற அடிகளுக்கு, "வரைந்த காலத்து, 'மூன்று நாள் கூட்டம் இன்மைக்குக் காரணம் என்?' என்று தலைவி மனத்து நிகழா நின்ற வருத்தம் தீரும்படி மிக்க வேட்கையோடு கூடியிருந்து வேதம் சொல்லுதல் உற்ற பொருளின் கண்ணும்" என்று உரை எழுதிய பின் மேலும் தம் கருத்தைத் தெளிவுபடுத்துகின்றார்.

"அது, முதல்நாள் தண்கதிர்ச் செல்வற்கும், இடைநாள் கந்தருவர்க்கும், பின்னாள் அங்கியங் கடவுளுக்கும் அளித்து நான்காம் நாள், அங்கியங் கடவுள் எனக்கு நின்னை அளிப்ப, யான் நுகர வேண்டிற்று, அங்ஙனம் வேதம் கூறுதலால் எனத் தலைவிக்கு விளக்கம் கூறுதல்" என்று வேத நெறியை விளக்கு கின்றார்.

தமிழ் இலக்கண நூலுக்கு உரைஎழுதப் புகுந்த நச்சினார்க் கினியர், வடமொழியில் உள்ள வேத நெறியையும், குல முறைக் கோட்பாட்டையும் தம் உரையில் புகுத்தித் தமிழ்மக்களின் பண் பாட்டிற்கு மாசு ஏற்படுத்தியதை நினைந்து துன்புறும் தமிழ் நெஞ்சங்கள் பலவாகும்.

சிறுபாணாற்றுப்படையில் **'கருதியது முடித்தலும்'** (212) என்ற தொடருக்கு நச்சினார்க்கினியர், 'தன் நெஞ்சு கருதிய புணர்ச்சியைக் குறை கிடவாமல் முடிக்கவல்ல தன்மையும்' என்றும், 'நுகர்தற்கு உரிய மகளிரை நுகர்ந்து பற்று அறாக்கால் பிறப்பு அறாமையின், கருதியது முடிக்கவேண்டும் என்றார்" என்றும் எழுதும் கருத்துகளைத் தமிழறிஞர்கள் ஏற்பதில்லை.

## நடுவு நிலைமை

இவர் உரையில் நடுவுநிலைமை பிறழாத உள்ளம் வெளிப் படும் இடங்களும் சில உண்டு.

"காலம் உலகம் என்பன வடசொல் அன்று. ஆசிரியர் (தொல்காப்பியர்) வடசொற்களை எடுத்தோதி இலக்கணம் கூறார் ஆதலின்" (சொல்-58) என்று எழுதுவது சேனாவரையர்க்கு மாறு பட்ட கருத்தாகும். எனினும் தம் உள்ளத்தில் தோன்றிய கருத்தினைக் கரவின்றி வெளியிடுகின்றார்.

களவியலில் (1), "கந்தருவர்க்குக் கற்பின்றி அமையவும் பெறும். ஈண்டுக் கற்பின்றிக் களவே அமையாது என்றற்குத் துறையமை என்றார்" என்று நச்சினார்க்கினியர் கூறுகின்ற விளக்கம், தமிழ் அகப்பொருள் இலக்கணத்திற்கே புதியதொரு ஒளி தந்து ஆராய்ச்சியறிஞர்களை மகிழ்விக்கின்றது.

## தம் கருத்தே சாதித்தல்

சிவஞானமுனிவர் தொல்காப்பியச் சூத்திர விருத்தியில், "நச்சினார்க்கினியர் முதலியோர் போல யாம் பிடித்ததே சாதிப்பேம் என்னும் செருக்கால் யாண்டும் மயங்காமையான்" என்று எழுதி நச்சினார்க்கினியர் பற்றித் தாம் கொண்ட கருத்தை வெளிப்படுத்தியுள்ளார். சிவஞான முனிவர் கூறுவது போலவே, நச்சினார்க்கினியர் தாம் கொண்ட கருத்தையே வற்புறுத்திக்கூறும் இடங்கள் சில உண்டு.

எழுத்ததிகாரத்தில், எழுத்துகள் மயங்கும் நிலை பற்றிக் கூறும்போது, தொல்காப்பியம் கூறும் விதி ஒரு மொழிக்கண் நிற்கும் எழுத்துநிலை பற்றியதாகும் என்று உரை கூறுகின்றார். அவ்விதி இருமொழி வந்து இணையும் இடத்திற்கும் பொருந்தும் என்று இளம்பூரணர் தெளிவுபடுத்தி இருந்தும், தம் கருத்தையே வற்புறுத்திக் கூறுகின்றார். ஆனால் தாம் கொண்ட கருத்திற்கு ஏற்ற உதாரணம் ஒரு சொல்லாக இல்லாமை கருதி, "அத்தகைய சொற்கள் தொல்காப்பியர் காலத்தில் வழங்கின; இன்று வழக்கு ஒழிந்தன" என மொழிகின்றார் (நூல் மரபு: 24, 27, 29).

பிரயோக விவேக நூலாசிரியர் நச்சினார்க்கினியர் இவ்வாறு கூறியிருப்பது பொருந்தாது என்று பின்வருமாறு மறுத்துக் கூறுகின்றார்:

"வடநூலார் சையோகம் ஒரு மொழியினும் புணர்மொழி யினும் கொள்வர். அது பற்றிச் சூத்திரம் செய்தபடி இளம் பூரணரும் நன்னூலாரும் அவ்வாறு கொள்வர். அக் கருத்து

அறியாத நச்சினார்க்கினியர் ஒரு மொழியிற்கொண்டு இரு மொழியிற் கொள்ளாது உதாரணம் இறந்த என்பர்" (*காரக-5*).

மொழிமரபில் (*21, 22, 25*) போலி எழுத்துகள் பற்றிய தொல்காப்பியச் சூத்திரங்களுக்கு உரை எழுதியபின், 'அது கொள்ளற்க' என்று கூறுகின்றார். இதைப் பிரயோக விவேக நூலாசிரியர் பின் வருமாறு மறுக்கின்றார்:

"நச்சினார்க்கினியர் எழுத்ததிகாரத்துள் போலி எழுத்துக் கொள்ளற்க என்பர். கொள்ளா எழுத்திற்கு இலக்கணங்கூறின் அந்நூற்கு நின்று பயனின்மை என்னும் குற்றம் தங்கும் என்க. நன்னூலாரும் போலியைத் தள்ளாது எழுத்திலக்கணம் 'பன்னிரு பாற்றதுவே' என்றலின், போலி எதுகை நிமித்தம் அங்கீகார மாயிற்று. இளம்பூரணரும் போலி எழுத்தைக் கொள்ளற்க என்று கூறாமை அவர் உரையிற் காண்க" (*காரக-5*).

சங்ககாலத் தமிழ்மக்கள் நெல்லிலிருந்து கள் எடுத்து உண்டனர் என்பதற்குச் சான்று பல உண்டு (*பெரும்.142, பட்-93, மலை-172*).

பெரும்பாணாற்றுப்படை (*278-281*),

**பூம்புற நல்லடை அளைஇ**
**... ... ... ... ...**
**வெந்நீர் அரியல் விரலலை நறும்பிழி**

என்று கள் காய்ச்சிய முறை பற்றிக் குறிப்பிடுகின்றது. இவ்வரிக்கு உரை எழுதியபின் நச்சினார்க்கினியர் 'நெல்லடையும் பாடம்' என்று கூறுகின்றார். நல்லடை என்ற பாடத்தை விட நெல்லடை என்ற பாடமே சிறந்தது.

"சுடர்க்கடைப் பறவை பெயர்ப்படு வத்தம்' என்பதற்குப் பொருந்தா உரை எழுதுகின்றார். "இனி மின்மினி நெல்' என்பாரும் உளர்" என்று இவரால் புறக்கணிக்கப்பட்ட உரையே பொருத்தமான உரை என்பது அறிஞர்களின் கருத்து.

பட்டினப்பாலை,

**நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்**
**காலின் வந்த கருங்கறி மூடையும்** **(18-55)**

என்று, காவிரிப்பூம்பட்டினத்திற்கு வந்தப் பொருள்களைக் குறிப்பிடுகின்றது. இப்பகுதி, பழந்தமிழ் நாட்டுத் துறைமுகப் பட்டினத்திற்கு அரேபியா முதலிய நாடுகளிலிருந்து கடல் வழியாக வந்த குதிரைகளையும், சேர நாட்டிலிருந்து வண்டிகளில் மூலம் வந்த மிளகு மூட்டைகளையும் அறிவிப்பதாகக் கருதுவர். ஆனால் நச்சினார்க்கினியர், இவ்வரிகளுக்கு இவ்வாறு நேரே பொருள் கொள்ளாமல் முன்னும் பின்னும் மாற்றி, தம் கருத்திற்கு

ஏற்றவாறு சொற்களை அமைத்து, பொருந்தா உரை எழுதுகின்றார்.

இவ்வாறு நச்சினார்க்கினியர் தம் கருத்தையே சாதிக்கும் இடங்கள் இன்னும் பலவற்றை எடுத்துக் காட்டலாம்.

## 2. சீவகசிந்தாமணி உரை

நச்சினார்க்கினியர் தம் புலமைகொண்டு உழுது பயன் கண்ட விளைநிலங்களில் சீவக சிந்தாமணியும் ஒன்று. சிந்தாமணி என்னும் காப்பியப் பெருங்கோயில், நச்சினார்க்கினியர் உரை என்னும் நந்தா விளக்கால் பொலிவு பெறுகின்றது. அக் கோயிலின் அழகு, விளக்கின் சுடரொளியால் மிகுகின்றது. காப்பியப் பெருங்கோயினுள் நுழைந்து காண்பவர் கண்களை, நச்சினார்க்கினியர் ஏற்றி வைத்த சுடர்விளக்கு, கவர்ந்து பேரின்ப மூட்டுகின்றது.

சீவகசிந்தாமணிக்கு நச்சினார்க்கினியர் இயற்றியுள்ள உரையின் திறத்தை உரைச் சிறப்புப் பாயிரம்,

**திருத்தகு முனிவன் கருத்துஇது என்னப்**
**பருப்பொருள் கடிந்து பொருள்தொடர்ப் படுத்து**
**வினையொடு முடியப் புனையுரை உரைத்தும்**

என்று போற்றுகின்றது.

தேவர் தந்த காப்பியச் சிந்தாமணியைச் சிறந்த இலக்கியமாய் - கலைத்திறன் மிக்க காப்பியமாய்க் கண்டு மகிழ்ந்த நச்சினார்க்கினியரின் உரைத்திறன் பலமுறை கற்றுப்போற்றத் தக்கதாகும். சிந்தாமணி, நச்சினார்க்கினியரால் பட்டை தீட்டப் பெற்று வண்ணச் சுடரொளியைப் பலவகையாய் வீசி மகிழ் விக்கின்றது. இவ்வுரை விளக்கம் தேவரின் புலமை மாண்பை நன்கு வெளிப்படுத்துகின்றது. தேவரின் புலமை வளத்தை அளந்து காணும் திறன் நச்சினார்க்கினியரிடம் உள்ளது.

சைவ சமயத்தைச் சேர்ந்த அந்தணரான நச்சினார்க்கினியர், ஜைன சமயக் காப்பியமாகிய சிந்தாமணிக்கு நடுநிலையோடு, சமயக் காழ்ப்பு இன்றி உரை எழுதும் பணியை மேற்கொண்டு செம்மையாய்ச் செய்து முடித்துள்ளார். முதலில் இவர் சிந்தாமணிக்கு ஓர் உரை இயற்றி, ஜைன சமயச் சான்றோர் களிடம் காட்டியபோது அவ்வுரை நன்கு அமைய வில்லை என்று மறுத்தனர்; பின்னர் ஜைன சமயக் கருத்துக்களை நன்கு ஆய்ந்து தெளிந்து மீண்டும் புதிய உரை விளக்கம் எழுதி அச்சான்றோர் களின் பாராட்டைப் பெற்றார் என்று அறிஞர்கள் கூறுகின்றனர்.

சிந்தாமணி உரை அரங்கேறியதைப் பற்றிப் புலவர் பெரு மக்களிடையே ஒரு கதை வழங்கி வருகின்றது. சமணர்களின் காப்பியமாகிய சீவக சிந்தாமணிக்கு முதன் முறை உரை இயற்றி நச்சினார்க்கினியர் சமணப் பெரியவர்களிடம் சென்றபோது அவர்கள் அவ்வுரையினை வாங்கிப் படித்தப் பார்த்துச் சினமுற்று, "நச்சினார்க்கினியன் என்னும் கார் எருமை, சிந்தாமணி என்னும் தாமரைத் தடாகத்தினுள் புகுந்து குடைந்து, தாமரை மலர்களைக் கசக்கி எறிந்து பாழ்படுத்தி விட்டது!" என்றனராம்.

மறுமுறை வேறுரை திருத்தமாக எழுதிச் சென்று சமணச் சான்றோர்களிடம் காட்டியபோது பெரிதும் மகிழ்ந்து, "நச்சினார்க்கினியர் என்னும் வெள்ளையானை சிந்தாமணி என்னும் தாமரைப் பொய்கையினுள் நுழைந்து அழகிய மலர்களைத் தன் கையால் பறித்துத் தலைமீது வைத்துக் கரைக்கு இனிது வந்து சேர்ந்தது!" என்றனராம்.

நச்சினார்க்கினியர் இருமுறை உரை எழுதினார் என்ற கருத்தை டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் உடன்படுகின்றார். தமக்கு இருவகையான உரை விளக்கங்கள் அமைந்த ஏடடுப் பிரதிகள் கிடைத்தன என்று கூறி, உரை இரு வகையாக அமைந் திருப்பதற்குரிய காரணத்தைப் பின்வருமாறு தெளிவுபடுத்து கின்றார்:

> "ஜைன அன்பர்களுடைய பழக்கத்தால் ஏட்டுப் பிரதிகள் இரண்டு வகையாக இருந்ததற்குக் காரணம் தெரிந்து கொண்டேன். நச்சினார்க்கினியர் முதலில் சிந்தாமணிக்கு ஓர் உரை எழுதினாராம். பிறகு அதை ஜைனர்களிடம் படித்துக் காட்டிய போது சம்பிரதாய விரோதமாகச் சில பகுதிகள் உள்ளன என்று சொன்னார்களாம். அதனால் அவர் தம்மை ஒரு ஜைனராகச் சொல்லிக் கொண்டு சிற்றாம்பூர் என்னும் இடத்திலுள்ள ஜைன மடத்திற்கு வந்து சில காலம் தங்கி ஜைன நூல்களையும் ஜைன சம்பிரதாயங்களையும் கற்றுச் சென்று மீட்டும் புதிய உரையை எழுதினாராம். விசேஷ உரையுடன் இருக்கும் பிரதியிலுள்ளது பின்பு எழுதிய உரை என்று தெரிய வந்தது"

**(என் சரித்திரம் (1950) பக்கம் 741.)**

நச்சினார்க்கினியர் அரிதின் முயன்று எழுதிய சிந்தாமணி உரையைக் காலந்தோறும் அறிஞர்கள் போற்றி வருகின்றனர். 'பவர்' என்னும் ஆங்கிலப் பேராசிரியர், சிந்தாமணி உரைச்

சிறப்பையும், நச்சினார்க்கினியர் புலமை மாண்பையும் பின் வருமாறு புகழ்ந்துள்ளார்:

> "ஐரோப்பிய இலக்கியத் திறனாய்வாளர்களின் விளக்கத்தைப் போல, இவர் உரைப்போக்கு அமைந்துள்ளது. செய்யுளின் பொருளை விளக்கி இலக்கணத்தின் தனித் தன்மைகளைக் குறிப்பிடுகின்றார். தொல்காப்பியச் சூத்திரங்களைத் தம் உரை முழுதும் மேற்கோள் காட்டுகின்றார். சிறப்பான சொற்றொடர்களை விளக்குகின்றார். தம் காலத்தில் வழங்கி வந்த பல பாட வேறுபாடுகளைத் தருகின்றார். இவரது உரைநடை செறிவான போக்கில் உயர்வான மொழியில் அமைந்துள்ளது. பாகுபாடு செய்யும் பேராற்றலை இவரது படைப்பில் காணலாம்."*

**இலக்கிய நோக்கு:** நச்சினார்க்கினியர், சிந்தாமணியைச் சிறந்த இலக்கியமாகக் கருதிப் போற்றியுள்ளார். நூலின் தொடக்கத்தில்-முதற்பாட்டு உரையில், "யாமும் இவ்விலக்கியம் இனிது முடிதற் பொருட்டு அவன் திருவடிகளை வணங்குவோம் என்றார் என்க" என்றும், நூலின் இறுதியில் *(3142)*, "இவ்விலக்கியம் இடுக்கண் இன்றி இனிது முடிந்த மகிழ்ச்சியான், மீண்டும் வணங்குகின்றார்" என்றும் கூறியுள்ளார்.

சிந்தாமணியை ஆழ்ந்து கற்று, கலையழகில் ஈடுபட்டு, இலக்கியச் சுவையில் தம்மை மறந்து ஈடுபட்டவர் நச்சினார்க்கினியர். ஆதலின் சொற்களுக்குப் பொருத்தமான பொருளை உரைக்கின்றார்; பாட்டில் அமைந்திருக்கும் நுண்ணிய கருத்துகளை வெளிப்படுத்துகின்றார்; உவமைகளின் பொருத்தத்தை விளக்குகின்றார்; இலக்கிய மரபுகளைப் பேணிக் காக்கின்றார்; உலகியலை உணர்த்தி நயவுரை எழுதுகின்றார்.

**சொற் பொருள்:** சிந்தாமணியில் உள்ள சொற்களும் சொற்றொடர்களும் நச்சினார்க்கினியர் விளக்கத்தால் சிறந்த பொருளை உணர்த்துகின்றன. அவற்றுள் சில கீழே தரப்படுகின்றன:

உயர்மிக்க தந்தை *(473)*-பிள்ளை உயர்ச்சி மிகுதற்குக் காரணமான தந்தை.

* His Comments are very much on the plan of European annototions. He paraphrases the text and points out grammatical peculiaritles. He quotes Tholkappia Sutrams through out, explains Obsolute terms and gives the various readings which existed in his day; but his style is condensed and his language pedantic. His productions, however Show great powers of analysis. – Rev. Dr. BOWER, History of Tamil literature – Page 256. M.S. Purnalingam Pillai.

மன்னுடை வேல் (1200)-அரசர் கெடுதற்குக் காரணமான வேல்.

வாக்கு அமை உரு (1258)-கவிகளால் புகழ்தல் ஆகா வடிவு.

நன் குரங்கு (1997)-பொல்லாங்குக்கு நன்றான குரங்கு.

இரும்பு உண்டு மிகுத்த மார்பு (2281)-இரும்பு (வாள் வேல் முதலியன) மேய்ந்து பசி தீர்ந்து மிகுத்து வைத்த மார்பு.

**நுண்கருத்து:** பாட்டில் அமைந்துகிடக்கும் நுண்ணிய கருத்துகளை வெளிப்படுத்துவது நச்சினார்க்கினியர் இயல்பு. "அம்மி மிதந்து ஆழ்ந்து சுரை வீழ்ந்தது" (495) என்பதற்கு, "ஆழ்தற்குரிய அம்மி மிதந்து மிதத்தற்குரிய சுரை ஆழ்ந்து வீழ்ந்தது என்றது, உயர்ந்தோர் வாழாதே தாழ்ந்தோர் வாழ்ந்ததனை" என்று விளக்கம் எழுதுகின்றார்.

குணமாலையும் சுரமஞ்சரியும் தந்த சுண்ணப் பொடிகளில் சிறந்ததைத் தேர்ந்தெடுக்கச் சீவகன் அழைத்த 'சுரும்பு வண்டு தேனீ மிஞிறு (892) ஆகிய நால்வகையான 'தாதுண் பறவை'களை நச்சினார்க்கினியர், வேறுபாடு காட்டி விளக்குகின்றார். அவற்றிற்குச் செவியுணர்வு உண்டா என்ற வினாவை எழுப்பிக் கொண்டு விடை கூறுகின்றார். இங்கே அவருடைய நுண்மாண் நுழைபுலம் வெளிப்படுகின்றது.

நந்தட்டன், சீவகனைப் பேணிக் காக்கும் முறையைப் பதுமுகனுக்கு உரைக்கும்போது, "பகைவர்கள் சீவகனைக் கொல்ல, சூடும்மாலை பூசும்சாந்து உடுக்கும் உடை அணி ஆகியவற்றில் நஞ்சு கலந்து விடுதல் கூடும். ஆதலின் அவற்றை அன்னத்தின் கண்ணிலும், சக்கரவாகப் பறவையின் முகத்திலும் ஒற்றி ஆராய்ந்து மேற்கொள்க: சீவகனுக்கு உண்ணத் தரும் நீரையும் அமுதையும் முன்னதாகக் கருங்குரங்கிற்கு இட்டு ஆராய்க" என்கின்றான் (1893). இப் பகுதியை அறிந்துகொள்ள நச்சினார்க்கினியர் தரும் விளக்கமே உதவி செய்கின்றது. "அன்னம் கண் குருதிகாலும்; சக்கரவாகம் முகங்கடுக்கும்; கருங் குரங்கு உண்ணாது" என்ற உரை விளக்கம் இன்றேல் பாடலின் நுண்கருத்து வெளிப்படாது.

முத்தி இலம்பகத்தில் 'வேள்வியாய்' (2787) என்று தொடங்கும் செய்யுளில், "வாரணத்தின் ஈர்உரி போல் கோள் இமிழ்ப்பு நீள்வலையாய்க் கண்படுத்தும்" என்ற பகுதியை விளக்கும்போது, "யானையின் பசுந்தோல் பிறர் உடம்பில் பட்டால் கொல்லும் என்றுணர்க" என்று எழுதுகின்றார். இந்த விளக்கமே மேலே குறிப்பிட்ட பாடலுக்கு ஒளிதந்து மகிழ்வூட்டு கின்றது.

உவமை விளக்கம்: உவமைகளின் பொருத்தத்தை இவர் நன்கு விளக்குகின்றார். எளிய உவமைகளும் இவர் தரும் விளக்கத்தால் சிறப்படைகின்றன. உவமை விளக்கம் சிலவற்றைக் காண்போம்:

சச்சந்த மன்னனைக் 'களிறு அ(ன்)னான்' (200) என்று சிறிய உவமையால் குறிப்பிடுகின்றார் தேவர். நச்சினார்க்கினியர், மதச் செருக்கால் (யானை), பாகன் தோட்டியை நீவுமாறு போலக் காமக்களிப்பால், தன் அமைச்சர் கூற்றைக் கடத்தல் நோக்கி, 'களிறு அனான்' என்றார்" என்று விளக்கம் தருகின்றார்.

கட்டியங்காரன் வயப்பட்ட சச்சந்தன் படையைத் தேவர்,

**உப்புடைய முந்நீர் உடன்று கரை கொல்வது**
**ஒப்புடைய தானை** (280)

என்று உவமையுடன் சிறப்பிக்கின்றார். அவ்வுவமையை, "தனக்கு வேலியாகிய கரையைக் கடல் தானே கொல்லுகின்றாற்போல, தனக்குக் காவலாகிய அரசனைப் படைதாமே கொல்லுகின்றது என்றார்" என்று விளக்குகின்றார்.

'கந்துக்கடன் மாரி போலவும் கற்பகம் போலவும் கொடை தந்தான்' என்று தேவர் கூறிய உவமைகள் (865), "கார் வேண்டாமைக் கொடுத்தலும், கற்பகம் வேண்டக் கொடுத்தலும் இயல்பு" என்ற விளக்கத்தால் சிறப்படைகின்றன.

சீவகனை 'ஈயின்றி இருந்த தேன்' என்ற தேவர் குறிப்பிடுகின்றார் (712). உரையாசிரியர், "இதற்கு முன்பு ஒரு மகளிரும் இவனை நுகராது இருந்தமை உணர்ந்து" அங்ஙனம் கூறியதாகக் குறிப்பிடுகின்றார்.

**படநாகம் தோல் உரித்தாற் போல் துறந்து**

என்ற உவமைக்கு (1546), "படநாகம் தோல் உரித்தாற் போல அகமும் புறமும் துறந்து" என்றும், "நாகம் தோல் உரிக்கும் பொழுது நஞ்சும் காலும்" என்றும் விளக்கம் தருகின்றார்.

மதங் கொண்ட யானை,

**கடலென, காற்றென, கருங்கண் கூற்றென**
**உடல்சின உருமென ஊழித் தீயென** (973)

தோன்றியதாகத் தேவர் உரைக்கின்றார். நச்சினார்க்கினியர், "முழக்காற் கடலென, கடுமையாற் காற்றென, கொடுமையாற் கூற்றென, கோபத்தால் இடியென, சேரக் கோறலின் ஊழித் தீயெனத் தோன்றிற்று" என்று விளக்கும்போது உவமைகள் புதியனவாய்ப் பொலிகின்றன.

இலக்கணையைச் சீவகன்,

கரும்பே தேனே அமிர்தே
காமர் மணியாழே
அரும்பார் மலர்மேல் அணங்கே
மழலை அன்னமே
சுரும்பார் சோலை மயிலே
குயிலே சுடர்வீசும்
பெரும்பூண் மன்னன் பாவாய்
பூவாய் பிணைமானே (2452)

என்று பலவாறு பாராட்டுகின்றான். இதற்கு நச்சினார்க்கினியர் எழுதும் விளக்கம் பலமுறை கற்று இன்புறத் தக்கதாய் உள்ளது:

"கணவற்கு மெய்ம் முழுதும் இனிதாய் இருத்தலின் கரும்பு. நல்லார் உறுப்பெல்லாம் கொண்டு இயற்றலின் தேன். இவ்வுலகில் இல்லாத மிக்க சுவையும் உறுதியும் கொடுத்தலின் அமிர்து. காம வேட்கையை விளைவித்து இனிய பண் தோற்றலின் மழலையை யுடையதொரு யாழ், கணவற்குச் செல்வத்தைக் கொடுத்தலின் திரு. நடையால் அன்னம். சாயலால் மயில். காலமின்றியும் கேட்டார்க்கு இன்பம் செய்தலின் குயில். மன்னன் மகளே என்றல் புகழன்மையின் மன்னன் பாவாய் என்றது அவன் கண்மணிப் பாவை என்பது உணர்த்திற்று; இனி இவள் கொல்லிப் பாவையல்லள், மன்னன் பாவை என்றுமாம், சேடியர் கற்பித்த கட்டளை தப்பாமற் கூறலின் பூவை, நோக்கத்தால் மான்".

**உலகியல் உரைத்தல்:** பல பாடல்களை ஒரு தொடராக்கி உரை எழுதுவது நச்சினார்க்கினியர் பண்பு. இவ்வாறு எழுதுவதில் சிறந்த பயன் இருப்பதாய் இவர் கருதுகின்றார்.

பதுமையைப் பாம்பு தீண்டிய செய்தியை, சீவகனும் உலோக பாலனும் இருக்குமிடத்திற்கு ஒருவன் வந்து கூறுகின்றான். இச்செய்தியைத் தேவர் எட்டுப் பாடல்களில் (1266-1273) அமைத்துள்ளார். பதுமையின் வரலாறு அழகு ஆகியவற்றை முதலில் கூறிய பின், அவள் சோலையில் முல்லைக் கொடி வளர்த்த செய்தியை உரைத்து, அது பூத்த போது, மலர் கொய்ய அவள் செல்ல அங்கே பாம்பு தீண்டிற்று என்று வந்தவன் கூறுவதாகத் தேவர் பாடியுள்ளார். பாடல்கள் இருக்கும் அமைப் பிலேயே பொருள் எழுதாமல் நச்சினார்க்கினியர், அப்பாடல் களை எல்லாம் ஒரே தொடராக இணைத்துப் பாம்பு கடித்த செய்தியை முதலில் கூறி மற்றச் செய்திகளைப் பின் கூறுவதாய் அமைத்துள்ளார். இவ்வாறு செய்ததற்குக் காரணம் கூறும்போது, "இங்ஙனம் 'மாட்டு' உறுப்பாகக் கூறாது செவ்வனே கூறின் பாம்பு

கடித்தமை கடுகக் கூறிற்று ஆகாமை உணர்க" என்று உலகியலை நினைவூட்டி விளக்குகின்றார்.

**விளக்காத கதைகள்**

பஞ்சதந்திரக் கதைகளில் சில, தமிழ்க் காப்பியங்களில் இடம் பெற்றுள்ளன. கீரியைக் கொன்ற பார்ப்பனி கதை சிலப்பதிகாரத்திலும் (15:54–75), ஆண் புறாவைக் கொன்று கையில் வைத்துக்கொண்டு காட்டில் மரத்தின் கீழ்க் காற்றுமழையில் நனைந்து பசியுடன் குளிரால் நடுங்கிக்கொண்டிருந்த வேடனின் குளிரைப் போக்கக் கொள்ளிக்கட்டை ஒன்றைத்தந்து, அவன் பசியைப்போக்கத் தானும் நெருப்பில் வீழ்ந்து மாண்ட பெண் புறாவின் கதை கம்பராமாயணத்திலும் இடம் பெற்றுள்ளன.*

இத்தகைய கதைகள் சீவகசிந்தாமணியிலும் வருகின்றன.

கடத்திடைக் காக்கை ஒன்றே
ஆயிரங் கோடி கூகை
இடத்திடை அழுங்கச் சென்(று) ஆங்(கு)
இன்னுயிர் செகுத்த தன்றே – 1927

முழையுறை சிங்கம் பொங்கி
முழங்கிமேற் பாய்ந்து மைதோய்
வழையுறை வனத்து வன்கண்
நரிவலைப் பட்ட தன்றே – 1928

இவை இரண்டும் பஞ்சதந்திரக் கதைகளை நினைவூட்டுகின்றன. ஆனால் இரண்டாவதாக உள்ள கதையில் சிறிது மாறுபாடு உள்ளது. 'சிங்கத்தைக் கொன்ற முயல்' கதையைப் பஞ்சதந்திரம் கூறுகின்றது. ஆனால் சிந்தாமணியோ சிங்கத்தை நரி கொன்றதாகக் குறிப்பிடுகின்றது. பஞ்சதந்திரக் கதைகளை ஒத்த வேறு சில கதைகள் தமிழ் நாட்டில் வழங்கி வந்தனவோ என்ற ஐயம் எழுகின்றது. தந்திரத்தில் வல்லதாய் – சூழ்ச்சி செய்து பிறரைக் கொல்வதில் தேர்ந்ததாய்க் குள்ளநரி தமிழ்நாட்டுக் கதைகளில் வருகின்றது. சிங்கத்தைச் சூழ்ச்சியால் நரி கொன்ற கதை ஒன்று அக் காலத்தில் வழங்கி இருக்கலாம். அக் கதையினையே சிந்தாமணி கூறுகின்றது என்னலாம். அக்கதையின் உண்மை வடிவத்தை அறியத்தக்க சான்றுகள் இல்லை.

* யுத்தகாண்டம், 4. விபீடணன் அடைக் – 112.
'பேடையைப்பிடித்து ..... விழுதன்றோ'
பதினெண் கீழ்க்கணக்கில் — சிறுபஞ்சமூலத்தில் (100), கங்கைக் கரையில் மைனாவுக்கும் முயலுக்கும் வழக்குத்தீர்த்த பூனைக் கதை உள்ளது.
'உண்ணிடத்தும்.... கடை'

தேவையற்ற இடங்களில் எல்லாம் பொய்க் கதைகளைப் புனைந்து கூறும் நச்சினார்க்கினியர், இவ்விரு கதைகளையும் சிறிது விளக்கிக் கூறி இருக்கலாம். நாம் அவரிடமிருந்து இக் கதைக்கு விளக்கம் எதிர்பார்ப்பது தவறாகாது. அவர் உரையைப் புரட்டிப் பார்த்து, இக் கதைக்கு அவர் விளக்கம் எழுதாமை கண்டு நாம் ஏமாற்றம் அடைகின்றோம்.

இவ்வாறே "வெள்ளிலை" என்று தொடங்கும் பாடலில்,

**கள்ளரால் புலியை ஏறு**
**காணிய காவல் மன்னன்**

என்ற வரிகளில் உள்ள கதையையும் இவர் விளக்கவில்லை. இதில் கூறப்பட்டுள்ள கதையை அறிந்து கொள்ள முடியாமல் டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் பெரிதும் இடர்ப்பட்டார். ஒரு நாள் நண்பர் ஒருவருடன் பேசிக் கொண்டிருந்தபோது, எதிர்பாராத வகையில் இக் கதைக்கு நண்பர் வாயிலாக விளக்கம் கிடைத்தது. இக் கதையையும், கதை அறிந்த வரலாற்றையும் அவர் 'நினைவு மஞ்சரி' (*II, 1953*-பக்கம் *106-113*) என்னும் உரைநடை நூலில் எழுதி யுள்ளார். பின்னர் வெளியிட்ட சிந்தாமணிப் பதிப்புகளில் இக் கதையை அடிக் குறிப்புகளில் சேர்த்துள்ளார்.

இத்தகைய கதைகள், நச்சினார்க்கினியர் காலத்தில் நாடறிந்த பழங்கதைகளாக இருந்திருக்கலாம்; அதனால் அவற்றிற்கு விளக்கம் தேவையில்லை என்று கருதி எழுதாமல் விட்டிருக்கலாம்.

**காப்பிய நோக்கு :** நச்சினார்க்கினியர், சிந்தாமணியைக் காப்பியமாக நோக்கி, உரைகண்டுள்ளார். காப்பியத்தைத் தொடர் நிலைச் செய்யுள் என்ற பெயரால் வழங்கி, அதன் இயல்புகளை முதற்பாடலின் உரையிலேயே பின்வருமாறு விளக்கியுள்ளார்:

> "மெல்லென்ற சொல்லான் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் விழுமிய பொருள் பயப்பப் பழையதொரு கதை மேல் கொச்சகத்தால் கூறின், அது தோல் என்று (தொல்காப்பியர்) கூறினமையின் இச் செய்யுள் அங்ஙனம் கூறிய தோலாம் என்றுணர்க."

காப்பியத்தின் கதைக்குரிய தலைவனை, "சீவகனை முற்கூறினார், கதைக்கு நாயகன் ஆதலின்" (6) என்று நூலின் தொடக்கத்திலேயே அறிமுகப்படுத்துகின்றார்.

திருத்தக்க தேவர், சீவகனைத் தன்னேரில்லாத தலை வனாய்ப் படைத்துள்ளார். அவன் இசைப் போட்டியில் காந்தருவதத்தையை வெல்கின்றான். தன்னேரில்லாத தலை வனாகிய சீவகன் ஒரு பெண்ணை வென்றான் என்று கூறுவதைத்

திருத்தக்க தேவர் விரும்பவில்லை. ஆதலின் அவர் சீவகனுக்குக் காந்தருவதத்தை தோற்றாள் என்று மிகவும் நயம்படக் கூறுகின்றார்:

**விஞ்சைக்கு இறைவன் மகள்**
**விணையில் தோற்றவாறும்** (11)

**தோற்றனள் மடந்தை நல்யாழ்**
**தோன்றலுக்கு** (702)

**மாதர் இசை தோற்று இருந்தனனே** (735)

என்று மூன்று இடங்களிலும் மறவாமல் தேவர் காந்தருவதத்தை தோற்றாள் என்றே கூறுகின்றார். ஆழ்ந்திருக்கும் கவியுளம் காண்பதில் வல்லவராகிய நச்சினார்க்கினியர், "ஒரு மகளை வென்றான் என்றல் இவன் தலைமைக்கு இழிவு என்று அவள் செய்தியாகக் கூறினார்" (11) என்று கூறுகின்றார்:

சீவகனைக் கருணை மறவனாகத் தம் காப்பியத்தில் காட்டு கின்றார் தேவர். சீவகன், வேடர்கள் கவர்ந்து சென்ற ஆனிரையை மீட்கப் போரிட்டு அவர்களைக் கொல்லாமல் அச்சுறுத்தியே நிரையை மீட்கின்றான். நூலாசிரியரின் உள்ளக் கருத்தை அறிந்து கொண்ட உரையாசிரியர் போரின் தொடக்கத்தைக் கூறும் பாட்டின் (448) உரையிலேயே, "தனக்கு அவர் நிகரன்மையானும், தனது அருளும் வீரமும் மேம்படுத்துதற்குச் சென்றான் ஆகலானும், அவரை அஞ்சப்பண்ணி நிரைமீட்டான் என்பதே தேவர் கருத்து; அது மேற்காண்க" என்று கூறுகின்றார். மீண்டும் இக்கருத்தினைப் பல இடங்களிலும் வலியுறுத்துவதைக் காணலாம்:

> "மறவரைக் கொல்லாது உயிரை வழங்குதலின் வள்ளல் என்றார்" (11). "அவர் உயிரைக் கொடுத்தலின் வள்ளல் என்றார். பொராதே தேரொலியாலே அவரை அஞ்சுவித்து நிரை மீட்கின்றான்" (449). "கொல்லாதிருத் தலின் மாரிபோல் என்றார்" (452). "தம் உயிருக்கு ஊறு செய்யாது எய்தமை கண்டு போகடுதலின், தூவுதலான் அறுத்தான் என்றார்" (453). "தேவர், ஈண்டு வேடர் எம் முறையினும் கொல்லத்தகாதவர் ஆதலின், கொலை இன்று என்பது தோன்றக் களத்துப் பாவம் போக்கினான் என்று கூறாராயினர் என்க" (454).

சிந்தாமணிக் காப்பியத்தின் கட்டமைப்பு கதைநிகழ்ச்சி காப்பிய மாந்தர்களின் பண்பு வரலாறு ஆகியவற்றைக் கூர்ந்து நோக்கிய நச்சினார்க்கினியர் உரையில் தம் கருத்துகளை

ஆங்காங்கே வெளியிட்டுள்ளார். அத்தகைய இடங்களில் சிலவற்றைக் காண்போம்:

சீவகனுக்கு இசையில் தோற்ற காந்தருவதத்தை அவனுக்கு மாலையிடுகின்றாள். அதனைக் கண்டு பொறாமை கொண்ட கட்டியங்காரனும் மற்ற மன்னர்களும் சீவகனை எதிர்த்துப் போரிடுகின்றனர். சீவகன் அவர்களை வென்று வாகை சூடு கின்றான். இந்தப் போரில் காந்தருவ்தத்தையின் தந்தை கலுழவேகன் சீவகனுக்கு உதவி செய்திருக்கலாம். பலவகை ஆற்றல்கள் படைத்துள்ள அவன் போரில் ஈடுபட்டிருந்தால் கதை நிகழ்ச்சிகளில் தடைகள் பல ஏற்பட்டிருக்கும். ஆதலின் காப்பியம் படைத்த தேவர், கலுழவேகனைப் போரில் ஈடுபடுத்தவில்லை. இதனை உணர்ந்து கொண்ட நச்சினார்க்கினியர், “கலுழவேகன் வந்தால் சீவகன் கதை ஒன்றும் இன்றாம்” *(846)* என்று விளக் கியுள்ளார்.

சீவகனின் வளர்ப்புத் தந்தையாகிய கந்துக்கடன் இறந்து போன செய்தியை எவ்விடத்திலும் குறிப்பிடாத தேவர், அவன் மனைவி சுநந்தை துறவு பூண்டதை முத்தி இலம்பகத்தில் கூறு கின்றார் *(2927)*. இவ்விடத்தில் நச்சினார்க்கினியர், “கந்துக்கடன் இறந்தமை இத் தொடர் நிலைச் செய்யுளில் தேவர் கூறிற்றிலர், தகுதியன்று என்று கருதி; இத்துறவால் உயர்த்துணர வைத்தார்” என்று விளக்கியுள்ளார். இத்தகைய இடங்களில் எல்லாம் நச்சினார்க்கினியரின் காப்பிய நோக்கு வெளிப்படுகின்றது.

### மரபு காத்தல்

வழி வழியாக வருகின்ற இலக்கிய மரபை நினைவிற் கொண்டு இவர் பல இடங்களில் உரை எழுதுகின்றார். அத்தகைய இடங்களில் ஒன்றினைக் காண்போம்:

கனக மாலை, சீவகன் பிரிவால் வாடித் துன்பமிகுதியால் தனித்து இருக்கின்றாள். சீவகனின் தம்பியாகிய நந்தட்டன் கனக மாலையைச் சந்திக்கின்றான். இக்காட்சியைத் தேவர்,

**திங்கள்வாள் முகமும் நோக்கான்**
***   *   ***
**செங்கயற் கண்ணி னாள்தன்**
**சீறடிச் சிலம்பு நோக்கி,**
**எங்குளார் அடிகள் ?' என்னா**
**இன்னணம் இயம்பி னானே** —1705

என்ற பாடலில் அமைத்துள்ளார்.

இப்பாடலுக்கு உரை காணும்போது நச்சினார்க்கினியர், தமிழ் இலக்கிய மரபை நினைவிற்கொண்டு சிறப்பான முறையில் விளக்கம் தருகின்றார்.

சொற்பொருள் கூறிப் பாடலை உள்ளவாறே விளக்கிச் செல்லாமல், பாடலில் இடம்பெறாத நிகழ்ச்சிகளை வருவித்து உரையில் அமைத்துக்கொண்டு விளக்குகின்றார். இவ்வாறு இவர் செய்வதற்குச் சிறந்த காரணங்கள் உள்ளன.*

1. நந்தட்டன், கனகமாலையின் அடிகளில் உள்ள சிலம்புகளை மட்டும் நோக்கிப் பேசுகின்றான் என்று பாடல் கூறி, சிறந்த பண்பாட்டை வெளிப்படுத்துகின்றது. என்றாலும் அவன் நோக்காத-நோக்கக் கூடாத-நோக்கக் கருதவும் கூடாத கனக மாலையின் மற்ற உறுப்புகளை நோக்கவில்லை என்று பாடல் உரைப்பது நயமாக இல்லை.

2. அவன் நோக்கவில்லை என்று கூறப்படும் கனக மாலையின் உறுப்புகளின் அழகு, இன்பச் சுவை தோன்றுமாறு புனையப்பட்டுள்ளது.

3. கணவன் பிரிவால் வருந்துகின்றவளின் உறுப்புகள் எழில் நலம் உடையவையாய்ப் பாடல் கூறுவது பொருத்தமில்லை.

4. பிரிவுத் துன்பம் வெளிப்பட்டு இரக்க உணர்வு தோன்ற வேண்டிய இடத்தில் இன்பச்சுவை தோன்றி, சுவை நலத்தைக் கெடுத்துவிடுகின்றது.

இவற்றை எல்லாம் எண்ணிப்பார்த்த நச்சினார்க்கினியர் அந்தப் பாடலுக்கு இலக்கிய மரபிற்கு ஒத்தவாறு பின்வரும் விளக்கத்தைத் தருகின்றார்:

"கயற்கண்ணினா ளுடைய, முன்பு திங்களை ஒக்கும் முகத்தில் இப்போது நிகழ்கின்ற வாட்டத்தையும் நோக்கானாய்-முன்பு நன்றாகிய (மார்பு) இப்பொழுது பசந்த பசப்பையும் நோக்கானாய்-முன்பு கலாபம் மின்னும் (இடையில்) ஆடை மாசுண்ட தன்மையையும் நோக்கானாய் தான் இறைஞ்சி நிற்றலின், அடியிற் சிலம்பு ஒன்றையுமே நோக்கி, "எங்குளார் அடிகள்?" என்று இப்படி ஒரு வார்த்தை கூறினான் என்க"

இந்த உரைப்பகுதியில் நச்சினார்க்கினியர், பாடலில் இல்லாத சில நிகழ்ச்சிகளைப் புனைந்து கூறியுள்ளார்.

* முதல் உலகத் தமிழ் மாநாட்டு ஆராய்ச்சித் தொகுதி (II 1968) பக்கம் 473–485. டாக்டர் க. ஆறுமுகம்.

1. பாடல் கூறுகின்ற கனகமாலையின் உறுப்பழகும் உடை வனப்பும், முன்னைய நிலையில் அமைந்திருந்தவையாக் கூறியுள்ளார்.

2. இப்போதுள்ள நிலையில், பிரிவுத் துன்பத்தால் உறுப்புகள் பசந்தும், உடை மாசடைந்தும் இருப்பதாய் மாற்றியுள்ளார்.

3. கனகமாலை, பிரிவால் வாடி மெலிந்திருந்தும் கூட அவளை நோக்காமல், அவள் அடியில் உள்ள சிலம்பை மட்டுமே நோக்கி நின்றான் நந்தட்டன் என்று அமைந்துள்ளார்.

4. கனக மாலையின் துன்பநிலை கண்ட நந்தட்டன் பேசவும் இயலாத நிலையில் அமைதியாய்த் தானும் துன்பத்துடன் நின்றான் என்கிறார்.

இத்தகைய விளக்கங்களால் தேவர்பாடல் சிறப்படை கின்றது; இலக்கிய மரபு காக்கப்படுகின்றது.

**அறவுரை**

செகவீரபாண்டியனார், சிந்தாமணி தந்த தேவரை,

**காமத்தின் சுவைகண்டார் காமநூல்**
**என்கின்றார்; தரும நீதித்**
**தாமத்தின் நிலைகண்டார் தருமநூல்**
**என்கின்றார்; தவங்கள் சார்ந்த**
**நாமத்தின் நலம்கண்டார் ஞானநூல்**
**என்கின்றார்; நயத்தோர்க் கெல்லாம்**
**சேமத்தை அருளுகின்ற சீவகசிந்**
**தாமணியைச் செய்து தந்தாய்!**

என்று போற்றிப் பாடுகின்றார்.

சிந்தாமணிக்கு மறவுரை கண்டவர் உண்டு; காமவுரை கண்டர் உண்டு; அறவுரை கண்டவர் நச்சினார்க்கினியர். இவரது அறவுரையைக் கேட்போரே பயனடைவர்.

**மறவுரையும் காமத்து உரையும் மயங்கிப்**
**பிறவுரையும் மல்கிய ஞாலத்து—அறவுரை**
**கேட்கும் திருவுடை யாரே பிறவியை**
**நீக்கும் திருவுடை யார்.**

**—அறநெறிச்சாரம்—2**

# 3. தொல்காப்பிய உரை

இளம்பூரணருக்கு அடுத்தபடியாகத் தொல்காப்பிய முழுவதற்கும் உரை செய்தவர் நச்சினார்க்கினியரே. பொருள காரத்தில், மெய்ப்பாட்டியல் உவமவியல் மரபியல் ஆகிய மூன் இயல்களைத்தவிர, மற்ற எல்லாப் பகுதிகளுக்கும் இவரது உ உள்ளது. செய்யுளியலில் சில பகுதிக்கு உரை கிடைக்கவில்லை.

இவரை,

**மறுவும் குறையும் இன்றி என்றும்**
**கலையின் நிறைந்த கதிர்மதி**

என்றும்,

**தொல்காப்பியம் என்னும் தொடுகடல் பரப்பை**
**நிலையுடை கலத்தின் நெடுங்கரை கண்டவர்**

என்றும் சிறப்புப்பாயிரம் போற்றுகின்றது.

**தொல்காப் பியத்தில் தொகுத்த பொருள்அனைத்தும்**
**எல்லார்க்கும் ஒப்ப இனிதுரைத்தான்—சொல்லார்**
**மதுரைநச்சி னார்க்கினியன் மாமறையோன் கல்விக்**
**கதிரின் சுடர்எறிப்பக் கண்டு**

என்று வேறொரு வெண்பா இவரைப் பாராட்டுகின்றது.

இவருடைய உரையில், இனிய உவமையும், நயமான விளக்கமும், செவிக்கினிய சொல்லடுக்கும், இலக்கியச் சுவைமிக்க உதாரணப் பாடல்களும் இடம் பெற்றுக் கற்போரை மகிழ்விக்கின்றன. உரைச் சிறப்புப்பாயிரம்,

**கல்லா மாந்தர் கற்பது வேண்டியும்**
**நல்லறி வுடையோர் நயப்பது வேண்டியும்**

நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்திற்கு உரை இயற்றியதாகக் கூறுகின்றது. ஆம்; இவருடைய உரையை, கல்லா மாந்தர் கற்றுப் புலமைபெறலாம்; நல்லறிவுடையோர் நயந்து போற்றலாம்.

**முதன்மை தரல்**

பழந்தமிழ் இலக்கியங்களாகிய எட்டுத்தொகை, பத்துப் பாட்டு ஆகியவற்றிற்குத் தொல்காப்பியமே இலக்கணம் என்பதை இவர் பல இடங்களில் வற்புறுத்தித் தொல்காப்பியத்திற்கு முதன்மை தருகின்றார்.

புறத்திணை இயலில், 'கொடுப்போர் ஏத்தி, (35) என்னும் சூத்திரத்தின் உரையில் தத்தம் புதுநூல் வழிகளால் புறநானூற்றிற் குத் துறை கூறினாரேனும் அகத்தியமும் தொல்காப்பியமுமே

தொகைகளுக்கு நூலாகலின் அவர் சூத்திரப் பொருளாகத் துறை கூற வேண்டும் என்று உணர்க' என உரைக்கின்றார்.

மதுரைக் காஞ்சி உரையில், 'இப் பாட்டிற்கு மாங்குடி மருதனார் மதுரைக் காஞ்சி என்று துறைப் பெயரான் அன்றி திணைப்பெயரால் பெயர் கூறினார். இத் திணைப்பெயர், பன்னிரு படலம் முதலிய நூல்களாற் கூறிய திணைப்பெயரன்று. தொல்காப்பியனார் கூறிய திணைப்பெயர்ப் பொருளே இப்பாட்டிற்குப் பொருளாகக் கோடலின்' என்று கூறித் தொல் காப்பியத்திற்கு முதன்மை தருகின்றார்.

மலைபடுகடாம் பாடலில் 'தீயின் அன்ன' (145) என்னும் அடிக்கு உரை எழுதும்போது அதில் ஆனந்தக் குற்றம் உண்டு என்பார் கருத்தை மறுத்து, "தொல்காப்பியனாரும் இக் குற்றம் கூறாமையின் சான்றோர் செய்யுட்கு இக் குற்றம் உண்டாயினும் கொள்ளார் என மறுக்க" என்று கூறுகின்றார்.

முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு ஆகிய பாடல்களுக்குப் பொருள் எழுதும்போது பல இடங்களில் தொல்காப்பிய நூற்பாக்களை நினைவூட்டி எழுதுகின்றார்.

கலித்தொகைப் பாடல்களின் திணை, துறை, மெய்ப்பாடு ஆகியவற்றை விளக்கத் தொல்காப்பியத்தின் துணையையே நாடுகின்றார்.

சில சொற்களை விளக்கிப் பொருள் உரைக்கும்போதும், தொல்காப்பியத்தையே பயன்படுத்துகின்றார்.

நாண் (மதுரை-558, குறிஞ்சி-168) என்பதற்கு 'உயிரினும் சிறந்த நாண்' என்று பொருள் எழுதுகின்றார். 'உயிரினும் சிறந்தன்று நாணே' (பொருள்-113) என்பது தொல்காப்பியம்.

மதுரைக் காஞ்சியில் 'வரைந்து நீ பெற்ற நல்லூழி' (782) என்பதற்கு, "பால்வரை தெய்வத்தாலே வரையப்பட்டு நீ அறுதியாகப்பெற்ற நாள்" என்று எழுதுகின்றார். 'பால்வரை தெய்வம்' என்பது தொல்காப்பியத்தில் உள்ள தொடர் (சொல். கிளவி-58).

இவை யாவும் நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்திற்கு முதன்மை தருபவர் என்பதற்கு உரிய சான்றுகளாகும்.

## முழுநோக்கு

தொல்காப்பியம், எழுத்து சொல் பொருள் என்னும் முப் பெரும்பகுதிகளை உடைய பெருநூல் என்பதையும், அதில் உள்ள ஒருபகுதியை—ஓர் இயலை—ஒரு நூற்பாவை ஆராயும்போது, முழு நூலையும் சிங்க நோக்காக முன்னும் பின்னும் நோக்குதல்

2.18.

வேண்டும் என்பதையும் நச்சினார்க்கினியர் எவ்விடத்தும் மறந்து விடவில்லை. எழுத்ததிகாரத்தில் செய்யுளியலை நினைவூட்டு கிறார். எழுத்ததிகாரத்தின் முற்பகுதியைப் பிற்பகுதியுடன் தொடர்புபடுத்துகின்றார். சொல்லதிகாரத்தில் கிளவியாக்கத் தையும் எச்சவியலையும் இணைத்துக் காட்டுகின்றார். உவமவியல் செய்யுளியல் மெய்ப்பாட்டியல் மூன்றையும் ஊடுருவி நோக்கி ஒப்புமை காண்கின்றார். இறைச்சி உள்ளுறை உவமம் மாட்டு ஆகியவை பற்றிய கருத்துகள் வேறு வேறு இடங்களில் இருப்பினும் அவற்றைத் தொகுத்து ஆராய்கின்றார்.

இவையேயன்றி, பிற்காலத்து இலக்கண நெறிகளையும், கொள்கைகளையும் பல இடங்களில் ஆராய்கின்றார். பிற்கால யாப்பு நூலாரைப் போல, தொல்காப்பியர் தளையைச் செய்யுள் உறுப்பாகக் கொள்ளாமைக்கு உரிய காரணத்தை, செய்யுளியலின் தொடக்கத்தில் ஆராய்கின்றார். அவ்வியலின் இறுதியில் சித்திரகவிக்கு இலக்கணம் கூறாமையைச் சுட்டுகின்றார்.

முழு நோக்குடன் தொல்காப்பியத்திற்கு உரை கண்ட நச்சினார்க்கினியர், எல்லா உரைநெறிகளையும் போற்றியுள்ளார்.

நூற்பா அமைப்பை ஆய்தல்
நல்ல பாடம் காணுதல்
நூற்பாவுக்கு வினைமுடிபு காட்டுதல்
வைப்பு முறை ஆய்தல்
கருத்துகளைக் கணக்கிட்டு மொழிதல்
சொற்களின் வடிவமும் பொருளும் ஆய்தல்
நுண்பொருளை வெளிப்படுத்துதல்
நயவுரை கூறுதல்
தக்க மேற்கோள் காட்டுதல்

ஆகிய பலவகையான உரைநெறிகளை இவர் மேற்கொண் டுள்ளார்.

**நூற்பா அமைப்பை ஆய்தல்**

*நூன் மரபில் (3)*

**அவற்றுள்,**
**அ இ உ எ ஒ என்னும்**
**அப்பால் ஐந்தும்**
**ஓரள பிசைக்கும் குற்றெழுத் தென்ப**

என்னும் நூற்பா உரையில், "அவற்றுள், அ இ உ — என்பன சொற்சீரடி" என்று இவர் கூறுவதால் அந்நூற்பாவை,

அவற்றுள்,

**அ இ உ**
**எ ஒ என்னும் அப்பா லைந்தும்**
**ஓரள பிசைக்கும் குற்றெழுத் தென்ப**

என்று அமைப்பது இவர் கருத்து என்பது புலனாகிறது.

இளம்பூரணர்,

**ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும்**
**அப்பால் ஏழும்**
**ஈரள பிசைக்கும் நெட்டெழுத் தென்ப**

**(எழுத்–4)**

என்று அமைந்திருப்பதை நச்சினார்க்கினியர்

**ஆ ஈ ஊ**
**ஏ ஐ**
**ஓ ஔ என்னும் அப்பா லேழும்**
**ஈரள பிசைக்கும் நெட்டெழுத் தென்ப**

என்று மாற்றி அமைக்க வேண்டும் என்னும் கருத்துடையவர். ஆதலின், "ஆ ஈ ஊ, ஏ ஐ-என்பனவற்றைச் சொற்சீர் அடியாக்குக" என்று கூறுகின்றார்.

இளம்பூரணர் அகத்திணை இயலில் (6,7),

**காரும் மாலையும் முல்லை.**

**குறிஞ்சி,**
**கூதிர் யாமம் என்மனார் புலவர்**

என்று இறு நூற்பாக்களாகக் கொண்டவற்றை நச்சினார்க்கினியர்,

**காரும் மாலையும் முல்லை குறிஞ்சி**
**கூதிர் யாமம் என்மனார் புலவர்**

என்று ஒன்றாக்கியுள்ளார்.

இவ்வாறே எழுத்ததிகாரத்தில், எழுத்துகளின் பிறப்புக்குப் புறனடை கூறும் 'எல்லா எழுத்தும்' (எழுத்–102) என்னும் நூற்பாவை நச்சினார்க்கினியர் ஒன்றாக்கினார்; இளம்பூரணர் இரண்டாக்கினார். நச்சினார்க்கினியர் தம் உரையில்,

"இதனை இரண்டு சூத்திரமாக்கியும் உரைப்ப" என்று குறிப்பிடுகின்றார்.

இவற்றால், இவர் நூற்பா அமைப்பினை நன்கு ஆய்ந்துள்ளார் என்பது விளங்கும்.

நல்ல பாடம் **காணுதல்:** சொல்லதிகாத்தில் (24), 'உருபென மொழியினும்' என்பதில் உள்ள 'உருபு' என்பதற்கு ஈடாக 'உருவு'

என்று வேறு பாடம் கொண்டு, அந்தப் பாடத்தின் பொருத்தத்தைப் பின்வருமாறு ஆராய்கின்றார்:

"உருபு எனப் பகர உகரமாகப் பாடம் ஓதில், அது வேற்றுமை உருபிற்கும் உவம உருபிற்கும் பெயராய் வடிவை உணர்த்தாது என்று உணர்க. அதுவென் உருபு கெட எனவும்; உருபினும் பொருளினும் மெய்தடுமாறி எனவும்; உருபு தொடர்ந்து அடுக்கிய எனவும்; உருபு தொக வருதலும் எனவும்; மெய்யுருபு தொகா எனவும்; யாதன் உருபின் எனவும் பிறாண்டும், வேற்றுமைக்கு உருபு என்றே சூத்திரம் செய்தவாறு காண்க. உவம உருபு என்றல் அவ் ஒத்தினுள் கூறிய உரைகளான் உணர்க"

**வினை முடிபு காட்டுதல்:** கற்பியலில் *(9)*, 'பெறற்கரும் பெரும் பொருள்' என்னும் நூற்பாவிற்கு உரை எழுதியபின்,

"இச் சூத்திரத்துக் கண், ஏழன் உருபும் அவ்வுருபு தொக்கு நின்று விரிந்தனவும்; செயின் என்னும் வினையெச்சமும் உரிய என்னும் குறிப்புவினை கொண்டன. அவற்றை, இன்னவிடத்தும் இன்னது செய்யினும் உரிய என்று ஏற்பித்து முடிக்க"

என்று முடித்துக் காட்டுகின்றார்.

**வைப்புமுறை ஆய்தல்**

செய்யுளியலில் *(190)* 'பாணன் கூத்தன் விறலி' என்னும் நூற்பா விளக்கத்தில்,

"இசைப் பின்னரது நாடகம் ஆதலின், பாணன் பின் கூத்தனும்; பெண்பால் ஆதலின் விறல்பட ஆடும் விறலி அவர் பின்னும்; அவ்வினத்துப் பரத்தை அவர் பின்னும்; அகப் பொருட்குச் சிறவாமையின், அறம் பொருள் கூறும் அறிவர் அவர் பின்னும்; ஏதிலாராகிய கண்டோர் அவர் பின்னும் வைத்தார்."

என்று உரைக்கின்றார்.

**கணக்கிட்டு மொழிதல்:** இலக்கணக் கருத்துக்களைக் கணக்கிட்டு இத்தனை என்று கூறுவது இவர்க்கு இயல்பு. எழுத்ததிகாரத்தில் *(68)*, "மொழிக்கு முதலாம் எழுத்து, தொண்ணூற்று நான்கு என்று உணர்க" என்றும்; "மொழிக்கு ஈறாக உள்ள எழுத்து, நூற்று அறுபத்து ஒன்று" (எழுத்-77) என்றும் கூறுகின்றார். தொகை மரபில் *(13)*, 'அஃறிணை விரவுப் பெயர் இயல்பு மாருளவே' என்னும் நூற்பா உரையில், "ஆண்டு, நாற்பத்து எட்டுச் சூத்திரங்களான் முடிவதனை ஈண்டுத் தொகுத்தார்" என்று நூற்பாக்களை எண்ணி உரைக்கின்றார்.

## சொல்லும் பொருளும்

அரிய சொற்கள் சிலவற்றிற்குப் பொருள் எழுதியும் சில சொற்களுக்கு நுண்பொருள் வரைந்தும், சில சொற்களை ஆராய்ந்து கூறியும் நச்சினார்க்கினியர் உரை எழுதுவது வழக்கம். அவற்றுள் சிலவற்றை இங்கே காண்பாம்.

### எழுத்ததிகாரம்

ஞமலி—என்பது திசைச் சொல் *(எழுத்-64)*
ஒழியிற்று என்றாற் போல்வன இழி வழக்கு *(64)*
உதி—இஃது இக்காலத்து ஒதி என மருவிற்று *(243)*
ஈம்—என்பது சுடுகாடு *(328)*
கம்—தொழில் *(328)*
அழக்குடம்—என்பது பிணக்குடத்தை *(353)*
ஓ—என்பது மதகுநீர் தாங்கும் பலகை *(180)*

### சொல்லதிகாரம்

**உடைமை:** உடைமைத் தன்மையும் உடைமைப் பொருளும் என இருவகைப்படும். உடைமைத் தன்மையாவது தன் செல்வத்தை நினைத்து இன்புறுவதற்கு ஏதுவாகிய பற்றுள்ளம். உடைமைப் பொருளாவது ஒன்றற்கு ஒன்றை உரிமை செய்து நிற்பது *(215)*.

**பண்பு:** ஒருபொருள் தோன்றும் காலத்து உடன் தோன்றி அது கெடும் துணையும் நிற்பது *(216)*.

**பிற மொழிச் சொற்கள்:** சிங்களம் அந்தோ என்பது. கருநாடகம் கரைய சிக்க, குளிர என்பன. வடுகு செப்பு என்பது. தெலுங்கு எருத்தைப் பாண்டில் என்பது. துளு மாமரத்தைக் கொக்கு என்பது.

**பெண்மை:** கட்புலனாயதோர், அமைதித் தன்மை *(57)*.

**சாயல்:** மெய், வாய், கண், மூக்குச் செவி என்னும் ஐம்பொறியான் நுகரும் மென்மை *(325)*.

### பொருளதிகாரம்

**கயந்தலை**-யானைக்கன்று போலும் புதல்வன் *(கற்-6)*. நெடுமொழி-மீக்கூற்றுச்சொல் *(புறத்-8)*. அரும்பாசறை-அரிய பாசறை. இரவும் பகலும் போர்த்தொழில் மாறாமை தோன்ற அரும் பாசறை என்றார் *(கற்-34)*.

**நாற்பெயர் எல்லை அகத்தவர்** - மலைமண்டலம் சோழ மண்டலம் பாண்டிய மண்டலம் தொண்டை மண்டலம் என்னும் நான்கு பெயருடைய தமிழ் நாட்டார் *(செய்-79)*.

**கூத்தர்** நாடக சாலையர் தொன்றுபட்ட நன்றும் தீதும் கற்றறிந்தவற்றை அவைக்கண், எல்லாம் அறியக் காட்டுதற்கு உரியர் (கற்-17); எண்வகைச் சுவையும் மனத்தின்கண்பட்ட குறிப்பு களும் புறத்துப் போந்து புலப்பட ஆடுவார் (புறத்-90).

**இசை:** சொல்; எழுத்தினான் ஆக்கப்பட்டுப் பொருளறி வுறுக்கும் ஓசை ஆதலின் அதனை இசை என்றார். இஃது ஆகுபெயர்.

**கந்தழி**-ஒரு பற்றுக்கோடு இன்றி அருவாகித் தானே நிற்கும் தத்துவம் கடந்த பொருள் (புறத்-33).

**கூற்று:** வாழ் நாள் இடையறாது செல்லும் காலத்தினைப் பொருள் வகையான் கூறுபடுத்தும் கடவுள் (புறத்-24).

## எடுத்துக் காட்டுகள்

நச்சினார்க்கினியர் பல இடங்களில் தமக்கு முன் இருந்த உரையாசிரியர்கள் காட்டிய உதாரணங்களைப் பயன்படுத்தி இருப்பினும், சில உதாரணங்கள் இவரால் படைக்கப்பட்டவை; இவரது புலமைமாண்பை வெளிப்படுத்துபவை; இவர் காலத்து நாகரிகத்தை நினைவூட்டுபவை.

பாம்பினிற் கடிது தேள் (எழுத்-131) என்ற உதாரணம் நம் நெஞ்சத்தில் நன்கு பதிகின்றது.

பொன்னகல் நெய்யகல் (எழுத்-160) என்ற தொடர்கள் இவர் காலத்து நாகரிகத்தை உணர்த்துகின்றன.

அவ்வூர்ப் பூசையும் புலால் தின்னாது (சொல்-257) என்ற எடுத்துக்காட்டு, பண்பாட்டின் சிறப்பைக் காட்டுகின்றது.

பாட்டும் கோட்டியும் அறியாப் பயமில் தேக்கு மரம் போல் நீடிய ஒருவன் (சொல்-293) என்ற உதாரணம், கல்லாதவரிடத்து இவர்க்குள்ள வெறுப்பைக் காட்டுகிறது.

இவர் காலத் தமிழகம் (விசய நகரப் பேரரசுக்குட்பட்ட) நாயக்கமன்னர்கள் ஆட்சியின் கீழ் இருந்தது. இருப்பினும் தமிழ் மூவேந்தர் மீது பற்றுடையவராய்ப் பின்வரும் உதாரணங்களைக் காட்டுகின்றர்:

தமிழ் நாட்டு மூவேந்தரும் வந்தார் (சொல்-33).

வடுகரசரும் வந்தார்; இனித் தமிழ் நாட்டு
மூவேந்தரும் வரினும்வருவர் (சொல்-285).

அறுவகைத் தொகையும் ஒருங்கு வந்த தொடருக்கு உதாரணமாக, 'துடியிடை நெடுங்கண் துணைமுலைப் பொற்றொடி' என்பதைக் காட்டுகின்றார் (சொல்-421).

தம் காலத்தில் வழங்கிவந்த 'கரணம் பிழைக்கில் மரணம்' என்ற பழமொழியைத் தருகின்றார் (கற்பியல்-1).

உள்ளுறை உவமம் ஏனை உவமம் ஆகிய இரண்டையும் சிறந்த உதாரணங்கள் கூறி விளக்குகின்றர் :

"பவளம் போலும் வாய் என்ற வழி, பவளமே கூறி வாய் கூறாவிடின் உள்ளுறை உவமமாம். அவ்வாறு இன்றி, உவமிக்கப் படும் பொருளாகிய வாயினையும் புலப்படக் கூறலின் ஏனை உவமம் ஆயிற்று" (அகத்-49).

**உவமைச் சிறப்பு**

நச்சினார்க்கினியர் பிறர் கூறிய உவமைகளின் பொருத் தத்தைத் தம் உரையில் விளக்குகின்றார். பாயிர உரையில் கற்கப் படாதோர் (கல்வி கற்பிக்கத் தகுதியில்லா ஆசிரியர்) யாவர் என்பதைப் பின்வருமாறு விளக்குகின்றார்:

**"இனிக் கற்கப்படாதோரும் நான்கு திறத்தார்:**

**கழற்பெய் குடமே மடற்பனை முடத்தெங்கு**
**குண்டிகைப் பருத்தியோடு இவைஎன மொழிப**

இதனுள் கழற்பெய் குடமாவது, கொள்வோன் உணர்வு சிறிதாயினும் தான் கற்றதெல்லாம் ஒருங்கு உரைத்தல்.

மடற்பனை என்பது, பிறராற் கிட்டுதற்கு அரிதாகி இனி தாகிய பயன்களைக் கொண்டிருத்தல்.

முடத்தெங்கு என்பது, ஒருவர் நீர்வார்க்கப் பிறர்க்குப் பயன் படுவதுபோல ஒருவர் வழிபடப் பிறர்க்கு உரைத்தல்.

குண்டிகைப் பருத்தி என்பது, சொரியினும் வீழாது சிறிது சிறிதாக வாங்கக் கொடுக்கும்; அதுபோலக் கொள்வோன் உணர்வு பெரிதாயினும் சிறிது சிறிதாகக் கூறுதல்."

நச்சினார்க்கினியர் தாமே சிறந்த உவமைகளைக் கூறிக் கருத்தை விளக்குகின்றார். அவர் கூறும் உவமைகள் சிலவற்றைக் காண்போம்:

'நூறு காணங் கொணர்ந்தான் என்றால், அவை பொதிந்த கூறையையும் அவையென அடங்குமாறு போல'.

'நூல் என்றது நூல் போறலின் ஒப்பினாயதோர் ஆகு பெயராம். அவ்வொப்பு ஆயவாறு என்னை எனின், குற்றங் களைந்து எஃகிய பன்னுனைப் பஞ்சிகளை எல்லாம் கைவன் மகடூஉத் தூய்மையும் உடையவாக ஓரிழைப்படுத்தினாற் போல'.

'கோட்டு நூறும் மஞ்சளும் கூடிய வழிப் பிறந்த செவ் வண்ணம் போல'.

'எள்ளாட்டிய வழியல்லது எண்ணெய் புலப்படாதவாறு போல'.

'நீர் தனித்து அளந்துழியும் நாழியாய், அரைநாழி உப்பிற் கலந்துழியும் கூடி ஒன்றரை நாழியாய் மிகாதவாறு போல்வதோர் பொருட்பற்றி'.

'மாத்திரை கொள்ளுங்கால் உப்பும் நீரும்போல ஒன்றேயாய் நிற்றலும், வேறுபடுத்துங்கால் விரலும் விரலும் சேர நின்றாற் போல வேறாய் நிற்றலும் பெற்றாம்'.

## ஆராய்ச்சியும் விளக்கமும்

'எழுத்து' என்பதனைப் பின்வருமாறு விளக்குகின்றார்:

"எழுத்து என்றது யாதனை எனின், கட்புலனாகா உருவும் கட்புலனாகிய வடிவும் உடைத்தாக வேறுவேறு வகுத்துக் கொண்டு, தன்னையே உணர்த்தியும் சொற்கு இயைந்து நிற்கும் ஓசையையாம். கடல் ஒலி, சங்கொலி முதலிய ஓசைகள் பொருளுணர்த்தாமையானும் முற்கு வீளை இலதை முதலியன பொருள் உணர்த்தினவேனும் எழுத்தாகாமை யானும் அவை ஈண்டுக் கொள்ளார் ஆயினர்".

இவ்வாறே எழுத்தை 'உரு' என்று கொள்ளவேண்டும் என்பதற்கும், இவர் கூறும் காரணங்கள் படித்து இன்புறத் தக்கவை (எழுத்-1).

எழுத்துகளின் வைப்புமுறையும், இன் வற்று முதலிய சாரியைகளின் வைப்புமுறையும் இவரால் நான்கு ஆராய்ந்து கூறப்பட்டுள்ளன.

சொல்லதிகாரத்தில் (1), சொற்களைத் தனி மொழி, தொடர் மொழி என இருவகைப் படுத்தி விளக்குகின்றார்:

"சொல்தான், தனிமொழியும் தொடர்மொழியும் என இருவகைப்படும். தொடர்மொழி, இருமொழித் தொடரும் பன்மொழித் தொடரும் என இருவகைப்படும். அவை தொடருங்கால் பயனிலை வகையானும் தொகைநிலை வகையானும் எண்ணுநிலை வகையானும் தொடரும்."

| | | | |
|---|---|---|---|
| சொல் | தனிமொழி | | |
| | தொடர்மொழி | இருமொழித் தொடர் | பயனிலைவகை |
| | | | தொகைநிலை வகை |
| | | | எண்ணுநிலை வகை |
| | | பன்மொழித் தொடர் | பன்மொழித் தொடர் |

(எ—டு)

| | | |
|---|---|---|
| 1. | சாத்தன், உண்டான், மன், நனி என்பன தனி மொழி. | |
| 2. | சாத்தன் வந்தான் — இது பயனிலைத் தொடர்.<br>யானைக்கோடு – இது தொகை நிலைத் தொடர்.<br>நிலம் நீர் — இஃது எண்ணு நிலைத் தொடர். | இவை இருமொழித் தொடர் |
| 3. | அறம் வேண்டி அரசன் உலகம் புரக்கும் என்பன பன்மொழித் தொடர். | |

## இலக்கியநெஞ்சம்

நச்சினார்க்கினியர் உள்ளத்தில், இலக்கணத்திற்கு உரை எழுதும்போது இலக்கிய நினைவும், இலக்கியத்திற்கு உரை எழுதும் போது இலக்கணச் சிந்தனையும் எழுகின்றன. தொல் காப்பிய உரையை இவர் இலக்கியக் களஞ்சியம் ஆக்கியுள்ளார். எழில் மிகுந்த சொற்றொடர், உள்ளங்கவரும் உவமை, இனிய ஓசை கெழுமிய வாக்கியம், என்றும் நெஞ்சத்தில் நின்று நிலவும் எடுத்துக் காட்டு, இலக்கியச் சுவை முதிர்ந்த கவிதை மேற்கோள் – ஆகியவற்றை இவர் உரையில் காணலாம். இவர் இலக்கியப் பூங்காவில் நுழைந்து தமிழ்த் தேன் திரட்டி வந்து தொகுத்துத் தருகின்றார்.

பாயிர உரையில் உள்ள 'சின்னாட்பல்பிணிச் சிற்றறி வினோர்' என்ற இனிய தொடர், உள்ளத்தைக் கவர்கின்றது.

பின் வரும் பகுதியில் கவிதைச் சுவை ததும்பி வழிகின்றது.

'பாயிரந்தான் தலையமைந்த யானைக்கு வினையமைந்த பாகன் போலவும் அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும் நூற்கு இன்றியமையாச் சிறப்பிற்றாய் இருத்தலின், அது கேளாக்கால் குன்று முட்டிய குரீஇப் போலவும், குறிச்சி புக்க மான் போலவும் மாணாக்கன் இடர்ப்படும் என்க'.

மூலத்தில் உவமை இல்லை எனினும், விளக்கத்திற்காக, இவரே உவமையைப் படைத்து எழுதுவதுண்டு. 'வளியிசை அண்ணம் கண்ணுற்று அடைய' (எழுத்-99) என்பதை, ஓசை அண்ணத்தை அணைந்து உரலாணி இட்டாற் போலச் செறிய' என்று ஓர் உவமையைக் கூறி விளக்குகின்றார்.

வினைத்தொகைக்கு இவர் தரும் உதாரணமும் விளக்கமும் இவரது கற்பனைத் திறனைக் காட்டுகின்றன.

"கொல்யானை என்பது, அக்காலத்து அஃது உதிரக் கோட்டோடு வந்ததேல் இறப்பும்; அதன் தொழிலைக் கண்டு

நின்றுழி நிகழ்வும்; அது கொல்ல ஓடுவதைக் கண்டுழி எதிர்வும் விரியும்."

## முன்னோர் மொழி

முன்னோர் மொழிந்த பொருளையும், சொல்லையும் பொன்னேபோல் போற்றும் இயல்பினர் இவர். அகத்திணையியலுள், 'ஒன்றாத் தமரினும்' என்னும் நூற்பாவில் (41) உள்ள 'புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலும்' என்ற அடிக்கு, "போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறுத்தல் அரசியல் அன்று" என்று விளக்கும் இடத்தில், புறநானூற்றுப் பாடல் (8) ஒன்றின் அடி இடம் பெற்றுள்ளது.

குறுந்தொகைப் பாடல்கள் பலவற்றை மேற்கோள் காட்டும் இவர், சிலவற்றிற்கு நயவுரை கண்டுள்ளார். சொல்லதிகாரத்தில் வினையெச்சங்களை விளக்கும்போது, "கணவன் இனிது உண்டலின், காதலி முகம் மலர்ந்தது" என்று காட்டும் உதாரணம் 'முளிதயிர் பிசைந்த' என்னும் குறுந்தொகைப் பாடலை நினைவூட்டுகிறது. எச்சவியலில் (45) 'ஒருமை சுட்டிய' என்னும் நூற்பா உரையில் 'தினைத்தாளன்ன சிறு பசுங்கால' என்னும் பாடல் சிறந்த விளக்கம் பெறுகின்றது. செய்யுளியலில் (206), 'செங்களம்பட' என்ற முதற்பாடலுக்குரிய இருவேறு எச்சப் பொருளைக் குறிப்பிடுகின்றார்.

கலித்தொகை, இவரைக் கவர்ந்த நூல்களில் ஒன்று. செய்யுளியலில் கலிப்பா வகைகளுக்கு அந் நூலிலிருந்து பல உதாரணம் காட்டுகின்றார். கற்பியலில் 'கரணத்தின் அமைந்த' (5) என்னும் நூற்பாவில் உள்ள 'மடம்பட வந்த' என்னும் தொடரை விளக்கும்போது, கலித்தொகைப் பாடல் (7) ஒன்றின் அடிகளை உரைநடையாக்கி எழுதுகின்றார். அப்பகுதி பின்வருமாறு:

"உடன்கொண்டு போதல் முறையன்று என்று அறியாமற் கூறலின், மடம்பட என்றார். செய்கையாவன; தலைவன் கைபுனை வல்வில் நாண் உளர்ந்தவழி, இவள் மையில் வாண்முகம் பசப்பூர்தலும்; அவன் புனைமாண் மரீஇய அம்பு தெரிந்தவழி, இவள் இனைநோக்கு உண் கண்ணீர் நில்லாமையும் பிறவுமாம்"

இப் பகுதியில் கலித்தொகைப்பாடலின் (7) பல அடிகள் இடம் பெற்றுள்ளன;

**நீயே,**
**செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழநின்**
**கைபுனை வல்வில் ஞாணுளர் தீயே;**
**இவட்கே,**

**செய்வுறு மண்டிலம் மையாப் பதுபோல்**
**மையில் வாண்முகம் பசப்பூ ரும்மே;**
**நீயே,**
**வினைமாண் காழகம் வீங்கக் கட்டி,**
**புனைமாண் மரீஇய அம்பு தெரிதியே**
**இவட்கே,**
**சுனைமாண் நீலம் கார்எதிர் பவைபோல்**
**இனைநோக்கு உண்கண் ணீர்நில் லாவே**

இவ்வாறே கற்பியலில் 'துன்புறு பொழுதினும்' (43) என்னும் நூற்பா விளக்கவுரையில் பாலைக்கலிப்பாடலின் (கலி-4) சில அடிகளைத் (9–14) தந்துள்ளார்.

அகத்திணை இயலில் (44) 'நிகழ்ந்தது கூறி நிலையலும் திணையே' என்னும் நூற்பாவை விளக்கும்போது, 'அரும் பொருள் வேட்கையின்' என்னும் பாலைக்கலிப்பாடலை (கலி-18)க்காட்டி அதில், 'நாளது சின்மையும்' (அகத்திணை-41) முதலிய இலக்கணக் கருத்துக்களைப் பொருத்திக் காட்டுகின்றார்.

அகத்திணையியல் (37) 'ஏமப்பேரூர்' என்பதற்குப் 'பதியெழு வறியாப் பேரூர்' என்று விளக்கும் இடத்தில் இளங்கோ அடிகளின் குரல் எதிரொலிக்கின்றது.

## முற்போக்குச் சிந்தனை

நச்சினார்க்கினியரிடம் சிறந்த முற்போக்குச் சிந்தனை உள்ளது. புதுமையை நாடும் திறனாய்வாளர்கள் இவரது முற் போக்குச் சிந்தனையை நயந்து போற்றுவர். அத்தகைய இடங்களில் சிலவற்றைக் காண்போம்:

இளங்கோவடிகள், மங்கல வாழ்த்துப் பாடலின் தொடக்கத்தில், திங்கள் ஞாயிறு மாமழை பூம்புகார் ஆகிய வற்றைப் போற்றுவது குறித்துப் பலவகையான புதுவிளக்கங் களைத் திறனாய்வாளர்கள் கூறி வருகின்றனர்.

நச்சினார்க்கினியர் ஒரு கருத்தைக் கூறி நம் சிந்தனையைத் தூண்டுகின்றார். புறத்திணையியலில் 36–ஆம் நூற்பாவில் வரும்,

**நடைமிகுத்து ஏத்திய குடைநிழல் மரபும்**

என்ற அடிக்கு விளக்கம் எழுதும் போது,

'மரபு என்றதனால் செங்கோலும் திகிரியும் போல்வன வற்றைப் புனைந்துரையாக்கலும் கொள்க' என்று கூறி,

**திங்களைப் போற்றுதும் ... அளித்தலான்**

எனவும்,

ஞாயிறு போற்றுதும் ... திரிதலான்

எனவும் இவை குடையையும் செங்கோலையும் திகிரியையும் புனைந்தன" என்று விளக்குகின்றார். எனவே, இளங்கோ வடிகள் தம் காப்பியத்தில் சோழ மன்னனின் குடை திகிரி முதலிய வற்றைப் போற்றியதாகக் கருதுவது பொருந்தும்.

புறத்திணையியலில் (28), 'காமப்பகுதி கடவுளும் வரையார்' என்பதை விளக்கும்போது,

"காமப் பகுதி கடவுளாரைக் கூறுங்கால் பெண் தெய்வத் தோடு இயல்புடையாரைக் கூறின்அன்றி, எண்வகை வசுக்கள் போல்வாரையும் புத்தர் சமணர் முதலியோரையும் கூறப்படாது" என்று கூறுகின்றார்.

"ஊரோடு தோற்றமும் பரத்தையர்க்கு அன்றி, குல மகளிர்க்குக் கூறப்படாது" (புறத்-30) என்றும் உரைக்கின்றார்.

இவை, முற்போக்குச் சிந்தனையாளரைப் பெரிதும் மகிழ் விக்கின்றன.

தொல்காப்பியர், வேற்றுமைகளின் இலக்கணத்தைச் சொல்லதிகாரத்தில் வேற்றுமையியல் வேற்றுமை மயங்கியல் விளிமரபு ஆகிய மூன்று பகுதிகளில் விளக்கிக்கூறியுள்ளார்.

சில ஆய்வாளர்கள், 'இம் மூன்று இயல்களையும் தொகுத்து, வேற்றுமைகளைப் பற்றிய கருத்துக்களை எல்லாம் ஒரே இயலில் கூறி இருக்கலாமே' என்று கருதுகின்றனர். நச்சினார்க்கினியரும் இவ்வாறு கருதியுள்ளார். செய்யுளியலில் (170), 'நேரினமணியை' என்னும் சூத்திர உரையில், 'நேரினமணி எனவே ஒரு சாதியினும் தம்மின் ஒத்தனவே கூறல் வேண்டும். வேற்றுமை ஒத்தும். வேற்றுமை மயங்கியலும், விளிமரபும் என மூன்றன் பொருளையும் ஒன்றாக வேற்றுமை' என்னாது, வேறுவேறு வைத் தமை காண்க' என்று தம் ஆய்ச்சித் திறனை வெளிப் படுத்து கின்றார்.

இத்தகைய இடங்களில் எல்லாம், நச்சினார்க்கினியர் சிந்தனையாளர் அரங்கத்திற்குத் தலைமை தாங்கும் தகுதி பெற்றுச் சிறந்து விளங்குகின்றார்.

## முன்னோர் அடிச்சுவட்டில்

இவர், பல இடங்களில் முன்னோர் அடிச்சுவட்டைப் பின் பற்றி நடக்கின்றார். இளம்பூரணர் சுருக்கமாய்க் கூறிய கருத்தை இவர், அழகான நடையில்-எதுகை மோனை அமைந்த சொற் களால் விரித்துக் கூறுகின்றார். முதல், கரு, உரி இவற்றை விளக்கிய பின் காலம் அதற்குப் பொருந்தும் வகையினைக் கூறும் முறையை

இவர் இளம்பூரணரிடமிருந்தே பெற்று அழகுபட விரித்து உரைக்கின்றார். அகத்திணைக்கு மறுதலையாய் அமையும் புறத்திணையின் பொருத்தம் பற்றிய விளக்கமும் இளம்பூரணர் கருத்தின் அடிப்படையிலேயே அமைக்கப்பட்டுள்ளது.

புறத்திணையியலில் 'முழுமுதல் அரணம்' (8), என்பதற்கு "அரணிற்குக் கூறுகின்ற இலக்கணம் பலவும் உடைத்தாதல்' என்று சுருக்கமாக இளம்பூரணர் கூறிச் சென்ற கருத்தினை நச்சினார்க்கினியர் மிக விரிக்கின்றார். சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி போன்ற இலக்கியங்களிலிருந்து பல கருத்துகளை மேற்கொண்டு அரண் இலக்கணத்தை விரிக்கின்றார்.

சொல்லதிகாரத்தில் சேனாவரையர் இளம்பூரணர் ஆகியோர் கருத்தைத் தழுவி, விளக்கி எழுதும் இடங்கள் பல உள்ளன. எழுத்ததிகாரத்தில் எழுத்திற்கு உருவம் உண்டு என்ற கருத்தும், பாயிரத்தில் கூறும் கருத்தும் இளம் பூரணர் கூறியவையேயாகும். பல உதாரணங்களையும் நச்சினார்க்கினியர் தம் முன்னோரிடமிருந்து மேற்கொள்ளுகின்றார்.

செய்யுள் இயலுக்குப் பேராசிரியர் எழுதியுள்ள உரையையும் இவரது உரையையும் ஒப்பிடும்போது எத்தனையோ ஒப்புமைகளைக் காணலாம். நோக்கு என்ற உறுப்பினை விளக்கும் போது பேராசிரியர் காட்டிய 'முல்லை வைந்நுனி' என்ற (அகம்-4) பாட்டையே இவரும் மேற்கோள் காட்டி, பேராசிரியரைப் பின் பற்றியே விளக்கம் எழுதுகின்றார்.

### முன்னோரை மறுத்தல்

நச்சினார்க்கினியர் முன்னோரை மறுத்து வேறுரை காணும் இடங்களும் உண்டு. எழுத்ததிகாரத்தில் சில இடங்களில் இளம் பூரணர் கருத்தை மறுக்கின்றார். சொல்லதிகாரத்தில் இளம் பூரணரை மறுப்பதோடு சேனாவரையரையும் மறுக்கின்றார். ஓரிடத்தில், "சேனாவரையர், ஆசிரியர் கருத்தும் சான்றோர் செய்யுள் வழக்கமும் உணராமல் கூறினார்" (சொல்-414) என்று சிறிது வன்மையாகவே தாக்குகின்றார்.

பொருளதிகாரத்தில் இளம்பூரணரை மறுத்து, வேறுரை காணும் இடங்கள் பல உண்டு. பொருளியல் என்பது அகம் புறம் என்ற இரண்டின் ஒழிபுகூறும் பகுதி என்பது இளம்பூரணர் கருத்து. நச்சினார்க்கினியர், "புறத்திணை இயலுள் புறத்திணை வழுக்கூறி, அகப்பொருட்கு உரிய வழுவே ஈண்டுக் கூறுகின்றது என்று உணர்க" என்று கூறுகின்றார்.

திணைப்பெயர்கள் யாவும் நிலத்திற்குரிய முல்லை முதலிய பூக்களால் பெற்ற பெயர் என்பர் இளம்பூரணர் (அகத்-5). அக் கருத்தினை நச்சினார்க்கினியர் மறுத்துக் கூறுகின்றார்.

"இனி இவ்வாறன்றி முல்லை முதலிய பூவாற் பெயர் பெற்றன இவ் ஒழுக்கங்கள் எனின், அவ்வந் நிலங்கட்கு ஏனைப் பூக்களும் உரியவாகலின் அவற்றால் பெயர் கூறலும் உரிய எனக் கடாவுவார்க்கு விடைஇன்மை உணர்க" என்பது நச்சினார்க்கினியரின் மறுப்புரை.

இறையனார் களவியல் உரையாசிரியரையும் இவர் மறுக்கும் இடங்கள் உண்டு (அகத் 3, 53).

செய்யுளியலில் பேராசிரியரைச் சில இடங்களில் மறுக்கின்றார். செய்யுளுக்குரிய தொடை பற்றிய கணக்கை (செய்-109) இவர் வேறுவகையாய் விளக்கி நான்கு வேறு கருத்தினைக் கூறி, 'இவற்றுள் நல்லது உய்த்து உணர்ந்து கொள்க' என்று கூறுகின்றார்.

## பிறர்க்கு விரித்த வலையில்

தமக்கு முன் இருந்த உரைகளை மறுத்து, புதுஉரை காண முயலும் நச்சினார்க்கினியர், சில புதிய கொள்கைகளை உருவாக்கிக் கொண்டு புதுவழி வகுக்கின்றார். ஆனால், தாமே அக் கொள்கைகளை மறந்து தாம் வகுத்த புதுவழியை விட்டு விலகிச் செல்கின்றார். அத்தகைய இடங்களில் இவர் உரையே இவர்க்கு மறுப்பாக அமைந்து விடுகின்றது.

எழுத்ததிகாரத்தில், ஓரெழுத்து ஒருமொழி (45) என்னும் நூற்பா உரையில்,

> "ஒற்றும் குற்றியலுகரமும் சொல்லில் இடம்பெறும் போது அவற்றைக் கணக்கிடக்கூடாது; ஏனெனில் செய்யுளியலில் தொல்காப்பியர் அவ்வாறு கூறியுள்ளார்"

என்று உரைத்து, வரகு கொற்றன் ஆகியவற்றை ஈரெழுத்து ஒருமொழிக்கு உதாரணம் காட்டுகின்றார். ஆனால், இவ்வாறு கூறிப் பிறரை மறுத்ததை மறந்து, மெல்லெழுத்து இயற்கை (எழுத்-145) என்னும் நூற்பா விளக்கத்தில், "ஈரெழுத்து ஒருமொழிக்கண், மெய்ஞ்ஞானம் நூல் மறந்தார் எனவரும்" என்று மாறு படக் கூறுகின்றார். மெய் நூல் ஆகிய சொற்களை ஈரெழுத்துச் சொற்களாகவே கொண்டு உதாரணம் காட்டுகின்றார்.

குற்றியலுகரம் ஒலிக்கின்ற முறையைக் கூறுகின்ற,

> **அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்**
> **எல்லா இறுதியும் உகரம் நிறையும்**
>
> (எழுத்-408)

என்னும் நூற்பாவில், 'உகரம் நிறையும்' என்ற பாடத்தை மாற்றி இவர், 'உகரம் நிலையும்' என்று வேறு பாடம் கொண்டுள்ளார். தாம் கொண்ட பாடமே சரியானது என்றும் விளக்குகின்றார். ஆனால் செய்யுளியல் உரையில் சீர்கள் நிற்கும் நிலையைப் பற்றிக் கூறும் போது 'உகரம் நிறையும்' என்ற பாடத்தையே கொண்டுள்ளார்.

கிளவியாக்கத்தில் (57), காலம் உலகம் என்ற நூற்பாவின் விள்க்கத்தில் சேனாவரையர் 'உலகம் என்பது வடசொல்' என்று கூறியுள்ளதை இவர் உடன்படாமல்,

> "காலம் உலகம் என்பன வடசொல் அன்று, ஆசிரியர் வடசொற்களை எடுத்தோதி இலக்கணம் கூறார் ஆதலின்"

என்று கூறி மறுக்கிறார். ஆனால்,

> **பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**
> **ஐயர் யாத்தனர் கரணம் என்ப**
>
> **(கற்–4)**

என்னும் நூற்பாவிற்கு விளக்கம் கூறும் போது,

> **ஈண்டு என்ப என்றது, முதல் நூல்**
> **ஆசிரியரை அன்று வடநூலோரைக் கருதியது**

என்று உரைக்கின்றார்.

இத்தகைய இடங்களில் நச்சினார்க்கினியர், பிறரைச் சிக்க வைப்பதற்காக விரித்த வலையில் தாமே சிக்கிக் கொண்டு இடர்ப் படுகின்றார்.

## அடி சறுக்கிய யானை

இவர் உரையில் சில இடங்களில் முன்னுக்குப் பின் முரண் பாடான கருத்துக்கள் உள்ளன.

களவியலில் (1), 'கந்தருவர்க்குக் கற்பின்றி அமையவும் பெறும். ஈண்டுக் கற்பின்றிக் களவே அமையாது என்றற்கு, துறையமை என்றார்' என்று கூறிய இவர் புறத்திணையியலில் (2), 'களவு நிகழ்கின்ற குறிஞ்சிப் பொருளாகிய கந்தருவமணம் வேத விதியாலே இல்லறம் ஆனாற் போல' என்று கூறுகின்றார், கந்தருவமும் களவும் ஒன்றே என்று வேறுபாடு எதுவும் இல்லாதது போல் எழுதிவிடுகின்றார்.

தொல்காப்பியர் குறிப்பிடும் அதோளி இதோளி என்னும் சொற்கள், சங்க காலத்தில் வழக்கிழந்து விட்டன என்னும் கருத்தினராய்ச் செய்யுளியலில் (80),

அதோளி இதோளி உதோளி குயின் என்றாற்
போல்வன இடைச்சங்கத்திற்கு ஆகா ஆயின

என்று கூறுகின்றார்.

ஆனால் இவ்வாறு தாம் கூறி இருப்பதை மறந்து கலித் தொகை 117-ஆம் பாடலின் உரையில், அப்பாடலில் உள்ள ஈதோளி என்னும் சொல்லின் வடிவத்தை ஆராயும் போது,

'இதோளி—ஈதோளி எனச் சுட்டு நீண்டு நின்றது'

என்று விளக்குகின்றார்.

இவர் தம் காலத்தில் நிலவி வந்த பிற்போக்கான சமூகக் கட்டுப்பாடுகளை உரையில் புகுத்திவிட்ட இடமும் உள்ளது. உண்ணும்போது பிறர் பார்க்கக்கூடாது; அந்த நேரத்தில் மற்றவர் வீட்டினுள்ளே வரக்கூடாது என்னும் பிற்காலச் சமுதாய வழக்கத்தைக் களவியல் (15) உரைப்பகுதியில் கூறுகின்றார்.

புகாஅக் காலைப் புக்குஎதிர்ப் பட்டும்
பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்

என்பதற்கு, "உண்டிக் காலத்துத் தலைவி இல்லத்துத் தலைவன் புக்கு" என்று எழுதியபின், "சுடர்த்தொடீஇ கேளாய்" என்னும் கலிப்பாடலை மேற்கோள் காட்டுகின்றார். அந்தப் பாடல் இவர் கருத்திற்கு அரண் செய்யவில்லை. அதில்,

மேலோர் நாள்
அன்னையும் யானும் இருந்தேமா, இல்லிரே
உண்ணுநீர் வேட்டேன் என வந்தாற்கு

என்னும் பகுதியில் உண்டிக்காலம் என்ற குறிப்பு இல்லை.

இவரே களவியலில் (40) "மனையகம் புகாஅக் காலை" என்பதற்கு,

உள் மனையிற் சென்று கூடுதற்கு
உரித்து அல்லாத முற்காலத்து உண்டான இரவுக்குறி

என்று எழுதுகின்றார். இக் கருத்து, முன் கூறியதற்கு மாறாக உள்ளது. இங்கே கூறிய கருத்தே பொருத்தமாய் உள்ளது.

இத்தகைய இடங்கள், "ஆனைக்கும் அடிசறுக்கும்; ஆராய்ச்சியாளர்க்கும் நினைவு தடுமாறும்!" என்பதைச் சொல்லாமல் சொல்லுகின்றன!

## மறதியா ? புறக்கணிப்பா ?

தொல்காப்பியத்திற்குப் பின், காலந்தோறும் தோன்றி வளர்ந்துள்ள சொல்வடிவம் இலக்கியக்கொள்கை இலக்கணக் கருத்து ஆகியவற்றைத் தம் உரையில் ஆங்காங்கே விளக்கிக் கூறு

கின்ற இயல்புடையவர் நச்சினார்க்கினியர். ஆனால் சில இடங்களில், பிற்கால இலக்கண இலக்கிய வழக்குகளைச் சிறிதும் நினைவுபடுத்தாமலும் குறிப்பிடாமலும் உரை எழுதிச் செல்கின்றார்.

களவியலில் (3) 'சிறந்துழி ஐயம்' என்னும் நூற்பா உரையில், தலைவியைக் காணும் தலைவனுக்கே ஐயம் நிகழும் என்றும்; தலைவனைக் காணும் தலைவிக்கு ஐயம் நிகழாது என்றும் கூறுகின்றார். இதற்குக் காரணம் கூறும்போது, "தலைவிக்கு, முருகனோ இயக்கனோ மகனோ என ஐயம் நிகழின் அதனை நீக்கி உணர்தற்குக் கருவி இலள் ஆகலானும் இங்ஙனம் கூறினார். தலைவிக்கு ஐயம் நிகழின் அச்சமேயன்றி, காமக்குறிப்பு நிகழாதாம்" என்று உரைக்கின்றார்.

ஆனால் இவரது கருத்திற்கு மாறாக இலக்கண இலக்கிய வழக்குகள் உள்ளன. அவை இவர்க்கு முற்பட்டவை. எனினும் அவற்றை நினைவுபடுத்தவில்லை!

1. இறையனார் களவியலுரை,

> "இவளும் இவனை ஐயப்படும். 'கடம்பக் கடவுள் கொல்லோ! இயக்கன் கொல்லோ! அன்றி மக்களுள்ளான் கொல்லோ!'' என்று இங்ஙனம் ஐயப்படும்"

என்று தலைவனைக் காணும் தலைவிக்கும் ஐயம் நிகழும் என்று கூறுகின்றது.

2. சீவக சிந்தாமணியில், பதுமை சீவகனை நோக்கிய போது,

**வணங்கு நோன்சிலை வார்கணைக் காமனோ!**
**மணங்கொள் பூமிசை மைவரை மைந்தனோ!**

**(சிந் – 1311)**

என்று ஐயுற்றதாய்த் திருத்தக்க தேவர் பாடுகின்றார்.

3. பெரிய புராணத்தில் சுந்தரரைக் கண்ட பரவை யார்,

**'முன்னே வந்து எதிர் தோன்றும்**
**முருகனோ! பெரு கொளியால்**
**தன்னேரில் மாரனோ!**
**தார்மார்பின் விஞ்சையனோ**
**மின்னேர்செஞ் சடையண்ணல்**
**மெய்யருள்பெற் றுடையவனோ!**
**என்னே! என் மனம் திரித்த**
**இவன்யாரோ!' என நினைந்தார்**

**(தடுத் – 144)**

என்று ஐயுற்றதாய்ச் சேக்கிழார் பாடுகின்றார்.

2.19.

4. கம்பராமாயணத்தில், இராமனைக் கண்ட சீதைக்கு ஐயம் ஏற்பட்டதையும், பின் ஐயம் நீங்கித் தெளிந்ததையும் கம்பர் பின் வருமாறு பாடுகின்றார்:

**நெருக்கியுட் புகுந்தரு நிறையும் பெண்மையும்**
**உருக்கி,என் உயிரொடும் உண்டு போனவன்**
**பொருப்புறழ் தோள்புணர் புண்ணி யத்தனு,**
**கருப்புவில் அன்று;அவன் காமன் அல்லனே !**

(மிதிலை – 54)

**உரைசெயின் தேவர்தம் உலகுளா னவன்**
**விரைசெறி தாமரை இமைக்கும் மெய்ம்மையான்**
**வரிசிலைத் தடக்கையன், மார்பின் நூலினன்,**
**அரசிளங் குமரனே ஆகல் வேண்டுமால்.**

(மிதிலை – 58)

மேலே காட்டியுள்ள இலக்கண இலக்கியங்கள் நச்சினார்க்கினியர்க்கு முற்பட்டவை; செல்வாக்குடன் இலக்கிய உலகில் நிலவி வந்தவை. சிந்தாமணிக்கு இவரே உரை கண்டுள்ளார். ஆதலின் இத்தகைய இடங்களை இவர் மறந்துவிட்டார் என்பதா? புறக் கணிக்கின்றார் என்பதா?

பிற்கால இலக்கிய வழக்கை மறந்தோ புறக்கணித்தோ இவர் உரை எழுதுகின்ற இடம், மற்றொன்றும் உள்ளது.

சொல்லதிகாரத்தில் *(452)*,

**கடிசொல் இல்லைக் காலத்துப் படினே**

என்னும் நூற்பா விளக்கத்தில்,

> "புதியன தோன்றினாற் போல, பழையன கெடுவனவும் உள. அவை அழன் புழன் முதலியனவும், எழுத்திற் புணர்ந்த சொற்கள் இக் காலத்து வழங்காதனவும் ஆம்"

என்று எழுதுகின்றார்.

ஆனால், மணிமேகலையில் அழன் புழன் என்ற சொற்கள் வழங்கியுள்ளன. ஆராய்ச்சி அறிஞர் மு. இராகவ ஐயங்கார், ஆராய்ச்சித் தொகுதியில் *(பக் – 107)*, "மணிமேகலைச் சக்கரவாளக் கோட்ட முரைத்த காதையில் *(92)*;

**அழற்பெய் குழிசியும் புழற்பெய் மண்டையும்**

என வரும் தொடர், அழன் புழன் என்ற வழக்குகளைக் குறிப்பது போலும்" என்று குறிப்பிடுகின்றார்.

மேலே காட்டியுள்ள அடிக்குப் பொருள் கொள்வதில் சிக்கல் உள்ளது. நச்சினார்க்கினியர் எழுத்ததிகார உரையில் (எழுத்.354), அழன் என்பதற்குப் பிணம் என்று பொருள் கூறுகின்றார். ஆனால் இவர் புழன் என்பதை விளக்கவில்லை.

மணிமேகலைக்கு உரை எழுதிய ந.மு. வேங்கடசாமி நாட்டார், அழல் புழல் என்று கொண்டு, மேலே காட்டிய அடிக்கு,

"தீப்பெய்த பானையும் புழல் என்னும் பண்ணியம்
இட்ட கலனும்"

என்று பொருள் கூறியுள்ளார்.

மணிமேகலையில் இது மேலும் ஆராய வேண்டிய இட மாகும்.

## 4. பத்துப் பாட்டு உரை

பத்துப்பாட்டிற்கு நச்சினார்க்கினியர் உரை எழுதவில்லை என்றால், பல பாடல்களின் சிறப்பான பகுதிகள், பொருள் தெளிவின்றி இருந்திருக்கும். இருளில் இருக்கும் வண்ண ஓவியமாய்ப் பார்த்துக் களிப்பாரின்றிப் போய்இருக்கும். பழந்தமிழ் இலக்கியங்களை மரபறிந்து, பொருள் தெளிவுடன் சுவையாக எடுத்து விளக்கிய பெருமை, நச்சினார்க்கினியர்க்கு உண்டு.

**ஆன்றோர் புகழ்ந்த அறிவினில் தெரிந்து**
**சான்றோர் உரைத்த தண்டமிழ்த் தெரியல்**
**ஒருபது பாட்டும் உணர்பவர்க்கு எல்லாம்**
**உரையற முழுதும் புரைபட உரைத்தும்**

என்று சிறப்பாயிரம் இவரைப் பாராட்டுகின்றது.

பத்துப்பாட்டை இவர் பலநோக்குடன் கண்டு தெளிந்து உரை எழுதுகின்றார். பாடல்களின் தலைப்பை ஆராய்ந்து அவற்றின் கருத்தை எண்ணி வியக்கின்றார். பாடலின் பொருள் முடியும்தோறும் நிறுத்தி, வினை முடிபுகளை இயைத்துக் காட்டுகின்றார். விளக்கவேண்டிய பகுதிகளை நயமாக விளக்கு கின்றார். இடையிடையே தொல்காப்பிய இலக்கணத்தைப் பொருத்திக்காட்டித் தமிழ்மரபை நினைவூட்டுகின்றார். சொற்களுக்குப் பொருள் எழுதுகின்றார். சங்ககால மக்களின் பழக்கவழக்கம், நாகரிகம், வரலாறு ஆகியவற்றை நினைவில் கொண்டு, வேண்டிய இடங்களில் தெளிவு பெறச் செய்கின்றார்.

## பெயர் விளக்கம்

பத்துப்பாட்டின் பெயர்கள் யாவும் கலையழகு வாய்ந்தவை; பொருளாழம் மிக்கவை. தலைப்புகளை எண்ணிப் பார்த்து அத்தகைய சிறந்த தலைப்புகளைப் பாடலுக்கு இட்ட புலவர் பெரு மக்களின் கற்பனைத்திறனை வியக்கலாம். நச்சினார்க் கினியர் இப் பணியைப் பல ஆண்டுகளுக்கு முன்னரே தொடங்கி இருக்கிறார்.

'நெடுநல்வாடை' என்ற இனிய தலைப்பு, ஏழாம் பாடலுக்கு உரியதாக விளங்குகின்றது. வாடை என்றும், நெடுவாடை என்றும், நெடுநல் வாடை என்றும் பெயர் சூட்டிய நக்கீரரின் கற்பனைத் திறன் மிக உயர்ந்தது. நச்சினார்க்கினியர் புலமைக்கு இத் தலைப்பு இனிய விருந்தாய் அமைகின்றது. 'நெடியதாகிய நல்ல வாடை' என்று பொருள்கூறி, மேலும் அதில் நயங் காண்கின்றார். 'தலைவனைப் பிரிந்திருந்து வருந்தும் தலைவிக்கு, ஒரு பொழுது ஓர் ஊழிபோல நெடிது ஆகிய வாடையாய்'-நெடுவாடையாய் உள்ளது. "அகத்து ஒடுங்கிப் போகம் நுகர்வார்க்குச் சிறந்த காலமாயினும் அரசன் போகம் வேண்டிப் பொதுச் சொற் பொறானாய், அப் போகத்தில் மனமற்று வேற்றுப்புலத்துப் போந்து இருக்கின்ற இருப்பு ஆதலின், அவற்கு நல்லதாகிய வாடை ஆயிற்று." இவ்வாறு நச்சினார்க்கினியர் பாட்டின் தலைப் பிற்கு நயம் கூறுகின்றார்.

பட்டினப்பாலை என்பதைப் பின்வருமாறு விளக்கு கின்றார்: "இது பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறிய பாலைத் திணையாகலின், இதற்குப் பட்டினப்பாலை என்று பெயர் கூறினார்."

மலைபடுகடாம் என்ற தொடர், நச்சினார்க்கினியரால் சிறந்த விளக்கம் பெற்று, புதிய ஒளி பெறுகின்றது:

'மலைபடுகடாஅம் மாதிரத்து இயம்ப" (348) என்ற அடிக்கு, 'மலைகளாகிய யானைக்கு உண்டாகின்ற ஒலி, திசைகள் எல்லாம் ஒலிப்ப' என்று பொருள் எழுதி, 'கடாம், ஆகுபெயராய் அதனாற் பிறந்த ஓசையை உணர்த்திற்று' என்று விளக்கமும் தருகின்றார். பின்னர், "மலைக்கு யானையை உவமித்து அதன்கண் பிறந்த ஓசையைக் கடாம் எனச் சிறப்பித்ததனால், இப்பாட்டிற்கு 'மலைபடுகடாம்' என்று பெயர் கூறினார்" என்று நயம்பட உரைக் கின்றார்.

## மாட்டு

பத்துப்பாட்டில் இவர் 'மாட்டு' என்ற இலக்கணத்தின் பெயரால், பாடல்களைச் சிதைத்தும், உருக்குலைத்தும் பொருள்

எழுதுகின்றார். "மாட்டு இலக்கணத்தான் இப்பாட்டுகள் பத்தும் செய்தார்கள் ஆதலின், இவ்வாறே மாட்டி முடித்தல் யாண்டும் வரும் என்று உணர்க' என்று இவர் கூறி (முருகு-44) மாட்டு என்ற பெயரில் பாடல்களைச் சிதைக்கின்றார்.

இவ்வாறு, மாட்டு என்ற பெயரால் உரை கூறுவது பொருந்தாது என்பதை முன்னரே கண்டோம்.

**நயவுரை**

நச்சினார்க்கினியரின் கலைத்திறன் முழுவதையும் வெளிப் படுத்துதற்குரிய சிறந்த இடமாகப் பத்துப்பாட்டு விளங்குகின்றது. நயமான உரைப்பகுதிகள் சிலவற்றைக் காண்போம்:

**மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை**
**மெய்ப்பை புக்க வெருவரு தோற்றத்து**
**வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்**

**—முல்லை, 59—61**

என்று யவனரின் தோற்றத்தை முல்லைப்பாட்டு புனைகின்றது. யவனர் தோற்றம் நச்சினார்க்கினியர் உரையால் நன்கு விளங்கித் தோன்றுகிறது.

'புரவியை அடிக்கின்ற சம்மட்டி மறையும்படி வடிம்பு தாழ்ந்து பெருக்கும் செறிதலையுடைய புடைவை உடையினையும், சட்டை இட்ட அச்சம் வரும் தோற்றரவினையும், இயல்பான வலி கூடின மெய்யினையும் உடைய, தறுகண்மையினையுடைய சோனகர்'.

சில சொற்றொடர்களுக்கு இவர்தரும் விளக்கம் மிகவும் நய மானது:

## திருமுருகாற்றுப் படை

*4.* மதன் உடை நோன் தாள்—அறியாமை உடைதற்குக் காரணமாகிய வலியினையுடைய தாள்.

*7.* கார்கோள்—கடல்; கார்முகப்படுதலின், கடல் கார்கோள் என்று பெயர் பெற்றது.

*61.* செவ்வேல்—எக்காலமும் போர் செய்தலின் செவ்வேல் என்றார்.

*102.* வள்ளியோடு நகை அமர்ந்தன்று;

காம நுகர்ச்சி இல்லாத இறைவன் இங்ஙனம் நகை அமர்ந் தான், உலகில் இல்வாழ்க்கை நடத்தற்கு என்று உணர்க.

### பொருநராற்றுப்படை

*159.* ஏடு இல் தாமரை: (பொற்றாமரை) ஒருவன் செய்த தன்றி, தமக்கென இதழ் இல்லாத தாமரை.

*176.* நில்லாத உலகம்—செல்வமும் யாக்கையும் முதலியன நிலை நில்லாத உலகம்.

### சிறுபாணாற்றுப்படை

*139.* மடவோர்—வறுமை உறுதலும் இயல்பு என்று அறியாது புறங்கூறுவோர்.

*140.* அழி பசி—அறிவு முதலியன அழிதற்குக் காரணமான பசி.

### பெரும்பாணாற்றுப்படை

*22.* புலவுவாய்—கற்ற கல்வியை வெறுத்துக் கூறும் வாய்.

*418.* அடங்காத் தானை—ஓர் எண்ணின்கண் அடங்காத பகைவர்.

*481.* ஆன்று அடங்கு அறிஞர்—கல்விகள் எல்லாம் நிறைந்து களிப்பின்றி அடங்கின அறிவினையுடையார்.

### குறிஞ்சிப் பாட்டு

*225.* வளமையின் தன் தலை தீர்ந்தன்றும் இலனே—நற் குணங்களைத் திரித்தற்கு உரிய செல்வச் செருக்கான், எந்நாளும் தன் குலத்திற்கு உரிய நற்குணங்களின் நீங்கியதும் இலன்.

### மலைபடுகடாம்

*40.* பைதீர் பாணர்—பசுமையற்ற பாணர்; என்றது கல்வி முதிர்ந்தமையின் இளமையற்ற பாணர் என்றவாறு.

*398.* சுட்டினும் பனிக்கும் சுரம்—தத்தம் ஊர்களிலே இருந்து நினைப்பினும் தலை நடுங்குவிக்கும் சுரம்.

*445.* உண்ணுநர்த் தடுத்த இடிநுண் நுவணை—தன்னை நுகர் வாரை வேறொன்றை நுகராமல் தடுத்த இடித்தலால் நுண்ணிதாகிய தினைப் பிண்டி.

### சொல்லும் பொருளும்

காடு கிழாள் என்பது, இக்காலத்து ‘காடு காள்’ என்று மருவிற்று (முருகு.259).

கல்லா இளையர்—நம் தொழிலை ஒழிய வேறு கல்லாத இளையர் (சிறுபாண்-33).

வாடுஊன்—உப்புக்கண்டம் (பெரும்பாண்-100).

கடுப்பு உடை பறவை—குளவி (பெரும்பாண்-229).

பறி—மீன் வாரி எடுக்கும் பறி (பெரும்பாண்-265).

நோக்கு—அழகு (மதுரைக்-13).

விறலியர்—விறல்பட ஆடுதலை உடையார் (மதுரை-218)

தட்டை—தட்டப்படுதலின் தட்டை என்றார் (மதுரை-305).

தீம்புளி—கருப்புக்கட்டி கூட்டிப் பொரித்த புளி (மதுரைக்-318).

கொழுமீன் குறைஇய துடிகண் துணியல்—கருவாடு (மதுரைக்-320).

கவ்வை—எள்ளிளங்காய் (மதுரைக்-271).

தொய்யில்—எழுதும் குழம்பு (மதுரை-416).

நாளொடு பெயரிய விழுமரம்—உத்தரம் என்னும் நாளின் பெயர் பெற்ற உத்தரக் கற்கவி (நெடுநல்-82).

ஒருத்தல்—யானைத் தலைவன் (மலைபடு-299).

அரி—அரிசி (மலைபடு—416).

முடுவல்—பெண் நாய் (மலைபடு-566).

பனிக்கும் பாசறை—நோய் தீரும் மருந்துபோல் நின்றது (முல்லை-79).

**உவமை விளக்கம்**

பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள பல உவமைகள், நச்சினார்க்கினியர் விளக்கத்தால் நன்கு விளங்குகின்றன. இவர் உரைஇன்றேல், பல உவமைகள் விளங்காமல் போய் இருக்கும்.

திருமுருகாற்றுப் படையில் (1—3),

**உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு**
**பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு**
**ஓவற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி**

என்ற இனிய உவமை முருகனின் தோற்றத்தை நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறது. இவ்வுமையின் சிறப்பை நச்சினார்க்கினியர் நன்கு விளக்குகின்றார்:

'ஞாயிறு இருளைக் கெடுக்குமாறு போல, தன்னை மனத்தால் நோக்குவோர்க்கு மாயையைக் கெடுத்தலின் தொழில் உவமும்; தன்னைக்கட்புலனால் நோக்குவோர்க்குக் கடலின் பசுமையும் ஞாயிற்றின் செம்மையும்போல மயிலின் பசுமையும் திருமேனிச் செம்மையும் தோன்றலின் வண்ண உவமமும்

கொள்ளக் கிடந்தமை காண்க” என்று தம் புலமை மாண்பு வெளிப் படும் வண்ணம் நயவுரை எழுதுகின்றார்.

பட்டினப்பாலையில், காவிரி கடலோடு கலப்பதை,

**மாமலை அணைந்த கொண்மூப் போலவும்**
**தாய்முலை தழுவிய குழவி போலவும்**
**தேறுநீர்ப் புணரியோடு யாறுதலை மணக்கும்**

(பட். 95—97)

என்று சிறப்பிக்கின்றது. நச்சினார்க்கினியர், இவ்விரு உவமை களைப் பின்வருமாறு விளக்குகின்றார்:

‘கரிய மலையைச் சார்ந்த செக்கர் மேகம் போலவும்—இது கரிய உயர்ந்த திரையின் மீதே சிவந்த ஆற்றுநீர் பரத்தற்கு உவமை. தாயுடைய முலையைத் தழுவிய பிள்ளையைப் போலவும்—இஃது ஒன்றுபடுதற்கு உவமை.’

மலைபடுகடாத்துள்,

**காழ்மண்டு எஃகம் களிற்றுமுகம் பாய்ந்தென**
**ஊழ்மலர் ஒழிமுகை உயர்முகம் தோயத்**
**துறுகல் சுற்றிய சோலை வாழை**

(129—131)

என்று அழகிய மலைக்காட்சி ஒன்று இடம்பெற்றுள்ளது. நச்சினார்க்கினியர் உவமையின் பொருத்தத்தை, “வேல், யானையைக் குத்தினாற்போல வாழைப்பூ மலையைத் தீண்டி நின்றது என உணர்க; வாழைப்பூ உதிர்ந்து பின்பு உலராது நிற்றல் இயல்பு” என்று விளக்குகின்றார்.

நெடுநல்வாடையில், கத்தூரி முதலியவற்றை அரைக்கும் சாத்தம்மியினை நக்கீரர் கொள்உறழ் நறுங்கல் *(50)*, என்ற உவமையுடன் குறிப்பிடுகின்றார். உவமையின் பொருத்தமும் சிறப்பும் நச்சினார்க்கினியரின் விளக்கத்தால் தெளிவு பெறுகின்றன. ‘கருங்கொள்ளின் நிறத்தை ஒத்த நறிய சாத்தம்மி’ என்பது நச்சினார்க்கினியரின் விளக்கமாகும்.

உவமையை விளக்க, இரண்டு பொருளும் மூன்று பொருளும் கூறிப் பொருத்திக் காட்டுவது இவரது இயல்பு. பட்டினப்பாலையில்,

**மழைநீங்கிய மாவிசும்பின்**
**மதிசேர்ந்த மகவெண்மீன்**
**உருகெழுதிறல உயர்கோட்டத்து**
**முருகமர்பூ முரண்கிடக்கை**
**வரியணிசுடர் வான்பொய்கை** (34—38)

என்ற அடிகளுக்குப் பொருள் எழுதியபின்' 'மதியும் மீனும் பொய்கைக்கும் கரைக்கும் உவமிக்கும் பொருள். இனி, உயர் கோட்டத்தை, எல்லாரும் மதியைச்சேர்ந்த மக வெண்மீனைப் பார்க்கைக்கு இடமாகிய கோயிலாக்கி, கோயிலும் பொய்கையும் என எண்ணுதலாம். இனி, பொய்கைக் கரையிலே கோயிலாக்கிக் கோயிலும் பொய்கையும் மதி சேர்ந்த வெண்மீன் போன்ற என்றுமாம்' என வேறு சில கருத்துகளையும் கூறுகின்றார்.

மலைபடுகடாத்துள்,

**தாரொடு பொலிந்த வினைநவில் யானைச்**
**சூழியிற் பொலிந்த சுடர்ப்பூ இலஞ்சி (227, 228)**

என்ற இரண்டு அடிகளுக்கும் பொருள் எழுதியபின் மூன்று வேறு விளக்கங்களை, உவமையையும் பொருளையும் தொடர்பு படுத்தி எழுதுகின்றார்.

பெரும்பாணாற்றுப்படையில்,

**குழுவித் திங்கள் கோள்நேர்ந் தாங்கு (384)**

என்ற உவமையை இல்பொருள் உவமை என்று நச்சினார்க்கினியர் கூறுகின்றார். பௌர்ணமியன்றுதான் சந்திர கிரணம் ஏற்படும். ஆதலின், 'பிறைமதியைப் பாம்பு தீண்டினாற்போல' என்ற உவமையை இல்பொருள் உவமை என்று இவர் குறிப்பிட்டுள்ளார்.

### பத்துப்பாட்டில்—வெண்பாக்கள்

பத்துப்பாட்டில் ஒவ்வொரு பாட்டின்கீழும் வெண்பாக்கள் சில இடம்பெற்றுள்ளன. அவற்றின் எண்ணிக்கை மொத்தம் 24. அவற்றுள் முல்லைப்பாட்டின் கீழே உள்ள இரண்டு வெண்பாக் களில் 'புனையும் பொலம்படை' என்ற வெண்பா புறப்பொருள் வெண்பா மாலையில் உள்ளதாகும் (கார்முல்லை—276). நெடுநல் வாடையின் கீழே உள்ள 'வாடைநலிய' என்ற வெண்பாவும் புறப்பொருள் வெண்பா மாலைக்குரியதே (வாடைப்பாசறை 170). பட்டினப்பாலையின் கீழேஉள்ள 'முச்சக்கரமும்' என்ற வெண்பா பொருநராற்றுப் படையின்கீழும் எழுதப்பட்டுள்ளது.

ஏனைய வெண்பாக்களில் சிலவற்றை உரையாசிரியர்கள் மேற்கோள்களாகக் காட்டியுள்ளனர்.

நச்சினார்க்கினியரும் சிலவற்றை மேற்கோள் காட்டி யுள்ளார். பொருநராற்றுப்படையின் கீழுள்ள 'ஏரியும்' என்ற வெண்பாவைப் புறத்திணையியலிலும் (31), 'முச்சக்கரமும்' என்ற வெண்பாவை, பொருநராற்றுப்படை உரையிலும் (148 அடிக்கு மேற்கோள்), மலைபடுகடாம் பாடலின் கீழுள்ள 'தூஉத்

தீம்புகை' என்ற வெண்பாவை நுன்மரபிலும் (6) மேற்கோளாகத் தந்துள்ளனர்.

யாப்பருங்கல விருத்தி யுரையாசிரியரும், (எழுத்–4), பேராசிரியரும் (செய்-62) 'தூஉஉத்தீம்புகை' என்ற வெண்பாவைக் காட்டியுள்ளனர்.

எனவே, இவ் வெண்பாக்கள் பழமையானவை என்பதில் ஐயமில்லை. ஆனால், திருமுருகாற்றுப் படையின் கீழே உள்ள வெண்பாக்கள் பத்தும், பத்துப்பாட்டு ஏட்டுப் பிரதிகளில், காணப்படாமல் திருமுருகாற்றுப்படை மட்டும் இருந்த புதிய ஏட்டுப் பிரதிகளில் இருந்தன என்று டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் கூறுகின்றார். ஏழாம் வெண்பா, 'ஒருகை முகன் தம்பியே' என்று முருகனை விளிக்கின்றது. விநாயகர் தமிழகத்திற்கு வந்தது ஏழாம் நூற்றாண்டு ஆதலின் அவ்வெண்பாக்கள் தோன்றிய காலத்தை அறியலாம்.

பெரும்பான்மையான வெண்பாக்கள் பழமையானவையாக இருந்தும் அவற்றிற்கு நச்சினார்க்கினியர் உரை இல்லை. அவ்வெண்பாக்களை நச்சினார்க்கினியர் உரை எழுதி முடித்தபின் யாரேனும் சேர்த்தனரா? அல்லது அவை பத்துப்பாட்டு இயற்றிய பழம்புலவர்கள் இயற்றியவை அல்ல என்று கருதி நச்சினார்க்கினியரே உரை எழுதாமல் விட்டாரா?

இவ்வினாக்களுக்கு விடை எளிதில் கிடைக்கவில்லை!

## 5. கலித்தொகை உரை

கலித்தொகைஉரை, பல சிறப்பியல்புகளைக் கொண்டதாகும். ஆராய்ச்சிக்குத் திறவுகோலாய் உதவும் பல அரிய குறிப்புகளை அதில் காணலாம்.

கலிப்பாட்டு ஒவ்வொன்றிலும் நச்சினார்க்கினியரின் நுண்மாண் நுழைபுலம் வெளிப்பட்டு ஒளிர்கிறது. பாட்டில் அமைந்துள்ள உள்ளுறை உவமம், ஏனை உவமம், இறைச்சிப் பொருள் ஆகியவற்றைத் திணைக்கு ஏற்ப ஆராய்ந்து கூறுகின்றார்; பாட்டின் துறையை விளக்கிப் பொருள் எழுதுகின்றார்; வினைமுடிபுகளை முடித்துக் காட்டுகின்றார்; பாட்டில் அமைந்து கிடக்கும் மெய்ப்பாட்டை இனிது வெளிப்படுத்துகின்றார்; இவற்றோடு கலிப்பாட்டின் வகையைக் கூறுகின்றார்.

கலித்தொகை உரையின் சிறப்பியல்புகளை எல்லாம் நுணுகி ஆராய்ந்து சிறப்புப் பாயிரம் கூறுகின்றது:

கலித்தொகைக் கருத்தினைக் காட்சியிற் கண்டுஅதற்கு
உள்ளுறை உவமமும், ஏனை உவமமும்,
தெள்ளிதின் தெரிந்து திணைப்பொருட்கு ஏற்ப
உள்ளுறை உவமத்து ஒளித்த பொருளைக்
கொள்பவர் கொள்ளக் குறிப்பறிந்து உணர்த்தி;
இறைச்சிப் பொருளுக்கு எய்தும் வகையைத்
திறப்படத் தெரிந்து சீர்பெறக் கொளீஇ,
துறைப்படு பொருளொடு சொற்பொருள் விளக்கி;
முறைப்பட வினையை முடித்துக் காட்டி;
பாட்டிடை மெய்ப்பாடு பாங்குறத் தெரித்து;
பாற்பட நூலின் யாப்புற உரைத்த
நாற்பெயர் பெயரா நடப்பக் கிடத்திப்
போற்ற இன்னுரை பொருள்பெற விரும்பியும்

என்று நச்சினார்க்கினியரின் உரைநலம் நன்கு ஆராய்ந்து கூறப் பட்டுள்ளது.

செய்யுளியல் உரையில், "நூற்றைம்பது கலியுள்ளும் ஒத்தாழிசைக் கலி அறுபத்துஎட்டு வந்தது" (செய்-130) என்றும், "நூற்றைம்பது கலியுள் கலிவெண்பாட்டு எட்டு" (செய்-153) என்றும் கலித்தொகைப் பாடல்களின் இனத்தைக் கணக்கிட்டுக் கூறுகின்றார்.

கலித்தொகைப் பாடல்களை இயற்றிய புலவர்களைப் பற்றி ஆராய்ச்சி உலகம் பல்வேறு கருத்துக்களை வெளியிட்டுள்ளது. நச்சினார்க்கினியர் உரை, ஆராய்ச்சி உலகிற்கு ஒளிதந்து உதவு கின்றது. தோற்றுவாயில், "ஈண்டுப் பாலைத்திணையையும் திணையாக ஆசிரியர் நல்லந்துவனார் **கோத்தார்** என்று கூறுக" என்றும், நூலின் இறுதியில், "பாலை குறிஞ்சி மருதம் முல்லை நெய்தல் என இம்முறையே **கோத்தார்** நல்லந்துவனார்" என்றும் கூறுகின்றார். 'கோத்தல்' என்ற சொல்லை, நச்சினார்க்கினியர், (பிறர் செய்த செய்யுளைத்) தொகுத்தல் என்னும் பொருளில் ஆண்டுள்ளார். "இவர் (பெருங்கௌசிகனார்) செய்த செய்யுளை (மலைபடுகடாம்) நல்லிசைப் புலவர் செய்த ஏனைச் செய்யுட் களுடன் சங்கத்தார் **கோவாமல்** நீக்குவர்; அங்ஙனம் நீக்காது கோத் தற்குக் காரணம் "(மலைபடு-145) என்ற இடத்தில் கோத்தல் என்ற சொல்லைத் தொகுத்தல் என்ற பொருளிலேயே ஆண்டுள்ளார். ஆதலின் கலித்தொகையைத் தொகைநூல் என்றும், நல்லந்துவனாரே அதனைத் தொகுத்தவர் என்றும் கருதுகின்றார் என்பது தெரிகின்றது.

நெய்தற்கலியை இயற்றியவர் நல்லந்துவனார் என்பது நச்சினார்க்கினியர் (25) "தம் பேரறிவு தோன்ற ஆசிரியர் நல்லந்துவனார் செய்யுள்செய்தார்" என்று கூறுவதால் உணரலாம்.

ஆனால், ஏனைய பகுதிகளில் அவற்றை இயற்றிய ஆசிரியர் பெயர் எதுவும் எங்கும் குறிப்பிடவில்லை. இதனை ஆராய்ச்சி உலகம் நினைவில்கொண்டு உண்மை காணமுயல வேண்டும்.

## துறை விளக்கம்

அகத்திணைத் துறைகளையும் கூற்றுகளையும் மிக விரிவாகத் தொல்காப்பியத்தின் துணைகொண்டு ஆராய்கின்றார்.

நெய்தற்கலியில் 'புரிவுண்ட புணர்ச்சியுள்' (25) என்னும் பாடலின் துறைபற்றிய விளக்கம் மிக விரிவானது.

இவ்வாறே குறிஞ்சிக்கலியில் முதற்பாட்டும் இறுதிப் பாட்டும், இவர் விளக்கத்தால் அவற்றிற்குரிய துறைகள் சிறந்த விளக்கம் பெறுகின்றன.

## நாடக நோக்கு

கலித்தொகைப் பாடல்கள் நாடகப்போக்கில் அமைந் துள்ளன. ஒவ்வொரு பாடலும் ஓரங்க நாடகமாய் உள்ளது. தொடங்கி வளர்ந்து சிக்கல் அடைந்து, முடியும் நாடகத்தின் பல்வேறு இயல்புகள், கலிப்பாடல்களில் உண்டு. கதை நிகழ்ச்சி இடம் உரையாடல் நாடக உறுப்பினரின் பல்வேறுவகையான பண்பு ஆகியவற்றை அவற்றில் காணலாம். முல்லைக் கலியிலும், குறிஞ்சிக் கலியிலும் பல சிறந்த ஓரங்க நாடகங்கள் இடம் பெற்றுள்ளன.

நச்சினார்க்கினியர் சிறந்த நாடக ஆசிரியரைப் போல அப் பாடல்களின் அமைப்பை நுணுகி ஆராய்ந்து நாடகப் போக்கில் அரிய உரை எழுதுகின்றார். இவரது நாடக நோக்கு நமக்கு வியப் பளிக்கின்றது.

## உவமை விளக்கம்

உவமையின் சிறப்பை ஆராய்ந்து, பொருளோடு பொருத்திக் காட்டுவதில் இவர் வல்லவர். உதாரணத்திற்கு ஓர் உவமை விளக்கத்தைக் காண்போம்.

**... இன நாரை,**
**முக்கோல்கொள் அந்தணர் முதுமொழி நினைவார்போல்**
**எக்கர்மேல் இறை கொள்ளும் (கலி–126)**

**உரை:** "அந்தணர்—காசாயம் போர்த்த குழாங்கள்". (முதுமொழி — பிரணவம்.)

"பெரிய நாரை சிறகு சிவந்திருத்தலானும் மூக்குத் தரையிலே சென்று குத்தலானும் அதனை முக்கோலை ஊன்றி இருந்த அந்தணரொடு ஒப்புரைத்தார்."

**உரைநயம்**

பல நயமான பகுதிகள் உரைமுழுதும் உள்ளன. கீழே சிலவற்றைக் காண்போம்.

1. கொடுங் கொட்டி: கொடு கொட்டி என விகாரமாயிற்று. கொடுங் கொட்டி என்றார், (சிவபெருமான்) எல்லாவற்றையும் அழித்து நின்று ஆடுதலின்.

8. முக்கோல் (அந்தணர்); அரி அயன் அரன் என்னும் மூவரும் ஒருவர் என்று சொல்லுதல் தன்னிடத்தே அமைந்த கோல்; காணேம் அல்லேம் கண்டனம் என்றதனால் அங்ஙனம் போகின்றவரை அறிந்து விலக்கல் அறம் அன்று என்று போந்தேம் ஆகக் கொள்க.

37. உண்கண்; மை யுண் கண்.

40. உலக்கை வயின் வயின் ஓச்சி: உலக்கையை என்னிடத்தும் நின்னிடத்தும் உயர்த்தி.

50. நல் கூர்ந்தார் செல்வமகள்: பிள்ளையான் மிடிப் பட்டாருடைய செல்வத்தை உடைய மகள்.

108. 'கட்குத்திக் கள்வன்' என்றது விழித்திருக்க மிண்டையைக் கொள்வான் என்னும் பழமொழி.

115. குடம் சுட்டும் நல்லினம்-இன்னதனைக் குடம் பால் போதும் என்று கருதப்படும் பசு இனம்.

129. "தொல்லூழி தடுமாறி, தொகல்வேண்டும் பருவத்தால் பல்வயின் உயிரெல்லாம் படைத்தான்கண் பெயர்ப்பான் போல்',

"பல உலகங்களில் உயிர்கள் எல்லாம் பழையதாகிய ஊழிக் காலத்தே பிறந்து இறந்து திரியும்படி, அயனாய்நின்று படைத்த முதல்வன் அரனாய் அவ்வுயிர் எல்லாம் தன்னிடத்தே வந்து தொகுதலைத் தான் விரும்பும் ஊழி முடிந்த காலத்திலே தன்னிடத்தே மீட்டு ஒடுக்கிக் கொள்கின்றவனைப்போல"

133. பொறை எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல் - "பொறை என்று சொல்லப்படுவது, பகைவரைக் காலம் வரும் அளவும் பொறுத்திருத்தலை".

**சொல்லும் பொருளும்**

சிறைப் படுத்தியது என்ற பொருளில், 'சிறைத்தது' என்ற சொல்லை ஆளுகின்றார் (82). சில அரிய சொற்களுக்கு ஆங்காங்கே பொருளும் எழுதியுள்ளார்:

33. ஈர் - ஈர்க்குமரம்.

75. அஞ்சி அச்சுறுத்தலும் என்றாற்போல 'அச்சு' என விகாரமாய் நின்றது.

84. பரத்தைமை, பரத்தை என நின்றது; 'தன் வயின் உரிமையும் அவன் வயிற் பரத்தையும்' என்றார் ஆசிரியர் ஆகலின்.

91. கண்ணி - தலைமாலை.

94. 'நடுவுயர்ந்து' என்றது, நோன்புயர்ந்தது என்றாற் போல நின்றது.

# 6. பல்கலைப் புலமை

நச்சினார்க்கினியர், நூலறிவோடு நுண்ணறிவு உடையவர். பலவேறு கலைகளைக் கற்றுத் துறைபோகிய வித்தகர். பாட்டிற்குச் சொற்பொருள் கண்டு உரை எழுதுவதோடு இவர் நிற்கவில்லை. நூலில் இடம்பெறும் சமயக் கருத்து இசை நாடகம் முதலிய கலைகளைப் பற்றிய அறிவு, ஆடை அணிபற்றிய நுண்ணிய விளக்கம், உலகிலுள்ள பலஇனத்து மக்களின் பழக்க வழக்கம் பண்பாடு ஆகியவற்றை அறிந்தவர். வடமொழியும் நன்கு பயின்றவர். தமிழில் உள்ள இலக்கணம், இலக்கியம், நிகண்டு, காவியம், புராணம் ஆகியவற்றை நன்கு கற்றவர். சோதிடம், மருத்துவம் பற்றியும் கட்டடக்கலை பற்றியும் போதிய அறிவு இவரிடம் உண்டு. பயிர்வகையும் உயிர்வகையும் நன்கு அறிந்துள்ளார்.

இவர் அறிந்துள்ள பலவேறு கலைத்துறைகளை விரிவாகக் காண்போம்.

## இலக்கியப் புலமை

நச்சினார்க்கினியர் தாம் உரை எழுத மேற்கொண்ட இலக்கியங்களைப் பலமுறை நுணுகிக் கற்றுப்புலமை பெற்றவர். எண்பதுக்கு மேற்பட்ட நூல்களிலிருந்து பல எடுத்துக்காட்டுகளை இவர் தந்துள்ளார். இவற்றோடு இலக்கணம், நிகண்டு முதலியவற்றிலும் இவர் சிறந்த பயிற்சி யுள்ளவர். வடமொழி யிலுள்ள பலவகை நூல்களை அறிந்தவர்.

திருமுருகாற்றுப்படை உரையில் (63, 102) திருவாசகப் பாடல்கள் இரண்டினை மேற்கோள் காட்டியுள்ளார். செய்யுளியல் உரையில் திருவாய்மொழி முதலியவற்றைக் குறிப்பிடுகின்றார்.

"திருவாய்மொழி, திருப்பாட்டு, திருவாசகம் என்கின்ற கொச்சக ஒரு போகுகளில் காண்க (செய் - 149)

திருவெம்பாவை எட்டடியான் வந்து, இவ்வாறு இற்றன. (செய் - 149).

திருவுலாப் (ஆதி உலா) புறத்துள்ளும் வாமான ஈசன் வரும் என முடித்து" (செய் -160).

பிற்காலத்தில் தோன்றிய சிற்றிலக்கியங்களாகிய பிள்ளைத் தமிழ், உலாச்செய்யுள், கலம்பகம் ஆகியவற்றை நன்கு அறிந்துள்ளார் (புறத் - 29, செய் - 239).

## வடமொழிப் புலமையும் சமயநூல் அறிவும்

நச்சினார்க்கினியர் வடமொழியில் உள்ள கீதையைத் தம் உரையில்,

"கண்ணன் எப்பொருளும் தானாய் இருக்கின்ற படியைக் காட்டி ஸ்ரீகீதை அருளிச் செய்து எல்லாரையும் போதித்தாற் போல' (மதுரைக் - 763) என்று குறிப்பிடுகின்றார்.

வேள்வி செய்வதற்குரிய முறை, பொருள், சடங்கு ஆகிய வற்றைச் சீவக சிந்தாமணியில் இலக்கணையார் இலம்பகத்தில் (2462, - 68) தெளிவாக விளக்குகின்றார்.

பத்துப்பாட்டில் (முருகு-180) முத்தீ என்பதனை 'ஆகவனீயம் தக்கிணாக்கினி, காருகபத்தியம்' என்று கூறுகின்றார்.

நான்மறை, ஆறங்கம் எவை எவை என்பதைப் பல இடங் களில் தெளிவுபடுத்துகின்றார், (தொல்-பாயிரம்; கலி-1. புறத்-20.)

அந்தணர் முதலிய சொற்களுக்கு, பொருள் பின் வருமாறு உரைக்கின்றார்:

"அந்தத்தை அணவுவார் அந்தணர்; என்றது வேதாந் தத்தையே நோக்குவார் (முருகு-96, கலித்-1).

"வேதாந்தத்தை எக்காலமும் பார்ப்பார் (மதுரை-474).

இருபிறப்பாளர்—உபநயனத்துக்கு முன்பு ஒரு பிறப்பும், பின்பு ஒரு பிறப்புமாகிய இருபிறப்பினையும் உடைய அந்தணர் (முருகு-182).

கந்தழி—ஒரு பற்றுக்கோடின்றி அருவாகித் தானே நிற்கும் தத்துவம் கடந்த பொருள்.

நச்சினார்க்கினியர் தம் சமயப்புலமையும் கொள்கையும் வெளிப்படும் வகையில் உரை எழுதும் இடங்களில் சில:

உலகம் உவப்ப — சீவான்மாக்கள் உவப்ப (முருகு-1)

பெரியோர் மேஎய்—சீவன் முத்தராய் இருப்பார் இடத்தே சிலகாலம் பொருந்தி நின்று (மதுரை-473).

நின் என்றது சீவான்மாவை; நின் அவலம் கெடுக — நின்னிடத்து உண்டாகிய மாயை இனிக் கெடுவதாக (207-8). இத்தகைய இடங்களில், நச்சினார்க்கினியர் தம் சமயக் கொள்கையை வெளிப்படுத்தியுள்ளார்.

## நிலநூல் அறிவு

சங்க இலக்கியங்களில் கூறப்படும் ஊரும், நாடும், ஆறும், மலையும் பலவாகும். அவை இன்று எங்கெங்கே உள்ளன என்று அறிந்து கொள்வது சங்க இலக்கியப் பயிற்சிக்குப் பெரிதும் துணை செய்யும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட இடங்களின் பெயரை நாம் இன்று அறிந்து இன்புறத் துணை செய்கின்றார் நச்சினார்க்கினியர்.

பட்டினப்பாலை குறிப்பிடும் ‘காழகம்’ என்பதனை (பட்-19) கடாரம் என்றும்; திருமுருகாற்றுப்படையில் வரும் ‘ஏரகம்’ என்பதனை (முருகு-189) மலைநாட்டகத்து ஒரு திருப்பதி என்றும்; சிறுபாணாற்றுப்படை குறிக்கும் ‘மதிலொடு பெயரிய பட்டினம்’ என்பதனை (சிறுபாண்-153) எயிற்பட்டினம் என்றும் அறிந்து எழுதுவது போற்றத்தக்கதாகும்.

மலைபடுகடாம் குறிப்பிடும் ‘சேயாறு’ என்பதைச் “சேயாறு -அவ்வியாற்றின் பெயர்” (மலைபடு-476) என்று கூறித் தம் நில நூல் அறிவைப் புலப்படுத்துகின்றார்.

## கலைகள்

இசை, நாடகம் முதலிய கலைகளைப்பற்றி ஆராய்ந் துள்ளார். “பாட்டு காமத்தை விளைவித்தலின், யாழை வாசித்து” என்று இவர் கூறுவது கருதத் தக்கது (மதுரை-558).

பத்துப்பாட்டில் வரும் யாழ் என்னும் பண்டை இசைக் கருவியின் நுட்பங்களை எல்லாம் இவர் நன்கு தெரிந்து விளக்குகின்றார். இவரது விளக்கம் இன்றேல் நாம் யாழ்க்கருவி பற்றிய பல செய்திகளை அறிந்திருக்க முடியாது. யாழின்தோற்றம், உறுப்புகளின் அமைப்பு, அளவு ஆகியவற்றோடு அவை செய்தற்குரிய மரங்களையும் இவர் கூறுகின்றார். (பொருந-22). இசைகளின் பெயர்களையும் குறிப்பிடுகின்றார்.

துணங்கை முதலிய கூத்து வகைகளை இவர் நன்கு விளக்கு கின்றார். திருமுருகாற்றுப்படை உரையில், (56)

**பழுப்புடை இருகை முயக்கி அடிக்க,**
**துடங்கிய நடையது துணங்கை யாகும்**

என்று துணங்கைக் கூத்தை விளக்குகின்றார்.

ஆடுமகளிராகிய விறலியரை 'விறல்பட (மெய்ப்பாடு தோன்ற) ஆடுதலையுடையார்' என்று விளக்கி அறிமுகப் படுத்துகின்றார் (மதுரை-218).

பாணர், கூத்தர் ஆகிய கலைஞர்களைப் பற்றி இவர் பின்வருமாறு கூறுகின்றார்:

"பாணரும், இசைப்பாணரும் யாழ்ப்பாணரும், மண்டைப் பாணரும் எனப் பலராம். பொருநரும் ஏர்க்களம் பாடுநரும் போர்க்களம் பாடுநரும் பரணி பாடுநரும் எனப் பலராம்" (புறத்-36).

"கூத்தர்—நாட்க சாலையர். தொன்றுபட்ட நன்றும் தீதும் கற்றறிந்தவற்றை அவைக்கு எல்லாம் அறியக் காட்டுதற்கு உரியர்" (கற்-27)

"ஆடல் தொழிற்கு உரியோரும் பாரதி விருத்தியும் விலக்கியற் கூத்தும் கானக் கூத்தும் கழாய்க் கூத்தும் ஆடுபவர்" (புறத்-36).

நாடகத்திற்கு இவர் தரும் விளக்கம் மிகவும் சிறப்பு வாய்ந்தது. அகத்திணையியலில் (3) "யாதானும் ஓரோவழி ஒரு சாரார்மாட்டு உலகியலான் நிகழும் ஒழுக்கத்தினை எல்லார்க்கும் பொதுவாக்கி இடமும் காலமும் நியமித்துச் செய்யுள் செய்தல்" என்பது இவர் தரும் விளக்கம்.

சங்க காலத்தில் மகளிர் அணிந்த பலவகை அணிகளை நச்சினார்க்கினியர் நன்கு அறிந்து விளக்குகின்றார். அணிகளைப் பற்றி இவர் தரும் விளக்கங்களைப் பத்துப்பாட்டிலும் (முருகு-16, 84) மருதக் கலியினும் (20) கண்டு மகிழலாம். தமிழர் நாகரிகத்தை அறிய விரும்புவர்க்கு இவரது விளக்கம் பெரிதும் உதவும்.

வீட்டின் பல்வேறு பகுதிகளை 'மண்டபம் கூடம் தாயக் கட்டு அடுக்களை' என்று விளக்குகின்றார். (மதுரை-358).

சமயைல் கலையிலும் இவரது நாட்டம் சென்றுள்ளது. 'தீம்புளி' என்பதனைக் கருப்புக் கட்டி கூட்டிப் பொரித்த புளி' என்று (மதுரை-318) விளக்குகின்றார். ஊறுகாயைச் சங்க நூல்கள் 'காடி' என்று குறிப்பிடுகின்றன. நச்சினார்க்கினியர் "ஊறுகறி" என்றும், 'புளியங்காய் நெல்லிக்காய் முதலியன ஊறவிட்டு வைத்தவை' என்றும் கூறுகின்றார். (பெரும்-310, 57).

மருத்துவம், சோதிடம் முதலியவற்றில் இவர்க்குப் புலமை உண்டு என்பதை, நெடுநல் வாடை (72-5) பதுமையார் இலம்பகம் (1280-90) ஆகியவற்றின் உரைகளால் அறியலாம்.

2.20.

## வாழ்வியல்

உலகம் பலவகை என்பது பழமொழி. இந்த உலகில் எத்தனையோ வகையான மக்கள் வாழ்கின்றனர். அம் மக்களின் வாழ்க்கையில் எத்தனையோ பழக்கவழக்கங்கள், மேடு பள்ளங்கள் உள்ளன. நச்சினார்க்கினியர் அந்தண குலத்தில் பிறந்து, தம் குலத்துப் பழக்கவழக்கங்களைப் போற்றி வாழ்ந்தவர்; எனினும் அவர் தம் காலத்து மக்களின் வாழ்க்கையை நுணுகி ஆராய்ந்து பல செய்திகளைத் தெரிந்து கொண்டிருக்கின்றார்.

நிலம் உழுது பயிர்செய்யும் உழவர் பேச்சை, "ஒரு சால் இரு சால் என்றல் உழவுத் தொழிற்கு மரபு" (பெரும்-197) என்று நச்சினார்க்கினியர் குறிப்பிடுகின்றார்.

பெரும்பாணாற்றுப்படையில், முற்காலத்தில் தமிழ் நாடெங்கும் நடமாடிய வண்டியின் தோற்றமும் அதன் பல்வேறு உறுப்புக்களும், தெளிவாக விளக்கப்பட்டுள்ளன (45-50). நச்சினார்க்கினியர், வண்டியின் ஒவ்வொரு உறுப்பையும் நன்கு அறிந்து, அவற்றின் பெயர்களைப் பொருள் அறிந்து விளக்கு கின்றார்.

குறிஞ்சி நிலத்தில் தினைப்புனம் காக்கும் வேட்டுவ மகளிர் கிளிகளை விரட்டத் தட்டை என்னும் ஒரு கருவியை வைத் திருந்தனர் என்று குறிஞ்சிப்பாட்டு குறிப்பிடுகின்றது (43).

தட்டை என்பதை "மூங்கிலைக் கண்ணுக்குக் கண் உள்ளாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவதோர் கருவி" என்று இவர் விளக்குகின்றார்.

முல்லை நிலத்தில் ஆடு மாடு மேய்க்கும் இடையர் தோற்றத்தைப் பெரும்பாணாற்றுப்படை ஓவியம் தீட்டியுள்ளது (169-175). நச்சினார்க்கினியர் இடையரின் உடை, பழக்கவழக்கம் ஆகியவற்றை உணர்ந்து இப் பகுதிக்கு உரை எழுதுகின்றார்.

மதுரைநகர்த் தெருவில், வெற்றிலைபாக்கு விற்போரை,

**தகைசெய் தீஞ்சேற்று இன்னீர்ப் பசுங்காய்**
**நீடு கொடி இலையினர் (400, 401)**

என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது. நச்சினார்க்கினியர் "உடம்பிற்கு அழகைக் கொடுக்கும் இனிய கருங்காலி சீவிக் காய்ச்சின களிக்கலந்த இனிய நீரினையுடைய பசியபாக்கு" என்று பாக்கு வேகவைத்துப் பக்குவப்படுத்தும் முறையினை அறிந்து எழுதுகின்றார்.

யானைப்பாகர், "யானைப் பேச்சான வடமொழி கற்று, அப்புது அப்புது, ஆது ஆது, ஐ ஐ என்று கூறி யானையை ஓட்டுபவர்" என்று இவர் கூறுகின்றார் (முல்லை-36, சீவக-1834).

அந்தணராகிய நச்சினார்க்கினியர், எளிய மக்கள் உண்ணும் புலால் முதலிய உணவு வகைகளையும் தெளிவாக அறிந்திருப்பது நமக்கு வியப்பைத் தருகின்றது.

சிறுபாணாற்றுப்படை குறிப்பிடும் 'அலவன் கலவை' (195) என்பதனை, ஞெண்டும் பீர்க்கங்காயும் கலந்த கலப்பு' என்று எழுதுகின்றார். பெரும்பாணாற்றுப்படை கூறும் 'வாடு ஊன்' என்பதற்கு (100) உப்புக்கண்டம் என்றும், மதுரைக் காஞ்சியில் வரும் (320). 'கொழுமீன் குறைஇய துடிக்கண் துணியல்' என்பதற்குக் 'கருவாடு' என்றும் பொருள் கூறுகின்றார்.

**உயிரியல்**

விலங்கு, பறவை முதலிய உயிர்களைப் பற்றியும் நச்சினார்க்கினியர் அறிந்துள்ளார். அவ்வுயிர்களின் தோற்றம் பழக்க வழக்கம், உணவு, உறையுள் ஆகியவற்றையும் உரையில் கூறுகின்றார்.

முல்லைப்பாட்டு, யானைக்கு 'இன்குளகு' தந்ததாய்க் குறிப்பிடுகின்றது. (33) அதிமதுரத் தழை என்று இவர் யானைக்கு விருப்பமான தழையினைக் கூறுகின்றார்.

மருதக்கலிப் பாடலில் (31) குதிரைக்கு உரிய பலவகை அணிகள் கூறப்படுகின்றன. இவர் அவற்றின் வடிவம், அணி விக்கும் முறை, அணிய வேண்டிய உறுப்பு ஆகியவற்றை நன்கு அறிந்து விளக்குகின்றார். (கலி.96, 7-21). மதுரைக்காஞ்சியுள் குதிரைக்கு ஐந்து கதியும் பதினெட்டுச் சாரியும் கற்பிக்கப்படும் என்கின்றார் (389).

மக்கள் வளர்க்கும் பன்றியைப் பற்றிய குறிப்பு ஒன்று பெரும் பாணாற்றுப்படையில் வருகின்றது (339 344). ஊனுக்காக வளர்க்கப்படும் ஆண்பன்றி, பெண்பன்றிகளுடன் புணர்ச்சிக்குச் சேராது என்று அப் பாடல் குறிப்பிடுகின்றது. (ஆண்பன்றி பெண்பன்றியைப்) "புணரின் கொழுப்பு இன்றாம்" என்பது இவரது விளக்கம்.

அன்னப் பறவைகளில் கறுப்புநிற அன்னமும், வெள்ளை நிற அன்னமும் உண்டு என்று கூறுகின்றார் (சீவக 930; பெரும்: 317). அன்னப் பறவை தாவிப்பறக்கும் என்றும் அறிந்துள்ளார் (நெடுநல்-91.)

பாம்புகளின் இயல்பறிந்து இவர் எழுதும் இடங்கள் பல உள்ளன. மலைப்பாம்பு பாந்தள் (குறிஞ்-259) எனப்படும். இதனை இவர், பெரும்பாம்பு என்கின்றார். இரவில் பாம்பு இரை தேடும் போது, தன்னிடம் உள்ள மாணிக்கத்தை உமிழும் என்று கூறுகின்றார். (குறிஞ்-221). பாம்புகள் பழைய மரப் பொந்துகளில் வாழும் என்பதை இவர் அறிந்துள்ளார் (பெரும்-232).

கடலில் வாழும் மீன்களில் 'பனைமீன்' என்பது மிகவும் பெரியது. அது ஒளிமிக உடையது. அந்த மீனைப் பற்றி நன்கு அறிந்து மதுரைக் காஞ்சியில் (375) பனைமீன் வழங்கும் வளைமேய் பரப்பின், என்பதற்கு 'பனை மீன் என்னும் சோதி உலாவும் சங்கு மேய்கின்ற கடலிடத்தே' என்று விளக்குகின்றார்.

**பயிரியல்**

தமிழ்நாட்டில் உள்ள பயிர்வகைகளைப் பற்றிய அறிவு இவர்க்கு உண்டு.

சுவை மிகுதியாக உடைய பலாப்பழத்தில் சுளைகள் மிகுதி யாக இருப்பதில்லை. என்றும் (பெரும் 78), தேங்காய் பழுத்தால், அதன் அடிப்பகுதி மூன்றாகப் புடைத்து இருக்கும் என்றும் (பெரும்.364) இவர் அறிந்திருக்கின்றார்.

நறைக்காய் என்பதற்கு 'நறு நாற்றத்தை உடைய காய்; அது சாதிக்காய்' என்றும் (முருகு-190), யாமரம்-ஆச்சாமரம் என்றும் (மலைபடு. 429) இவர் கூறுவது இன்றும் நாம் அவற்றை அறிந்து கொள்ளத் துணை செய்கின்றது.

கண்பு என்பதற்குச் சண்பங்கோரை என்று பொருள் எழுதி இன்றும் நாம் அதனைக் கண்டுமகிழத் துணை செய்கின்றார் (பொருந-220).

**அகராதிக் கலைஞர்**

இவர் சிறந்ததோர் அகராதிக் கலைஞர். பெரிய தமிழ் அகராதி ஒன்றை உருவாக்கவல்ல புலமைத் திறனும் சொல்லா ராய்ச்சியும் சொற்களஞ்சியமும் இவரிடம் உண்டு. விலங்கு, பறவை, மரஞ்செடிகள், மக்களால் ஆக்கப்பட்ட செயற்கைப் பொருள் ஆகிய பல்வேறு பொருள்களைப்பற்றிய சொற்களையும், ஒரு பொருளைப்பற்றிய பல சொற்களையும் பல பொருளைக் குறித்த ஒரு சொல்லையும் இவர் நன்கு அறிந்துள்ளார்.

பத்துப்பாட்டில் வரும் 'அரி' என்ற சொல்லுக்கு இவர் பலவேறு பொருள்களை இடம்நோக்கிக் கூறுகின்றார். அவற்றைக் காண்போம்.

அஞ்சிறை வண்டின் **அரிக்** கணம் (முருகு-76) அரி அழகு.

பலர்புகழ் மூவரும் (முருகு-162). அயன் **அரி** அரன் என்னும் மூவரும் (திருமால்).

**அரி**மயிர் முன்கை (பொருந-32) அரி-ஐம்மை (மென்மை).

**அரி** ஏர் உண்கண் (சிறுபாண்-215) அரி-செவ்வரி (கோடு)

**அரி** செத்து உணங்கிய (பெரும்பாண்-473) அரி-ஞாயிறு.

**அரி** தேர் நல்கி (பெரும்பாண்-490) அரி-பொன்.

வன்கை வினைஞர் **அரி** பறை (மதுரைக்-262) அரித்து எழுகின்ற பறையோசை. அரி - அரித்தல்.

**அரி** பொன் சிலம்பு (மதுரைக்-444) அரி-சிலம்பின் உள்ளே இடும் மணி.

**அரி** ஞிமிறு ஆர்ப்ப (மதுரைக்-684) அரி-வண்டு.

**அரி** மா அன்ன (பட்டினப்-298) அரி-சிங்கம்.

நெல்லின் பல **அரி** அன்ன (மலைபடு 413) அரி-அரிசி

வெள்**ளரி** வெண் சோறு (மலைபடு-465) அரி-மாமிசத் துண்டு.

அறைக் கரும்பின் **அரி** நெல்லின் (பொருந-193) அரி-அறுத்தல்

கணச் சிதல் **அரித்த** (சிறுபாண்-133) அரித்த-தின்ற.

இவ்வாறு நச்சினார்க்கினியர் அரி என்ற சொல்லுக்கு அழகு, திருமால், மென்மை, கோடு, ஞாயிறு, பொன், அரித்தல், மணி, வண்டு, சிங்கம், அரிசி, மாமிசத் துண்டு, அறுத்தல், தின்னல் ஆகிய பல பொருள்களைத் தருகின்றார். இத்தகைய சொற் செல்வம் மிகுந்த நச்சினார்க்கினியரை அகராதிக் கலைஞர் என்னலாம்.

நோக்கு என்ற சொல்லுக்கு நச்சினார்க்கினியர் பார்வை, அறிவு, அழகு, கண் முதலிய பொருள்களை இடத்திற்கு ஏற்ற வகையில் கூறுகின்றார்.

மான் நோக்கின் (பட்-149)—மான் போலும் பார்வை.

நுழைந்த நோக்கின் கண்ணுள் வினைஞர் (மதுரைக் 17, 18). — கூரிய அறிவினையுடைய சித்திரகாரிகள்.

நோக்கு விளங்க (மதுரைக்-13)—அழகு விளங்க.

நோக்கு விசை (மதுரைக்-486)—கண்பார்க்கும் விசை.

## மக்கள் வாழ்வும் பண்பாடும்

நச்சினார்க்கினியரின் உரையைக் கொண்டு அவர் காலத்து மக்கள் வாழ்வையும் பண்பாட்டையும் அறிய முடிகின்றது.

இவர் காலத்தில் குமரக் கோட்டம், பிரமக் கோட்டம் ஆகிய கோயில்கள் இருந்தன. ஆசீவகப்பள்ளியும், நிக்கந்தக் கோட்டமும் இருந்தன. (எழுத். (153), நூற்றுக்கால் மண்டபம் இருந்தது (எழுத். 472). சிவன் கோயில்களில் இருந்த தெய்வங்களை இவர்காலத்து மக்கள் நாயன்மார் என்று வழங்கினர் (மதுரைக்-445). கோயில்களிலும் செல்வர் மனைகளிலும் பொன்அகலும் நெய்யகலும் சுடர்விட்டன (எழுத். 160). கார்த்திகைத் திங்களில் கார்த்திகை நாளில் விளக்குகள் ஏற்றப்பட்டன. (புறத்-35). மக்கள் அமாவசையன்று உண்ணாநோன்பு இருந்தனர் (எழுத். —223).

பிணத்தைக் குடங்களில் இட்டுப் புதைத்தனர் (எழுத்.-354).

தமிழ் நூல், தமிழ் யாழ் (எழுத்.—128), தமிழ்க் கூத்து (385), இராஅக் கூத்து (227) என்ற உதாரணங்கள் அக்காலத்துக் கலைகளை நினைவூட்டுகின்றன.

ஆண் பெண் ஆகிய இருபாலரும் உடுத்தும் உடையைப் புடவை என்ற சொல்லால் இவர் காலத்து மக்கள் வழங்கினர் (மதுரைக்-513).

செல்வம் படைத்த மக்கள் கோவேறு கழுதைமீதும், சிவிகையிலும் சென்றனர் (பொருளதி-212).

இவர் காலத்தில் வழுதுணங்காயும் (கத்தரிக்காய்) முந்திரிகைப்பழமும்* தமிழகத்தில் பயிராயின (மதுரை—529). புளியங்காயும் நெல்லிக்காயும் ஊறுகாயாகப் போட்டுப் பயன் படுத்தப்பட்டன (பெரும்.—57).

போர்க்காலத்தில் அம்பும் பிறவகைக் கருவியும் பயன் பட்டன. ஏஎக்கொட்டில், சாலை, துளை, புழை (எழுத்.—277) என்ற உதாரணங்கள் நினைக்கத்தக்கவை. குதிரையை வீரர்கள் மத்திகையால் (சாட்டை) அடித்து ஓட்டினர் (எழுத்.—(202): போரில் அம்பு ஏறியும், வேல் குத்தியும் வடுப்பட்ட வீரர்கள் அவ் வடுக்களை “இஃது ஓர் ஏறு; இஃது ஓர் குத்து” என்று சுட்டிக் காட்டிப் பெருமையோடு பேசினர் (சொல்—119).

இவர் காலத்தில் அண்ணாத்து ஏரியும், திட்டாத்துக் குளமும் பலரும் அறிந்த சிறப்புடன் விளங்கின் (எழுத்-226).

கொற்றங்குடி, கொற்ற மங்கலம், சாத்தங்குடி, சாத்த மங்கலம், வேட்டங்குடி, வேட்டமங்கலம் ஆகிய ஊர்கள் சிறப் புடன் இருந்தன (எழுத்-350).

* திராட்சை; கொடி முந்திரி எனப்பட்டது.

மதுரைக்காஞ்சியில் வரும்,

பரதர் தந்த பல்வேறு கூலம்

என்ற அடிக்கு 'செட்டிகள் கொண்டு வருவதால் மிக்க பலவாய் வேறுபட்ட பண்டங்கள்' என்று பொருள் எழுதுகின்றார். இவர் காலத்தில் கடல் வாணிகத்தில் ஈடுபட்டிருந்த வணிகர்கள் 'செட்டிகள்' எனப்பட்டனர்.

மந்திரங்களைத் தமிழில் சொல்லிச் சபிக்கும் வழக்கம் இவர் காலத்தில் இருந்தது.

ஆரியம் நன்று தமிழ்தீது எனவுரைத்த
காரியத்தால் காலக்கோள் பட்டானைச்—சீரிய
அந்தண் பொதியில் அகத்தியனார் ஆணையாற்
செந்தமிழே தீர்க்க சுவா

என்ற வெண்பாவைக்காட்டி, 'தெற்கில் வாயில்திறவாத பட்டி மண்டபத்தோர் பொருட்டு நக்கீரர், ஒருவன் வாழவும் சாவவும் பாடி இன்னவாறு ஆக எனச் சவித்தற் பொருட்டு வந்த மந்திரம்' என்று உரைக்கின்றார் (செய்—178).

**தானே தனக்கு நிகர்**

மறைமலையடிகள் திருவொற்றியூர் மும்மணிக் கோவையுள் (19,71 — 74),

தமிழ்வரம்பு உணர்ந்த கமழுறும் அறிவினும்
உரைத்திறம் நிலையிடும் வரைப்படா விறலினும்
தானே தனக்கு நிகர்என விளங்கிய
நச்சினார்க்கினியனும்

என்று பாராட்டுகின்றார்.

இவரது உரைகளைக் கற்கும் தமிழன்பர் இவரை நோக்கி,

எல்லாம் திருச்செவியில் ஏறும்படி உரைக்க
வல்லாய் ! உன்போல் எவர்க்கு வாய்க்குமே ?

(தமிழ்விடுதூது: 264)

என்று வியந்து போற்றுவர்.

3

# இலக்கிய உரையாசிரியர்கள் – I

## 1. பத்துப் பாட்டு உரைகள்

பத்துப்பாட்டு எட்டுத் தொகை பதினெண் கீழ்க்கணக்கு ஆகியவை பழந்தமிழ் இலக்கியக் கருவூலங்கள். பத்துப்பாட்டு எட்டுத்தொகை ஆகியவற்றை (பதினெண்) மேல் கணக்கு என்று கூறுவதுண்டு. கணக்கு என்ற சொல், நூலைக் குறிக்கின்றது. மேல் கணக்கை, உரையாசிரியர்கள் பாட்டும் தொகையும் என்று குறிப்பிடுகின்றனர்; இவற்றைப் பாடியவரைச் சங்கச் சான்றோர் என்று கூறுகின்றனர்; கீழ்க்கணக்கு நூல்களைப் பாடியவரைப் பிற் சான்றோர் என்றும் கூறுகின்றனர். மேல், கீழ் என்பவை பாடலின் அடி வரையறை கருதி இட்ட பெயர்கள்.

மேல்கணக்கு, பலர் பாடிய பாடல்களின் தொகுப்பு (தொகை) நூல்கள். கீழ்க்கணக்குகளில் நாலடியார் ஒன்றினைத் தவிர மற்றவை தனித்தனிப் புலவர் பாடிய தனி நூல்கள். பாட்டும் தொகையும் ஆசிரியப்பாக்களால் ஆனவை; கீழ்க் கணக்கு நூல்கள் வெண்பாக்களால் ஆனவை.

முச்சங்க வரலாற்றைக் கூறுகின்ற இறையனார் களவியல் உரை கடைச் சங்க நூல்களாக எட்டுத் தொகை நூல்களைக் குறிப்பிடுகின்றது. பத்துப்பாட்டைக் கூறவில்லை. இது ஆராய்ச்சிக்குரிய செய்தியாகும். அந்த உரை தோன்றிய காலத்தில் தனித்தனிப் பாடல்களாகவே வழங்கி, பின்னர்த் தொகுக்கப் பட்டிருக்கலாம்.

*தமிழ்விடுதூது (56),*

**மூத்தோர்கள்**
**பாடியருள் பத்துப் பாட்டும் எட்டுத் தொகையும்**
**கேடில் பதினெட்டுக் கீழ்க் கணக்கும்**

என்று கூறுகின்றது.

அடுத்து வரும் பகுதிகளில் இவற்றிற்கு உள்ள உரைச் செல்வங்களைப்பற்றி விரிவாகக் காண்போம்.

திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப் பாலை, மலைபடுகடாம் ஆகிய பாடல்கள் பத்தும் அடங்கிய நூல் பத்துப் பாட்டு என்று பெயர் பெற்றது. இப் பாடல்களை நினைவில் கொள்ளுவதற்குப் பின்வரும் பழைய வெண்பா துணை செய்கின்றது.

**முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை**
**பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய**
**கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சிப் பட்டினப்**
**பாலை கடாத்தொடும் பத்து.**

பத்துப்பாட்டு முழுவதற்கும் உரை எழுதியுள்ள நச்சினார்க் கினியர் உரைத்திறன்களை முன்னர்க் கண்டோம். அவருக்கு முன்னும் பத்துப்பாட்டிற்குச் சில பழைய உரைகள் இருந்தன. அவ்வுரைகளை நச்சினார்க்கினியர், பெயர் குறிப்பிடாமல் சுட்டு கின்றார். அந்த உரையாசிரியர் கொண்ட வேறு வேறு பாடங் களைக் காட்டுகின்றார்.

திருமுருகாற்றுப் படைக்கு மட்டும் நான்கு பழைய உரைகள் கிடைத்து வெளிவந்துள்ளன.

பத்துப்பாட்டு முழுவதற்கும் பொ. வே. சோமசுந்தரனார் மிக அருமையான உரை எழுதியுள்ளார். இவர்க்குமுன், வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் பத்துப் பாட்டில் பெரும்பான் மையான பாடல்களுக்கு உரைகண்டுள்ளார். ஐயம்பெருமாள் கோனார் கல்லூரி மாணவர்கட்குப் பாடமாக வைத்த பாடல் களுக்கு உரையும் விளக்கமும் எழுதியுள்ளார். ந. சி. கந்தையா பிள்ளை எல்லாப் பாடல்களுக்கும் பொழிப்புரை (வசனம்) தந்துள்ளார். பத்துப் பாட்டுச் சொற்பொழிவு நூலைக் கழகம் வெளியிட்டுள்ளது.

டாக்டர் மா. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டில் வருகின்ற இடப் பெயர்களை விரிவாக ஆராய்ந்து இன்று அவை எங்கெங்கே உள்ளன என்று தக்க சான்றுகளுடன் காட்டியுள்ளார். முற்காலத்து அரசியல் நாகரிகம் மன்னர் வரலாறு மக்கள் வாழ்க்கை ஆகியவற்றை நன்கு விளக்கியுள்ளார். இதனைச் சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது.

ஏதேனும் ஒரு பாடலுக்கு விளக்கமும் திறனாய்வும் எழுதியவர்கள் பலர் உள்ளனர். கல்லூரிகளில் பாடமாக வைக்கப் பட்ட பாடல்கள் விளக்கம் பல பெற்றன. அவற்றைக் காண்போம்.

1. **திருமுருகாற்றுப்படை:** முருகக் கடவுளைப் பற்றிய ஆற்றுப் படை ஆதலின், 'திரு' சேர்த்து இதனைச் சைவ சமயத்தவர் போற்றிவருகின்றனர். பல ஆண்டுகளாக இதனைச் சைவ சமயத்தவர் மனப்பாடம் செய்து வருகின்றனர். பத்துப்பாட்டில் முதலில் இடம் பெற்றுள்ள இந்தப் பாடலை, பதினோராம் திருமுறையில் சேர்த்துச் சிறப்பித்துள்ளனர்.

இதனைத் தனியாக ஓதும் பழக்கம் இருந்து வருகின்றது. இதன் கீழ், பிற்காலத்தவர் எழுதிச் சேர்த்த பத்து வெண்பாக்கள் உள்ளன. அவற்றில், பிள்ளையார் இடம் பெறுவதால், கி.பி. ஏழாம் நூற்றாண்டிற்குப் பின் அவை தோன்றின என்பது வெளிப்படை. திருமுருகாற்றுப்படையினுள் விநாயகர் இடம்பெறவில்லை. ஆதலின் இது ஏழாம் நூற்றாண்டிற்கு முன் தோன்றியது என்பது உறுதி.

சைவர்கள் பாராயணம் செய்து நாள்தோறும் வழிபாட்டில் ஓதுகின்ற சிறப்புடைய திருமுருகாற்றுப் படை, அடியவர்களின் மனக்கவலையை நீக்கும் மருந்தாகி வேண்டியவற்றை வேண்டிய வாறு நல்கும் என்று போற்றப்படுகின்றது.

**நக்கீரர் தாம்உரைத்த நன்முருகாற் றுப்படையைத்**
**தற்கோல நாள்தோறும் சாற்றினால் — முற்கோல**
**மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளி,**
**தான்நினைத்த எல்லாம் தரும்.**

இவ்வாறு சைவ அன்பர்களால் போற்றப்படும் இப் பாடல் உரைவளம் கொண்ட சிறப்புடையது. நச்சினார்க்கினியர்க்குமுன் இதற்கு நான்கு உரைகள் தோன்றியுள்ளன.

**பரிமேலழகர் உரை:** சென்னை நகரில் தோன்றிச் சைவமும் தமிழும் தழைத்தினிது ஓங்க, பல அரிய தமிழ் நூல்களை வெளியிட்டு வருகின்ற சைவ சித்தாந்த மகாசமாஜம், பல ஆண்டு களுக்கு முன், பரிமேலழகர் உரை என்ற பெயரோடு திருமுரு காற்றுப் படைக்குப் பழைய உரை ஒன்றினை வெளியிட்டது. இதனை இயற்றியவர் பரிமேலழகர் அல்லர் என்பர் ஆராய்ச்சியாளர். டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர், பத்துப்பாட்டு மூன்றாம் பதிப்பில், அடிக்குறிப்பாக இவ்வுரையைச் சேர்த்து 'வேறுரை' என்று குறிப்பிட்டுள்ளார்.

பரிமேலழகர் பெயரால் வழங்கிவரும் இந்தப் பழையவுரை பல வகையில் சிறப்புடையது. செறிவும் நுட்பமும் வாய்ந்தது; நல்ல தமிழ் நடையில் ஆனது; அடிதோறும் பதவுரை கூறிக் கீழே அருஞ் சொல் விளக்கம், வினைமுடிபு, இலக்கணக் குறிப்பு ஆகியவற்றைத் தருவது.

இந்த உரையை,

> அரிமேல் அழகுறூஉம் அன்பமை நெஞ்சப்
> பரிமே லழகன் பகர்ந்தான்—விரிவுரைமூ
> தக்கீரிஞ் ஞான்று தனிமுருகாற் றுப்படையாம்
> நக்கீரன் நல்ல கவிக்கு

என்ற வெண்பா போற்றுகின்றது.

**உரையாசிரியர் உரை:** திருமுருகாற்றுப் படைக்கு 'உரையாசிரியர் உரை' என்ற பெயருடன் பழைய உரை கிடைத்தது. இதனை மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடாக (1943) ஆராய்ச்சி அறிஞர் எஸ். வையாபுரிப் பிள்ளை சிறந்த ஆராய்ச்சி முன்னுரையுடன் பதிப்பித்துள்ளார்.

இந்த உரையாசிரியர் உரைக்கும் இளம்பூரணர்க்கும் எவ் வகையிலும் தொடர்பில்லை. இவ்வுரையை நச்சினார்க்கினியர், 'வசிந்துவாங்கு நிமிர்தோள்' (முருகு-106) என்ற அடிக்கு உரை எழுதும்போது, "வளைய வேண்டுமிடம் வளைந்தும் நிமிர வேண்டுமிடம் நிமிர்ந்தும் என்றும் உரைப்பர்'' என்று குறிப்பிடுகின்றார்.

இவ்வுரையின், சிறப்பியல்பைப் பின்வருமாறு வையாபுரிப் பிள்ளை போற்றுகின்றார்:

"இஃது ஒரு சிறந்த பழைய உரையாகும். யாவரும் அறியக் கூடியபடி மிகவும் எளிமையான நடையில் எழுதப் பெற்றிருக் கிறது. மாட்டு முதலிய இலக்கணத்தால் அடிகளைச் சிதைத்து அலைத்துப் பொருள் பண்ணாதபடி சொற்கிடக்கை முறையிலேயே பெரும்பாலும் பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது. ஆற்றுப் படையைக் கற்போர்க்கு இது மிகவும் உதவியாக இருக்கும்."

முன்னர்க் குறிப்பிட்ட பரிமேலழகர் உரையுடன் இந்த உரை பெரிதும் ஒத்துள்ளது.

இவையேயன்றி வேறு இரண்டு பழைய உரைகளும் கிடைத்துள்ளன. தமிழ்த் தொண்டர் வே. ரா. தெய்வ சிகாமணிக் கவுண்டர் கவிப் பெருமாள் உரையையும் பரிதி குறிப்புரையையும் கண்டெடுத்து வழங்கியுள்ளார். இவை (1959 ஆம் ஆண்டு), திருப்பனந்தாள் ஆதீனம் வெளியிட்ட திருமுருகாற்றுப்படை உரை வளம் (ஐந்து பழைய உரைகள்: நச்சினார்க்கினியர், பரிமேலழகர், உரையாசிரியர், கவிப்பெருமாள், பரிதி) என்ற நூலில் இடம் பெற்றுள்ளன:

**கவிப்பெருமாள் உரை:** இது அடிகளின் பொருள் தொடர்பு நோக்கி வரையறுத்துப் பொழிப்புரையாக அமைந்துள்ளது. இடையே விளக்கமும் இலக்கணக் குறிப்பும் தரப்பட்டுள்ளன. ஆற்றொழுக்காய்—இனிய ஓசையுடன் செல்லுகின்றது.

இவ்வுரையைப் பின்வரும் வெண்பா பாராட்டுகின்றது:

**வண்டமிழ்தேர் கீரன் வளமறையாய்ச் சேந்தன்மேல்**
**தண்டமிழ்ஆற் றுப்படையாத் தானுரைத்தான் — ஒண்டமிழின்**
**தெய்வக் கவிப்பெருமாள் தேன்போல் உரைசெய்தான்**
**கைவந்த நூன்முறைமை கண்டு.**

**பரிதி உரை:** இது, அருஞ் சொற்களுக்குப் பொருள் கூறும் குறிப்புரையாகும். இப்போது கிடைக்கின்ற உரைகளில் காலத்தால் இது முற்பட்டதாக இருக்கலாம். தேவையான இடங்களில் மிகச்சுருக்கமாய் இலக்கண விளக்கம் தருகின்றது. சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் திறனை இவ்வுரை முழுதும் காணலாம்.

இந்த உரையைப் பின்வரும் வெண்பா பாராட்டுகின்றது:

**நக்கீரர் தாம்செய்த நன்முருகாற் றுப்படைக்குத்**
**தக்கவுரை சொன்ன தகுதியான் — மிக்குலகில்**
**பன்னூல் அறிந்த பரிதி மறைப்புலவன்**
**தொன்னூல் அறிவால் துணிந்து.**

**உரை வேற்றுமை**

திருமுருகாற்றுப் படைக்கு ஐந்து பழைய உரைகள் இருப்பதால் அவற்றை ஒப்பிட்டுக் காண்பது அறிவுக்கு விருந்தாய் உள்ளது: ஆராய்ச்சிக்குத் தூண்டுகோலாய் உள்ளது.

**மென்தோள் பல்பிணை தழீஇத் தலைத்தந்து**
**குன்றுதோறு ஆடலும் நின்றதன் பண்பே**

என்ற அடிகளில் உள்ள 'தலைத் தந்து' என்ற தொடர் பலவாறு விளக்கப்பட்டுள்ளது. அவற்றைக் காண்போம்:

நச்: முதற்கை கொடுத்து.
பரிமே: அவ்விடத்து வந்து

உரையா: அவர்கள் (மகளிர்) களவறிந்து அவர்கட்கு இருப்பிடம் கொடுத்து.

கவி: தானும் ஒரு தலையிலே கை கோத்து.

பரிதி: ஒருத்தியை எடுத்து ஒருத்திமேல் போட்டு.

இவ்வுரைகளுள் உரையாசிரியர் உரை மிகவும் பொருத்த மாய் உள்ளது. முற்காலத்து வழக்கத்தை அறிந்து எழுதிய விளக்கமாய் உள்ளது. இந்த அரிய விளக்கம் வேறு உரையாசிரியர்களால் (புறம் - 24, பழைய உரை) கூறப்படவில்லை.

பழமுதிர்சோலை (முருகு - 317) என்பது,

பழம் + உதிர் + சோலை

என்றும்,

பழம் + முதிர் + சோலை

என்றும் இரு வகையாகப் பிரித்துப் பொருள் கொள்ள இடம் தருகின்றது. முற்காலத்து உரையாசிரியர்கள் இரு வகையாகவும் பொருள் கொண்டுள்ளனர்:

நச்: பழம் முற்றின சோலை

பரிமே: பழம் முதிரும் சோலை

உரையா: நற்கனிகள் உதிரப்பட்ட சோலை

கவி: பழங்கள் முற்றப் பெற்ற சோலை

பரிதி: முதிர்ந்த பழங்கள் பொருந்திய சோலை.

திருமுருகாற்றுப்படை மிகவும் சிறப்பு வாய்ந்த அழகான உவமையுடன் தொடங்குகின்றது. இந்த உவமை இலக்கிய உலகத்தின் இமயம்; அணிகளுக்கு அரசு; கற்பனையின் தலைமை யிடம்; புலமையின் விளைநிலம். நீலத்தோகையை விரித்து நின்று ஆடும் பச்சை மயிலின்முன் நிற்கும் குமரக் கடவுளின் தோற்றத்தைப்பாடும் நக்கீரர்,

**உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு**
**பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு (1-2)**

என்று உள்ளக்களிப்போடு—பேரின்பக் காட்சியைப் பாடுகின்றார். உலகமெல்லாம் உவகை கொள்ளுமாறு இளங்கதிர் கடலில் தோன்றியதுபோல என்று உவமை கூறுகின்றார். இளஞாயிறு முருகனுக்கும், நீலக்கடல் மயிலுக்கும் உவமையாகின்றன. இக் காட்சியைப் பலவேறு உரையாசிரியர்கள் பல வகையாய் விளக்கு கின்றனர்.

நச்: சீவான்மாக்கள் உவப்ப எழுந்து, மகாமேருவை வலமாகத் திரிதலைச் செய்யும் எல்லாச் சமயத்தாரும் புகழும் ஞாயிற்றைக் கடலிடத்தே கண்டாற்போல.

உரையா: உலகத்திலுள்ள பல்லுயிர்களும் மகிழ மேருவை வலமாக, யாவர்க்கும் நேராகச் சுழலும் தனது ஒளியாற்

காட்சியின் பயன் கொள்வார் பலரும் புகழும் ஞாயிற்றைக் கடலிடத்தே கண்டாற் போல.

பரிமே: உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டு* ஆதலாலும் உயர்ந்தோராகிய பரம இருடிகளாய் உள்ளோர் விரும்ப, வலமாகத் திரிந்தருளுகின்ற எல்லாச் சமயத்தாராலும் கொண்டாடப்பட்ட ஆதித்தனைக் கடலிற் கண்டாற் போல.

கவி: உயர்ந்தோர் விரும்பும்படி எழுந்து மேருவை வலமாக வருகின்ற பலராலும் புகழப்பட்ட ஆதித்தன் கடலிடத்தே கண்டால் ஒத்த.

பரிதி: உலகின்கண் உள்ள எண்பத்து நான்கு இலட்சம் சீவ பேதங்களாகிய உயிர்த்தொகுதிகள். பலர் — எல்லாச் சமயத்தாரும், ஞாயிறு — இளைய சூரியன். கண்டாஅங்கு — உதயமானது போல.

சைவசமயச் சான்றோர் பலர், திருமுருகாற்றுப் படைக்கு உரை எழுதி அந்த நூலைப்பரப்புவதைச் சிறந்த சமயத் தொண்டாகக் கருதிப் பணி செய்துள்ளனர். திருத்தணிகைச் சரவணப்பெருமாள் ஐயரும் ஆறுமுக நாவலரும் எழுதிய பதவுரை பல பதிப்புகள் வந்துள்ளன. வை. மு. கோபாலகிருஷ்ண மாச்சாரியார், சு. அருள் அம்பலனார், எஸ். வையாபுரிப்பிள்ளை, இரா. இராதாகிருஷ்ணன், எம். ஆறுமுகம் பிள்ளை, புலியூர்க் கேசிகன் ஆகியோர் உரை எழுதியுள்ளனர்.

சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் (திருநெல்வேலி), வெள்ளி விழா மலராக (1960) விளக்கவுரையை வெளியிட்டுள்ளது.

திறனாய்வு நூல்கள் சில வெளி வந்துள்ளன. தமிழறிஞர்கள் கி.வா.ஜகந்நாதன் (வழிகாட்டி, திருமுருகாற்றுப் படை விளக்கம்), டாக்டர் மொ. அ. துரையரங்கனார் (அன்பு நெறியே தமிழர் சமயம்), செ. வேங்கடராமச் செட்டியார் (பெறலரும் பரிசில்) கோதண்டபாணி பிள்ளை (திருமுருகாற்றுப்படைத் திறன்) ஆகியோர் இயற்றியவை சிறந்து விளங்குகின்றன. சொல்லுக்குச் சொல், தொடருக்குத் தொடர், அடிக்கு அடி நுண்பொருள் கண்டு, பாடலின் அமைப்பை வியந்து, இயற்கைக் காட்சிகளில் மூழ்கி உவமைகளில் திளைத்து இவர்கள் நக்கீரர் புலமை மாண்பைக் கொண்டாடுகின்றனர். சமயக்—கருத்துக்களையும் குறிப்புப் பொருளையும் வெளிப்படுத்துகின்றனர்.

தமிழ்த்தென்றல் திரு.வி.க. "முருகன் அல்லது அழகு" என்னும் நூலில்,

* பிங்கலந்தை நிகண்டு.

மணம்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி

(முருகு–290)

என்ற அடிக்கு விளக்கம் கண்டுள்ளார். இந்த வரி, அவர் நெஞ்சத்தில் ஆழப்பதிந்து நுண்பொருள் பல உணர்த்தி விரிந்த கருத்துகளைத் தந்துள்ளது. பின் வருமாறு அவர் தம் நூலைத் தொடங்குகின்றார்:

"முருகன் எவன்? முருகையுடையவன் முருகன். முருகு என்றால் என்ன? முருகு என்பது பல பொருள் குறிக்கும் ஒரு சொல். அப் பல பொருள்களுள், சிறப்பாகக் குறிக்கத்தக்கன நான்கு. அவை மணம் இளமை கடவுள் தன்மை அழகு என்பன. இந் நான்கு பொருள் அடங்கிய ஒரு சொல்லால் பண்டைத் தமிழ் மக்கள் முழு முதற் பொருளை அமைத்தது வியக்கத்தக்கது. இயற்கை மணமும், மாறா இளமையும், எல்லாப் பொருள் களையும் கடந்து ஒளிரும் தன்மையும், அழியா அழகும் இறைவனி டத்தில் இலங்குவது கண்டு, அப் பொருள்கள் முறையே உறைதற்கு இடம் பெற்றுள்ள முருகன் என்னும் சொல்லை, அவ் இறைவனுக்குப் பழந்தமிழ் மக்கள் சூட்டியதன் திறமையை நோக்குழி அவர்களது கூர்த்தமதி புலனாகிறது"

திரு.வி.க.வின் உள்ளத்தைக் 'கைபுனைந்து இயற்றாக் கவின்பெறு வனப்பு' என்ற அடியும் பெரிதும் கவர்ந்துள்ளது.

இந்த நூல்களேயன்றி, பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள் (கழக வெளியீடு), பத்துப் பாட்டுவளம் (லெ.ப.கரு இராமநாதன் செட்டியார்), பத்துப் பாட்டும் பைந்தமிழும் போன்ற பல திறனாய்வுத் தொகுப்புக் கட்டுரை நூல்கள் வெளிவந்துள்ளன.

**2. பொருநராற்றுப் படை:** 1907–ஆம் ஆண்டு வா. மகாதேவ முதலியார் உரை எழுதியுள்ளார். கா. ஸ்ரீ. கோபாலாச்சாரியார் எழுதியுள்ள விளக்கவுரை சிறப்பாக உள்ளது. 'கருவிலே திருவுடையான்' என்று பெயரிட்டு, டாக்டர் மொ. அ. துரையரங்கனார் திறனாய்வு எழுதியுள்ளார்.

**3. சிறுபாணாற்றுப் படை:** நான் இதற்குத் திறனாய்வு எழுதியுள்ளேன். இதில் சிறுபாணன் சென்ற வழி, ஓய்மான் நாடு, அந் நாட்டில் உள்ள ஊர்கள் ஆகியவை விளக்கம் பெற்றுள்ளன. பாடலின் இலக்கியச் சுவை பழந்தமிழர் நாகரிகச் சிறப்பு ஆகியவை நன்கு வெளிப்படுத்தப்பட்டுள்ளன. பாணர்களின் கலைவாழ்வும், நல்லியக்கோடனின் பண்பும் போற்றப் பட்டுள்ளன.

**4. பெரும்பாணாற்றுப் படை:** யாழ்ப்பாணத்து அறிஞர் அருள் அம்பலனார் ஆய்வுரை வழங்கியுள்ளார். இதில் பாணர் வரலாறு விரிவாக ஆராயப் பட்டுள்ளது. தமிழறிஞர் ரா. இராகவ ஐயங்கார் எழுதியுள்ள விளக்கவுரையில், இளந்திரையன் வரலாறு வடநாட்டு மன்னர்களுடன் இணைத்துக் காட்டப்பட்டுள்ளது. இதனை அறிஞர் பலர் மறுத்துள்ளனர்.

**5. முல்லைப்பாட்டு:** மறைமலை அடிகள் சிறந்த ஆராய்ச்சி யுரை எழுதியுள்ளார். சங்கப் பாடலின் மேன்மை, இலக்கியச் சுவை ஆகியவற்றை நன்கு வெளிப்படுத்தியுள்ளார்.

**6. மதுரைக்காஞ்சி:** மதுரைக் காஞ்சிக்கு விளக்கமும் ஆய்வும் தனி நூலாக எழுதப்படவில்லை.

**7. நெடுநல்வாடை:** புலவர் உலகத்தைக் கவர்ந்த விழுமிய பாடல் இது. திறனாய்வுக் கலைஞர் கோதண்ட பாணி பிள்ளை திறனாய்ந்து தெளிதல் என்ற பெயருடன் இரண்டு நூல்கள் (சொல் நோக்கு, பொருள் நோக்கு) எழுதியுள்ளார். செ. வேங்கடராமச் செட்டியார் 'புனாய ஓவியம்' என்ற பெயரிட்டு, பாடலை நுணுகி நோக்கி நுண்பொருள் கண்டுள்ளார்.

**8. குறிஞ்சிப்பாட்டு:** திறனாய்வாளர் எஸ். ஆர். மார்க்கபந்து சர்மா விளக்கம் எழுதி, பாடலின் சுவையைப் புலப்படுத்தி யுள்ளார். டாக்டர் தமிழண்ணல் மிகச் சிறந்த திறனாய்வு நூல் எழுதியுள்ளார்.

**9. பட்டினப்பாலை:** மறைமலை அடிகள், பாடலின் அமைப்பை வியந்து, ஓசை வேறுபாட்டில் திளைத்து, அணியழகில் ஈடுபட்டு, பொருள் சிறப்பில் மூழ்கித் திறனாய்வு செய்துள்ளார். ரா. இராகவ ஐயங்கார், சாமி சிதம்பரனார் ஆகிய இருவரும் எழுதியுள்ள விளக்கம் சிறந்து விளங்குகின்றன.

**10. மலைபடுகடாம்:** தனியாகத் திறனாய்வு நூல் இன்னும் தோன்றவில்லை.

மதுரைக்காஞ்சி, மலைபடுகடாம் ஆகிய இரண்டும் வெளிப்படாத புதையலாய்—பலர் கண்ணில் படாத ஓவியக் கூடமாய் -- திறக்கப்படாத அருங்காட்சியகமாய் உள்ளன.

## 2. எட்டுத்தொகை உரைகள்

எட்டுத் தொகை நூல்களை,

**நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்**

கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம்புறம்என்று
இத்திறத்த எட்டுத் தொகை

என்ற பழைய வெண்பா கூறுகின்றது.

எட்டுத்தொகை நூல்களுள் நற்றிணைக்குத் தவிர, ஏனைய ஏழு நூல்களுக்கும் பழங்காலத்தில் உரைகள் தோன்றியுள்ளன. குறுந்தொகைக்குப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் எழுதிய உரை இருந்தது. அகநானூற்றுக்குப் பால்வண்ண தேவனார் இயற்றிய அகவல் உரையும் இருந்தது. ஆனால், இவ்விரு நூல்களின் பழையவுரைகள் மறைந்துபோயின.

ஐங்குறுநூற்றிற்குப் பழைய வுரையும் பதிற்றுப்பத்திற்குப் பழைய வுரையும், அகநானூற்றுக்குப் பழைய குறிப்புரை இரண்டும் புறநானூற்றுக்குப் பழையவுரையும் உள்ளன. இவ்வுரைகளை இயற்றிய புலவர்களின் பெயரும் தெரியவில்லை. “ஊர் வேண்டேன், பேர் வேண்டேன்!'' என்று முற்றத்துறந்த சான்றோர்கள் இவர்கள்.

பரிபாடலுக்குப் பரிமேலழகர் உரையும், கலித்தொகைக்கு நச்சினார்க்கினியர் உரையும் உள்ளன.

## நற்றிணை

நற்றிணைக்குப் பழைய உரை இல்லை. இருபதாம் நூற்றாண்டு உரையாசிரியர்களில் ஒருவரான பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் நற்றிணைக்குச் சிறந்த உரையும் ஆராய்ச்சி முன்னுரையும் இயற்றிப் பதிப்பித்தார். அண்மையில் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, அரியதோர் உரை விளக்கம் எழுதியுள்ளார்.

## குறுந்தொகை

குறுந்தொகைக்குப் பேராசிரியர் 380 பாடல்களுக்கும், அவர் உரை எழுதாது விட்ட இருபது பாடல்களுக்கு நச்சினார்க்கினியரும் உரை இயற்றினர் என்ற செய்தியை நச்சினார்க்கினியர் உரைப்பாயிரம் கூறுகின்றது. இருபெரும் உரையாசிரியர்களும் இயற்றிய பழையவுரை மறைந்து போயிற்று.

இருபதாம் நூற்றாண்டில், திருக்கண்ணபுரம் திருமாளிகைச் சௌரிப் பெருமாள் அரங்கன் (1915-ஆம் ஆண்டில்) குறுந்தொகையைப் பதிப்பித்து உரையும் இயற்றினார். டாக்டர். உ.வே. சாமிநாத ஐயரும், பொ.வே. சோமசுந்தரனாரும் குறுந்தொகைக்கு விளக்கவுரை எழுதியுள்ளனர்.

இராகவ ஐயங்கார் குறுந்தொகையில் முதல் 112 பாடல்களுக்கு விளக்கவுரை இயற்றியுள்ளார்.

உ-21.

## ஐங்குறுநூறு

ஐங்குறுநூற்றுக்குப் பழையஉரை உள்ளது. இது குறிப்புரையும் அன்று; பொழிப்புரையும் அன்று. அகத்திணை நூல்களுக்குரிய உள்ளுறை உவமம், இறைச்சிப் பொருள் ஆகியவற்றைத் தெளிவாக விளக்குகின்றது; சிற்சில இடங்களில் அருஞ்சொற்களுக்குப் பொருள் உரைக்கின்றது; தேவையான இடங்களில் இலக்கணக் குறிப்பும் வினைமுடிபும் கூறுகின்றது. துறைகளையும் கூற்றுக்கு உரியவரையும் நன்கு விளக்குகின்றது.

ஐங்குறுநூற்றின் முதற்பாட்டிற்குச் சிறந்த விளக்கம் எழுதிய இவ்வுரையாசிரியர் ஏனைய பாடல்களுக்கும் அவ்வாறு எழுதாமல் விட்டது பெரிய இழப்பாகும். முதற்பாட்டின் விளக்கமாக, "தலைவியை யாய் என்றது புலத்தற்குக் காரணமாயின உளவாகவும் அவை மனங்கொள்ளாத சிறப்பை நோக்கி; தோழி யாங்கள் என உளப்படுத்தது ஆயத்தாரை நோக்கி எனக் கொள்க. பூவும் புலாலும் ஒக்க விளையும் ஊர் என்றது குலமகளிரைப்போல, பொது மகளிரையும் ஒப்புக் கொண்டு ஒழுகுவான் என்பதாம். ஆதன் அவினி என்பான் சேரமான்களில் பாட்டுடைத் தலைவன்" என்று உரைக்கின்றார்.

எல்லாப் பாடல்களிலும் உள்ளுறைகளைத் தெளிவாக விளக்கும் இவர், 177 ஆம் பாடலில் **இறைச்சிப் பொருளையும்** சுட்டு கின்றார்.

"கன்னம் என்பது நோய்த் தணித்தற்குப் பண்ணிக் கொடுக்கும் படிமம். கெழுதகை என்பது உரிமை" *(245)* என்று சொல்லுக்குப் பொருளும், "வெள்ளிலோத்திரத்துக் குளிர்ச்சியை யுடைய மலரை ஆற்றின் வெம்மை தீர, செல்வோர் அணிந்து செல்வர் என்றுழி வெம்மை கூறியவாறாயிற்று" *(301)* என்று பாட்டால் வெளிப்படும் கருத்தையும் கூறுகின்றார்.

இவ்வுரை சிறியதாயினும், செய்யும் உதவி பெரியது,

இவ்வுரைக்கு **டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர்** குறிப்புரை எழுதியுள்ளார்.

ஔவை சு. துரைசாமிப் பிள்ளையும், பொ.வே. சோம சுந்தரனாரும் விளக்கவுரை எழுதியுள்ளனர்.

## பதிற்றுப்பத்து

பதிற்றுப்பத்திற்குப் பழையஉரை உள்ளது. இவ்வுரை பதவுரையும் அன்று; அருஞ்சொற் பொருள்உரையும் அன்று; குறிப்புரையும் அன்று. எல்லா உரை நெறிகளையும் தழுவிச் செல்லுகின்றது இவ்வுரை.

இவ்வுரையினை இயற்றியவர் பெயர் முதலிய வரலாறு தெரியவில்லை. 76ஆம் பாடலின் உரையில், "சின்மையைச் சின்னூல் என்றதுபோல ஈண்டுச் சிறுமையாகக் கொள்க" என்று இவர் எழுதுகின்றார். சின்னூல் என்பது குணவீர பண்டிதரால் இயற்றப்பெற்ற நேமிநாதத்திற்குப் பெயராக வழங்குகின்றது. நேமிநாதம் நன்னூலாருக்கு முன் தோன்றியது. ஆதலின், இவ் வுரையாசிரியரும் நன்னூலாரின் காலத்திற்கு முற்பட்டவர் என்னலாம்.

68ஆம் பாடலில் (வரி-13) வடபுலம் என்பதற்கு, "போக பூமியாகிய உத்தர குரு" என்று உரை எழுதுகின்றார். **இது சமணர் கருத்தாகும். இவர் சமணராக இருக்கலாம்.** இவருக்கு முன்னும் பதிற்றுப்பத்திற்கு உரை இருந்திருக்க வேண்டும். என்பர், என்று உரைப்பாரும் உளர், என்றும் பாடம் கொள்வர் என்று இவர் குறிப்பிடுகின்றார்.

பழந்தமிழ் நூல்கள் பலவற்றிலிருந்து பல மேற்கோள்களை இவர் காட்டுகின்றார்.

பாட்டில் அமைந்துள்ள அரிய சொற்களுக்குச் சிறந்த முறையில் பொருள் கூறுகின்றார். வினைமுடிபுகள் தருகின்றார். பிற உரையாசிரியர்கள் விளக்காத இலக்கணக் குறிப்புகளை இவர் எடுத்துஆண்டுள்ளார். பாட்டில் உள்ள புறத்துறைகளைத் தெளிவாக விளக்குகின்றார். செய்யுளுக்குப் பெயராய் அமைந்த தொடர்மொழிகளின் பொருளை விளக்கி, நயவுரை கண்டு அதன் அழகில் ஈடுபடுகின்றார். பாட்டிற்குரிய தூக்கு வண்ணம் துறை இவற்றின் பொருத்தத்தை நன்கு விளக்குகின்றார். ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் 'இதனால் இன்னது பெறப் பட்டது' என்று செய்யுளின் கருத்தைக் கூறுகின்றார்.

இவர், பதிகச் செய்யுளுக்கு முன்னால் குறிப்புரை தருகின்றார். வரலாற்றுச் செய்திகளை இவர் விளக்காமையால் அவற்றைப் பற்றி விரிவாக அறிந்துகொள்ளும் வாய்ப்பு இவருக்கு இல்லை என்னலாம்.

செம்மீன் என்பதற்கு அருந்ததி (31-28) என்று பொருள் உரைக்கின்றார். "ஆயிடை; அவ் என்னும் வகர ஈற்றுப் பெயர் ஆயிடை என முடிந்தது" என்றும், (11:24). "அருவியாம்பல் என்றது வீ அரிய எண்ணாம்பல் என்றவாறு. வீ என்பது குறுகிற்று; அருவி பண்புத் தொகை" (63:19) என்று இவர் தரும் இலக்கணக் குறிப்பு கள் அரியவை.

கட்டணம் என்ற சொல்லே கட்டடம் (65:7) என்று மாறியதாக இவர் கருதுகின்றார்.

கயிறு குறு முகவை என்பதற்கு இவர் தரும் நயஉரை மிகவும் இனியது:

"கயிறு குறு முகவை என்றது, தன்னால் நீர் தாங்குவது பெரிதன்றித் தன் கயிற்றையே நின்று வாங்கப்படும் முகவை" (22) என்று மிக அழகாக விளக்குகின்றார்.

பதிற்றுப்பத்திற்கு டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் பழைய உரையின் கீழே குறிப்புரை எழுதியுள்ளார். ஔவை சு. துரைசாமிப்பிள்ளை விளக்கவுரை எழுதியுள்ளார். ஈழ நாட்டுத் தமிழ்ப்புலவர் அருள் அம்பலனார் ஆராய்ச்சியுரை எழுதியுள்ளார்.

## அகநானூறு

அகநானூற்றுக்குப் பழைய உரை உண்டு. அதனை இயற்றியவர் பால் வண்ணத் தேவர் என்பவர். அவர் அகவலால் உரை கண்டார் என்று சிறப்புப்பாயிரம் கூறுகின்றது. அந்த அகவல் உரை கிடைக்கவில்லை. மறைந்து போன உரை நூல் களுள் அதுவும் ஒன்று.

அகநானூற்றுக்குக் குறிப்புரைகள் இரண்டு பழங்காலத்தில் தோன்றியுள்ளன. அவற்றுள் ஒன்று, கடவுள் வாழ்த்திற்கும் முதல் தொண்ணூறு பாடல்களுக்கும் குறிப்புரையாய் அமைந்துள்ளது. இவ்வுரையாசிரியர் ஒவ்வொரு செய்யுளிலும் உள்ள அருஞ் சொற்களுக்கும், அரிய தொடர்களுக்கும் பொருள் எழுதுகின்றார். உள்ளுறை உவமம், இறைச்சிப்பொருள் ஆகியவற்றைக் குறிப் பிடுகின்றார். வேண்டிய இடங்களில் சொல்முடிபு, பொருள்முடிபு, இலக்கணக் குறிப்பு, வரலாற்று நிகழ்ச்சி ஆகியவற்றைத் தருகின்றார்.

இவரைப் பற்றிய வரலாறு எதுவும் தெரியவில்லை.

மற்றோர் குறிப்புரை, உரை என்ற அளவில் இல்லாமல், படித்தவர் தம் நினைவுக்காக எழுதி வைத்த சொற்பொருளும், திணை விளக்கமும் அமைந்த குறிப்புப்போல் உள்ளது. தொடர்ச் சியாக இக் குறிப்பு இல்லாமல், ஆங்காங்கே சில பாடல்களுக்கு மட்டுமே உள்ளது.

அகநானூறு மூலமும் இவ்விரு பழையவுரைகளும் ரா. இராகவ ஐயங்காரால் வெளியிடப்பட்டன. இராச கோபால் ஐயர் பழையவுரைக்குப்பின் (90 பாடலுக்குப்பின்) எழுபது பாடல் களுக்கு உரை இயற்றியுள்ளார்.

ந.மு. வேங்கடசாமி நாட்டாரும், கரந்தைக் கவியரசு ரா. வேங்கடாசலம் பிள்ளையும் அகநானூறு முழுமைக்கும் செம்மை யான உரை எழுதியுள்ளனர்.

## புறநானூறு

புறநானூற்றுக்குப் பழையவுரை உள்ளது. இவ்வுரை 266 பாடல்கள் வரை உள்ளது. இவ்வுரையாசிரியரின் வரலாறு தெரிய வில்லை. இவ்வுரையின் பல்வேறு இயல்புகளை மிக நன்றாக ஆராய்ந்து டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் எழுதியுள்ளார்.

பழைய உரையாசிரியர் ஆற்றொழுக்காகச் செய்யுளில் சொல் கிடந்தவாறே பொருள் உரைக்கின்றார். உரைநடை மிகவும் எளிமையானது. தமக்கு முன் இருந்த மற்ற உரையாசிரியர் கருத்துக்களையும், அவர்கள் கொண்ட பாடங்களையும் பல இடங்களில் குறிக்கும் இவர் அவர்களை மறுப்பதில்லை. நயங்கூறுதல், வினைமுடிபு காட்டுதல் சொற்களை வருவித்துக் கூறல் துறைகளை விளக்குதல் போன்ற பல இயல்புகள் இவரிடம் உள்ளன. நாலடியார், திருக்குறள் போன்ற நூல்களின் செய்யுள் அடிகளை உரைநடையாக்கி எழுதுகின்றார். உலக வழக்குச் சொற்களைக் குறிக்கின்றார். உவமைகளை விளக்குகின்றார். குறிப்புப்பொருள் தருகின்றார். ஆங்காங்கே மிக அரிய இலக்கணக் குறிப்புகளைத் தருகின்றார்.

இவர், வேதங்களைப் பின்பற்றும் வைதிக சமயத்தவர், கடவுள் வாழ்த்துப் பாடல் உரையில், சிவபெருமானுக்கு உரிய பொருள்களை, 'திரு' என்னும் அடைகொடுத்து, திருநுதல் திருச்சடை, திருமுடி என்கின்றார். 56-ஆம் பாடலின் உரையில், திருமால் மேனியைத் திருமேனி என்றும், பலதேவரை நம்பி மூத்த பிரான் என்றும் முருகக் கடவுளைப் பிள்ளையார் என்றும், பிணி முகம் பிள்ளையார் ஏறும் யானை என்றும் மரபு வழுவாமல் உரைக்கின்றார்.

'நன்றாய்ந்த' என்னும் புறப்பாட்டினுள் (166), 'இகல் கண்டோர் மிகல் சாய்மார்' என்பதற்கு இவ்வுரையாசிரியர், "வேதத்திற்கு மாறுபட்ட நூல்களைக் கண்டோராகிய புத்தர் முதலாயின புறச் சமயத்தோரது மிகுதியைச் சாய்க்க வேண்டி' என்று பொருள் உரைக்கினறார்.

இவ்வுரையாசிரியர் புராணக் கதைகளையும், வரலாறு களையும் கூறுகின்றார். அவற்றை விரிவாகக் காண்போம்.

பாண்டியன் நெடுஞ்செழியனை, 'எழுவர் நல்வலங் கடந்தோய்' என்று ஒரு பாடல் (19) குறிப்பிடுகின்றது. அதற்கு

இவர், 'இரு பெருவேந்தரும் ஐம்பெரு வேளிருமாகிய எழுவர்' என்று உரை எழுதுகின்றார். 'குழவி இறப்பினும்' என்ற பாட்டில் (74), 'கேளல் கேளிர் என்றது சிறைக் கோட்டங் காவலரை' என்று உரைக்கின்றார். 99 ஆம் பாடலில் ஔவையார் அதியமான் பனந்தார் சூடியுள்ளதாகப் பாடியுள்ளார். 'இவனுக்குப் பனந்தார் கூறியது, சேரமாற்கு உறவாதலின்' என்று சிறந்த முறையில் விளக்குகின்றார்.

சிறந்த வரலாற்றுச் செய்தியையும் இவர் புராணச் செய்தியாக்கி விடுகின்றார். 99 ஆம் பாடலில் உள்ள 'பூவார்கா' என்பதற்கு 'வானோர் இவன் (அதியமான்) முன்னோர்க்கு வரங் கொடுத்தற்கு வந்திருந்ததொரு கா' என்றார். மேலும், 195 ஆம் பாடலில் வரும் மோரியரை, 'சக்கரவாள சக்கர வர்த்திகள்; விச்சாதரரும், நாகரும் என்ப' என்று கூறி விடுகின்றார். வரலாற்று நிகழ்ச்சியையும் புராணச் செய்தியாக்க இவர்க்கு எந்தச் சான்றுகள் கிடைத்தனவோ, தெரியவில்லை!

புறநானூற்றுப் பாடல்களில் வந்துள்ள உவமைகளைப் பொருளுடன் பொருத்திக்காட்டுவதில் இவ்வுரையாசிரியர் வல்லவர்.

**புலிசேர்ந்து போகிய கல்லளை போல**
**ஈன்ற வயிறோ இதுவே** **(86)**

என்பதற்கு, "புலி சேர்ந்து போகிய அளை போல, அவனுக்கு என்னிடத்து உறவும் அத்தன்மைத்து என்பதாம்" என்று உரைக்கின்றார்.

ஔவையார் பாடிய 206-ஆம் பாடலில்,

**மரங்கொல் தச்சர் கைவல் சிறாஅர்**
**மழுவுடைக் காட்டகத் தற்றே**
**எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே**

என்ற உவமையை இவ்வுரையாசிரியர் பின்வருமாறு விளக்குகின்றார்: "பரிசிலர்க்குச் சிறாரும், கல்விக்கு மழுவும், செல்லும் திசைக்குக் காடும், சோற்றுக்குக் காட்டுள் மரமும் உவமையாகக் கொள்க".

இத்தகைய உவமை விளக்கங்களை 13, 54, 87, 102, 109, 218 ஆகிய பாடல்களின் உரைகளில் காணலாம்.

இவ்வுரையாசிரியர் அரிய சொற்கள் பலவற்றிற்குப் பொருள் கூறுகின்றார். சிலவற்றைக் கீழே காண்போம்:

அருள் - ஒன்றின் துயர்கண்டால் காரணம் இன்றித் தோன்றும் இரக்கம் (5).

அன்பு -தன்னால் புரக்கப்படுவார் மேலுளதாகிய காதல் (5).

அல்லிப்பாவை ஆடுவனப்பு - ஆண்கோலமும் பெண் கோலமுமாய அவ்விருவரும் ஆடும் கூத்தை(33).

கராம்—முதலையுள் ஒரு சாதி (37).

வன்புலம்—குறிஞ்சியும் முல்லையும். மென்புலம்—மருதமும் நெய்தலும் (42).

கணிச்சி—குந்தாலி, மழு (42).

கலி—புகழும் அரவம் (52).

கோளி—பூவாது காய்க்கும் மரம் (58).

செம்மீன்—திருவாதிரை (60).

தளம்பு—சேறுகுத்தி (61).

அனந்தல்பறை—பறைகொட்டுவார் கை, புண்படுதலின் மந்தமாக ஒலித்தல் (62).

எருவை—தலைவெளுத்து, உடல் சிவந்திருக்கும் பருந்து; கழுகு எனினும் அமையும் (64).

ஓரி—தேன் முதிர்ந்தால் பரக்கும் நீலநிறம்; முசுக்கலை எனினும் அமையும் (109).

படை மடம்—வீரர் அல்லாதார் மேலும், முதுகிட்டார் மேலும், புண்பட்டார் மேலும், இளையார் மேலும் செல்லுதல் (142).

கைவழி—கையகத்து எப்பொழுதும் இருத்தலான் யாழைக் கைவழி என்றார், ஆகு பெயரான்.

இவ்வுரையாசிரியர் பதினெண்கணம் (1), முத்தீ (2), (9), மூவகை முரசம் (58) ஆகியவற்றைப் பெயர் கூறி விளக்குகின்றார்.

சில இடங்களில் மிகநயமாக இவர் விளக்கம் கூறுகின்றார். 148ஆம் பாடலில், 'எய்யாதாகின்று எம் சிறு 'செந்நாவே' என்ற அடியை விளக்கும்போது, "பொய் கூறாமையின் செந்நா' என்றார்; தற்புகழ்ந்தார் ஆகாமல் சிறு செந்நா என்றார்" என்று நயமாக உரைக்கின்றார். 219 ஆம் பாடலில்," முழு வள்ளூரம் உணக்கும் மள்ள" என்பதற்கு, "அரசு துறந்து வடக்கிருந்து உயிா் நீத்த உள்ள மிகுதியால் மள்ள என்றார்" என்று நயங் காண்கின்றார்.

பிட்டங் கொற்றனை வாழ்த்தவந்த வடம வண்ணக்கன் தாமோதரனார், "மாறுகொள் மன்னரும் வாழியர் நெடிதே" (172) என்று பகைவரையும் வாழ்த்துகின்றார். இதற்கு இவ்வுரையாசிரியர், "மாறுகொள் மன்னரும் வாழியர் என்ற கருத்து, இவன் வென்று திறைகொள்வது அவர் உளராயின் என்பதாம்," என்று நயம் உரைக்கின்றார்.

பாரி மகளிரை விச்சிக்கோனிடம் கொண்டு சென்று ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டிய பாடல் (200) பரிசில் துறை என்பது பொருந்துமா என்ற வினாவுக்கு மிகநயமாக விடை கூறுகின்றார் இவ்வுரையாசிரியர். "உலகத்து மகட் பேசிவிடக் கொடுத்தலை அன்றி, தாமே இவரைக் கொள்வாயாக என்று இரந்து கூறினமையின், இது பரிசில் துறையாயிற்று" என்பது இவர் தரும் விளக்கம்.

இத்தகைய பல சிறப்பியல்புகளையுடைய இப் பழைய உரை 266 பாடல்களுக்கு மட்டுமே உள்ளது. 267 முதல் 400 வரை உள்ள பாடல்களுக்கு டாக்டர் உ.வே. சா. குறிப்புரையும் சிறு விளக்கமும் எழுதி வெளியிட்டார். பின்னர் ஔவை சு. துரைசாமி பிள்ளை நூல் முழுமைக்கும் சிறந்த உரை விளக்கம் எழுதியுள்ளார். இவ்வுரை பொருத்தமான பாடங்களை ஆராய்ந்து தருகின்றது. வரலாற்றுச் செய்திகளையும், சங்க காலத்து மக்கட் பெயர், ஊர் நாடுகளின் பெயர் ஆகியவற்றைக் கல்வெட்டுகளின் உதவி கொண்டு தெளிவுபடுத்துகின்றது. புலவர் வரலாறறையும் மன்னர் களின் வரலாற்றையும் விரிவாக ஆராய்ந்து உரைக்கின்றது.

## 3. பதினெண் கீழ்க்கணக்கு உரைகள்

பதினெண் கீழ்க்கணக்கில் உள்ள பல நூல்கள், வச்சிர நந்தி மதுரையில், நான்காம் தமிழ்ச்சங்கம் நிறுவித் தமிழ் வளர்த்த காலத்தில் தோன்றியவை என்று ஆராய்ச்சியாளர்கள் கருது கின்றனர்.

'பன்னிரு படலம்' கீழ்க்கணக்கைப்பற்றி

**அடிநிமிர் வில்லாச் செய்யுள் தொகுதி**
**அறம்பொருள் இன்பம் அடுக்கி அவ்வகைத்**
**திறம்பட வருவது கீழ்க்கணக் காகும்.**

என்று கூறுகின்றது. கணக்கு என்ற சொல்லுக்கு நூல் என்பது பொருள். கீழ் என்பது, பாடலின் குறுகிய அளவைக் குறிக்கின்றது.

'வனப்பியல்தானே' என்ற தொல்காப்பிய (செய்யுளியல்) நூற்பாவில், பேராசிரியர் 'கீழ்க்கணக்கு' நூல்களைக் குறிப்பிடு கின்றார்.

பதினெண் கீழ்க்கணக்கின் பெயர்களை,

**நாலடி நான்மணி நானாற்பது ஐந்திணைமுப்**
**பால்கடுகம் கோவை பழமொழி மாமூலம்**

இன்னிலைசொல் காஞ்சியுடன் ஏலாதி என்பவே
கைந்நிலைய வாம்கீழ்க் கணக்கு

என்னும் பழைய வெண்பா குறிப்பிடுகின்றது. இந்தப் பாடலில் உள்ள நூலின் பெயர்களை 1885-இல் சி.வை. தாமோதரம் பிள்ளை ஆராயத் தொடங்கினார். அவர் தொடங்கி வைத்த ஆராய்ச்சி வளர்ந்தது. பலர் பங்கு கொண்டனர்.

முப்பால் என்பது எது? திருக்குறளா? கடுகம் என்பதற்கு அடை மொழியா?

இன்னிலை, கைந்நிலை என்பவை தனித்தனி நூல்களா? "இன்னிலை சொல்" என்பது காஞ்சிக்கு அடைமொழியா? இரண்டும் நூல்கள் ஆயின், அவை எங்கே?

இத்தகைய ஆராய்ச்சி நடந்து கொண்டிருக்கும்போது 'இன்னிலை' என்ற பெயருடன் புதிதாய் ஒரு போலி நூல் தோன்றிப் பழையநூல் போல் மருட்டியதால், வ.உ.சி. யால் அஃது உரையுடன் பதிப்பிக்கப்பட்டது.

காலம் செல்லச் செல்லத் தெளிவு பிறந்தது. முப்பால் என்பது திருக்குறளே என்று முடிவு செய்யப்பட்டது. இன்னிலை என்பது 'காஞ்சி'க்கு அடைமொழி என்பது தெரிந்தது. கைந்நிலை என்பது பழைய நூல் என்பதை, தொல்காப்பியம் இளம்பூரணர் உரை அறிவித்தது. அவ்வுரை கைந்நிலைக்குரிய சில வெண் பாக்களை மேற்கோள்காட்டி இருப்பதை அறிந்து, அந்த நூல் ஐந்திணை கூறும் அகப்பொருள் நூல் என்று தெளிய முடிந்தது. அதனால் 'இன்னிலை' பிற்காலத்துப் பொய்ந்நூல் என்பது உறுதி யாயிற்று.

இனி, மேலே உள்ள வெண்பா கூறுகின்ற 18 நூல்களின் பெயர்களைக் காண்போம்:

1. நாலடி—நாலடியார்
2. நான்மணி—நான்மணிக்கடிகை
3.6. நானாற்பது—இனியவை நாற்பது, இன்னா நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது.
7.10. ஐந்திணை—திணைமொழி ஐம்பது, ஐந்திணை எழுபது, ஐந்திணை ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது.

11. முப்பால் — திருக்குறள்
12. கடுகம் —திரிகடுகம்
13. கோவை —ஆசாரக் கோவை
14. பழமொழி —பழமொழி நானூறு
15. மாமூலம் —சிறுபஞ்சமூலம்

16. காஞ்சி —முதுமொழிக் காஞ்சி
17. ஏலாதி —ஏலாதி
18. கைந்நிலை —கைந்நிலை

இவற்றுள் திருக்குறள் நாலடியார் இரண்டும், அறம் பொருள் இன்பம் ஆகிய மூன்றையும் கூறுகின்றன.

நான்மணிக்கடிகை, இனியவை நாற்பது, இன்னா நாற்பது, திரிகடுகம், ஆசாரக் கோவை, பழமொழி நானூறு, சிறுபஞ்சமூலம், முதுமொழிக் காஞ்சி, ஏலாதி ஆகிய ஒன்பதும் நீதி நூல்கள்.

கார் நாற்பது, திணைமொழி ஐம்பது, ஐந்திணை எழுபது, ஐந்திணை ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, கைந்நிலை ஆகிய ஆறும் அகப்பொருள் நூல்கள்.

களவழி நாற்பது ஒன்று மட்டும் போர்க்களக் காட்சியைப் பாடும் புறப்பொருள் நூல்.

**உரைகள்**

மேலே குறிப்பிட்ட 18 நூல்களில் பெரும்பாலானவற்றிற்குப் பழைய உரைகள் உள்ளன. திருக்குறளுக்குப் பத்து உரைகள் தோன்றியுள்ளன. நாலடியாருக்கு மூன்று உரைகள் உள்ளன.

நீதி நூல்களில் ஏலாதி நீங்கலாக உள்ள எட்டிற்கும் பழைய உரைகள் முழுமையாய் உள்ளன. ஏலாதியில் சில பகுதிகளுக்கு உரை சிதைந்து விட்டது.

அகப்பொருள் நூல்களில் ஐந்திணை ஐம்பது, திணைமாலை ஐம்பது இரண்டிற்கும் பழைய உரைகள் முழுமையாகக் கிடைத்துள்ளன. திணைமாலை நூற்றைம்பதில், 126 ஆம் பாட்டிற்குமேல் பழைய உரை கிடைக்கவில்லை. ஐந்திணை எழுபதில், முதல் 24 பாடல்களுக்கே உரை உள்ளது. கைந்நிலை, நூல் சிதைந்துள்ளது போலவே உரையும் சிதைந்துள்ளது. கார் நாற்பதில் 23 முதல் 38 வரையுள்ள பாடல்களுக்குப் பழைய உரை இல்லை.

புறப்பொருள் நூலாகிய களவழி நாற்பதுக்கு உரை முழுமையாகக் கிடைத்துள்ளது.

இந்தப் பழைய உரைகள் யாவும் பொழிப்புரையாக உள்ளன; பழைமரபு அறிந்து எழுதப்பட்டுள்ளன. சுருக்கமும் தெளிவும் பெற்றுள்ளன; அருஞ்சொற்பொருளும் இலக்கணக் குறிப்பும் தருகின்றன.

1883-ஆம் ஆண்டில், ஆசாரக் கோவையைப் பழைய உரையுடன், திருத்தணிகை விசாகப் பெருமாள் ஐயர் வெளியிட்டார். சைவ சித்தாந்த கழகம், பல பழைய உரைகளை வெளியிட்டுள்ளது. கா. நமசிவாய முதலியார், திருமணம் செல்வக்

கேசவராய முதலியார் ஆகியோர் பழமொழி நானூற்றைப் பழைய உரையுடன் வெளியிட்டனர்.

சில தமிழறிஞர்கள் தாமே புதிதாக உரை எழுதி வெளியிட்டனர். அவற்றுள் சில:

நான்மணிக்கடிகை (1922)—கோ. இராசகோபாலபிள்ளை உரை.

இன்னா நாற்பது (1922)—கா.ரா. கோவிந்தராச முதலியார் உரை.

களவழி நாற்பது (1877)—சோடாவதானம் சுப்பராய செட்டியார் உரை.

இன்னும்பலர், உரை எழுதும் பணியில் ஈடுபட்டுத் தொண்டு செய்துள்ளனர்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், எல்லா நூல்களுக்கும் தக்க அறிஞர் பெருமக்களைக் கொண்டு மிகச் சிறந்த முறையில் உரைகளை எழுதி வெளியிட்டுள்ளது.

அடுத்து வரும் பகுதிகளில், நாலடியார் திருக்குறள் இரண்டிற்கும் தோன்றியுள்ள உரைகளின் திறன்களைக் காண்போம்.

## 4. நாலடியார்

நாலடியார் என்னும் நூலை, 'நாலடி நானூறு' என்றும் வழங்குவர். நாலடியார் ஒரு தொகை நூல். இதில் உள்ள வெண்பாக்களைச் சமண முனிவர் பலர் இயற்றியுள்ளனர். நச்சினார்க்கினியர், சீவக சிந்தாமணி உரையில் (1089) நாலடியார் பாடல் ஒன்றை மேற்கோள் காட்டுகின்றார். "பிறரும் இச்சமயத் தார், 'சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா' (நாலடி-110) என்பதனாலும் உணர்க" என்று கூறுகின்றார். இதனால் நாலடியார், சமண சமயத்தவர் செய்த நூல் என்பது தெளிவாகின்றது. நச்சினார்க்கினியர், நூலியற்றியவரை 'இச் சமயத்தார்' என்று பன்மையாற், சுட்டுகின்றார். ஒருவர் பெயரையும் குறிப்பிட்டுக் கூறவில்லை.

யாப்பருங்கல விருத்தி (செய்யுளியல்-4), செப்பலோசையை விளக்கும்போது, "இன்னவை பிறவும், நக்கீரர் நாலடி நானூற்று வண்ணத்தால் வருவனவும் எல்லாம் தூங்கிசைச் செப்பலோசை" என்று கூறுகின்றது. இதைக் கொண்டு நாலடியார் நக்கீரரால் எழுதப்பட்டது என்பர்.* இங்கே குறிப்பிடும் 'நக்கீரர் நாலடி

* தமிழ் : அன்றும் இன்றும்—பக்.23 (1967). மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை.

நானூற்று வண்ணம்' என்பது மறைந்துபோன நூலாக இருக்கலாம். இதனை வலிமையான சான்றாகக் கொள்ள இயலாது.

நாலடியாரைப் பயில்பவர், அது ஒரு தொகை நூல் என்பதை எளிதில் உணர்வர். அதில் உள்ள பாடல்கள் வேறு வேறு நடையின; பல வேறு வகையான சொல்லமைப்பின; கருத்துத் தொடர்ச்சி உடையவை அல்ல.

நக்கீரர் என்ற பெயர், சமண சமயத்தவர்க்கு உரியதன்று. நாலடியாரில் தொட்ட இடமெல்லாம் சமணக்கருத்துகள் உள்ளன. ஆதலின், அதனை நக்கீரர் இயற்றினார் என்ற கருத இயலாது.

**உரைகள்**

பதினெண் கீழ்க்கணக்குகளில், திருக்குறளுக்கு அடுத்த படியாக அறிஞர் பெருமக்களின் பாராட்டுதலைப்பெற்ற நீதி நூல் நாலடியாராகும். இந் நூலுக்கும் காலந்தோறும் பலப்பல உரைகள் தோன்றியுள்ளன.

நாலடியாருக்குப் பழைய உரைகள் மூன்று உள்ளன. ஒன்று. பதுமனார் இயற்றியது. மற்றொன்று, தருமர் செய்தது. இன்னொன்று, பெயர் அறியப்படாத ஒருவர் செய்தது.

**பதுமனார்**

நாலடியாருக்கு முதன் முதலில் உரைகண்டவர் பதுமனார். பத்மம் என்ற சொல்லுக்குத் தாமரை என்பது பொருள். பதுமம் என்ற சொல்லின் திரிபு அது. பதுமம் என்ற பெயரினடியாகப் பிறந்த பெயரே பதுமனார் என்பது.

பதுமனாரின் வரலாறுபற்றி அறியத்தக்க சான்றுகள் கிடைக்கவில்லை.

நாலடியாரில் உள்ள நானூறு வெண்பாக்களையும் பொருள் அறிந்து ஓதி உணர்ந்து, திருக்குறளைப் பின்பற்றி அதிகாரம் தோறும் பத்துப்பாடலை அமைத்து அதிகாரங்களுக்கு ஏற்ற பெயரிட்டவர் பதுமனாரே. மேலும் அறம், பொருள், இன்பம் என்ற மூன்று பெரும்பகுதியாக்கி, அவற்றில் பல இயல்களை அமைத்து உரை இயற்றி வரும் இவரே.

பதுமனார் நாலடியாருக்கு அதிகாரம் வகுத்த செய்தியைத் தருமர் தம் உரைச் சிறப்புப் பாயிரத்தில்,

மதுமலர்த் தண்டார்ப் பதுமன் தெரிந்த
ஐயமில் பொருண்மை அதிகா ரம்தாம்
மெய்யா நலத்த எண்ணைந்து அவற்றுள்

என்றும், பழையவுரையாசிரியர் முகவுரையில், "இப்படி நாற்பது அதிகாரமும் பதுமனார் அடைவு செய்த இந்த அறம் பொருள் இன்பம் மூன்றும் வழுவாமல் நடாத்தி" என்றும் கூறுகின்றார்கள்.

டாக்டர் உ.வே. சாமிநாதஐயர் 'நாலடியார்க்கு உரை இயற்றிய பதுமனார் நாலடியாரில் திருக்குறளிற் போல அதிகாரம் வகுத்தவர். குடத்துக்குள் யானையைப் புகுத்துவது போல், பல பாடல்களைச் சில அதிகாரங்களில் அவர் புகுத்தி இருக்கின்றார்.* என்று கூறுகின்றார்.

பதுமனாரின் உரைப்பாயிரம் நாலடியாரைப் பின் வருமாறு பகுத்துக் காட்டுகின்றது.

அறவியல் இருவகைத் தாம்;அவை தம்முள்
துறவுஏழ்; இல்லறம் இருமூன்று என்ப;
பொருளியல் வகைஏழ்; புலப்படக் கிளப்பின்—
அரசியல் ஏழதி காரம் ஆகும்;
நட்பியல் நான்கதி காரம்; இன்பம்
மூன்றே; துன்ப இயல்அதி காரம்
நான்கே; ஒன்றே பொதுவியல்; பகையியல்
கூறு அதிகாரம் நான்கே; பன்னெறி
வகைதான் இருவகை; அவற்றுள் இன்ப
துன்பத்து அதிகாரம் ஒன்றே—ஏனை
இன்பம் கூறுஅதி காரம் இரண்டே.

உரையில் இவை விரித்து அதிகாரங்களின் பெயர்களோடு விளக்கப்படுகின்றன.

பதுமனார் உரை முதலில் தோன்றிய உரையாக இருந்தும் மிகவும் சிறப்பாக அமைந்துள்ளது. பழம்பெருமை வாய்ந்த இவ்வுரை பல ஆண்டுகளாக வெளிப்படாமல் இருந்து 1953ஆம் ஆண்டில்தான், தஞ்சை சரசுவதி மகால் வெளியீடாக (59-அ) உரைவளம் என்ற பெயருடன் இருபகுதியாக வெளிவந்தது. உரை வளத்தில் தருமர் உரையும் பழையவுரையும் இடம் பெற்றுள்ளன.

பதுமனாருடைய உரை, பொழிப்புரையாக உள்ளது. தேவையான இடங்களில் பொருள் விளக்கத்திற்காகப் பல சொற்களை வருவித்துக் கூறுகின்றது. பொழிப்புரையின் கீழ் அருஞ்சொற் பொருளும், மிகக்குறைவாக இலக்கணக் குறிப்பும்

* சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும் (பக்கம் 159, 160)

உள்ளன. கருத்துச் செறிவும் இலக்கண வழுவற்ற நடையும், தனித் தமிழ்ச் சொல்லாட்சியும் பதுமனாரிடம் காணலாம். சுருங்கச் சொல்லி விளங்கவைப்பதில், இவர் வல்லவராக விளங்குகின்றார்.

## தருமர்

தருமர் பதுமனாருக்குப்பின் நாலடியாருக்கு உரை எழுதியவர். உரைப்பாயிரத்தில் இவர் பதுமனாரைக் குறிப் பிடுகின்றார். திருக்குறள் உரையாசிரியர்களில் 'தருமர்' குறிப்பிடப் படுகின்றார். இருவரும் ஒருவரா அல்லது வேறுபட்டவரா என்று அறிய, திருக்குறள் தருமர்உரை கிடைக்கவில்லை.

பதுமனார் உரைக்கு விரிவுரையாகத் தருமர்உரை உள்ளது. பாடலுக்குப் பொழிப்புரை இயற்றியபின் மிகவிரிவாக நயமும் பொருளும் கூறுகின்றார்.

தருமர் உரைப்பாயிரம் நாலடியாரைப் பற்றியும், பதுமனாரைப்பற்றியும் விளக்கமாகக் குறிப்பிடுகின்றது.

நாலடியார் பாடல்கள் இயற்றிய முனிவர்களை,

**வளங்கெழு திருவொடு வையகம் முழுதும்**
**உளங்குளிர் இன்பத்து இன்பம் உவப்ப**
**வண்பெருஞ் சிறப்பின் மாதவம் புரிந்தாஅங்கு**
**எண்பெருங் குன்றத்து இருந்தவ முனிவர்**

என்று பாயிரம் குறிப்பிடுகின்றது; சமண முனிவர்கள் தவம் புரிந்துகொண்டு எண்பெருங் குன்றத்து இருந்ததைக் கூறுகின்றது. அம் முனிவர்கள் எண்ணாயிரம் வெண்பாக்கள் இயற்றியதாய்ப் பாயிரம் கூறுகின்றது:

**அறம்பொருள் இன்பம் வீடுஎனும் அவற்றின்**
**திறம்பிறர் அறியும் திறத்தை நாடிப்**
**பண்புற எடுத்துப் பாங்குறப் பகர்ந்த**
**வெண்பா வியல் எண்ணாயிரம்.**

இவ் எண்ணாயிரம் பாடல்களில், பல பாடல்கள் மறைந்து காலப் போக்கில் நானூறு பாடல்களே எஞ்சி நின்று வாழ்வுபெற்றன என்பதைப் பாயிரம்,

**....எண்ணாயிரம் இவற்றுள்**
**பார்எதிர் கொண்டு பரவி ஏத்த**
**நீர்எதிர் வந்து நிரையணி பெற்ற**
**மேல்நூல் தகையின் விதிமுறை பிழையாஅ**
**நானூறு**

என்று கூறுகின்றது.

நானூறு பாடல்களைப் பதுமனார் நயந்தெரிந்து ஓதி நாற்பது அதிகாரங்கள் வகுத்ததை,

நானூறு அவற்றின் நயந்தெரிந்து ஓதிய
மதுமலர்த் தண்டார்ப் பதுமன் தெரிந்த
ஐயமில் பொருண்மை அதிகாரம் தாம்
மெய்யா நலத்த எண் ஐந்து

என்று பாயிரம் உரைக்கின்றது.

தருமனார் நாற்பது அதிகாரங்களையும் பாகுபடுத்தியதை

....எண் ஐந்து அவற்றுள்,
அறவியல் பதின்மூன்று; அரசர்க்கு உரிய
பொருளியல் இருபத்து ஒருநான்கு; இன்பம்
ஆன்ற வகையை மூன்றுஎன மொழிந்தனன்
சான்றோர் ஏத்தும் தருமத் தலைவனே

என்று கூறி முடிக்கின்றது பாயிரம்.

தருமரைப் பற்றி

சீல முனிவர் இருந்து தெரிந்துரைத்த
நாலடி நானூற்றின் நற்பொருளைப்—பால்வகையே
கண்டான் பொருள்தான் பயனுரைத்தான் காதலித்துத்
தண்டார்ப் பொறைத்தருமன் தான்

என்ற வெண்பா ஒன்றும் உள்ளது.

### விளக்கவுரை

பதுமனார், தருமர் உரைகளேயன்றி நாலடியாருக்கு வேறோர் உரையும் உள்ளது. அவ்வுரை இயற்றியவர் பெயர் தெரியவில்லை. அவ்வுரையை வெளியிட்ட சரசுவதி மகால் விளக்கவுரை என்ற பெயரைத் தந்துள்ளது.

விளக்கவுரை, பதுமனார் தருமர் ஆகிய இருவர் உரை களையும் தழுவி எழுதப்பட்டுள்ளது. இவர், மற்ற இரு உரை யாசிரியர்கள் கருத்திலிருந்து வேறுபட்டு அதிகாரங்களைப் பிரிக்கிறார். அறத்துப்பாலில் பதின்மூன்று அதிகாரமும், பொருட் பாலில் இருபத்து ஆறு அதிகாரமும், காமத்துப் பாலில் ஓர் அதி காரமும் அமைக்கின்றார்.

### பிற்கால உரைகள்

நாலடியார் போன்ற நீதி நூல்களை, மாணவர் பயிலும் நோக்கத்துடன் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பாட நூலாக வைத்த பின்னர், அவற்றிற்குப் உரைகள் பல தோன்றின. உரையும் விளக்கமும் நாடெங்கும் பரவின.

நாலடியாருக்கு உரை கண்டவர் பெயரும், உரை வெளி வந்த ஆண்டும் கீழே தரப்படுகின்றன:

புதுவை நயனப்ப முதலியார் *(1812)*

புதுவை அ. வேதகிரி முதலியார் *(1812)*

திருமயிலை முருகேச முதலியார் *(1874)*

கோமளபுரம் ராசகோபால பிள்ளை *(1904)* .

வேதகிரி முதலியார் *(1908)*

களத்தூர் வேதகிரி முதலியார் *(1913)*

வை.மு. சடகோப ராமாநுசாச்சாரியார் *(1921)*

வே. நாராயண ஐயர் *(1924)*.

இவர்களுக்குப் பின்னரும் நாலடியாருக்கு உரை காணும் முயற்சியில் பலர் ஈடுபட்டு வந்துள்ளனர்.

# திருக்குறள் உரையாசிரியர்கள்

## 1. திருக்குறள் உரைகள்

தமிழ்மொழியில் தோன்றிய நூல்களுள் திருக்குறளுக்குப் பலவகையான சிறப்புகள் உண்டு. உரைகள் காலந்தோறும் தோன்றி வருவது அந்நூலின் சிறப்புகளில் ஒன்று. பரிமேலழகர்க்கு முன், ஒன்பது உரைகள் திருக்குறளுக்குத் தோன்றின. பத்தாவது உரையாகப் பரிமேலழகர் உரை தோன்றிய பின்னரும் கூட, கணக்கற்ற உரைகள் தோன்றியுள்ளன.

திருக்குறளுக்கு நேரே உரை எழுதியவர்களே அல்லாமல் இளங்கோ அடிகள், சீத்தலைச் சாத்தனார், சேக்கிழார், கம்பர் போன்ற புலவர் பெருமக்கள் தம் நூல்களில் ஆங்காங்கே திருக்குறளை எடுத்தாண்டு, விளக்கமும் கூறியுள்ளனர். அப் பகுதிகளை எல்லாம் ஒன்றுசேர்த்துப் பார்த்தால் அச் சான்றோர்கள் திருக்குறளுக்குச் செய்யுள் வடிவில் உரைவிளக்கம் கூறி இருப்பது வெளிப்படும். பிற்காலத்தில் நீதி நூல்களை இயற்றிய சான்றோர்களும், திருக்குறளுக்குச் செய்யுள் வடிவில் உரை இயற்றியுள்ளனர்.

திருக்குறளைப் பயின்றவர்கள் அதன் சுவையில் ஈடுபட்டுப் புகழ்ந்து பாடினர். திருக்குறளில் உள்ள பால், இயல், அதிகாரம், பா ஆகியவற்றைக் கணக்கிட்டு உரைத்தனர். அவ்வாறு புகழ்ந்து பாடிய பாடல்கள் திருவள்ளுவமாலை என்ற பெயருடன் வழங்கி வருகிறது. திருக்குறளில் பால்தோறும் உள்ள இயல்களை ஆராய்ந்து உரைப்பது உரையாசிரியரின் பணியாதலின் (திருவள்ளுவ மாலையில்) இயல்ஆராய்ச்சியில் ஈடுபட்டுப் பாடல்கள் இயற்றியவர்களும் உரையாசிரியர்களாக மதிக்கத் தகுந்தவர்களே.

திருக்குறளுக்கு உரை எழுதாமல் வேறு நூல்களுக்கு உரை இயற்றியவர்கள் தம் உரைகளில் தேவையான இடங்களில் திருக்குறட்பாக்கள் சிலவற்றிற்கு உரை எழுதியுள்ளனர்.

2.22.

சிலப்பதிகாரத்தின் அரும்பதவுரையாசிரியர், அடியார்க்கு நல்லார், நச்சினார்க்கினியர், மயிலைநாதர், சங்கர நமசிவாயர் ஆகியோர் தம் உரைகளில் வாய்ப்பு நேர்ந்தபோது திருக்குறள் சிலவற்றிற்கு உரை கண்டுள்ளனர். அவ்வுரைகள் புதிய கருத்துகளுடன், இன்றுள்ள உரைகளோடு மாறுபட்டு உள்ளன. திருக்குறள் உரைகளைப் பதிப்பித்து வெளியிடுவோர் அத்தகைய உரை விளக்கங்களையும் சேர்த்து வெளியிட வேண்டும்.

பல ஆண்டுகளுக்குமுன், திருக்குறளுக்கு உரை எழுதிய பதின்மரை,

**தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்**
**பரிதி பரிமே லழகர்—திருமலையர்**
**மல்லர் பரிப்பெருமாள் காலிங்கர் வள்ளுவர்நூற்கு**
**எல்லையுரை செய்தார் இவர்**

என்ற தனிப் பாடல் கூறுகின்றது. இப் பதின்மருள் இன்று பரிமேலழகர், மணக்குடவர், பரிதி, பரிப்பெருமாள், காலிங்கர் ஆகிய ஐவர் இயற்றிய உரைகள் கிடைத்து அச்சில் வெளி வந்துள்ளன. ஏனையோர் உரைகள் கிடைக்கவில்லை. கடவுள் வாழ்த்தில் (5.6) இரண்டு குறள்களுக்குத் தாமத்தர் நச்சர் தருமர் ஆகிய மூவர் உரைகள் கிடைத்துள்ளன. மற்ற உரைகள் மறைந்தது தமிழிலக்கிய உலகிற்குப் பெரிய இழப்பாகும்.

கம்பர் காலத்தில், திருக்குறளுக்குச் சில உரைகள் வழங்கின என்று கருத இடமுண்டு.

**அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு**
**என்போடு இயைந்த தொடர்பு**

என்ற குறளுக்குத் தம் காலத்தில் வழங்கிய வேறு உரைகளைப் பின்வரும் பாடலில் கம்பர் குறிப்பிடுகின்றார்:

**என்பென்பது யாக்கைஎன்பது உயிர்என்பது இவைகளெல்லாம்**
**பின்பென்ப அல்லவேனும் தம்முடை நிலையிற்பேரா**
**முன்பென்ப உளஎன்னும் முழுவதும் தெரிந்தவாற்றால்**
**அன்பென்பது ஒன்றின்தன்மை அமரரும் அறிந்ததன்றால்.**

**(யுத்த–மருத்துமலை–4)**

பரிமேலழகர்க்குமுன் இருந்த தருமரைப்பற்றி அபிதான கோசம், "வள்ளுவருக்கு உரை செய்த பதின்மருள் முற்பட்டவராகிய தருமர் (தரும சேனர்) உரையில் ஆருகத மதக் கொள்கைகளே பிரசங்கிக்கப்பட்டன" என்று கூறுகின்றது.

தருமர் நாலடியாருக்கும் உரை இயற்றியுள்ளார். அவ்வுரை அச்சில் வந்துள்ளது. இவரைப்பற்றி வேறு செய்தி எதுவும் தெரிய வில்லை.

நச்சர் என்பவர் நச்சினார்க்கினியர் என்று சிலர் கருது கின்றனர். ஆனால் நச்சர், நச்சினார்க்கினியர் என்பதற்குப் போதிய சான்றுகள் இல்லை. பெயரில் உள்ள சில எழுத்துக்களின் ஒற்றுமை அவ்வாறு நினைக்க இடம் தருகின்றது. நச்சினார்க் கினியரைப்பற்றிய சிறப்புப் பாயிரம் அவர் திருக்குறளுக்கு உரை இயற்றியதாய்க் குறிப்பிடவில்லை.

திருமலையர் என்பவர் சமணராய் இருத்தல் கூடும். திருமலை என்பது, வட ஆர்க்காடு மாவட்டத்தில் உள்ளது; சமணர்க்குரிய இடமாய்த் திகழ்ந்து வருகின்றது.

தாமத்தர், மல்லர் ஆகியோரைப்பற்றி எந்தச் செய்தியும் வெளிப்படவில்லை.

ஏனைய உரையாசிரியர்களைப்பற்றி அடுத்து வரும் பகுதி களில் விரிவாகக் காண்போம்.

பத்து உரைகளே அன்றி, இயற்றியவர் பெயர் தெரியாத இரண்டு உரைகளும் உள்ளன. அவற்றுள் ஒன்றினை 'திருக்குறள் பழையவுரை' என்ற பெயருடன் டாக்டர் உ.வே.சா. நூல் நிலையம் வெளியிட்டுள்ளது. மற்றோர் உரை பரிதியாரின் உரையைத் தழுவி எழுதப்பட்டுள்ளது. முதல் பதினோரு அதிகாரங்களுக்குமேல் இப் பழைய உரைக்கும் பரிதியார் உரைக்கும் வேறுபாடில்லை. கடவுள் வாழ்த்துப் பகுதியில் சைவ சமயக் கருத்திற்கு ஏற்பக் கடவுளின் தன்மை கூறப்பட்டுள்ளது. வழக்குச் சொற்களும் வடசொற்களும் மிகுதியாக உள்ளன. சைவ சமயச் சார்புடைய புராணங்கள் மேற்கோள் காட்டப்பெறுகின்றன. நடைச் சிறப்பு இல்லா விட்டாலும் கருத்துச் சிறப்பிற்காகக் கற்று மகிழவேண்டிய இடங்கள் பல உள்ளன.

திருக்குறளுக்குப் பல உரைகள் தோன்றியதற்கு உரிய காரணங்களை ஆராய்ந்த டாக்டர் வ.சுப. மாணிக்கம் பின்வரும் காரணங்களைக் கூறுகின்றார்:

"இதுகாறும் வந்த உரைகளை ஆராய்ந்தால் அவை பல்கியதற்குப் பின்வரும் காரணங்கள் கூறலாம்.

1. பாட வேற்றுமையால் சில உரை வேற்றுமைகள் காணப் படும். இவை ஆராய்ந்து ஏற்கத்தக்கன.

2. பாடம் கற்பித்துக்கொண்டு ஓரிருவர் புதுப் பொருள் காட்டியுள்ளனர்; இவர் பொறுக்கத் தகார்; மக்கள் கண்டிக்கவும் அரசு தண்டிக்கவும் தகுவர்.

3. இலக்கண வறுமையாலும் இலக்கணச் செருக்காலும் எழுந்த உரைவேற்றுமைகளும் உள; இவை பழிக்கத் தகும்.

6. முன்னோன் எழுதிய உரைப்பொருளைப் பெரிதும் தழுவக்கூடாது; தாம் ஒரு தனி யுரை எழுதத் துணிந்ததற்குச் சான்றாக எங்ஙனமேனும் பல குறட்குப் புத்துரை சொல்ல வேண்டும் என்னும் முனைப்பே திருக்குறள் உரை பலவற்றின் தோற்றத்துக்குக் காரணம் என்று சுருங்கச் சொல்லலாம்."[1]

திருக்குறள் உரை வேற்றுமைகளை நன்கு ஆராய்ந்து வெளியிட்ட டாக்டர் இரா. சாரங்கபாணி உரை வேற்றுமைக்கு உரிய காரணத்தைப் பின்வருமாறு உரைக்கின்றார்.

"ஏடெதுவோர் பிழையால் புகுந்த பாட வேறுபாடுகளும், குறளைப் பிரிக்கும் முறைகளும் சொற்களைக் கொண்டு கூட்டும் நெறிகளும், காலத்தால் சொற்கள் எய்திய பொருள் வேறுபாடு களும் சமுதாயத்தின் பழக்க வழக்க மாறுபாடுகளும் இயல்பாகவே உரை வேற்றுமைகட்கு இடங்கொடுத்து விட்டன. புற நாகரிகச் சார்பும் சமயச் சார்பும் அரசியற் சார்பும் முன்னிற்க, வலிந்து வேறுபட்ட உரைகளை எழுதினோரும் உளர்."[2]

உரைகள் பல தோன்றியும் எல்லோரும் ஒப்பும் ஓர் உரை இல்லாமை பெரிய குறைபாடே ஆகும். திருவள்ளுவர் கருத்து ஏதேனும் ஒன்றாகத்தான் இருக்கமுடியும். ஒரு குறளுக்கு ஒரு கருத்துத்தான் இருக்கமுடியும். ஆனால் திருவள்ளுவர் அவ்வாறெல்லாம் கருதினாரோ இல்லையோ, அவரது வாக்கு நமக்குப் பல வகையாய்ப் பொருள் கொள்ள இடந்தருகின்றது. வங்கக் கவிஞர் இரவீந்திரநாத தாகூர் கீதாஞ்சலியில், "கவிஞரின் சொற்களிலிருந்து மக்கள் தாம் விரும்பும் பொருளைப் பெற்று மகிழ்கின்றனர்"[3] என்று கூறியுள்ள கருத்து இங்கே நினைவுக்கு வருகின்றது.

பழைய உரைகளில் இன்று பரிமேலழகர் மணக்குடவர் பரிப்பெருமாள் காலிங்கர் பரிதி ஆகிய ஐவர் உரைகள் உரைக் கொத்திலும் உரை வளத்திலும் இடம் பெற்றுள்ளன. பரிமேலழகர் உரையும் மணக் குடவர் உரையும் பரிப்பெருமாள்உரையும் தனித்

1. எந்தச் சிலம்பு (1964) பக்கம் 40, 41.
2. உரைவேற்றுமை – நூன்முகம்.
3. From the words of the poet men take what meanings please them.

தனியாய் வெளிவந்துள்ளன. ஏனைய உரைகளும் விரிவான ஆராய்ச்சி முன்னுரைகளுடன் வெளிவருவது திறனாய்வுக்குப் பயன்தரும்.

1935-இல் பரிதி உரை வெளிவந்துள்ளது. அதனை மீண்டும் வெளியிடவேண்டும்.

## 2. திருக்குறள் அமைப்பும் உரையாசிரியர்கள் நோக்கும்

திருக்குறளுக்குப் பல உரைகள் தோன்றியுள்ளதால் அவற்றை ஒப்பிட்டுக் காணும் வாய்ப்பு ஏற்படுகின்றது. உரைகளை ஒப்பிட்டு நோக்கும்போது மாறுபட்ட கருத்துகள் வெளிப்படுகின்றன. நூலின்அமைப்பு, உரையாசிரியர்களின் நோக்கு, பால்தோறும் அமைந்துள்ள இயல்கள், அதிகாரம்தோறும் உள்ள குறள்அமைப்பு, ஒரே குறளுக்குப் பலவேறு கருத்துக்கள், ஒரே சொல்லுக்கு வேறுவேறு பொருள்கள் ஆகியவற்றைத் தெளிவாக அறியமுடிகின்றது.

பால்தோறும் அமைந்துள்ள இயல் பற்றிய ஆராய்ச்சி மிகவும் சுவையானது. இயல் பிரிப்பில்தான் உரையாசிரியர்கள் திருக்குறளை நோக்கிய நோக்கு வெளிப்படுகின்றது.

### திருவள்ளுவமாலை

திருக்குறள் இயல்அமைப்பை அறியத் திருவள்ளுவமாலை துணை செய்கின்றது; உரையாசிரியர்களின் கருத்தை ஒப்பிட்டுக் காண உதவுகின்றது. திருவள்ளுவ மாலையில் உள்ள,

பாயிரம் நான்கு இல்லறம் இருபான் பன்மூன்றே
தூய துறவறம் ஒன்று ஊழாக—ஆய
அறத்துப்பால் நால்வகையா ஆய்ந்துரைத்தார் நூலின்
திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து

(திருவள்–25)

என்ற வெண்பா அறத்துப்பாலின் இயல்களைக் கணக்கிட்டு உரைக்கின்றது.

அரசியல் ஐயைந்து; அமைச்சியல் ஈரைந்து
உருவல் அரண்இரண்டு; ஒன்றுஒண்கூழ்;—இருவியல்
திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்று
எண்பொருள் ஏழாம் இவை.

(திருவள்–26)

என்ற வெண்பா, பொருட்பாலை ஏழு இயல்களாகப் பிரித்துக் காட்டுகின்றது.

**ஆண்பால்ஏழ்; ஆறிரண்டு பெண்பால்; அடுத்தன்பு**
**பூண்பால் இருபால் ஓர்ஆறாக—மாண்பாய**
**காமத்துப் பக்கம்ஒரு மூன்றாகக் கட்டுரைத்தார்**
**நாமத்தின் வள்ளுவனார் நன்கு**

**(திருவள்–27)**

என்ற வெண்பா காமத்துப்பாலை மூன்றாகப் பிரிக்கின்றது.

இவ்வாறே தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையத்தில் கிடைத்த 'திருக்குறள் அதிகார அடைவு' என்னும் பழஞ்செய்யுள் ஒன்றும் பால்தோறும் இயல்களைப் பிரித்துள்ளது.

இனி, மற்ற உரையாசிரியர்கள் இயல்களை எவ்வெவ்வாறு பிரித்துள்ளனர் எனக் காண்போம்.

## அறத்துப்பால்

பரிமேலழகர், அறத்துப்பாலின் முதல் நான்கு அதிகாரங் களைப் பாயிரம் என்று கொண்டார் என்பதற்குப் போதிய சான்றுகள் இல்லை. உரைப்பாயிரத்தில் 'அறம், இல்லறம் துறவறம் என இருவகை நிலையால் கூறப்பட்டது' என்று கூறி, எடுத்துக் கொண்ட இலக்கியம் இனிது முடித்தற் பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறுகின்றார் என்ற குறிப்போடு நூலுள் நுழைகின்றார். கடவுள் வாழ்த்திற்கு அடுத்த மூன்று அதிகாரங்களும் அறத்துப் பாலின் தோற்றுவாயே என்பது அவர் கருத்தாதல் வேண்டும். இல் வாழ்க்கை முதல் *(5)* புகழ் ஈறாக *(24)* உள்ள இருபது அதிகாரங்கள் இல்லறம் பற்றியவை என்ற கருத்து அவர்க்கு உடன்பாடே.

துறவற இயலை *(25-37)* அவர் விரதம், ஞானம் என இரண்டாகப் பகுத்துக் கொண்டு விளக்கம் எழுதுகின்றார். அருளுடைமை முதல் கொல்லாமை ஈறாக *(25-33)* உள்ளனவற்றை விரதம் என்றும், நிலையாமை முதல் அவாவறுத்தல் வரை *(34-37)* உள்ளனவற்றை ஞானம் என்றும் பகுத்துக் கொள்ளுகின்றார்.

ஊழ்இயலைத் *(38)* தனி இயலாகவே கருதுகின்றார். மணக்குடவர், பரிதி, பரிப்பெருமாள், காலிங்கர் ஆகிய உரையாசிரியர்கள் திருவள்ளுவமாலை கூறுவதுபோல அறத்துப் பாலைப் பாயிரம் *(1-4)*, இல்லறவியல் *(5-24)*, துறவறவியல் *(25-37)*, ஊழியல் *(38)* என நான்காவே பிரிக்கின்றனர்.

## பொருட்பால்

பரிமேலழகர் பொருட்பாலை அரசியல் *(1-25)*, அங்கவியல் *(26-57)*, ஒழிபியல் *(58-70)* என மூன்றாகப் பகுத்து, உரை எழுது

கின்றார். அவர் கருத்துப்படி பொருட்பாலின் முதல் இருபத்தைந்து அதிகாரங்கள் அரசனின் சிறப்பை உணர்த்துவதால் அரசியல் எனப்படும்; அதற்கு அடுத்த முப்பத் திரண்டு அதிகாரங்கள் அரசனுக்கு அங்கமாகிய அமைச்சு, நாடு, அரண், பொருள், நட்பு என்ற ஐந்தினையும் பற்றியவை. அரசியலிலும் அங்கவியலிலும் அடங்காதவை ஒழிபியலில் கூறப்படுகின்றன.

பரிமேலழகர் 'குடி'யை அங்கமாகக் கொள்ளவில்லை. 'படை குடி' என்ற பொருட்பாலின் முதற்குறளின் விளக்கவுரையில், "ஈண்டுக் குடி என்றது அதனையுடைய நாட்டினை; கூழ் என்றது அதற்கு ஏதுவாய பொருளை" என்றும், "அமைச்சு நாடு அரண் பொருள் படை நட்பு என்பதே முறை யாயினும் ஈண்டுச் செய்யுள் நோக்கிப் பிறழவைத்தார்" என்றும் தம் கருத்தை அவர் வலியுறுத்துகின்றார்.

மணக்குடவர், பரிப்பெருமாள், பரிதி ஆகிய மூவரும் பொருட்பாலை அரசியல் *(1-25)*, அமைச்சியல் *(26-35)*, பொருளியல் *(36-40)*, நட்பியல் *(41-45)*, துன்பவியல் *(46-57)*, குடியியல் *(58-70)* என ஆறாகப் பிரித்து உரை கண்டுள்ளனர். பரிமேலழகர் ஒழிபியல் *(58-70)* என்று கொண்டதை இம் மூவரும் குடியியல் என்று கொண்டுள்ளனர்.

காலிங்கர் அமைத்த இயல்பிரிவே பொருட்பாலை நன்கு விளக்கும் கருவியாய் உள்ளது. அவர் பொருட்பாலை அரசியல் *(1-25)*, அமைச்சியல் *(26-35)*, அரணியல் *(36-37)*, கூழியல் *(38)*, படையியல் *(39, 40)*, நட்பியல் *(41-57)*, குடியியல் *(58-70)* என ஏழாகப் பிரித்து உரை கண்டுள்ளார். திருவள்ளுவ மாலையில் போக்கியார் செய்யுள் *(26)* கூறும் இயல் பிரிவுகள் இவ்வாறே அமைந்துள்ளன. மேலும்,

**படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு** **(381)**

என்பது பொருட்பாலின் முதற் குறள். இதனைப் பொருட்பாலின் திறவுகோல் என்னலாம். இதில் கூறியுள்ள ஏழுவகைப் பொருளையே பொருட்பால் விரித்துச் செல்கின்றது. இக் குறளில் அமைச்சு, அரண், கூழ், படை, நட்பு, குடி என்று கூறுவதே முறை யாயினும் செய்யுள் நோக்கிப் பிறழவைக்கப்பட்டுள்ளன. காலிங்கர் பொருட்பாலின் முதற் குறள் உரையில், "இங்குச் சொன்ன இறை முதலாகிய எழுவகைப் பொருளுமே இப்பொருட்பால் நடைப்பொருள் என அறிக" என்று தம் கருத்தைத் தெளிவாகக் கூறியுள்ளார்.

## காமத்துப்பால்

பரிமேலழகர் காமத்துப்பாலைக் களவு (1-7), கற்பு (8-25) என இரு பிரிவாக்கியுள்ளார். அதிகாரம்தோறும் அகப்பொருளுக்குரிய விளக்கம் கூறுகின்றார். ஒவ்வொரு குறட்பாவும் இன்னாருடைய கூற்று என்று குறிப்பிடுகின்றார். குறட்பாக்களுக்கு உரை எழுதும் போது தமிழ் அகப்பொருள் இலக்கணத்தை நன்கு பயன்படுத்தி, சிறப்பான முறையில் ஆராய்ந்து அரிய கருத்துகளை வெளியிட்டுள்ளார். காமத்துப்பாலுக்கு எழுதியுள்ள முன்னுரை யில் திருவள்ளுவர் 'தமிழ் நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவென்றும், பிரிவைக் கற்பென்றும் பெரும் பான்மை பற்றி வகுத்து' அமைத்துள்ளதாகக் கூறுகின்றார். பரிமேலழகரைப் போலவே காமத்துப்பாலை,

> **புணர்தல் பிரிதல் பொருள்;களவு கற்பென்று**
> **உணரும் இருகூறாம் உரைக்கில்–புணரும்**
> **களவுஏழ் அறுமூன்று கற்புஇவை ஐயைந்தாம்**
> **அளவுறு காமத்துப் பால்**

என்ற வெண்பா, இயல் பிரித்துக் காட்டுகின்றது. இப்பாடல் பரிமேலழகர் உரைக்குப்பின் அவர் கருத்தை நினைவில் கொள்ள எழுந்ததாக இருக்க வேண்டும்.

பரிப் பெருமாள், காமத்துப் பாலை அருமையிற் கூடல் (1-3), பிரிந்து கூடல் (4-21), ஊடிக் கூடல் (22-25) என மூன்றாகப் பகுத்துள்ளார். இவ்வாறு பிரிப்பது தமிழ் மரபு அன்று என்பதை உணர்ந்து அவர், "அதற்கு இலக்கணம் "யாங்ஙனம் பெறுதும்?" என்ற வினைவைத் தாமே எழுப்பிக் கொண்டு, "இதற்கு இலக்கணம், வாத்ஸ்யாயனம் என்னும் காமதந்திரத்துச் சுரத விகற்பம் என்னும் அதிகரணத்துள் கண்டுகொள்க" என்று விடையும் கூறுகின்றார்.

திருவள்ளுவர் செய்த காமத்துப்பால் தமிழ் அகப்பொருள் இலக்கணத்திற்கு இலக்கியம்; அகப் பாடல்களின் சாறு; பழந் தமிழ் மரபை ஒட்டி எழுந்த தீஞ்சுவைக் காதற் களஞ்சியம்; கற்பனைவளமும் இலக்கியச்சுவையும் சேர்த்து அமைக்கப்பட்ட கலைக் கோயில்; அன்பும் அறனும் ஒன்றிய இன்பநெறி. வாத்ஸ்யாயனம் அறிவு நுட்பத்துடன் உலகியலை ஆராய்ந்து எழுதிய நூல். அதில் மாசற்ற உள்ளத்தில் ஊறிச் சுரக்கும் அன்புக்கும் முறை திறம்பாத அறநெறிக்கும் இடமில்லை. எனவே, திருவள்ளுவரின் காமத்துப் பாலுக்கு வாத்ஸ்யாயனத்தை இலக் கணமாகக் கொள்வது பொருந்தாது.

மணக்குடவர் காமத்துப் பாலில் உள்ள இருபத்தைந்து அதிகாரங்களையும் குறிஞ்சி பாலை முல்லை நெய்தல் மருதம் என்ற வரிசைப்படி, ஒவ்வொரு திணைக்கும் ஐந்து அதிகாரங்கள் அமைத்துள்ளதாக, 'திருவள்ளுவர்' என்ற நூலில் (பக்கம்29) தமிழ்ப் பெரியார் செல்வக் கேசவராய முதலியார் கூறுகின்றார். அப் பெரியார் மணக்குடவர் உரையாகப் பின்வரும் பகுதியைத் தந்துள்ளார்:

"காமத்துப்பால் கூறுவார்: குறிஞ்சி பாலை முல்லை நெய்தல் மருதம் என்னும் ஐந்திணையும் முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றனுள், பெரும்பான்மையும் உரிப்பொருள் பற்றிப் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் குறிஞ்சி எனவும், பிரிதலும் பிரிதல் நிமித்தமும் பாலை எனவும், இருத்தலும் இருத்தல் நிமித்தமும் முல்லை எனவும், இரங்கலும் இரங்கல் நிமித்தமும் நெய்தல் எனவும், ஊடலும் ஊடல் நிமித்தமும் மருதம் எனவும் ஒரே நிலம் ஐந்து அதிகாரமாக இருபத்து ஐந்து அதிகாரத்தால் கூறி..."

இன்று அச்சாகியுள்ள மணக்குடவர் உரையில் இப்பகுதி காணப்படவில்லை. காமத்துப் பாலுக்குப் பரிப்பெருமாள் மேற்கொண்ட இயல் பிரிவுகளே மணக்குடவர் உரையிலும் உள்ளது. இதனை மேலும் ஆராய்தல் வேண்டும்.

சோழவந்தான் அரசன் சண்முகனார் காமத்துப் பாலை மேலே கூறியவாறு ஐந்தாகப் பிரிப்பதுண்டு என்று குறிப்பிடு கின்றார்.[1]

காலிங்கர் காமத்துபபாலை மூன்றாக (திருவள்ளுவ மாலை வெண்பா (27) கூறுவதுபோல) வகுத்துள்ளார். அவர் கருத்தின் படி ஆண்பாற் கூற்று (1-7) பெண்பாற் கூற்று (8-19), இருபாற் கூற்று (20-25) என மூன்று இயல்களாக அமையும்.

காலிங்கர் எட்டாவது அதிகாரத்தின் தொடக்கத்தில், "தலைமகன் கூற்று முடிந்தது; இனித் தலைமகள் கூற்றுக் கிளவி வருமாறு" என்று எழுதி உரையைத் தொடங்குகின்றார். 'குறிப்பறி வுறுத்தல்' என்ற அதிகாரத்தின் (20) தொடக்கத்தில் "இருபாற் கிளவி வருமாறு" என்று கூறுகின்றார்.

ஏழாம் அதிகாரமாகிய அலர் அறிவுறுத்தல் என்பதில் உள்ள நான்கு குறட்பாக்களைப் (6,7,9,10) பெண்பாற் கூற்றுக் களாகக் காலிங்கர் ஒழிந்த ஏனைய உரையாசிரியர்கள் கொண்டுள்ளனர். ஆனால் காலிங்கர் அந்நான்கு குறட்பாக்

களையும் ஆண்பாற் கூற்றாகவே கொண்டு அதற்கேற்ப உரையும் எழுதுகின்றார்.

## இடம் மாறியவை

காலிங்கர் உரையில் காமத்துப்பாலில் தனிப்படர் மிகுதி, நினைந்தவர் புலம்பல், அவர் வயின் விதும்பல் ஆகிய அதி காரங்களில் உள்ள 3 குறட்பாக்கள் இந்த மூன்று அதிகாரங் களிலும் இடம் மாறியுள்ளன.[1]

குறட்பாக்கள் அதிகாரம் விட்டு அதிகாரம் மாறிய தோடு, அதிகாரங்களும் இயல் விட்டு இயல் மாறி அமைந்துள்ளன. கப்பலோட்டிய தமிழர் வ.உ.சி. பதிப்பித்த மணக்குடவர் உரையில் அறத்துப்பாலில் இத்தகைய மாற்றம் உள்ளது. தமககுக் கிடைத்த ஓரே ஒரு ஏட்டுச் சுவடியில் மட்டும் இத்தகைய மாற்றம் இருந்த தாய் அவர் குறிப்பிட்டுள்ளார்.

மணக்குடவர் உரையில் இல்லற இயலில் பின்வரும் அதிகாங்கள் உள்ளன:

5. இல்வாழ்க்கை
6. வாழ்க்கைத் துணை நலம்
7. மக்கட்பேறு
8. அன்புடைமை
9. விருந்தோம்பல்
10. வாய்மையுடைமை
11. செய்ந்நன்றியறிதல்
12. நடுவு நிலைமை
13. பொறையுடைமை
14. ஒழுக்கமுடைமை
15. பிறனில் விழையாமை
16. வெகுளாமை
17. இன்னா செய்யாமை
18. கொல்லாமை
19. புலான் மறுத்தல்
20. கள்ளாமை
21. தீவினையச்சம்
22. ஒப்புரவறிதல்
23. ஈகையுடைமை
24. புகழுடைமை

துறவற இயலில் பின்வரும் அதிகாரங்கள் உள்ளன:

25. அருளுடைமை
26. இனியவை கூறல்
27. அடக்கமுடைமை
28. தவமுடைமை
29. கூடாவொழுக்கம்
30. அழுக்காறாமை
31. வெஃகாமை
32. புறங்கூறாமை
33. பயனில சொல்லாமை
34. நிலையாமை
35. துறவுடைமை
36. மெய்யுணர்தல்
37. அவா வறுத்தல்

பரிமேலழகர் உரையில் உள்ள இயல்களில் அதிகார அமைப்பு, பின்வருமாறு உள்ளது:

1. பார்க்க : காலிங்கர் உரை.

## இல்லற இயல்

5. இல்வாழ்க்கை
6. வாழ்க்கைத் துணை நலம்
7. புதல்வரைப்பெறுதல்
8. அன்புடைமை
9. விருந்தோம்பல்
10. இனியவை கூறல்
11. செய்ந்நன்றியறிதல்
12. நடுவு நிலைமை
13. அடக்க முடைமை
14. ஒழுக்க முடைமை
15. பிறனில் விழையாமை
16. பொறையுடைமை
17. அழுக்காறாமை
18. வெஃகாமை
19. புறங்கூறாமை
20. பயனில சொல்லாமை
21. தீவினையச்சம்
22. ஒப்புரவறிதல்
23. ஈகை
24. புகழ்

## துறவற இயல்

25. அருளுடைமை
26. புலான் மறுத்தல்
27. தவம்
28. கூடாவொழுக்கம்
29. கள்ளாமை
30. வாய்மை
31. வெகுளாமை
32. இன்னா செய்யாமை
33. கொல்லாமை
34. நிலையாமை
35. துறவு
36. மெய்யுணர்தல்
37. அவா அறுத்தல்.

## இரண்டிற்கும் உள்ள வேறுபாடுகள்

1. பரிமேலழகர் உரையில் உள்ள புதல்வரைப் பெறுதல் என்ற அதிகாரம், மணக்குடவர் உரையில் 'மக்கட் பேறு' என்று உள்ளது.

2. பரிமேலழகர் உரையில் துறவற இயலில் உள்ள

வாய்மையுடைமை
வெகுளாமை
இன்னா செய்யாமை
கொல்லாமை
புலான் மறுத்தல்
கள்ளாமை

ஆகிய அதிகாரங்கள் ஆறும் மணக்குடவர் உரையில் இல்லற இயலில் உள்ளன.

3. பரிமேலழகர் உரையில் இல்லற இயலில் உள்ள

இனியவை கூறல்
அடக்க முடைமை
அழுக்காறாமை
வெஃகாமை
புறங்கூறாமை
பயனில சொல்லாமை

அதிகாரங்கள் ஆறும் மணக்குடவர் உரையில் துறவற இயலில் உள்ளன.

4. பரிமேலழகர் உரையில் ஈகை புகழ் தவம் வாய்மை துறவு ஆகிய அதிகாரங்கள், மணக்குடவர் உரையில் 'உடைமை' என்ற சொல்லைப்பெற்று, ஈகையுடைமை புகழுடைமை தவமுடைமை வாய்மையுடைமை துறவுடைமை என்று உள்ளன.

## 3. பரிதியார்

திருக்குறளுக்கு உள்ள பழைய உரைகளில் மிகவும் எளிமையானது பரிதியார் உரையேயாகும். இவரது உரை பேச்சு நடையில் அமைந்து உலக வழக்குச் சொற்களை மிகுதியாகக் கொண்டுள்ளது. இருப்பினும் அவற்றில் ஒரு வகை அழகும், எளிதில் பொருள் உணர்த்தும் ஆற்றலும் இருப்பதைக் காணலாம். மிகுதியாக வட சொற்கள் கலந்துள்ளன. இலக்கணச் செறிவு இல்லாத எளிய நடையில் சில இடங்களில் பிழைகளும் உள்ளன. சொற்பொழிவாற்றியதை எழுதி வைத்ததுபோல, பல இடங்கள் உள்ளன. குறளின் கருத்தை அறிந்து தம் விருப்பம் போல், கூட்டியும் குறைத்தும் பொருள் கூறுகின்றார் பரிதியார். இவர் உரையைப் பொழிப்புரை என்றோ விளக்கவுரை என்றோ கூற இயலாது. சில இடங்களில் குறளைவிடச் சுருக்கமாக உரை உள்ளது. இன்னும் இடங்களில் குறளுக்கும் உரைக்கும் தொடர்பில்லாமல் எழுதிச் செல்கின்றார். 'குறளுக்கும் (பரிதியார்) உரைக்கும் ஒற்றுமைப்படுத்தி, கருத்து அறிந்து கொள்ளுதல் ஒரு கயிற்றலாகிய பாலத்தில் காவிரியைக் கடக்க நினைத்தலை ஒக்கும்'.[1]

இவரது உரையில் பாலின் தொடக்கத்தில் விளக்கவுரையோ, இயல் பிரிப்புப் பற்றிய ஆராய்ச்சியோ இல்லை. அதிகார முறை வைப்பைத் தொடர்புபடுத்திக் காட்டல், ஒரே அதிகாரத்திற்குள் குறட்பாக்களைப் பொருள் நோக்கிப் பிரித்து அமைத்தல் ஆகிய முறைகள் இல்லை.

ஏனைய உரையாசிரியர்கள், இவ்வாறு செய்யாமல் நூலின் அமைப்புப் பற்றிய ஆராய்ச்சி நிகழ்த்தியுள்ளனர். இவற்றை நோக்கும்போது பரிதியார் உரை இன்றுள்ள உரைகளில் மிகவும் முற்பட்டதோ என்று கருத இடமுண்டு.

*191, 166, 167, 191, 194* ஆகிய குறள்களுக்குப் பரிதியாரும் காலிங்கரும் ஒரே வகையாய் உரை கூறியுள்ளனர்.

1. திருக்குறள் அழகும் அமைப்பும் (1961). மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர். (பக்–177)

1126 ஆம் குறளின் பரிதியார் உரைக்கும் பரிமேலழகர் உரைக்கும் வேறுபாடு இல்லை.

## வரலாறு

பரிதியார் என்ற பெயர், பருதியார் எனவும் வழங்குகின்றது. அவர் பெயரைக் கொண்டு, திருப்பருதி நியமம் என்பது இவரது ஊராய் இருக்கலாம் என்று கருதுகின்றார் துடிசைக் கிழார். திருப்பரிதி நியமம் என்னும் பெயருடைய ஊர் தஞ்சாவூர் மாவட்டத்தில் ஒரத்த நாடு செல்லும் வழியில் ஊழ் ஊருக்குப் பக்கத்தில் உள்ளது.[1] அவ்வூரில் கோயில் கொண்டுள்ள கடவுளின் பெயர் பருதியப்பர் என்பதாகும். பருதியப்பர் என்ற பெயர் பருதி என்று குறுகி பரிதி என்று திரிந்து 'ஆர்' விகுதி சேர்ந்து பரிதியார் என்று ஆகி இருக்கலாம்.

பரிமேலழகர்க்கு முற்பட்ட இவர், சைவ சமயத்தவர்; வேதநெறி ஒழுகிய அந்தணராக இருக்கலாம். வடமொழி பயின்றவர்; உலகியல் அறிவு மிக்கவர். உரை இயற்றிய காலத்தில் மிக முதியவராக இருந்திருக்கக் கூடும்.

## சமயம்

இவர் சைவ சமயத்தைச் சேர்ந்தவர் என்பதற்கு இவரது உரையில் தக்க சான்றுகள் பல உள்ளன. கடவுள் வாழ்த்தில் 'கற்றதனாலாய' என்னும் குறளுரையில் (2) நற்றாள் என்பதற்குச் சிவன் ஸ்ரீபாதம் என்று பொருள் உரைக்கின்றார். இறைவன் பொருள் சேர் புகழ் (5) என்பதற்குச் சிவகீர்த்தி என்றும் அறவாழி அந்தணன் (8) என்பதற்குத் தன்மம் என்னும் சமுத்திரமாகவுள்ள பரமேசுவரன் என்றும் பொருள் கூறுகின்றார்.

வாய்மை அதிகாரத்தில் உள்ள 'பொய்யாமை அன்ன' என்னும் குறளில் (296) 'எல்லா அறமும் தரும்' என்பதற்குச் சிவ புண்ணியம் எல்லாம் உண்டாம் என்கின்றார்.

பொருட்பாலில் 'முறை செய்து' என்னும் குறளுரையில் (388) 'மக்கட்கு இறை என்று வைக்கப்படும்' என்பதற்கு 'உலகத்தை இரட்சிக்கின்ற பரமேஸ்வரன் என்று எண்ணப்படும்' என்கின்றார்.

'யான் எனது' என்னும் குறளுரையில் (310) துறந்தார் என்பதற்கு, 'தொண்ணூற்றாறு தத்துவத்தையும் உடலோடே துறந்தார்' என்று பொருள் கொள்ளுகின்றார்.

1. திருக்குறள் அழகும் அமைப்பும் (1961) பக்.177.

கடவுள் வாழ்த்தில் "கோளிற் பொறியிற் குணமிலவே' என்னும் குறளுரையில் (9) எண்குணத்தான் என்பதற்குச் சைவ சமயச் சார்பாக விளக்கம் தருகின்றார்:

"எட்டுக் குணமாவன: அனந்த ஞானம், அனந்த வீரியம், அனந்த குணம், அனந்த தெரிசனம், நாம மின்மை, கோத்திர மின்மை, அவா வின்மை, அழியா இயல்பு என்பன" என்பது பரிதியாரின் விளக்கம்.

இவற்றால் பரிதியார் சைவ சமயத்தினர் என்பது உறுதி யாகின்றது.

### பரிதியும் பரிமேலழகரும்

பரிதியாரின் கருத்துகளைப் பரிமேலழகர், சில இடங்களில் மறுக்கின்றார்; சில இடங்களில் என்பாரும் உளர் என்று மதித்துச் சுட்டுகின்றார்; பரிதியார் கொண்ட வேறு பாடங்களைக் குறிப் பிடுகின்றார்.

பரிதியாரின் கருத்துகளைப் பரிமேலழகர் அப்படியே ஏற்றுக் கொண்ட இடங்களும் உண்டு.

**நகையும் உவகையும் கொல்லும் சினத்திற்**
**பகையும் உளவோ பிற (304)**

என்ற குறளுக்குப் பரிதியார், "முகத்தில் சிரிப்பும் மனத்தில் களிப்பும் கொல்லுகின்ற சினத்திலும்" என்று கூறிய உரைப் பகுதியைப் பரிமேலழகர், "முகத்தின்கண் நகையையும் மனத்தின்கண் உவகையையும் கொன்று கொண்டு எழுகின்ற சினம்" என்று தம் கருத்தாக எடுத்து அமைத்துக் கொள்ளுகின்றார்.

**உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வான்என்று**
**அப்பால்நாற் கூற்றே மருந்து (950)**

என்ற குறளுக்குப் பரிதியின் விளக்கத்தைப் பரிமேலழகர் மேற் கொண்டு, சிலவற்றை மாற்றியும் கூட்டியும் குறைத்தும், தம் உரையில் அமைத்துள்ளார்.

இருவர் விளக்கமும் கீழே தரப்படுகின்றன:

### பரிதியார்

"வியாதி கொண்டவர்க்கும் பண்டிதர்க்கும் மருந்திற்கும் பரிகாரம் பண்ணுவார்க்கும் நந் நான்கு குணம் உண்டு. அது ஏதெனில்,

வியாதியாளர் குணம்— திடவான், பதார்த்தவான். கிரமத்திலே வருபவன், கிளையுள்ளவன் ஆக நான்கு.

வைத்தியன் குணம்— கற்றவன், தெய்வசகாயம் உள்ளவன், கண் ஆனி உள்ளவன். கோவண சுத்தம் உள்ளவன் ஆக நான்கு.

மருந்தின் குணம்—எளிதாய், ஒரு மருந்தாய், சுத்த முள்ளதாய், தப்பாமல் பொறுப்பதாய் உள்ள நான்கு.

பரிகாரம் பண்ணுவிப்பான் குணம்— வியாதி யாள்பவன் மேல் பத்தி, வைத்தியன் சொன்ன கிரமத்திலே வருபவன் சோம்பின்மை உள்ளவன், கொடையுள்ளவன் ஆக நான்கு.

இந்த நான்கு பேருக்கும் பதினாறு குணம் வேணும் மருந்து என்னும் அதிகாரம் என்றவாறு.

## பரிமேலழகர்

உற்றவன் வகை நான்காவன: பொருளுடைமை, மருத்துவன் வழிநிற்றல், நோய்நிலை உணர்த்தல் வன்மை, மருந்துத் துன்பம் பொறுத்தல் என இவை.

தீர்ப்பான் வகை நான்காவன: பல பிணிகட்கும் ஏற்றல், சுவை வீரியம் விளைவாற்றல்களான் மேம்படுதல், எளிதின் எய்தப்படுதல், பகுதியோடு பொருந்துதல் என இவை.

இயற்றுவான் வகை நான்காவன: ஆதுரன் மாட்டு அன்புடைமை, மனமொழி மெய்கள் தூயவாதல், சொல்லியன அவ்வாறே செய்தல் வன்மை, அறிவுடைமை என இவை.

இவை எல்லாம் கூடிய வழியல்லது பிணி தீராமையின், இத்தொகுதியையும் 'மருந்து' என்றார்.

பரிதியார் எழுதியுள்ள விளக்கமும் பரிமேலழகர் கூறியுள்ள விளக்கமும் பெரும்பாலும் ஒத்துள்ளதை உணரலாம்.

## வடசொல்லாட்சி

பரிதியார் வடசொற்களை மிகுதியாக ஆளுகின்றார். எல்லோரும் அறிந்த நல்ல தமிழ்ச் சொல்லுக்கும் பொருள் கூறும் போது வடமொழிச் சொல்லையே பயன்படுத்துகின்றார்:

வெயில் என்பதற்கு *(77)* ஆதித்த கிரணம் என்று பொருள் எழுதுகின்றார். விதானம் என்ற வடசொல்லை (விசனம்) கவலை, துன்பம் என்ற பொருளில் இவர் அடிக்கடி ஆளுகின்றார். வாக்குத் தோஷம் *(129)*, வங்கிசம் *(112)*, லஷ்மி, சேஷ்டாதேவி *(167)*, உத்தியோகம் போன்ற வடசொற்களை எடுத்தாளுகின்றார்.

அறம் பொருள் இன்பம் என்று திருவள்ளுவர் பயன் படுத்திய தமிழ்ச் சொற்களுக்கும் 'தன்மம், அர்த்தம், காமம்' என்ற வடசொற்களால் பொருள் கூறுகின்றார் *(501)*.

முளை என்ற தமிழ்ச் சொல்லை விட்டுவிட்டு அங்குரம் என்ற வடசொல்லை ஆளுகின்றார் (959).

தீயளவின்றி (947) என்னும் குறளுக்கு, "உதராக்கினி அளவையறியாமல் கறி பதார்த்தம் உருசி யறிந்து புசித்தான்" என்று வடசொல்லை மிகுதியாக ஆண்டு உரை எழுதுகின்றார்.

## சொல்லும் பொருளும்

பரிதியார், 'வறுமையுடையோம்' என்ற பொருளில் வறுவியோம் என்ற சொல்லை ஆளுகின்றார் (205). சேவகன் என்ற சொல்லைப் போர் வீரன் என்ற பொருளிலும் (763), புடவை என்ற சொல்லை உடை என்ற பொருளிலும் (788), இராவுத்தன் என்ற சொல்லைக் குதிரை வீரன் என்ற பொருளிலும் (814), பரியாரி என்ற சொல்லை மருத்துவன் என்ற பொருளிலும் இவர் பயன் படுத்துகின்றார். பணம் என்ற சொல்லும் இவரால் ஆளப்படு கின்றது (932).

## சுருக்கமும் எளிமையும்

பல குறட்பாக்களுக்கு மிகச் சுருக்கமாகவும் எளிமை யாகவும் இவர் பொருள் கூறுகின்றார். அத்தகைய இடங்களைக் கீழே காண்போம்:

**நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்**
**பெருமை உடைத்திவ் வுலகு** **(336)**

"நேற்றிருந்தான் இன்று செத்தான் என்னும் பெருமை உண்டு உலகுக்கு".

**உறங்கு வதுபோலும் சாக்காடு உறங்கி**
**விழிப்பது போலும் பிறப்பு** **(339)**

"நித்திரை போல மரணம்: விழிப்பது போலப்பிறப்பு என்று அறிக."

**நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்**
**பின்னீர பேதையார் நட்பு** **(782)**

"வளர் மதி ஒப்பது நல்லோர் நட்பு; தேய்பிறை ஒப்பது பொல்லா நட்பு."

**பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையின் நாணுடைப்**
**பெண்ணே பெருமை உடைத்து** **(907)**

"பெண்ணுக்குப் பயப்படுகிற ஆண்மையினும் பெண்ணே விசேஷம்."

**வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை**
**ஆரஞர் உற்றன கண்** **(1179)**

"நாயகர் வாராக்காலும் நித்திரையில்லை; வந்தாலும் கலவியினால் நித்திரையில்லை."

**நாம்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ**
**தாம்காதல் கொள்ளாக் கடை (1195)**

"ஒருதலைக் காமம் நன்றல்ல; இருதலைக் காமம் நன்று".

## விளக்கமும் நயமும்

பரிதியார் சில குறளுக்கு எழுதும் உரையும் விளக்கமும் மிகவும் போற்றத்தக்கவையாய் உள்ளன. அவ்வாறே சில தொடருக்கு இவர் தரும் நயவுரை எண்ணி எண்ணி மகிழத்தக்க தாய் உள்ளது. அவற்றுள் சிலவற்றை இங்கே காண்போம்:

**துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்**
**இன்னாச்சொல் நோக்கிற் பவர் (159)**

"துறந்தார் பெரியோரானாலும் தவத்தின் பெருமை யினாலே ஒருவரைச் சாபமிடுவார்; இவன் இல்லறத்திலே இருந்தும் தனக்கு ஒருவர் செய்த குற்றம் பொறுப்பவன் ஆதலின் பெரியவன்".

**பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி**
**நட்பாடல் தேற்றா தவர் (187)**

"இரண்டுபேர் ஒருமனமாகக் கூடியிருக்கின்ற சிநேகத்தைப் புறஞ்சொல்லிப் பிரித்தவர் யார் என்னில் இரண்டு பேருக்கும் மனம் பிரியப்படச் சொல்லி உறவு பண்ண அறியாதவர்."

**தவம்செய்வார் தம்கருமம் செய்வார்மற் றல்லார்**
**அவம்செய்வார் ஆசையுட் பட்டு (266)**

"நிலையாமை நோய் மூப்புச் சாக்காடு என்று எண்ணித் தலையாவார் தம் கருமம் செய்வர்; தம் கருமமாவன; தவம் பூசை நியதி தானம் தன்மம் என்பன. மற்றல்லாதார் செனனவழி தேடி ஆசை விலங்கிட்டு அவம் செய்வார்".

**கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்**
**மெய்வேல் பறியா நகும் (774)**

"மதயானை கூடப் போர்செய்து கைவேல் பறி கொடுத்த வீரன் மெய்யிலே தைத்த வேலைப் பறித்து இந்தத் தறுவாயில் வேல் நேர்பட்டது என்று சிரித்துச் சலிப்பிலன்."

**விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்**
**வைக்கும்தன் நாளை எடுத்து (776)**

"வீரன் நாள்தோறும் தன் சரீரத்திலே புதுமைப் புண்படாத நாள்களை உயிருடன் வாழாத நாளாக எண்ணுவான்".

2.23.

காமக் கணிச்சி உடைக்கும் நிறைஎன்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு (1251)

"பயிர்ப்பாகிய வீட்டில், அச்சம் என்னும் நிலையில் மடம் என்னும் கதவில் இட்ட நாணம் என்னும் தாளை வெட்டும் காமமாகிய மழு.

## நயவுரை

சில தொடர்களுக்குப் பரிதியார் எழுதும் விளக்கம் மிகவும் நயமாகவுள்ளது. அவற்றுள் சிலவற்றைக் கீழே காணலாம்:

துறந்தார் *(42)*—மண் பொன் பெண் இந்த மூன்று வகை ஆசையைத் துறந்தார்.

கோடாமை *(115)*—எக்காலமும் ஒரு தன்மையாக இருப்பது.

அற்றார் *(506)* —பொருளும் கிளையும் கல்வியும் அற்றார்.

(காக்கை) கரைந்துண்ணும் *(527)*—இனங் கூட்டிப் புசிக்கும்.

செறுநர் செருக்கறுக்கும் எஃகு *(759)*—சத்துருக்கள் என்னும் காட்டை வெட்டுதற்கு ஆயுதம்.

கூற்று *(765)*—தன்னுயிரை ஒருவர்க்கும் கொடாத கூற்றுவன்.

பீடு நடை *(1014)*—மதயானை போல—ரிஷபம் போல நடக்கிற நடை.

நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் *(1049)*—நெருப்பினுள்ளும் நித்திரை செய்யலாம், அக்கினித் தம்பம் பண்ணி.

துச்சில் *(340)*—"துச்சில் என்பது ஒருத்தர் அளவிலே ஒதுக்குக் குடியிருத்தல்."

## பேச்சு நடையும் வழக்குச் சொல்லும்

பரிதியார் உரையில் பேச்சு நடையும் வழக்குச் சொல்லும் மிகுதியாக உள்ளன. அவற்றைக் காண்போம்:

நானாபதார்த்தம் *(52)*, நானாவகை *(514)*, வேணும் *(116)* கனவிலும் பிறவாது *(139)*, எப்படி என்றால் *(140)*, வயிறு வளர்ப்பது *(183, 1032)*, சுட்டுப் போடும் *(202)*, விளையாட்டிலும் சொல்லார் *(199)*, தனக்கு வேண்டாதார் *(203)*, வகையற்ற இடம் *(218)*, தலை எழுத்து முடிந்த நாள் *(269)*, விசாரித்து *(514)*, இத்தனையல்லோ *(912)* நாட்டாண்மைக்காரன் *(736)*.

அகழ்வாரைத் தாங்கும் நிலம் *(151)*—பூமி வெட்டுகிற பேரையும் சுமக்கும்.

தன்னுயிர் தானறப் பெற்றானை *(268)*—தன் ஆத்மா ஈடேறப் பார்ப்பானை.

வானுயர் தோற்றம் எவன் செய்யும் (272)—வான் போலப் பெரிய தபசு பண்ணி ஆவது என்ன?

மாடல்ல மற்றையவை (400)—அழுஞ்சு போகிற செல்வம் செல்வமல்ல.

மண் மாண் புனைபாவை (407)—மண்ணினால் பண்ணின பொம்மை.

இடிக்குந்துணையார் (447)—சிரிக்கச் சொல்லிக் கெடுக்காமல், அடிச்சுப் புத்தி சொல்லுகிற பேர்.

காட்சிக் கெளியன்—குடியான பேர் வந்தால் எளிதாகக் காண.

## கதை சொல்லும் கலைஞர்

பொதுமக்கள் குழுமியுள்ள இடத்தில் நின்று, அவர்கள் கேட்டு மனம் மகிழும்வகையில் இனிக்க இனிக்கக் கதைகளையும் கருத்துகளையும் கூறும் கலைஞர்களைப்போல் (உபந்நியாசம், கதா காலட்சேபம் செய்வோர்) பரிதியார் பல குறட்பாக்களுக்கு விளக்கம் தருகின்றார். கருத்தைச் சொல்லும்முறை, எளிய பேச்சு மொழியை ஆளல், இலக்கணத்தை நினையாமல் மக்கள் எளிதில் புரிந்துகொள்ளும் வகையில் கூறுதல் போன்ற இயல்புகளை இவரிடம் காணலாம்.

**நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்**
**நோயின்மை வேண்டு பவர்** **(320)**

என்ற குறளுக்குப் பரிதியார், "ஒருவர்க்குத் தான் செய்த விதனம், பின்பு தனக்கு வருகிறபடியினாலேயே, ஒருவர்க்கும் தாங்கள் விதனம் செய்யார்" என்று பொருள் எழுதியபின், பின்வரும் கதையைக் கூறுகின்றார்:

"அஃது எப்படி என்றால், பிரம்ம ராட்சதன் ஓர் இராசாவின் மகளைப்பற்றி நின்று, சந்தியாவந்தனை செய ஆற்றங்கரையிலே வந்து நின்றளவில், பிராமணப் பிள்ளையின் பிள்ளை வாசிக்கின்றவனுக்கு அன்றையிற் பாடம் இந்தக் குறள் ஆகையால் அவன் முகசுத்தி பண்ண வந்தவன், இந்தக் குறளைப் பாடமாகச் சொல்லிக்கொண்டு வந்தான். இத்தை பிரம்ம ராட்சதன் கேட்டுத் தானொரு பிராமண வடிவாய், இந்தப் பிள்ளை வாய்ப்பாடத்தை இரண்டு பிரகாரங் கேட்டு, 'நாம் இராசாவின் மகளை நோய் செய்தோமே! நமக்கு அந்த விதனம் வரும்' என்று பயப்பட்டு, இந்தப் பிள்ளை முன்னிலையாக இராச குமாரத்தியை விட்டுப் போச்சு என்றவாறு"

**கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்**
**போக்கும் அதுவிளிந் தற்று (332)**

என்ற குறளுக்குப் பரிதியார் எழுதியுள்ள உரை காலட்சேப முறையிலேயே உள்ளது:

"சந்தையிற் கூட்டம் நாலுபேரும் ஆறுபேரும் வந்து சந்தையில் காரியங்கண்டு மீண்டும் போவார்கள்: அப்படியல்ல செல்வம். எப்படி என்றால், கூத்தாடல் பார்க்க நாலு பேரும் ஆறுபேரும் வந்து கூத்துக்கண்டு, கூத்துக் குலைந்த போது ஒருக்காலே பிரிந்து ஓடுவார்கள். அதற்கு ஒக்குமே செல்வத்தின் கூட்டம்; எப்படி என்றால் இவன் செய்த புண்ணியத்திற்குத் தக்கதாக இலட்சுமி இருப்பாள்; இவன் தவசு மாறி இலட்சுமி போன பின்பு அக்கினி கள்ளார் இராசா ஆறு இவையிற்றினாலே செல்வம்போம்; இஃது அறிந்து உள்ளபோதே தன்மம் செய்வான் என்றவாறு."

**யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்**
**வாய்மையின் நல்ல பிற (300)**

என்ற குறளுக்கும் உரை பின்வருமாறு உள்ளது.

"ஆத்மாவைச் செனனத்திலே தள்ளாமல் திருவடியிலே சேர்ப்பது சத்திய வாக்கியம் அன்றி, வேறொன்றும் கண்டிலோம் அசத்தியம் சொன்ன தருமபுத்திரன் நரகங் கண்டான்; சத்தியம் சொன்ன அரிச்சந்திரன் ஸ்ரீபரமேசுவரன் பாதம் கண்டு சிவலோகம் சேர்ந்தான் என்றவாறு".

**கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்**
**ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு (269)**

தலை எழுத்து முடிந்த நாள்வர, அப்போது கூற்றுவனையும் வெல்லலாம், தவத்திற் பெரியோர்க்கு.

அதற்கு நந்திகேசுவர தேவனையும் மார்க்கண்டேயனையும் கண்டுகொள்க.

**துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து**
**இறந்தாரை எண்ணிக்கொண் டற்று (22)**

"காமக் குரோத லோப மோக மத மாச்சரியங்களையும் துறந்த பேருக்கு உவமை கூறில், பூமியில் இறந்த செனனம் எத்தனையுண்டு. அத்தனை அறிந்தால் அவர்கள் பெருமை அறியலாம் என்றவாறு"

இத்தகைய பகுதிகளை, *54, 56, 79, 89, 134, 148, 206, 213, 229, 262, 330, 371, 389, 447, 570, 927, 1066* ஆகிய குறட்பாக்களின் உரைகளிலும் காணலாம்.

## பொருந்தாவுரை

பரிதியார் உரையில், பல இடங்கள் மூலத்திற்கும் உரைக்கும் தொடர்பே இல்லாமல் உள்ளன. ஏடு எழுதியவராலோ வேறு எக்காரணத்தாலோ இவர் உரையில் இலக்கணப் பிழைகள் மலிந்துள்ளன. சில குறட்பாக்களுக்கு இவர் தரும் உரையும் விளக்கமும், சிறிதும் பொருந்தவில்லை.

**புகழ்புரிந்த இல்லிலோர்க் கில்லை இகழ்வார்முன்**
**ஏறுபோல் பீடு நடை** **(59)**

என்ற குறளுக்குப் பரிதியார் 'இன்னாள் பதிவிரதை என்று சொல்லும் சொல் பெறாத மடவாரை மனையாளாகவும் உடையான் தன்னை வேண்டார் முன்னே, 'இன்னார் ரிஷபம் போலே திரிகின்றான்' என்று ஏசுதற்கு இடமாவான் என்றவாறு" என்று எழுதியுள்ள உரை குறளின் கருத்தோடு பொருந்தவில்லை.

**பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்**
**சால மிகுத்துப் பெயின்** **(475)**

"நொய்ய பீலியாகிலும் கனமாக ஏற்றினால் வண்டி அச்சு முறியும்; அதுபோலப் பெலமில்லாதார் பலர் கூடினாலும் சத்துவ மாம்; ஆகையால் அரசன் வீரராகாத பேரையும் கனம் பெறக் கூட்டிக் கொள்வான்."

இக் குறள் வலியறிதல் என்னும் அதிகாரத்தில் உள்ள தாலும் எளியர் பலர் என்று பலரோடு பகை கொள்வான் தான் வலியனே ஆயினும் அவர் தொக்க வழி வலி அழியும் என்னும் பொருள் தோன்ற இக்குறள் இருப்பதாலும் பரிதியார் உரை பொருத்தமில்லை.

'புணர்ச்சி மகிழ்தல்' என்ற அதிகாரத்தில் உள்ள,

**கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்**
**ஒண்டொடி கண்ணே யுள** **(1101)**

என்ற குறளுக்குப் பரிதியார், "விளக்குக் கண்டு அழிந்த விட்டிலும், யாழ் கேட்டு அழிந்த அசுணமும், இரை கண்டு அழிந்த மீனும், செண்பக மணம் உண்டு அழிந்த வண்டும், மெய்யின்பம் கண்டு அழிந்த யானையும் ஒவ்வொரு புலனால் அழிந்தன. ஐம்புலனும் ஓரிடத்திலே கூடியதால் என் செய்யாது" என்று பொருள் உரைக்கின்றார்.

இயற்கைப் புணர்ச்சியில் மகிழ்ந்த தலைமகன் மனநிலையைப் பரிதியார்உரை, வெளிப்படுத்துவதாக இல்லை! ஐம்புலனும் ஆரத்துய்த்த தலைவன், தலைவியை வியந்து போற்றும் நிலையைப் பரிதியார் உரை உணர்த்தவில்லை.

இத்தகைய பொருந்தாவுரைகளை 9, 91, 165, 394, 432, 449, 576, 599, 714, 840, 890, 1105 ஆகிய குறட்பாக்களின் உரைகளிலும் காணலாம்.

## சிறப்பான உரைப்பகுதி

பரிதியார் உரையில் கற்போர் மகிழும் வகையில் அமைந்துள்ள உரைப்பகுதிகள் சில உள்ளன. அவை கீழே தரப்படுகின்றன.

எழுபிறப்பு (62)—தேவர், மனிதர், மிருகம், ஊர்வன, நீர் வாழ்வன, பட்சி, தாவரம்.

அழுக்காறு உடையான் (135)—அழுக்கு மனம் உடையார்.

ஆக்கம் (177)—மரபு வழிச் செல்வம்.

பயன் மரம் (216)—பயன்படு மாமரம் பலாமரம் பனை மரம்.

கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை (290)—கபடியார்க்கு அற்பாயுசுவாய்ச் சுவர்க்கமில்லை.

துறந்தார் (310)—தொண்ணூற்றாறு தத்துவத்தையும் உடலோடே இருக்கையிலே புளியம் பழமும் ஓடும்போலே துறந்தார்.

நாள் (334)—ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனி என்று தோன்றும் நாள்.

நாச்சென்று (335) என்னும் குறளுக்கு "நாக்குக் குழறி விக்கலும் வருமுன்னே அறம் செய்வான்; பின்னை வசமல்ல பொன்னும் பொரி விளங்காயாம்" என்று பொருள் உரைக்கின்றார். "பொன்னும் பொரி விளங்காயாம்" என்பது இவர் காலத்தில் வழங்கிய நாட்டுக் கதையாகவோ, பழமொழியாகவோ இருக்கலாம். சீவக சிந்தாமணியில் வரும், "கையால் பொதித்துணையே காட்ட" (1553) என்ற பாடல் கூறும் கதை இங்கே கருதத்தக்கதாகும்.

குடிபுறம் காத்து (549)—"குடியை அறுவகைப் பயம் தீர்த்து" என்கின்றார். இக்கருத்துப் பெரியபுராணத்தில் சேக்கிழார் மன்னனைப் பற்றிக் கூறும் கருத்துடன் ஒத்துள்ளது.*

கல்லார்ப் பிணிக்கும் (570) என்ற குறளுக்கு "பூமிக்கு எட்டுமலையும் எழுகடலும் பாரமல்ல; கொடுங்கோல் மன்னவன் பாரம்" என்று உரை எழுதுகின்றார்.

இணர் ஊழ்த்தும் நாறாமலர் (650) முருக்கம்பூ.

* 'மாநிலங்காவலாவான்' – திருநகரச் சிறப்பு–36.

மகளிர் மனம்போல வேறுபடும் (822) "இருமனப் பெண்டிர் போல்" என்பது இவர் தரும் சிறப்புரை. பிற உரையாசிரியர்கள் இவ்வாறு கூறவில்லை.

நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் (683)—கல்வியுள்ளார் தான் கற்ற கல்வி வளங்குதல் 'வெண்பாமாலையை' வெல்லுதற்கு ஒக்கும்.

எரியாற் சுடப்படினும் உய்வுண்டாம் (896)—நெருப்புப் பற்றின மரம் வேர் உண்டாய்ப் பதினைந்து நாளையில் கிளைக்கும்.

அற்றது போற்றி உணின் (942)—""செரித்தால் சாமம் பார்த்து அன்னம் இரண்டு கூறும், தண்ணீர் ஒரு கூறும், வாயு சஞ்சரிக்க ஒரு கூறும், வாத பித்த சிலேட்டுமத்திற்கு வேண்டாக் கறியை விட்டு அசனம் பண்ணக்கடவன்".

துய்க்க துவரப் பசித்து (944) "நித்தியம் ஒரு பொழுது அசனம் பண்ணி வருவானாகில் அவனுக்கு வியாதியில்லை".

உயிர் (1012)— "தேவர் கதி, மக்கள்கதி, விலங்கின் கதி, பட்சி கதி இவை எல்லாம் நவ தாதுவினால் எடுத்த சரீரம்".

அரியவற்றுள் (443)—"அரிதான காரியம் ஒருமலையை எடுத்து ஒருமலைமேலே வைத்தல்; ஒரு கடுகிலே எழுகடலை அடக்கல்."

வன்மை (1063)—'மலையை எடுத்து மயிரிற் கட்டலும் கடுகில் எழுகடலை அடக்கலும் ஆகிய அவை அருமையல்ல"

## புதுமையான விளக்கம்

பரிதியார் சில குறளுக்குத் தரும் விளக்கம் புதுமையாய் உள்ளது. இவர் கூறும் விளக்கம் ஏனைய உரைகளின் கருத்துக்கு மாறானவை.

'நத்தம்போல் கேடும்' (235) என்பதற்கு, "சங்கு ஆயிரம் சூழ்ந்த வலம்புரி போலே கிளையானது தன்னைச் சூழ வாழ்வது" என்று பொருள் எழுதுகின்றார்.

எண் என்ப(392) என்ற குறளின் உரையில், "எண்ணாகிய சோதிடமும்" என்று உரைக்கினாறார்.

**கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்**
**இல்லாதாள் பெண்காமுற் றற்று. (402)**

இக்குறளுக்குப் பரிதியார், "கல்லாதான் சொல்லைக் காமுறுதல் தனபாரம் இல்லாத பெண்ணைக் காமுறுதற்கு ஒக்கும்" என்று பொருள் கொள்ளுகின்றார்.

**தேவர் அனையர் கயவர் அவரும்தாம்**
**மேவன செய்தொழுக லான் (1073)**

"தேவர்க்கு நிகர் கயவர். அது எப்படி எனில், தெய்வமும் பத்தி பண்ணுவார்க்கு நன்மை தரும்; அல்லாதார்க்குத் தீமை தரும். அதுபோல, கயவரும் தமக்கு இதம் செய்வார்களுக்கு இதமும் அகிதம் செய்வார்களுக்கு அகிதமும் செய்வர்"

**கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்**
**காட்டிய சூடினீர் என்று (1313)**

"செண்பகப்பூ, பாதிரிப்பூ, புன்னைப்பூச் சூடினும் குறிஞ்சி நிலத்து நாயகியை வேண்டிச் சூடினீர் என்று ஊடினாள்"

**மக்கள் வாழ்வும் நாகரிகமும்**

பரிதியாரின் உரையைக்கொண்டு அக்கால மக்களின் வாழ்வும் நாகரிகமும் அறியலாம்.

"குறிஎதிர்ப்பை நீரதுடைத்து" *(221)* என்பதற்கு 'வட்டிக்குக் கொடுப்பதை ஒக்கும்' என்று கூறுவதால், கடன் கொடுத்து வட்டி வாங்கும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது என்று அறியலாம்.

விலைப் பொருட்டால் ஊன்தருவார்இல் *(256)* என்பதற்கு, "அகரத்திலே (அக்கிராகாரம்) மாங்கிசம் (புலால்) விற்பாரில்லை" என்று உரைக்கின்றார்.

நீராடி *(278)* என்பதற்கு, "மார்கழித் தீர்த்தம் என்றும் மகா தீர்த்தம் என்றும் ஆடி" என்று கூறுகின்றார்.

"பிறன் பொருளைக் கள்ளத்தால் கள்வேம் எனல்" *(282)* என்பதற்கு "ஒரு திருப்பணி போலே காட்டி வாங்குதல்' என்று இவர் கூறுவதால் அக்காலத் துறவிகள் திருப்பணிக்குப் பணம் திரட்டினர் என அறியலாம்.

தன்னுயிர் நீப்பினும் *(327)* என்ற குறளுக்கு, தன்னுயிர் துறக்கும் காலமாகினும் இது பிழைக்கும் என்று, ஆடு கோழி பன்றியினைப் பிரார்த்தனை செய்வான் அல்லன்'' என்று விளக்கம் எழுதுவதால் அக்கால மக்கள் ஆடு முதலியவற்றைப் பலி கொடுப்பது வழக்கம் என்று அறியலாம்.

கூத்தாட்டு அவைக்குழாத்து *(332)* என்ற குறள் உரையில், "சந்தையிற் கூட்டம் நாலு பேரும் ஆறு பேரும் வந்து சந்தையில் காரியங்கண்டு மீண்டும் போவார்கள்' என்று உரைப்பதால், இவர் காலத்தில் ஊர்தோறும் சந்தைகள் கூடின என்று தெரிகின்றது.

# 4. காலிங்கர்

திருக்குறளுக்குப் பரிமேலழகர் உரைக்கு முன் தோன்றிய பழைய உரைகளில் காலிங்கர் உரை பெரிதும் போற்றப் பட்டிருக்கலாம். செறிவு வாய்ந்த நடையும் இலக்கண வரம்பறிந்து தூய தமிழ்ச் சொற்களை ஆளும் திறனும் காலிங்கரிடம் உண்டு. கற்போர் உள்ளத்திற்குக் கிளர்ச்சியூட்டித் தம் கருத்தைத் திறம்படக் கூறும் வல்லமை இவரிடம் உண்டு.

காலிங்கர் என்ற பெயர் காளிங்கர் என்றும் வழங்கும். காலிங்கராயர் என்ற பெயர் தமிழ்ப்புலவர்களுக்கு வழங்கியதற்குக் கல்வெட்டுக்கள் சான்றுகளாக உள்ளன.[1]

திருவள்ளுவ மாலை கூறும் இயல் பிரிப்பை அப்படியே இவர் பின்பற்றுவதாலும், மணக்குடவர், பரிப்பெருமாள் ஆகியோர் அம் முறையை மாற்றி வேறுவகையில் இயல் பிரிப்ப தாலும் அவ்விருவர்க்கும் காலிங்கர் முற்பட்டவராகலாம்.

**சமயம்**

இவர் சமண சமயத்தவர். இவ்வாறு கருத இவரது உரை உறுதுணை புரிகின்றது.

> **வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி**
> **தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது (377)**

என்ற குறளில், வகுத்தான் என்பதற்கு வகுத்தார் என்று பாடங் கொண்டு, பின்வருமாறு உரை எழுதுகின்றார்:

"அதனால் முன்னஞ்செய்தார் செய்த வினைவகையால் துய்த்தல் அல்லது மற்றுக் கோடிபொருள் ஈட்டினார்க்கும் அது கொண்டு துய்த்தல் அரிது; எனவே, அங்ஙனம் ஈட்டுதற்கு உரியர் தானம் முதலிய நல்வினை முன்செய்து மற்றது கொண்டு தான் நுகர்தற்கு வேண்டும் நல்வினை முன்னஞ் செய்யாரேல் ஈட்டினரே ஆயினும், குறைவறத் துய்த்தல் அரிது என்றவாறு".

இங்கே சைன சமயக் கருத்து இடம் பெற்றுள்ளது. 'பழவினை தன்னைச் செய்தானைத் தானே சென்றடையும்' என்பது அச்சமயக் கொள்கையாகும்.

> **பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க**
> **நாகரிகம் வேண்டு பவர் (580)**

என்ற குறள் உரையில் 'நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்' என்பதற்கு, "பெரியோரால் விரும்பத்தக்க உம்பர் உலகினுள்

1. சாஸனத் தமிழ்க் கவி சரிதம் (1937) பக்கம்–161.

சிறப்புடைய உத்தரகுருவினைத் தாம் எய்தி இனிது வாழ்ந்திருக்க வேண்டுபவர்" என்று எழுதுகின்றார்.

'உத்தரகுரு—போகம் துய்க்கும் பூமி' என்பது சைன நூற் கொள்கையாகும்.

## உரையின் சிறப்பியல்புகள்

காலிங்கர் ஒரு பாலின் தொடக்கத்தில் எழுதும் முகவுரையின் இறுதியில், அடுத்துவரும் பாலுக்குத் தோற்றுவாயும் எழுதுகின்றார்; இயல் ஆராய்ச்சியில் ஈடுபடுகின்றார்; ஒவ்வோர் அதிகாரத்தின் இறுதிக் குறளிலும் அடுத்த அதிகாரத்தைத் தொடர்பு படுத்திக் காட்டுகின்றார். ஆனால், அதிகாரத்தின் தலைப்புப் பொருளை விளக்குவதில்லை.

திட்பமும் செறிவும் சுருக்கமும் வாய்ந்த நடையை இவரது உரையில் காணலாம். தனித்தமிழ் நடையில், சிறந்த தமிழ்ச் சொற்களை ஆளுகின்றார். உரை முழுவதும் இவரது தனித்தமிழ் ஆர்வம் மணம் வீசுகின்றது. பழைய நூல்கள் பலவற்றிலிருந்து மேற்கோள் தருவதால், இவர் புலமை மிக்கவர் என்பது உறுதி. திருக்குறளுக்கு உரை எழுதும் போது, முன்னும் பின்னும் நோக்கி, தொடர்புகாட்டுகின்றார். இல்லறவியலில் கூறிய ஈகைக்கும், பொருட்பாலில் 'அஞ்சாமை ஈகை' *(382)* என்ற குறளில், மன்னனுக்கு உரிய இயல்பாகிய ஈகைக்கும் வேறுபாடு காட்டுவது இங்கே நினைக்கத்தக்கதாகும்.

குறளுக்கு உரை எழுதியபின், குறளில் இடம் பெற்றுள்ள அரிய சொல்லுக்குப் பொருள் எழுதுகின்றார். மிகுதியாக விளக்கம் இல்லாமல் இரண்டொரு சொல்லுக்குமட்டும் அகராதி போலப் பொருள் உரைக்கின்றார். அவற்றுள் சிலவற்றைக் கீழே காண்போம்:

அன்மை என்பது அல்லாமை என்றாயிற்று *(172)*.

தப்பு என்றது பொய் என அறிக *(183)*.

சீர்மை என்பது ஒழுக்கம். சிறப்பு என்பது ஆக்கம். நீர்மை என்பது தண்ணளி *(195)*.

அவாவல்—சூழ்தல் *(215)*.

எவ்வம் என்பது துயரம் *(223)*.

மன்ன என்றது நிலைபெறுதலை *(245)*.

தெருளாதான் என்பது அறிவில்லாதவன். தேரின் என்பது ஆராயின் *(249)*.

குடம்பை என்பது புள்ளியற்றும் கூடு *(338)*.

தெய்வத்தான் என்றது விதியினால் என்றது (619).

ஏந்துதல்—மிகுதல் (899).

உறில் என்பது இன்புறுதல் என்றது (1270).

தஞ்சம் என்பது எளிமைப் பொருட்டு. இடுக்கண் உற்ற விடத்து எய்துதல் என்பது (1300).

காலிங்கர், தம் உரையில் ஆங்காங்கே சுவையான மேற்கோள்களை நாலடியார், புறநானூறு, சீவக சிந்தாமணி, தொல்காப்பியம் முதலிய நூல்களிலிருந்து தருகின்றார்.

**இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்**
**திருநீக்கப் பட்டார் தொடர்பு** **(920)**

என்ற குறளின் உரைக் கீழ்,

**இம்மையே தவஞ்செ யார்கை**
**இருநிதி அகற்றல் வேண்டி**
**நம்மையும் கள்ளும் சூதும்**
**நான்முகன் படைத்து விட்டான்**

என்ற சுவையான பாடலை மேற்கோள் தருகின்றார்.*

காலிங்கர் தம் உரையை வினாவிடை முறையில் அமைத்துள்ளார். ஆசிரியர், மாணவர்க்குப் பாடம் சொல்லும் போது, ஏன் எனில், ஆயின் என்று வினா எழுப்பி விடை கூறி விளக்குவது போல இவர், உரை எழுதிச் செல்லுகின்றார்.

### வினாவும் விடையும்

காலிங்கர், உரை எழுதிச் செல்லும் போக்கில் பிற உரையாசிரியர்களிடமிருந்து விலகித் தமக்கென ஒருவகைத் தனித் தன்மையை நிலைநாட்டி விடுகின்றார். இவரது உரையின் பெரும்பகுதி, மாணவன் ஒருவன் வினா எழுப்ப அதற்கு ஆசிரியர் விடை கூறுவதுபோலவே அமைந்துள்ளது.

**பழகிய நட்புஎவன் செய்யும் கெழுதகைமை**
**செய்தாங்கு அமையாக் கடை** **(803)**

என்ற குறளுக்கு, “அவரோடும் நெடுங்காலம் பழகிய நட்பு எல்லாம் என் செய்யும்; யாதும் இல்லை; எவ்விடத்து எனின், கீழ்ச் சொன்னபடியே அவர் தமக்கு வேண்டும் கெழுதகைமை செய்து அமையா இடத்து” என்று உரை எழுதுகின்றார். இங்கே வினா விடை முறை அமைந்துள்ளது. இம் முறை பல குறட்பாக்களின் உரையில் அமைந்துள்ளது.

* இப்பாடல் சிறிது வேறுபாட்டுடன் விவேக சிந்தாமணியில் உள்ளது.

வினாவிடை முறைக்கு வேறோர் சொல், ஆக்கந் தருகின்றது. மற்று என்ற சொல் குறள்உரை தோறும் இடம் பெற்று ஒருவகை இணைப்பை முன்னும் பின்னும் உண்டாக்கின்றது.

இவ்வாறு, பாடம் கூறும் முறையில் எழுதிச் செல்வது இவரது உரையின் தனித்தன்மையாகும்.

## சொல்லோவியம்

காலிங்கர் உரையில், கற்பவர் கண்முன் தோன்றும் வகையில் எழுதப்பட்ட சொல்லோவியங்கள் சில உள்ளன.

"முலை இரண்டும் இல்லாதாள் பெண்காமுற்று அற்று" (402) என்ற உவமையைப் பின்வருமாறு விளக்குகின்றார்: "முலை இரண்டும் முன்னமே தனக்கு இல்லாதாளாகிய பேடியானவள் மற்று அம்முலை வனப்புறூஉம் திருவுடையாட்டியது பெண்மை கொண்டு இன்புறுதற்குத் தானும் காதலித்த அத்தன்மைத்து".

வேலொடு நின்றான் இடு என்றது போலும் (552) என்ற உவமையைப் பின்வருமாறு விளக்குகின்றார்: "தான் கைப் பற்றிய மூவிலை வேலொடு நின்றான் ஒரு மூர்க்கன் அதனை ஓங்கி, 'வேலே! கடிதின் கொணர்ந்திடு பலி!' என்றதனை ஒக்கும்".

## கவிதை மின்னல்

இவரது உரையில் சில இடங்களில் கவிதை மின்னல் பளிச்சிட்டு ஒளி வீசுவதைக் காணலாம். அவ்விடங்களில் இலக்கியச்சுவை முதிர்ந்து, இன்பம் அளிக்கின்றது.

அறத்துப்பாலின் இறுதியில், "வள்ளுவக் கடவுள் வகுத் தமைத்துரைத்த எள்ளறு சிறப்பின் அறத்துப்பால் முற்றும்" என்று எழுதுகின்றார். இங்கே எதுகைமோனை நயம்பட அமைந்து இன்ப மூட்டுகிறது.

'மண்ணோடியைந்த' என்ற குறளின் (576) உரை சிறந்த கவிதையாய்—ஓசைநயம் வாய்ந்த அகவல் பாடலாய் அமைந் துள்ளது:

"வண்ணம் எழுதா வகைத்து உருவாகிய மண்மேல் எழுதிய கற்பகத்தரு முதலிய போல்பவர் யார்எனில், செய்யவாயும் செவ்வரிக் கண்ணும் கரிய குழலும் வெளியநகையும் பிறவும் ஆகிய வகையமை உறுப்பின் வனப்பு வேற்றுமை தகைபெற உடைய தன்மையரேனும் கண்ணுறுப்பாகிய கண்ணோட்டம் இல்லாத கடுவினையாளர்'' என்ற உரைப்பகுதியை எதுகைமோனை இயைபு நோக்கிச் சீர்பிரித்து அமைத்தால் ஆசிரியப்பா ஒன்று அமையும்.

## பிற உரைகளைக் குறிப்பிடல்

காலிங்கர் தமக்குமுன் வழங்கி வந்த உரைகளையும், பிற பாடங்களையும் குறிப்பிடுகின்றார். இவர் குறிப்பிடும் பிற உரைகளும் வேறு பாடங்களும் இன்று கிடைத்துள்ள உரைகளில் காணப்படவில்லை. காலிங்கருக்கு முன்னர்ப்பல உரைகள் இருந்தன என்று அறியலாம்.

'குடிமடிந்து' என்ற குறள் உரையில் *(604)* 'குடிமடிந்து என்பதனைச் சுற்றத்தார் மாய்ந்து என்பாரும் உளர்' என்று கூறுகின்றார்.

**அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்**
**குற்றமே கூறி விடும் (980)**

என்ற குறளை இவர்,

**அற்றம் மறைக்கும் சிறுமை பெருமைதான்**
**குற்றமாக் கொண்டு விடும்**

என்று வேறு பாடங்களுடன் கொண்டுள்ளார். மேலும் சிறப்புரையில்,

**" 'அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்**
**சுற்றமாய்ச் சூழ்ந்து விடும்'**

என்பது பாடமாயின்" என்று பிற பாடத்தைக் கூறி அதற்கு ஏற்ற வாறு உரையும் கூறுகின்றார். "இன்னும் பிறவாறு பாடம் ஓதுவாரும் உளர் என்னின், அதற்கு ஏற்குமாறு அறிந்து உரைக்க" என்றும் உரைக்கின்றார்.

காலிங்கர் உரையிலிருந்து இக் குறள் பலவேறு பாடங் களைக் கொண்டிருந்தது என்பது விளங்கும்.

'செல்லான் கிழவன்' என்ற குறள்உரையில் *(1039)* "நிலம் புலந்து இல்லாளை ஊடிவிடும்' என்பாரும் உளர்" என்று உரைக் கின்றார்.

கோட்டுப் பூச் சூடினும் என்ற குறளின் உரையில் *(1313)* "கோட்டுப்பூ—தாளிப்பூ என்பாரும் உளர்" என்கின்றார்.

## உரை ஒற்றுமை

காலிங்கர் உரை, சில குறட்பாக்களுக்குப் பரிதி உரை யாகவே உள்ளது. காமத்துப்பாலில் உள்ள இரண்டு குறள்களுக்குப் பரிப்பெருமாள் உரையோடு ஒத்துள்ளது. இத்தகைய ஒற்றுமை எவ்வாறு ஏற்பட்டது என்பது தெரியவில்லை.

அறத்துப்பாலில் அழுக்காறாமை என்ற அதிகாரத்தில், 'ஒழுக்காறாக் கொள்க' (161), 'கொடுப்பது அழுக்கறுப்பான்' (163), 'அவ்வித்து அழுக்காறு' (167) ஆகிய மூன்று குறள்களுக்கும் பரிதி, காலிங்கர் இருவரும் ஒரே வகையாய் உரை எழுதுகின்றனர். பயனில சொல்லாமை என்ற அதிகாரத்தில் 'பல்லார் முனிய' (191), 'நயனிலன் என்பது' (193), 'நயன் சாரா' (194) ஆகிய மூன்று குறள்களுக்குக் காலிங்கர் உரை, பரிதி உரையுடன் ஒத்துள்ளது.

காமத்துப்பாலில் 'கோட்டுப்பூச் சூடினும்' (1313), 'புல்லி விடா' (1324) என்ற இரண்டு குறள்களுக்குக் காலிங்கர் உரையும் பரிப் பெருமாள் உரையும் ஒத்துள்ளன.

## பரிமேலழகர் காலிங்கரைக் குறிப்பிடும் இடங்கள்

பரிமேலழகர், காலிங்கர் கூறிய உரையையும் கொண்ட பாடத்தையும் சில இடங்களில் குறிப்பிடுகின்றார்: மிகச் சில இடங்களில் மறுக்கின்றார்.

'அறம் பொருள் இன்பம் உயிரச்சம்' என்ற குறளின் (501) உரையில் பரிமேலழகர், 'உயிர் எச்சம் எனப் பாடம் திரித்துத் தத்தமக்குத் தோன்றியவாறே உரைத்தார்' என்று குறிப்பிடுவது காலிங்கரையேயாகும்.

'ஊனைக் குறித்த உயிர் எல்லாம்' என்ற குறளின் (1013) உரையில் பரிமேலழகர், 'ஊணைக் குறித்த என்று பாடம் ஓதுவாரும் உளர்' என்று காலிங்கர் கொண்ட பாடத்தைச் சுட்டு கின்றார்.

**பேணாது பெட்டார் உளர்மன்னோ மற்றவர்க்**
**காணாது அமைவில கண் (1178)**

என்ற குறளில் 'மற்றவர் என்பதற்குக் காலிங்கர் 'கொண்கனை' என்று வேறு பாடம் கொண்டுள்ளார். பரிமேலழகர் இப்பாடத்தை, இனி, 'கொண்கனை என்று பாடமாயின்' என்று கூறி இப் பாடத்திற்கு ஏற்ற பொருளும் கூறுகின்றார்.

## அதிகாரங்களின் பெயர்—வேறுபாடு

காமத்துப்பாலில் உள்ள நான்கு அதிகாரங்களின் பெயர் களில், சில வேறுபாடுகள் காலிங்கர் உரையில் காணப்படுகின்றன.

| பரிமேலழகர் | காலிங்கர் |
|---|---|
| 110. குறிப்பறிதல் | குறிப்புணர்தல் |
| 111. புணர்ச்சி மகிழ்தல் | புணர்ச்சியின் மகிழ்தல் |
| 118. கணவிதுப்பழிதல் | கணவிதுப்பழித்தல் |
| 127. அவர்வயின் விதும்பல் | அவர் வயின் விரும்பல் |

### குறள்களின் இடமாற்றம்

காலிங்கரது உரையில், காமத்துப்பாலில் உள்ள சில குறள்கள் அதிகாரம் விட்டு அதிகாரம் மாறியுள்ளன.

தனிப்படர் மிகுதி என்ற அதிகாரத்தில் உள்ள 'வீழ்வாரின் இன்சொல்' *(1198)* என்ற குறள், நினைந்தவர் புலம்பல் என்ற அதிகாரத்தின் இறுதிக் குறளாக உள்ளது.

நினைத்தவர் புலம்பல் என்ற அதிகாரத்தில் உள்ள 'விடாஅது சென்றாரை' *(1210)* என்ற குறள், அவர்வயின் விதும்பல் என்ற அதிகாரத்தில் ஆறாவது குறளாக உள்ளது.

### வேறுபாடமும் கருத்துச்சிறப்பும்

காலிங்கர் சில குறள்களுக்குக் கொள்ளும் வேறு பாடங்களால், பொருள் சிறக்கின்றது.

**அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரந்தளிர்த் தற்று (78)**

என்ற குறளில் 'வன்பால்' என்பதற்குக் காலிங்கர் 'வன்பார்' என்று பாடம் கொண்டு, 'கல்செறிந்து வற்கென்ற தரை' என்று பொருள் கூறுகின்றார்.

**நயன் சாரா நன்மையின் நீக்கும் (194)**

என்ற குறளில், "நன்மையும் நீங்கும் என்று வேறு பாடம் கொண்டு, நயம் சேராமால் திருமாதும் பொய்க்கும்" என்று பொருள் கொள்ளுகின்றார்.

**வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை**
**ஆண்டும் அஃதொப்ப தில் (363)**

என்ற குறளில் ஆண்டும் என்பதற்கு யாண்டும் என்று வேறு பாடம் கொண்டு, 'எவ்விடத்தும்' என்று பொருள் உரைக்கின்றார்.

### புதுப்பொருளும் விளக்கமும்

காலிங்கர் சில இடங்களில் புதுமையாகப் பொருளும் விளக்கமும் கூறுகின்றார். அவற்றைக் காண்போம்.

உயிரெச்சம் *(510)*—முத்தி

கழிபெருங்காரிகை *(517)* பெரிய நன்மை.

ஒருவந்தம் *(593)*—பெருஞ்செல்வம்.

எச்சம் *(1004)*—குலம் உருபு குணம் ஒழுக்கம் புதல்வர் புகழ் பொருள் பூமி என்னும் எச்சம்.

பேடி கைவாள் *(614)*—உறையகத்து இருந்த வாள்.

உப்பு (1050) என்பது இனிமை. காடி என்பது நடுவு நிலைமை. அஃதாவது சிறுமக்கள் பலர் கண்புதைத்து நகையாடும் இடத்து அவருள் ஒருவனை 'இவன் காடிச்சால்' என்று நடு இருத்துவர்; நடுநிலை ஆக வழக்கு என்பது அறிக.

உட்பகை அஞ்சித் தற்காக்க உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும். (883)

உட்பகை சிறிதும் உறுவழிப் பெரிதும் அஞ்சித் தன்னைப் பரிகரித்துக்கொள்க; ஏன்எனின் தனக்கு ஓர் தளர்ச்சி வந்த இடத்தே கரைபடக் கட்டிய மண், உறுதிக்கு ஒரு தளர்ச்சி வந்த இடத்து மற்று அதனை முழுவதும் முரித்து எறியும் வெள்ளம்போல் இதுவும் தன் குடிமுழுதும் குலைத்து எறிந்துவிடும்."

மட்பகை என்பதற்கு இவர் வெள்ளம் என்று பொருள் கொள்ளுகின்றார். இவ்வுரையின் சிறப்பை அறிஞர் டி.பி. பழனியப்ப பிள்ளை பின்வருமாறு புலப்படுத்துகின்றார்கள்.

"மட்பகை என்னும் தொடர்மொழி மண்வினைஞராகிய குயவர் கையாளும் கருவிகளாகிய சுழலுருளி, கொட்டுக்கோல், அச்சுச் சட்டம், ஊசி, ஓலை முதலியவற்றுள் எதற்கும் பெயராக வழக்குப் பெற்றுள்ளதன்று. மண்ணைப் பகுக்கும் காரணத்தால் போந்தது எனின், அவ்வினை செய்யும் மண்வெட்டி குந்தாலி முதலியவற்றுக்கும் பெயராதல் செல்லாது ஊசி ஒன்றற்கே பெயராய் அமைதலும் பொருந்தாது எனக் காண்க. மற்று, திணிந்த மண்ணினை இயல்பாகக் கரைக்கும் தன்மையுடைத்தாகிய நீர் அம் மண்ணிற்குப் பகையாதலோடு, இறுகச் செறிந்த கரைகளை வெள்ளப் பெருக்கால் முரித்து எடுத்து எறிந்து செல்லுதல் கண்கூடு ஆதலால், 'மண்பகை' என்ற தொடர்க்கு நீர்வெள்ளம் என்பது பொருட்பேறு உடைத்தாவது காண்க. அன்றியும் ஊசி, வனைந்த பாண்டத்தை வனையா மண்ணிற் பகுக்குங்கால் உலைவிடத்துப் பயனாவது இன்றாய் நிலையிடத்துப் பயனாவது. நீர் வெள்ளம் உலைவிடன் உடைய கரையை முற்றி மோதியுடைத்தல் எளிதாகலின் உலைவிடத்துச் செயலுடைமை உட்பகைக்கும் மட்பகைக்கும் பொருந்தும் அன்றி, குயவன் ஊசிக்குப் பொருந்தாமை அறிந்து கொள்க."[1]

## 5. மணக்குடவர்

திருக்குறள் உரைகளில், பரிமேலழகர் உரைக்கு அடுத்தபடியாக அச்சேறி மக்களிடத்தில் பரவிச் செல்வாக்குப் பெற்ற

1. திருக்குறள் பொருட்பால் காலிங்கர் — பரிப்பெருமாளுரை முன்னுரை.

பெருமை, மணக்குடவர் உரைக்கு உண்டு. பரிமேலழகர் உரையை மறுப்பவர்களும் அவரது கருத்தை ஏற்காதவர்களும் மணக்குடவர் உரையையே நோக்குவது பல ஆண்டுகளாக இருந்து வரும் வழக்கமாகும்.

மணக்குடவருடைய உரை, தெள்ளிய தமிழில் எளிய நடையில் அமைந்துள்ளது. பொழிப்புரையும், சில இடங்களில் விளக்கமும் உள்ளன. தமிழ்ப் பண்பாடு தழுவி எழுதப்பட்ட தெளிவுரை என்று இவரது உரையைப் போற்றுவர். பிற உரையாசிரியர்களைப்போல வட நூற் கருத்தைத் தம் உரையில் புகுத்துவதில்லை. புதிய பாடங்களைக் கொண்டு, சொற்களைப் பிரிக்கும் முறையில் புதுமை கையாண்டு சிறப்பாக உரை எழுதிச் செல்வது இவரது பண்பாகும்.

இவரிடம் ஆரவாரமோ புலமைச் செருக்கோ காணப் படவில்லை. கற்று அறிந்து அடங்கிய அறிஞராக இவர் காணப்படுகின்றார். தமக்கு ஐயப்பாடாக உள்ள கருத்தினைத் தயக்கத்துடனே எழுதுகின்றார். வான்சிறப்பு என்ற அதிகாரத்திற்கு விளக்கம் எழுதும் இடத்தில், "இது கடவுட் செய்கைத்தாதலால் அதன்பின் கூறப்பட்டது. இஃது ஈண்டுக் கூறியது என்னை எனின், பின் உரைக்கப்படுகின்ற இல்லறமும் துறவறமும் இனிது நடப்பது மழை உண்டாயின் என்றற்குப் போலும். அன்றியும் காலத்தின் பொருட்டுக் கூறினார் எனினும் அமையும்' என்று எழுதுவது இங்கே நினைக்கத்தக்கதாகும்.

மணக்குடவரைப்பற்றி அறிந்து கொள்ள, இவரது உரைக்கு முன்னால் உரைச் சிறப்புப்பாயிரம் எதுவும் இல்லை. ஆதலின் மற்ற உரையாசிரியர்களை அறிந்த அளவிற்கும் இவரைப்பற்றி அறிய இயலவில்லை.

மணக்குடி என்ற ஊரில் பிறந்து அவ்விடத்தில் வாழ்ந்த தால் மணக்குடியர் என்று பெயர் ஏற்பட்டு அப் பெயரே மணக்குடவர் என்று மருவிற்று. மணக்குடி என்ற பெயருடன் தமிழகத்தில் பல ஊர்கள் இருப்பதால் அவர் எப்பகுதியில் வாழ்ந்தார் என்றும் அறியமுடியவில்லை. மணக்குடி என்பது, இவர் பிறந்த குடியின் பெயர் என்றும் கூறுவர்.

திருக்குறள் உரையாசிரியர்களில் காலத்தால் முற்பட்டவர் இவர் என்ற கருத்தும் நிலவி வருகின்றது. ஆனால் இவரே பிறர்கொண்ட பாடங்களையும் மற்ற உரைகளையும் தம் உரையில் குறிப்பிடுவதால் இவருக்கு முன்னும் உரையாசிரியர் சிலர் இருந்திருக்க வேண்டும் என்று அறியலாம்.

2.24.

**சமயக் கருத்து**

மணக்குடவர் உரையில் அவரது சமயத்தை அறியும் வகையில் சமயக் கருத்துக்கள் பல இடங்களில் உள்ளன.

'ஆதிபகவன்' (1) என்பதற்கு ஆதியாகிய பகவன் என்றும், 'தன்னுயிர் தானறப் பெற்றானை' என்ற குறளின் (268) விளக்க வுரையில், "உயிர் என்றது சலிப்பற்ற அறிவை; தான் என்றது சீவனாகி நிற்கின்ற நிலைமையை; தானறுதலாவது அகங்காரம் அறுதல்" என்றும், 'மலர் மீசை ஏகினான்' என்பதற்கு (3) மலரின் மேல் நடந்தான் என்றும், 'தாமரைக் கண்ணான் உலகு' (1103) என்பதற்கு இந்திரனது சுவர்க்கம் என்றும் கூறுகின்றார்.

'வகுத்தான் வகுத்த வகை' (377) என்பதற்கு விதானம் பண்ணினவன் விதானம் பண்ணின வகை என்று பொருள் உரைக் கின்றார்.

'இருள் நீங்கி இன்பம் பயக்கும்' (352) என்ற குறளின் கீழ், "இது, மெய்யுணர்ந்தார்க்கு வினைவிட்டு முத்தி இன்பம் உண்டாமே என்றது" என்று கூறுகின்றார்.

'எதிரதாக் காக்கும்' (429) என்ற குறளின் உரையில் "இது, முன்னை வினையால் வரும் துன்பமும், முற்பட்டுக் காக்கின் கடிதாக வாராது என்றது" என்றும், 'ஒருமைக்கண்' (398) என்ற குறளில், "இது, வாசனை (வாசனாமலம்) தொடர்ந்து நன்னெறிக்கண் உய்க்கும் என்றது" என்றும் உரைக்கின்றார்.

இக் கருத்துகள் யாவும், மணக்குடவர், சமண சமயத்தவர் என்பதை விளக்கும்.

**உரையின் சிறப்பியல்புகள்**

மணக்குடவர் உரையின் சிறப்பியல்புகள் கற்போரை மகிழச் செய்பவை. அவை, மணக்குடவரின் உரைத் திறனுக்குச் சான்று பகர்பவை.

இவரது உரை பொழிப்புரையாக உள்ளது; தேவையான இடங்களில் மிகச் சுருக்கமாக விளக்கம் எழுதுகின்றார். குறளின் கருத்து இது என்று கூறுகின்றார். திருக்குறள் இருக்கும் அமைப்பிலேயே பொருள் உரைக்கின்றார். எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் இவற்றை நன்கு ஆராய்ந்து முன்பின் மாற்றி அமைத்து, கொண்டு கூட்டிப் பொருள் எழுதுவதில்லை.

**முகத்தின் முதுக்குறைந்த துண்டோ உவப்பினும்**
**காயினும் தான்முந் துறும்** **(707)**

என்ற குறளுக்குப் பரிமேலழகர் உரையும் மணக்குடவர் உரையும் ஒப்பிட்டு நோக்கின் மணக்குடவர் குறள் கிடந்தவாறே பொருள் உரைப்பது புலனாகும்.

சில இடங்களில் தேவையான சொற்களை வருவித்து எழுதுதலும் உண்டு.

**மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்**
**தாளுளாள் தாமரையி னாள்** **(617)**

என்ற குறளின் உரையில், மடியுளாள் மாமுகடி என்பதற்கு வினை செய்யுங்கால் அதனைச் செய்யாது சோம்பி இருப்பானது சோம்பலின்கண்ணே மூதேவி உறைவாள்'' என்று சில சொற்களை வருவித்துப் பொருள் உரைக்கின்றார்.

'பகல் வெல்லும் கூகையைக் காக்கை' என்ற குறளின் *(481)* கீழ், "இதனால் காலத்தது சிறப்புக் கூறப்பட்டது" என்று குறளின் கருத்தைச் சுருக்கமாகச் சுட்டுகின்றார். இவ்வாறு குறளின் கருத்தை நூல்முழுதும் சுட்டிச் சொல்லுவது இவர் வழக்கம்.

**உவமை விளக்கம்:** திருவள்ளுவர் கூறிய உவமைகளை மிகச் சில இடங்களில் விளக்குகின்றார்.

'ஏறுபோல் பீடு நடை' என்பதில் உள்ள ஏறு நடை என்பதனை,'அசைவும் தலையெடுப்பும் பொருந்திய நடை' என்று விளக்குகின்றார். இந்த விளக்கம் மிகவும் அரியதாகும்.

'நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை' என்னும் குறளின் *(802)* விளக்கவுரையில், "இது பேய்ச் சுரைக்காய்க்குப் பல காயம் அமைத்தாலும் இனிமை உண்டாகாதது போல, உடன் படாராயின் இனிமை உண்டாகாதாகலான் உடன்படல் வேண்டும் என்றது'' என்று உவமை கூறி விளக்குகின்றார்.

**மேற்கோள்:** மிக அருகியே மேற்கோள்களை இவர் காட்டுகின்றார். 'அரங்கின்றி வாட்டாடியற்றே' என்ற குறளின் விளக்கவுரையில் *(401)* "கோட்டி கொளல், புல்லா எழுத்திற் பொருளில் வறுங்கோட்டி என்றாற்போல" என்று நாலடியாரை மேற்கோள் காட்டுகின்றார்.

**சொல்லாட்சி:** மிகக் குறைவாக இவர் வடசொற்களையும் வழக்குச் சொற்களையும் பயன்படுத்துகின்றார்.

'கல்லா ஒருவன் தகைமை' என்ற குறளின் (404) உரையில், "கல்லாத ஒருவனது பெருமை கற்றவன் **கிட்டி** உரையாட மறையும் என்றவாறு'' என்ற பகுதியில் 'கிட்டி' என்ற வழக்குச் சொல்லை ஆண்டுள்ளார்.

### முரண் அகற்றுதல்

பொருட்பாலில் உள்ள,

அஞ்சாமை ஈகை அறிவுஊக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தர்க்கு இயல்பு (392)

என்ற குறளும்,

அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில் (428)

என்ற குறளும் முரணபடுவதுபோலத் தோன்றுவதை அறிந்த மணக்குடவர், 'அஞ்சுவது அஞ்சாமை' (428) என்ற குறளின் உரையில், "மேல் அஞ்சாமை வேண்டும் என்றாராயினும் ஈண்டு அஞ்ச வேண்டுவனவற்றிற்கு அஞ்சுதல் அறிவு என்றார்" என்று கூறி முரண்பாட்டை நீக்குகின்றார்.

### பரிமேலழகரும் மணக்குடவரும்

பரிமேலழகருக்குச் சிறந்த வழிகாட்டியாய் இருந்தவர் மணக் குடவரே. இவர் அமைத்துச் செப்பனிட்ட பாதையிலேயே பரிமேலழகர் முன்னேறிச் செல்கின்றார்.

அதிகாரந்தோறும் அமைந்துள்ள குறட்பாக்களை, கருத்து இயைபு நோக்கிப் பிரித்துப் பொருள்கூறும் முறையைப் பரிமேலழகர், மணக்குடவரிடமிருந்தே பெற்றுள்ளார்.

பல குறட்பாக்களின் உரையும் விளக்கமும்கூடப் பரிமேலழகர், மணக்குடவரைத் தழுவியே உரைக்கின்றார். 'அறத் தாறு இதுவென' என்ற குறளின் (37) விளக்கவுரையில் மணக்குடவர், "இது பொன்றினாலும் துணையாகுமோ என்றார்கருத் துணையாயினவாறு காட்டிற்று," என்கிறார். பரிமேலழகர் அவர் கருத்தைத் தழுவி, "இதனாற் பொன்றாத் துணையாதல் தெளிவிக்கப்பட்டது" என்று உரைக்கின்றார்.

'செவிக்குணவு' என்ற குறளின் (412) விளக்கவுரையில் மணக்குடவர், "பெருக உண்ணின் கேள்வியை விரும்பாது காம நுகர்ச்சியை விரும்பும் ஆதலான் 'சிறிது' என்றார்", என்று கூறுகின்றார். பரிமேலழகர் அவர் கருத்தை மேற்கொண்டு "நோயும் காமமும் பெருகுதலால் 'சிறிது' என்றும் கூறினார்" என்று உரைக்கின்றார்.

'உலகம் தழீஇயது' என்ற குறளின் (425) உரையில் மணக்குடவர், "நீர்ப்பூப்போல மலர்தலும் குவிதலும் இன்றி, ஒரு தன்மையாகச் செலுத்துதல் அறிவு" என்று கூறுகிறார். பரிமேலழகர் அக்குறளின் விளக்கவுரையில், "கயப்பூப் போல வேறுபடாது கோட்டுப் பூப்போல ஒரு நிலையே நட்பாயினான்

எல்லா இன்பமும் எய்தும் ஆகலின், அதனை அறிவு என்றார்" என்று மணக்குடவர் கருத்தைத் தழுவி எழுதுகின்றார்.

வேறு சில இடங்களில் பரிமேலழகர், மணக்குடவரைப் பெரிதும் மதித்து, அவர் உரையையும் கருத்தையும் சுட்டிச் செல்லுகின்றார். அவர் கருத்துப் பொருந்தாக இடங்களைக் காரணங்கூறி மறுக்கின்றார்.

## 6. பரிப்பெருமாள்

மணக்குடவருக்குப்பின் திருக்குறளுக்கு உரை இயற்றியவர் பரிப்பெருமாள். மணக்குடவரைப் பெரிதும் பின்பற்றி, தேவையான இடங்களில் மட்டும் விளக்கம் எழுதிச் சேர்த்து இவர் தம் உரையை அமைக்கின்றார். எழுத்திற்கு எழுத்து, சொல்லுக்குச் சொல் அப்படியே மணக்குடவர் உரையை யாதொரு மாறுதலும் இன்றி எடுத்துச் சேர்த்துக்கொண்ட இடங்களும் பல உண்டு. நன்னூலுக்குச் சிவஞான முனிவர், சங்கர நமசிவாயர் உரையைத் திருத்தி விளக்கங்கள் சேர்த்து அமைத்ததுபோல, பரிப்பெருமாள் மணக்குடவர் உரையைத் திருத்தி அமைத்துள்ளார். பாலின் தொடக்கத்தில் கூறும் விளக்கம், இயல் பிரிப்புப் பற்றிய ஆராய்ச்சி, அதிகாரத்தின் முன்னுரை, குறள் வைப்பு முறை ஆகிய எல்லாவற்றிலும் பரிப்பெருமாள் மணக்குடவரைப் பின்பற்றியுள்ளார்.

'இயற்றலும் ஈட்டலும்' என்ற குறளின் விளக்கவுரையில் (385) இருவர் கருத்தும் கீழே தரப்படுகின்றன.

மணக்குடவர்: "பகுத்தல் — யானை குதிரை முதலிய படைக்குக் கொடுத்து, அவையிற்றை உண்டாக்குதல். இது பண்டாரம் கூட்டுமாறு கூறிற்று".

பரிப்பெருமாள்: "வகுத்தலாவது யானை, குதிரை படைக்குக் கொடுத்து அவையிற்றை உண்டாக்குதலும், அரண் செய்யவும், படைக்கலன்கள் பண்ணுதல் முதலாயினவற்றிற்கும் கொடுத்தல். இவை எல்லாம் பண்டாரம் ஆதலின் ஒரு பொருளைப் பலவாக வகுத்தல் என்றார். இது பண்டாரம் கூட்டுமாறு கூறிற்று".

இருவர் உரைகளையும் ஒப்பிட்டு நோக்கினால் மணக்குடவர் உரையுடன் பரிப்பெருமாள் விளக்கம் சேர்த்து, உரை எழுதிச் செல்வது விளங்கும். இத்தகைய இடங்கள் பல, நூல் முழுதும் உண்டு.

### வேறு பாடம் கொள்ளுதல்

பரிப்பெருமாள், மணக்குடவரைப் பின்பற்றினாலும் மிகச் சில இடங்களில் வேறு பாடம் கொண்டு புதிய பொருள் காணுகின்றார்.

'அணங்கு கொல்' என்ற குறளில் (1081) கனங்குழை என்பது மணக்குடவர் கொண்ட பாடம். கணங்குழை என்பது பரிப்பெருமாள் கொண்ட பாடம்.

'பேணாது பெட்டார்' என்ற குறளில் (1178) காணாது அமைவில கண் என்ற மணக்குடவர் பாடத்தை மாற்றிப் பரிப்பெருமாள் 'காணாது இமைவில கண்' என்று வேறு பாடம் கொண்டுள்ளார்.

**நாம்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ (1195)**

**— இது மணக்குடவர் கொண்ட பாடம்.**

**நாம்காதல் கொண்டால் நமக்கெவன் செய்யவோ**

**— இது பரிப்பெருமாள் கொண்ட பாடம்.**

**பிறரைச் சுட்டுதல்:** பரிப்பெருமாள் மணக்குடவரையே பின்பற்றிச் சென்றாலும், வேறு சிலருடைய உரையையும் சில இடங்களில் சுட்டுகின்றார்.

பொருட்பாலில், 'உளவரை தூக்காத' (480) என்ற குறளின் உரையில், "ஒப்புரவாண்மை என்று ஒப்புரவிற்கே போக்குவாரும் உளர்" என்று சுட்டுகின்றார்.

காமத்துப்பாலில், 'மதியும் மடந்தை முகனும்' (1116) என்ற குறளின் உரையில், "பதியிற் கலங்கிய மீன் அறியா" என்று பாடம் ஓதி, தம் நிலைமையினின்றும் கலங்கின மீன்கள் மதியினையும் மடந்தை முகத்தினையும் அறியாவாயின எனினும் அமையும்" என்று வேறொரு கருத்தைக் கூறுகின்றார்.

### வரலாறு

திருக்குறள் உரையாசிரியர்கள் பதின்மர் பெயரைக் குறிப்பிடும் தொண்டை மண்டலச் சதக மேற்கோள் பாடல், பரிப்பெருமாளைக் 'கவிப் பெருமாள்' என்று குறிப்பிடுகின்றது.

பரிப்பெருமாள் உரை இறுதியில்,

**தெள்ளிய மொழியியலைத் தேர்ந்துரைத்துத் தேமொழியார்**
**ஒள்ளிய காமநூல் ஓர்ந்துரைத்து — வள்ளுவனார்**
**பொய்யற்ற முப்பாற் பொருளுரைத்தான் தென்செழுவைத்**
**தெய்வப் பரிப்பெருமாள் தேர்ந்து**

என்ற வெண்பா காணப்படுகின்றது. இவ்வெண்பாவால் பரிப்பெருமாள் மொழியியல், காமநூல் என்ற இரண்டு நூல்களை இயற்றினார் என அறியலாம். தென்செழுவை என்பது இவரது ஊர் என உணரலாம். தென்செழுவை, பாண்டி மண்டலத்துச் சேது நாட்டில் உள்ளது.

இவரைப் பற்றிய சில பாடல்கள் பெருந்தொகையில் உள்ளன. உரைச் சிறப்புப்பாயிரம் பின்வருமாறு அமைந்துள்ளது.

மாயிரு ஞாலத்து மன்பொருள் விளக்கும்
ஆயிரம் கதிரும் ஆழ்கடல் மறைந்தபின்
விரிகதிர் மதியும் விளங்காக் காலத்து
எரிதலைக் கொளீஇய சில்திரி விளக்கின்
அரியவும் பெரியவும் அறிந்தோர் போல
வசையில் வள்ளுவன் வாய்மொழிப் பொருளை
இசைபட நுவல்வோர் இறந்த பின்னர்
நன்மதி யுடையோர் நாடார் ஆதலின்
என்மதி அளவின் யான்அறிந்து உரைத்த
மழலைக் கிளவியை மதியோர் ஆராய்ந்து
இகழ்தல் இன்றியே யாவையும் இயைத்துத்
திருத்தி உரைத்தல் வேண்டும்
அருத்தம் பயில்வோர் அருங்கடன் எனவே

— (பெருந் – 1539)

என்ற உரைச்சிறப்புப் பாயிரத்தில் வரும், 'வள்ளுவன் வாய்மொழிப் பொருளை இசைபட நுவல்வோர் இறந்த பின்னர், யான் அறிந்து உரைத்த மழலைக்கிளவி' என்ற அடிகள் பரிப்பெருமாளுக்கு முன்னரே வேறு சிலர் திருக்குறளுக்கு உரை இயற்றினர் என்பதை உணர்த்தும்.

இவரது புதிய உரையை அக்காலத்தவர் போற்றாது புறக்கணித்ததால் பின்வரும் செய்யுளை இவர் இயற்றி யிருக்கக்கூடும்.

புதியது தீது பழையது நன்றுஎன்றல் பூமியுள்ளோர்
விதியது பொருளென என்னன்மின் நல்லோர்
விருப்பமுண்டேல்
புதியது நன்று பழையது தன்னினும் பூமடந்தை
புதியதின் மேவில் பருமுத்தோடு ஆடையைப் பார்மின்களே !

(பெருந் – 1540)

பரிப்பெருமாள், தமது உரை திருக்குறளின் உட்பொருளை நன்கு விளக்குவது என்றும்; முப்பாலின் கருத்தறியாது

உட்பொருள் காணமுயல்வோர் முயற்சி பயனற்றது என்றும் உரைக்கின்றார்.

> கண்ணும் முகமும் கருங்குழலும் செவ்வாயும்
> வண்ண முலையும் வனப்புடைத்தென்று — எண்ணிக்
> கருத்தறியார் சாரலுறும் காளையர்நேர் முப்பால்
> கருத்தறியாது உட்பொருள்காண் பார்
>
> (பெருந் – 1541)

இவரது புதிய உரையை அக்காலத்து மக்கள் புறக்கணித்த தால் இப்பாடலையும் இயற்றி இருக்கக்கூடும்.

**காலம்:** இவர் காமத்துப்பாலின் தொடக்கத்தில் வாத்ஸ்யாயனம் என்ற காமநூலைக் குறிப்பிடுகின்றார். அந்நூலாசிரியர் காலம் 11-ஆம் நூற்றாண்டு ஆகும். பரிப்பெருமாள் அக்காலத்திற்குப் பிறபட்டவர்.

## தமிழ் நூலறிவு

பரிப்பெருமாள் தமிழ் இலக்கண இலக்கியங்களில் புலமை நிரம்பப் பெற்றவர். தம் உரையில் ஏற்ற இடங்களில், பல தமிழ் நூல்களை மேற்கோள் காட்டுகின்றார்.

காமத்துப்பாலில், காதற் சிறப்புரைத்தல் என்னும் அதிகாரத்தில் *(1126-1129)* தொல்காப்பியர் கூறும் மெய்ப் பாடுகளைக் குறிப்பிடுகின்றார். மெய்ப்பாட்டியலில் 22-ஆம் நூற்பா கூறும் மெய்ப்பாடுகளை நான்கு குறட்பாக்களில் கூறுகின்றார்.

மெய்ப்பாட்டியல் *22* — எதிர் பெய்து பரிதல்;
கண்ணுள்ளிற் போகார் *(1126)*

" — இன்பத்தை வெறுத்தல்;
கண்ணுள்ளார் *(1127)*

" — பசியட நிற்றல்;
நெஞ்சத்தார் *(1128)*

" — கண் துயில் மறுத்தல்;
இமைப்பின் *(1129)*

இவ்வாறே காமத்துப்பாலின் தொடக்கத்தில் தொல் காப்பியக் களவியல் *(14)* சூத்திரமும் இறையனார் அகப்பொருள் சூத்திரமும் இவரது உரையில் இடம் பெறுகின்றன. பிரிவாற்றாமை அதிகாரத்தின் தொடக்கத்தில், பிரிவு பற்றி இறையனார் அகப்பொருள் கூறும் சூத்திரம் ஒன்றும் ஆளப் பட்டுள்ளது.

'நாநலம் என்னும் நலன் உடைமை' (641) என்பதற்கு, 'சொல்வலை வேட்டுவன் என்றாரும் உளர்' (புறம் 252) என்று புறநானூற்றைக் குறிப்பிடுகின்றார்.

மூன்று வகையான தூதர் இயல்பை, "தலையான தூதன் தானே காரியம் அறிந்து சொல்லும்; இடையான தூதன் சொன்ன மாற்றத்தைச் சொல்லும்; கடையான தூதன் ஓலை காட்டும்" என்று இவர் உரைக்கின்றார் (687). இக்கருத்து,

> தானறிந்து கூறும் தலைமற் றிடையது
> கோன்அறிந்தது ஈதுஎன்று கூறுமால் — தானறியாது
> ஓலையே காட்டும் கடைஎன்று ஒருமூன்றும்
> மேலையார் தூதுரைத்த வாறு

என்ற பாரத வெண்பாவின் கருத்தைத் தழுவியதாகும்.

## வடமொழிப் புலமை

வடமொழியில் உள்ள காமநூலையும் அரசியல் நூலையும் ஆழ்ந்து பயின்று அவற்றைப் பரிப்பெருமாள் பயன்படுத்து கின்றார்.

காமத்துப்பாலின் தொடக்கவுரையில், "இக் காமப் புணர்ச்சியை வடநூலாசிரியர் அராகத்தார் கூடும் கூட்டம் என்ப" என்றும், "இதற்கு இலக்கணம் வாத்ஸ்யாயனம் என்னும் காமதந்திரத்துச் சுரதவிகற்பம் என்னும் அதிகரணத்துள் கண்டு கொள்க" என்றும் கூறுகின்றார்.

பொருட்பாலில் பல அரசியல் நூலின் கருத்துகளைக் குறிக்கின்றார். தெரிந்து தெளிதல் என்னும் அதிகாரத்தில் துரோணர் மதம் (503), கௌடிலியர் மதம் (504), நாரதர் மதம் (505), பராசரர் மதம் (507), வியாதன் மதம் (508), உத்தவாசாரியார் மதம் (510) என்று அரசியல் நூற்கொள்கைகளைக் குறிப்பிடுகின்றார்.

## கதைகள்

குற்றங் கடிதல் என்னும் அதிகாரத்தில் பல கதைகளைக் கூறிக் கருத்துகளை விளக்குகின்றார். அவை பின்வருமாறு:

"பிறர்மனை நயத்தலால் கெட்டான் இராவணன்; வெகுளியால் கெட்டான் சனமேயன்; நுகர்ச்சியால் கெட்டான் சச்சந்தன்" (431).

"மாண்பு இறந்த மானமாவது தொடங்கின வினை, நன்மை பயவாதாயினும் அதனைவிடாது ஒழிதல். இதனால் கெட்டான் துரியோதனன். மாணா உவகையாவது, எளியாரை

அடர்க்கையால் பிறந்ததொரு மகிழ்ச்சியால் வலியார்மட்டுச் செல்லுதல். இதனால் கெட்டான் வாதாபி" (432.)

"இது பிறர் பொருளை விரும்பினால் வரும் குற்றம் கூறிற்று. இதனால் கெட்டான் புரூரவா" (437).

"எல்லா நாளும் தன்னைப் பெரியனாக நினைத்து வியவாது ஒழிக. இதனால் கெட்டான் கார்த்த வீரியார்ச்சுனன்" (439).

"வத்தராயன் யானை பிடிக்கப்போய்ச் சிறைப்பட்டான்" (440).

**உலகியல் அறிவு**

பரிப்பெருமாள், தம் காலத்துப் பழக்கவழக்கங்களை நன்கு அறிந்துள்ளார். உலகியலை அறிந்து போற்றித் தம் உரையில் கூறுகின்றார்.

குடிசெயல் வகை என்னும் அதிகாரத்தில், 'அமரகத்து' என்னும் குறள் உரையில் (1027), "இஃது ஒரு குடிப்பிறந்தார் பலர் உளர் ஆயினால் அவருள் மூத்தவருக்குக் கடனோ, எல்லார்க்கும் கடனோ என்று ஐயுற்றார்க்குக் கூறப்பட்டது" என்று கூறுகின்றார்.

இவர் சுற்றந்தழால் என்னும் அதிகாரத்தில் தம் காலத்துச் சமுதாய அமைப்பினையும் குலமுறைக் கோட்பாடுகளையும் குறிப்பிடுகின்றார். அவற்றைக் கீழே காண்போம்:

"பிள்ளைகளை வேறு வேறு இடத்து நிறுத்தவேண்டும் என்பது சில ஆசாரியர் மதம். அதனை மறுத்து, மக்களை ஓரிடத்தே கொண்டிருக்க வேண்டும் என்பதூஉம், அதனானே குலம் வளரும் என்பதூஉம் கூறிற்று" (522).

"மக்கள் பலர் உண்டானால் எல்லார்க்கும் பகுத்து உண்ணக் கொடுக்க வேண்டும்" (527).

"மக்கள் பலர் உண்டானால் எல்லாரையும் ஒக்கப்பாராது நீதிமான் ஒருவனை இளவரசு ஆக்க வேண்டும்" (529).

"இது, விட்டுப்போன புத்திரனைக் கூட்டிக் கொள்ளுமாறு கூறிற்று" (529).

"இது, மீண்டுவந்த இராஜ புத்திரனோடு செய்யும் திறன் கூறிற்று" (530).

5

# பரிமேலழகர்

## 1. வரலாறு

பரிமேலழகர் என்னும் அழகிய பெயரைத் தாங்கியவர், சிறந்த தமிழ் நூலாகிய திருக்குறளுக்கு உரை இயற்றிப் பெருமையுடன் விளங்குகின்றார். பரிமேலழகர் என்று பெரிதும் வழங்கும் பெயரைப் பரிமேலழகியார், பரிமேலழகியன், பரிமேலழகரையன் என்று பலவாறு வழங்குகின்றனர். சிவஞான முனிவர் இவரைப் பரிமேலழகியார் என்றே குறிப்பிடுகின்றார். ரா. இராகவ ஐயங்கார் 'பரிப்பெருமாளைப் பரி என்று கொண்டு அவரினும் உரை வன்மையான் அழகு உடையர் ஆதலால், பரிமேலழகர் எனப்பட்டாரோ என்று ஊகிக்க இடமுண்டு' என்று கூறுவது* கேட்பதற்கு இனிமையாய் உள்ளதே ஒழிய உண்மையை வெளிப்படுத்துவதாய் இல்லை. பரிமேலழகர் என்ற பெயர் திருமாலுக்கு உரியது. திருமால் பரிமேல் அழகராயும், யானைமேல் அழகராயும் எழுந்தருளுவது இன்றும் வைணவக் கோயில் விழாக்களில் உண்டு.

### வாழ்ந்த இடம்

பரிமேலழகர் மதுரையில் வாழ்ந்தவர் என்று சிலரும், காஞ்சிபுரத்தில் வாழ்ந்தவர் என்று சிலரும் கூறுகின்றனர். இரு வேறு கருத்தினரும் தம் தம் கருத்திற்குச் சான்றுகள் காட்டுகின்றனர்.

பெருந்திரட்டில் உள்ள செய்யுள் ஒன்று (பெருந். 1547) பரிமேலழகரைக் 'கலைதேர் ஒக்கைக் காவலன்' என்று குறிப்பிடுகின்றது. ஒக்கை என்பது ஒக்கூர் என்பதன் மரூஉ மொழி; அவ்வூர் பாண்டிய நாட்டில் உள்ளது. காவலன் என்று குறிக்கப்படுவதால், அரசியல் தலைவராய் இருந்திருக்கலாம். வேறொரு செய்யுள் (பெருந். 1548) 'போற்று தமிழ்க் கூடற்

* சேதுநாடும் செந்தமிழும் – பக்.16 (1928).

பரிமேலழகியான்' என்று இவரைக் குறிப்பிடுவதால் மதுரையில் இவர் வாழ்ந்தவர் என்பது பெறப்படும். இரு கருத்துகளையும் இணைத்து நோக்கும்போது, பரிமேலழகர் ஒக்கூரில் அரசியலில் தலைமை பூண்ட குடியில் பிறந்து, பின் புலமைச் செல்வராய் விளங்கி, தமிழ் வளர்த்த மதுரையில் தங்கித் தமிழ்ப் பணிபுரிந்து வந்தார் என்று கருதலாம்.

இவரது உரையில், நெல்லை மாவட்டத்துப் பேச்சு வழக்கு இடம்பெற்றுள்ளது. “செவ்வி பெற மலர்ந்து வைத்தும் நாற்றம் இல்லாத பூ, சூடப்படாதவாறு போல, நன்று மதிக்கப்படார்” என்று பொருட்பாலில் உள்ள 'இணர் ஊழ்த்தும்' (650) என்ற குறளின் சிறப்புரையில் கூறுகின்றார். மலர்ந்து, கற்று என்ற சொற்களுடன் 'வைத்து' என்ற சொல்லைச் சேர்த்துள்ளார். வைத்து என்ற சொல்லை இன்றும் பாண்டிய நாட்டு மக்கள் தம் பேச்சில் வழங்குகின்றனர். எனவே, பரிமேலழகர் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவர் என்பது உறுதிப்படுகின்றது. திருநெல்வேலி மாவட்டத்தில் பரிமேலழகர் என்ற பெயருடைய பலர்க்கு நினைவாகப் பல இடங்களில் கல்லறைகள் உள்ளன.[1]

இன்னொரு சாரர் பரிமேலழகரைக் காஞ்சிபுரத்தில் வாழ்ந்தவர் என்பதற்குச் சான்றுகள் காட்டுகின்றனர். தொண்டை மண்டலச் சதகம் (41), “திருக்காஞ்சி வாழ் பரிமேலழகன், வள்ளுவர் நூற்கு வழிகாட்டினான்” என்று கூறுகின்றது.

13-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆட்சி புரிந்த விசய கண்ட கோபாலன் என்னும் தெலுங்குச் சோழனின் 22-ஆம் ஆட்சியாண்டில் (கி.பி. 1271) எழுந்த கல்வெட்டு ஒன்று, 'வண்துவரப் பெருமாளான பரிமேலழகிய பெருமாள் தாதன்' என்ற பெயரைக் குறிப்பிடுகின்றது. இப்பெயருடையாரிடமிருந்து நிலம் ஒன்று வாங்கிய செய்தி கூறப்பட்டுள்ளது. இக் கல்வெட்டுக் குறிப்பிடும் பரிமேலழகிய பெருமாள் தாதன் என்பவரே உரையாசிரியர் பரிமேலழகராக இருக்கலாம் என்பர்.[2]

## சமயம்

பரிமேலழகர், வைணவ சமயத்தினர் என்பதற்கு, சான்றுகள் பல உள்ளன.

'மடியிலா மன்னவன்' என்னும் குறளில் (610), அடியளந்தான் என்பதற்கு, 'தன் அடியளவானே எல்லா

1. முருக தனுஸ்கோடி – மணிவிழா மலர் (1967) பக்.74, 75.
2. சாசனத் தமிழ்க்கவி சரிதம்.(1937) பக்கம் – 114–118. மு. இராகவ ஐயங்கார்.

உலகையும் அளந்த இறைவன்' என்று பொருள் கூறி, தாம் திருமாலுக்கு அன்பர் என்பதை வெளிப்படுத்துகின்றார்.

தாமரைக் கண்ணான் உலகு என்பதற்கு (1103), 'துறந்த யோகிகள் எய்தும் செங்கண்மால் உலகம்' என்று பொருள் கூறுகின்றார். 'இந்திரன் உலகு என்று உரைப்பாரும் உளர்; தாமரைக் கண்ணான் என்பது அவனுக்குப் பெயர் அன்மையின், அஃது உரையன்மை அறிக' என்று பிறர் கருத்தை மறுத்து, வைணவ சமயப்பற்றைக் காட்டுகின்றார்.

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்திலிருந்து பல மேற்கோள்களைக் காட்டுகின்றார்.

'பற்றற்ற கண்ணே' என்னும் குறள் உரையில் (349) 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்னும் திருவாய் மொழியை (1, 2, 5)க் காட்டுகின்றார்.

'ஆரா இயற்கை' என்ற குறள் உரையில் (370) 'நன்றாய் ஞானம் கடந்துபோய்' என்ற திருவாய் ,மொழிப்பாடல் (78.-6) முழுவதையும் மேற்கோள் தருகின்றார்.

பொருட்பால் இறைமாட்சியின் தொடக்கத்தில், "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும் என்று பெரியாரும் பணித்தார்" என்று நம்மாழ்வார் பாடலை (4-4-8) நினைவூட்டுகின்றார்.

இவை யாவும் பரிமேலழகர் வைணவ சமயத்தினர் என்பதை உணர்த்தும் சான்றுகளாகும்.

**காலம்**

உமாபதி சிவாசாரியார், 'வள்ளுவர்சீர்' என்னும் வெண்பாவில், 'பரிமேலழகர் செய்தவுரை' என்று இவர் உரையைக் குறிப்பிடுகின்றார். உமாபதிசிவனார், சங்கற்ப நிராகரணம் என்ற நூலை 1313-ஆம் ஆண்டில் இயற்றினார். ஆதலின் பரிமேலழகர் இக்காலத்திற்கு முற்பட்டவர்.

காமத்துப்பாலின் முன்னுரையில், "வடநூலுள் போசராசனும் 'சுவை பல என்று கூறுவார் கூறுக; யாம் கூறுவது இன்பச்சுவை ஒன்றனையுமே' என இதனையே மிகுத்துக் கூறினான்" என்று கூறுகின்றார். இங்கே கூறப்பட்ட போசராசன் 'சிருங்காரப் பிரகாசம்' இயற்றிய காலம், 11-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி.

நன்னூலார் படைத்து வழங்கிய 'ஒருபொருட் பன்மொழி' என்னும் அழகிய தொடரைத் தம் உரையில் இரண்டு இடங்களில்

(571, 863) பரிமேலழகர் எடுத்தாளுகின்றார். ஆதலின் நன்னூலாருக்குப் பிற்பட்டவர்.

சேனாவரையர் (கி.பி. 1276) கருத்தைப் பரிமேலழகர் தழுவி, வானோக்கி வாழும்குடி, (542) என்ற குறளுக்கு உரை கூறுகின்றார் (சொல் - 93), சொல்லெச்சத்திற்கும் சேனாவரையர் கருத்தையே தழுவியுள்ளார் (சொல் - 441, குறள் - 10, 37). ஆதலின், சேனாவரையருக்குப் பிற்பட்டவர் பரிமேலழகர்.

**தலைமையோன்**

பரிமேலழகர் உரைச் சிறப்புப்பாயிரம்,

**வடநூல் துறையும் தென்திசைத் தமிழும்**
**விதிமுறை பயின்ற நெறியறி புலவன்**
**அன்பு அருள் நாண் ஒப்புரவு கண்ணோட்டம்**
**நன்றறி வாய்மை நற்றவம் உடையோன்**
**இத்தகை யன்றி ஈசனது அருளால்**
**உய்த்துணர் வுடையவோர் அருளால்**
**பரிமே, லழகன் எனப்பெயர் படைத்துத்**
**தரைமேல் உதித்த தலைமை யோனே**

என்று புகழ்கின்றது. இங்கே கூறப்படும் புகழுரைகள் யாவும் பரிமேலகழர் பெருமையை நன்கு உணர்ந்து கூறப்பட்டவை யாகும்.

## 2. திருக்குறள் உரை

தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிதி, திருமலையர், மல்லர், பரிப்பெருமாள், காலிங்கர் ஆகிய ஒன்பது உரையாசிரியர்களுக்கும் காலத்தால் பிற்பட்டவர் பரிமேலழகர். இச்செய்தி,

**செவ்வி முப்பாலுக்கு**
**ஓர்உரை யின்றி ஒன்பது சென்றும்**
**ஐயுற வாக நையுறு காலை**
**... குறட்பாத் தமிழ்மனு நூலிற்கு**
**விழுப்பொருள் தோன்ற விரித்தினிது உரைத்தனன்**
**பரிமேலழகன் எனப்பெயர் படைத்துத்**
**தரைமேல் உதித்த தலைமை யோனே**

என்று உரைப்பாயிரம் கூறுவதால் வெளிப்படுகின்றது.

### காலம் தந்த வாய்ப்பு

பரிமேலழகர் தமக்குமுன் தோன்றிய ஒன்பது உரைகளையும் கற்கும் வாய்ப்புப் பெற்றார். எல்லா உரைகளிலும் உள்ள நல்ல இயல்புகளை அறிந்தார். ஒவ்வொரு உரையிலும் காணப்பட்ட குறை நிறைகளை உணர்ந்தார். இதன் பயனாய் நல்லனவற்றை மேற்கொண்டு குற்றங்குறைகளை நீக்கி, சிறந்த உரை காணும் வாய்ப்பு உண்டாயிற்று.

பரிமேலழகர்க்கு முற்பட்ட உரையாசிரியர் ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு சிறப்பியல்பு காணப்படுகின்றது. பாலின் தொடக்கத்தில் எழுதும் விரிவுரை, இயல்பற்றிய ஆராய்ச்சியுரை, அதிகாரம் தோறும் எழுதும் முன்னுரை, அதிகார வைப்பு முறை பற்றிய விளக்கம், அதிகாரத்திற்குள் குறட்பாக்களைப் பொருள் தொடர்போடு தொகுத்து நோக்குதல் ஆகியவற்றைப் பரிமேலழகர் நமக்கு முற்பட்ட உரையாசிரியர்களிடமிருந்து பெற்றார்.

மணக்குடவர் ஓர் அதிகாரத்திற்குள் குறட்பாக்களைப் பொருள் தொடர்போடு தொகுத்து நோக்குகின்றார். பரிமேலழகர் இம்முறையை மேற்கொண்டு புதுவிளக்கம் சில காணுகின்றார். காலிங்கர் அதிகாரம் தோறும் பத்தாவது குறளின் இறுதியில் அடுத்து வரும் அதிகாரத்திற்குத் தோற்றுவாய் கூறுகின்றார். பரிமேலழகர் இம்முறையைச் சிறிது மாற்றி அதிகாரத்தின் தொடக்கத்தில் முறை வைப்புப் பற்றி ஆராய்ச்சி நிகழ்த்துகின்றார். இவ்வாறு ஒவ்வொரு உரையிலும் காணப்படும் நல்லனவற்றை எல்லாம் மேற்கொள்ளுகின்றார் பரிமேலழகர்.

குறட்பாவுக்கு உரைஎழுதும் போதும், ஏனைய உரைகளை நினைவில்கொண்டே உரை எழுதுகின்றார். பிறர் கொண்ட வேறு பாடங்களைக் குறிப்பிடுகின்றார். பொருத்தமற்ற பாடங்களை விலக்குகிறார். தவறான உரையைக் காரணங்கூறி மறுக்கின்றார். தமக்கு உடன்பாடு இல்லாத கருத்துகளைச் சுட்டிச் செல்லுகின்றார். மாறுபட்ட கொள்கையை மதிக்கின்றார். போற்றத்தகுந்த வேறுபாடுகளைப் போற்றுகின்றார்.

எல்லா உரையாசிரியர்கள் கருத்தையும் நெஞ்சத்தில் நிறுத்தி, உரை எழுதுகின்றார் என்பதற்குச் சான்றுகள் பல உள்ளன.

**இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்**
**குலன்உடையான் கண்ணே உள**

**(குறள் – 223)**

என்ற குறளுக்கு உரை எழுதியபின், வேறு உரைகளாக மூன்று கருத்துக்களைக் குறிப்பிடுகின்றார்.

"இளிவரவை ஒருவன் தனக்குச் சொல்வதற்கு முன்னே அவன் குறிப்பறிந்து கொடுத்தல்" என்பது மணக்குடவர் உரை.

"அதனைப் பின்னும் பிறன் ஒருவன்பாற் சென்று அவன் உரையா வகையால் கொடுத்தல்" என்பது பரிதியார் உரை.

மூன்றாவது கருத்தைக் கூறிய உரையாசிரியர் யார் என்று இன்று நமக்குத் தெரியவில்லை. தருமர் நச்சர் தாமத்தர் ஆகியவர்களில் யாரேனும் ஒருவர் கூறியதாக இருக்கலாம்.

'வன்கண் குடிகாத்தல்' என்ற குறள் உரையில் *(632)* வேறு இரண்டு உரைகளைக் குறிப்பிடுகின்றார்.

இன்னும் சில இடங்களில் பரிமேலழகர் மற்ற உரை யாசிரியர்களை எல்லாரும் உரைத்தார் *(643)*, பிறர் எல்லாம் உரைத்தார் *(817, 1069, 1262)* என்று சுட்டுகின்றார்.

பரிமேலழகர் பிறர் உரைக்கருத்துகளை ஆழ்ந்து பயின்று தெளிவு பெற்றதுடன், காலிங்கர் உரையின் சிறப்பியல்புகளுள் ஒன்றான தனித்தமிழ் நடையை மேற்கொண்டுள்ளார். பிற உரையாசிரியர்களின் நல்லியல்புகளுடன் பரிமேலழகரின் ஆழ்ந்த இலக்கண அறிவும் வடமொழிப் பயிற்சியும் தமிழ் இலக்கியப் புலமையும் அவர் உரைக்கு ஆக்கம் தந்தன. ஆதலின், அவர் உரை ஏனைய உரைகளை எல்லாம் வென்று மேலோங்கியது.

## திருவள்ளுவரைப் பற்றி

திருவள்ளுவரைப்பற்றிப் பரிமேலழகர் கூறும் கருத்துகள் மிகச் சிறந்தவை; திருவள்ளுவர் நெஞ்சத்தை அளந்து அறிந்து, புலமை மாண்பை அளவிட்டுக் கூறப்பட்டவை.

"எல்லா நூல்களிலும் நல்லன எடுத்து எல்லார்க்கும் பொதுபடக் கூறுதல் இவர்க்கு இயல்பு" *(322)* என்று திருவள்ளுவரைப் பற்றிக் கூறுகின்றார். இங்கே கூறப்பட்ட ஒவ்வொரு சொல்லும் பொருள் ஆழம் உடையதாகும்.

## முரண்பாடு நீக்கல்

**ஊழிற் பெருவலி யாவுள** **(380)**

என்று கூறிய திருவள்ளுவர்,

**ஊழையும் உப்பக்கம் காண்பர்** **(620)**

என்று கூறுகின்றார். இவை மாறுபட்ட கருத்துகளாக இருப்பதை உணர்ந்த பரிமேலழகர், "ஊழ் ஒரு காலாக இரு காலாக அல்லது விலக்கல் ஆகாமையின், பலகால் முயல்வர் பயன் எய்துவர்

என்பார் 'உப்பக்கம் காண்பர்' என்றார்'' என்று தெளிவு படுத்துகின்றார்.

**இகல்வெல்லும் வேந்தற்கு வேண்டும்பொழுது (481)**

என்ற கருத்தும்,

**குடி செய்வார்க்கு இல்லை பருவம் (1028)**

என்ற கருத்தும் முரண்பட்டவை அல்ல என்பதைப் பரிமேலழகர், "இகல்வெல்லும் வேந்தர்க்கு வேண்டும் பொழுது (481) என்றது உட்கொண்டு இவர்க்கும் வேண்டுமோ என்று கருதினும் அது கருதற்க என்று மறுத்தவாறு" என்று விளக்குகின்றார்.

**மாந்தர்க்குக் கற்றனைத் தூறும் அறிவு (396)**

என்ற கருத்து,

**நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்**
**உண்மை அறிவே மிகும் (373)**

என்ற கருத்துடன் மாறுடுவதுபோல் தோன்றுவதை அறிந்து, "இஃது ஊழ் மாறுகொள்ளாவழியாகலின் மேல் உண்மை அறிவே மிகும் என்றதனோடு மலையாமை அறிக" என்று உரைக்கின்றார் *(396)*.

**தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்**
**நீங்கா நிலன்ஆள் பவர்க்கு (383)**

என்பதும்,

**தூங்குக தூங்கிச் செயற்பால (672)**

என்பதும் மாறுபாடு உடையவைபோல் உள்ளதை உணர்ந்து, "மேல் தூங்காமை என்றார் *(383)* ஈண்டு அதனைப் பகுத்துக் கூறினார் *(672)*" என்று உரைக்கின்றார்.

இத்தகைய அரிய விளக்கம் பல தந்த பரிமேலழகரை,

**திருவள்ளுவர் தம் கருத்தமைதி தானேகருதி**
**விரித்து உரைத்தான்**

**(பெருந் – 1544)**

என்று புலவர்கள் போற்றுவர்.

**உலகியல் அறிவு**

பரிமேலழகர் உலக மக்களிடையே நன்கு பழகி, அவர்களின் பேச்சு, பழக்கவழக்கம் ஆகியவற்றை அறிந்திருக்கின்றார்.

மக்களைப் 'பகைவர், நட்டார், நொதுமலர்' என மூன்றாகப் பிரிக்கின்றார் *(752)*.

2.25.

'குற்றம் இல்லாதார் உலகத்து இன்மையின்' என்று கூறுவது இவரது உலக அறிவை உணர்த்தும் (793).

நல்குரவு என்னும் அதிகாரத்தில், சிறந்த அறிஞர்கள் வறுமையுடையவராய் இருப்பின், அவர்களது சிறந்த பேச்சும் பயனற்றுப் போகும் என்பதற்குக் காரணம் கூறுகின்றார். "யாம் இவர் சொல்லியன விரும்பிக் கேட்குமாயின், கண்ணோடி இவர் உறுகின்ற குறைமுடிக்க வேண்டும் என்று அஞ்சி யாவரும் கேளாமையின் பயனில் சொல்லாய் முடிதல்" (1046).

வறியனைச் சுற்றத்தார் நீக்கிவிடுவர் என்பதற்கு, "கொள்வது இன்று ஆதலேயன்றி, கொடுப்பது உண்டாதலும் உடைமையின், அது நோக்கிச் சுற்றத்தார் யாவரும் துறப்பர்" என்று காரணம் கூறுகின்றார் (1047).

புறங்கூறாமை என்னும் அதிகாரத்தில் ஒரு குறளில் (186) "தன்னைப் புறங்கூறியவாறு கேட்டான், அக்கூறியாற்கு அவ்வளவன்றி அவன் இறந்துபட்டு உளையும் திறத்தனவாகிய பழிகளைநாடி, ஏதிரே கூறும்" என்று உரைக்கின்றார்.

தும்மும்போது மூச்சுடன் உயிரும் போய்விடுமோ என்றஞ்சி 'நூறு ஆயுள்' என்று மகளிர் வாழ்த்துதலையும் (1312), அன்புடையார் நினைத்த வழி அந்நினைக்கப்பட்டார்க்குத் தும்மல் தோன்றும் என்ற மகளிர் வழக்கினையும் (1317) இவர் குறிப்பிடுகின்றார்.

இவையேயன்றி மக்கள் பேச்சு வழக்கினைக் குறிப்பிடும் இடங்களும் உண்டு.

'நெருப்பை நெருப்பாகவே கருது' என்றாற்போல (602), 'ஒருவர் கூறை எழுவர் உடுத்து' என்றாற்போல (1269) என்ற இடங்களில் தம் காலத்துப் பேச்சு வழக்கினை அறிந்து எழுதுகின்றார்.

### தமிழ் நெஞ்சம்

பரிமேலழகரின் தமிழ்ப்பற்றும், பண்பட்ட உள்ளமும் வெளிப்படும் வகையில், உரைஎழுதும் இடங்கள் சில உண்டு.

'பழங்குடி' என்ற (955) சொற்றொடருக்குத் 'தொன்று தொட்டு வருகின்ற குடி' என்று பொருள் கூறி, 'தொன்று தொட்டு வருதல், - சேர சோழ பாண்டியர் என்றாற்போலப் படைப்புக் காலம் தொடங்கி மேம்பட்டு வருதல்' என்று விளக்குகின்றார்.

மானம் என்ற அதிகாரத்தின் முதற் குறள் உரையில் (961) 'இறப்ப வருவழி இளி வந்தன செய்தாயினும் உய்க' என்னும்

வடநூல் முறையை மறுத்து, 'உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையும் தூக்கி அவை செய்யற்க என்பதாம்' என்று இவர் கூறுவது நினைவில் கொள்ளத் தக்கதாகும்.

'ஈன்றாள் பசி காண்பான் ஆயினும்' (656) என்னும் குறள்உரையில், "இறந்த மூப்பினராய இரு முது குரவரும் கற்புடை மனைவியும் குழவியும் பசியான் வருந்தும் எல்லைக்கண் தீயன பலவும் செய்தாயினும் புறந்தருக' என்னும் அறநூற் பொருள் நூல்வழி ஒழுகுதலும், அரசர் தொழிற்கு உரியராதலும், நன்கு மதிக்கற்பாடும் உடைய அமைச்சர்க்கும் எய்தாமைபற்றி இவ்வாறு கூறினார்" என்று எழுதுகின்றார்.

## தமிழ் நடை

இவரது உரையின் தனிப்பட்ட நற்பண்புகளில் ஒன்று தீந்தமிழ் நடை. உரைநடையில் இவர்க்கு ஒப்பான செறிவு இனிமை தெளிவு நயம் ஆகியவற்றின் இணைப்பை வேறு எவரிடத்தும் நாம் காண இயலாது. செய்யுளில் திருக்குறளுக்கு உள்ள சிறப்பியல்புகளை எல்லாம், உரை நடையில் பெற முயன்ற இவர் வெற்றி பெற்றுள்ளார். திருவள்ளுவருடன் போட்டியிட்டு, திருவள்ளுவர் நடையை - சொற்செறிவை- இனிமையை - கருத்து ஆழத்தைப் பெற்றுள்ளர்ர்.

கருத்தளவில் சில இடங்களில் வடமொழிச் சார்பாக இருக்கின்ற இவர், சொல் நடையில் வியக்கத்தக்க முறையில் சீரிய தனித்தமிழ் நடையைப் படைத்துள்ளார்.

## முன்னோர்மொழி

நயமான பாடல்களின் அடியை, உரைநடையில் எழுதிச் செல்வது பரிமேலழகர் இயல்பு. அத்தகைய இடங்களில் சில காண்போம்:

*64.* சிறுகையான் அளாவலாவது, இட்டும் தொட்டும் கௌவியும் துழந்தும், நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தல் (புறம் - *188*).

*110.* பெரிய அறங்களைச் சிதைத்தலாவது ஆன்முலை அறுத்தலும், மகளிர் கருவினைச் சிதைத்தலும், குரவர்த்தபுதலும் (புறம் - *33*).

*425.* கயப்பூப்போல வேறுபடாது கோட்டுப்போல ஒரு நிலையே நட்பாயினான் எல்லா இன்பமும் எய்தும் (நாலடியார்).

*970.* புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின் வலவன் ஏவா வானவூர்தி எய்துவர் (புறம் - *27*).

1109. இருதலைப் புள்ளியின் ஓருயிராய உழுவல் அன்பு (அகம்).

1120. பாத்தி அன்ன குடுமிக் கூர்ங் கற்களை உடைய வெஞ்சுரத்தை (அகம் - 5).

1099. மது மறைந்து உண்போர் மகிழ்ச்சிபோல உள்ளத்துள்ளே மகிழ்தலின் (இறையனார் - 8 உரை மேற்).

## சான்று காட்டுதல்

திருக்குறளில் உள்ள சொற்களுக்குத் தாம் கொள்ளும் பொருள் முன்னோர் பாடல்களில் அவ்வாறே உள்ளது என்பதற்குத் தக்க சான்று காட்டி நிறுவுவது பரிமேலழகரின் வழ்க்கம். அத்தகைய இடங்கள் கீழே தரப்படுகின்றன.

580. நாகரிகம் என்பது கண்ணோட்டமாதல், முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின் நஞ்சும் உண்பர் நனி நாகரிகர் (நற் - 355) என்பதனாலும் அறிக.

899. வேந்தனும் வேந்து கெடும் - இந்திரனும் இடையே தன்பதம் இழந்துவிடும். 'வேந்தன் மேய தீம்புனல் உலகமும்' (தொல். பொருள் - 5) என்றார் பிறரும்.

1182. என் மேனிமேல் இவர்தந்து ஊரும் - என் மேனியை மேற்கொண்டு செலுத்தா நின்றது. 'வேலன் கூந்தன்மா இவர்ந்து செல்ல' (சீவக! விமலை - 1) என்புழியும் இவர்தல் இப்பொருட்டாதல் அறிக.

1165. துப்பின் எவன் ஆவர் கொல் - துன்பம் செய்தற்குரிய பகைமைக்கண் என் செய்வார் கொல்லோ. துப்புப் பகையும் ஆதல், 'துப்பு எதிர்ந்தோர்க்கே உள்ளாச் சேய்மையான்' (புறம் - 380) என்பதனாலும் அறிக.

திருக்குறளைச் சான்று காட்டுதலும், மேற்கோள் தருதலும், உரைநடையாக்கி எழுதுதலும் இவரது வழக்கம் (135, 161, 263, 305, 457, 755, 955, 971, 972).

## உவமை கூறுதல்

தம் உரையில் பல உவமைகளைக் கூறி, கருத்தை விளக்குகின்றார்.

இனிய கனிகள் என்றது, ஔவையுண்ட நெல்லிக்கனி போல அமிழ்தானவற்றை; இன்னாத காய்கள் என்றது காஞ்சிரங்காய் போல நஞ்சானவற்றை (100).

இந்திரன் போல எல்லாப் பொருளையும் இழந்து சிறுமை எய்தல் (144).

விறகு பெற்ற தழல்போல் *(343)*.

காட்டுத் தீ முன்னர்ப் பஞ்சுத் துய்போலும் *(360)*

கரும்பு அயிறற்குக் கூலிபோல *(399)*.

ஏரல் எழுத்துப் போல்வதோர் விழுக்காடு *(404)*.

மழைத்துளிபோல வந்து ஈண்டி *(416)*.

குதிரையை நிலமறித்து செலுத்தும் வாதுவன்போல *(422)*.

கயப்பூப்போல வேறுபடாது, கோட்டுப்பூப்போல ஒரு நிலையே நட்பாயினான் *(425)*.

தானே கெடுதலாவது, பாகன் இல்லாத யானைபோல நெறியல்லா நெறி சென்று கெடுதல் *(448)*.

புலியை அடைந்த புல்வாய் இனம் போன்று *(571)*.

கடன் கொண்டான் தோன்றப் பொருள் தோன்றுமாறு போல *(693)*.

இத்தகைய அரிய உவமைகள் இன்னும் சில இடங்களிலும் *(741, 797, 900)* உள்ளன.

## தமிழிலக்கியப் புலமை

பரிமேலழகர் தமிழிலக்கியங்களை ஆழ்ந்து கற்றுத் தேர்ந்து தெளிந்த புலமை பெற்றுள்ளார். தாம் கற்ற நூல்களிலிருந்து கணக்கற்ற மேற்கோள்களைத் தருகின்றார்.

அகநானூறு *(210)*, பதிற்றுப்பத்து *(432)*, நற்றிணை *(401)*, பத்துப்பாட்டு *(811, 1033, 1144)* நான்மணிக்கடிகை *(121)*, *(556)* ஆகிய பழந்தமிழ் நூல்களிலிருந்து மேற்கோள் தருகின்றார்.

சீவகசிந்தாமணியிலிருந்து சில மேற்கோள்களைத் தருகின்றார் *(384, 514, 771)*. பெரிய புராணக் கருத்து ஒரு குறளின் உரையில் இடம் பெற்றுள்ளது *(442)*. இராமாயணக் கருத்து மற்றோர் குறள் உரையில் வருகின்றது *(773)*.

சில இடங்களில் பழங்கதைகள் இடம்பெறுகின்றன. மகனை முறை செய்தான், தன் கை குறைத்தான் *(547)*, பாண்டவர் *(935)*, நகுடன் *(899)*, திரிபுரம் எரித்தான் *(900)* ஆகியோருடைய வரலாறு ஆங்காங்கே சுட்டப்படுகின்றன.

திருவாய்மொழி *(349, 570)*, முத்தொள்ளாயிரம் *(576)*, திருக்கோவையார் *(277)* ஆகிய இலக்கியங்களிலிருந்தும் மேற்கோள்கள் தரப்பட்டுள்ளன.

## இலக்கணப் புலமை

எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐந்து இலக்கணங்களிலும் புலமை நிரம்பியவர் பரிமேலழகர். இலக்கணப் புலமை வெளிப்படும் வகையில், திருக்குறளுக்கு உரைகண்ட சிறப்பை,

**பொழிப்பு அகலத்தோடு நுட்பம் எச்சம்**
**விழுப்பொருள் தோன்ற விரித்துஇனிது உரைத்தனன்**

**(பெருந் – 1543)**

என்று பாராட்டுவர்.

அசைநிலை, ஆகுபெயர், வினைஎச்சத் திரிபு, தொகை மொழிகள், உருபு மயக்கம், வேற்றுமை, இடைச்சொல் ஆகியவற்றை நினைவூட்டி எழுதும் இடங்கள் பலவாகும்.

'யா என்பது அஃறிணைப் பன்மை வினாப் பெயர்' என்றும் *(127)*,

பயனில் சொல் *(196)* என்னும் குறளில் உள்ள எனல் என்பதில் உள்ள 'அல் விகுதி வியங்கோள் முன் எதிர்மறையினும், பின் உடன்பாட்டினும் வந்தது' என்றும் பரிமேலழகர் எழுதித் தம் இலக்கணப் புலமை மாண்பை வெளிப்படுத்துகின்றார்.

இலக்கணை என்னும் இலக்கணம் வரும் இடங்களை நன்கு ஆராய்ந்து இலக்கணை வழக்கு *(272)*. இலக்கணைக் குறிப்பு *(1115)*. இலக்கணைச் சொல் *(1186)* என்று தெளிவுபடுத்துகின்றார்.

மேலும் குறிப்பு மொழி, *(1029)* குறிப்பு உருவகம் *(1030)* என்று இவர் சுட்டும் இடங்கள் மிக நுண்ணியவையாகும்.

அகப்பொருள் இலக்கணத்தைக் காமத்துப்பாலில் நன்கு பொருத்திக்காட்டி நயமாகப் பொருள் எழுதுகின்றார். அங்கே உள்ள ஒவ்வொரு இயலிலும் அதிகாரத்திலும், குறட்பாவிலும் அகப்பொருள் இலக்கணம் நன்கு பொருந்தி, குறட்பாக்களைத் தெளிவுபடுத்துகின்றது.

புறப்பொருள் இலக்கணம் வெளிப்படும் இடங்களை, படைச்செருக்கு, படைமாட்சி ஆகிய இரண்டு அதிகாரங்களிலும் காணலாம். நெடுமொழி வஞ்சி *(771)*, தழிஞ்சி *(773)*, நூழிலாட்டு *(774)* என்று இவர், புறப்பொருள் துறைகளைக் குறிப்பிட்டு உரை எழுதுகின்றார்.

அணி இலக்கணத்தை இவர், நினைவூட்டும் இடங்கள் பல உண்டு.

உருவகம், ஏகதேச உருவகம், பிறிது மொழிதல் (நுவலா நுவற்சி, ஒட்டு) எடுத்துக்காட்டு உவமை. சொற்பொருள் பின்வருநிலை, சொற்பின் வருநிலை ஆகியவற்றை மறவாமல் தம் உரைகளில் காட்டிச் செல்லுகின்றார்.

தொல்காப்பியச் சூத்திரங்களை 3, 402, 899, 960, 1043 ஆகிய குறள் உரைகளில் எடுத்தாளுகின்றார். 86, 183, 457 ஆகிய குறள் உரைகளில் இடவழுவமைதி என்று தொல்காப்பிய விதி கருதியே கூறுகின்றார்.

நன்னூலார் தம் இலக்கணத்தில் அமைத்துத் தந்த 'ஒரு பொருட்பன்மொழி' என்ற அழகிய இலக்கணத் தொடரை 863- ஆம் குறள் உரையில் எடுத்தாளுகின்றார்.

**வடமொழிப் புலமை**

பரிமேலழகரை உரைச் சிறப்புப்பாயிரம்,

**வடநூல் துறையும் தென்திசைத் தமிழும்**
**விதிமுறை பயின்ற நெறியறி புலவன்**

**(பெருந் – 1543)**

என்று பாராட்டுகின்றது.

வடமொழியில் உள்ள இலக்கணம் இலக்கியம், சமய நூல் ஆகியவற்றின் கருத்தை அறிந்து, தம் உரையில் பரிமேலழகர் கூறுகின்றார்.

இசை எச்சத்தை வடநூலார் 'காகு' என்பர் என்றும் (1318) பிறன் மனைவிழைந்து ஒழுகுதலைப் பரகீயம் என்பர் என்றும் (141) நினைவுபடுத்துகின்றார்.

குடங்கம் என்னும் வடசொல் குடங்கர் என்று திரிந்தது என்பது இவர் கருத்து (890).

வட நூலார் கூறும் அற உபதை, பொருள் உபதை, இன்ப உபதை, அச்ச உபதை ஆகியவற்றை விளக்கி, பொருட்பாலில் சில இடங்களில் நினைவுபடுத்தி உரை எழுதுகின்றார் (501, 693).

வடமொழியில் உள்ள அறம் பொருள் இன்பம் பற்றிக் கூறும் நூல்களை ஆங்காங்கே பரிமேலழகர் குறிப்பிடுகின்றார்.

**அறம்**

"இனி, மனு முதலிய அற நூல்களால் பொதுவாகக் கூறப்பட்ட இல்லறங்கள் எல்லாம் இவர் தொகுத்துக் கூறிய இவற்றுள்ளே அடங்கும்" (240).

## பொருள்

"கொடியவர் என்றது தீக்கொளுவுவார்; நஞ்சிடுவார், கருவிற் கொல்வார், கள்வர், ஆறலைப்பார், சூறைகொள்வார், பிறனில் விழைவார் என்றிவர் முதலாயினாரை. இவரை வட நூலார் ஆத தாயிகள் என்ப" *(550)*.

"வட நூலார் இவற்றுள் பொருத்துதலைச் சந்தி என்றும், பிரித்தலை விக்கிரகம் என்றும் கூறுப" *(663)*.

"வடநூலார் இவ்விரு வகையாருடன் ஓலை கொடுத்து நிற்பாரையும் கூட்டித் தூதரை தலை இடை கடை என்று வகுத்துக் கூறினாராதலின் அவர் மதமும் தோன்றத் தலை என்றார்" *(687)*.

"வடநூலாரும் இக் கருத்தான் விதனம் என உடன் கூறினார்" *(920)*.

## இன்பம்

**காமத்துப்பால் தொடக்கம்:** "வட நூலுள் போசராசனும் 'சுவை பல என்று கூறுவர் கூறுக; யாம் கூறுவது இன்பச் சுவை ஒன்றையுமே' என இதனையே மிகுத்துக் கூறினான்".

**காமத்துப்பால் முடிவு (1330):** "ஈண்டுப் பிரிவினை வடநூல் மதம்பற்றி, செலவு ஆற்றாமை விதுப்பு புலவி என நால்வகைத் தாக்கிக் கூறினார். அஃதேல் வடநூலார் இவற்றுடனே சாப்த்தினானாய நீக்கத்தினையும் கூட்டிப் பிரிவினை ஐவகைத்து என்றாரால் எனின், அஃது அறம் பொருள் இன்பம் என்னும் பயன்களுள் ஒன்றுபற்றிய பிரிவு அன்மையானும், முனிவ ராணையான் ஒரு காலத்து ஓர் குற்றத்து உளதாவதல்லது உலகியல்பாய் வாராமையானும் ஈண்டு ஒழிக்கப்பட்டது என்க".

## பல்கலைப் புலமை

பரிமேலழகர் இலக்கிய இலக்கண நூல்களையேயன்றி வேறு சில நூல்களையும் அறிந்துள்ளார். இவரது உரைகளில் அறத்துப்பாலில் அற நூல்களையும் சமய நூல்களையும் அறிந்த புலமை வெளிப்படும்; பொருட்பாலில் அரசியல் அறிவு புலப்படும்; காமத்துப்பாலில் இன்பத்துறை நூலறிவு தோன்றும்.

அறத்துப்பாலில் "எழுபிறப்பும் தீயவை" (62) என்ற குறளின் விளக்கவுரையில், எழுவகைப் பிறப்பையும் கூறும் வெண்பாவை மேற்கோள் தருகின்றார்.

ஊர்வ பதினொன்றாம் ஒன்பது மானுடம்
நீர்பறவை நாற்காலோர் பப்பத்துச் — சீரிய

பந்தமாந் தேவர் பதினால் அயன்படைத்த
அந்தமில்சீர்த் தாவரநா லைந்து.

இந்த வெண்பா கூறும் கணக்குப்பற்றி ஆராய்ந்து முடிவு செய்யாமல், இப்படியும் ஒரு வகை சிந்தனை தமிழறிஞர் உள்ளத்தில் எழுந்துள்ளது என்று போற்ற வேண்டும்.

### இசைப்புலமை

பொருட்பாலில் "பண் என்னாம் பாடற்கு' (573) என்ற குறளின் விளக்கவுரையில் இசைப்புலமை தோன்ற உரை எழுதுகின்றார்:

"பண்களாவன: பாலையாழ் முதலிய நூற்று மூன்று. பாடல் தொழில்களாவன: யாழின் கண் வார்தல் முதலிய எட்டும், பண்ணல் முதலிய எட்டும், மிடற்றின்கண் எடுத்தல் படுத்தல் நலிதல் கம்பிதம் குடிலம் என்னும் ஐந்தும் பெருவண்ணம் இடை வண்ணம் வனப்பு வண்ணம் முதலிய வண்ணங்கள் எழுபத்தாறுமாம்".

### மருத்துவ நூலறிவு

மருந்து என்ற அதிகாரத்திற்கு, பரிமேலழகர் தம் மருத்துவ நூலறிவு தோன்ற உரை எழுதுகின்றார். 'மிகினும் குறையினும்' (941), 'உற்றவன் தீர்ப்பான்' (950) ஆகிய இரு குறட்பாக்களின் உரை விளக்கம் படித்து மகிழத்தக்கன.

'அற்றது அறிந்து' (944) என்ற குறளுரையில் மருத்துவக் கலையின் நுட்பத்தை வெளிப்படுத்துகின்றார். "தேனும் நெய்யும் தம்முள் அளவொத்து நஞ்சாதல் போல்வன" என்ற விளக்கம் நமக்கு வியப்பைத் தருகின்றது. இவர் காலத்தில், நோயைத் தீர்த்தற்கு உதிரங்களைதல், அறுத்தல், சுடுதல் முதலிய முறைகள் இருந்தன (948).

### அரசியல் நூல் அறிவு

பொருட்பாலில் உள்ள ஒவ்வோர் அதிகாரத்திலும் பரிமேலழகரின் அரசியல் நூல் அறிவு வெளிப்படுகின்றது.

'இயற்றலும் ஈட்டலும்' (385) என்ற குறளின் உரையில், பொருள்கள், அவை வரும் வழிகள், அவற்றை அறம் பொருள் இன்பம் என்ற மூவகை வழியில் செலவிடல் ஆகியவற்றை நன்கு விளக்குகின்றார்.

'உற்ற நோய் நீக்கி' (442) என்ற குறளின் விளக்கத்தில் மக்களுக்கு வரும் துன்பங்களின் வகைகள் அவற்றைப் போக்கும்

வழிகள் ஆகியவற்றைப் பரிமேலழகர் விளக்குவதனைக் காணலாம்.

'பல் குழுவும்' (735) என்ற குறளின் விளக்கவுரையில் உட்பகை என்பதற்கு, "ஆறலைப்பார் கள்வர் குறளை கூறுவார் முதலிய மக்களும், பன்றி புலி கரடி முதலிய விலங்குகளும்" என்று விளக்கம் தருகின்றார்.

'உறுபொருளும்' (756) என்ற குறளுரையில், 'உறு பொருள் வைத்தார் இறந்துபோக நெடுங்காலம் நிலத்தின் கண்ணே கிடந்து பின் கண்டெடுத்ததூஉம், தாயத்தார் பெறாததூஉம் ஆம்' என்று விளக்குகின்றார்.

'தார் தாங்கி' (767) என்ற குறளின் விளக்கத்தில் படை வகுப்பாகிய வியூகத்திற்கு நல்ல விளக்கம் தருகின்றார்.

### சமய நூலறிவு

அறத்துப்பால் உரை, பரிமேலழகர், பரந்த சமய நூலறிவு பெற்றவர் என்பதை விளக்குகின்றது. சாங்கிய நூல் (27), ஆருகதர் சமயக்கொள்கை (286) ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றார். சமயம் பற்றிய பொதுவான கருத்துக்களை 21, 351, 355, 358, 338, 360 ஆகிய குறட்பாக்களின் உரைகளில் படித்து இன்புறலாம்.

### வான் புகழ்

திருக்குறளுக்குப் பத்தாவது உரையாகத் தோன்றிய பரிமேலழகர் உரை மற்ற உரைகளைவிடச் செல்வாக்குப் பெற்றுப் பரவியது; ஏனைய உரைகளுக்கு இல்லாத பெருமை ஏற்பட்டது.

**பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள**
**நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ — நூலில்**
**பரித்தவுரை எல்லாம் பரிமே லழகன்**
**தெரித்தவுரை யாமோ தெளி**

என்று கற்றவர் போற்றும் சிறப்பை அவ்வுரை பெற்றது.

திருவள்ளுவரைப் போலவே பரிமேலழர் மதிக்கப்பட்டார்; திருவள்ளுவரின் உள்ளக் கருத்தைத் தெள்ளிதின் உணர்ந்த பெரும் புலவராக அவர் கருதப்பட்டார்.

**வள்ளுவன் மீளவும் வந்துஉதித்து உலகோர்க்கு**
**உள்ளிய பொருளை உரைத்தனன் என்ன ...**
**விழுப்பொருள் தோன்ற விரித்துஇனிது உரைத்தான் ...**
**பரிமே லழகன் எனப்பெயர் படைத்துத்**
**தரைமேல் உதித்த தலைமை யோனே.**

திருத்தகுசீர்த் தெய்வத் திருவள் ளுவர்தம்
கருத்தமைதி தானே கருதி – விரித்துரைத்தான்
பன்னு தமிழ்சேர் பரிமே லழகன்எனும்
மன்னு முயர்நாமன் வந்து

தெய்வப் புலமைத் திருவள் ளுவர்குறளில்
உய்விக்கும் நூலெல்லாம் உள்ளதெனச் – செய்வித்தான்
தத்துவம்எல் லாம்உடம்பில் தந்துணர்வார் போல்உலகம்
ஒத்தபரி மேலழகன் ஓர்ந்து.

என்று பல பாடல்களால் பரிமேலழகரைப் புலவர்கள் சிறப்பித்தனர்.

' பரிமேலழகர் உரை தனிப்பெரும் நூலாக, திருக்குறளோடு ஒத்த சிறப்புடையதாக எண்ணப்பட்டது.

வள்ளுவர்சீர் அன்பர்மொழி வாசகம்தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை – ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணம் தொகுசித்தி ஓராறும்
தண்டமிழின் மேலாம் தரம்

என்று உமாபதி சிவனார் போற்றுகின்றார்.

காலம்தோறும் கற்றவர் போற்றும் சிறப்பைப் பெற்று வந்த பரிமேலழகர் உரை, இக் காலத்திலும் அறிஞர்களின் பாராட்டுதலைப் பெற்றுள்ளது.

"திருக்குறளின் பெருமையை ஆராய்ந்து அதன் கருத்துக்களை நுட்பமாக உணர்ந்து, அதற்கு ஓர் அரிய உரை இயற்றி அதன் புகழை வளர்த்தவர் பரிமேலழகர்".[1]

"திருவள்ளுவரது திருக்குறள், பரிமேலழகியாரது உரையாகிய புணையைக் கொண்டுதான், இடைக்காலமாகிய கருங்கடலைக் கடந்து நம் காலம் எனும் கரைக்குச் செவ்வனே வந்து சேர்கின்றது".[2]

"திருவள்ளுவர் ஏடும் அதற்குரிய பரிமேலழகர் உரையும் இரண்டுமே தத்தம் கட்டுக்கோப்புடையவையாய் அமைந் துள்ளன. இதுநாள்வரை திருவள்ளுவ்ரின் கட்டுக்கோப்புக்கு ஒப்பான கட்டுக்கோப்புடன் கட்டி எழுதப்பட்ட ஒரே உரை, பரிமேலழகர் உரைதான் என்று கூற வேண்டும்".[3]

அபிதான கோசம் இவரது புலமை மாண்பைப் பின் வருமாறு போற்றியுரைக்கின்றது:

1. தமிழ்ச்சுடர் மணிகள் (1949) பக்கம் – 167 சு. வையாபுரிப்பிள்ளை.
2. வள்ளுவரும் மகளிரும் (1930) பக்கம் – 11. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார்.
3. கா. அப்பாதுரைப் பிள்ளை; 'முப்பால் ஒளி' – முதல் இதழ் – பக்கம். 44.

'இவர் உரையிலே பொருள் வன்மையும், செஞ்சொற் சிறப்பும், இலக்கணங்களும் சாதுரியமும், விசேடவுரை தெரிக்கும் ஆற்றலும், மேற்கோளெடுத்துச் சித்தாந்தம் செய்யும் உபாயமும், பிறர்க்கெல்லாம் பல வசனங்களான் அன்றி அமையாத விஷயங்களைச் சில சொற்கொண்டு தெற்றெனக் காட்டும் பேராண்மையும், வடமொழிப் பதங்களைச் செந்தமிழ் மொழியாக்கும் அற்புத சாமர்த்தியமும், சொன்முட்டுற்று வடமொழிப் பதங்களை எடுத்தாளும் நல்குரவுடையார் போலாது செந்தமிழ்ச் சொற் செல்வமுடைமையும், வேதாகம வியாகரண சாத்திர புராண இதிகாச ஸ்மிருதி காவிய அலங்காராதி வடநூற்பயிற்சியோடு முத்தமிழ்ப் பரப்பெல்லாம் முற்றுணர்ந்த திண் புலமையும் நன்கு பெறப்படுகின்றன'.

டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் திருக்குறளுக்கு உரை வகுத்த பரிமேலழகரின் பெருமையைத் தெரிந்துகொள்ள ஒரு வழி கூறுவார். "ஏதேனும் ஒரு குறளின் மூலத்தை மட்டும் தெரிந்துகொண்டு ஒரு மாதம் வரை ஆராய்ந்து அதற்கு உரை எழுதுங்கள். சொல் நயம், பொருள் நயம், என்பவற்றைத் தெளிந்து விரிவாக எழுதுங்கள்; அதன் பிறகு பரிமேலழகர் உரையைப் பாருங்கள். நீங்கள் எழுதாத எதேனும் ஒன்றையாவது அவர் நிச்சயம் சொல்லியிருப்பார். அப்போதுதான் அவர் உரையின் அருமை தெரியும்" என்பார்.

இத்தகைய புகழ் மொழிகள் பலவற்றைத் தாங்கி நிற்கின்ற இவரை,

**பருச்சொல் பருப்பொருள் பன்னுபு நீக்கி,**
**பொருட்சொல் நிரப்பும் புலவர்***

என்று நயந்து போற்றலாம்.

அறிஞர் பெருமக்களின் போற்றுதலைக் காலந்தோறும் பெற்றுவரும் பரிமேலழகரின் ஆற்றலும் அறிவும் அளவிடற்கு அரியவை. தனித் தமிழில் அமைந்த இலக்கிய நடை, திட்ப நுட்பம் வாய்ந்த அரிய விளக்கம், மூல நூலின் கருத்துச் செறிவுக்கு ஏற்ற முழுமைவாய்ந்த கட்டுக்கோப்பு ஆகியவை பரிமேலழகர் உரையின் சிறப்பியல்புகள் ஆகும். தம் காலத்தில் விளங்கிய தமிழ் இலக்கியம் அனைத்தையும் நுணுகிக் கற்று அவற்றின் கருத்துக்களை வடித்துக் கலைப்பண்பு கெழுமத் திருக்குறளை உரைவடிவில் அளித்துள்ள பரிமேலழகரது அருஞ்செயலின் பெருமை அளவிடற்கு அரியது. வடமொழி, தமிழ் ஆகிய இரு மொழிகளிலும் மிக்க பயிற்சியுடைய இவர் சிறந்த செந்தமிழ்

* பெருங்கதை 2–4, (51, 52)

நூலாகிய திருக்குறளுக்கும் அதன் தூய்மைக்கும் உயர்வுக்கும் ஏற்றவாறு தெள்ளிய தூய தமிழில் நல்லுரை கண்டுள்ளார்.

**உரையின் இயல்புகள்**

பரிமேலழகர் நூலின் தொடக்கத்தில் உரைப்பாயிரம் எழுதி, நூலின் பொருட்பாகுபாடுகளை விளக்குகின்றார்; பால்தோறும் விரிவுரை தருகின்றார்; இயல்களை ஆராய்கின்றார்; அதிகாரம் தோறும் தோற்றுவாய் கூறுகின்றார்; முன் அதிகாரத்திற்கு இயைபு உரைக்கின்றார். பத்துக் குறள்களும் கருத்துவகையால் பிரிந்து நிற்பதைக்காட்டி இன்ன பொருளை உணர்த்தின என்கிறார்.

குறட்பாக்களுக்குப் பரிமேலழகர் பொழிப்புரை எழுதி, பின்னர் அருந்தொடரை விளக்குகின்றார். ஏட்டுப் பிரதிகளில் பொழிப்புரையே உள்ளது என்றும், பதிப்பித்தவர்களே பதவுரையாக்கி வெளியிட்டனர் என்றும் கூறுகின்றனர்.

பொழிப்புரையில், அதிகாரத்திற்கு ஏற்பத் தேவையான சொற்களை வருவித்தும், வேற்றுமை உருபு முதலிய இடைச் சொற்களை விரித்தும் உரைக்கின்றார். பொழிப்புரையின் கீழ் எழுதும் விளக்கவுரையில் பல அரிய ஆராய்ச்சிக் கருத்துக்களைக் கூறுகின்றார்; அருந்தொடரைத் தக்க மேற்கோளுடன் விளக்குகின்றார்; உவமை காட்டியும், இலக்கியக் கதை வரலாறு முதலியன தந்தும் அழகு செய்கின்றார். தேவையான இலக்கணக் குறிப்புக்கள் தந்து தெளிவுபடுத்துகின்றார்; தமக்கு முன் இருந்த உரையாசிரியர்கள் கருத்தைக் குறிப்பிடுகின்றார்; மாறுபட்ட கருத்தை மறுக்கின்றார்; தவறான பாடத்தைக் கடிகின்றார். பொருத்தமானவற்றைப் போற்றுகின்றார். வடமொழி, தமிழ் ஆகிய இருமொழி இலக்கியங்களிலிருந்தும் கருத்துகளைக் கூறுகின்றார்; வட சொற்களைத் தமிழ்மொழிக்கு ஏற்ப மொழி பெயர்க்கின்றார்; தமிழ் மரபையும் பண்பாட்டையும் நினைவூட்டுகின்றார்.

இத்தகைய சிறப்பியல்புகள் பல வாய்ந்த பரிமேலழகர் உரை ‘விரித்தியுரை’ என்றும் வழங்கியது. சிறந்த உரை வழங்கிய பரிமேலழகரை,

**வள்ளுவன் மீளவும் வந்துஉதித்து உலகோர்க்கு**
**உள்ளிய பொருளை உரைத்தனன் என்ன**
**எழுத்து முதல இலக்கண வகையும்**
**வழுத்து வேதாகம வகையதன் பயனும்**
**தங்கிய குறட்பாத் தமிழ்மனு நூலிற்கு**
**இதுவே உரைஎன்று யாவரும் வியப்பப்**

பொழிப்பு அகலத்தொடு நுட்ப எச்சம்
விழுப்பொருள் தோன்ற விரித்தினிது உரைத்தனன்

என்று உரைப்பாயிரம் புகழ்கின்றது.

## இலக்கண உரை

பரிமேலழகர் உரையை இலக்கணவுரை என்று கூறுவதுண்டு. 1885-ஆம் ஆண்டில், பரிமேலழகர் உரைக்கு விளக்கக் குறிப்புக்கள் எழுதிப் பதிப்பித்த முருகேச முதலியார், 'திருக்குறள் மூலமும் பரிமேலழகர் செய்த இலக்கணவுரையும்' என்று தலைப்பு இட்டு வெளியிட்டார்.

பரிமேலழகரின் இலக்கணப் புலமை, அவர் உரை முழுதும் வெளிப்படுகின்றது. பலவகை இலக்கணங்களை ஆங்காங்கே எடுத்துக்காட்டும் இவர், பிற உரையாசிரியர்களை மறுக்கும் இடங்களில் கூட அவர்கள் இலக்கணத்தை மறந்ததையும், அவர்கள் உரையில் இலக்கணப் பிழைகள் இருப்பதையும் எடுத்துக்காட்டுகின்றார்.

**கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்**
**வேட்ப மொழிவதாம் சொல் (643)**

என்ற குறளின் விளக்கவுரையில், "தகையவாய் என்பதற்கு எல்லாரும் தகுதியுடையவாய் என்று உரைத்தார்; அவர் அப் பன்மை, மொழிவது என்னும் ஒருமையோடு இயையாமை நோக்கிற்றிலர்" என்று பிறர் உரைகளை மறுக்கின்றார்.

**சலத்தால் பொருள்செய்தே மார்த்தல் பசுமண்**
**கலத்துள்நீர் பெய்திரீஇ யற்று (660)**

என்ற குறளின் கீழ், "பிறர் எல்லாம் ஏமாத்தல் என்று பாடம் ஓதி, அதற்கு மகிழ்தல் என்றும், இரீஇயற்று என்பதற்கு வைத்தாற் போலும் என்று உரைத்தார்; அவர் அவை தன்வினையும் பிறிதின் வினையுமாய் உவமை இலக்கணத்தோடு மாறுகோடல் நோக்கிற்றிலர்" என்று எழுதுகின்றார்.

பரிமேலழகர் உரை, இலக்கணக் கொள்கைகளை நன்கு நெஞ்சில் நிறுத்தி எழுதப்பட்டதாகும். அவ்வுரையில் இலக்கணப் பிழையையோ, இலக்கணக் கொள்கைகளோடு மாறுபட்ட கருத்தையோ காண இயலாது.

ஆதலின் இவர் உரையை இலக்கண உரை என்று கூறுவது மிகவும் பொருத்தமாகும்.

## குறள் பெற்ற புதுவிளக்கம்

திருக்குறளைப் புதிய பார்வையுடன் கண்டவர் பரிமேலழகர். அதனால் பல குறட்பாக்கள் புதிய விளக்கம்

பெற்றுள்ளன. அப்பாடல்களைப் பிறர் கூறுவதாக அமைத்துக் காட்டி அழகு செய்கின்றார்.

**கான முயல்எய்த அம்பினில் யானை**
**பிழைத்தவேல் ஏந்தல் இனிது** **(772)**

என்ற குறள், 'மாற்றரசன் படையோடு பொருதானோர் வீரன், அது புறங் கொடுத்ததாக நாணி, பின் அவன் தன் மேற் செல்லலுற்றானது கூற்று' என்கிறார் பரிமேலழகர். இக் கூற்றால் மேலே கண்ட குறள், புதிய விளக்கம் பெறுகின்றது.

**இன்றும் வருவது கொல்லோ நெருநலும்**
**கொன்றது போலும் நிரப்பு** **(1048)**

என்ற குறளை, 'நெருநல் மிக வருந்தித் தன் வயிறு நிறைத்தான் ஒருவன் கூற்று' என்று புதிய நோக்குடன் காண்கின்றார்.

**மதியும் மடந்தை முகனும் அறியா**
**பதியில் கலங்கிய மீன்** **(1116)**

என்ற குறளினை (தலைவன்) 'இரவுக்குறிக்கண் மதி கண்டு சொல்லியது' என்று கூறுகின்றார். திருக்குறளின் பொருளையும் பரிமேலழகரின் குறிப்பையும் இணைத்து நோக்கும்போதுதான், குறளின் பொருட்சிறப்பு நமக்கு நன்கு வெளிப்படுகின்றது.

**அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்**
**அடிக்கு நெஞ்சிப் பழம்** **(1120)**

என்பது பலர் அறிந்த குறள். இது, 'உடன்போக்கு உரைத்த தோழிக்கு அதனது அருமை கூறி மறுத்தது' என்று உரைக்கின்றார் பரிமேலழகர். எவ்வளவு பொருத்தமான விளக்கம் இது!

**தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி**
**அஃதுஆண்டு அவள்செய் தது** **(1279)**

என்ற குறளுக்குத் தம் புலமைத் திறம் அனைத்தும் வெளிப்படும் வகையில் பொருள் உரைக்கின்றார்.

"அவர் பிரிய யான் ஈண்டு இருப்பின் இவை நில்லா எனத் தன் தொடியை நோக்கி, அதற்கு ஏதுவாக இவை மெலியும் எனத் தன் மென்தோள்களையும் நோக்கி, பின் இவ்விரண்டும் நிகழாமல் நீர் நடந்து காத்தல் வேண்டும் எனத் தன் அடியையும் நோக்கி, அங்ஙனம் அவள் செய்த குறிப்பு உடன்போக்காய் இருந்தது".

## நோக்கு

திருக்குறளில் உள்ள சில பாக்களுக்குப் பரிமேலழகர் 'மாத்திரை முதலா அடிநிலை காறும் நோக்கி' நுண்பொருள் எழுதுகின்றார். குறட்பாவில் உள்ள ஒவ்வொரு சொல்லுக்கும்

இவர் பொருளாழம் வாய்ந்த உரை கூறிச் சிறப்பிக்கின்றார். அவற்றுள் சிலவற்றை இங்கே காண்போம்:

**செவிக்குஉணவு இல்லாத போழ்து சிறிது**
**வயிற்றுக்கும் ஈயப் படும் (412)**

"சுவை மிகுதியும் பிறப்பயத்தலும் உடைய கேள்வி உள்ள பொழுது வெறுக்கப்படுதலான் 'இல்லாதபோழ்து என்றும்', பெரிதாயவழித் தேடல் துன்பமே அன்றி நோயும் காமமும் பெருகுதலான் 'சிறிது' என்றும், அதுதானும் பின் இருந்து கேட்டற் பொருட்டாகலான் ஈயப்படும் என்றும் கூறினார். ஈதல் - வயிற்றது இழிவு தோன்ற நின்றது."

**ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை**
**பெருஞ்செல்வம் உற்றக் கடை (837)**

"எல்லா நன்மையும் செய்து கோடற்கருவி என்பது தோன்ற 'பெருஞ் செல்வம்' என்றும், அதனைப் படைக்கும் ஆற்றல் இல்லாமை தோன்ற 'உற்றக் கடை' என்றும், எல்லாம் பெறுதல் தோன்ற 'ஆர' என்றும் உணவும் பெறாமை தோன்ற 'பசிப்பர்' என்றும் கூறினார்."

**ஆவிற்கு நீர்என்று இரப்பினும் நாவிற்கு**
**இரவின் இளிவந்தது இல் (1069)**

"ஆ காத்து ஓம்பல் பேரறம் ஆகலின் ஆவிற்கு என்றும்; பொருள் கொடுத்துக் கொள்ள வேண்டாத எண்மைத்தாகலின் நீர் என்றும்; இரக்கின்றவனுக்கு இளிவு அச்சொல் அளவே ஆகலின் 'நாவிற்கு' என்றும்; அதுதான் எல்லா இளிவினும் மேற்படுதலின் 'இளி வந்தது இல்' என்றும் கூறினார்."

இத்தகைய சிறப்பு வாய்ந்த உரைகள் *(306, 334, 321, 727, 968, 1160, 1289)* இன்னும் பல இடங்களில் உள்ளன. அவற்றைக் கற்போர் பரிமேலழகரின் உரைத் திறனை வியந்து போற்றுவர்.

### உவமை விளக்கம்

திருவள்ளுவர் கூறியுள்ள பல இனிய உவமைகள் பரிமேலழகர் உரையால், நன்கு பொருள் விளக்கம் அடைகின்றன.

'ஒருமையுள் ஆமைபோல்' *(126)* என்பதில் உள்ள உவமையினை இவர், "ஆமை ஐந்து உறுப்பினையும் இடர் புகுதாமல் அடக்குமாறு போல, இவனும் ஐம்பொறிகளையும் பாவம் புகுத்தாமல் அடக்க வேண்டும் என்பார் ஆமை போல்' என்றார்" என்று விளக்குகின்றார்.

'கொக்கு ஒக்க' என்ற குறளில் *(940)* உள்ள உவமையின் பொருத்தத்தைப் பின்வருமாறு கூறுகின்றார்.

"மீன் கோடற்கு இருக்கும்வழி, அது வந்து எய்தும் துணையும் முன் அறிந்து தப்பாமல் பொருட்டு உயிர் இல்லது போன்று இருக்கும் ஆகலானும்; எய்திய வழிப் பின் தப்புவதற்கு முன்பே விரைந்து குத்தும் ஆகலானும்; இருப்பிற்கும் செயலிற்கும் கொக்கு உவமையாயிற்று."

**நிலத் தியல்பால் நீர்திரிந் தற்றாகும் (452)**

என்ற உவமையை, "விசும்பின்கண் தன் தன்மைத்தாய நீர் நிலத்தோடு சேர்ந்தவழி நிறம், சுவை முதலிய பண்புகள் திரிந்தாற்போல, தனிநிலைக்கண் தன் தன்மைத்தாய அறிவு பிற இனத்தோடு சேர்ந்தவழிக் காட்சி முதலிய தொழில்கள் திரியும்" என்று பொருத்தமாக விரித்துரைக்கின்றார்.

**தலையின் இழிந்த மயிரனையர் (964)**

என்ற உவமையை மிகச் சுருக்கமாக விளக்குகின்றார்; "நிலையைவிடாது நின்றவழிப் பேணப்படுதலும், விட்டுத் தாழ்ந்த வழி இழிக்கப்படுதலும் உவமையாற் பெற்றாம்". இவ்வாறு சுருக்கமாக விளக்கும் பரிமேலழகர் இவ்வுவமையை மிக விரிவாகக் கூறும் ஆற்றல் உடையவர். எனினும் பல சொல்லி விளக்குவதை விரும்பாத சான்றோர் இவர் ஆதலின் சில சொல்லியே விளக்குகின்றார்.

**அறைபறை அன்னர் கயவர் (1076)**

என்பது திருவள்ளுவர் கூறிய சிறந்த உவமை. "பறை ஒருவன் கையால் தன்னை அறிவித்தது ஒன்றனை இடந்தோறும் கொண்டு சென்று யாவரையும் அறிவிக்குமாகலான், இது தொழில் உவமம்" என்பது பரிமேலழகரின் நல்ல விளக்கம்.

**அறிதோறு அறியாமை கண்டற்றால் (1110)**

என்னும் உவமையின் சிறப்பு, "அறிவிற்கு எல்லை இன்மையான் மேன்மேல் அறிய அறிய முன்னையறிவு அறியாமையாய் முடியுமாறுபோல" என்ற விளக்கத்தால் வெளிப்படுகின்றது.

**உணலினும் உண்டது அறல்இனிது காமம்**
**புணர்தலின் ஊடல் இனிது (1326)**

இக்குறளில் உள்ள எடுத்துக்காட்டு உவமையின் பொருத்தம் பரிமேலழகரால் வெளிப்படுகின்றது.

"பசித்து உண்ணும் வழி, மிக உண்ணலுமாய் இன்சுவைத்துமாம்; அதுபோல அகன்று கூடும் வழி ஆராததுமாய்ப் பேரின்பத்ததுமாம்".

**காமக் கணிச்சி உடைக்கும் நிறைஎன்னும்**
**நாணுத்தாழ் வீழ்த்த கதவு (125)**

உ.26.

இக்குறளில் உள்ள உருவகம் பின்வருமாறு பரிமேலழகரால் விளக்கப்படுகின்றது:

"நாணுள்ள துணையும் நிறை அழியாது ஆதலின், அதனைத் தாழ் ஆக்கியும்; அகத்துக்கிடந்தன பிறர் கொள்ளாமல் காத்தலின் நிறையைக் கதவாக்கியும்; வலியவாய்த் தாமாக நீங்காத அவ்விரண்டினையும் ஒருங்கு நீக்கலின் தன் காம வேட்கையைக் கணிச்சியாக்கியும் கூறினார்".

**நயவுரை**

பரிமேலழகர் பல குறள்களுக்கு எழுதியுள்ள உரைநயம் மகிழ்ந்து கற்றுப் போற்றுதற்கு உரியதாகும்.

'மக்கட்பதடி' என்ற தொடருக்கு, "அறிவு என்னும் உள்ளீடு இன்மையின் 'மக்கட்பதடி' என்றார்" என்று நயம்படப் பொருள் உரைக்கின்றார் *(196)*.

'தீயவை, தீயினும் அஞ்சப்படும்' *(202)* என்பதற்குப் "பிறிதொரு காலத்தும் பிறிதொரு தேயத்தும், பிறிதோர் உடம்பினும் சென்று சுடுதல், தீக்கு இன்மையின் தீயினும் அஞ்சப்படுவதாயிற்று" என்று எழுதுகின்றார்.

**மருந்தாகித் தப்பா மரத்தற்றால்** **(217)**

என்னும் குறள் உரையில், "தப்புதலாவது கோடற்கு அரிய இடங்களில் நின்றாதல், காலத்தான் வேறுபட்டாதல் பயன்படாமை".

'ஒப்புரவினால்' என்னும் குறளில் வரும்; 'விற்றுக்கோள் தக்கது உடைத்து' *(220)* என்ற பகுதி பரிமேலழகரால் நயம் பெறுகின்றது. "தன்னை விற்றுக்கொள்ளப்படுவதொரு பொருள் இல்லை அன்றே, இஃதாயின் அதுவும் செய்யப்படும் என்றது, புகழ் பயத்தல் நோக்கி".

**உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்** **(394)**

என்ற குறளில் 'உள்ளப் பிரிதல்' என்பதற்கு "இனி இவரை யாம் எங்ஙனம் கூடுதும் என நினையுமாறு நீங்குதல்" என்று இவர் எழுதுவது போற்றத்தக்கதாகும்.

**கணைகொடிது யாழ்கோடு செவ்விது** **(279)**

என்ற அடியை, "அம்பு வடிவால் செவ்விதாயினும் செயலால் கொடிது; யாழ்கோட்டால் வளைந்ததாயினும் செயலால் செவ்விது" என்று பொருள் எழுதி நன்கு விளக்குகின்றார்.

'நெருநல் உளன் ஒருவன்' (336) என்பதில் உள்ள 'உளன்' என்பதற்கு 'உளன் ஆயினான் (பிறந்தான்)' என்று பொருள் எழுதி நிலையாமையை நன்கு வலியுறுத்துகின்றார்.

'எப்பொருள் எத்தன்மைத்து' (355) என்னும் குறள் உரையில், "பொருள்தோறும் உலகத்தார் கற்பித்துக்கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து, நின்ற உண்மையைக் காண்பது (அறிவு)" என்று தெளிவுபடுத்தியபின், இந்த விளக்கத்திற்கு ஏற்றதொரு பெயரை எடுத்துக்காட்டித் தம் கருத்தை நிலை நாட்டுகின்றார்.

"கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை' என்றவழி, அரசன் என்பதோர் சாதியும், சேரமான் என்பதோர் குடியும், வேழ நோக்கினையுடையான் என்பதோர் வடிவும், சேய் என்பதோர் சிறப்புப் பெயரும், மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்றதோர் சிறப்புப் பெயரும் ஒரு பொருளின்கண் கற்பனை".

**நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே**
**கல்லார்கண் பட்ட திரு (408)**

என்ற குறளுக்கு, "திரு கல்லாரைக் கெடுக்க, வறுமை நல்லாரைக் கெடாது நிற்றலின் 'வறுமையினும் திரு இன்னாது" என்றார் என்று நயவுரை எழுதியுள்ளார்.

**எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் (423)**

என்பதற்கு இவர் பின்வருமாறு சிறப்புரை எழுதுகின்றார்.

"குணங்கள் மூன்றும் மாறிமாறி வருதல் யாவர்க்கும் உண்மையின், உயர்ந்த பொருள் இழிந்தார் வாயினும், இழிந்த பொருள் உயர்ந்தோர் வாயினும் உறுதிப்பொருள் பகைவர் வாயினும், கெடுபொருள் நட்டார் வாயினும், ஒரோவழிக் கேட்கப்படுதலான், 'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் என்றார்".

**இன்மையின் இன்மையே இன்னாதது (1041)**

என்பதை, "ஒப்பது இல்லை எனவே, மிக்கது இன்மை சொல்ல வேண்டா ஆயிற்று" என்று தெளிவுபடுத்துகின்றார்.

**நன்றறிவாரின் கயவர் திருவுடையர் (1072)**

என்று கூறிய திருவள்ளுவரின் கருத்தைத் தெளிவாக விளக்குகின்றார்.

(புகழ், அறம், ஞானம் ஆகியவற்றை) "அறிவார் இவை செய்யா நின்றே மிகச் செயப் பெறுகின்றிலேம் என்றும், செய்கின்ற இவை தமக்கு இடையூறு வருங்கொல் ...ன்றும், இவற்றின் மறுதலையாய பழிபாவம் அறியாமை எ... னவற்றுள் யாது

விளையுமோ என்றும், இவ்வாற்றால் கவலை எய்துவர்; கயவர் அப்புகழ் முதலிய ஒழித்துப் பழி முதலிய செய்யாநின்றும் யாதும் கவலை உடையர் அல்லராகலான் திருவுடையர் எனக் குறிப்பால் இகழ்ந்தவாறு"

பரிமேலழகரின் நயவுரையை, 'கேட்டார்ப் பிணிக்கும்' (643), 'வாராக்கால் துஞ்சா' (1179) ஆகிய குறள் உரைகளிலும் காணலாம்.

## பொருள் விளக்கம்

பரிமேலழகர் சில சொற்களுக்கும் தொடர்களுக்கும் மிக விளக்கமாகப் பொருள் எழுதுகின்றார். அவற்றுள் சில கீழே தரப்படுகின்றன.

*19.* **தானம்:** அறநெறியான் வந்த பொருளைத் தக்கார்க்கு உவகையோடும் கொடுத்தல்.

**தவம்:** மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கல் முதலாயின.

**விரதம்:** இன்ன அறம் செய்வல் எனவும், இன்ன பாவம் ஒழிவல் எனவும் தம் ஆற்றலுக்கு ஏற்ப வரைந்து கொள்வன (துறவற இயல் - முன்னுரை).

*244.* **மன் உயிர்:** உயிர்கள் எல்லாம் நித்தம் ஆதலின் மன் உயிர் என்றார்.

**வரைவின் மகளிர்:** தம் நலம் விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது, அதற்கு ஆவார் ஆகாதார் என்னும் வரைவு இல்லாத மகளிர் (வரைவின் மகளிர் - அதிகாரம்).

**மானம்:** எஞ்ஞான்றும் தம் நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும் ஆம்.

**பண்பு உடைமை** (அதிகாரத்தின் விளக்கம்): எல்லார் இயல்புகளும் அறிந்து ஒத்து ஒழுகுதல்.

*221.* **குறி எதிர்ப்பை:** அளவு குறித்து வாங்கி அவ் வாங்கியவாறே எதிர்கொடுப்பது.

## சொல்லாராய்ச்சி

பரிமேலழகர் செய்யும் சொல்லாராய்ச்சி சுவையானது; சிந்தனைக்கு விருந்தாய் அமைவது. கீழே எடுத்துக்காட்டுகள் சில காண்போம்:

**ஊழ்:** **அஃதாவது** இருவினைப் பயன் செய்தவனையே சென்றடைதற்கு **ஏதுவாகிய நியதி**, **ஊழ்**, பால், முறை, உண்மை,

தெய்வம், நியதி, விதி என்பன ஒரு பொருள் கிளவி (ஊழ் – அதிகாரம்).

563. ஒருவந்தம், ஒருதலை, ஏகாந்தம் என்பன ஒரு பொருள் கிளவி.

561. தக்காங்கு, ஒத்தாங்கு என்பன ஒரு சொல்.

951. இல், குடி, குலம் என்பன ஒரு பொருள்.

1112. மையாத்தல்: ஈண்டு ஒவ்வாதவற்றை ஒக்கும் எனக் கோடல்; இறுமாத்தல், செம்மாத்தல் என்பன போல ஒரு சொல்.

பரிமேலழகர் சொற்களை, செஞ்சொல், இலக்கணைச் சொல், குறிப்புச்சொல் என்ற மூன்று வகையாகக் குறிப்பிடுகின்றார் (குறள்:711).

'கேட்டார்ப் பிணிக்கும் தகை அவாய்' (643) என்னும் குறள் உரையில், "(கேட்டாரைப் பிணிக்கும்) குணங்களாவன: வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல், விழுப்பயன் தருதல் என்று இவை முதலாயின. அவற்றை அவாவுதலாவது சொல்லுவான் குறித்தனவே அன்றி வேறு நுண்ணுணர் வுடையோர் கொள்பவற்றின் மேலும் நோக்குடைத்தாதல்" என்று எழுதுகின்றார்.

## சொல்லும் பொருளும்

பலசொற்களுக்குத் தெளிவாகப் பொருள் கூறி, பரிமேலழகர் தாம் ஓர் அகராதிக் கலைஞர் என்பதை வலியுறுத்துகின்றார். சில சொற்களுக்கு அவர் தரும் பொருள் கீழே தரப்படுகின்றன.

28. நிறைமொழி — அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தேவிடும் மொழி.

43. பிதிரர் படைப்புக்காலத்து அயனால் படைக்கப் பட்டதோர் கடவுட் சாதி; அவர்க்கு இடம் தென்திசை ஆதலின் தென்புலத்தார் என்றார்.

238. எச்சம் (இசை என்னும் எச்சம்): என்றார், செய்தவர் இறந்துபோகத் தான் இறவாது நிற்றலின்.

386. முறை வேண்டினார் — வலியரான் நலிவு எய்தினார். குறை வேண்டினார் — வறுமையுற்று இரந்தார்.

395. ஏக்கறுதல் — ஆசையால் தாழ்தல்.

698. ஒளி (மன்னர்) — உறங்கா நிற்கவும் தாம் உலகம் காக்கின்ற அவர் கடவுள் தன்மை.

971. ஒளி — தான் உளனாய காலத்து மிக்குத் தோன்றுதல் உடைமை.

765. ஆற்றல் — மனவலி

768. பாடு — கண்ட அளவிலே பகைவர் அஞ்சும் பெருமை.

1023. (மடி) தற்றுதல் — இறுக உடுத்தல்.

1063. வன்பாடு — முருட்டுத் தன்மை; அஃதாவது ஓராது செய்து நிற்றல்.

1095. சிறக்கணித்தல் — (சிறங்கணித்தல்) சுருங்குதல்.

1133. நாண் — இழிவாயின செய்தற்கண் விலக்குவது. ஆண்மை - ஒன்றற்கும் தளராது நிற்றல்.

**உரைக்கு உரை**

பரிமேலழகர் உரை திட்ப நுட்பம் வாய்ந்து, கருத்துச் செறிவு உள்ளதாய், பலமுறை கற்றுத் தெளிந்தவரிடம் முறையாகப் பாடம் கேட்டறிய வேண்டியதாய் இருக்கின்றது. ஆதலின் அவ்வுரையை எல்லோரும் கற்றுப் பயனடைய வேண்டும் என்று விரும்பியவர்கள் உரைக்கு உரை கண்டனர்; தெளிபொருளும் விளக்கவுரையும் எழுதினர்; குறிப்புரை வரைந்தனர்.

பதினேழாம் நூற்றாண்டில் ஆழ்வார்த் திருநகரியில் புலமைச் செல்வராய் விளங்கிய திருமேனி இரத்தின கவிராயர் பரிமேலழகர் உரைக்கு உரையாக ‘நுண் பொருள் மாலை’ என்ற பெயருடன் விளக்கம் ஒன்று எழுதினார். நுண்பொருள் மாலை செந்தமிழ் இதழில் வெளிவந்தது (செந்தமிழ்த் தொகுதி 6 முதல் 10 வரை) நுண்பொருள்மாலை, இரத்தினகவிராயரின் இலக்கணப் புலமைக்குச் சான்றாய் — ஆராய்ச்சித் திறனுக்கு எடுத்துக் காட்டாய் — விளங்குகின்றது. திருக்கோவையார் உரையை ஆங்காங்கே மேற்கோளாகப் பெற்றுள்ளது.

1869-ஆம் ஆண்டில், ஏட்டுச் சுவடிகளில் இருந்த பரிமேலழகர் உரைக்குப் பலவகையான விளக்கக் குறிப்புக்கள் எழுதி, திருவள்ளுவமாலைக்கு உரை எழுதிச் சேர்த்து விருத்தியுரை என்ற பெயருடன் சரவணப் பெருமாள் ஐயர் வெளியிட்டார். இவ்வுரை பரிமேலழகர் உரையின் அருமை பெருமைகளை எல்லாம் நன்கு விளக்குவதாய் அமைந்தது. இவ்வுரையைப் பின்பற்றிப் பலர், பரிமேலழகர் உரைக்கு விளக்கம் எழுதி வெளியிட்டனர்.

1885-ஆம் ஆண்டு பரிமேலழகர் உரையை இலக்கண உரை என்ற பெயருடன், விளக்கவுரை எழுதிச் சேர்த்து, முருகேச முதலியார் வெளியிட்டார்.

இராமாநுசக் கவிராயர் வை.மு. சடகோப ராமாநுசாச்சாரியார், கோ. வடிவேல் செட்டியார் (1919) ஆகியோர் குறிப்புரைகளுடன் பரிமேலழகர் உரையை வெளியிட்டுள்ளனர்.

சோழவந்தான் அரசன் சண்முகனார் செந்தமிழில் (செந்தமிழ் - தொகுதி 6; பக்கம் 207) திருக்குறள் ஆராய்ச்சி என்ற பெயருடன் பரிமேலழகர் உரையை விளக்கி எழுதியுள்ளார். "பரிமேலழகர் உரையைக் காண்டிகையாகக் கொண்டு விருத்தி எழுதப்படும்" என்றும், "பரிமேலழகர் உரையே சிறப்புடைத்தாகலின், அதனைக் காண்டிகையாகக் கொண்டு அவ்வுரையுள் பொருந்தாமை மறுத்து, ஏனையவற்றோடு விரிப்பன விரித்து இவ்வுரை எழுதப்படும்" என்றும் முகவுரையில் கூறி, திருவள்ளுவ மாலையைத் திருக்குறளின் சிறப்புப் பாயிரமாகக் கொண்டு, பால், இயல், அதிகாரம் ஆகியவற்றின் அமைப்பை ஆராய்ந்து செல்லுகின்றார்.

1946-ஆம் ஆண்டில், வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் சிறந்த ஆராய்ச்சி முன்னுரை ஒன்றை விரிவாக எழுதி, பலவகையான நோக்குடன் அடிக்குறிப்புகளை எல்லோருக்கும் பயன்படும் வகையில் வெளியிட்டார்.

உரைக்கு உரைகள் பலவற்றைக் கண்ட உரை, பரிமேலழகர் உரை ஒன்றேயாகும்.

### உரையின் செல்வாக்கு

பரிமேலழகர் உரையை ஆழ்ந்து பயின்று, தாம் இயற்றிய உரைகளிலும் நூல்களிலும் பரிமேலழகர் கருத்துக்களைச் சிவஞான முனிவரும் சிவப்பிரகாசரும் எடுத்தாண்டுள்ளனர். பரிமேலழகர் உரை செல்வாக்கு மிக்கது என்பதற்குச் சான்றாய் அவை அமைகின்றன.

1

சிவஞானமுனிவர், தாமியற்றிய சிவஞானபோத மாபாடியத்தில், 'அவன் அவள் அது எனும்' முதற் சூத்திரவுரையில், "காணப்பட்ட உலகாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூற வேண்டுதலின், தோற்றிய திதியே எனவும், ஒடுங்கியுள்ளதாம் எனவும் உலகின்மேல் வைத்துக் கூறினார்" என்று கூறுகின்றார். இங்கே பரிமேலழகர் 'அகர முதல' என்னும் முதற்குறள் உரை விளக்கத்தில் எழுதும் சில சொற்கள் எவ்வித மாறுதலும் இன்றி இடம் பெற்றுள்ளன. பரிமேலழகர், "காணப்பட்ட உலகாற் காணப்படாத கடவுட்கு உண்மை

கூறவேண்டுதலின், ஆதிபகவன் முதற்றே யுலகு என உலகின்மேல் வைத்துக் கூறினார்" என்று முதற்குறள் உரைவிளக்கத்தில் எழுதியுள்ளார்.

இரு வேறு உரைகளையும் ஒப்பிடும்போது, பல சொற்கள் எவ்வித மாறுதலும் இன்றி ஒத்திருப்பதை அறியலாம். பரிமேலழகர் உரை சிவஞான முனிவரைப் பெரிதும் கவர்ந்துள்ளது என்பதை உணரலாம்.

2

தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப் படும் (114)

என்ற குறளில் உள்ள எச்சம் என்ற சொல்லுக்கு நன்மக்கள் என்று பொருள் கொண்டுள்ளார் பரிமேலழகர்.

சிவப்பிரகாசர் பிரபுலிங்கலீலை என்னும் நூலில்,

தக்கவர் தகவிலர் என்பது
ஆங்கவர் பயந்த புதல்வனால் தெளிய
அறிமின் 'என்று அறைகுவர் பெரியோர்

(அக்கமா – உற் – 20)

என்ற இடத்தில் பரிமேலழகர் கருத்தை மேற்கொண்டுள்ளார்.

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின் (969)

என்ற குறளின் விளக்கவுரையில், "உயிரும் மானமும் உடன் நில்லாமைக்கண், பின்னும் போவதாய உயிரை நீத்து எஞ்ஞான்றும் நிற்பதாய மானத்தை எய்துவர் என்பதாம்" என்று கூறியுள்ளார்.

இக்கருத்தைச் சிவப்பிரகாசர்,

மானமும் உயிரும் ஒருங்குநில் லாத
வழியுயிர் தன்னையே விடுத்து
தானுறு பொருளாய் மானமே கொளுமுன்
தந்தைதன் செவிப்படில் என்னாம்

(பிரபு தேவர் வந்த – 77)

என்று பிரபுலிங்கலீலையில் எடுத்தாண்டுள்ளார்.

பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து (978)

என்ற குறளின் விளக்கவுரையில், "இதற்கு உயர்ந்தார் தாழ்வர், தாழ்ந்தார் உயர்வார் – இஃது ஒரு விரோதம் இருந்தவாறு என்

என உலகியலை வியந்து கூறிற்றாக்குவாரும் உளர்" என்று உரைத்துள்ளார்.

சிவப்பிரகாசர் இக்கருத்தை,

**தாழ்ந்தோர் உயர்வர் என்றும்மிக**
**உயர்ந்தோர் தாழ்வர் என்றும்அறம்**
**சூழ்ந்தோர் உரைக்கும் உரைகண்டாம்**
**மதில்சூழ் கிடந்ததொல் அகழி**
**தாழ்ந்தோர் அனந்தன் மணிமுடிமேல்**
**நின்றன்று உயர்ந்து தடவரையைச்**
**சூழ்ந்தோர்; வரையின் உதிப்பவன்தாள்**
**கீழ்நின் றதுபோய்ச் சூழ்எயிலே**

**(மாயை உற்பத்தி – 14)**

என்று பிரபுலிங்கலீலையில் உள்ள பாடலில் மேற் கொண்டுள்ளார்.

**இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்**
**குலன்உடையான் கண்ணே உள (223)**

என்ற குறளுக்குப் பரிமேலழகர் பின்வருமாறு உரை எழுதுகின்றார். "யான் வறியன் என்று இரப்பான் சொல்லும் இளிவரவைத் தான் பிறர்கண் சொல்லாமையும், அதனைத் தன்கண் சொன்னார்க்கு மாற்றாது ஈதலும் – இவை இரண்டும் உள ஆவன குடிப்பிறந்தான் கண்ணே".

இக்கருத்தைச் சிவப்பிரகாசர், சிவஞான பாலைய சுவாமிகள் பிள்ளைத்தமிழில்,

**ஒற்க இர வோர்கள் இல் எனப் புகல்வ தேநீ**
**உற்று ஒருவர் பாலும் உளைவுற்று உரைசெய்யாதே**
**நிற்க நனி ஈகைவினை பெற்றிடுகை யாலே**
**நித்தம் அது கோறல்நின் இயற்கை**

**(சிற்றில் – 9)**

என்ற பாடலில் கூறியுள்ளார்.

மேலே காட்டிய குறட்பா வுரையில் பரிமேலழகர், பிறர் உரையாக மூன்று கருத்துகளைக் கூறுகின்றார். அம்மூன்று கருத்துக்களையும் சிவப்பிரகாசர் தம் பாடல்களில் எடுத்தாண்டுள்ளார்.

'அவ் இளிவரவை ஒருவன் தனக்குச் சொல்வதற்கு முன்னே அவன் குறிப்பு அறிந்து கொடுத்தல்' என்பது முதல் கருத்து. இதனைச் சிவப்பிரகாசர், வெங்கை நகர் அண்ணாமலை ரெட்டியார் கொடைப் பண்பைக் கூறும் பாடலில்,

**இல்லைஎன்றல் கேட்பவும் இன்னாது என்று இரப்போர்**
**நிலை கண்டு ஆங்கு எப்பொருளும் நேர்வோன்**

என்று கூறுகின்றார்.

'அதனை (இளிவரவை)ப் பின்னும் பிறன் ஒருவன்பால் சென்று அவன் உரையா வகையால் கொடுத்தல்' என்பது இரண்டாவது கருத்து.

சிவப்பிரகாசர் அவ் வள்ளலைச் சிறப்பித்துப் பாடும் வேறொரு பாடலில்,

**வந்துதன் சீர்பாடுநரை, மண்மீதில் அந்நிலையே**
**இந்திரன்தான் ஆக்கும் இயல்பினான்**

என்று பாடி, இரண்டாவது கருத்தை மேற்கொண்டுள்ளார்.

யான் இதுபொழுது பொருளுடையேன் அல்லேன் எனக் கரப்பார் சொல்லும் இளிவரவைச் சொல்லாது கொடுத்தல் — என்பது மூன்றாவது கருத்து.

இக்கருத்தைச் சிவப்பிரகாசர், தம் ஞானக்குரவர்மீது பாடிய கலம்பகத்தில்,

**வலந்திரி கதிர்காண் உலகினர் எல்லாம்**
**வந்து கேட்பன இலை எனாத**
**நலம் தரும் ஒருநீ**

என்றும், பரபுலிங்கலீலையில்,

**இல்லை எனல் இல்லைஎனா**
**எங்கள் குரு வசவேசன்**

என்றும் எடுத்தாண்டுள்ளார்.

## 3

'நாண் என்னும் நல்லாள்' என்னும் குறளுரையில் பரிமேலழகர், "நாண் என்பதனை நல்லாள் எனப் பெண் பாலாக்கியது, வடமொழி முறைமை பற்றி" என்று கூறுகின்றார்.

இக்கருத்தை, மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை சீகாழிக் கோவையில் — வழிபாடு மறுத்தல் என்னும் துறையில் — 'விண்ணியல் மாமதி' என்று தொடங்கும் செய்யுளில்,

**பெண்ணியல் என்று வடநூலின் நாமம்பெறும் இலச்சை**
**கண்ணியலாம் எனக்கு அஃது ஒழிய இன்று காத்தருளே**

என்று அமைத்துள்ளார்.

## திருத்தமும் பொருத்தமும்

அச்சு எழுத்தில், நூல் வடிவம் பெற்று நாடெங்கும் பயிலப்பட்டு வரும் பரிமேலழகர் உரையில் திருத்தப்பட வேண்டிய பகுதிகள் சில உள்ளன என்பதை ஆராய்ச்சியாளர் சிலர் எடுத்துக்காட்டியுள்ளனர். குறிப்புரை எழுதி அந்நூலைப் பதிப்பித்தவர்களும், பல ஆண்டுகள் அவ்வுரையில் மூழ்கி ஆழ்ந்து பயின்றவர்களும் கூறியுள்ள சில திருத்தங்கள் பொருத்தமாய் உள்ளன. சில திருத்தங்கள் மேலும் சிந்திக்க இடம் உண்டு என்பதை உணர்த்துகின்றன.

### 1

பிரயோக விவேக நூலாசிரியர், "அலங்கார நூலார் (சொற்களை) அபிதை, இலக்கணம், வியஞ்சனாவியர்த்தி என மூன்று வகையாக்குவர். அவர் மதம் பற்றிப் பரிமேலழகரும் 'சொல்லின் தொகை அறிந்த தூய்மையவர்' என்னும் திருவள்ளுவர் குறள் உரையில் (711) செஞ்சொல் இலக்கணச் சொல் குறிப்புச்சொல் என்பர்" (திங்குப்படலம் 16) என்று கூறுகின்றார்.

இன்று வெளிவந்துள்ள பரிமேலழகர் உரைகளில் "அவையறிந்து ஆராய்ந்து சொல்லுக" (711) என்ற குறளின் விளக்கவுரையில் "சொல்லின் குழு எனவே செஞ்சொல், இலக்கணைச்சொல், குறிப்புச்சொல் என்னும் மூவகைச் சொல்லும் அடங்கின" என்றே காணப்படுகின்றது. இலக்கணைச் சொல் என்பது இலக்கணச்சொல் என்று இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

### 2

பரிமேலழகர் உரைக்கு விளக்கக் குறிப்புகள் எழுதிப் பதிப்பித்த (1946) வை.மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியர், பரிமேலழகர் உரையைப் பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார். அந்நூலின் முகவுரையில் ஒரு திருத்தம் குறிப்பிடுகின்றார்.

"துப்புர வில்லார்" என்னும் 1050ஆம் குறளுக்குப் பரிமேலழகர் கூறியுள்ள விசேடவுரையில், 'இனி முற்றத் துறத்தலாவது துப்புரவில்லாமையின் ஒருவாற்றான் துறந்தாராயினார் பின் அவற்றை மனத்தால் துறவாமை' என்றே எல்லாப் பிரதிகளிலும் காணப்பட்டமையால் அங்ஙனமே பதிப்பித்துள்ளேன். அந்தப் பாடம் பொருளமைதிக்கு

ஏலாமையால், குறிப்புரையில் மனத்தால் துறத்தல் என்று இருக்க வேண்டும் என்று காட்டியுள்ளேன்".

இதன் பொருத்தத்தை அறிஞர் பெருமக்கள் மேலும் ஆராய்தல் வேண்டும்.

3

**துனியும் புலவியும் இல்லாயின் காமம்**
**கனியும் கருக்காயும் அற்று** **(1306)**

என்ற குறளுக்குப் பரிமேலழகர் எழுதும் சிறப்புரையில், "மிக முதிர்ந்து இறும் எல்லைத்தாய கனி, நுகர்வார்க்கு மிகவும் இனிமை செய்யாது ஆதலின்" என்ற பாடம் இன்றுள்ள பதிப்புக்களில் காணப்படுகின்றது. ஏட்டுச் சுவடிகள் பலவற்றில் 'மிகவும் இனிமை செய்தலின்' என்ற பாடமே காணப்பட்டது என்றும், தமக்குக் கிடைத்த ஒரு பிரதியில் மட்டும் 'செய்யாது ஆகலின்' என்ற பாடம் காணப்பட்டது என்றும், அப் பாடமே பொருளமைதிக்கு ஏற்றதாக இருந்ததால் அதனையே முதன்மையாகக் கொண்டு பதிப்பித்ததாகவும் வை.மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார், பரிமேலழகர் உரை விளக்கத்தின் *(1946)* முகவுரையில் குறிப்பிடுகின்றார்.

இவருக்குமுன், பரிமேலழகர் உரைக்குத் 'தெளிபொருள் விளக்கம்' எழுதி வெளியிட்ட *(1919)* கோ. வடிவேல் செட்டியார் இருவேறு பாடங்களின் பொருத்தத்தை ஆராய்ந்து அடிக்குறிப்பாகச் சேர்த்துள்ளார். அது பின் வருமாறு:

"மிகவும் இனிமை செய்தலின் என்றும் பாடமுண்டு. அது பிறழ்ந்த பாடமாம். பின் கட்டிளமைத்தாய காய் நுகரும் செவ்வித்து அன்று ஆகலின் என்று எதிர்மறையாகக் கூறியிருத்தலின் முன் மிகவும் இனிமை செய்தலின் என்று உடம்பாடாகக் கூறல் பொருந்துவதன்று. பதனழிந்த பழம் உண்பார்க்கு மிகவும் இனிமை செய்யாமைபோலத் துனியிலாக் காமம் அனுபவிப்பார்க்கும் மிகவும் இனிமை செய்யாது; இளங்காய் உண்பதற்குத் தகுதியாகாமை போலப் புலவியில்லாக் காமம் அநுபவிப்பதற்குத் தகுதியுடையதாகாது என்று இங்கு உணர்தற்பாற்றாம்".

'காமத்துப்பால் உரைவேற்றுமை' *(1964)* என்னும் நூலின் முன்னுரையில் (பக்கம் *3, 4)* இருவேறு பாடங்களையும் ஆராய்ந்த பேராசிரியர் லெ.ப. கரு. இராமநாதன் செட்டியார் நம்மை இத் துறையில் மேலும் ஆராயத்தூண்டுகின்றார். அவர் கருத்து பின்வருமாறு:

"இவ்வுரையில் ('துனியும் புலவியும்' என்ற குறளுக்குப் பரிமேலழகர் எழுதும் உரையில்), துனி இல்லையாயின் கனியற்று என்றமையால் துனி விலக்கத் தக்கது என்பதும், புலவி இல்லையாயின் கருக்காய் அற்று என்றமையால் புலவி வேண்டத்தகுவது என்பதும் பெறப்பட்டன. எனவே துனியின்மையும் புலவியும் வேண்டும் என்பது இதன் கருத்தாகும். இதற்கு, துனியும் புலவியும் ஆகிய இவ்விரண்டும் வேண்டும் என்பதே பரிமேலழகர் கருத்து எனக்கொண்டு விளக்கம் கூறுதல் பொருந்துமா என்பது ஆராய்தற்கு உரியது.

"மேற் குறிப்பிட்ட பரிமேலழகர் உரைப் பகுதியில் கனி நுகர்வார்க்கு மிகவும் **இனிமை செய்தலின்** என்றே பழைய பதிப்புக்களில் காணப்படுகிறது. பின்னர் வெளிவந்த பதிப்புக்களில், கனி நுகர்வார்க்கு மிகவும் இனிமை **செய்யாது** ஆகலின் என மாறுபாடாக உள்ளது. உரையில் நேர்ந்த இவ் வேறுபாடு மேற்குறிப்பிட்ட கருத்து வேறுபாட்டிற்குக் காரணமாயிற்று".

## 4

காமத்துப்பாலில் 'பதிமருண்டு பைதல் உழக்கும்' என்ற குறளின் (1229) உரையில் பரிமேலழகர் பிறர் உரையாக எடுத்துக் காட்டியுள்ள உரையில் இருந்த பிழையைத் தமிழ் அறிஞர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் செந்தமிழில் (தொகுதி 16, பக்கம் 98-100) 'உரை நுட்பம்' என்ற தலைப்பில் எடுத்துக்காட்டி விளக்குகின்றார். சரியான பாடத்தையும் நிறுவியுள்ளார்.

பரிமேலழகர் எடுத்துக்காட்டும் பிறர் உரை பலவாறு ஒவ்வொரு பதிப்பிலும் உள்ளது.

1. நாவலர் பதிப்பு (4, 7 ஆம் பதிப்புகள்): "மாலை மயங்கி வரும் போழ்தென மதிநிலை கலங்கி நோயுழக்கும் என்று உரைப்பாருமுளர்".

2. நாவலர் பதிப்பு (8ஆம் பதிப்பு): "மாலை மயங்கி வரும் போழ்து என்பதி நிலை கலங்கி".

3. மதுரைத் தமிழ்ச்சங்க வெளியீடு: "மாலை மயங்கி வரும் போழ்து என்பதி மதிநிலை கலங்கி".

4. கோ. வடிவேல் செட்டியார் பதிப்பு: "மாலை மயங்கி வரும் போழ்தென மதிநிலை கலங்கி" செட்டியார் எழுதியுள்ள விளக்கவுரை: "மாலை மயங்கிவரும்பொழுது பதிமதி நிலை கலங்கி".

இவற்றை ஆராய்ந்த ந.மு. வேங்கடசாமி நாட்டார் "இத்தனை பதிப்புகளிலும் உண்மைப் பாடம் வெளிவராதிருப்பது நமக்கு வியப்பைத் தருகின்றது" என்று குறிப்பிடுகின்றார். உண்மையான பாடம் எது என்றும் ஆராய்ந்து தெளிவு படுத்துகின்றார்.

"நாவலர் 4, 7-ஆம் பதிப்புக்களில் உள்ள பாடத்தில், "போழ்தென" என்றிருப்பதைப் "போழ்தென்" என்று திருத்திக் கொண்டால் பொருள் பொருத்தமுறுகின்றது. அதுவே உண்மைப் பாடமும் ஆம். ஓர் புள்ளியில்லாத குறையால் புலவர் பலரும் இங்ஙனம் மயங்குவாராயினர்".

### மறுப்பும் எதிர்ப்பும்

உரையாசிரியர்களுள் பரிமேலழகரைப் பற்றியே மிகுதியான ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன. இவர் வாழ்க்கை வரலாற்றை ஆராய்ந்தனர் சிலர்; உரைத்திறனை நயந்து போற்றினர் சிலர்; இவர் உரையில் பொருந்தாதவை உள என்று எடுத்துக்காட்டி மறுத்தனர் சிலர்; உரைக்கு உரைஎழுதி விளக்கினர் சிலர்; இவரது வடமொழிக் கொள்கைகளை எதிர்த்தனர் சிலர்.

பரிமேலழகரது உரையைக் கற்றுத் தெளிவதே தமக்குச் சிறப்பு என்று சிலரும், இவரது உரையை மறுத்து வேறுரை காண்பதே தம் புலமைக்குப் பெருமை என்று சிலரும் கருதி இவர் உரையைக் கற்பதில் ஈடுபடுகின்றனர். சுருங்கக் கூறினால் போற்றுதல் தூற்றுதல் ஆகிய இரண்டிற்கும் உரியவராய்ப் பரிமேலழகர் விளங்குகின்றார்.

பரிமேலழகரின் உரையை மறுக்கும் முயற்சிகள், பரிமேலழகர் புலமைப் பாறையைச் சுற்றியடிக்கும் அலை மோதல்களாக அமைகின்றனவே அன்றி, அப்பாறையின் உருக்கோட்டம் கண்டு செப்பம் செய்யும் சிற்றுளிகளாகக்கூட அமையவில்லை என்பது கா. அப்பாதுரைப் பிள்ளை கருத்தாகும்.* இவர் இவ்வாறு கருதுவதற்குக் காரணங்கள் உள்ளன. பரிமேலழகர் உரைத்திறனையோ, புலமைச் சிறப்பையோ எவரும் குறை கூறுவதில்லை. பரிமேலழகர்க்கு என்று சில கொள்கைகள் உண்டு; கோட்பாடுகள் உண்டு. அவற்றை மிக வன்மையான பின்னணியாகக் கொண்டு தம் உரையை விரித்துச் செல்லுகின்றார். பரிமேலழகரின் கருத்தும் உரைத் திறனும் நன்கு பிணைந்து இறுகி இணைந்து

* 'முப்பால் ஒளி' முதல் இதழ் – பக்கம் 44.

செல்லுகின்றன. பரிமேலழகரின் உரையில் குறை காண்பவர்கள் இவர் கொண்ட கருத்திலும் கொள்கையிலுமே குறை காண்கின்றனர்; கோட்பாடுகளை எதிர்க்கின்றனர்; மறுக்கின்றனர்.

குறைகாண்போர்களையும் இரு பிரிவினர்களாக ஆக்கலாம். ஒரு சாரார், பரிமேலழகர் உரை திருவள்ளுவரின் உள்ளக் கருத்தைப் பல இடங்களில் விளக்காமல் போகின்றது என்று மறுப்பர். மற்றொரு சாரார் பரிமேலழகர் வடமொழிக் கருத்தைத் தமிழ் நூலாகிய திருக்குறளில் வலிந்து புகுத்திவிட்டார் என்று எதிர்ப்பர். இவ்விரு சாராரும் தத்தம் கருத்துக்களை வெளிப்படுத்தி வரைந்த கட்டுரைகளும், நூல்களும், நிகழ்த்திய சொற்பொழிவுகளும் பலவாகும்.

இத்தகைய குறைபாடுகள் பரிமேலழகருக்கு முற்பட்ட உரையாசிரியர்களிடமும் உள்ளன. ஆனால், முன்னைய உரைகள் யாவற்றையும் வென்று விளங்கும் பரிமேலழகரே மறுப்புக்கும் எதிர்ப்புக்கும் ஈடுகொடுத்து நிற்கின்றார். இனி, மறுப்புரை களையும் எதிர்ப்புரைகளையும் காண்போம்.

1

வீரசோழியம் என்ற இலக்கண நூலுக்கு உரை கண்ட பெருந்தேவனார்,

**எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்**
**நினைக்க வருவதுஒன் றுண்டு** (1202)

என்ற குறளை மேற்கோளாகக் காட்டுகின்றார். (வீரசோழியம் - 152 உரை) இங்குக் காட்டப்பட்ட குறளில் சிறிது வேறுபாடு உள்ளது. 'நினைக்க வருவது ஒன்று உண்டு' என்பது பெருந்தேவனார் கொண்ட பாடம். ஆனால் பரிமேலழகர்,

**நினைப்ப வருவது ஒன்று இல்**

என்று பாடம் கொண்டுள்ளார்.

வீரசோழிய உரையை, பரிமேலழகர் உரையைப் பயின்ற யாரோ ஒருவர் இருவேறு பாடங்களையும் ஆராய்ந்துள்ளார். அவர் கருத்து, பழைய குறிப்பு என்ற பெயருடன் அடிக்குறிப்பாக (பவானந்தம்பிள்ளை பதிப்பில்) இடம் பெற்றுள்ளது. அந்தப் பழையகுறிப்பு, பரிமேலழகர் உரைக்கு மறுப்பாக உள்ளது.

"இல் என்று பாடம் ஓதித் துன்பம் எதிர்நிலை எழுவாயாகக் கொண்டார். பரிமேலழகர் இனிதே என முன்னர் நிறுத்தினமையானும் துன்பம் இல்லா வழி எல்லாம் இன்பமே

உளது என்பது சாத்தியம் ஆகாமையானும், புணர்ந்துழியும் பிரிந்துழியும் இனிமையுண்மை கூறலே நாயனார் கருத்து ஆதலானும், அஃது சிறப்பன்று என மறுக்க. அன்றியும் உண்டு என்பதே பழம் பிரதிகளின் பாடமுமாம்".

பல ஆண்டுகளுக்கு முன்னிருந்தே பரிமேலழகர் உரைக்கு மறுப்பு எழத் தொடங்கிவிட்டது என்பதை இப்பகுதி உணர்த்தும்.

**2**

சிற்றிலக்கியங்கள் பல இயற்றிய துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள், பரிமேலழகர் உரையை இரண்டு இடங்களில் மறுத்துள்ளார்.

**அறுத்தாறு இதுஎன வேண்டா சிவிகை**
**பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை (37)**

என்ற குறளுக்குப் பரிமேலழகர், "அறத்தின் பயன் இது என்று யாம் ஆகம அளவையான் உணர்த்தல் வேண்டா; சிவிகையைக் காவுவானோடு செலுத்துவானிடைக் காட்சியளவை தன்னாலே உணரப்படும்" என்று உரை எழுதுகின்றார்.

இவ்வுரை சிவப்பிரகாசருக்கு உடன்பாடன்று. திருநாவுக்கரசர், திருப்பூந்துருத்தி என்னும் தலத்தில், திருஞான சம்பந்தருடைய பல்லக்கை ஒரு சமயம் சுமந்து சென்றார். இங்கே சிவிகையைச் சுமந்தவர், சிவிகையில் அமர்ந்தவர் இருவரும் உயர்ந்தவர்களே. ஒருவர் செய்யும் தொழிலையும் நிலையையும் கொண்டு அவர் தகுதியை மதிப்பிட முடியாது; சிவிகையை சுமப்பவர், சிவிகையில் அமர்ந்து செல்வோர் இடையே 'இதுதான் அறம்; நல்ல அறம் செய்தவர் சிவிகையில் அமர்ந்து செல்லுகின்றார்' என்று கூற வேண்டா என்பதே மேலே கண்ட குறளுக்குச் சிவப்பிரகாசர் கண்ட உரையாகும். தம் கருத்தை அவர், நால்வர் நான்மணி மாலை என்ற நூலில் ஒரு பாடல் வாயிலாக வெளிப்படுத்துகின்றார்.

**அறுத்தாறு இதுஎன வேண்டா சிவிகை**
**பொறுத்தா னோடூர்ந்தான் இடையே – மறுத்தார்,சம்**
**பந்தன் சிவிகை பரித்தார் திரிகுவர்மற்று**
**உந்தும் சிவிகையினை ஊர்ந்து**

**(நால்வர் நான், 33)**

இப்பாடலில் அப்பர், சம்பந்தரின் சிவிகையைச் சுமந்த நிகழ்ச்சியைப் பாடிப் பரிமேலழகர் உரையை மறுக்கின்றார் சிவப்பிரகாசர்.

## 3

**பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த**
**மக்கட்பே றல்ல பிற**

**(61)**

என்ற குறளின் விசேடஉரையில், அறிவறிந்த என்றதனான், மக்கள் என்னும் பெயர் பெண் ஒழித்து நின்றது என்று எழுதுகின்றார். வாழ்த்துபவரும் "நல்ல ஆண் மகனைப் பெறுக" என்றே வாழ்த்துகின்றனர்.

இவ்வாறு வாழ்த்துவதையும், பரிமேலழகர் கருத்தையும் இன்று மறுப்பவர் உண்டு; வன்மையாகக் கண்டிப்பவர் உண்டு. ஆனால், சிவப்பிரகாசர் பல ஆண்டுகளுக்கு முன்னரே, பெண்ணின் பெருமையை உணர்ந்து பெண்ணை இழிவுபடுத்தும் பொல்லாத வழக்கத்தை எதிர்த்துள்ளார். பெரியநாயகியம்மை கலித்துறையில்,

**கற்றார் அறிகுவார் மக்கள்தம் பேறெனக் கட்டுரைத்த**
**சொற்றான் ஒருபெண் ஒழித்ததென் பாரொடு தொல்லுலகில்**
**நற்றாண் மகற்பெறுக என்றுஆசி சொல்பவர் நாணஉனைப்**
**பெற்றான் மலையரை யன்குன்றை வாழும் பெரியம்மையே**

**(பெரியநாயகி – 12)**

என்ற பாடலில் தம் கருத்தை நன்கு வெளிப்படுத்தியுள்ளார்.

## 4

திருக்குறளில் உள்ள அறத்துப்பால், மனுநீதி முதலிய வடமொழி நூலின் கருத்துக்களை உரைக்கின்றது என்பது பரிமேலழகரின் கருத்து.

உரைப்பாயிரத்தில், "மாந்தர்க்கு உறுதி என உயர்ந்தோரான் எடுக்கப்பட்ட பொருள் நான்கு. அவை அறம் பொருள் இன்பம் வீடு என்பன. அவற்றுள், அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும் ஆம்" என்று கூறுகின்றார். இல்லற இயலின் இறுதியில் (240ஆம் குறள் உரை) "இனி, மனு முதலிய அற நூல்களால் பொதுவாகக் கூறப்பட்ட இல்லறங்கள் எல்லாம் இவர் தொகுத்துக்கூறிய இவற்றுள்ளே அடங்கும்; அஃது அறிந்து அடக்கிக்கொள்க; யாம் உரைப்பின் பெருகும்" என்று உரைக்கின்றார்.

மனுநீதி நால்வருணத்தையும் சாதி முதலிய கட்டுப் பாடுகளையும் வற்புறுத்துகின்றது என்றும், வேத நெறியைப் போற்றுகின்றது என்றும்கூறி, திருக்குறளில் அத்தகைய கருத்துக்கள் இல்லையென்று எடுத்துக்காட்டிப் பரிமேலழகர்

2.27.

உரையை எதிர்ப்பர் சிலர். பேராசிரியர் சுந்தரம் பிள்ளை மனோன்மணீய நாடக நூலின் பாயிரத்தில்,

**வள்ளுவர்செய் திருக்குறளை**
**மறுவறநன்கு உணர்ந்தோர்கள்**
**உள்ளுவரோ மநுவாதி**
**ஒருகுலத்துக்கு ஒருநீதி**

என்று எழுப்பியுள்ள புதுக்குரல், பரிமேலழகரின் கருத்தை எதிர்த்து, தமிழகம் எங்கும் பலமுறை எதிரொலிக்கின்றது.

**5**

பரிமேலழகர் வடமொழிக் கருத்தை வலிந்து புகுத்திய இடங்கள் பல உள்ளன. பொருட்பாலில்,

**அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்**
**திறம்தெரிந்து தேறப் படும் (501)**

என்ற குறள் உரையில், இக்குறள் வடநூலார் கொள்கையின்படி அற உபதை, இன்ப உபதை, அச்ச உபதை என்ற நால்வகை உபதைகளைக் கூறுவதாய்க் கூறி அவ்வுபதைக்களை வடநூலார் கூறிய வண்ணம் விளக்குகின்றார். "இவ் வடநூற் பொருண்மையை உட்கொண்டு இவர் ஓதியது அறியாது பிறர் எல்லாம் இதனை 'உயிர் எச்சம்' என்று பாடம் திருத்தித் தத்தமக்குத் தோன்றியவாறே உரைத்தார்" என்று ஏனைய உரையாசிரியர்களையும் மறுக்கின்றார்.

காமத்துப்பாலின் இறுதியில், "ஈண்டுப் பிரிவினை, வடநூல் மதம் பற்றிச் செலவு, ஆற்றாமை, விதுப்பு, புலவி என நால்வகைத்து ஆக்கிக் கூறினார். அவற்றுள் செலவு பிரிவாற்றறைமையுள்ளும்; ஆற்றாமை படர் மெலிந்திரங்கல் முதல் நிறையழிதல் ஈறாயவற்றுள்ளும்; விதுப்பு அவர்வயின் விதும்பல் முதல் புணர்ச்சி விதும்பல் ஈறாயவற்றுள்ளும்; புலவி நெஞ்சொடு புலத்தல் முதல் ஊடல் உவகை ஈறாயவற்றுள்ளும் கண்டுகொள்க" என்று எழுதுகின்றார்.

இவ்வாறு வடமொழிக் கருத்தை வலிந்து புகுத்திய இடங்கள் பல உள்ளன.

தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் திருவள்ளுவரது காமத்துப் பாலில், பரத்தையர் பிரிவு இல்லை என்றும் அப் பிரிவைத் தலைவனுக்கு ஏற்படுத்தாமலேயே மருதத்திணைபாடி மிக உயர்ந்த ஊடலைத் திருவள்ளுவர் உணர்த்தியுள்ளார் என்றும் வள்ளுவரும் மகளிரும் என்ற ஆராய்ச்சி நூலில் *(1930)* பல

காரணங்களைக்காட்டி விளக்கியுள்ளார் (பக்கம் 67-97). அந்நூலில், பரிமேலழகர் திருவள்ளுவரின் உள்ளக்கருத்தை உணராமல் மருதத்திணைக்குரிய குறட்பாக்களுக்கு உரை எழுதும்போது பரத்தையர் பிரிவைப் புகுத்துகின்றார் என்றும் தெ.பொ.மீ. காட்டி, பரிமேலழகர் உரையை மறுத்துள்ளார்.

## 6

சொல்லின் செல்வர் ரா.பி. சேதுப்பிள்ளை திருவள்ளுவர் நூல்நயம் என்ற நூலில், பரிமேலழகருக்குமுன் திருக்குறளின் ஏழாம் அதிகாரத்தின் பெயர் மக்கட்பேறு என்று இருந்தது என்றும், அந்த அதிகாரத்தைப் பரிமேலழகரே புதல்வரைப் பெறுதல் என்று மாற்றிவிட்டார் என்றும் கூறுகின்றார். ஆனால், பரிமேலழகர்க்கு முற்பட்ட உரையாசிரியர்ககளாகிய பரிதி முதலியோர் உரைகளிலும் ஏழாம் அதிகாரத்தின் பெயர் புதல்வரைப் பெறுதல் என்றே உள்ளது. பரிமேலழகர்க்கு முன்னரே இந்த மாறுதல் நிகழ்ந்திருக்கிறது. பரிமேலழகர், திருக்குறள் அதிகாரங்களின் பெயரைத் திருவள்ளுவரே அமைத்தார் என்று கருதுகின்றார். அவர்வயின் விதும்பல் என்ற அதிகாரத்தை விளக்கும்போது இருவரையும் சுட்டிப் பொதுவாகிய பன்மைப்பாலால் (திருவள்ளுவர்) கூறினார்' என்று எழுகின்றார்.

### வலிந்து பொருள் காணுதல்

பரிமேலழகர் சில குறட்பாக்களுக்கு வலிந்து பொருள் காணுகின்றார்; தம் கருத்தைப் புகுத்திவிடுகின்றார். அத்தகைய இடங்கள் சிலவற்றைக் காண்போம்.

**அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்**
**பிறன்பழிப்பது இல்லாயின் நன்று** **(49)**

என்ற குறளின் உரையில் அஃதும் என்பதற்கு, 'ஏனைத் துறவறமோ எனின் அதுவும், என்று வலிந்து பொருள் கொள்ளுகின்றார். அது என்ற சுட்டு இல்வாழ்க்கையைச் சுட்டியதாகவே கொள்ளலாம்.

**தக்கார் தகவிலர் என்பது அவரவர்**
**எச்சத்தால் காணப் படும்** **(114)**

என்ற குறளில் உள்ள எச்சம் என்ற சொல்லுக்கு நன்மக்கள் என்று பொருள் கூறுகின்றார் பரிமேலழகர். திருவள்ளுவர், எச்சம் என்ற சொல்லைப் புகழ் என்ற பொருளில் ஆண்டுள்ளார். 'இசை என்னும் எச்சம்' (238) என்பது இங்கே நினைக்கத் தக்கதாகும். ஆதலின் எச்சம் என்பது மக்களைக் குறிக்கும் என்பது பொருந்தாது.

**பொருந்தாவுரை**

சில குறட்பாக்களுக்குப் பரிமேலழகர் பொருந்தாவுரையும் கூறியுள்ளார். இவருக்கு முற்பட்ட உரையாசிரியர்களின் உரையைக் கற்கும்போது வேறு பல பொருத்தமான கருத்துகள் வெளிப்படுகின்றன.

**1**

> **நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்**
> **வித்தகர்க்கு அல்லால் அரிது (235)**

என்ற குறளுக்குப் பரிமேலழகர் எழுதியுள்ள உரை சிறப்பாக இல்லை. 'நத்தம் போல்' என்பது உவமைத் தொடர் போல உள்ளது. ஆனால் பரிமேலழகர், "நந்து என்னும் தொழிற்பெயர் விகாரத்தால் நத்து என்றாய், பின் அம் பகுதிப்பொருள் விகுதி பெற்று நத்தம் என்று ஆயிற்று. போல் என்பது ஈண்டு உரையசை. ஆகும் என்பதை முன்னும் கூட்டி, அரிது என்பதனைத் தனித்தனிக்கூட்டி உரைக்க" என்றெல்லாம் எழுதுகின்றார்.

நத்தம் போல் என்பதற்குப் பரிதியார், "சங்கு ஆயிரம் சூழ்ந்த வலம்புரி போல" என்றும்; காலிங்கர், "வலம்புரிச் சங்கானது தன்னிலை குலைந்து பிறர் கைப்படினும் தன் பெருமை குன்றாததுபோல" என்றும் பொருள் கூறுகின்றனர். நத்தம் என்பதற்குச் சங்கு என்றும், போல் என்பதை உவம உருபாகவும் கொண்டு பொருள் எழுதியுள்ளனர். இவர் தரும் விளக்கமே குறளின் பொருளை அறியத் துணை செய்கின்றது.

இக்குறளுக்குப் பரிமேலழகர் எழுதியுள்ள உரை பொருந்தவில்லை என்று கூறி, சிறந்த விளக்கம் ஒன்றைத் தமிழறிஞர் எம்.எஸ். பூரணலிங்கம் பிள்ளை செந்தமிழ்ச் செல்வியில் "உரை மயக்கம்" என்ற கட்டுரையில் வெளியிட்டுள்ளார் (செந்தமிழ்ச் செல்வி — சிலம்பு 8 பக்கம் 4–10). அவர் தரும் விளக்கம் கீழே தரப்படுகிறது.

"நத்தம் என்ற மொழிக்கு நத்தை, ஊர், சங்கு, வாழை, அனைய பொருள்கள் பல இருக்க 'நந்து' என்பதன் திரிபு 'நத்து' என்று ஆகி, அது அம் சாரியை பெற்று நத்தம் என்று ஆயிற்று என்றும், அதற்குப் பொருள் ஆக்கம், கேடு என்றும் உரைகாரர் (பரிமேலழகர்) கூறுவது வியப்பாய் இருக்கின்றது. நத்தை சங்கு வாழை என்ற பொருள்களை அமைத்து உரைவரையின் பொருள் எளிது விளங்குகின்றது. 'நண்டு சிப்பி வேய் கதலி நாசமுறுங் காலமது கொண்ட கருவழிக்கும்' என்றனர் ஆன்றோரும். இவற்றிற்கு அழிவு நேரிடும் பொழுது இவை கருக்கொள்ளும்; கரு

வளர வளர இவை கேடுறும்; முடிவில் அழியும். அது போன்று சதுரப் பாடுடைய, திறமைவாய்ந்த அறிவாளிகள், வீரர்கள் அன்னாருக்குப் புகழ்க் காதல் உண்டாகும் பொழுது புகழாகிய கருத்து மனத்தில் உண்டாகும் பொழுது, உடற் சுகம் நாடாமல் நாடப்பட நாடபட அதற்குக் கேடு வருவதையும் உன்னாமல் புகழ் ஓங்கி மாய்கின்றனர், உயிர் துறக்கின்றனர்".

## 2

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு (338)

என்ற குறளுக்கு உரை எழுதும்போது பரிமேலழகர் ஒழிந்த மற்ற உரையாசிரியர்கள் அனைவரும் குடம்பை என்ற சொல்லுக்குக் கூடு என்றே பொருள் எழுதி உவமையை விளக்குகின்றனர். ஆனால், பரிமேலழகர் மட்டும், குடம்பை என்பதற்கு முட்டை என்று பொருள் எழுதி, "இனிக் குடம்பை என்பதற்குக் கூடு என்று உரைப்பாரும் உளர்; அது புள்ளுடன் தோன்றாமையானும், அதன்கண் அது மீண்டு புகுதல் உடைமையானும் உடம்பிற்கு உவமையாகாமை அறிக" என்று பிறர் உரையை மறுக்கின்றார். இம் மறுப்புப் பொருத்தமற்றது என்றும், ஏனைய உரையாசிரியர்களின் கருத்தே சிறந்தது என்றும் அறிஞர் பெருமக்கள் கூறுகின்றனர். இனி அறிஞர்களின் கருத்துக்களை காண்போம்.

"முட்டையை விட்டு வெளிப்படும் உயிரை அப் பருவத்தில் பார்ப்பு என்று சொல்லுதல் வழக்கேயன்றிப் புள் என்று சொல்லுதல் வழக்கன்று. மேலும், முட்டையை விட்டு வெளிப்பட்டவுடன் பறக்கும் பார்ப்பை நாம் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை".

— வ.உ.சி.

"முட்டை உருச் சிதையாமல் பார்ப்பு அதனின் நீங்குமாறில்லை. யாக்கை உருச் சிதையாமல் உயிர் நீங்குமாறுண்டு. அது நீங்கிய பின்னர் யாக்கை சிதைவதே ஒருதலை".

— ச. தண்டபாணி தேசிகர்

"கருவும் ஓடும் ஒன்றாய்த் தோன்றாது, கரு முதிர்ந்த பின்னரே மேலே உள்ள பச்சை இறுகி ஓடாகின்றது ஆதலானும் அவ்வுரை பொருந்தாது".

— இரத்தினவேல் முதலியார்

## சொல்லும் பொருளும்

குடம்பை என்றசொல் சங்க நூல்களில் கூடு என்ற பொருளில் வருகிறதேயன்றி முட்டை என்ற பொருளில் வரவில்லை. பரிமேலழகருக்குப் பின் தோன்றிய பிங்கலத்தை என்ற நிகண்டு மட்டுமே குடம்பை என்பதற்கு முட்டை என்று பொருள் கூறுகின்றது.

## மரபு

உடம்பைக் கூடு என்று கூறுவதே மரபு.

கூடலான் கூடாயினான்

— சிலம்பு

அன்னைவெறுங் கூடு காவல் கொண்டாள்

— முத்தொள்ளாயிரம்

ஓடாத தேரில் ஒரு கூடு வருவதென்று கூறுங்கோ

— நந்திக் கலம்பகம்

கூடு விட்டுக் கூடு பாய்தல்

— பேச்சு வழக்கு

கூடு விட்டிங்கு ஆவிதான் போயின பின்பு

— நல்வழி

என்ற இடங்களில் எல்லாம் உடம்பைக் கூடு என்று கூறியிருப்பதைக் காணலாம்.

## உவமை

பழந்தமிழ் நூல்களில் உடம்பைக் கூடாகவும், உயிரைப் பறவையாகவும் உவமை கூறியிருப்பதைக் காணலாம்.

அலங்கல் அஞ்சினைக் குடம்பைப் புள்ளெனப்
புலம்பெயர் மருங்கிற் புள்எழுந் தாங்கு
மெய்யிவண் ஒழியப் போகி, அவர்
செய்வினை மருங்கிற் செலீஇயர் இன்உயிரே.

அகம் – 113

கேளாதே வந்து கிளைகளா யிற்றோன்றி
வாளாதே போவரால் மாந்தர்கள் — வாளாதே
சேக்கை மரன்ஒழியச் சேண்நீங்கு புட்போல
யாக்கை தமர்க்குஒழிய நீத்து.

— நாலடி (30)

இவற்றை எல்லாம் நோக்கும்போது,

குடம்பை தனித் தொழிய

என்ற குறளுக்குப் பரிமேலழகர் உரை பொருத்தமாய் இல்லை.

3

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணம்தழீஇ யற்று (913)

என்ற குறளின் விளக்கவுரையில் பரிமேலழகர், இருட்டறையில் ஏதில் பிணம் தழீஇயற்று' என்ற உவமையின் பொருத்தத்தை, "கூலிக்குப் பிணம் எடுப்பார் காணப்படாதோர் இடத்தின்கண் இயைபில்லாததோர் பிணத்தை எடுக்குங்கால் அவர் குறிப்போடு ஒக்கும்'' என்று விளக்குகின்றார். இந்த விளக்கத்தைப் படிக்கும்போது நமக்குச் சில ஐயங்கள் தோன்றுகின்றன.

1. கூலிக்குப் பிணம் எடுப்பார் என்று பொருள் கொள்ளுவதற்குக் குறளில் இடம் உண்டா?

2. பிணம் எடுப்பார் இருட்டறையில் பிணத்தைத் தழுவக்காரணம் என்ன?

இவ்வினாக்களுக்கு விடை கிடைக்கவில்லை. ஏனைய உரையாசிரியர்கள் இவ்வுவமையை வேறு வகையாய் விளக்குகின்றனர்: "பொருட் பெண்டிரது பொய்ம்மை முயக்கம் இருட்டறையின் உள்ளே கிடந்ததொரு வேற்றுப் பிணத்தைக் கூலிக்குத் தழுவியது போலும்" என்ற விளக்கம் பொருத்தமாய் உள்ளது.

## 4. பரிபாடல் உரை

எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான பரிபாடலுக்குப் பரிமேலழகரே உரை எழுதினார் என்பது அறிஞர்கள் கண்ட முடிபு. பரிமேலழகர், திருக்குறளுக்கு எழுதிய உரைக்கு உரை கண்ட இரத்தினக் கவிராயர், நுண்பொருள் மாலையில், "பரிபாட்டினுள் மழையிருஞ்சூல் என்பதனை முன் பின்னாகத் தொக்க இரண்டாம் வேற்றுமைத்தொகை என்றார் இவ்வுரையாசிரியர் (குறள் 216)'' என்று கூறுகின்றார். பரிபாடலைப் பதிப்பித்த டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் முன்னுரையில், "நுணுகி ஆராயின், திருக்குறள் உரையிலும் இவ்வுரையிலும் (பரிபாடல் உரையிலும்) ஒத்த கருத்துகளும் ஆசிரியர்

பரிமேலழகருடைய கொள்கைகளும் பல காணலாம்' என்று எழுதியுள்ளார்.

பரிபாடலின் உரைச் சிறப்புப்பாயிரம்,

**சிற்றறி வினர்க்கும் தெற்றெனத் தோன்ற**
**மதியின் தகைப்பு விதியுளி அகற்றி**
**எல்லையில் சிறப்பின் தொல்லோர் பாடிய**
**அணிதிகழ் பாடத்துத் துணிதரு பொருளைச்**
**சுருங்கிய உரையின் விளங்கக் காட்டினன்**
**நீள்நிலம் கடந்தோன் தாள்தொழு மரபின்**
**பரிமே லழகன் உரிமையின் உணர்ந்தே**

என்று பரிமேலழகரைப் புகழ்ந்து கூறுகின்றது.

பரிமேலழகர் வைணவ சமயத்தினர் என்பதற்குப் பரிபாடல் உரையும் சான்றாக உள்ளது. உரைச் சிறப்புப்பாயிரம்,

**நீள்நிலம் கடந்தோன் தாள்தொழு மரபின்**
**பரிமே லழகன்**

என்று கூறுகின்றது. பரிபாடலின் பழைய ஏட்டுப் பிரதிகளில்,

**விரும்பி அருள்நீல வெற்புஇமயக் குன்றின்**
**வரும்பரிசு புள்ஊரும் மாலே!—சுரும்பு**
**வரிபாட லுன்சீர் வளர்துளவத் தோளாய்!**
**பரிபாட லின்சீர்ப் பயன்**

என்ற பாடல் காணப்படுகின்றது. இப்பாடல் பரிபாடல் உரைக்குப் பரிமேலழகர் கூறிய கடவுள் வணக்கமாக இருக்கலாம் என்று டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் கருதுகின்றார்.

பரிபாடலுக்குப் பரிமேலழகர் எழுதியுள்ள உரையின் இயல்புகளைப் பற்றி ஐயர் பின்வருமாறு கூறுகின்றார்:

"இந்த உரை பலவிடத்துப் பொழிப்புரையாயும்; சில இடத்துப் பதவுரையாயும்; சில இடத்துக் கருத்துரையாயும்; சிறிதும் புலப்படாத சொற்களின் பழைய வடிவங்களைப் புலப்படுத்தியும்; உரிய இடங்களில் இலக்கணக் குறிப்புகளைப் பெற்றும்; சில இடத்து மிக அழகான பதசாரத்துடன் கூடியும்; விளங்காத சிலவற்றைத் தக்க தமிழ் நூல் மேற்கோள்களாலும் வேதம் உபநிடதம் முதலியவற்றின் கருத்துகளாலும் விளக்கியும் மிக விரிவாக அமைந்துள்ளது."

## பொழிப்புரை

பரிமேலழகர் பரிபாடலின் சில அடிகளுக்கு ஒரு சேரப் பொழிப்புரை திரட்டித் தருகின்றார். அத்தகைய இடங்களில்

பொருள்தெளிவும் கருத்துச்சிறப்பும் அமைந்துள்ளன. உதாரணங்கள் இரண்டினைக் காண்போம்:

**காதற் காமம் காமத்துச் சிறந்தது**
**விருப்போர் ஒத்து மெய்யுறு புணர்ச்சி** **(9: 14, 15)**

உரை: "காமத்துச் சிறந்தது காதலையுடைய காமம்; அஃதாவது, மெய்யுற்று அறியாதார் இருவர் அன்பொத்துப் பான்மை வகையால் தாமே மெய்யுற்றுப்புணரும் புணர்ச்சி".

**இந்திரன் பூசை இவள்அக லிகைஇவன்**
**சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு**
**ஒன்றிய படியிதுஎன் றுரைசெய் வோரும்** **(19, 50–52)**

உரை: இப் பூசை இந்திரன்; அவ்விடத்திற்சென்ற கௌதம முனிவன்; இவன் சினன் மிகுதலால் இவள் கல்லுரு வெய்தியவாறு இதுவென்று கொண்டோற் பிழைத்த தண்டம் கூறுவாருமாய்".

**வானநூற் புலமை**

பரிபாடலில் பதினோராம் பாட்டில் வானநூலைப் பற்றிய குறிப்பு *(1-15)* இடம் பெற்றுள்ளது. நாள் கோள்களின் நிலை, சந்திரகிரணம் ஏற்படும் காலம் இவற்றைப் பற்றிய குறிப்புக்கள் விரிவாக இடம் பெற்றுள்ளன. பரிமேலழகர், மூலத்தை நன்கு அறிந்து, வானநூற் புலமையுடன் ஆராய்ந்து தெளிந்து நன்கு அப் பகுதியை விளக்குகின்றார். முடிவில் 'இதனாற்சொல்லியது ஆவணித் திங்கள் அவிட்ட நாளில் இக்கோள்கள் தமக்குரிய நிலமாகிய இவ் இராசிகளில், நிற்பச் சோமனை அரவு தீண்ட என்பதாயிற்று' என்று தெளிவுபடுத்துகின்றார். இவ்வுரைப் பகுதி இவர்க்கு வான நூலில் ஆழ்ந்த பயிற்சி உண்டு என்பதை உறுதிப் படுத்துகின்றது.

**உரைத் திறன்**

"கம்பலைத்தன்று என்பது, உரிச்சொல்லடியாகப் பிறந்த வினைத்திரிசொல்" *(8–37)* என்று இவர் குறிப்பிடுவது இவரது ஆராய்ச்சித் திறனைப் புலப்படுத்தும்.

"மாற்றே மாற்றலிலை" *(4-53)* என்ற தொடரை, "மாற்று ஏமம் ஆற்றல் இலை" என்று பிரித்து, "மாற்றுதல் தொழிலும் அதற்கு ஏமம் செய்தல் தொழிலும் உடையை அல்லை" என்று இவர் உரை எழுதி இருப்பது இவரது புலமை நுட்பத்தை வெளிப்படுத்தும்.

**நயவுரை**

பரிமேலழகர் நயமாக உரை காணும் இடங்கள் சிலவற்றை இங்கே காண்போம்:

3–21 தீ செங்கனலி—எல்லாம் தீகின்ற செந்நெருப்பு; எல்லாம் தீதற்குக் காரணமாகிய செந்நெருப்பு என்றவாறு.

3–31 கூந்தல் என்னும் பெயரோடு கூந்தல்—கூந்தல்மா என்று கண்டார் சொல்லும் வடிவொடு வந்த கேசி.

கூந்தலை உடைய மாவைக் 'கூந்தல்' என்றும், பெயரினை உடைய வடிவைப் பெயர் என்றும் கூறினார், ஆகுபெயரான்.

கேசி குதிரையாய் வந்து பொருதான் ஓர் அசுரன்; இப் பெயர் கேசம் என்னும் வடமொழி முதனிலையாக முடிந்தமையின் அதன் பொருண்மை பற்றி, 'கூந்தல்' என்றார்.

3–35 வித்திடுபுலம் மேடாயிற்று—நாற்றங்கால் வண்டலிட்டு மேடாயிற்று.

7–84 பேஎ நீர்—ஆழத்தான் அச்சத்தைத் தரும் நீர்.

17–53 ஏம வைகல்—பிறவித் துன்பம் சாராத வைகல்.

13–1 மங்குல் ஞாயிறு—இருளைக் கெடுக்கும் ஞாயிறு; இதனை 'நோய் மருந்து' என்றாற்போலக் கொள்க.

8–15 ஒரு நிலைப் பொய்கை—வற்றாப் பொய்கை.

20–81 நீ அன்பன் எற்கு அன்பன்—நீ சால அன்பு பூண்டவன் என்மாட்டு அன்புடையான்.

**காரணம் கூறி விளக்கல்**

3–77 பாழ் - புருடன். சாங்கியர் பிறிதொன்று பிறத்தற்கு இடன் ஆகாது என்ப ஆகலான், அவர் மதம் பற்றிப் புருடனைப் 'பாழ்' என்றார். ஈண்டுத் தத்துவம் கூறுகின்றமையின்.

10–11 ஏணிப்படுகால் - இருகோவை முதல் முப்பத்து இரு கோவை ஈறாக ஒன்றற்கு ஒன்று வடம் ஏறுதலான் மேகலையை 'ஏணிப் படுகால்' என்றார்.

10–13 மூஉய் - மூடுதல் உடைமையால் பூப்பெட்டியை 'மூஉய்' என்றார்.

11–88 மழபுலவர் - இளைய புலவர்; கல்வி தொடங்கின அளவாதலின் மழபுலவர் என்றார்.

13–29 அறி துயில் - யோக உறக்கம் ஆதலால் அறிதுயில் எனப் பட்டது.

19-98 படையும் பவழக் கொடி நிறம் கொள்ளும்-குருதி தோய்ந்துழி அல்லது அந் நிறம் இயல்பு அன்மையின் கொள்ளும் என்றார்.

11-81 அம்பா ஆடல் என்று தைந் நீராடற்குப் பெயர் ஆயிற்று. தாயோடு ஆடப்படுதலின்.

2-69 வாயடை - வாயின்கண் அடுக்கப்படுதலின் உணவிற்கு வாயடை என்று பெயராயிற்று.

5-37 நொசிப்பு - மனத்தினை ஒன்றாக்கி நுண்ணியதாகக் காண்டலாதலின் சமாதி நொசிப்பு எனப்பட்டது.

## உலக வழக்குக் கூறல்

மக்கள் பேச்சில் இடம்பெறும் தொடரும் சொல்லும் உரையில் எடுத்துக்காட்டுகின்றார்.

8-21 'எதிர்குதிர் ஆகின்று' - எதிர்குதிர் என்பது, ஓர் உலக வழக்கு.

8-49 மாலைக்குமாலை என்றது, அடிக்கடி என்றாற்போல நின்றது.

8-60 ஈதா என்பது, ஒரு மரூஉ முடிபு; அஃது இக்காலத்து இந்தா என்று வழங்கப்படும். சுட்டு நீண்டது.

18-6 ஏறுமாறு என்பது பகைத்தற்கு ஓர் உலக வழக்கு.

20-13 குதுகுதுப்ப—ஆசைப்பட.

## சொல்லும் பொருளும்

1-44 மடங்கல்—உலகு உயிர்களினது ஒடுக்கம்.

2-27 'நின்னிலைத் தோன்றும்' என்புழி 'நிலை' என்பது இடப் பொருட்டாய் நின்றது.

3-8 தருமன்-யமன்; மடங்கல்—அவன் ஏவல் செய்யும் கூற்றம்.

4-32 மருந்து—காற்று.

4-18 தாக்கு இரை—எறிந்து எடுக்கும் இரை.

5-14 சால்வ—சால்பினை உடையாய்

10-74 உறு நறவு—வெம்மை மிக்க நறவு

12-21 தேசு—செயற்கை அழகு. ஒளி—கல்வியால் வந்த நிறம்.

14-8 மணந்து தணந்தோர்—கூடிப் பிரிந்தோர்.

2-38 எதிர் கழறும்—ஒக்கும்

| | |
|---|---|
| 7–55 | ஏ—இறுமாப்பு |
| 10–33 | கையறவு—ஊடல் |
| 10–102 | ஓய்வார்—ஒழுக்குவார் |
| 11—69 | தெவி—நிறைத்து |
| 30–39 | ஒய்ய—தப்ப |
| 12–17 | புட்டகம்—புடைவை |
| 16–8 | முஞ்சம்—ஒருதலையணி |
| 19–44 | கூரம்—யாழ் |

6

# திருக்குறள் சிந்தனைகள்

## 1. புதிய உரைகள்

திருக்குறளுக்குப் பரிமேலழகர் உரை தோன்றிய பின், அவ்வுரைக்கு விளக்கம் எழுதிப் பரப்புகின்ற முயற்சி, சில நூற்றாண்டுகள் தொடர்ந்து நடை பெற்றது. காலப்போக்கில் புதிய உரை காணும் முயற்சி தோன்றியது. இம் முயற்சி பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றியது. வீரமாமுனிவர், நாகை தண்டபாணியார், ஈக்காடு சபாபதி முதலியார், திரு. வி. க. ஆகியோர் இம் முயற்சியில் ஈடுபட்டனர். திரு. வி. க. வின் உரை முதல் நூறு குறட்பாக்களுக்கே (விருத்தியுரையாய்) உள்ளது. ஆழ்ந்த பொருளும், விளக்கமும் இலக்கியச்சுவை முதிர்ந்த நடையும் இவர் உரையின் சிறப்பியல்புகளாகும். காலத்திற்கேற்ற கருத்தைக் குறளில் காண விரும்பி, சில இடங்களில் புதிய உரை கண்டுள்ளார். நாகை தண்டபாணியார் அறத்துப்பாலுக்கு மட்டும் விருத்தியுரை கண்டுள்ளார். பெரும்பான்மையான இடங் களில் பரிமேலழகர் உரைக்கு விளக்கம் கூறி, சில இடங்களில் வேறுரை கண்டுள்ளார். வ. உ. சி. யின் உரை, அவர் மேற்கொண்ட புதிய பாடங்களாலேயே கருத்து வேறுபாடு உடையதாய் அமைகின்றது.

திருச்சி வரதராசன் எழுதியுள்ள விளக்கவுரை எளிமை யானது; சிறிதளவு தமிழறிவு உடையவரும் படித்துப் பயன் பெறும் தகுதியுடையது.

செய்யுள் வடிவில் திருக்குறளுக்கு உரைகள் தோன்றி யுள்ளன. குட்டிக் குறள், திருக்குறள் அகவல், திருக்குறள் இசைமாலை முதலிய நூல்கள் செய்யுள்வடிவ உரைகள்.

பள்ளி மாணவர்களுக்கும் பொதுமக்களுக்கும் பயன்படும் வகையில் திருக்குறள் உரைகள் பல தோன்றின. கா. சுப்பிர மணியபிள்ளை, அருணாசலக் கவிராயர், டாக்டர் மு. வரதராசனார், டாக்டர் சுப்பிரமணிய சாஸ்திரியார் ஆகியோர்

எளிய பொழிப்புரை எழுதித் திருக்குறளைப் பரப்பினர். டாக்டர் வ. சுப. மாணிக்கம், பால்வண்ணனார் ஆகிய இருவரும் எழுதிய உரைகளும் இத்தன்மையானவையே.

நாமக்கல் கவிஞர், ந. சி. கந்தையா பிள்ளை, ஞானபூபதி ஆகியோருடைய உரைகள் காலத்திற்கேற்ற உரைகள்; வாழ்க்கை அனுபவத்தை ஒட்டி இயற்றப்பட்ட உரைகள்.

தேவ நேயப்பாவாணரின் மரபுரை, பல நல்ல புதிய விளக்கங்களைக் கொண்டுள்ளது. பின்னங்குடி சா. சுப்பிரமணிய சாஸ்திரி எழுதிய உரை வடமொழிக் கருத்துகளை, வலியத் திணிக்கின்றது.

புலியூர்க்கேசிகன் புதுவுரை, பொழிப்புரையாய்-எளிய உரையாய் விளங்குகின்றது.

புலவர் குழந்தை, பாரதிதாசன் இருவரும் பகுத்தறிவுக் கொள்கையைப் பரப்பவும், வடமொழிக் கொள்கையை எதிர்க்கவும் திருக்குறளுக்குப் புதிய உரைகள் எழுதினர்; தமிழ் மக்களிடையே சில குறள்களுக்குப் புதிய உரை கூறி, ஆராய்ச்சி மனப்பான்மையை வளர்த்தனர். 'தெய்வந்தொழாஅள்,' 'ஆபயன் குன்றும்' ஆகிய குறட்பாக்களின் மீது இதற்குமுன் கண்டிராத புதிய விளக்கம் சுமத்தப்பட்டது.

இத்தனை உரைகள் தோன்றியும், இன்னும் புதிய உரைகள் காணும் முயற்சியும் ஆர்வமும் தமிழகத்தில் உள்ளன. அவற்றை ஊக்குவிப்போரும் உள்ளனர்; ஆவலோடு வரவேற்கும் மக்களும் உள்ளனர்.

## 2. உரை வேற்றுமை

திருக்குறளுக்குப் பல உரைகள் தோன்றியிருப்பதால் அவற்றை ஒப்பிட்டு நோக்குவது இன்பம் பயக்கும் ஆராய்ச்சி யாகும். ஒரு சொல்லுக்குப் பலரும் கூறும் பொருள், ஒரு தொடருக்குத் தரும் விளக்கம், ஓர் உவமைக்குத் தரும் நயவுரை ஆகியவற்றை இங்கே காண்போம்:

**ஒருவந்தம்**

**பரிமேலழகர்:** ஒருவந்தம் — ஒருதலை *(563)*, நிலைபேறு *(593)*.

**காலிங்கர்:** ஒரு வந்தம்—பெருஞ்செல்வம் *(563)*.

**வெறுக்கை**

**பரிமேலழகர்:** வெறுக்கை—மிகுதி *(600)*.

**காலிங்கர்:** வெறுக்கை—செல்வம் (600).

"வெறுக்கை என்பது செல்வம் என்றும், வெறுப்பு என்றும் சொல்லுவாரும் உளர்."

**இயல்புடைய மூவர்**

**இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்**
**நல்லாற்றின் நின்ற துணை. (41)**

**பரிமேலழகர்:** இயல்புடைய மூவர் பிரமசாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி என்கிற மூவர்.

**திரு. வி. க:** பண்பு வாய்ந்த ஊர் மன்றத் தலைவராகிய மூவர்க்கும்: திருவள்ளுவர் மூவேந்தர் நினைவுடன் மூவர்க்கும் என்று குறித்திருக்கலாம்.

**வ. உ. சி:** இயல்பாக உடைய தாய், தந்தை, தாரம் என்னும் மூவர்.

**குழந்தை:** துறந்தார், துவ்வாதார், இறந்தார் என்னும் மூவர்.

**நாமக்கல்லார்:** உறவினர், நண்பர்கள், ஏழைகள் என்ற மூவர்.

**உவமை**

**இனிய உளவாக இன்னாத கூறல்**
**கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.**

**பரிமேலழகர்:** இனிய கனிகளும் தன் கைக்கண் உளவாயிருக்க அவற்றை நுகராது இன்னாத காய்களை நுகர்ந்தனோடு ஒக்கும்.

**மணக்குடவர்:** பழமும் காயும் ஓரிடத்தே இருக்கக் கண்டவன் பழத்தைக் கொள்ளாது காயைக்கொண்ட தன்மைத்து.

**பரிதியார்:** நல்ல பழம் இருக்க வேப்பங்காயைத் தின்பதற்கு ஒக்கும்.

**காலிங்கர்:** நம் இல்லகத்து இனிய கனி உளவாய் இருப்ப வன்காயைப் புறத்துச்சென்று நுகர்ந்து விரும்பினாற் போலும்.

# 3. ஆய்வுரை

திருவள்ளுவரின் உள்ளக் கருத்தை அறிய, கால இடை வெளியைக் கடந்து செல்ல வேண்டியுள்ளது; வாழும் இடத்தின் சுற்றுச்சூழலை—பழக்கவழக்கங்களைக் கடந்து சென்று கடந்த காலத்துடன் இணைய வேண்டியுள்ளது. திருவள்ளுவர் காலத்துச் சொற்களுக்குப் பொருளும், அவர் காலத்து மொழியமைப்பின் இயல்பும் அறிய வேண்டியுள்ளது.

அடுத்து வருகின்ற பகுதிகளில், சில குறள்களுக்கு உண்மையான பொருளைத் தேடும் முயற்சியில் ஈடுபடுவோம்; முயற்சியில் வெற்றி பெற்று, திருவள்ளுவர் அருகே சென்று அவரைக் கண்டுகளிப்போம். அவர் வாக்கின் பொருளறிந்து போற்றுவோம்.

## 1. பெய்யெனப் பெய்யும் மழை

"மலையிலே வாழ்கின்ற மக்கள், அறநெறிக்கு மாறாக நடக்கின்றனர்; தீய செயல்களைப் புரிகின்றனர்! அதனால், வள்ளிக் கிழங்கு நிலத்திற்குள் இறங்கி முற்றி விளையப்போவதில்லை! மலைமீது தேனீக்கள், தேன் திரட்டிக் கூடு கட்டப் போவதில்லை! தினைக்கொல்லைகளில் தினைக்கதிர் முற்றிவிளையப் போவதில்லை!" என்று ஒரு குறிஞ்சிப் பெண் கூறுகின்றாள்.

இது கலித்தொகைப் பாடல் ஒன்று காட்டும் இனிய காட்சி (*கலி. 39; 42-48*).

மக்கள் தவறு செய்கின்றபோது—அறத்தை மதிக்காமல் வாழும்போது இயற்கை தண்டிக்கும் என்ற நம்பிக்கை இதனால் வெளிப்படுகின்றது.

### 1

பன்னிரண்டு ஆண்டுகள் வனவாசம் முடிந்து, மறைந்து வாழ்ந்த கொண்டிருக்கின்றனர் பாண்டவர்கள். 'அவர்கள் எங்கே இருக்கின்றனர்? என்ன கோலத்தில் மறைந்திருக்கின்றனர்? என்ன செய்துகொண்டு இருக்கின்றனர்?' என்று அறிய விரும்புகின்றான், துரியோதனன். அதனால், பலவேறு நாடுகளுக்கு ஒற்றர்களை அனுப்பி ஆராய்கின்றான். ஒற்றர்கள் திரும்பிவந்து "எங்கும் பாண்டவர்களைக் காணவில்லை!" என்று கூறி விடுகின்றனர்.

உடனே வீடுமர் "பாண்டவர்கள் வாழ்கின்ற நாட்டில் மழை தவறாமல் பெய்யும்; அதனால் விளைச்சல் மிகுதியாக இருக்கும். மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்வர். சென்று தேடிப்பாருங்கள்!" என்று தேடுவதற்கு உபாயம் கூறினார்.

அவ்வாறே ஒற்றர்கள் சென்று தேடினர். அவர்களில் ஒருவன், "விராட நாட்டில் நல்ல மழை பெய்து, வளம் கொழிக்கிறது. மக்கள் மகிழ்கின்றனர்" என்று கூறுகின்றான் (*வில்லி. நிரை மீட்சி—5, 6*).

பாண்டவர்கள், விராட நாட்டில் இருப்பதை அறிந்து கொள்ளுகின்றான் துரியோதனன்.

நல்லவர் வாழ்கின்ற நாட்டில், மழை தவறாமல் பெய்து வளங்கொழிக்கும் என்ற கருத்தை, பாரதக் கதை அறிவிக்கின்றது (நாடு கரந்துறை-37).*

ஔவை மூதாட்டி மூதுரையில் (10),

**நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு**
**எல்லார்க்கும் பெய்யும் மழை**

என்று பாடியுள்ளார்.

**2**

மன்னவன் செங்கோல் தவறினால் மழைபெய்யாது என்ற கருத்து, காப்பியங்களில் உள்ளது.

**மணிமேகலை:**

**கோன்நிலை திரிந்திடின் கோள்நிலை திரியும்**
**கோள்நிலை திரிந்திடின் மாரிவறங் கூறும். (7:8,9)**

**வானம் மும்மாரி பொழிக; மன்னவன்**
**கோள்நிலை திரியாக் கோலோன் ஆகுக. (1:33,34)**

**சிலப்பதிகாரம்:**

செங்குட்டுவன் கூற்று:

**மழைவளம் கரப்பின் வான்பே ரச்சம்**
**பிழையுயிர் எய்தின் பெரும்பே ரச்சம்**
**குடிபுர வுண்டும் கொடுங்கோ லஞ்சி**
**மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்**
**துன்பம் அல்லது தொழுதகவு இல். (25:100–104)**

**சீவக சிந்தாமணி:**

**கோள்நிலை திரிந்து நாழி**
**குறைபடப் பகல்கள் மிஞ்சி**
**நீள்நில மாரி இன்றி**
**விளைவு அஃகி, பசியும் நீடி,**
**பூண்முலை மகளிர் பொற்பின்**
**கற்பழிந்து அறங்கள் மாறி**
**ஆணைஇவ் வுலகு கேடாம்**
**அரசுகோல் கோடின் என்றான். (253)**

* விராட பருவம் படித்தால் மழை பெய்யும் என்ற நம்பிக்கை இன்றும் மக்களிடம் உள்ளது.

உ.௨௮.

3

ஒழுக்கம் தவறாத மகளிர்க்காக மழைபெய்யும் என்பதைப் பின் வருகின்ற செய்யுட் பகுதிகள் அறிவிக்கின்றன:

அருமழை தரல்வேண்டின் தருகிற்கும் பெருமையளே.

(கலி. 39–6)

மழைவளம் தருஉம்
பெண்டி ராயின் பிறர்நெஞ்சு புகாஅர்.

(மணி. 22; 45, 46)

வான்தரு கற்பின் மனையறம் பட்டேன்.

(மணி. 22; 53)

தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை என்றஅப்
பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்.

(மணி. 22; 65–70)

**மூன்று மழை:**

விவேக சிந்தா மணி, முன்னர்க்கூறிய சான்றோர் செங்கோல் மன்னர் கற்புடை மகளிர் ஆகிய மூவர்க்காகவும் தவறாமல் மாதம் மூன்று மழை பெய்யும் என்று கூறுகின்றது:

வேதம் ஓதிடும் வேதியர்க்கு ஓர்மழை
நீதி மன்னர் நெறியினுக்கு ஓர்மழை
மாதர் கற்புடை மங்கையர்க்கு ஓர்மழை
மாதம் மூன்று மழையெனப் பெய்யுமே!

(விவேக–21)

இந்தச் செய்திகளை மனத்தில் கொண்டு,

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யனெப் பெய்யும் மழை

என்ற குறளுக்கு விளக்கம் காண வேண்டும்.

"தெய்வத்தைத் தொழாமல் கணவனைத் தொழுபவள், தேவையானபோது பெய் என்று என்று சொன்னவுடனே பெய் கின்ற மழையைப் போன்றவள்" என்ற புதுமைக் கருத்து வலிமிழந்து போகின்றது.

## 2. அனிச்சமலர்

அனிச்சம், திருவள்ளுவர் உள்ளம் கவர்ந்த மலர். அதன் மென்மை அவரைப் பெரிதும் கவர்ந்துள்ளது. அவர் தம் நூலில்

அந்த மலரை நான்கு குறட்பாக்களில் (90, 111, 115, 1120) போற்றிக் கூறியுள்ளார்.

சங்க நூல்களில் அனிச்ச மலர், கபிலரால் குறிஞ்சிப் பாட்டில் மட்டுமே கூறப்பட்டுள்ளது. அதிலும், விளக்கமான வருணனை இல்லை.* ஆதலின் அனிச்சமலரின் வண்ணம் வடிவம் பற்றி அறிய முடியவில்லை. அது கொடிப் பூவா? கோட்டுப் பூவா? நீர்ப் பூவா? தெரியவில்லை!

1938-ஆம் ஆண்டில், வெளிவந்த கரந்தைக் கட்டுரைகள் என்னும் ஆய்வு நூலில், மா. ந. சோமசுந்தரம்பிள்ளை அனிச்ச மலர் பற்றி அறிவித்துள்ளார். அவர் தந்துள்ள விளக்கம் பின் வருமாறு:

"இவ் அனிச்ச மலர், இன்னது எனப் பலரும் அறியார். புதற் பூ என்பாரும் நீர்ப் பூ என்பாரும் உளர்.

அது கோட்டுப் பூவே.

வேதாரணியத்தை அடுத்த ஊர் (Railway Station) ஆகிய குறவப்புறம் என்பதன் மேற்பால், ஐயனார் கோயில் தோட்டத்தில் நிறைய உள்ளன.

கிளையும் இலையும் சிறு சண்பகம்போல்வது. மாசி பங்குனியில் நீர்க்கடம்பு போல், கொத்துக் கொத்தாகப் பூக்கும். மாலையில் மலரும். விடியற்காலத்தில் மலர்கள் பொடியாய் உதிர்ந்து கிடக்கும். காய் முற்றில், வங்குஸ்தான் காய்போல் வலிதாய் இருக்கும். மலர்கள் வெண்கடம்புபோல் நறுமணம் உள்ளதாக இருக்கும். செவந்த கோடுகள் படர்ந்த வெள்ளைப் பூக்கள்.

கோயில் சிறு தேருக்கு (சப்பரத்துக்கு) அணியப்படும். அரசர் கோயிலில் அணையில் பரப்பப்படும்.

இம் மலரை நேரில் பார்த்த அறிதல் வேண்டும்."

இவ்வாறு சோமசுந்தரம் பிள்ளை கூறியுள்ளார்.

இன்று அந்த இடத்திலும் அனிச்ச மலரைக் காண முடியாது! ஏனெனில் அங்கே இருந்த ஒரே ஒரு அனிச்ச மரமும் பட்டுப் போய்விட்டது!

## 3. வற்றல் மரம்

அகநானூறு 'வற்றல்' என்னும் ஒரு வகை மரத்தைக் குறிப் பிடுகின்றது. கயமனார் பாடிய பாலைப் பாட்டில்,

* சீவக சிந்தாமணி, பெருங்கதை ஆகியவற்றில் அனிச்சமலர் பற்றிய குறிப்புகள் உள்ளன.

**வேர்முழுது உலறி நின்ற புழற்கால்**
**தேர்மணி இசையின் சிள்வீடு ஆர்க்கும்**
**வற்றல் மரத்த பொன்தலை ஓதி**

என்று வற்றல் மரம் குறிப்பிடப்படுகிறது. "வேர் முதல் முழு மரமும் வற்றி நின்ற துளைபட்ட அடியினையுடையதும், தேரின் மணிபோலச் சிள்வீடு எனும் வண்டுகள் ஒலிப்பதும் ஆகிய, வற்றல் என்னும் மரத்தினிடத்தவாய பொன்னிறம் வாய்ந்த தலையை யுடைய ஓந்தி" என்பது ந.மு. வேங்கடசாமி நாட்டார் உரை. பிற் குறிப்பில் அவர், "வற்றல்—ஒரு வகை மரம்" என்றும் குறிப்பிட்டுள்ளார்.

வற்றல்மரம் என்பதற்கு வற்றிய மரம், பட்டுப்போன மரம், காய்ந்து போன மரம் என்றும் பொருள் கொள்ள இடமிருக்கின்றது. ஆனால், பட்டுப்போன மரத்தில் சிள்வீடு என்னும் வண்டுகள் தங்கி ஒலிப்பது இல்லை; ஓந்தி முதலிய உயிர்கள் அதில் வாழ்வதும் இல்லை. எனவே, 'வற்றல்' என்பது ஒரு வகை மரம் என்பது பொருத்தமானதாகும்.

திருவள்ளுவர் தம் நூலில், 'வற்றல்' மரத்தைக் குறிப்பிடுகின்றார்:

**அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரந்தளிர்த் தற்று.** **(78)**

மக்களைத் திருவள்ளுவர் மரங்களோடு பல இடங்களில் ஒப்பிட்டு உவமை கூறியுள்ளார். உலகிற்கு நன்மை செய்யும் பண்பாளனிடம் உள்ள செல்வத்திற்கு,

**பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால்** **(216)**
**மருந்தாகித் தப்பா மரத்தற்றால்** **(217)**

என்று உவமைகளைக் கூறியுள்ளார். பிறர்க்குப் பயன் படாதவன் செல்வத்திற்கு 'நடு ஊருள் நச்சுமரம் பழுத்தற்று' என்று உவமை கூறுகின்றார்.

பழுத்த மரமும், மருந்து மரமும் தழைத்து, பூத்து, காய்த்து நிற்பதோடு மக்களுக்கும் பயன்படுகின்றன; நச்சு மரம் பழுத்தும் பிறர்க்குப் பயன்படாமல் உள்ளது என்ற கருத்துகள் எவற்றை விளக்குகின்றன? மனிதன் தான் மட்டும் உண்டு, உடுத்து, கிளைத்து, மலர்ந்து மகிழ்வது பயனற்ற வாழ்க்கை. பழுத்த மரம் போல—மருந்து மரம் போல, பிறர்க்கு நன்மை செய்து வாழ்வதே மனிதனின் கொள்கையாக இருக்கவேண்டும்.

அன்பில்லாதவனுடைய வாழ்வு பயனற்றது. தான் மட்டும் உண்டு உடுத்து மகிழ்வதால், யாருக்கு என்ன பயன்? அவனால்

யார் நன்மை பெறுவர்? பாலை நிலத்தில் வற்றல் என்னும் ஒருவகை மரம் தளிர்த்து நின்றால் யாருக்கு அதனால் பயன் உண்டு? வற்றல் மரம் தான் மட்டும் தளிர்க்கின்றது; வாழ்கிறது. பாலை நிலத்தில் யாருக்கும் பயன் படாமல் நிற்கிறது. அன்பகத்தில் இல்லா உயிர் வாழ்க்கையும் வற்றல் என்னும் மரத்தின் வாழ்க்கையைப் போன்றதே.

**அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்**
**வற்றல் மரந்தளிர்த் தற்று**

என்ற குறள், அன்பில்லா வாழ்க்கையை, பாலை நிலத்தில் வற்றல் என்னும் மரம் தளிர்த்து நிற்பதற்கு ஒப்பிடுகின்றது.

இக்குறளுக்குப் பரிமேலழகர் உள்ளிட்ட உரையாசிரியர்கள் அனைவரும் வேறு உரை கூறுகின்றனர்; வற்றல் மரம் என்பதற்குப் பின்வருமாறு பொருள் கூறுகின்றனர்:

வற்றலாகிய மரம்—பரிமேலழகர்
உலர்ந்த மரம்—மணக்குடவர்
பட்டமரம்—பரிதியார்
வறலாகிய மரம்—காலிங்கர்

தளிர்த்தற்று என்பதற்குப் பின்வருமாறு விளக்கம் எழுதுகின்றனர்.

(தளிர்க்காது என்று பொருளில்) “கூடாது என்பதாம்” —பரிமேலழகர்.

“தளிர்த்தற்குக் காரணம் இன்மையால் தளிர்க்காது” - மணக்குடவர்.

“வற்றலாகிய மரம் பின்பு தளிர்த்த அத்தன்மை போல, இவனுக்கு வெறும் தோற்றமே அன்றிப் பின் ஆக்கம் இல்லை என்பது கருத்து” —காலிங்கர்.

தளிர்த்தற்று என்பதற்கு இவர்கள் கூறும் உரை போதிய விளக்கம் இன்றி உள்ளது.

எனவே, வற்றல் என்பதற்குப் பட்டுப்போன மரம் என்று பொருள் கொள்ளாமல், வற்றல் என்னும் ஒரு வகை மரம் என்று பொருள்கொள்ளுதல் சிறந்ததாகும். அவ்வாறு கொள்ளாமல் பழங்கால உரையாசிரியர்களைப் போற்றி அவர்கள் உரையையே கொள்ளுவோம் என்றால், அகநானூற்று உரையைத் திருத்த வேண்டும்!

## 4. கவரிமா

சங்கப் புலவர்கள் தம் பாடல்களில் தமிழ்நாட்டுச் செடி கொடி மரம் பறவை விலங்கு ஆகியவை பற்றிய உண்மையான

செய்திகளை, தெளிவாக அறிந்து விளக்கமாகப் பாடியுள்ளனர். அவை இன்றைய அறிவியல் கருத்துகளோடு பொருத்தமாய் உள்ளன என்பதை ஆராய்ச்சி அறிஞர் பி. எல். சாமி, செந்தமிழ்ச் செல்வியில் கட்டுரைகளின் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார்.

அவரது கட்டுரைகள், பண்டை இலக்கியத்தைத் தெளிவாக அறிந்துகொள்ளப் பெரிதும் உதவுகின்றன. அவரால் விளக்கம் பெற்ற அரிய செய்திகளில் ஒன்று 'கவரிமா'வைப் பற்றியது.* அச் செய்தியால்,

**மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்**
**உயிர்நீப்பர் மானம் வரின் (969)**

என்ற குறட்பா இனிது விளங்குகின்றது.

கவரி, தமிழ்நாட்டு விலங்கு அன்று. வடநாட்டில்—இமயமலையில் வாழ்கின்ற விலங்குகளில் ஒன்று. இதனைச் சங்கப் புலவர்கள்,

**நரந்தை நறும்புல் மேய்ந்த கவரி,**
**.... பிணையொடு வதியும்**
**வடதிசை யதுவே வான்தோய் இமயம்**

**(புற:132)**

**கவிர்ததை சிலம்பில் துஞ்சும் கவரி,**
**... நரந்தம் கனவும்**
**... பேரிசை இமயம்**

**(பதிற்: 11, 21–23)**

என்று பாடியுள்ளனர். 'இமயமலையில் காட்டுப் பகுதியில் நரந்தம் என்னும் மணமுள்ள புல்லை மேய்ந்து வாழ்கின்ற கவரி' என்று கூறியுள்ளனர்.

மா என்ற சொல், எல்லா விலங்கையும் குறக்கின்ற பொதுச் சொல். கவரி, விலங்கு ஆதலின் அதனைக் கவரிமா என்றனர். காலப்போக்கில் கவரிமா என்ற சொற்றொடர், 'கவரிமான்' ஆகி விட்டது. கவரியை, மான் இனத்தில் ஒன்றாகக் கருதிவிட்டனர்!

கவரிமா, 'யாக்' (Yak) என்ற பெயருடன் வாழ்ந்து வருகின்றது. கலைக்களஞ்சியம் *(3:பக்-357, 358)* கவரிமாவைப் பற்றிப் பின் வருகின்ற செய்திகளைக் கூறுகின்றது:

"**கவரிமா** (Yak): இது திபெத்து நாட்டில், மிக உயர்ந்த மலைகளில் வாழும் எருது வகையாகும். இது, உலகத்தில் மிகக் குளிர்ந்தவையும் மிக உயர்ந்தவையுமான மலைகளில் வாழும்

---

* சங்க இலக்கியத்தில் — விலங்கின விளக்கம் (1970) பக்.454, 464.

பிராணிகளில் ஒன்று. இது, குளிர் காலத்தில்கூட 14000—20000 அடிக்குக் கீழே வருவதில்லை.

இந்தியாவில், லடாக் பகுதியில் 'சங்க செனமோ' பள்ளத் தாக்கில் மட்டுமே காணப்படுகிறது.

இதில் காட்டுக் கவரிமா, வீட்டுக் கவரிமா என இரு வகைகள் உண்டு.

**காட்டுக் கவரிமா:** இது 6 அடி உயரமும் 1200 இராத்தல் எடையும் இருக்கும். கொம்பு 25–30 அங்குல நீளம் உடையது. இது பெரிய விலங்கு. உயர்ந்த திமிலும், நேரான முதுகும் குட்டையான தடித்த கால்களும் உடையது. ஆனால், எப்போதும் மூக்கு ஏறக் குறையத் தரையைத் தொடும் அளவு தலை தொங்கியே இருக்கும்.

கவரிமா உடல் முழுவதும் மிகக் கரிய அல்லது கரும் பழுப்பான மயிர் மூடி இருக்கும். தோள் விலா வால் ஆகியவற் றிலுள்ள மயிர் நீளமாயும் பட்டுப்போல் மிருது வாயும் இருக்கும். சில வேளைகளில் அது தரையைத் தொட்டுக் கொண்டும் இருக்கும்.

**வீட்டுக் கவரிமா:** காட்டுக் கவரியும் மங்கோலிய மாடும் சேர்ந்து வீட்டுக் கவரிமா உண்டாய் இருக்கிறது.

இதன் நெஞ்சிலும் வாலிலும் வெள்ளை நிறம் காணப்படும். கொம்புகள் பெரியனவாக இரா. இதன் மயிர், காட்டுக் கவரி மாவின் மயிரைவிட நீளமாய் இருக்கும் வாலில், மயிர் அதிகமாய் இருக்கும். இதன் வாலின் குஞ்சமே இந்தியாவில் கவரியாகவும் சாமரமாகவும் பயன்படுகிறது. சீனர்கள் இதற்குச் செஞ்சாயம் ஊட்டி தொப்பிகளில் அணிகிறார்கள்."

இன்றும் இமயமலையில் வாழ்ந்துவரும் கவரிமாவைப் பற்றிக் கலைக் களஞ்சியம் கூறுகின்ற செய்தி, சங்கப் புலவர்கள் பாடியுள்ள கருத்துடன் பெரிதும் ஒத்துள்ளது.

1. கவரிமாவைப் பற்றி முன்னர்க் காட்டிய இரண்டு இடங் களிலும் காட்டுக் கவரிமா கூறப்பட்டுள்ளது.

2. வீட்டுக் கவரிமாவின் வெண்மையான வால் மயிரைக் கொண்டு வந்து சாயம் ஊட்டி, பழந்தமிழ்மக்கள் அழகுப் பொருளாய்ப் பயன்படுத்தினர். இன்று சீனர் கவரி மயிருக்குச் செஞ்சாயம் ஊட்டித் தொப்பிகளில் அணிவது போல, பழங்காலத் தமிழர்கள் கவரி மயிருக்குச் சாயம் பூசி, குதிரைகளின் தலையில் குஞ்சம் கட்டினர். இதனைப் பதிற்றுப் பத்து 'ஆய் மயிர் கவரிப் பாய்மா' என்று குறிப்பிடுகின்றது. முற்காலத்து மகளிரில் சிலர், குறைவான தம் கூந்தலை அழகுபடுத்தக் கருமை நிற

மூட்டிய கவரி மயிரைப் பயன்படுத்தினர். இதனை, 'கவரி முச்சிய கார்விரி கூந்தல்' என்று பதிற்றுப் பத்து (43-I) குறிப்பிடுகின்றது. கவரி, காலப்போக்கில் சவரி (ஜவுரி) ஆயிற்று.* நிறம் பூசாத வெள்ளைக் கவரி மயிர், சாமரமாகப் பயன்பட்டது.

3. கவரிமா, குளிர் மிகுந்த மலைப்பகுதிகளில் மட்டுமே வாழ்கிறது. அங்குள்ள கடுங்குளிரைத் தாங்கிக்கொள்ள அதன் உடல் முழுதுமுள்ள மயிர்த்திரள் பயன்படுகின்றது. அந்த மயிர்த் திரட்சியை வெட்டிவிட்டால் கவரிமா குளிர்தாங்காமல் இறந்து விடும். நம் நாட்டில் மயிர் அடர்ந்த ஆடு (குறும்பாடு)களின் மயிரைக் கோடை காலத்தில்தான் வெட்டுவர். அப்போதும், எதிர்பாராத வகையில் திடீரென்று வரும் மழை, பனிக்காற்று ஆகியவை தாக்கினால் சில ஆடுகள் இறந்துவிடுகின்றன. குளிர் மிகுந்த இடத்தில் வாழ்கின்ற கவரிமா தன்னைக் காக்கும் கவசம் போன்ற மயிர்த்திரளை இழந்துவிடின் உயிர் வாழாது.

திருவள்ளுவர் கவரிமாவைப் பற்றிய உண்மையான—இயற்கைக்குப் பொருத்தமான செய்தியை அறிந்து அதனை உவமையாகக் கூறியுள்ளார்:

"மயிர் நீப்பின் (இழந்தால்) உயிர் வாழாத கவரிமாவைப் போன்றவர், மானத்தை இழக்க வேண்டிய நெருக்கடியான நிலை ஏற்பட்டால் உயிரைவிடுவர்"

| பொருள் | | உவமை |
|---|---|---|
| மானமுடையார் | — | கவரிமா |
| மானம் | — | மயிர்த்திரள் |
| மானம் இழத்தல் | — | மயிர் இழத்தல் |

**பொதுத்தன்மை :** உயிர்விடுதல்.

இவ்வாறு திருவள்ளுவர் 'கவரிமா'வை மிகப் பொருத்தமாக உவமை கூறியுள்ளார். ஆனால், திருக்குறள் உரைகள் இந்த உவமையின் பொருத்தத்தை விளக்கவில்லை. திருக்குறள் உரையாசிரியர்கள் காலத்தில் 'கவரிமா'வைப் பற்றிய உண்மையான செய்தி மறைந்து உருவாகிக் குழப்பம் ஏற்பட்டது. ஆதலின் அவர்கள் பின் வருமாறு கற்பனைச் செய்திகளைப் பரப்பிவிட்டனர்.

**பரிமேலழகர்:** தன் மயிர்த் திரளின் ஒரு மயிர் நீங்கினாலும் உயிர் வாழாத கவரிமாவை ஒப்பார், உயிர் நீங்கத் தான் மானம் எய்தும் எல்லைவரின், அதனைத் தாங்காது இறப்பர்.

* கண்பு—சண்பு—சம்பு—ஜம்பு (கோரை); சேரலர்—கேரளர்; கைப்பாணி (கைத்தாளம்) சப்பாணி.

**மணக்குடவர்:** ஒரு மயிர் நீங்கின் உயிர் வாழாத கவரிமாவைப் போன்ற மானமுடையார், மானம் அழியவரின் **உயிர்** விடுவர்.

**பரிப்பெருமாள்:** ஒரு மயிர் நீங்கின் உயிர் வாழாத கவரிமாவைப் போன்ற மானமுடையார், அம் மானம் அழியவரின் உயிர் விடுவார்.

**பரிதியார்:** ஒரு மயிர் சிக்கினால் பிராணனைவிடும் கவரிமான் போல, மானம் வந்தால் பிராணனையும் விடுவர் நல்லோர்.

**காலிங்கர்:** தனக்கு அலங்காரமாகிய மயிர்க் கற்றையின் ஒரு மயிர் போகின் மானித்துப்பின் உயிர் வாழாது அம் மயிர் துவக்குண்ட இடத்துநின்று, வற்றிவிடூஉம் கவரிமா அன்ன கட்டுப்பாடுடையார் தம் குடிமையின் சிறிது நீங்கி மானிப்பதோர் மானம் வந்துறின் அப்பொழுதே தம் உயிர் துறப்பர்.

உரையாசிரியர்கள், குறட்பாவில் இல்லாத சில செய்திகளை வலிந்து புகுத்தியுள்ளனர்:

1. 'கவரிமா' என்று திருவள்ளுவர் கூறியதைக் **'கவரிமான்'** என்று கருதிவிட்டார், பரிதியார்.

2. 'மயிர்' என்று திருவள்ளுவர் பொதுவாகவே கூறியுள்ளார். ஆனால், உரையாசிரியர்கள் ஒரு மயிர் என்று கருதிவிட்டனர்.

3. வாழா(த) கவரிமா - என்பதற்கு, 'குளிர்தாங்க முடியாமல் இறந்துபோகின்ற - வாழ முடியாத' என்று கொள்ளாமல், 'ஒரு மயிரை இழந்த மானக்கேட்டால் அந்த இடத்திலேயே உயிர்விடு கின்ற' என்று பொருளுரைத்தனர்.

4. கவரிமா, மானம் மிக உடைய விலங்கு என்று கருதினர்.

இடைக்காலத்துப் புலவர்களும் இவ்வாறே கருதிவிட்டனர். திருத்தக்க தேவர் 'மானக்கவரி' (சிந்-2120) என்றார். கம்பர் 'மானமா' என்றார். பெருங்கதை *(35. 233, 4)*,

> **வான்மயிர் துடக்கின் தானுயிர் வாழாப்**
> **பெருந்தகைக் கவரி**

என்று கூறியுள்ளது.

5. தன் உடம்பில் உள்ள மயிரில் ஒன்றேனும் உதிராமல் வாழ்கின்ற விலங்கு எதுவும் இருக்க முடியாது. (1) இயற்கையாகவே விலங்கின் மயிர் உதிரும். (2) விலங்கு தன் உடம்பைத்தினவுபோகத் தேய்த்துக் கொள்ளும் போதும், வேறு விலங்கோ பொருளோ அதனை உராய்கின்ற போதோ தடவிக் கொடுக்கும் போதோ

மயிர் உதிர்வது இயல்பு. (3) சிறியதாய் உள்ள விலங்கு (குட்டி) வளர வளரப் பழையமயிர் உதிர்ந்து புதிய மயிர் வளரும். (4) பிறந்தபோது உள்ள நீளமான மெல்லிய மயிர், விழுந்து வலிமையான மயிர் முளைக்கும். ஆதலின், தன் மயிர் உதிர்வதற்கு வருந்தி உயிர்விடுகின்ற விலங்கு இருக்க முடியாது.

6. காலிங்கர், கவரிமாவிற்கு அலங்காரமான மயிர்க்கற்றை இருப்பதாய்க் கூறுகின்றார். இது, அவ்விலங்கின் எந்த உறுப்பில் உள்ளது என்று அவர் கூறவில்லை. விலங்கியலார், கவரிமாவின் வாலில் வெண்மையான மயிர்க்கற்றை இருப்பதாய்க் குறிப்பிடு கின்றனர். அந்த விலங்கைப் படம் பிடித்துக் காட்டுகின்றனர். கவரி வாலின் மயிர்த்திரள், காலிங்கர் கூறியிருப்பதுபோல அலங் காரமாக இல்லை. அதனைக் கண்டு (பின்புறத்தில் இருப்பதால்) கவரிமா, மகிழவும், மானத்திற்கு அடையாளமாகக் கருதவும் இயலாது.

இவற்றை நோக்கும்போது, உரையாசிரியர்கள் கவரி மாவைப் பற்றிக் கூறியுள்ள செய்திகள் யாவும் உண்மைக்கு மாறானவை; இயற்கைக்குப் பொருந்தாதவை என்பது விளங்கும்.

## 5. பாயிரம்

திருக்குறளில் உள்ள முதல்நான்கு அதிகாரங்கள் பாயிரம் எனப்படும். திருவள்ளுவமாலையில் உள்ள சில பாடல்கள், அந் நான்கு அதிகாரங்களையும் ‘பாயிரம்’ என்று குறிப்பிடுகின்றன.

திருக்குறள்பாயிரம், ஆராய்ச்சி உலகில் பல ஐயங்களைக் கிளப்பியுள்ளது. பாயிரம் பற்றிப் பல வினாக்கள் தோன்றி யுள்ளன; காலந்தோறும் அந்த வினாக்களுக்கு விடைகள் பிறந்துள்ளன.

பாயிரத்தைப் பற்றி ஆராய்ந்தவர் கூறியுள்ள கருத்துகள் கீழே தரப்படுகின்றன:

### வ. உ. சிதம்பரனார்

“திருக்குறட் சுவடிகளில், பாயிரத்தின் முதல் மூன்று அதிகாரங்களாகக் காணப்படும்,

கடவுள் வாழ்த்து
வான் சிறப்பு
நீத்தார் பெருமை

என்னும் மூன்று அதிகாரப்பாக்களும் திருவள்ளுவரால் இயற்றப் பட்டவை அல்ல என்றும், அவை திருவள்ளுவர் காலத்திற்குப் பிற்காலமும் முந்திய உரையாசிரியர்கள் காலத்திற்கு முற்காலமும்

ஆகிய இடைக்காலத்துப் புலவர் ஒருவரால் பாடிச்சேர்க்கப் பட்டவை என்றும் யான் கருதுகிறேன்.

அவ்வாறு யான் கருதுவதற்குரிய காரணங்களிற் சில:

1. இம்மூன்று அதிகாரங்களிலும் காணப்படும் பாக்கள் நூலின் பாக்களைப்போல, சொற்செறிவும் பொருட் செறிவும் உடையன அல்ல.

2. இப் பாக்களில், பலவற்றின் பொருள்கள் பல தடை களுக்கு இடம் கொடுக்கின்றன.

3. மெய்யுணர்தல், துறவு என்னும் அதிகாரங்கள் நூலின்கண் இருக்கின்றமையால், கடவுள் வாழ்த்து, நீத்தார் பெருமை என்னும் அதிகாரங்களைப் பாயிரத்தில் கூற வேண்டுவதில்லை.

4. மெய்யுணர்தலில் கடவுளுக்குக் கூறியுள்ள இலக்கணங் களையும் கடவுள் வாழ்த்தில் கடவுளுக்குக் கூறியுள்ள இலக் கணங்களையும் இயற்றியவர் ஒருவர் அல்லர் என்பது நன்றாக விளங்கும்.

5. அவ்வாறே துறவின் பாக்களையும் நீத்தார் பெருமையின் பாக்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால், அவ்விரண்டு அதிகாங்களையும் இயற்றியவர் ஒருவர் அல்லர் என்பது நன்றாக விளங்கும்.

6. மழையை, 'சிறப்பின் தணிப்பாரும் இல்லை; வறப்பின் தருவாரும் இல்' ஆகையால் வான் சிறப்பைக் கூறுதலால் பயன் ஒன்றும் இல்லை."

—வ.உ.சி: திருக்குறள் (அறத்துப்பால்)
விருத்தியுரை.—முன்னுரை (1935).

இவ்வாறு கூறுகின்ற வ.உ.சி. 'அறன் வலியுறுத்தல்' அதிகாரத் தைப் பற்றி ஐயப்படவில்லை. அதனை, அறத்துப் பாலின் முதல் அதிகாரமாகக்கொண்டு நூலைத்தொடங்கி விளக்கவுரை எழுதிச் செல்கின்றார்.

## ச. தண்டபாணி தேசிகர்

திருக்குறள் பாயிரத்தில் உள்ள 'கடவுள் வாழ்த்து' மற்ற நூலின் கடவுள் வாழ்த்துப்போல இல்லாமல், வேறுபட்ட அமைப்புடையது என்று, ச.தண்டபாணி தேசிகர் கூறுகின்றார்:

"இந் நூல் கடவுள் வாழ்த்திற்கும், ஏனைய நூல்களின் கடவுள் வாழ்த்திற்கும் வேறுபாடு உண்டு. ஏனைய் நூல்களில், எடுத்துக்கொண்ட நூல், இனிது நிறைவேறுதற் பொருட்டும், நின்று நிலவுதற் பொருட்டும் கவிஞர் கடவுளை வாழ்த்துவர். இந்

நூலில் கடவுளின் பொதுஇயல்பும் (தடக்க இலக்கணமும்) சிறப்பு இயல்பும் (சொரூப இலக்கணமும்) கூறி அவரை வாழ்த்துதல் கற்றறிந்த மாந்தர் கடன் என்றும் கடவுளை வாழ்த்தியபின் பயனும் கூறப்படுகின்றன.

இதனை ஊன்றி ஆராயின் கடவுளை வாழ்த்துதலும், தலையாய அறம் அல்லது ஒழுக்கம் என்பது உணர்த்தப் பெற்றதே அன்றி ஏனைய நூல்களைப் போல, கடவுளை வாழ்த்தவில்லை"

—திருக்குறள் அமைப்பும் அழகும்: பக். 58.

கடவுள் வாழ்த்துப்பற்றி இத்தகைய சிந்தனைகளை எழுப்பியுள்ள இவர், மற்ற மூன்று அதிகாரங்களாகிய வான் சிறப்பு நீத்தார் பெருமை அறன் வலியுறுத்தல் ஆகியவை பற்றிய தம் கருத்தை விளக்கவில்லை.

## மு. இராகவ அய்யங்கார்

"கடவுள் வாழ்த்து முதலிய நான்கு அதிகாரங்களை மட்டும் பாயிரமாக வள்ளுவனார் தனியே கொண்டது எக்காரணமும் பற்றி என்ற கேள்வி நெடுக நிகழ்ந்து வருவது உண்டு. இதற்குத் தக்க விடை இதுகாறும் கிடைக்கவில்லை.

ஆயினும் தொல்காப்பியனார் கூறும்,

**கொடிநிலை கந்தழி வள்ளி என்ற**
**வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே**

(புறத்திணை – 33)

என்னும் சூத்திரத்தில், உயர்பின் வழிவரும் ஒரு சொல்லைக் கடவுள் வாழ்த்தோடு கூறுதலால் அவ் வாழ்த்து, முதற்கண் கூறும் சிறப்புடையது என்பதும், மற்றவை அதன் பின்னர் வைத்து வாழ்த்தப் படுதற்கு உரியன என்பதும் அறியத்தக்கன.

இவற்றுள், கொடிநிலை மேகத்தை உணர்த்தும். கீழ்த்திசைக் கண்ணே நிலைபெறுதலை உடையது; நீடனிலையுடையது என்பன இதன்பொருளாம். நச்சினார்க்கினியரும் இவ் இரு பொருள்களே பற்றி, சூரியனுக்கு இப்பதத்தை இணக்குதல் காண்க. மேகவாகனனாகிய இந்திரனுக்கு உரிய திசை ஆதலின், அத்திசை மேகத்திற்கு உரியது என்பதும், அங்கு நின்று எழுந்த கொண்டல்களே உலக தாபம் தீரப் பெய்வன என்பதும் அறியத் தக்கன. இவ்வாறு அன்றி மின்னற் கொடிக்கு நிலைக்களன் ஆதல் பற்றி மேகம் கொடிநிலை எனப்பட்டது என்றுமாம்.

கந்தழி—பற்றழிவு. அஃதாவது பற்றழிந்தார் தன்மை என்றவாறாம்.

வள்ளி என்பது அறம். நச்சினார்க்கினியருக்கும் இக் கருத்து ஆதல், "வெண்கதிர் தேவர்க்கு அமிர்தம் வழங்கலான் வள்ளி என்பதூஉம் அறிக" என்று அவர் கூறுவதிலிருந்து, வண்மை யடியாகவே இச் சொல் வழங்கியது ஆதல் தெளிவு.

ஆகவே, இந்த நான்கும் கடவுள்வாழ்த்தொடு கண்ணிய வருவனவாகிய இம் மூன்றையுமே ஆதல் தெளியலாம்"

— பொருளதிகார ஆராய்ச்சி.

### எஸ். அநவரத விநாயகம் பிள்ளை

"அருகக் கடவுளுக்கு உரிய மலர் மிசை ஏகினான், அறவாழி அந்தணன் முதலிய பெயர்கள் காணப்படுதலாலும்; கடவுள் வாழ்த்து முதலிய நான்கு அதிகாரங்களும் அருக சரணம் முதலிய நான்கு சரணங்களைக் குறிக்க எழுந்தனபோல் நிற்றலாலும்; அருகர் இயற்றிய நூல்களுள் திருக்குறளினின்றும் மேற்கோள்கள் எடுத்து வழங்கப்பட்டமையாலும் திருக்குறள் ஆசிரியர் சைனர் என்று உரைப்பர் சிலர்'

—திருவள்ளுவர் (1953) பக்–15;
ந.சி. கந்தையா பிள்ளை (மேற்கோள்)

### சுப. இராமநாதன்

"இந்நான்கு அதிகாரங்களையும் கடவுள் வாழ்த்தாகக் கொள்வதே பொருந்துவதாகும்.

திருவள்ளுவர், சமண சமயத்தவராய் இருக்கலாம் என்பதே பெரும்பான்மையோர் கருத்தாகும். சமணர்கள்,

அருக சரணம்
சித்த சரணம்
சாது சரணம்
தன்ம சரணம்

என்ற நால்வகைச் சரணங்களைக் கூறுபவர்கள் குறளின் முதலாவது அதிகாரம், கடவுள் வாழ்த்து - அருகசரணமாகவும், மூன்றாவது அதிகாரம், நீத்தார் பெருமை-சாது சரணமாகவும், நான்காவது அதிகாரம், அறன் வலியுறுத்தல்-தன்ம சரணமாகவும் கொள்ளப் பொருத்தமாய் உள்ளன.

வான் சிறப்பு என்ற அதிகாரத்தைச் சித்த சரணத்திற்குப் பொருந்தக் கூடியதாகக் கொள்வோமானால் இந்த நான்கு அதி காரங்களாலும் கடவுள் வாழ்த்துக் கூறப்பெற்றதாக அமையும்.

சமணர்கள் இந் நால்வகைச் சரணங்களையும் கடவுள் வாழ்த்தாகக் கூறுவதனைச் சிந்தாமணிக் கடவுள் வாழ்த்துப் பகுதியில் காணலாம்.

—இலக்கியச் சிந்தனைகள்—பக்;85.

## 4. முதற்குறள் விளக்கவுரைகள்

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், சமய உலகில் முதற் குறள், பல விளக்கங்களைப் பெற்றது. வேதாந்தமும் சித்தாந்தமும் மோதின. துவைதமும் அத்வைதமும் போராடின. ஒவ்வொரு சமயமும் தமக்குச் சார்பாக முதற்குறளுக்கு விளக்கம் கண்டது. மறுப்புரை எழுந்தன. மறுப்புக்கு மறுப்புப்பிறந்தது. அந் நூல்களை எல்லாம் தொகுத்துப் பார்த்தால் பல சிறந்த செய்திகள் புலப்படுகின்றன. முதற் குறளுக்கு ஏற்பட்ட விளக்கவுரைகளைக் காண்போம்.

1. சூளைச் சோமசுந்தரநாயகர் ஆங்கீரச ஆண்டு தை மாதத்தில் 'சித்தாந்த சேகரம்' என்னும் நூலில் முதற் குறளுக்கு விளக்கம் தந்து அத்வைதத்தை மறுத்தார்.

2. சித்தாந்த சேகர நூலை மறுத்து 'ஆரியன்' என்பவர், 'திருவள்ளுவர் முதற் குறள்' என்னும் நூலை 8 பக்க அளவில் இயற்றினார்.

3. இதே காலத்தில், சித்தாந்த சேகரத்தில் நாகப் பட்டினத்திலிருந்து ஒரு மறுப்பு நூல் வந்தது. நாகைவாதி என்பவர், நாகையிலிருந்து வெளிவந்த 'ஸஜ்ஜன பத்திரிகை' என்ற இதழில் மறுப்புரை எழுதினார்.

4. நாகைவாதியை மறுத்து, முருகவேள் என்னும் துவித சைவர், 'நாகை நீலலோசனி' என்னும் இதழில் மறுப்புத் தந்தார்.

5. முருகவேள் கருத்திற்கு எதிர் நூலாகத் தோன்றியது 16 பக்கமுள்ள 'முதற் குறள் வாதம்' என்னும் நூல். இதனை இயற்றியவர், துவிதமத திரஸ்காரி என்பவர்.

6. முதற் குறள் வாதத்தை மறுத்து (வேதாசலம் பிள்ளை என்ற பெயருடன் இருந்த) மறைமலையடிகள் 52 பக்க அளவில் முதற் குறள் வாத நிராகரணம் என்ற நூலை இயற்றினார்.

7. முதற் குறள் வாத நிராகரணத்தை மறுத்து, 250 பக்க அளவில் முதற் குறள் உண்மை அல்லது முதற் குறள் வாத நிராகரண சத தூஷணி என்ற நூலை, சாது இரத்தின செட்டியார் (துவித மத திரஸ்காரி) இயற்றினார் (1900).

7

# காப்பிய உரையாசிரியர்கள்

தமிழகத்திற்குத் திருவேங்கடம் போன்ற மலைகளால் ஏற்படும் சிறப்பைவிட—காவிரி போன்ற ஆறுகளால் உண்டாகும் பெருமையைவிட—தஞ்சைப் பெரிய கோயில் போன்ற கலைச் செல்வங்களால் தோன்றும் மாண்பைவிட—சிறந்த கவிஞர் பெருமக்கள் இயற்றிய பெருங்காப்பியங்களால் ஏற்படுகின்ற புகழ் மேலானது.

பாரதியார், காப்பியத்தைத் தீஞ்சுவைக் காவியம் என்று பாராட்டுகின்றார். காப்பியம் கள்ளைப் போல் மயக்கும்; தீயைப் போல் சுடும்; காற்றைப் போல் இனிமை தரும்; வானவெளியைப் போல் பரந்து கிடக்கும். காப்பியம் பல இயற்றியுள்ள சான்றோர்களைத் தெள்ளு தமிழ்ப் புலவர்கள் என்று பாரதியார் போற்றிப் பாடுகின்றார்:

**கள்ளையும் தீயையும் சேர்த்து—நல்ல**
**காற்றையும் வானவெளியையும் சேர்த்து**
**தெள்ளு தமிழ்ப்புல வோர்கள்—பல**
**தீஞ்சுவைக் காவியம் செய்து கொடுத்தார்.**

தமிழிலுள்ள காப்பியங்களை ஐம்பெருங் காப்பியங்கள் என்றும் ஐஞ்சிறு காப்பியங்கள் என்றும் இருவகையாகப் பிரித்துள்ளனர். இந்தப் பிரிப்புமுறை, வடமொழியை நோக்கி அமைக்கப்பட்டதாகும்.

சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகிய இரட்டைக் காப்பியங்களை அடுத்துத் தோன்றிய பெருங்கதை, மேலே கூறிய பாகுபாட்டில் இடம்பெறவில்லை. பெருங்காப்பியத்திற்கு உரிய தகுதிகள் யாவும் அதற்கு இருந்தும், அது காப்பிய வரிசையில் வைத்து எண்ணப்படவில்லை.

சிலப்பதிகாரம் மணிமேகலை சீவக சிந்தாமணி வளையாபதி குண்டலேகேசி ஆகியவை ஐம்பெருங்காப்பியங்களாகும். இவை தமிழன்னை பொலியச் சூடிய புலமை அணிகளாய் விளங்குகின்றன. சுத்தானந்த பாரதியார்,

காதொளிரும் குண்டலமும் கைக்குவளை
யாபதியும் கருணை மார்பின்
மீதொளிர்சிந் தாமணியும் மெல்லிடையில்
மேகலையும் சிலம்பார் இன்பப்
போதொளிரும் திருவடியும் பொன்முடிசூ
ளாமணியும் பொலியச் சூடி
நீதியொளிர் செங்கோலாய்த் திருக்குறளைத்
தாங்குதமிழ் நீடு வாழ்க

என்று தமிழன்னைக்குக் காப்பிய அணிகளைச் சூட்டி மகிழ்கின்றார்.

ஐம்பெருங்காப்பியத்தை அடுத்துத் தோன்றியவை, நீலகேசி சூளாமணி உதயணன்கதை யசோதர காவியம் நாககுமார காவியம் என்பன. இவற்றை ஐஞ்சிறு காப்பியங்கள் என்பர்.

ஐம்பெருங்காப்பியங்களுள், வளையாபதி குண்டலகேசி ஆகிய இரண்டும் மறைந்துபோயின. இவற்றுள் சில பாடல்களே (புறத்திரட்டின் வாயிலாகக்) கிடைத்துள்ளன.

குண்டலகேசிக்கு மறுப்பாக எழுந்த நீலகேசி உரை, குண்டலகேசிக் காப்பியக் கதையைச் சுருக்கமாய்க் கூறி விளக்குகின்றது.*

ஐஞ்சிறு காப்பியங்களுள், நாககுமார காவியம் மறைந்து விட்டது.

காப்பியங்களுள், சிலப்பதிகாரம் சீவக சிந்தாமணி நீலகேசி ஆகிய மூன்றிற்கு மட்டுமே முற்காலத்தில் உரைகள் தோன்றியுள்ளன.

## 1. அரும்பதவுரையாசிரியர்

ஊர் பேர் தெரியாத பண்டைய உரையாசிரியரைப் பழைய உரையாசிரியர் என்று குறிப்பிடுவது, பிற்கால உரையாசிரியர்களின் வழக்கமாகும். சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதியுள்ள அடியார்க்கு நல்லார் காலத்திலேயே இத்தகைய வழக்கம் இருந்திருக்கிறது. அடியார்க்கு நல்லாருக்கு முன்னர்ச் சிலப்பதிகாரத்திற்கு ஊர் பேர் தெரியாத பழையவுரையாசிரியர் ஒருவர் இருந்தார். அப் பழையவுரையாசிரியரின் ஊர்பேர் தெரியாததாலும், அவர் இயற்றிய உரை, பெரும்பாலும் அரிய சொற்களுக்குப் பொருள் கூறுவதாய் இருப்பதாலும் அடியார்க்கு

* பார்க்க, பிற்சேர்க்கை – 2.

நல்லார், அவரை அரும்பதவுரையாசிரியர் என்று வழங்கினார். சிலப்பதிகாரத்தில் அடியார்க்கு நல்லார் இந்திர விழவூரெடுத்த காதை உரையில் (157), "அவைக்களத்தார் ஐந்து எனக் காட்டுவர் அரும்பதவுரை யாசிரியர்" என்று கூறுகின்றார்.

'கருணாமிர்த சாகரம்' என்ற நூலை இயற்றிய மு. அபிரகாம் பண்டிதர் தம் நூலில் அரும்பதவுரையாசிரியரின் கருத்துகளைக் கூறி அவற்றைக் கூறியவர் செயங்கொண்டார் என்று குறிப்பிடு கின்றார். அரும்பதவுரையாசிரியருக்கு அப் பெரியவர் செயங்கொண்டார் என்று பெயரிடக் காரணம் என்ன என்பது விளங்கவில்லை.

**காலமும் சமயமும்**

அடியார்க்கு நல்லார்க்கே அரும்பதவுரையாசிரியரின் பெயர் முதலிய வரலாறு தெரியவில்லை எனின், அவரது காலப் பழமை நன்கு விளங்கும். உரையின் தொடக்கத்தில் அரும்பத வுரையாசிரியர் விநாயக வணக்கம் கூறுகின்றார்.

**கரும்பும் இளநீரும் கட்டிக் கனியும்**
**விரும்பும் விநாயகனை வேண்டி—அரும்பவிழ்தார்ச்**
**சேரமான் செய்த சிலப்பதிகா ரக்கதையைச்**
**சாரமாய் நாவே தரி**

என்ற வெண்பா இவரது உரையின் தொடக்கத்தில் உள்ளது. விநாயகரை வணங்கும் இவர் சைவர் என்பது உறுதி.

தமிழகத்தில் விநாயகர் வழிபாடு தோன்றியது ஏழாம் நூற்றாண்டின் இறுதியிலாகும். கி.பி. 642-இல் சிறுத்தொண்டர் மேலைச்சாளுக்கியரைவென்று அவர்களின் தலைநகரான வாதாபியிலிருந்து விநாயகரைத் தமிழகத்திற்குக் கொண்டு வந்தார். இதன் பின்னரே விநாயகர் வணக்கம் தமிழகத்தில் பரவியது. விநாயக வணக்கம் நூலின் தொடக்கத்தில் கூறும் வழக்கம் எட்டு அல்லது ஒன்பதாம் நூற்றாண்டிற்குப் பின்னரே ஏற்பட்டது.[1]

எனவே, அரும்பதவுரையாசிரியரின் காலம் ஒன்பதாம் நூற்றாண்டிற்குப்பின் என்பது தெளிவாகின்றது.

அரும்பதவுரையாசிரியர்க்கு முன்னரும் சில உரைகள் சிலப்பதிகாரத்திற்கு இருந்தன என்பது இவர் உரையால் விளங்கு

1. இலக்கிய ஆராய்ச்சியும் கல்வெட்டுக்களும் (டி.வி.. சதாசிவப் பண்டாரத்தார்) பக்கம் – 89–100.

2.29.

கின்றது. பிறர் உரைகளை ஆங்காங்கே குறிப்பிட்டுச் செல்கின்றார் இவர்.

**உரையின் இயல்பு**

அரும்பதவுரையாசிரியர் ஆராய்ச்சித் தெளிவும், ஆழ்ந்த புலமையும் அமைதியான உள்ளமும், பண்பட்ட நல்லியல்பும், அரியஉழைப்பும் கொண்டவர் என்பதை இவரது உரை உணர்த்துகின்றது. உலகியல்அறிவு மிக்கவர் என்றும் உரை அறிவிக்கின்றது.

இவரது உரை, நூல் முழுமைக்கும் உள்ளது. எல்லா இடங்களிலும் அருஞ்சொற்பொருள் கூறுகின்றார். தேவையான இடங்களில் இலக்கணம் காட்டுகின்றார். மிகச் சில இடங்களில் வினைமுடிபு காட்டுகின்றார். தொடர்களுக்குப் பொழிப்புரை கூறுகின்றார்.

"அடியார்க்கு நல்லார் உரையில் காணப்படாத பல அரிய கருத்துகள் இவ்வுரையால் விளங்குகின்றன. இவ்வுரையில் உள்ள முடிபுகளும் பொருளும் இல்லையாயின், அடியார்க்கு நல்லாருடைய உரை இல்லாத பாகங்களுக்குப் பொருள் காண்பது அரிது" என்பார் டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர்.

அரும்பதவுரையாசிரியர் மங்கல வாழ்த்துப் பாடலில் *(28.9)* கண்ணகியை முதலில் அறிமுகப்படுத்துவதற்குக் காரணம் கூறுகின்றார். "இவளை (கண்ணகியை) முன்கூறியது கதைக்கு நாயகியாதலின்" என்று உரைக்கின்றார்.

அரங்கேற்று காதை உரை மிக விரிவானது. அரிய விளக்கம் பல கொண்டது.

வழக்குரை காதையில் *(80)* 'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்' என்ற அடிக்கு விளக்கம் எழுதும் போது 'தந்தை தாய் முதலாயி னோரை இழந்தார்க்கு அம்முறை சொல்லிப் பிறரைக் காட்டலாம். இஃது அவ்வாறு வாக்கானும் சொல்லல் ஆகாமையின், காட்டுவதுஇல் என்றாள்" என்று உரைக்கின்றார்.

**அடியார்க்கு நல்லாரும் அரும்பதவுரையாசிரியரும்**

அரும்பதவுரையாசிரியர் அமைத்துத் தந்த பாதையிலே அடியார்க்கு நல்லார் செல்லுகின்றார். அரும்பதவுரையாசிரியர் அமைத்த கடைக் காலின் மீதுதான் அடியார்க்கு நல்லார் கட்டிடம் எழுப்புகின்றார். அரும்பதவுரையாசிரியர் கூறும் விளக்கங்களை அடியார்க்குநல்லார் விளக்காமல் விட்டுச் செல்லுதலும் உண்டு.

வேனிற் காதையில்,

**அகநிலை மருதமும் புறநிலை மருதமும்**
**அருகியல் மருதமும் பெருகியல் மருதமும்**
**நால்வகைச் சாதியும் (39–41)**

என்ற வரிகளில் அமைந்துள்ள இசைக் குறிப்புக்களை அரும்பத வுரையாசிரியர் மிகநன்றாக விளக்கி எழுதுகின்றார். ஆனால், அடியார்க்குநல்லார் இவ் வரிகளுக்கு விளக்கம் எதுவும் எழுதாமல் செல்கின்றார். அரும்பதவுரை இன்றேல், மேமேலே கண்ட வரிகளின் இசைக்குறிப்புகள் விளங்காமல் போய் இருக்கும்.

அரும்பதவுரையாசிரியரிடமிருந்து அடியார்க்கு நல்லார் சில இடங்களில் வேறுபடுகின்றார்; வேறு பாடம் கொள்ளு கின்றார்: மிகச் சில இடங்களில் அரும்பதவுரையாசிரியரை மறுக் கின்றார். ஆனால், "இருவரும் மாறுபட எழுதியிருக்கும் உரைகளை ஆராய்வுழிச் சில இடங்களில் அரும்பதவுரையே பொருத்த முடையதாகக் காணப்படுகின்றது" என்பர் ந.மு. வேங்கடசாமி நாட்டார்.

சில இடங்களில் அடியார்க்கு நல்லார் மாறுபட்ட போதிலும் இசை நாடகப் பகுதிகளில் அரும்பதவுரையையே ஆதாரமாகக் கொண்டு விளக்குகின்றார். அரும்பதவுரை விளக்காத கலைப்பகுதியை அடியார்க்குநல்லார் விளக்காமல் விட்டுவிடுகின்றார்.

"அரங்கேற்று காதையில் குழலாசிரியன் அமைதியும் யாழாசிரியன் அமைதியும் கூறுவதற்கு எழுந்த இன்றியமையாத இசையிலக்கணப் பகுதிகளில் அரும்பதவுரையில் உள்ளவற்றினும் வேறாக ஒரு சொல்தானும் எழுதப்படாமை அறியற்பாலது. அடியார்க்கு நல்லார் இவ்விடங்களில் அரும்பதவுரையைப் பட்டாங்கு பெயர்த்தெழுதி, சொல் முடிபு தானும் காட்டாது விட்டிருப்பது வியப்பிற்குரியதே. இவ்வாற்றால் அரும்பதவுரையாசிரியர் விரியாதுவிடுத்த விலக்குறுப்பு முதலியவற்றை அடியார்க்கு நல்லார் பிறநூல் மேற்கோள் கொண்டு விரித்துக்காட்டி இருப்பினும், நுட்பமாகிய இசை நாடகப் பகுதிகளை விளக்குதற்கு முயன்ற வகையால் அரும்பத வுரையாசிரியருக்கே அனைவரும் கடமைப்பாடு உடையவர் ஆவர்" என்று கூறுகின்றார் ந.மு. வேங்கடசாமி நாட்டார்.

**எந்தச் சிலம்பு ?**

பாண்டியன் அவையில் வழக்குரைத்து, தன் கணவன் கள்வன் அல்லன் என்று மெய்ப்பிக்க, கண்ணகி உடைத்த

சிலம்புகள் எத்தனை? ஒன்றா? இரண்டா? மூன்றா? ஒன்றே ஆயின், உடைக்கப்பட்டது எந்தச் சிலம்பு?

இக்காலத்தில் இந்த வினாக்களுக்குப் பல விடைகள் தோன்றியுள்ளன.

இந்த வினாக்களுக்குத் தகுந்த விடை, அரும்பத உரையில் உள்ளது.

கோவலனிடமிருந்து பொற்கொல்லன் வாங்கி, காவலர்களிடம் தந்த கண்ணகி சிலம்பே பாண்டியன் அவையில் கண்ணகியால் உடைக்கப்பட்டது.

அரும்பதவுரையாசிரியர் இதனை, "தட்டான் வாங்கி, கள்ளப்படி செய்வார் கையிற் கொடுத்த பொற்சிலம்பு" என்று கூறுகின்றார்.

இங்கே மற்றொரு வினா எழுவது இயற்கையே. கண்ணகி, பாண்டியனைக் காண ஆயர்சேரியிலிருந்து சென்றபோது, கையில் எடுத்துச்சென்ற சிலம்பு என்ன ஆயிற்று?

இதற்கும் உரை, விடையளிக்கின்றது:

"இராசா துஞ்சின பின்பு, கண்ணகி தன்
கைச் சிலம்பை, தேவி முன்னே எறிந்தாள்"

இச் செய்தி உண்மை என்பதை இளங்கோ அடிகளின் வாக்கினால் அறியலாம்:

**செஞ்சிலம்பு எறிந்து தேவி முன்னர்**
**வஞ்சினம் சாற்றிய மாபெரும் பத்தினி.**

**(காட்சி – 73, 74)**

அரும்பதவுரை இத்தகைய நுட்பான செய்திகள் பலவற்றை விளக்கிக் கூறுகின்றது.

**உரைநடை**

அரும்பதவுரையாசிரியரின் உரைநடைச் சிறப்புக்குப் பின் வரும் பகுதி நல்ல சான்றாக உள்ளது:

"வஞ்சி மூதூர் மணி மண்டபத்திடைத் தந்தையோடு இருந்துழி, அரசு வீற்றிருக்கும் திருப்பொறி உண்டென்று ஒரு நிமித்திகன் சொல்ல, முன்னோனாகிய செங்குட்டுவன் இருப்ப இவ்வாறு முறை பிறழக் கூறியது பொறாது குணவாயிற் கோட்டத்துக் கடவுளர் முன்னர்த் துறந்திருந்த இளங்கோவடிகளுக்கு, கண்ணகி வானவர் போற்றத் தன் கணவனோடு கூடியது கண்டு செங்குட்டுவனுக்கு உரைத்த குறவர் வந்து, 'எல்லாம் அறிந்தோய்! இதனை அறிந்தருள்' எனக்கூறிப் போக, பின்பு

செங்குட்டுவனைக் கண்டு அடிகளுழை வந்த சாத்தன், அது பட்டவாறு எல்லாம் கூற, அது கேட்டு, 'அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்று என்பதூஉம், பத்தினி மகளிர் பெய்யெனப் பெய்யும் மழை என்பதூஉம், ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்பதூஉம் இக் கதையகத்து உண்மையின், அதனை யாம் ஒரு செய்யுளாகச் செய்வோம்' என்று சாத்தன் சொல்ல, இம் முப்பது வகைத்தாகிய செய்யுளை இளங்கோவடிகள் அருள, கூல வாணிகன் சாத்தன் கேட்டனன் என்க."

இப் பகுதி, ஒரே வாக்கியமாய் அமைந்து, பொருள் தெளிவுடன் சொல்லோவியமாய் விளங்குகின்றது.

தமிழறிஞர் க. வெள்ளைவாரணனார் இவரது உரைத் திறனைப் பின் வருமாறு போற்றுகின்றார்:

"இதனை எழுதிய ஆசிரியர், அருஞ்சொற்களுக்குப் பொருள் உரைக்கும் நிலையிற் **பதவுரையாகவும்**, இலக்கணக் குறிப்பும் மேற்கோளும் தந்து நூலின் பொருளை விரித்துரைக்கும் நிலையில் **அகல வுரையாகவும்**, காப்பியத்தின் சொற்பொருள் நயங்களைச் சுருங்கச் சொல்லி விளக்குந் திறத்தில் **நுட்பவுரை** யாகவும் நூலாசிரியரது உளக்கருத்தினை உய்த்துணர்ந்து நூலகத்து எஞ்சியுள்ள சொல்லையும் குறிப்பையும் வருவித்து உரைக்கும் திறத்தில் **எச்ச வுரையாகவும்** உள்ளது."

## 2. அடியார்க்குநல்லார்

அடியார்க்குநல்லார் என்ற இனிய பெயரையுடையவர், சிலப்பதிகாரத்திற்கு உரை இயற்றிய சான்றோர். இவர் அரும்பத வுரையாசிரியர்க்குப் பின்னர், உரை இயற்றியவர். இவருக்கு முன்னும் சிலர் சிலப்பதிகாரத்திற்கு உரை இயற்றி இருக்கலாம் என்று கருத இடமுண்டு. பிறர் கொண்ட பாடங்களையும் உரை களையும் இவர் ஆங்காங்கே சுட்டிச் செல்கின்றார்.

இவரைப்பற்றி அறிய, சிறப்புப்பாயிரச் செய்யுள்கள் உதவு கின்றன. இவரைக் 'காரும் தருவும் அனையான்' என்றும், 'நிரம்பையர் காவலன்' என்றும் ஒருபாடல் கூறுகின்றது. இவர் புலமைச் செல்வராயும் கொடைவள்ளலாயும் விளங்கி இருக்க வேண்டும். 'நிரம்பையர் காவலன்' என்பதனால் அவ்வூர்க்கு உரிமையுடையவராக இவர் இருந்திருக்கலாம்.

"இவருக்கு நிரம்பையர் காவலன் என்னும் பெயர் ஊரால் வந்தது என்றும், நிரம்பை என்னும் ஊர் கொங்கு மண்டலத்தில் குறும்பு நாட்டில், பெருங்கதையின் ஆசிரியராகிய கொங்குவேளிர்

பிறந்த விசய மங்கலத்தின் பக்கத்தில் உள்ளதென்றும் கொங்குமண்டல சதகம் தெரிவிக்கின்றது" என்பர் டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர். நிரம்பை என்னும் ஊர் இன்று, கோயம்புத்தூர் மாவட்டத்தில் பெருந்துறையை அடுத்து உள்ளது.

ஆ. முத்துத்தம்பி பிள்ளை என்பவர், "அடியார்க்கு நல்லார், குணபூஷண சிங்கை ஆரியச் சக்கரவர்த்தி (14 நூற்) என்னும் ஈழ நாட்டரசர்க்கு அமைச்சர்" என்று கூறியுள்ளார் (செந்தமிழ்-12, பக்-379).

தமிழகத்தில்-பல்குன்றக் கோட்டத்துச் சிங்கம் பொருத வளநாட்டு, தேனூரில் இவர் பிறந்தவர் என்றும், இதற்கு ஆதாரமாகக் காஞ்சிபுரக் கல்வெட்டு ஒன்று உள்ளது என்றும் கூறுகின்றனர் (செங்குந்தர் பிரபந்தத் திரட்டு-முகவுரை. பக்-38, 39).

அடியார்க்குநல்லாரை ஆதரித்த வள்ளல் 'பொப்பண்ண காங்கெயர் கோன்' என்று சிறப்புப்பாயிரச் செய்யுள் ஒன்று கூறு கின்றது. அவ்வள்ளல் 'காலமெனும் கூற்றைத் தவிர்த்தருள் பொப்பண்ண காங்கெயர் கோன்' என்று புகழப்படுகின்றான். அடியார்க்கு நல்லார்க்குப் பொப்பண்ணன் "அளித்த சோற்றுச் செருக்கல்லவோ தமிழ் மூன்றுரை சொல்வித்ததே" என்று இலக்கியச் சுவை தோன்ற அவ் வள்ளலின் உதவி புகழ்ப்படு கின்றது. 'சோற்றுச் செருக்கு' என்ற சொற்றொடர் நினைக்க நினைக்கப் பெரிதும் சுவையூட்டுகின்றது. சோற்றுச் செருக்கு, தமிழ் மூன்றினுக்கும் உரை சொல்வித்ததாய்க் கூறியிருப்பதுமிக்க நயமாய் உள்ளது.

இராமானுசர், போசள விஷ்ணுவர்த்தன மகாராசர் என்ற மன்னனை வைணவ சமயத்தில் சேர்த்தார். அம்மன்னனின் அமைச்சனும் படைத்தலைவனுமாக இருந்தவன் பொப்பண்ண காங்கேயன். அவன் சமண சமயத்தவன். அவன் காலம் 12ஆம் நூற்றாண்டு. அடியார்க்கு நல்லார் அக் காலத்தவரே என்பர் அடியார்க்கு நல்லார் பதிகத்தின் உரையில் காட்டப்பெறும் "மக்கள் இழந்த இடும்பையானும்" என்ற (இராமாயண) உத்தர காண்டப் பாடல் இக் காலத்திற்கு முன் தோன்றியது என்றும் கூறுவர். இவர் கலிங்கத்துப் பரணியிலிருந்து சில செய்யுட்களை மேற்கோள் காட்டுவதால் இவர் சயங்கொண்டார் காலத்திற்கும் பின் வாழ்ந்தவர் எனலாம்.

திருஞானசம்பந்தர் தம் தேவாரப் பாடலில், "கண்ணுளார் கருவூருளான்நிலை அண்ணலார் அடியார்க்கு நல்லரே" என்று சிவபெருமானை 'அடியார்க்கு நல்லார்' என்ற பெயரால் அழைக் கின்றார். அப்பெயரைத் தாங்கிய இவ்வுரையாசிரியர் சைவ

சமயத்தவர் என்பர். 'பிறவா யாக்கைப் பெரியோன்' (சிலப் 5-169) என்ற அடிக்கு 'என்றும் பிறவாத யாக்கையுடைய இறைவன்' என்று இவர் எழுதுகின்றார். சிவன் என்று குறிக்க வேண்டிய இடத்தில் 'இறைவன்' என்று பொதுப்பெயரைக் குறித்திருப்பதால் சிவபெருமானையே இறைவனாகக் கொண்டவர் இவர் என்பர்.

**உரையின் இயல்பு**

முத்தமிழ்க் காப்பியம் என்று போற்றப்பெறும் சிலப்பதி காரத்திற்கு உரை இயற்றிய இவரை,

> ஒரும் தமிழொரு மூன்றும் உலகின் புறவகுத்துச்
> சேரன் தெரித்த சிலப்பதி காரத்திற் சேர்ந்தபொருள்
> ஆரும் தெரிய விரித்துரைத்தான்

என்று கூறுகின்றது சிறப்புப்பாயிரச் செய்யுள் ஒன்று. 'பருந்தும் நிழலும் என, பாவும் உரையும் பொருந்த எல்லாப் பொருளும் தெரிந்து நல்லமிர்தம் பாலித்தான்' என்று மற்றொரு செய்யுள் இவரைப் போற்றுகின்றது.

> பருந்தும் நிழலும்எனப் பாவும் உரையும்
> பொருந்துநெறி எல்லாப் பொருளும்—தெரிந்துஇப்
> படியார்க்கு நல்அமிர்தம் பாலித்தான் நன்னூல்
> அடியார்க்கு நல்லான்என் பான்

என்ற செய்யுள், சிலப்பதிகாரத்திற்கு இவர் உரை இயற்றியதை உலக மக்களுக்கு நல்லமிர்தம் பாலித்ததாய்ப் போற்றுகின்றது.

அடியார்க்கு நல்லார் அவையடக்கமாக,

> எழுத்தின் திறன்அறிந்தோ இன்சொற் பொருளின்
> அழுத்தம் தனில்ஒன்று அறிந்தோ—முழுத்தும்
> பழுதற்ற முத்தமிழன் பாடற்கு உரைஇன்று
> எழுதத் துணிவதே யான்

என்று கூறுவதாய் உள்ளது. ஆனால், இவர் எழுத்தின் திறன் அறிந்தவர்; இன்சொற் பொருளின் அழுத்தம் அறிந்தவர்; பழுதற்ற முத்தமிழன் பாடற்குச் செவ்விய உரை கண்டவர் என்பதை இவரது உரையே நன்கு உணர்த்தும்.

சிலப்பதிகாரத்தின் அருமை பெருமைகளை எல்லாம் இவரது உரையால்தான் தமிழகம் நன்கு அறிந்தது. இவரது உரை இல்லாமல் போய் இருந்தால் எத்தனையோ அரிய செய்திகள் வெளிப்படாமல் மறைந்து இருக்கும். முத்தமிழ் வித்தகராகிய இவர் பண்டைத் தமிழ் இலக்கண இலக்கியங்களில் ஊறித் திளைத்தவர்; சிறப்பாக உரை இயற்றும் திறன் வாய்ந்தவர். இவரது உரையின் வாயிலாகப் பழந்தமிழரின் பல திறப்பட்ட கலை

வளங்களைப்பற்றி எத்தனையோ அரிய கருத்துகள் வெளிப் பட்டன. இவர் தரும் ஒளியில் தான் பழந்தமிழ்க் கலைகள் நன்கு தெரிகின்றன.

இவருடைய நடை எதுகை மோனைகள் நிரம்பி, இனிய ஓசையுடன் கவிதைபோல் அமைந்துள்ளது. ஒவ்வொரு காதையிலும் முன்பின் நிகழ்ச்சிகளைச் சுட்டி விளக்குவது இவரது இயல்பு. மூலத்தில் திசைச்சொல் வந்தால் அதனை ஆராய்ந்து கூறுகின்றார். பழமொழிகள் இடம்பெறின் அவற்றை விளக்குகின்றார். உரைப்பாயிரம், பதிகத்தின் உரை ஆகியவற்றில் காப்பியம்பற்றி ஆராய்ந்து கூறும் கருத்துகள் போற்றத்தக்கவை. ஒவ்வொரு காதையின் ஒவ்வொரு பகுதிக்கும் பொழிப்புரை தந்து, அதன் கீழே அருஞ்சொற்பொருள், விளக்கம், நயம், மேற்கோள், இலக்கணம் ஆகியவற்றைத் தருகின்றார். அணிகளையும் மெய்ப் பாடுகளையும் மற்றக் கலைகளையும் வெளிப்படுத்துகின்றார். ஒவ்வொரு காதையின் முடிவிலும் இஃது இன்ன செய்யுள் என்று ஆராய்ந்து எழுதுகின்றார்; வினைமுடிபுகளை மறவாமல் முடித்துக் காட்டுகின்றார்; மேற்கோள் தரும் நூலைத் தெளிவாகக் குறிப்பிடுகின்றார்.

டாக்டர். ச.வே. சுப்பிரமணியனார், 'அடியார்க்கு நல்லார் உரைத்திறன்' என்னும் சிறந்த ஆராய்ச்சி நூலில் மிக விரிவாக, இவரது உரை நலன்களை எல்லாம் திறனாய்வு முறையில் வெளிப் படுத்தியுள்ளார்.

## மறைந்த பகுதி

அடியார்க்குநல்லார் உரை, 'ஊர்சூழ்வரி' என்ற பகுதி வரையில்தான் உள்ளது. நடுவே கானல்வரிக்கு உரை இல்லை. இவர் மதுரைக் காண்டம் முழுமைக்கும் உரை கண்டுள்ளார் என்பதற்குச் சான்றுகள் உள்ளன.

அரங்கேற்று காதையில் *(3:13, 26)* இரண்டு இடங்களில், "கானல் வரியில் கூறுதும்' என்கின்றார். அக் காதையில் *(3:107)* ஓரிடத்தில் "அழற்படு காதைக் கண்ணே விரித்துக் கூறுதும்" என்கிறார். வேனிற் காதையில் *(58-9)*, "கட்டுரை காதையுள் விரியக் கூறுவாம்'' என்று உரைக்கின்றார். எனவே, இவர் மதுரைக் காண்டம் வரை உரை இயற்றினார் என்பது விளங்கும். வஞ்சிக் காண்டத்திற்கும் உரை இயற்றி இருக்க வேண்டும். அவை இன்று கிடைக்கவில்லை.

## காலம் கடந்த குரல்

தமிழிலக்கிய உலகில், இசை நாடகங்களைப்பற்றி வேறு எவரும் அடியார்க்கு நல்லாரைப்போல் அரிய பெரிய விளக்

கங்கள் எழுதவில்லை. கணக்கற்ற நூல்களைக் கற்றுத் தெளிந்து இவர் தமிழ்க் கலைகளை விளக்குகின்றார்.

முத்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரம் இசை நாடகக் கலைகளைப்பற்றிக் கூறும் கருத்துகள் மிகவும் அருமையானவை; பிற தமிழ் நூல்களில் இல்லாதவை. அவற்றிற்கெல்லாம் அடியார்க்குநல்லார் எழுதியுள்ள உரையும் விளக்கமும் காட்டியுள்ள மேற்கோளும் மூலத்தைவிட அரியவை; விளக்கமானவை.

இவர், தமிழ்க்கலைகளின் மாண்பைப் போற்றி விளக்கி உரைத்த குரல், காலங்கடந்து வந்து தெளிவாக ஒலிக்கின்றது. இருபதாம் நூற்றாண்டில் தமிழிசை மறுமலர்ச்சிக்கு இவர் உரையே பெரிதும் உதவியது. தமிழ்க் கலைகளைப் பல நூற்றாண்டுகளாகக் காத்து வழங்கிய பெருமை இவ்வுரைக்கு உண்டு.

அபிரகாம் பண்டிதர் இயற்றிய கருணாமிர்த சாகரமும் விபுலானந்தர் இயற்றிய யாழ்நூலும் அவற்றிற்குப்பின் தமிழிசை பற்றி எழுந்த பல நூல்களும் அடியார்க்குநல்லார் உரையிலிருந்து கிளைத்தவையே. தமிழர்க்கு என்று தனியாக இசை உண்டு என்று பெருமைப்படவும், அதன் பழமையை எடுத்துக்கூறவும், தமிழிசை உணர்ச்சி பெற்றுப்பரப்பவும், விரிவான ஆராய்ச்சியில் ஈடுபடவும் இவர் உரையே உறுதுணை புரிந்துவருகின்றது.

## திறனாய்வுக் கலைஞர்

மேலைநாட்டுத் திறனாய்வாளரைப்போல, இவர் சிலப்பதி காரத்தைப் பலவேறு கோணங்களில் ஆராய்ந்துள்ளார். காப்பிய அமைப்பு, கதையின் கட்டுக்கோப்பு, நிகழ்ச்சி ஒருமைப்பாடு, காப்பிய மாந்தரின் பண்புகள், நூலாசிரியரின் ஆழ்ந்திருக்கும் கவியுளம், செயல் நிகழும் கால எல்லை, இடம் ஆகியவற்றை எல்லாம் அடியார்க்கு நல்லார் நுணுகி நோக்கி ஆராய்ந்து திறம் படக் கூறுகின்றார்.

காப்பியம், தொடர்நிலைச் செய்யுள் என்ற இரு சொற்களின் பொருத்தத்தை உரைப் பாயிரத்தில் ஆய்ந்து கூறு கின்றார்.

"முந்து நூல்களில் காப்பியம் என்னும் வடமொழிப் பெயர் இன்றேனும்...நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர் (19:80) என மணிமேகலையுள்ளும் பிறவற்றுள்ளும் கூறினமையானும், சொற்றொடர் நிலை பொருட்டொடர் நிலை என்னும் தொடர்

நிலைச் செய்யுட்கும் காப்பியம் என்று பெயர் கூறுதலும் ஆசிரியர் கருத்தென வுணர்க."

சிலப்பதிகாரம், பெண்ணின் பெருமையை உலகிற்கு உணர்த்த எழுந்த பெருங்காப்பியம். நூலின் தொடக்கம் முதல் இறுதி வரை அக் காப்பியத்தில் கண்ணகியின் பெருமையே பேசப் படுகின்றது. மங்கல வாழ்த்துப் பாடலிலும் முதன் முதலில் கண்ணகியே அறிமுகப்படுத்தப்படுகின்றாள். பின்னரே கோவலன் சிறப்புக் கூறப்படுகின்றது. அடியார்க்கு நல்லார் காப்பியத்தின் உட்கருத்தை நன்றாக உணர்ந்து மங்கல வாழ்த்துப் பாடலில் (56-9), 'கண்ணகியை முற்கூறினார், பத்தினியை ஏத்துதல் உட் கோளாகலான்" என்று கூறுகின்றார்.

தமிழகத்தை முழுமையாக நோக்கி மூவேந்தர் நாட்டையும் ஆட்சியையும் உயர்வு தாழ்வின்று ஒப்பக்கருதி, தம் காப்பியத்தில் சிறப்பித்தவர் இளங்கோவடிகள். காப்பியம் இயற்றிய அடிகளின் நெஞ்சத்தை மிக நன்றாக உணர்ந்த அடியார்க்கு நல்லார் ஆய்ச்சியர் குரவையுள் (31) உள்வரிக் கூத்தினுள் முதலில் பாண்டியனையும் பின்னர்ச் சோழனையும் அதன்பின் சேரனையும் வாழ்த்துவதை (29-31) எண்ணுகின்றார். "இவற்றுள் சேரனை முற்கூறாது பாண்டியனை முற்கூறியது என்னை எனின் இது மதுரைக் காண்டம் ஆதலானும், இக் காப்பியம் செய்தவர் விழைவு வெறுப்பு அற்ற சேரமுனி ஆதலானும், முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரியது (பதிகம்-61) எனச் சாத்தர் கூறினமையானும் என்க" என்று இளங்கோவடிகளின் உள்ளத்தை அறிந்து போற்றி உரைக்கின்றார்.

## கதை நிகழ்ச்சியும் கட்டுக் கோப்பும்

சிலப்பதிகாரத்தில் கலை நிகழ்ச்சியில் சில இடங்கள் சிக்கலாக உள்ளன. மேம்போக்காகப் பார்க்கும்போது கட்டுக் கோப்பு இல்லாமல் இருப்பதுபோலத் தோன்றுகிறது. அவ்விடங் களில் அடியார்க்குநல்லார் தம் ஆராய்ச்சித் திறனை வெளிப் படுத்தி உரை கண்டுள்ளார்.

ஊர்காண் காதையில், கோவலன் மதுரையினுள் சென்று அந் நகரிலுள்ள வணிகரைக்கண்டு அவர்களிடம் உதவிபெறும் நோக்கத்துடன் கவுந்தியடிகளிடம் விடை பெறுகின்றான். இதனை,

தொன்னகர் மருங்கின் மன்னர் பின்னோர்க்கு
என்னிலை உணர்த்தி யான்வருங் காறும்
பாதக் காப்பினள் பைந்தொடி

என்ற அடிகளில் மிகத்தெளிவாக இளங்கோவடிகள் உணர்த்து கின்றார். மேலும், கவுந்தியடிகள் கண்ணகியை மாதரியிடம் அடைக்கலமாகத் தரும்போது,

**மாதரி கேள்;இம் மடந்தைதன் கணவன்**
**தாதையைக் கேட்கில் தன்குல வாணர்**
**அரும்பொருள் பெறுநரின் விருந்தெதிர் கொண்டு**
**கருந்தடங் கண்ணியொடு கடிமனைப் படுத்துவர்**
**உடைப்பெருஞ் செல்வர் மனைப்புகும் அளவும்**
**இடைக்குல மடந்தைக்கு அடைக்கலம் தந்தேன்**

என்று கூறுகின்றார்.

ஆனால், மதுரை நகரினுள் சென்ற கோவலன் அந் நகரத்து வணிகர்களைச் சந்திக்கவில்லை; அங்கே தங்க எவ்வித ஏற்பாடும் செய்யவில்லை; நகரத்தின் பலவேறு நெடுந்தெருக்களைச் சுற்றிப் பார்த்துவிட்டுத் திரும்பிவிடுகிறான். இவ்வாறு செய்ததற்குக் காரணம் எதுவும் கூறப்படவில்லை. இந்த முரண்பாட்டை அடியார்க்கு நல்லார் நினைத்துப் பார்க்கின்றார்; முன் பின் உள்ள நிகழ்ச்சிகளை இணைத்து நோக்குகின்றார். கோவலன் மதுரையில் தங்க எத்தகைய ஏற்பாடும் செய்யாமல் வந்ததை ஆராய்கின்றார். ஊர் காண் காதையின் இறுதியில், "இவற்றின் பந்தர் நிழலிலே திரிந்து, காவலனது பெரிய நகரினைக் கண்டு மகிழ்ச்சி எய்தலாலே பொருந்துழி யறிதலை மறந்து போந்தான் என்க" என்று எழுதுகின்றார். இளங்கோ அடிகள்,

**காவலன் பேரூர் கண்டு மகிழ்வெய்திக்**
**கோவலன் பெயர்ந்தனன் கொடிமதிற் புறத்தென்**

என்றே கூறுகின்றார். "பொருந்துழி யறிதலை மறந்து" என்று அடியார்க்குநல்லார் தாமே விளக்கம் சேர்த்துக் கொள்ளு கின்றனர். இவ்வாறு கூறாவிடின், கதை நிகழ்ச்சிகள் முரண்படும்.

**கோவலன் ஊமையா ?:** சிலப்பதிகாரக் கதை நிகழ்ச்சியில் மற்றோர் இடத்தில் புதியதோர் சிக்கல் ஏற்படுகின்றது.

கொலைக்களக் காதையில், பொற்கொல்லன் பாண்டிய மன்னன் ஏவிய காவலாளர்களைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு கோவலன் இருக்கும் இடத்திற்கு வருகின்றான்; கோவலனிடம்,

**வலம்படு தானை மன்னன் ஏவ**
**சிலம்பு காணிய வந்தோர் இவர்** (158, 59)

எனக் கூறுகின்றான்; கோவலனிடம் இருந்த சிலம்பைத் தன்னுடன் வந்தவர்க்குக் காட்டுகிறான். கோவலனையும் சிலம்பையும் கண்ட "அருந்திறன் மாக்கள்",

**இலக்கண முறைமையின் இருந்தோன் ஈங்கிவன்**
**கொலைப்படு மகன் அலன் (162–3)**

என்று கூறுகின்றனர். பின்னர்ப் போற்கொல்லன் கள்வர்களின் திறனைப் பலவாறு கூறிக் கதை ஒன்றையும் கட்டி, நெடுநேரம் பேசிக் காவலர்களின் மனத்தை மாற்றுகிறான் (166-211). பொற்கொல்லன் பேச்சை ஏறத்தாழ நாற்பத்தைந்து அடிகளில் இளங்கோ அடிகள் கூறுகின்றார்.

இத்தகைய பேச்சும் நிகழ்ச்சியும் நிகழ்ந்தபோது கோவலன் ஏன் ஊமையாய் இருந்தான்? மன்னனிடம் இருந்து சிலம்பு காண வந்தவரிடம் தன்னைக் கள்வனென்று பொற்கொல்லன் பேசும் பொய்யுரைகளையும் கேட்டுக் கோவலன் வாளா இருந்ததேன்? கோவலன் இங்கே பேசியிருந்தால் என்ன? காவலர்களிடமும் பொற்கொல்லனிடமும், "நானா கள்வன்? இதுவா திருட்டுச் சிலம்பு? வாருங்கள் மன்னனிடமே போகலாம்! அங்கே விளங்கும் உண்மை" என்று வீறு கொண்டு நின்று பேசி இருந்தால் என்ன? அவ்வாறெல்லாம் அவனால் பேச முடியாதா? இளங்கோ அடிகள் இவ்விடத்தில் கோவலனை ஏன் பேசாத ஊமையாய்ப் படைத்துவிட்டார்?

இப்படிப்பட்ட வினாக்கள் அடியார்க்கு நல்லார் உள்ளத்திலும் எழுந்துள்ளன. அதனால்தான்,

**செய்வினைச் சிலம்பின் செய்தி எல்லாம்**
**பொய்வினைக் கொல்லன் புரிந்துடன் காட்ட (16:160–61)**

என்ற அடிகளுக்கு, "சிலம்பின் அருமை எல்லாம் கூறுவான் போலப் பொய்மையைத் தொழிலாக உடைய கொல்லன் அவரை வேறாக அழைத்துக் கோயிலில் (அரண்மனையில்) இருக்கின்ற தனிச் சிலம்போடே பொருந்தச் சொல்லிக்காட்ட" என்று பொருளும், "புரிந்து எனவே அவனின் (கோவலனிடமிருந்து) நீங்கி என்பதும், உடன் காட்ட எனவே அச் சிலம்போடு ஒரு தன்மையாக ஒப்புக் கூறி என்பதும் கொள்ளப்பட்டன" என்று விளக்கம் தருகின்றார்.

இவ்வாறு அடியார்க்கு நல்லார் உரை விளக்கம் கூறி இளங்கோ அடிகள் கூறாத செய்தியை எடுத்துரைத்துக் கதை நிகழ்ச்சியில் தோன்றும் சிக்கலைவிடுவிக்கின்றார்.

## நிகழ்ச்சியை இணைத்தல்

கதை நிகழ்ச்சியை உற்றுநோக்கி உண்மை உணர்ந்து முன்னும் பின்னும் இணைத்துப் பார்த்தல் அடியார்க்குநல்லாரின் இயல்பு.

புறஞ்சேரி இறுத்த காதையில்,

**...தென்ற லொடு**
**பால்நிலா வெண்கதிர் பாவைமேற் சொரிய**
**வேனில் திங்களும் வேண்டுதி என்றே**
**பார்மகள் அயாஉயிர்த்து அடங்கிய பின்னர் (26–29)**

என்ற அடிகளுக்கு விளக்கம் எழுதும்போது, "இத்துணையும் இவள் (கண்ணகி) புணர்ச்சியின்பம் பெறாமைநோக்கி, பார்மகள் இரங்கிக் கூறினாள். என்னைப் புணர்ச்சியில்லாதவாறு எனின், மாதவியோடு புலந்து போதலானும், மதுரைக்குச் சேறற்கு ஒருப் பட்ட நெஞ்சினன் ஆதலானும், மேற் கவுந்தியடிகளுடன் வழிச் சேறலானும் யாண்டும் மெய்யுறல் மாத்திரமல்லது புணர்ச்சி இல்லென உணர்க" என்று உரைக்கின்றார்.

துன்பமாலையுள், "செங்கண் சிவப்ப அழுதாள்" (32) என்பதற்கு விளக்கம் கூறுகையில், "ஆண்டு (இந்திர-237 "கண்ணகி கருங்கணும்") கண்ணகி கருங்கண் என்றவர் ஈண்டு செங்கண் என்றார், காலையில் தலையளியால் பிறந்த செவ்வி தோன்ற" என்கின்றார்.

இவ்விரு பகுதிகளும் ஒப்பிட்டு நோக்கத்தக்கவை.

## நிகழ்ச்சியும் காலமும்

சிலப்பதிகாரக்கதை நிகழ்ச்சிக்குரிய காலத்தை ஆங்காங்கே தம் உரையில் அடியார்க்குநல்லார் சுட்டிச் செல்லுகின்றார். ஆண்டு, திங்கள், நாள் இவற்றைக் கணக்கிட்டுக் கூறுகின்றார்.

மனையறம்படுத்த காதை "யாண்டு சில கழிந்தன கண்ணகி தனக்கு" (89,90) என்று முடிகின்றது. அடியார்க்கு நல்லார், "கண்ணகிக்குச் சிலயாண்டு கழிந்தன. எனவே, மாதவிக்குப் பலயாண்டு கழிதலும் கொள்ளப் பட்டது" என்றும், "நாலீராண்டு நடந்ததற் பின்னர் (30:85) என்பதனை இருவர்க்கும் ஆக்கி மாதவிக்கு எட்டின் இறந்த பலயாண்டு சேறலின் கண்ணகிக்குச் சிலயாண்டு கழிந்தன எனப் பொருள் கூறலும் ஒன்று" என்று விளக்குகின்றார்.

பூம்புகார் நகரில் சித்திரை மாதத்தில் இந்திரவிழா நிகழ்தல் (இந்திர-64), மாதவியைப் பிரிந்து கோவலன் கண்ணகியிடம் வருதல், புகாருக்கும் மதுரைக்கும் உள்ள முப்பது காத

தொலைவை (காடுகாண்-42) 'ஆறைங் காதம்' என்று கோவலன் கூறுதல், நாடுகாண் காதையில் (153-155),

> ஊரிடை இட்ட நாடுடன் கண்டு
> காவதம் அல்லது கடவார் ஆகி,
> பன்னாள் தங்கிச் செல்நாள்

என்று இளங்கோ அடிகள் கூறுதல், கட்டுரை காதையில்,

> ஆடித் திங்கள் பேரிருள் பக்கத்து
> அழல்சேர் குட்டத்து அட்டமி ஞான்று
> வெள்ளி வாரத்து ஒள்ளெரி யுண்ண
> உரைசால் மதுரையோடு அரைசு கேடுறும்

என்று மதுராபதி கூறுதல் ஆகிய குறிப்புகளை நுணுகி ஆராய்ந்து அடியார்க்குநல்லார், கதை நிகழ்ச்சிகளைக் காலத்துடன் சேர்த்துக் காணுகின்றார்.

நாடுகாண் காதையில்,

> வான்கண் விழியா வைகறை யாமத்து
> மீன்திகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்
> காரிருள் நின்ற கடைநாள் கங்குல் (1–3)

என்ற அடிகளுக்குப் பொழிப்புரை எழுதியபின் விரிவாகக் கால ஆராய்ச்சியில் ஈடுபடுகின்றார்.

"வைகறை என்னும் யாமத் திடத்து, வெண்மதியானது விசும்பினின்றும் நீங்கிற்றாகக் கரிய இருள் கடைக்கண் நின்ற கங்குற் பொழுது" என்று உரை கூறி, என்பது அந்தச் சித்திரைத் திங்கள் பகுதி நாள்—சோதி, திதி—மூன்றாம் பக்கம், வாரம்—ஞாயிறு. இத் திங்கள் இருபத்தெட்டில் சித்திரையும் பூரணையும் கூடிய சனிவாரத்தில் கொடியேற்றி 'நாலேழ் நாளினும்' (மணி 1:8) என்பதனான் இருபத்தெட்டு நாளும் விழா நடந்து கொடியிறக்கி வைகாசி இருபத்தெட்டினிற் பூருவ பக்கத்தின் பதின் மூன்றாம் பக்கமும் சோமவாரமும் பெற்ற அனுடத்தில் நாட்கடலாடி ஊடுதலின் வைகாசி இருபத்தொன்பதில் செவ்வாய்க்கிழமையும் கேட்டையையும் பெற்ற நாசயோகத்து நிறைமதிப் பதினாலாம் பக்கத்து வைகறைப் பொழுதினிடத்து நிலவுபட்ட அந்தரத்து இருளிலே என்றவாறு. அது பூர்வ பக்கமென்பது தோன்ற, "காரிருள் நின்ற கடை நாள் கங்குல் என்றார்" என்று காலத்தை ஆராய்ந்து முடிவு செய்கின்றார்.

காடுகாண் காதையில் (9) 'அன்று, அவர் உறைவிடத்து அல்கினர்' என்பதற்கு விளக்கம் கூறுகையில், 'இங்ஙனம் கூறியது, 'ஆறைங் காதம்' (10:42) என்றமையானும், 'காவதம் அல்லது

கடவார் ஆகி, பன்னாள் தங்கிச் செல்நாள் ஒருநாள் (10:154-5) என்றமையானும், ஈண்டும் 'அன்று அவர் உறைவிடத்து அல்கினர் அடங்கி' என்றமையானும் சிலநாள் சென்ற வழிச் செலவு ஒழிந்து ஒழிந்து ஆண்டு இருந்து ஆறிச்சென்றமை உணர்த்தற்கு எனக் கொள்க" என்று உரைக்கின்றார்.

ஆடித்திங்களில் வெள்ளிக்கிழமையன்று மதுரை எரிந்தது என்ற குறிப்பை மனத்தில் கொண்டு, இவர் அதற்கேற்ப முன் நிகழ்ச்சிகளுக்குக் காலம் கூறுகின்றார்.

புறஞ்சேரி இருத்த காதையில்,

**வேனில் வீற்றிருந்த வேய்கரி கானத்து (36)**

என்ற அடியின் உரைவிளக்கமாக "ஆனித்திங்கள் கடை நாள் ஆகலின் 'வீற்றிருந்த' என்றார்" என்று உரைக்கின்றார். ஊர் காண் காதையில்,

**குடகாற்று எறிந்து கொடிநுடங்கு மறுகில்**

என்ற அடி உரையின் கீழ், "ஆடித் திங்கள் என்பது தோன்றக் குடகாற்றுக் கூறினார்" என்கிறார்.

மாதங்களையேயன்றிக் கதை நிகழ்ச்சிக்குரிய நாட்களையும் இவர் குறிப்பிடுகின்றார். கொலைக்களக் காதையில், கண்ணகி உணவு சமைக்க ஏற்பாடு செய்யப்படுவதைக் குறிப்பிடுகையில் (18-21) "இத்துணையும் கூறியது இவர்கள் சென்ற அன்றிரவு செய்தனவும் மேற் செய்வனவும்' என்றும், "இனி மற்றை நாளைச் செய்தி கூறுகின்றார்" என்றும் கூறுகின்றார்.

## நிகழ்ச்சியும் இடமும்

கதைநிகழ்ச்சிக்குரிய இடங்களைப்பற்றியும் இவர் சிந்தித்துள்ளார். இந்திரவிழவூரெடுத்த காதையில் "வச்சிர நாடு" என்பதற்குச் (99) "சோணைக் கரை" என்று பொருள் கூறுகின்றார். சோணை என்னும் ஆற்றங்கரையில் இருந்த நாடு வச்சிர நாடாகும். காடுகாண் காதையில்,

**கந்தன் பள்ளிக் கடவுளர்க் கெல்லாம்**
**அந்தில் அரங்கத்து அகன்பொழில் (6-7)**

என்ற அடிகளில் குறிப்பிடும் அரங்கம் என்பது 'திருவரங்கம்' என்று எழுதுகின்றார்.

## காப்பிய உறுப்பினர் பண்பு

காப்பிய மாந்தர்களின் பண்பையும் அடியார்க்குநல்லார் குறிப்பிடுகின்றார்.

பொருள்தேடச் செல்லும் தலைமகன் தன்னுடன் மனைவியை அழைத்துச் செல்லும் வழக்கம் இல்லை. கோவலன் அவ்வழக்கத்திற்கு மாறாகக் கண்ணகியுடன் மதுரை செல்கின்றான். சிறந்த குடியில் பிறந்தவர் இவ்வாறு செய்யார் என்று கோவலன் உணர்ந்து வருந்துவதாய் அடியார்க்குநல்லார் குறிப்பிடுகின்றார். ஊர்காண் காதையில் (17) கோவலன் கவுந்தியை வணங்கி, "நெறியின் நீங்கியோர் நீர்மையேன் ஆகி... சிறுமையுற்றேன்!" என்று வருந்துகின்றான். இந்த அடிக்கு விளக்கம் கூறும்போது, "ஒழுக்கமுடைய விழுக்குடிப் பிறந்தோர் நாணுடை மகளிரொடு நீணெறிச் செல்லார் என்பது கருதி, 'நெறியின் நீங்கியோர் நீர்மையேனாகி' என்றான் என உணர்க" என்று உரைக்கின்றார்.

கவுந்தியடிகளுக்குச் சாபம் இடும் தவவலிமை இருந்ததே தவிர, மக்களுக்கு எதிர்காலத்தில் வர இருக்கும் துன்பத்தை முன்னரே உணர்ந்துகூறும் ஆற்றல் இல்லை என்பதை அடியார்க்கு நல்லார் உணர்த்துகின்றார். நாடு காண் காதையில், 'ஈங்கு ஒழிக என ஒழியீர்' (55) என்ற அடிக்கு விளக்கமாக, "ஒழிக என ஒழியீர் என்பதற்கு, இவர்க்கு எதிர்வது அறிந்து கூறினார் எனின், ஒரு பொழுதிற்கு இத்துணை ஓம்படை எல்லாம் கூறவேண்டா ஆகலானும் இவர்க்குத் தவப்பயனாலே சபித்தலன்றி, காலவுணர்ச்சி இன்மை உணர்க" என்று சிறப்பாக உரைக்கின்றார். மேலும், கவுந்தியடிகள், மனைவியை அழைத்துக் கொண்டு கணவன் பொருள்தேடச் செல்லுதலை விரும்பாதவர் என்றும், பண்டைய வழக்கத்தைப் புறக்கணிக்க விரும்பாதவர் என்றும் இவர் கருதுகின்றார். நாடுகாண் காதையில் (35), "உரியது அன்று ஈங்கு ஒழிக என ஒழியீர்" என்று கவுந்தியடிகள் கோவலனுக்குக் கூறும் அறிவுரைக்கு அடியார்க்கு நல்லார், "குடிப் பிறப்பிற்கும் இவளை (கண்ணகியை) ஒருங்குகொண்டு சேறல் ஏலாது ஆதலின் இனிச் செலவை ஒழிமின் என்று யாம் ஒழிப்பவும் ஒழிக்கின்றிலீர்" என்று பொருள் உரைக்கின்றார்.

கோவலன் கொலைக்குக் காரணமாக இருந்த பாண்டியன் கொடுங்கோலன் அல்லன் என்பதை அடியார்க்கு நலலார் "என் கோதைதன் காற்சிலம்பு அடிபட்ட கள்வன் **கையதாயின்** கொன்று கொணர்க எனினும் தன்கண் (பாண்டிய மன்னனிடம்) கொடுங்கோன்மை இன்மை உணர்க" (கொலைக்-153) என்று கூறு கின்றார்.

கனாத்திறமுரைத்த காதையில் 'சிலம்புள கொணம்' என்பதற்கு (73) விளக்கமாகப் பின்வருமாறு கூறிக் கண்ணகியின் உயர்பண்பை வெளிப்படுத்துகின்றார்: "சிலம்புள என்றாள், இவை

ஒழிந்த கலன் எல்லாம் தொலைதலால், இவை அணியாதிருத்தலின் அவனறியானாகக் கருதினும் அவன் தளர்ச்சி கூறுதலால், தான் இவையுண்மை நினைந்து கூறினாள் என்க. புலந்து கூறினாள் எனில் கற்பின் தன்மை அன்றாம்"

## பிறர்உரை சுட்டல்

அடியார்க்குநல்லார் தமக்குமுன் இருந்த உரைகளையும் கருத்துகளையும் தேவையான இடங்களில் சுட்டுகின்றார்.

இந்திரவிழவூரெடுத்த காதையில் (157), "இனி, 'அவைக் களத்தார் ஐந்து' (157-அரும்பதவுரை) எனக்காட்டுவர் அரும்பதவுரையாசிரியர்" என்று குறிப்பிடுகின்றார். துன்ப மாலையுள் (2-7) "முதுமகள் போயினாளுடைய சாயலாள் அரவங் கேட்டு வந்து அவ்விடத்து நின்றாள் உளள் என ஐயை மேல் ஏற்று வாருமுளர்" என்கிறார். இன்னும் வேறு சில இடங்களில் பிறர் கொண்ட பாடத்தையும் பொருளையும் சுட்டிச் செல்கின்றார்.

## உரைநடைச் சிறப்பு

அடியார்க்குநல்லார் உரை, பல இடங்களில் ஓசை இன்பம் பயக்கும் சிறந்த கவிதைபோல உள்ளது. பதிகத்தின் உரையில் இளங்கோ அடிகள் துறவுபூண்ட வரலாற்றினைக் கவிதைச் சுவை சொட்டச் சொட்ட எழுதுகின்றார். அத்தகைய இடங்கள் இன்னும் பல இவர் உரையில் உள்ளன. சான்றுக்கு ஓரிடத்தைக் காண்போம்.

'ஒழுக்கம் உடைய விழுக்குடிப் பிறந்தோர் நாணுடை மகளிரொடு நீணெறிச் செல்லார்' (ஊர்காண்-17) என்று ஓசை நயம் தோன்ற எழுதுகின்றார். அவ்வுரைப் பகுதியை,

**ஒழுக்கம் உடைய விழுக்குடிப் பிறந்தோர்**
**நாணுடை மகளிரொடு நீணெறிச் செல்லார்**

என அகவாற்பாவின் ஈரடியாக அமைக்கலாம். இத்தகைய சிறப்பு வாய்ந்த உரைப்பகுதி பல இடங்களில் உள்ளன.

## பருந்தும் நிழலும்

அடியார்க்குநல்லார், பருந்தும் நிழலும் எனப் பாவும் உரையும் பொருந்த அமைத்தவர். மூலத்தோடு உரை நன்கு பொருந்தி வருவதைக் கீழே வரும் பகுதிகள் உணர்த்தும்.

**நீல மேகம் நெடும்பொற் குன்றத்துப்**
**பால்விரிந்து அகலாது படிந்தது போல**
**ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறற்**
**பாயற் பள்ளிப் பலர்தொழுது ஏத்த**

2.30.

விரிதிரைக் காவிரி வியன்பெருந் துருத்தித்
திருஅமர் மார்பன் கிடந்த வண்ணமும்

(காடுகாண் — 35–40)

'நீலமேகம் ஓங்கிய பொன்மலைமீதே பக்கங்களில் விரிந்து மிகாமல் ஒக்கப் படிந்ததுண்டாகில் அதனையொப்ப, தனது படம் விரித்து எழுந்த ஆயிரம் தலையையும் கிட்டுதற்கரிய திறலையும் உடைய பாம்பணைப் பள்ளிமீதே தேவர்கள் பலரும் தொழுது ஏத்தத் திரைவிரியும் காவிரியாற் றிடைக்குறையிலே திருமகள் பொருந்தித் திருமார்பையுடையோன் கிடந்த கோலம்''.

பொங்கி எழுந்தாள் விழுந்தாள் பொழிகதிர்த்
திங்கள் முகிலொடும் சேண்நிலம் கொண்டெனச்
செங்கண் சிவப்ப அழுதாள்தன் கேள்வனை
எங்கணாஅ என்னா இனைந்தேங்கி மாழ்குவாள்

(துன்பமாலை—30–33)

'தனது ஆற்றாமையான் வசமிழந்து நிலத்தினின்றும் எழுந்து மறித்தும் விழுந்து கிடக்கின்றவள் எங்ஙனம் வீழ்ந்து கிடந்தாள் எனின்—கதிரையுடைய திங்கள் பொழியக் கால்கொண்டு வீழ்ந்த புயலோடு பெரிய நிலத்தில் வீழ்தலைக் கொண்டதென விழுந்தாள்; விழுந்தவள் தன் கணவன் முன்னர் வருகெனப் பொருந்துதலாற் செவ்வரிபாய்ந்த கண் கலங்கிச் சிவக்கும்படி தன் கொழுநனை 'நீ எவ்விடத்தாய்தான்' என்னா வருந்திப் பொருமி மயங்கி யாவும் தோன்றா என்று அழுதாள்''

## நயமும் விளக்கமும்

அடியார்க்குநல்லார் சில அடிகளுக்குப் பொருள் விளக்கம் கூறி நயம் கூறுகின்றார்.

...என் காற்சிலம்பு
கொள்ளும் விலைப்பொருட்டால் கொன்றாரே ஈதொன்று

என்பதற்கு, 'என் காற்சிலம்பு என்றாள்—தான் அரசன்; யான் ஒரு வணிகன் மனைவி, என் காலணியின் ஒன்று பெற்ற விலை தாராமைக் கள்வன் என்று பெயரிட்டுக் கொன்றார்களே என்று. இஃதோர் அநியாயம் இருந்தபடி என்ன என்று தெளிந்து கூறினாள். கொன்றாரே எனப் பன்மை கூறினாள்; அரசனோடு அமைச்சரையும் கருதி' என்று நயம் கூறுகின்றார்.

துன்பமாலையில் நெடுமால் (4) என்ற சொல்லுக்கு 'அந்தர வானத்து எம்பெருமான்' என்று பொருள் உரைக்கின்றார்.

ஆய்ச்சியர் குரவையில் முந்நீர் (31) என்பதற்குத் தரும் விளக்கம் போற்றத்தக்கதாய் உள்ளது:

"முந்நீர்—கடல், ஆகுபெயர். ஆற்று நீர், ஊற்று நீர், மேல் நீர் என இவை என்பவர்க்கு அற்றன்று; ஆற்றுநீர் மேல்நீர் ஆகலானும் இவ்விரண்டும் இல்வழி ஊற்றுநீரும் இன்றாம் ஆதலானும் இவற்றை முந்நீர் என்றல் பொருந்திய தன்று.

"முதியநீர் எனின், நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும் (குறள்—17) என்பதனால் அதுவும் மேல் நீரின்றி அமையாமையின் ஆகாது:

"ஆனால், முந்நீர்க்குப் பொருள்யாதோ எனின், முச்செய்கை யுடைய நீர் முந்நீர் என்பது; முச்செய்கையாவன மண்ணைப் படைத்தலும் மண்ணை அழித்தலும் மண்ணைக் காத்தலும் ஆம்".

கொலைக்களக் காதையில் வரும் 'குமரி வாழை' என்ற சொல்லுக்கு விளக்கம் எழுதுகையில், "குமரி வாழை—இது பெயரின் வந்த சமாதி என்னும் அலங்காரம்" என்கிறார். சமாதி என்பதைத் தண்டியலங்காரம்,

**உரிய பொருளன்றி ஒப்புடைப் பொருள்மேல்**
**தரும்வினை புணர்ப்பது சமாதி யாகும்**

**(தண்டி—25)**

என்று கூறி வினைபற்றி வருவது என்று உரைக்கின்றது. பெயர் பற்றியும் வரும் என்கிறார் அடியார்க்குநல்லார்.

கனாத்திறம் உரைத்த காதையில் வரும் 'இடுதேள் இடுதல்' (48) என்பதற்கு, "தேளிடப் படுபவர் காணாமே தேளல்லாதது ஒன்றை மறையக் கொடுவந்து மேலே இட்டு அவரைக் கலங்கப் பண்ணுதல்; பாய்ச்சுத் தேள் என்பாரும் உளர்" என்று விளக்கம் உரைக்கின்றார்.

வேனிற் காதையில் "கடல்விளையாட்டினுள் கோவலன் ஊட" (14, 15) என்பதற்கு, "விளையாட்டினுள் என்றது விளையாட்டுப் பூசல் வினையாயிற்று என்னும் வழக்குப் பற்றி" என்று பழமொழி ஒன்றினை நினைவூட்டுகின்றார்.

புறஞ்சேரி இறுத்த காதையில், "இடிதரும் உளியம்" (32) என்பதற்கு "கரடி இடிக்கும்" என்று பொருள் உரைத்து, "இடிப்பு—அதிர்ப்பு; உற் டட்ட டட்டெனப் பற்பறை கொட்டல்" என்று கரடியின் ஒலியைக் கூறுகின்றார்.

## பலபொருள் கூறுதல்

சில வரிகளுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்களையும் அடியார்க்குநல்லார் தருகின்றார். சிலேடையாக அமைந்த வற்றையும் தெளிவுபடுத்துகின்றார்.

வேட்டுவ வரியில்,

**இட்டுத் தலைஎண்ணும் எயினர் அல்லது**
**சுட்டுத்தலை போகாத் தொல்குடி (20–21)**

என்ற இரு அடிகளுக்கு மூன்று வகையாகப் பொருள் கூறியுள்ளார்:

1. "தாம் சுட்டிய பகைஞர் தலையைத் தாமே அறுத்திட்டு எண்ணுவது அல்லது; பகைஞர் சுட்டி எண்ணுதல் அவரிடத்து முடிவு போகாமைக்குக் காரணமாகிய எயினர் தொல்குடி.

2. தலைகள் அரிந்துவைக்க வைக்கப் பிறர் எண்ணப் படுவது அல்லது, ஈமத்திற் சுடப்பட்டு அவம் போகாக்குடி.

3. அரசன் சுட்டிய மாற்றரசர் தலையைப் பிறரிடத்துப் போகவிடாக்குடி."

ஊர்காண் காதையில்,

**நுதல்விழி நாட்டத்து இறையோன் (7)**

என்ற அடிக்கும் பின்வருமாறு மூன்று பொருள் உரைக்கின்றார்:

1. இறைவி கண் புதைத்தபொழுது நெற்றியில் புறப்பட விட்ட கண்ணையுடைய இறைவன்.

2. நுதலின் இமையா நாட்டம்.

3. காமனை விழித்த நாட்டம்.

புறஞ்சேரி இறுத்த காதையில்,

**கருநெடுங் குவளையும் ஆம்பலும் கமலமும்,**
**தையலும் கணவனும் தனித்துறு துயரம்**
**ஐய மின்றி அறிந்தன போலப்**
**புண்ணீர் வண்டு பரிந்தினைந்து ஏங்கி,**
**கண்ணீர் கொண்டு காலுற நடுங்க (184–188)**

என்ற பகுதியில் கண்ணீர் கொண்டு, காலுற நடுங்க என்ற சொற்கள் இருபொருள்படும்படி அமைந்துள்ளன. அடியார்க்கு நல்லார் இரு பொருளும் தருகின்றார். "கண்ணீரைக் கொண்டு, காலுற நடுங்கா நிற்க" என்றும்; "கண்ணீர்—கள்ளாகிய நீர் எனவுமாம். காலுற—காலிலே உற எனவும், காற்று உறுதலால் எனவும் ஆம்" என்றும் இருவேறு பொருளைத் தருகின்றார்.

## சொல்லும் பொருளும்

அடியார்க்கு நல்லார், சொற்களுக்குச் சிறந்த பொருள் உரைக்கின்றார். அவற்றுள் சிலவற்றைக் கீழே காண்போம்.

வாளைப் பகுவாய் வணக்குறு மோதிரம்

வாளை மீனினது அங்காத்த வாயை வணங்குதலுறுவிக்கும் நெளி (கடலாடு—94).

'பட்டினி நோன்பிகள்—இரண்டு உவாவும் அட்டமியும் முட்டுப்பாடும் பட்டினி விட்டுண்ணும் விரதிகள். சிறு குரங்கு—மெலிந்த குரங்கு. கடைநாள்—மரணம்.' (அடைக்கல -163,91)

'கோளிப்பாகல்—வெளிப்படை; கோளி—பூவாது காய்க்கும் மரம். பாகல்-பலா (கொலைக்கள-24).

"வறுமொழியாளர்—பயனில கூறுவோர்; வம்பப் பரத்தர் - புதிய காம நுகர்ச்சியை விரும்பும் காமுகர்; பரத்தையை நுகர் வானும் பரத்தன். குறுமொழி—சிறுசொல் ஆவது பிறரை இகழ்ந்து கூறுதல். நெடுநகை புக்கு-வெடிச் சிரிப்புக்கு உட்பட்டு." (கொலைக்கள—63-70).

"சுடு நோக்கு—சுடுவது போலவும் நோக்கு: என்றது கொள்ளிக் கண்" (இந்திர—84).

## மாறுபட்ட கருத்து

அடியார்க்கு நல்லார் சிகண்டி என்பவரை அகத்திய முனிவரின் மாணவர் என்று உரைப்பாயிரத்தில் குறிப்பிடுகின்றார். 'குறு முனிபால் கேட்ட மாணாக்கர் பன்னிரு வருள் சிகண்டி என்னும் அருந்தவமுனி' என்று கூறுகின்றார். சிலர் சிகண்டியை அகத்தியர் மாணவராகக் கொள்ளவில்லை தொல் காப்பியன், அதங்கோட்டாசான், துராலிங்கன், செம்பூட்சேய், வையாபிகன், வாய்ப்பியன், பனம்பாரனார், கழாரம்பர், அவிநயன், காக்கை பாடினியார், நற்றத்தன், வாமனன் ஆகிய பன்னிருவரை அகத்தியர் மாணவர் என்பர்.

'போற்றி' என்ற சொல்லுக்குப் பலர் பலவிதமாய் இலக்கணம் கூறுகின்றனர். அடியார்க்குநல்லார் இகரஈற்று வியங் கோளாகக் கொண்டு 'போற்றுவாயாக' என்று பொருள் கூறு கின்றார்.

## தனிவெண்பாக்களும் உரையும்

சிலப்பதிகாரத்தில் உள்ள சில காதைகளின் கீழே தனி வெண்பாக்கள் (ஒன்றோ இரண்டோ) இடம் பெற்றுள்ளன. இவற்றை இயற்றியவர் இளங்கோ அடிகளே என்று சிலரும், பின்னால் சிலப்பதிகாரத்தைக் கற்றவர்கள் எழுதிச் சேர்த்தவை என்று சிலரும் கூறுவர்.

சிலப்பதிகார வெண்பாக்கள் சிலவற்றிற்கு அரும்பத வுரையும் அடியார்க்கு நல்லார் உரையும் இருப்பதால் அவை அவ் வுரையாசிரியர்களுக்கு முன்னரே தோன்றியவை என்பது உறுதி. சில வெண்பாக்களுக்கு உரை இல்லாமையால் அவை பின்னர்த் தோன்றியவை என்னலாம். அவற்றை இங்கே விரிவாகக் காண்போம்.

கொலைக்களக் காதையின் கீழ்,

> **நண்ணும் இருவினையும் நண்ணுமின்கள் நல்லறமே**
> **கண்ணகி தன்கேள்வன் காரணத்தால்—மண்ணில்**
> **வளையாத செங்கோல் வளைந்ததே பண்டை**
> **விளைவாகி வந்த வினை**

என்ற வெண்பா உள்ளது. இதற்கு அரும்பதவுரையாசிரியர், 'நண்ணும் கண்ணகி தன் கேள்வன் காரணமாக வளைந்தது. இது பண்டை வினை. இருவினையும் நண்ணும் ஆதலால் உலகத்திர், அறஞ்செய்மின் என்று **இளங்கோ அடிகள்** அருளிச் செய்தது' என்றும்; அடியார்க்கு நல்லார் 'உலகத்தீர்! நல்வினையே செய்யுமின்கள் என்று **அடிகள்** கூறினார் என்க' என்றும் கூறியுள்ளார். இரு பெரும் உரையாசிரியர்களும் மேலே காட்டிய வெண்பாவை இயற்றியவர் இளங்கோ அடிகள் என்றே கூறியுள்ளனர்.

மதுரைக் காண்டத்தின் இறுதியாகிய கட்டுரைக் காதையின் கீழே,

> **தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்**
> **தெய்வந் தொழுந்தகைமை திண்ணிதால்—தெய்வமாய்**
> **மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி**
> **விண்ணகமா தர்க்கு விருந்து**

என்ற வெண்பா உள்ளது. இவ்வெண்பாவினை இயற்றியவர் இளங்கோ அடிகள் என்றே அடியார்க்கு நல்லார் கருதுகின்றார். ஊர்சூழ்வரியில் (24), பெருந்தெய்வம்—தெய்வத்திலும் பெரியது; கற்புடைத் தெய்வம். என்னை? தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளை, தெய்வந் தொழும் தகைமை திண்ணமால் எனவும் கூறினமையின்" என்று விளக்கம் தரும்போது மேலே கண்ட வெண்பாவைக் காட்டுகின்றார்.

அந்திமாலைச் சிறப்புச்செய் காதையின் இறுதியில் 'கூடினார் பால் நிழலாய்' என்ற வெண்பாவும், கடலாடுகாதைக்கு அடியார்க்கு நல்லார் உரைக்குப்பின் "வேலை மடற்றாழை" என்ற வெண்பாவும் உள்ளன. இவ்விரண்டு வெண்பாக்களுக்கும்

அடியார்க்கு நல்லார் உரையின்மையால் அவை அவர்க்குப் பின்னர்த் தோன்றியவை என்னலாம்.

வேனிற்காதையின் கீழே, 'செந்தாமரை விரிய' என்ற வெண்பாவும், 'ஊடினீர் எல்லாம்' என்ற வெண்பாவும் காணப் படுகின்றன. அவற்றுள் இரண்டாவதாக உள்ள 'ஊடினீர்' என்ற வெண்பாவுக்கே அடியார்க்குநல்லார் உரை உள்ளது. ஆதலின் அப் பாடல் அவருக்கு முன்னும், 'செந்தாமரை விரிய' என்ற பாடல் அவருக்குப் பின்னும் தோன்றி இருக்கவேண்டும்.

கனாத்திறம் உரைத்த காதையின் கீழ் உள்ள 'காதலி கண்ட' என்ற வெண்பாவிற்கும் அடியார்க்குநல்லார் உரை உள்ளது.

## மேற்கோள் நூல்கள்

நச்சினார்க்கினியர் தாம் கூறும் மேற்கோள் எந்த நூலில் உள்ளது என்று கூறுவதில்லை. என்றார் பிறரும், என்பவை போல, எனவும் கூறுவன காண்க என்று கூறி மேற்கோள் காட்டுவார். ஆனால், அடியார்க்குநல்லார் தாம் கூறும் மேற்கோள் எந்த நூலைச் சேர்ந்தது என்று பெயர் கூறியே விளக்குவார். மிகச் சில இடங்களில் மட்டுமே மேற்கோள் எந்த நூலில் உள்ளது என்று குறிப்பிடாமல் செல்வார். மேற்கோள் கூறும் நூல் அவற்றின் உட்பகுதி, பாடல் ஆகியவற்றையும் இவர் குறிப்பிடுகின்றார். ஆய்ச்சியர் குரவையுள், கொல்லையஞ்சாரல் என்ற பாட்டு (20) உரையில், "கலியுள் முல்லைத் திணையின்கண் ஆறாம் பாட்டினுள், "கழுவொடு... வியன்புலத்தார்" (கலி. 106:1–5) எனக் கருவி கூறினமையானும்" என்று மிகத் தெளிவாக மேற்கோளை இடம் சுட்டிக் காட்டுகின்றார். ஏனைய உரையாசிரியர்களிடம் இல்லாத பண்பு இது.

உரைப்பாயிரத்துள், "இவ்வியலிசை நாடகப் பொருள் தொடர்நிலைச் செய்யுளை அடிகள் செய்கின்ற காலத்து இயற்றமிழ்நூல் தொல்காப்பியம் ஆதலானும் பிறர் கூறிய நூல்கள் நிரம்பா இலக்கணத்தன ஆதலானும் அந் நூலின் முடிபே இதற்கு முடிபு என்று உணர்க" என்கிறார் இவர்.

பதிகத்தின் உரையில் இவர், "பொருளாராய்ச்சி எண் வகைய; அவை திணை, பால், செய்யுள், நிலம், காலம், வழு, வழக்கு, இடம் என்பன" என்று கூறி அவற்றுள் ஒவ்வொன்றினையும் விளக்குகின்றார். அவற்றிற்கு மேற்கோள் சிலப்பதிகாரச் செய்யுள்களிலிருந்து தருகின்றார். சிலப்பதிகாரம் முழுமையும் இவர் நெஞ்சிற்குள் நுழைந்து ஏற்ற மேற்கோள்களாக வெளிவருகின்றது. அடியார்க்கு நல்லாரின் நுண்ணிய புலமைத் திறனும், நினைவாற்றலும் நம்மை வியக்கச் செய்கின்றன.

திருக்குறளை மேற்கோளாகக் காட்டும் இடங்களும் உரை நடைப்படுத்தும் இடங்களும் உள்ளன. மங்கல வாழ்த்துப் பாடலில், "மண்தேய்த்த" (36) என்ற அடிக்குப் பொருள் எழுதிய பின், "மண்தேய்த்த என்றார், புகழ்வளரப் பூமி சிறுகலான்; மண் இடத்திற் சிறிது என்றார் வள்ளுவனாரும்" என்று கூறுகின்றார். இவ்விடத்தில் இவர் குறிப்பிடும் குறள் இன்னதென்று டாக்டர் உ.வே. சாமிநாதையர் குறிப்பிடவில்லை. ஆராய்ச்சி அறிஞர் மு. இராகவ ஐயங்கார், இங்கே குறிப்பிடப்படும் குறள்,

**ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்**
**பொன்றாது நிற்பது ஒன்றில்**

என்பதாகும் என்று கூறியதாய் ஒரு கருத்து வழங்குகின்றது.

நாடுகாண் காதையில் கவுந்தி வம்பப்பரத்தைக்கும் வறுமொழியாளனுக்கும் சாப விடை தரும் பகுதிக்கு (241-5) எழுதிய விளக்கத்தில், 'மக்கட் பிறப்பை ஒரு வார்த்தையின் இழந்து இழிபிறப்புற்றார் என்றவாறு; எனவே, யாகாவாராயினும் நாகாத்தல் வேண்டும் என்பதாயிற்று' என்று திருக்குறளை, உரை நடைப்படுத்துகின்றார்.

மனையறம்படுத்த காதையில் கோவலன் கண்ணகியை,

**மாசறு பொன்னே வலம்புரி முத்தே**
**காசறு விரையே கரும்பே தேனே** **(73–4)**

என்று பலவாறு பாராட்டுகின்றான். இவ்வரிகளுக்கு, "கட்கு இனிமையான் மாசறவோடிய பொன்னை ஒப்பாய்; ஊற்றின் இன்பத்தான் முத்தை ஒப்பாய்; சுவையின் இனிமையாற் கரும்பை ஒப்பாய்; இனிய மொழியை யுடைமையால் தேனை ஒப்பாய்; என்று கூறி, 'இவற்றால் சொல்லியது, ஒளியும் ஊறும் நாற்றமும் சுவையும் ஓசையும் ஆகலின்,

**கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்**
**ஒண்டொடி கண்ணே உள** **(1101)**

என நலம் பாராட்டப்பட்டன" என்று விளக்கம் உரைக்கின்றார்.

மனையறம்படுத்த காதையில்,

**விரைமலர் வாளியொடு வேனில்வீற் றிருக்கும்**
**நிரைநிலை மாடத்து அரமியம் ஏறி**

என்பதன் உரையின் கீழ், 'இஃது உதாரம் என்னும் அலங்காரம் என்னை?

**உதாரம் என்ப தோதிய செய்யுளிற்**
**குறிப்பின் ஒருபொருள் நெறிப்படத் தோன்றல்**

என்பது அணியியலாகலின்' என்று உரைக்கின்றார். இங்கே அணியியல் என்று இவர் குறிப்பிடும் சூத்திரம் தண்டியலங் காரத்தில் (பொது21) உள்ளது. இவர் காலத்தில் தண்டியலங்காரத் திற்கு அணியியல் என்று வேறு பெயர் வழங்கிற்று என்பதா? அணியியல் என்ற ஒரு நூல் இருந்து அதிலுள்ள சூத்திரங்களைத் தண்டியலங்காரம் எடுத்துக் கொண்டது என்பதா? இவ் வினாக் களுக்குத் தக்க விடை காண இயலவில்லை.

இந்திரவிழவூர் எடுத்த காதையில் (16-98) பல இடங்களில் கலிங்கத்துப் பரணிச் செய்யுள்களை இவர் மேற்கோள் காட்டு கின்றார். 'நீண்ட பலிபீடத்தில்' என்றதாழிசையை (கலிங். கோயில். 16) மேற்கோள் காட்டி 'என்றாற் போல் வரும் விருத்தச் செய்யுள்' என்கின்றார்.

**மோடி முன்றலையை வைப்பரே**
**முடிகுலைந்த குஞ்சியை முடிப்பரே**
**ஆடிநின்றுகுரு திப்பு துத்திலதம்**
**அம்முகத்தில் அமைப்பரே**

என்பது கவிச்சக்கர விருத்தி என்று கூறுகின்றார். இச் செய்யுள் கலிங்கத்துப் பரணியில் இல்லை. கவிச்சக்கரவிருத்திச் செய்யுள் என்று கலிங்கத்துப் பரணிச் செய்யுளை இவர் கூறுவதேன்? மேலே கண்ட செய்யுள் கவிச்சக்கரவிருத்தியைச் சேர்ந்ததா? இத்தகைய கேள்விகளுக்கு வருங்காலம் விடை கூறும்.

'அடிக்கழுத்தின்' என்ற கலிங்கத்துப் பரணிச் செய்யுளையும் (கலிங். கோயில் 15) மேற்கோள் காட்டுகின்றார்.

கலிங்கத்துப் பரணி மேற்கோள் பாடல்கள் அடியார்க்கு நல்லார் காலத்தை அறியத் துணைபுரிகின்றன.

வேனிற் காதையின் தொடக்கத்தில் மூன்று தமிழ்ச் சங்கத்தின் வரலாறு, கடல் கொண்ட தொடக்கத்தில் இருந்த நாடுகளின் பெயர் ஆகியவற்றை மிக விரிவாகக் கூறுகின்றார். மேலும், அதனைத் தொடர்ந்து, இஃது என்னைப் பெறுமாறு எனின், கணக்காயனார் உரையாசிரியராகிய இளம்பூரண அடிகள் முகவுரையானும் பிறவாற்றானும் பெறுதும்' என்று உரைக்கின்றார்.

இவ்வுரைப் பகுதியால் உரையாசிரியர் என்பவர் இளம் பூரணரே என்ற உண்மையும் அவர் ஒரு துறவி (அடிகள்) என்ற செய்தியும் வெளிப்படுகின்றன. இளம்பூரணர் எந்த நூலின் முகவுரையில் இவ்வாறு கூறினார் என்பது புலனாகவில்லை. இன்று அச்சாகியுள்ள தொல்காப்பியம் இளம்பூரணர் உரையின் முகவுரையில் முச்சங்க வரலாறோ, தென்னாடு கடல்கொண்ட

செய்தியோ கூறப்படவில்லை. அடியார்க்குநல்லார் கூறும் செய்தி மேலும் ஆராய்தற்குரியது.

அடைக்கலக் காதையில் கூறப்படும் கீரியைக் கொன்ற பார்ப்பனத்தி கதையில் (54–75) அவள் கணவன் தந்த 'வடமொழி வாசகம் செய்த நல்லேடு' கூறும் செய்தியாக, பஞ்ச தந்திரம் என்ற வடமொழி நூலிலிருந்து சுலோகத்தை எடுத்துக் காட்டுகின்றார்.[1]

வடமொழியில் உள்ள பஞ்ச தந்திரம் கூறும் கீரியைக் கொன்ற பார்ப்பனத்தி கதையும் சிலப்பதிகாரம் கூறும் கதையும் ஒன்றே என்பது அடியார்க்குநல்லார் கருத்துப் போலும்! இதே கருத்தில் ச. வையாபுரிப் பிள்ளை பஞ்ச தந்திரத்திற்குப் பின்னால் தோன்றியது சிலப்பதிகாரம் என்பர்.

அடைக்கலக் காதையில் கனா நூலையும் (95–106), கொலைக் களக் காதையில் (162–5) களவு நூலையும் குறிப்பிடுகின்றார்.

'கொன்றையன்' என்ற திருக்கோவையார் (400) பாடலையும் இவர் மேற்கோள் காட்டுகின்றார். (கொலை. 148–53).

சங்க நூல்களிலிருந்தும், மணிமேகலை, சிந்தாமணி, வளையாபதி, பெருங்கதை முதலிய காப்பியங்களிலிருந்தும் புறப் பொருள் வெண்பாமாலை போன்ற இலக்கணங்களிலிருந்தும் இவர் பல மேற்கோள் தருகின்றார்.

**பல்கலைப் புலமை**

இளங்கோ அடிகள் பல கலைகளை நுணுகிக் கற்ற கலைச் செல்வர். சிலப்பதிகாரத்தில் தொட்ட இடமெல்லாம் கலைமணம் கமழும். இளங்கோ அடிகள் முத்தமிழ் கற்றுத் துறைபோகிய வித்தகர். அவர் நூலுக்கு உரை இயற்றிய அடியார்க்குநல்லார், அவரது புலமைப் பரப்பைக் கண்டு வியந்தவர். அவர் கூறும் கலைகளை விளங்கிக் கொண்டவர்.

அடியார்க்குநல்லார் அரங்கேற்று காதைக்கு எழுதியுள்ள விளக்கம் நுண்கலைக் களஞ்சியம். அது அருங்கலைகளின் உறைவிடம். அக் காதையின் உரையில் கூத்தி, ஆடலாசிரியர், இசையாசிரியர், கவிஞர், தண்ணுமையோன், யாழாசிரியன், ஆகியோருடைய அமைதியும், அரங்கின் இலக்கணம், தலைக்கோல் அமைதி, அரங்கிற் புகுந்து ஆடுகின்ற இயல்பு ஆகியவையும் மிகச் சிறப்பாக—விளக்கமான மேற்கோள்களுடன் உரைக்கப்படுகின்றன.

இந்திரவிழவூர் எடுத்த காதையில் ஆடை அணிமணிகளின் வகைகள் கூறப்படுகின்றன.

1. பஞ்சதந்திரம்; 15:18 ஸ்லோகம்.

கடலாடு காதையில் ஒப்பனை வகைகளை விரித்துரைக் கின்றார். ஆடல் பாடல்களின் இலக்கணமும் இசைக்கருவிகளின் அமைப்பும் கூறுகின்றார்.

இசைக்கலை நுணுக்கங்கள் நிறைந்த கானல் வரிக்கு அடியார்க்குநல்லார் உரை இல்லாமை தமிழ்க்கலை உலகிற்குப் பெரிய இழப்பேயாகும்.

வேனிற்காதை யுரையில் ஆடற் கலைகளுக்கு விளக்கங் கூறுகின்றார். ஊர்காண் காதையில் நவமணிகளைப் பற்றிய இலக்கணங்களை உரைக்கின்றார்.

ஆய்ச்சியர் குரவை உரையில் குரவைக் கூத்திற்கு நல்ல விளக்கம் தருகின்றார்.

சமண சமயக்கொள்கை இடம் பெறும் இடங்களில் அச் சமய நூல்களை நன்கு அறிந்து உரை எழுதுகின்றார். ‘பட்டினி நோன்பிகள்’ என்பதற்கு இவர் கூறும் விளக்கம் இதற்கு ஒரு சான்றாகும் (அடைக்கல 163-91). நாடுகாண்காதையில் (81-5), “நமது தரிசனத்து (சாத்திர நூல்களில்) கடியப்பட்ட வாற்றால் தேனுண்டலைப் பரிகரிக்க என்றதாம். எனவே, ஊனையும் உடன் கூறிற்றாம். மேலும், இவ்வாறு வருவன கொள்க” என்று உரைக் கின்றார்.

## 3. சமய திவாகர வாமன முனிவர்

சிறுகாப்பியங்கள் ஐந்தனுள் ஒன்றான நீலகேசிக்கு உரை இயற்றியவர் சமய திவாகர வாமன முனிவர். நீலகேசி சைன சமய நூல்.

நீலகேசிக்குச் சமய திவாகர வாமன முனிவர் இயற்றிய விருத்தியுரை, ‘நீலகேசி விருத்தி சமய திவாகரம்’ எனப்படும். வாமன முனிவரின் பிம்பம் சைன காஞ்சியில் உள்ளது.

இவரது உரை, சிவாஞான சித்தியார் (பர பக்கம்) உரையில் ஞானப்பிரகாசரால் மேற்கோள் காட்டப்படுகின்றது.

நீலகேசியின் உரைச் சிறப்பை,

> **மெய்ந்நூல் நெறியை விளக்கி விளங்காப் பிடகமுதற்**
> **பொய்ந்நூல் இருள்களைப் போகத் துரந்தது பூதலத்தில்**
> **எந்நூலும் வல்லவர் ஏத்தச் சமயத் திறைவன்கண்ட**
> **செந்நீல கேசி விருத்தி சமய திவாகரமே**

என்ற பாடலும்,

**அருகன் திருவறத் தன்புசெய் வாரும் அழிவழக்காற்**
**பெருகும் திருநெறிப் பீடழிப் பாரும்இப் பேருலகிற்**
**பொருவின்றி நின்ற தமிழ்ப்புல வோர்க்குப்**
**பொருளைஎல்லாம்**
**திரிவின்றிக் காட்டும் சமய திவாகரம் சேவிக்கவே**

என்ற பாட்டலும் உணர்த்தும்.

மணிப்பிரவாள நடையாசிரியர்களைப்போல இவர் மிகுதியாக வடசொற்களைக் கலந்து உரை எழுதுகின்றார். சைன சமயக் கருத்துக்களை நன்கு விளக்குகின்றார். ஏனைய பௌத்த, இந்து சமயங்களின் கருத்தையும் நன்கு அறிந்துள்ளார். தம் சமயக் கருத்துக்களை மறுக்கும் பிற சமயங்களை மறுக்கும் திறன் இவரிடம் உண்டு.

குண்டலகேசியிலிருந்து கணக்கற்ற மேற்கோள்களைக் காட்டுகின்றார். அக் காப்பியத்தின் கதையைச் சுருக்கமாகக் கூறுகின்றார்.

இவர் உரையில் அரிய சொற்களையும் மறைந்துபோன தமிழ் நூல்களைப் பற்றிய குறிப்புகளையும் மிகுதியாகக் காணலாம்.

8

# சமய நூல் உரையாசிரியர்கள்

## 1. நாலாயிர திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்கள்

தமிழிலக்கிய உலகத்தில்—இடைக்காலத்தில் செந்தமிழை வளர்த்துச் செழிக்கச்செய்த பெருமை ஆழ்வார்களுக்கு உரியது. இலக்கியச் சுவை முதிர்ந்த வளமான கவிதைக் கனிகளை நல்கித் தமிழிலக்கியத்திற்கு அளப்பருந்தொண்டுகளை அவர்கள் செய் திருக்கிறார்கள். ஆழ்வார்கள் வழிபட்ட கண்ணனைத் தமிழ் மொழியின் மீது தணியாத காதல் கொண்டவன் என்றும், தமிழ்க் கவிதை அமுதம் உண்டு திளைத்தவன் என்றும் பெரியோர்கள் போற்றிப் புகழ்வர். ஆழ்வார்களின் பாமாலைகள் அனைத்தையும் கண்ணன் மிக விரும்பி ஏற்பதாய்க் காலந்தோறும் சான்றோர்கள் நம்பிவருகின்றனர். திருமாலையும் தமிழையும் தொடர்புபடுத்தித் தோன்றிய கதைகள் சில உள்ளன.

அருட்பெருங் கவிஞராகிய குமரகுருபரர்,

**பழமறைகள் முறையிடப் பைந்தமிழின் பின்சென்ற**
**பச்சைப் பசுங் கொண்டலே**

என்று திருமாலை அழைக்கின்றார். கம்பர் இயற்றிய சடகோபர் அந்தாதி,

**கவிப்பா அமுதம் இசையின் கறியொடு**
**கண்ணற்கு உண்ணக் குவிப்பான்**

என்று நம்மாழ்வாரைப் பாராட்டுகின்றது. உலகளந்த மாயவன் கோயில்கொண்டு நிற்கும் எழில்மலையாம் திருவேங்கட மாமலையை,

**ஆழ்வார்கள் செந்தமிழை ஆதரித்த வேங்கடம்**

என்று பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் புகழ்கின்றார்.

ஆழ்வார்கள் பன்னிருவரும், திருமாலை வணங்கி வாழ்த்தி அவரது பெருமைகளைப் புகழ்ந்து பாடிய பாடல்கள், திவ்வியப் பிரபந்தம் எனப்பட்டன.

ஆழ்வார்களின் அருட்கவிகள் நாதமுனிகளால், ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தொகுக்கப்பட்டன. நாதமுனிகள் அவற்றைத் தொகுத்த வரலாறு சுவையானது.

## நாதமுனிகள்

வாழ்க்கைப் பாதையில் ஒரே சீராய்—அமைதியாய்ச் சென்று கொண்டிருக்கிறான் மனிதன். அவனுடைய பாதையில் யாரோ சிலர் குறுக்கிட்டு அவனைத் தடுத்துத் திசை திருப்பி விடுகின்றனர். அவனுடைய பாதையின் இடையே நிகழ்கின்ற சில நிகழ்ச்சிகள் அவனை ஆட்கொண்டு அவன் பாதையை மாற்றி விடுகின்றன. எதிர் பாராத வகையில் தோன்றும் சில சூழல்களால், வாழ்க்கை பலவாறாகப் பிரிந்து விடுகின்றது. மனிதன் தான் வந்த வழியிலிருந்து விலகி ஏதேனும் ஒரு வழியில் செல்லத்தொடங்கி விடுகிறான்.

வாழ்க்கைப் பாதையைப் பின் நோக்கித் திரும்பிப் பார்த்தால். இத்தகைய அனுபவம் ஒவ்வொரு மனிதனுக்கும் ஏற்பட்டிருப்பது புலனாகும். பேராற்றலும் பேரறிவும் செயற்கரிய செய்யும் திறனும் படைத்தவர் வாழ்க்கைப் பாதையில் ஏற்படுகின்ற மாறுதல்கள் நாட்டு வரலாற்றையே மாற்றுகின்றன; மக்களினத்தின் போக்கை மாற்றுகின்றன; மனித குலச் சிந்தனையை—பழக்க வழக்கங்களை—பண்பாட்டை மாற்று கின்றன. இத்தகைய நல்லதொரு மாறுதல் நாதமுனிகளின் வாழ்க் கையில் நிகழ்ந்தது.

நாதமுனிகள் வைணவ சமயச் சான்றோர். இவர் தென்னார்க் காடு மாவட்டத்தில் (சிதம்பரம் வட்டத்தைச் சேர்ந்த) காட்டு மன்னார் கோயில் என்னும் வீர நாராயணபுரத்தில் கி.பி. 825இல் தோன்றினார். திருமாலிடம் பக்தி கொண்டு, அவ்வூரில் உள்ள மன்னனார் கோயிலுக்குப் பூந்தோட்டம் அமைத்துப் பூசை செய்து வந்தார்.

## வாழ்வில் ஒருநாள்

நாதமுனிகள் ஒருநாள் மன்னனார் கோயிலில் வழிபாடு செய்து கொண்டிருந்தபோது, மைசூர் நாட்டிலிருந்து வந்த வைணவ அடியவர் சிலர் பின்வரும் பாடலைப் பாடத் தொடங்கினர்:

**ஆரா அமுதே! அடியேன் உடலம் நின்பால் அன்பாலே**
**நீராய் அலைந்து கரைய உருகு கின்ற நெடுமாலே!**

**சீரார் செந்நெல் கவரிவீசும் செழுநீர்த் திருக்கு டந்தை**
**ஏரார் கோலம் திகழக் கிடந்தாய்! கண்டேன் எம்மானே!**

இதனைத் தொடர்ந்து பத்துப்பாடல்களைப் பாடி முடித்துப் பதினோராம் பாடலின் இறுதியில்,

**குருகூர்ச் சடகோபன்**
**குழலின் மலியச் சொன்ன ஓர் ஆயிரத்துள் இப்பத்தும்**
**மழலை தீர வல்லார் காமர் மானேய் நோக்கியர்க்கே**

என்ற அடிகளைப் பாடி முடித்தனர்.

இவற்றை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்த நாதமுனி வியப்பில் மூழ்கினார். பாட்டுக்கு நெஞ்சைப் பறிகொடுத்த இவர், "குருகூர்ச் சடகோபன் யார்? அவர் குழலின் மலியச் சொன்ன ஓர் ஆயிரம் பாடல்கள் யாவை?" என்று சிந்திக்கத் தொடங்கி விட்டார்.

"ஆரா அமுதே" என்று பாடிய அடியவர்களை நோக்கி, "உங்களுக்குச் சடகோபரின் ஆயிரம் பாடல்களும் தெரியுமா?" என்றார். அவர்கள் தாம் அறிந்தவை பத்துப் பாடல்களே என்று கூறிச் சென்று விட்டனர்.

அன்று முதல் நாதமுனிகள் சடகோபரின் ஆயிரம் பாடல் களையும் தேடத் தொடங்கி விட்டார். நம்மாழ்வாரின் பிறப்பிட மான ஆழ்வார் திருநகரிக்குச் சென்று பராங்குச தாசரைச் சந்தித்தார். அவர் மதுரகவியாழ்வாரின் சீடர். அவர் துணையால் ஆழ்வார்களின் பாடல்களை எல்லாம் அறிந்து தொகுத்தார். நாதமுனி தேடிச் சென்றது ஓர் ஆயிரம் பாடல்களை. ஆனால், அவருக்குக் கிடைத்தவையோ ஏறத்தாழ நாலாயிரம் பாடல்கள்.

'நாலாயிரம்' பெற்ற நாதமுனிகள் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை! பின்னர், அவற்றைப் பாகுபாடு செய்து இயலும் இசையுமாக ஓதிவருமாறு தம் மருமக்கள் இருவருக்கும் பணித்தார். இருவரும் மேலை அகத்து ஆழ்வான் என்றும் கீழை அகத்து ஆழ்வான் என்றும் பெயர் பெற்றனர்.

நாலாயிர திவ்வியப் பிரபந்தங்கள் இசையாய் இசைக்கப் பட்டும் இயலாய் ஓதப்பட்டும் நாடெங்கும் பரவின. பெருமாள் கோயில் திருவிழாக்கள் தோறும் ஒலிக்கத் தொடங்கின.

வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த இந்த நிகழ்ச்சியை, பின் பழகிய ஜீயர் இயற்றிய 'குருபரம்பரா ப்ரபாவம்' என்னும் மணிப்பிரவாள நூல் விரிவாகக் கூறுகின்றது.*

* பார்க்க : பிற்சேர்க்கை – 3.

## 4000 பாடல்கள்

ஆழ்வார்கள் பாடிய பாடல்கள் நாலாயிரம் என்று கூறி வந்தாலும் அவற்றின் எண்ணிக்கை 3776 ஆகும். ஆழ்வார்கள் பன்னிருவர் பாடிய பாடல்களின் விவரம் கீழே தரப்படுகின்றது.

| | | |
|---|---|---|
| 1. | பொய்கை யாழ்வார்—முதல் திருவந்தாதி | 100 |
| 2. | பூதத் தாழ்வார்—இரண்டாம் திருவந்தாதி | 100 |
| 3. | பேயாழ்வார்—மூன்றாம் திருவந்தாதி | 100 |
| 4. | திருமழிசையாழ்வார் திருவந்தாதி<br>திருச்சந்த விருத்தம் | 96<br>120 |
| 5. | நம்மாழ்வார் திருவிருத்தம்<br>திருவாசிரியம்<br>பெரிய திருவந்தாதி<br>திருவாய்மொழி | 100<br>70<br>87<br>1102 |
| 6. | மதுர கவியாழ்வார்—கண்ணிநுண் சிறுத்தாம்பு | 10 |
| 7. | குலசேகர ஆழ்வார்—திருமொழி | 105 |
| 8. | பெரியாழ்வார்—பெரியாழ்வார் திருமொழி | 473 |
| 9. | ஆண்டாள் திருப்பாவை<br>நாச்சியார் திருமொழி | 30<br>143 |
| 10. | தொண்டரடிப் பொடியாழ்வார்—திருமாலை<br>திருப்பள்ளி எழுச்சி | 45<br>10 |
| 11. | திருப்பாணாழ்வார்—அமலனாதி பிரான் | 10 |
| 12. | திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி<br>திருக்குறுந் தாண்டகம்<br>திருநெடுத் தாண்டகம்<br>திருவெழு கூற்றிருக்கை<br>சிறிய திருமடல்<br>பெரிய திருமடல் | 1084<br>20<br>30<br>1<br>1<br>1 |
| | மொத்தம் | 3776 |

இவை ஏறக்குறைய நாலாயிரம் இருத்தலால் நாலாயிர திவ்வியப் பிரபந்தம் எனப்பட்டன. சிலர், சிறிய திருமடலின் கண்ணிகளை 77½ ஆகவும், பெரிய திருமடலின் கண்ணிகளை 184½ஆகவும் எண்ணிக் கணக்கிட்டு நாலாயிரம் எனக் கொள்வர்.

இப் பிரபந்தம் ஆழ்வார்களின் கால வரிசைப்படி தொகுக்கப்படவில்லை.

இராமாநுச நூற்றந்தாதியை நாதமுனிகள் காலத்திற்குப் பின், ஆழ்வார்களின் பாடலுக்கு இறுதியில் சேர்த்தனர்.

## உரைகள்

ஆழ்வார்களின் பாடல்களாகிய திவ்வியப் பிரபந்தத்தை வைணவர்கள் தங்கள் வேதம் என்று கருதினர். தென்கலை வைணவம் ஆழ்வார்களின் பாடல்களையே உயிர் என்று கொண்டு வளர்ந்து வந்தது. இப்பாடலுக்கு மரபு நிலை தவறாமல் இராமாநுசர் காலத்திலிருந்து பல உரைகள் காலந்தோறும் தோன்றின. இராமாநுசர் தம் விசிட்டாத்துவைதக் கொள்கையை, உருப்படுத்த ஆழ்வார்களின் பாடல்களை அடிப்படையாகக் கொண்டார். அப்பாடல்களுக்கு அவர் அழகான விளக்க வுரைகள் கூறினார். அவருக்குப் பின் பல வைணவப் பெரியோர்கள் தோன்றி ஆழ்வார்களின் பாடல்களுக்குப் பொருள் கூறி விளக்குவதை ஒரு பெருங்கலையாக வளர்த்து வந்தனர். அவர்கள் அனைவரும்,

—தேர்த்தெழுதி
**வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும்**
**பூசித்தும் போக்கினேன் போது**

என்ற சான்றோரின் கொள்கையைத் தம் வாழ்வின் குறிக் கோளாகக் கொண்டவர்கள்.

## உரைகளின் சிறப்பு

ஆழ்வார்களின் பாடலுக்கு உரை இயற்றிய வைணவப் பெரியோர்கள் தாம் கற்ற கலைகள் அனைத்தையும் தம் உரை களில் வழங்கிச் சென்றுள்ளனர். அப் பெரியவர்களின் இதய ஒலிகள் பலப்பல வகையாய் உரைகளின் வாயிலாக வெளிப் படுகின்றன. பாடல்களின் ஆழ்ந்த பொருள்களை மிக்க நயம்படப் புலப்படுத்தி எழுதியுள்ளனர். மிக அரிய செய்திகளும் விளக்கங்களும், நுண்கலைச் சொற்களும் உரைகளில் பொதிந்து கிடக்கின்றன. இவ்வுரைகள் தனி இலக்கியமாகவும், வைண சமய தத்துவ விளக்கமாகவும் போற்றப்படுகின்றன. பிற்காலத்தில் வைணவர்கள் ஆழ்வார்களின் பாடல்களைவிட, உரைவிளக்கங் களையே சிறந்தவையாகக் கருதிப் பின்பற்றினர்; விளக்கம் கூறிச் சமயக் கருத்துக்களைப் பரப்ப உரைகளையே ஏற்ற சான்றுகளாகக் கொண்டனர்.

திவ்வியப் பிரபந்த உரையாசிரியர்களின் சிறப்பை டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர், "அவர்களுடைய உரையில் ஒரு பாடலுக்கு உரை கேட்டு விட்டால் மனம் வேறு ஒன்றில் செல்லாது" என்று கூறிப் புலப்படுத்துகின்றார்.[1]

1. சங்கத் தமிழும் பிங்காலத் தமிழும், பக்கம் 162.

2.31.

ஐயரின் நண்பர்களில் ஒருவரான தியாகராச செட்டியார், "'வியாக்கியானத்தில் எவ்வளவு இரகசியங்கள் வெளிப்படு கின்றன. திவ்வியப் பிரபந்தத்தால் வியாக்கியானங்களுக்குப் பெருமையா? வியாக்கியானங்களால் அப் பிரபந்தங்களுக்குப் பெருமையா? என்று எண்ணும்படியல்லவா அவை இருக்கின்றன" என்று கூறியுள்ளார்.[1]

வியாக்கியானங்களில், வைணவ சமயத்தின் உயிர் நிலைக் கோட்பாடு, வழிவழியாகவந்த மரபுநிலை, திருமாலின் அவதார மாண்புகள், விசிட்டாத்துவைதத்தின் தத்துவ நுட்பம் ஆகியவை விளக்கப்படுகின்றன. வடமொழியில் உள்ள வேதம், உபநிடதம், புராணம், இதிகாசம் முதலியவற்றிலிருந்து கணக்கற்ற மேற்கோள் களைக் காட்டிப் பல கருத்துகள் விளக்கப்படுகின்றன. ஆழ்வார் பாடல்களின் கருத்தையும் அவற்றின் உள்ளுறைக் கருத்தையும் சமய நோக்குடன் ஆராய்ந்து தம் நுண்ணறிவு தோன்ற உரையா சிரியர்கள் விரித்துரைக்கின்றனர். வால்மீகி இராமாயணத்தின் கதைப்போக்கையும் பொருளையும் சிறப்புடன் பல இடங்களில் எடுத்துக்காட்டி அந்நூலை வைணவ சமயத்திற்கு ஒரு சிறந்த பிரமாண நூலாகவே காட்டியுள்ளனர்; அதன் மூலமாகத் தமக்கு உள்ள படைப்புத்திறனையும் வளமான கற்பனை ஆற்றலையும் புலப்படுத்தியுள்ளனர். ஆழ்வார்களின் பாடல்களில் தோய்ந்து அவர்கள் கூறும் இராமன் கதையிலும் திருமாலின் அவதாரக் கதையிலும் ஈடுபட்டுள்ளனர்; விஷ்ணு புராணம், பாகவதம் ஆகியவற்றிலும் மூழ்கி நனைந்திருக்கின்றனர். இவை எல்லாம் வியாக்கியான உரையாசிரியர்களின் சிந்தனையை வளர்த் துள்ளன; படைக்கும் திறனைப் பெருக்கியுள்ளன.

## நடையும் மொழியும்

வியாக்கியானங்கள் பேச்சு நடையில் அமைந்துள்ளன. கொச்சை மொழிகள் விரவியுள்ளன. இவற்றிலும் ஒருவகை அழகும் ஆற்றலும் வெளிப்படுகின்றன. கணக்கற்ற பழமொழிகள், வகைவகையான மரபுத் தொடர்கள், நல்ல நல்ல நாட்டுப்புறக் கதைகள், சுவையான பழக்க வழக்கங்கள், வியப்பூட்டும் நிகழ்ச்சிகள் ஆகியவை வியாக்கியானங்களில் நிரம்பியுள்ளன.

## மணிப்பிரவாள நடை

வெண்ணிற முத்துமணிகளையும் செம்பவளங்களையும் கலந்து முத்தும் பவளமும் ஒன்றன்பின் ஒன்று வருமாறு அமைத்து மாலை கட்டுவதுபோல, வடமொழிச் சொற்களைத் தமிழ்மொழி

1. வித்துவான் தியாகராச செட்டியார் பக்கம் – 145. டாக்டர் உ.வே.சா.

யுடன் இடையிடையே கலந்து எழுதும் இலக்கிய நடை மணிப்பிரவாள நடை என்று பெயர் பெற்றது. இருவேறு தனி இயல்புகளை உடைய இரு மொழிகளை ஒன்று சேர்க்கும் முயற்சியில் பிறந்ததே இந் நடையாகும். மணிப்பிரவாளம் என்ற தொடரில் உள்ள மணி முத்தையும், பிரவாளம் பவளத்தையும் குறிக்கும். தமிழ், வடமொழி இரண்டனுள் எது முத்து, எது பவளம் என்ற வினாவை எழுப்பி விடை காண்பது வீண் வேலையாகும். முத்து, பவளம் இரண்டும் விலையுயர்ந்த பொருள்களே. வடமொழி, தமிழ் இரண்டையும் சிறப்பாகக் கருதியவர்களே மணிப் பிரவாள நடையைத் தோற்றுவித்தனர்.

மணிப்பிரவாள நடையில், வட சொற்களும் தொடர் மொழிகளும் தமிழுடன் விரவிவரும். தமிழில் உள்ள இடைச் சொற்களும் வினைமுற்று எச்சங்களும் வந்து கலக்கும். வடமொழி வினைச்சொற்களும் வந்து சேரும். வடமொழிப் பெயர்ச்சொற்கள் வடமொழி வேற்றுமை உருபேற்று வழங்கும். பிராகிருதமொழிச் சொற்களும் இடம் பெறும்.

## தோற்றமும் வளர்ச்சியும்

கி.பி. 300ஆம் ஆண்டிற்குப்பிறகு தமிழகத்தில் பல்லவர்களின் ஆட்சி வேரூன்றியது. பல்லவ மன்னர்கள் காஞ்சி மாநகரைக் கைப்பற்றினர். தம் ஆட்சியை மெல்ல மெல்லத் தெற்கே பரப்பினர். அவர்களால் வடமொழிக்கு ஏற்றம் பிறந்தது. சமண சமயத்திற்கு வளர்ச்சி ஏற்பட்டது.

சமண சமயத்தைப் பரப்பும் நோக்கத்துடன் வடக்கே இருந்து பல சமணத்துறவிகள் தமிழகத்திற்கு வந்தனர். அக்காலத்தில் சமண சமய நூல்கள் எல்லாம் சமஸ்கிருதத்திலும் பிராகிருத (பாகத) மொழியிலும் இருந்தன. அந்நூல்களில் பொதிந்து கிடந்த சமண சமயக் கருத்துகளைத் தமிழ் மக்களிடம் பரப்ப, சமணத் துறவிகள் முயன்றனர். ஆனால், அவர்கள் முயற்சிக்கு மொழி தடையாக இருந்தது. ஆதலின், தமிழ் மொழியை அவர்கள் கற்றுத் தேர்ச்சி பெறவேண்டியதாயிற்று. தொடக்கத்தில் வடமொழியில் இருந்த சமண சமயக்கருத்து களைத் தமிழில் எடுத்துக் கூறப் பெருமுயற்சி செய்தனர். உயர்ந்த கருத்துகளை எல்லோருக்கும் விளங்கும்வகையில் தமிழில் கொண்டுவர அவர்களால் எளிதில் இயலவில்லை. இத்தகைய சூழ்நிலையில் தமக்குத் தெரிந்த வடமொழியையும் தமிழையும் கலந்து (மொழி பெயர்ப்பு வேலையில் ஈடுபடாமல்) ஒருவகை யான புதிய நடையைத் தோற்றுவித்தனர். இந்த நடையே மணிப்பிரவாள நடை என்று பெயர் பெற்றது.

## கிரந்த எழுத்துக்கள்

மணிப்பிரவாள நடையில், வாக்கியங்களின் அமைப்பு தமிழ் இலக்கணத்தைத் தழுவியே அமைந்துள்ளது. தமிழ் இலக் கணங்களைப் போற்றியே வந்தது. ஆனால், தமிழ் மொழியுடன் இதற்குமுன் கண்டிராத அளவுக்கு வடமொழிச் சொற்களையும் தொடர்களையும் கொண்டுவந்து கலந்து விட்டது. வடமொழிச் சொற்களைத் தமிழ் மொழியின் ஒலி முறைக்கு ஏற்றவாறு அமைத்து வழங்க வேண்டும் என்ற தொல்காப்பியரின் ஆணையை மறந்து விட்டு, வடசொற்களை எவ்வித மாற்றமும் செய்யாமல் வடமொழி ஒலிமுறைப்படியே எழுத முற்பட்டனர். இதன் விளைவாய்த் தமிழ்மொழியில் இல்லாத ஒலிகளுக்கு வரி வடிவம் காணும் தேவை ஏற்பட்டது. வடமொழிச் சொற்களை அவற்றிற்குரிய ஒலியின்படி வழங்கும் முயற்சி கிரந்த எழுத்துக் களைத் தமிழில் தோற்றுவித்தது. ஜ, ஷ, ஸ, ஹ, க்ஷ ஆகிய வடமொழி எழுத்தொலிகள் கிரந்த வடிவில் எழுதிச் சேர்க்கப் பட்டன. வடசொற்களையும் தொடர்களையும் கிரந்த எழுத்திலும், தமிழ் மொழியைத் தமிழ் எழுத்திலும் எழுதலாயினர். மணிப்பிரவாள நடை இவ்வாறு ஒலியிலும், வரி வடிவிலும், சொற் களிலும் கலப்பு அடைந்து, தனிஇயல்புடன் உருவாயிற்று.

சமணர்கள் மணிப்பிரவாள நடையில் எழுதிய நூல்கள் சில உள்ளன. ஸ்ரீ புராணம், கத்திய சிந்தாமணி ஆகிய இரண்டும் மணிப்பிரவாள நடையில் அமைந்த சமண நூல்களாகும்.

மணிப்பிரவாள நடையில் உரைநடை மட்டுமன்றி, செய்யுள்களும் தோன்றின. யாப்பருங்கல விருத்தியுரை மணிப்பிரவாள நடையில் தோன்றிய நூல்களை, "இனிப் பாவினங்களுள் சமக்கிரதமும் வேற்றுப் பாடையும் விரவி வந்தால் அவற்றையும் அலகிட்டுப் பாச்சார்த்தி வழங்கப்படும். அவை குறு வேட்டுவச் செய்யுளும் லோக விலாசனியும் பெருவள நல்லூர்ப் பாசாண்டமும் முதலாக உடையன எனக்கொள்க" என்று கூறுகின்றது.[1]

## இலக்கணம்

மணிப்பிரவாள நடை வளர்ந்து பெருகி, நூல்கள் சில அந் நடையில் தோன்றியதால் வீரசோழியம் அந்த நடைக்கு இலக்கணம் வகுத்தது:

> இடையே வடஎழுத்து எய்தில்
> விரவியல் ஈண்டெதுகை

1. யாப்பருங்கல விருத்தி (ஒழிபியல்) பக்கம் 491, பவானந்தம் பிள்ளை பதிப்பு.

நடைஏதும் இல்லா மணிப்ர
    வாளநற் றெய்வச்சொல்லின்
இடையே முடியும் பதமுடைத்
    தாம்கிள விக்கவியின்
தொடையே துறைநற் பிரளிகை
    யாதி துணிந்தறியே

(அலங். 2)

என்பது அந்நூல் கூறும் இலக்கணம்.

மலையாள மொழியில் 'லீலா திலகம்' என்ற நூல், மணிப் பிரவாள நடைக்கு இலக்கணம் கூறுகின்றது. அந்நூல் மணி என்பதற்கு மாணிக்கம் என்று பொருள் கொண்டு, "சிவந்த மாணிக்க மணியும் செம்பவளமும் கலந்து கோத்த மாலையில் இரண்டு செந்நிறமும் வேறுபாடு தோன்றாதவாறு ஒன்றாகக் காட்சியளிப்பதுபோல, இருமொழிச் சொற்களும் கலந்து அமையும் நடை" என்று விளக்குகின்றது.

## வைணவ உலகில்—மணிப்பிரவாளம்

பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குப் பிறகு வைணவ உலகில் பல மாறுதல்கள் ஏற்பட்டன. ஆழ்வார்களின் பக்திப் பாடல் களுக்குத் தத்துவப் பொருள் கூறும் நோக்கம் பெரியவர்களிடம் உண்டாயிற்று. வடமொழியிலுள்ள வேத ஆகம புராணங்களின் கருத்துகளைக் கொண்டு வந்து, ஆழ்வார்களின் பாடல்களுக்கு விளக்கமாய் அமைத்துக் காட்டினர். தமிழ், வடமொழி ஆகிய இரு மொழிகளையும் ஒப்ப நோக்கிச் சிறப்புச் செய்தனர். வடமொழிச் சுலோகங்களை, ஆழ்வார்களின் பாடல்களுக்கு விளக்கம் கூறப் பயன்படுத்தினர். வடமொழியே சமயக் கருத்துக்களை விளக்கும் மொழி என்ற நிலைமையை மாற்ற முயன்றனர். அதனால், அவ்விரு மொழிகளையும் ஒன்றாக இணைத்துச் செல்லும் மணிப் பிரவாள நடையை மேற்கொண்டனர். சமணர்கள் தம் சமயக் கருத்தை விளக்க மேற்கொண்ட மணிப்பிரவாளம் வைணவ உலகில் புகுந்தது; புகுந்து வளம்பெற்றுச் சிறப்புடன் வளர்ந்தது; வளர்ந்து செழித்தது.

வைணவ உரையாசிரியர்கள், வடமொழியிலிருந்த சமயக் கருத்துகளைக் கற்றுத்தேர்ந்தவர்கள்; ஆழ்வார்கள் பாடலில் ஊறித் திளைத்தவர்கள். அறிவையும் உணர்ச்சியையும் இணைத்து வைணவ சமயத்தை வளர்க்க அவர்கள் முயன்றனர். அவர்களைத் 'தென்சொற் கடந்து வடசொற்கு எல்லை கண்ட சான்றோர்கள்' என்னலாம்.

## எதிர்ப்பும் தோல்வியும்

சமணர்கள் தோற்றுவித்த மணிப்பிரவாளநடை வளர்ந்து, வைணவஉலகில் நுழைந்து செல்வாக்குப் பெற்றது. ஆனால், தொடக்கத்தில் மணிப்பிரவாள நடைக்கு எதிர்ப்பு இருந்தது. சமண சமயத்தை எதிர்த்து நின்ற திருஞான சம்பந்தர் சமணர்கள் கையாண்ட மணிப்பிரவாள நடையையும் எதிர்த்துள்ளார் என்பதற்கு, அவரது பாடல்களில் சான்று உண்டு. மணிப்பிரவாள நடையில் எழுதுவது, 'ஆரியத்தோடு செந்தமிழ்ப் பயன் அறிகிலாது உருச் சிதைந்து உரைப்பது' என்று அவர் இகழ்கின்றார். இவ்வாறு எதிர்த்தும் மணிப்பிரவாள நடை வளர்ந்து வந்து, வைணவ உலகில் சிறப்புப் பெற்றது.

மணிப்பிரவாள நடையை, சமணர்கள் வளர்த்த காரணத்தினால் மட்டும் திருஞான சம்பந்தர் எதிர்த்தார் என்று கருதுவது பொருந்தாது. அந்நடை, தமிழ் மரபிற்கு ஒவ்வாமல் இருந்ததாலும், இரு மொழியில் வல்லவர்களால் மட்டுமே அறிந்து கொள்ளக் கூடியதாய் இருந்ததாலும் அதை எதிர்த்தார்.

தமிழுடன் மிகுதியான வட சொற்கள் கலந்த நடையே மணிப்பிரவாள நடை என்று நினைப்பது தவறு. வடமொழி இலக்கணப்படி அமைந்த கூட்டுச் சொற்கள், கூட்டு ஒலிகள், நீளமான தொடர்கள் யாவும் அப்படியே எடுத்தாளப் பெறும். அவற்றைப் படித்து அறிய வட சொற்களின் பொருள் மட்டும் அறிவது போதாது. வடமொழிக்கு உரிய இலக்கணத்தையும் அறிய வேண்டும். ஆதலின், இரு மொழிப் புலவர்கள் மட்டுமே மணிப் பிரவாள நடையில் அமைந்த நூல்களைக் கற்க முடியும்.

வைணவ சமயத்தில் மணிப்பிரவாள நடைக்குச் செல்வாக்கு ஏற்பட்டபின், அந்நடையில் அரிய பெரிய சமயக் கருத்துகளை இருமொழி வல்ல சான்றோர்கள் எழுதி வைத்தனர்.

காலப்போக்கில் மணிப்பிரவாள நடை வழக்கிழந்தது. அந்நடையை எழுதுவோரும் படிப்போரும் அருகினர். ஏதேனும் ஒரு மொழியில் புலமை பெற்றவர்கள் அந்நடையில் அமைந்த நூலைப் புறக்கணித்தார்கள். பயில்வாரின்றி அவை ஒதுங்கிக் கிடக்கவே பொதுமக்களிடம் அவற்றைப் பரப்புவோர் இன்மையால் தேங்கி நின்றன. அறிவுச் செல்வமாய்—சமயக் கருத்துக்களின் கடலாய்—ஆராய்ச்சிக் களஞ்சியமாய் விளங்கும் உரைகள், கற்போர் இன்மையால் போற்றுவாரின்றிப் போனது வருந்துதற்கு உரியதாகும். உரை விளக்கம் கண்ட பெரியார்களின் நோக்கம், காலப்போக்கில் நிறைவேறாமல் போனதை எண்ணும் போது துன்பம் மிகுகின்றது.

மணிப்பிரவாள நடையில் அமைந்துள்ள வைணவ உரைகளில் உள்ள வடமொழிப் பகுதிகளைத் தமிழாக்கி வைணவச் சான்றோர் பி.ஆர். புருஷோத்தம நாயுடு வெளியிட்டுள்ளார்.

## உரைகண்ட சான்றோர்கள்

மணிப்பிரவாள நடையில் வைணவ சமயத்திற்கு அமைந்த உரைநடை நூல்களை இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒன்று: ஆழ்வார்களின் பாடல்களுக்கு அமைந்த வியாக்கியானங்கள். மற்றொன்று: ஆழ்வார்களின் வரலாற்றையும் அவர்களுக்குப்பின் தோன்றிய வைணவப் பெரியோர்களைப் பற்றிய வரலாற்றையும் கூறுகின்ற 'குருபரம்பரா ப்ரபாவம்' என்று வழங்கும் வரலாற்று நூல்கள்.

இனி, வியாக்கியானங்கள் தோன்றிய வரலாற்றையும் அவற்றை இயற்றிய உரையாசிரியர்கள் வரலாற்றையும் காண்போம்.

## நாதமுனியின் வழித்தோன்றல்

வீர நாராயணபுரத்தில் வாழ்ந்த நாதமுனியின் மைந்தர் ஈசுவரமுனி. ஈசுவர முனியின் மைந்தர் ஆளவந்தார். ஆளவந்தாருக்கு யமுனைத் துறைவர் என்ற பெயரும் உண்டு. ஆளவந்தார் வைணவ ஆசாரியர்களில் சிறப்புடன் விளங்கினார். இவருக்குச் சீடர் பலர் தோன்றினர். பெரியநம்பி திருக்கோட்டியூர் நம்பி பெரிய திருமலை நம்பி திருமலையாண்டான் மாறனேரி நம்பி திருக்கச்சி நம்பி முதலிய 16 பேர் சீடர்கள் இருந்தனர்.

இவர்களுள், பெரிய திருமலை நம்பி திருவேங்கடத்தில் வாழ்ந்து வந்தார். இவரது தங்கை, பூமி பிராட்டியார் (காந்திமதி என்ற பெயரும் உண்டு). இந்த அம்மையார், திருப்பெரும்புதூரில் ஆசூரி கேசவப் பெருமாள் (கேசவ சோமாஜி என்றும் கூறுவர்) என்பாரை மணந்து கொண்டு இல்லறம் நடத்தி வந்தார்.

இவர்கள் செய்த நற்றவப் பயனாய், 1017 ஆம் ஆண்டு (பிங்கள ஆண்டு, சித்திரை மாதம், திருவாதிரை நட்சத்திரத்தில்) ஓர் ஆண் மகவு பிறந்தது.

தம் தங்கைக்கு ஆண் குழந்தை பிறந்த செய்தியைக் கேட்டு, திருமலை நம்பி திருப்பெரும்புதூர்க்கு வந்து குழந்தையைக் கண்டு மகிழ்ந்தார். குழந்தையின் பேரழகில் ஈடுபட்டு அதற்கு இலட்சுமணன் (இளைய் ஆழ்வான்) என்று பெயரிட்டார்.

இலட்சுமணரே பிற்காலத்தில் (32 ஆவது வயதில் துறவு பூண்டு) இராமானுசர் என்ற பெயருடன் வைணவ உலகின் ஞாயிறாகத் திகழ்ந்தார்.

## வைணவ ஞாயிறு

ஒன்பது பத்தாம் நூற்றாண்டுகளில் தமிழகத்தில் சமயத் துறையில் இருள் பரவிக் கிடந்தது. ஆழ்வார்களின் பிரபந்தமும் மூவர் தேவாரமும் வெளிப்பட்ட போதிலும் அவை பொருள் விளக்கத்தோடு மக்கள் நடுவே பரவவில்லை. கற்றவர்களிடம் வடமொழி வேதங்கள் உபநிடதம் பகவத்கீதை ஆகியவை பரவி, வடமொழி செல்வாக்குப் பெற்றிருந்தது. இத்தகைய சூழ்நிலையில்தான் இராமானுசர் தோன்றினார். ஆழ்வார்களின் பிரபந்தங்களை ஆழ்ந்து பயின்று தெளிந்தார். வடமொழியிலும் தேர்ச்சி பெற்றார். இரு மொழியிலும் புலமை பெற்றபின் சமயப்பணியாற்றத் தொடங்கினார்.

இராமானுசர் பிறந்தது திருப்பெரும்புதூரில்; கல்வி கற்றது காஞ்சிபுரத்தில்; சமயத்தொண்டு புரிந்தது திருவரங்கத்தில். இவர் பன்னிரண்டு ஆண்டுகள் மைசூர் நாட்டில் தங்கி இருந்து வைணவத்தை வளர்த்தார். இராமேசுவரம் முதல் காஷ்மீரம் வரை இந்தியா முழுதும் முக்கோல் ஏந்தி யாத்திரை செய்து, பக்திநெறி பரப்பி வெற்றிக்கொடி நாட்டினார். இதனால் இவரை,

**வையம் குருடன்றோ மாமறையும் பொய்யன்றோ**
**ஐயன் உரைத்ததமிழ் ஆர்அறிவார்—வையத்துக்கு**
**ஊன்றுகோல் எந்தை எதிராசர் ஆதரித்த**
**மூன்றுகோல் காண்பதற்கு முன்**

என்று வைணவ உலகம் போற்றுகின்றது.

இராமானுசர், ஆதிசங்கரரிடமிருந்து வேறுபட்டு விசிஷ் டாத்துவைத தத்துவத்தை ஒரு தனிப்பெருங் கொள்கையாக்கி வைணவ சமயத்திற்கு உறுதுணையாக்கினார். தென்னகத்து மக்களின் தொன்றுதொட்டு வருகின்ற வழிபாட்டு முறை, மரபுநிலை பிறழாத சமயச்சடங்கு, மாறாத பக்தி உணர்ச்சி ஆகியவற்றை வைணவத்துடன் இணைத்தார். இதனால், வைணவ சமயமும் தத்துவமும் புதிய எழுச்சி பெற்றன. இவர் வைணவ ஆசாரிய பரம்பரைக்குத் தலைமை தாங்கினார்: எம்பெருமானார் யதிராசர் ஸ்ரீ பாஷ்யகாரர் உடையவர் திருப்பாவை சீயர் முதலிய சிறப்புப் பெயர்களைப் பெற்றார். நம்மாழ்வார்க்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றப்படுகின்றார். இவரை வைணவர்கள்,

**வான்திகழும் சோலை மதில்அரங்கர் வண்புகழ்மேல்**
**ஆன்ற தமிழ்மறைகள் ஆயிரமும்—ஈன்ற**
**முதல்தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த**
**இதத்தாய் இராமா நுசன்.**

என்று போற்றுகின்றனர்.

## ஆளவந்தார் விருப்பங்கள்

இளமைக் காலத்தில் காஞ்சிபுரத்தில் தங்கி இருந்த இராமானுசர் யாதவப் பிரகாசரிடம் வேதாந்த நூல்களைக் கற்றறிந்தார். இவரது கல்விச் சிறப்பையும் நுண்ணறிவையும் கேள்விப்பட்ட ஆளவந்தார் திருவரங்கத்திலிருந்து காஞ்சிபுரம் வந்தார். இவரைக் கண்டு உரையாடி மகிழ்ந்தார். பிற்காலத்தில் இராமானுசரே வைணவ சமயக் காவலராய் விளங்கி அரிய பெரிய செயல்களை ஆற்றப் போகிறார் என்று அறிந்து கொண்டார். தம் நல்வாழ்த்துகளைத் தெரிவித்து, தம் இருப்பிடம் சென்று சேர்ந்தார்.

சில நாட்கள் கழித்தபின் ஆளவந்தார் நோயுற்றிருக்கும் செய்தி அறிந்து இராமானுசர் அவரைக் காணச் சென்றார். காஞ்சி புரத்திலிருந்து திருவரங்கம் சென்று சேர்வதற்குள் ஆளவந்தார் இறந்து விட்டார்.

ஆளவந்தார் திருநாடு அலங்கரித்தபின், இராமானுசர் திருவரங்கம் வந்து அவர் உடலைக் கண்டபோது, கை விரல்கள் மூன்று மட்டும் மடங்கி இருக்கக் கண்டார். அவை, ஆளவந்தாரின் நிறைவேறாத மூன்று விருப்பங்களைக் காட்டும் அடையாளம் என்று ஆளவந்தாரின் சீடர்கள் கூறினர். அவை:

1. நம்மாழ்வாரின் திருவாய் மொழிக்கு விளக்கவுரை எழுத வேண்டும்.

2. வியாச சூத்திரத்திற்கு விசிட்டாத்துவைதபரமாக ஒரு விரிவுரை எழுத வேண்டும்.

3. வியாசபராசரருக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் நல்லதொரு பணியைச் செய்ய வேண்டும்.

இந்த மூன்று விருப்பங்களையும் தாம் நிறைவேற்றுவதாக இராமாநுசர் வாக்களித்தவுடன் மூடி இருந்த (ஆளவந்தார்) விரல்கள் மூன்றும் விரிந்தன.*

பின்னர்த் தம் சீடராகிய பிள்ளானைக் கொண்டு திருவாய் மொழிக்கு வியாக்கியானம் செய்வித்தார். மற்றொரு சீடரான பராசர பட்டரைக் கொண்டு சகஸ்ர நாம பாஷ்யம் செய்வித்தார். காஷ்மீரம் வரை சென்று வடமொழி பயின்று தேர்ந்தபின், தாமே வேதவியாசரின் பிரம்ம சூத்திரத்திற்கு ஸ்ரீ பாஷ்யம் செய்தார்.

தமிழ் நாட்டில் உள்ள திருவரங்கத்தில் – 'கோயில்' என்ற பெருஞ் சிறப்புடைய வைணவ தலத்தில் வாழ்ந்து கொண்டு ஆழ்வார்களின் பாடல்களைப் பெரிதும் போற்றிக் கொண்டாடிய இவர், தாம் எழுதிய பாஷ்யங்கள் அனைத்தையும் வட

* பார்க்க பிற்சேர்க்கை – 4.

மொழியிலேயே செய்தார். தமது ஸ்ரீ பாஷ்யத்தில் ஓர் இடத்தில் கூட ஆழ்வார்களின் பாடல்களைக் குறிப்பிடவே இல்லை. வட மொழியில் பேருரை பல கண்டு பாஷ்யகாரர் என்ற சிறப்புப் பெயரைப் பெற்ற இவர், திருவாய் மொழிக்கு விளக்கவுரை எழுதாமை தமிழரின் தவக்குறைவே யாகும்.*

## விழுதுகள்

வைணவ உலகில், ஆலமரம் போல் ஓங்கி வளர்ந்து, பல நூறு கிளைகளுடன் பொலிந்த இராமானுசருக்கு, விழுதுகள் போல் சீடர் பலர் தோன்றினர். பலவேறு நாட்டினரும், சாதி யினரும் சீடர்கள் ஆயினர். மகளிர் பலர், அடியவர் ஆயினர். ஆளவந்தாரின் மைந்தர்களும், அவருடைய சீடர்களின் மைந்தர் களும் இவரை நாடி வந்து மாணவர் ஆயினர். அரிசனங்களைத் 'திருக்குலத்தார்' என்று பெயரிட்டுச் சீடராக்கிக் கொண்டார்.

இவ்வாறு 74 பேர் குறிப்பிடத் தக்க சீடர்கள் ஆயினர். இவர்களுக்குச் சிம்மாசனாதிபதிகள் என்ற பெயர் ஏற்பட்டது. இவர்களில் கூரத் தாழ்வான், அமுதனார், வடுக நம்பி, பிள்ளான், பராசுர பட்டர் ஆகியோர் சிறப்பு வாய்ந்தவர்கள்.

## கூரத்தாழ்வான்

இவர் இராமானுசருக்குச் செய்த உதவிகள் மிகப் பலவாகும். இவர் கல்வியிற் சிறந்த பெரியவர். வடமொழியும் தென் மொழியும் கற்றுத் துறை போகிய வித்தகர். இவரை அமுதனார், 'மொழியைக் கடக்கும் பெரும் புகழான்' என்றும்; 'வஞ்சக் குறும்பாம் குழியைக் கடக்கும் நம் கூரத்து ஆழ்வான்' என்றும் போற்றியுள்ளார்.

## அமுதனார்

அமுதனார், இராமானுசரைப் போற்றிப் பாடல்கள் இயற்றி இராமானுச நூற்றந்தாதி என்று பெயரிட்டு, தம் பக்தியை வெளிப் படுத்தினார். இந்நூல், திவ்வியப் பிரபந்தங்களுக்கு இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது.

அமுதனார், தம் பெயருக்கு ஏற்ப அமுதப் பாடல்களை இயற்றியுள்ளார். இராமானுசரை,

அறஞ் செப்பும் அண்ணல் (47)
உண்மை நல்ஞானம் உரைத்த இராமானுசன் (73)
நல்லார் பரவும் இராமானுசன் (80)
தெரிவுற்ற கீர்த்தி இராமானுசன் (82)

* மு. அருணாசலம்; தமிழ் இலக்கிய வரலாறு – 12 நூற் II; பக். 741, 742.

கற்றார் பரவும் இராமானுசன் (86)
பொற் கற்பகம் எம் இராமானுசன் (99)

என்று போற்றுகின்றார்.

இராமானுசர், இராமாயணத்தில் ஈடுபாடு மிகுந்தவர் என்பதை,

படிகொண்ட கீர்த்தி இராமாயணம் என்னும் பக்தி வெள்ளம்
குடிகொண்ட கோயில் இராமானுசன் (37)

என்று வியந்து கொண்டாடுகின்றார்.

**எழுதாத உரைகள்**

இராமானுசர் காலம்வரை, திவ்வியப் பிரபந்தத்திற்கு வாய் மொழியாகவே-பரம்பரை பரம்பரையாக உரைகள் வழங்கி வந்தன. இராமாநுசருக்குப் பின்னரே வைணவ உரைகள், வியாக்கியானங்கள் என்ற பெயரால் எழுதப்பட்டன.

இராமானுசருக்குச் சீடர் பலர் தோன்றினர். கூரத் தாழ்வான் இராமானுசரின் நெருங்கிய மாணவர் ஆனார். பிரபந்தத்திற்கு விரிவுரை கூறும் ஆற்றலும், வைணவ சமயக் கருத்துகளை விளக்கும் திறனும் பெற்றார். அவர் காஞ்சிபுரத்திற்கு அருகே கூரம் என்னும் இடத்தில் பிறந்தார். அவருடைய மைந்தன் பராசுர பட்டரும் தம் தந்தையைப் போலவே சிறப்புற்று விளங்கினார். இவர்களில் ஒருவரும் பிரபந்தத்திற்கு எழுத்து வடிவில் உரை எழுதிவைக்கவில்லை. ஆனால், வாய்மொழியாக இவர்கள் கூறிவந்த உரைகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

இராமானுசரின் முன்னோராகிய ஆளவந்தார் பிரபந்தத்திற்கு உரைத்த பல நுட்பங்களை, ஈட்டின் உரை யாசிரியர் ஆங்காங்கே குறிப்பிடுகின்றார். ஏனைய உரையாசிரியர் களும் கூரத்தாழ்வான் இவ்வாறு கூறினார், பராசுர பட்டர் இவ்வாறு விளக்கினார் என்று தம் உரைகளில் குறிப்பிடுகின்றனர்.

எடுத்துக் காட்டிற்கு ஒன்று தருவோம்: ‘உறுமோ பாவி யேனுக்கு’ என்ற பாடலில் வரும் ‘சிறுமா மனிசராய்’ என்ற தொடர், முரணாய் இருக்கிறதே என்று கூரத்தாழ்வானை, அவர் மகன் பட்டர் கேட்டார் என்றும், ‘மேனி சிறுத்து ஞானம் விரிந்து இருக்கலாம் அன்றோ?’ என்று விடை பகர்ந்தார் ஆழ்வான் என்றும் உரை கூறுகின்றது.

எழுத்து வடிவம் பெறாமலே நெடுங்காலம் வியாக் கியானங்கள் வழங்கி வந்தன என்பதற்கு இன்னும் பல சான்றுகள் உள்ளன. வாயால் விளக்கம் கூறிய பெரியோர்களின் உரையை எல்லாம் கேட்டு எழுதிப் போற்றிய பிற்காலப் பெரியோர்கள், வாய்மொழியாக உரைகூறி வந்தவர்களைப் பெரிதும் போற்றி

மதித்தனர். பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் திருவரங்கத்து அந்தாதியில் (3) குருபரம்பரையைக் குறிப்பிடும்போது,

**சீதரன் பூமகள் சேனையர் கோன்தென் குருகைப்பிரான்**
**நாத முனிஉய்யக் கொண்டார் இராமர்நல் ஆளவந்தார்**
**ஏதமில் வண்மைப் பராங்குச தாசர் எதித்தலைவர்**
**பாதம் அடைந்துய்ந்த ஆழ்வான்எம் பார்பட்டர் மற்றுஎமக்கே**

என்று போற்றுகின்றார்.

நாதமுனிகள் தேக்கிவைத்த ஆழ்வார்களின் பாடல்களாகிய பக்தி வெள்ளம், உரையாசிரியர்களின் விளக்கம் என்னும் பல வேறு வாய்க்கால்களில் பெருகி, கரை புரண்டு ஓடி வைணவப் பயிரை வளர்த்து வருகின்றது.

## பெயர் பெற்ற சிறப்பு

திருமால் அன்பர்களுக்கு வழுங்குகின்ற பெயர்கள் நம் கருத்தைக் கவர்கின்றன. நம்மை எல்லாம் ஆள்பவர்கள் என்ற கருத்தில் ஆள்வான் (ஆழ்வான்) ஆண்டான் ஆண்டாள் போன்ற பெயர்கள் வழங்குகின்றன. ஆசான் (ஆச்சான்) நம்பி பட்டர் சீயர் பெருமான் (பெருமாள்) அரையர் பிள்ளான் தாசர் போன்ற பெயர்கள் அவர்களுக்கு உண்டு. இப் பெயர்களுக்கு முன்னால் 'நம்' சேர்ந்து வருவது வழக்கம். இதனை உபதேச ரத்தினமாலை,

**நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை**
**என்பர் அவரவர்தம் ஏற்றத்தால்**

என்று குறிப்பிடுகின்றது.

## இராமானுசர் காட்டிய வழி

இராமானுசர், திருவரங்கத்திலே வீற்றிருந்து சமயத் தொண்டு புரிந்து வந்த போது, சீடர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து, திருக்குருகைப் பிரான் பிள்ளையை, "திருவாய் மொழிக்கு விளக்கவுரை எழுத வேண்டுமென்று, நீர் இராமானுசரை வேண்டிக் கொள்ளவேண்டும். அவர்கள் காலத்திலேயே அவர்கள் திருவுள்ளப்படியே—அவர்கள் வாக்காலேயே வியாக்கியானம் பெற வேண்டும்!" என்று கூறினர். அதற்குப் பிள்ளான் உடன் பட்டார்.

இராமானுசர், பெருங்கூட்டமாக இருந்த அடியவர்களின் நடுவே வீற்றிருந்தபோது, பிள்ளான் சென்று அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, "தேவரீர், திருவாய் மொழிக்கு வியாக்கியானம் செய்தருள வேண்டும்!" என்று வேண்டினார்.

தம் மாணவர் வேண்டுகோளுக்கு இணங்காத இராமானுசர், தாம் விளக்கம் எழுதுவது தகாது என்று பின்வரும் காரணங்களைக் கூறி மறுத்துவிட்டார்:

1. ஆழ்வார்களின் அருளிச் செயல்களுக்கு விளக்கம் எழுதிவிட்டால் மந்த மதிகட்கு, 'இதற்கு இத்துணையே பொருள்' என்று தோன்றிவிடும்.

2. ஆழ்வார் பாடல்களின் கருத்து, எழுத்தில் அடங்கி விடும் தன்மையுடையது அன்று. அவரவர்களின் அறிவு நுட்பத்திற்கும் பக்தி மேம்பாட்டிற்கும் உலக அனுபவத்திற்கும் ஏற்றவாறு விரிவடையும் இயல்புடையது.

3. தாம் உரைசெய்துவிட்டால், ஆழ்வார்பாடல்களுக்கு இதுவே கருத்து என்று வரம்பு கட்டியதுபோல் ஆகிவிடும். ஏனெனில் ஆசிரியர் மீது கொண்டுள்ள அளவற்ற பக்தியினால் அவரது மாணவர்கள், அதற்கு மேல் சிந்திக்க—விளக்கம் கூற முற்படார். யாரேனும் பிற்காலத்தில் சிறந்த விளக்கம் கூறினாலும் அதனை ஏற்காது புறக்கணிப்பர்.*

இத்தகைய காரணங்களைக் கூறி இராமானுசர் தாம் விளக்கம் எழுத மறுத்துவிட்டார். ஆனால், அதே நேரத்தில் தமக்கு அந்த வேண்டுகோள் விடுத்த மாணவரையே—பிள்ளானையே உரை செய்யுமாறு மணித்தார். பிறர் உரை எழுதுவதை வரவேற்றார்; ஊக்குவித்தார்.

இராமானுசர் காட்டிய வழி, காலப் போக்கில் பெருவழியாயிற்று. பிள்ளான் திருவாய்மொழிக்கு 6000 படி இயற்றினார். அதனை விரிவாக்கி நஞ்சீயர் 9000 படி இயற்றினார். பெரியவாச்சான் பிள்ளையால் அது 24000 படி ஆயிற்று. வடக்குத் திருவீதிப்பிள்ளை அதனை 36000 படியாக்கினார். இவ்வாறு ஐந்து உரைகள் ஒன்றன் பின் ஒன்றாய்—ஒன்றிற்கு ஒன்று விளக்கமாய்த் தோன்றின.

இவற்றிற்குப்பின், மணவாளசீயர் 12000 படி செய்து, சுருங்கச் சொல்லி விளக்கினார்.

திருவாய் மொழிக்கு, காலந்தோறும் விளக்கவுரை எழுதி வந்த ஆசாரியார்களைக் கீழ்வரும் வெண்பா போற்றியுரைக்கின்றது.

பிள்ளான்நஞ் சீயர் பெரியவாச் சான்பிள்ளை
தெள்ளார் வடக்குத் திருவீதிப்—பிள்ளை
மணவாள யோகிதிரு வாய்மொழியைக் காத்த
குணவாளர் என்றுநெஞ்சே கூறு

—மணவாளமாமுனி

* பார்க்க பிற்சேர்க்கை – 5

இந்தப் பாடல் பிள்ளான் நஞ்சீயர் முதலியோரைத் 'திருவாய் மொழியைக் காத்த குணவாளர்' என்று போற்றுகின்றது. இது குறிப்பிடும் சான்றோர்களையும் அவர்கள் இயற்றியுள்ள உரை விளக்கங்களையும் காண்போம்:

1. பிள்ளான் — திருக்குருகைப் பிரான் பிள்ளை; 6000 படி இயற்றியவர்.

2. நஞ்சீயர் — நம்பிள்ளை கூறிய விளக்கத்தை எழுதிப் போற்றியவர். அந்த விளக்கம் 9000 படி.

3. பெரியவாச்சான் பிள்ளை — வியாக்கியான சக்கர வர்த்தி; 24000 படி இயற்றியவர்.

4. வடக்குத் திருவீதிப் பிள்ளை — 36000 படி இயற்றியவர்.

5. மணவாள யோகி — 1200 படி இயற்றியவர்.

மேலே உள்ள பாடல் 9000 படியைத் தோற்றுவித்த நம் பிள்ளையைக் குறிப்பிடவில்லை. ஏனெனில், நம்பிள்ளை எழுதிய விளக்கம் அவர் ஆசிரியர் நஞ்சீயர் பெயரால் வழங்கி வருகின்றது. அந்த உரை நம்பிள்ளை பெயராலேயே வழங்குதல் வேண்டும். ஆனால் வழி வழியாக வந்த மரபை யொட்டி நஞ்சீயர் பெயரால் குறிப்பிடப்படுகின்றது.

**முந்துறவே பிள்ளான் முதலானோர் செய்தருளும்**
**அந்த வியாக்கியைகள் அன்றாகில்—அந்தோ,**
**திருவாய் மொழிப்பொருளை, தேர்ந்துரைக்க வல்ல**
**குருஆர்,இக் காலம் ?நெஞ்சே கூறு.**

**—மணவாளமாமுனி**

திருவாய்மொழி, உரைக்களஞ்சியம் உடைய பெருநூலாய்த் திகழ்கின்றது. இத்தகைய சிறப்பு, வேறு எந்தச் சமய நூலுக்கும் ஏற்படவில்லை. திருவாய் மொழியை—நம்மாழ்வாரை வைணவச் சான்றோர்கள் எவ்வாறு போற்றியுள்ளனர் என்பது இவ்வுரை களால் விளங்கும்.

வைணவ உரையாசிரியர்கள், தாம் செய்த விளக்கவுரையை வியாக்கியானம் என்று குறிப்பிட்டனர். உரைகளில் உள்ள எழுத்துகளைக் கணக்கிட்டு, எண்களால் அவற்றிற்குப் பெயரிட்டனர். படி என்ற சொல்லை ஓர் அளவையாகப் பயன் படுத்தினர்.

படி என்பது எழுத்துகளை எண்ணிக் கூறுகின்ற ஓர் அளவு. மெய் எழுத்துகள் நீங்கலாக மற்ற எழுத்துகள் (உயிரும் உயிர் மெய்யும்) 32 கொண்டது ஒருபடி. படியைக் கிரந்தம் என்றும் கூறுவர். "ஒரு கிரந்தமாவது ஒற்று ஒழித்து, உயிரும் உயிர்மெய்யும்

ஆகிய முப்பத்திரண்டு எழுத்து" என்பது யாப்பருங்கலக் காரிகை தருகின்ற விளக்கம்.

ஆறாயிரப்படி என்பது, 6000×32 எழுத்துக்களைக் கொண்டதாகும். இவ்வாறே ஏனையவற்றிற்கும் கணக்கிட்டுக் கொள்ள வேண்டும்.

## திருவாய்மொழி வியாக்கியானங்கள்

திருவாய்மொழி வியாக்கியானங்கள் வைணவர்கள் 'பகவத் விஷயம்' என்று கொண்டு அவற்றைப் பிரமாண வாக்கியமாகக் கருதிப் பெரிதும் போற்றிவருகின்றனர். இவ்வுரைப் பெருங்கடலில் நீந்த முயல்பவர், பெரும் பயன் பெறுவர். இவற்றைச் சமய நோக்குடன் கற்றாலும் இலக்கியமாக எண்ணிக் கற்றாலும் பயன் மிகவும் உண்டாகும். இவ்வுரையாசிரியர்களிடம் தீவிரமான வைணவ பக்தியும், இருமொழிப் புலமையும் உண்டு. அளவற்ற அறிவாற்றலும் உரை எழுதும் வன்மையும் இவர்களிடம் உண்டு. தமிழ் மொழியிலும் ஆழ்வார்களின் பாடல்களிலும் தமக்கிருக்கும் அளவற்ற ஈடுபாட்டை ஆங்காங்கே வெளிப்படுத்திச் செல்கின்றனர்

## 6000 படி

நாதமுனிகள் காலம் முதல் இராமானுசர் காலம்வரை, திருவாய் மொழிக்கு வாய்மொழி வாயிலாகவே உரைகள் கூறப்பட்டுவந்தன. ஆறாயிரப்படியே முதன் முதலில் எழுத்து வடிவில் தோன்றிய திருவாய்மொழி வியாக்கியானம். இதுவே பிற்கால வைணவ உரைகளுக்குத் தோற்றுவாய்.

இதனை இயற்றியவர், ஆளவந்தாரின் சீடராகிய பெரிய திருமலை நம்பியின் புதல்வரான பிள்ளான் என்பவர். பிள்ளான் 1062 இல் தோன்றினார். இவர் இராமானுசரின் உள்ளங்கவர்ந்த நன் மாணாக்கர்; ஆசானின் குறிப்பறிந்து நடந்து கொண்ட சீலர்.

இராமானுசரின் கட்டளையை மேற்கொண்டு இவர், 6000படி என்ற வியாக்கியானம் இயற்றினார். இவரது வியாக்கியானத்தைக் கண்டு மகிழ்ந்து இராமானுசர் இவருக்கு (நம்மாழ்வார் நினைவாக) 'திருக்குருகைப் பிரான்' என்று பெயரிட்டார். 6000படியின் பெருமையையறிந்து, "யாம் செய்த ஸ்ரீ பாஷ்யத்தைப் போலவே, இதுவும் காலட்சேபத்தில் வைக்கப் படுவதாக!" என்று பணித்தார் இராமானுசர்.

பிள்ளானை 74 சிம்மாசனாதிபதிகளுக்கு முதல்வர் ஆக்கினார். இராமானுசரின் ஞானபுத்திரர் ஆனார். இறுதிக்

காலத்தில் பிள்ளான் மடியில் தலை வைத்து, இராமானுசர் திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

பிள்ளானின் உரையை,

**தெள்ளாரும் ஞானத் திருக்குரு கைப்பிரான்**
**பிள்ளான் எதிராசர் பேரருளால்—உள்ளாரும்**
**அன்புடனே மாறன் மறைப்பொருளை அன்றுரைத்தது**
**இன்பமிகும் ஆறா யிரம்**

என்று மணவாள மாமுனிகள் போற்றுகின்றார்.

பிள்ளான் 6000 படி விளக்கவுரையில் ‘இராமானுசர் தம் நூல்களில் எழுதியுள்ள வடமொழித் தொடர்களை அப்படியே எடுத்து வைத்து எழுதுகிறார். ஆளவந்தாருடைய தோத்திர ரத்தினக் கருத்துகளையும் எடுத்து அமைத்திருக்கிறார். சில பாடல்களுக்குக் கருத்தை மட்டும் கூறுவார். சிலவற்றில் பதங்களுக்கு அன்னுவயம் காட்டி முடிப்பார். சில பாடல்களில் சுருக்கமாக ஒரே வரியில் உரை எழுதுகிறார். வடமொழித் தொடர்களை, தமிழ் உருபுகளையும் வினைகளையும் கொண்டு முடிக்கிறார். அனறியும் ஒவ்வொரு திருமொழியிலும் முன்வந்த பாசுரங்களோடு தொடர்புபடுத்தி எழுதுவது இவர் இயல்பு. ஒரு திருமொழியில் சில பாடல்களுக்கு விரிவான மேற்கோள்களைக் காட்டி மற்றவற்றைச் சுருக்கிச் சொல்வதும் இவருடைய மற்றோர் இயல்பு’.*

## 9000 படி

இதனை இயற்றியவர் நஞ்சீயர் (1182—1287). இவர், கூரத் தாழ்வானின் மைந்தராகிய பராசர பட்டரின் சீடர். மைசூரை அடுத்துள்ள மேனாட்டில் இவர் பிறந்தார்.

திருவாய்மொழிக்குப் பிள்ளான் எழுதிய ஆறாயிரப் படியை விரிவுபடுத்தி, நஞ்சீயர் சொற்பொழிவு செய்தார். நஞ்சீயர் அத் வைதத்தில் தேர்ந்தவர்; திருவரங்கத்தில் வாழ்ந்தவர்; வேதாந்தக் கடலை நீந்தியவர். இவரது இயற்பெயர் மாதவாசார்யா.

நஞ்சீயர் கூறிவந்த வியாக்கியானங்களில் ‘ஒன்றும் தப்பாமல் பதறாமல் கேட்டுத் தரித்து இராமுற்ற எழுதி, கால் கொம்பு சுழி’ ஏறாமல் அப்படியே எழுத்து வடிவில் தந்தவர் நம்பிள்ளை. இவரது இயற்பெயர் வரதராசர்.

பட்டர் மறைவுக்குப்பின், நஞ்சீயர் ஆசாரியர் பதவி ஏற்றார். தாம் விரிவுபடுத்தியுள்ள வியாக்கியானத்தைத் திருத்தமானபடி

* மு. அருணாசலம், தமிழிலக்கிய வரலாறு (12 நூற். II) பக். 758.

ஒன்று எடுக்குமாறு தம் மாணவர் நம் பிள்ளையிடம் தந்தார். நம்பிள்ளை காவிரியின் தென்கரையில் உள்ள நம்பூரில் வாழ்ந்து வந்தார்.

நம்பிள்ளை, திருவரங்கத்தில் நஞ்சீயரிடமிருந்து ஓலைச் சுவடியைப் பெற்றுக்கொண்டு தம் ஊர்க்குச் செல்லக் காவிரியில் இறங்கினார். காவிரியில் வெள்ளம் மிகுதியாக வரவே ஓலைச் சுவடி கைதவறி ஆற்று வெள்ளத்தில் விழுந்து மறைந்து போய் விட்டது.

ஓலைச்சுவடியை இழந்த நம்பிள்ளை, பெரிதும் வருந்தித்தம் ஊருக்குச் சென்று, தாமே திருவாய்மொழிக்குப் புதியதொரு விளக்கம் எழுதினார். எழுதி முடித்து விட்ட பின் தாம் எழுதிய விளக்கத்தை ஆசிரியரிடம் கொண்டு வந்து காட்டினார். நஞ்சீயர், அதனைப் பிரித்துப் பார்த்தபோது, பல புதிய விளக்கமும் கருத்தும் அதில் சேர்ந்திருந்தன. அவற்றைக் கண்ட நஞ்சீயர் காரணம் கேட்டார். நம்பிள்ளை, நடந்தவற்றை எல்லாம் ஒன்றும் மறைக்காமல் கூறி வருந்தினார். நம்பிள்ளையின் விளக்கம் மிகவும் சிறப்பாய் இருப்பதை அறிந்து அவரது புலமைத் திறனைப் போற்றி உரையை ஏற்றுக் கொண்டார்.*

இவ்வாறு நம்பிள்ளை எழுதிய விளக்கமே 9000 படியாகும். இந்த விளக்கத்தை நம்பிள்ளை எழுதி இருந்தாலும், நஞ்சீயர் பெயரால் இது வழங்கி வருகின்றது.

9000 படியை உபதேச ரத்தினமாலை (43),

**தஞ்சீரை ஞானியர்கள் தாம்புகழும் வேதாந்தி**
**நஞ்சீயர் தாம்பட்டர் நல்லருளால்—எஞ்சாத**
**ஆர்வமுடன், மாறன் மறைப்பொருளை ஆய்ந்துஉரைத்தது**
**ஏர்ஒன் பதினா யிரம்**

என்று போற்றுகின்றது.

## 24000 படி

ஆசான் என்ற சொல்லுக்கு ஆசிரியன் என்பது பொருள். இச் சொல் ஆச்சான் என்று வழங்கும். பெரிய ஆசான் என்ற தொடர் பெரியவாச்சான் என்று ஆயிற்று. பெரியவாச்சான் பிள்ளை, நம்பிள்ளையின் அன்பிற்குரிய மாணவர். குடந்தை அருகே உள்ள சேங்கநல்லூரில் பிறந்தவர்; திருவரங்கத்தில் தங்கிப் பணிபுரிந்தவர். பல நூல்களைக் கற்றறிந்த பெரும்புலவர். 70

* பார்க்க, பிற்சேர்க்கை – 6

2.32

ஆண்டுகளுக்கு மேல் வாழ்ந்தவர். நீண்ட தம் வாழ்நாளில் பல அரிய எழுத்துப் பணிகளைப் புரிந்தவர்.

பெரியவாச்சான் பிள்ளையின் கல்விமாண்பை அறிந்த நம்பிள்ளை, திருவாய்மொழிக்குப் பெரியதொரு வியாக்கியானம் எழுதுமாறு பணித்தார். அதன் விளைவாய்த் தோன்றியது 24000 படி.

**நம்பிள்ளை தம்முடைய நல்லருளால் ஏவியிட**
**பின்பெரிய வாச்சான்பிள் ளையதனால் – இன்பா**
**வருபத்தி மாறன் மறைப்பொருளைச் சொன்னது**
**இருபத்து நாலா யிரம்.**

என்று இதன் வரலாற்றை உபதேச ரத்தின மாலை கூறுகின்றது.

பெரியவாச்சான் பிள்ளை, நாலாயிர திவ்வியப்பிரபந்தம் முழுமைக்கும் வியாக்கியானம் இயற்றி, 'வியாக்கியான சக்ரவர்த்தி' என்னும் சிறப்புப் பெயர் பெற்றார்.

'பழநடை விளக்கம்' என்னும் நூல், பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானங்களைப் பின் வருமாறு புகழ்கின்றது:

"திவ்வியப் பிரபந்த தாத்பரியங்களை அறிகைக்கு, பெரியவாச்சான்பிள்ளை செய்தருளின வியாக்கியானங்களை ஒழிய வேறு கதி இல்லை. ஆகையால், ஸ்ரீ வைஷ்ணவர்கள் எல்லாரும் பெரியவாச்சான் பிள்ளை சம்பந்தம் பெற்று, அவருக்குச் சிஷ்ய கோடியாய் இருப்பார்கள்".

திவ்வியப் பிரபந்தம் வியாக்கியானம் முழுவதிலும் பெரிய வாச்சான் பிள்ளையின் உயிர் நாடி துடிக்கின்றது. இவரது எழுத்துக்கள் யாவும், வைணவ சமய உண்மையின் கருவூலமாய்க் காட்சியளிக்கின்றன. மாபெரும் உண்மைகளுக்கும் கொள்கை களுக்கும் இடையே கவிதைத் திறனோடு கூடிய புலமை மாண்பு ஊடுருவிச் செல்லுகின்றது. இவரதுவாக்கு சிறந்த உயிர்த்துடிப்பை உண்டாக்கி ஆழ்வார்களின் பாடல்களுக்குப் புதியதோர் அழகைத் தருகின்றது. இவரது மேதைமையும் உள்ளப்பாங்கும், பிரபந்த உலகின் இருண்ட பகுதிகளில் மின்னலைப் போல் ஊடுருவிச் சென்று பேரொளி வீசுகின்றன. இவரது உதவியால் ஆழ்வார்களின் இதய ஒலியைக் கேட்கின்றோம்; ஆசாரியார் களின் திருவுள்ளப் பாங்கினைக் காண்கின்றோம். அவற்றோடு இணைந்து செல்லும் பெரியவாச்சான் பிள்ளையின் உள்ளத்தை அறிந்து இன்புறுகிறோம்.

### இராமாயணப் புலமை

பெரியவாச்சான் பிள்ளை, வடமொழியில் உள்ள வால்மீகி இராமாயணத்தில் மிகுந்த ஈடுபாடு உடையவர்; அக்

காவியத்தைக் கற்றுப் பெரும் புலமை பெற்றவர். தம் உரைகளில் பல இடங்களில் வால்மீகி காவியத்தை மேற்கோள்காட்டுகின்றார்.

இவர் காலத்தில் வாழ்ந்த வேதாந்த தேசிகர் வால்மீகி இராமாயணத்தை மொழி பெயர்க்க விரும்பினார். சில சுலோகங்களுக்கு 'அபய பிரதான சாரம்' என்ற பெயரில் தமிழாக்கம் செய்து வந்தார். அப்போது பெரியவாச்சான் பிள்ளை, தம் வியாக்கியானத்தில் வால்மீகி இராமாயணத்தை மேற்கோள்காட்டி விளக்கி வருவது அறிந்தார். அவற்றைப் படித்துப்பார்த்தபின் வேதாந்த தேசிகர் தாம் எழுதி இருக்கும் விளக்கம்யாவும் "சோழியன் உமிழ்ந்த சக்கை" என்று கூறினார்.

பெரியவாச்சான் பிள்ளை, சோழநாட்டு அந்தணர் ஆதலின் இவரை, சோழியன் என்று தேசிகர் குறிப்பிட்டார்.

**கம்பர் தமிழ்**

கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர், நஞ்சீயர் காலத்தில் வாழ்ந்தவர் என்பர். வைணவ உரைகள் பல தோன்றி, விளக்கத்திற்கு விளக்கம்—உரைக்கு உரை என்று விரிவடைந்த காலத்தில் வைணவ சமயக் கருத்தும், இலக்கியமும் நாடெங்கும் பரவின. இராமானுசரும் அவரது வழித்தோன்றல்களும் வால்மீகி இராமாயணத்தைத் தமிழ் நாடெங்கும் கதா காலட்சேப வாயிலாகப் பரப்பி வந்தனர். இராமானுசரை அமுதனார், 'படி கொண்ட கீர்த்தி இராமாயணம் என்னும் பக்தி வெள்ளம் குடிகொண்ட கோயில்' என்று பாராட்டுகின்றார். வைணவ அடியார்கள் பரப்பி வந்த இராமயணம் என்னும் பக்தி வெள்ளம் தமிழ் மக்கள் நெஞ்சில் பாய்ந்தது. எங்கும் இராமன் கதை பேசப் பட்டது. இராமன் புகழ் தமிழகமெங்கும் மண்டிக்கிடந்தது.

இத்தகைய சூழலில்தான் கம்பர் தோன்றினார். இராமன் கதையைப் பாடினார். கம்பராமாயணம் வைணவ ஆசாரியர்களின் காலத்திலேயே தமிழ் நாடெங்கும் பரவத் தொடங்கியது. பெரியவாச்சான் பிள்ளை காலத்தில், கம்பர் காவியம் கற்றவர் உள்ளத்தில் இடம் பெற்றது. கம்பர் பாடல்கள் இரண்டைப் பெரிய வாச்சான் பிள்ளை, தம் உரையில் மேற் கொண்டுள்ளார்.

'மஞ்சுலாம் சோலை வண்டறை மாநீர்' என்னும் திருவாய் மொழிப் பாடலுக்குப் பெரியவாச்சான் பின்வருமாறு விளக்கம் கூறுகின்றார்:

"வண்டறை என்கிறது சோலைக்கு அடைமொழியாகவும், மாநீர்க்கு அடைமொழியாகவும் ஆம் ஜலத்தினுடைய

ரஸ்யதையாலே, 'ஈக்கள் வண்டொடு மொய்ப்பது' என்று ஆற்று வரவுகளிலே சொல்லுவார்களாய்த்துத் தமிழர்".

இங்கே, 'ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பு இகந்து' (பால-ஆற்று-10) என்ற கம்பர் பாடலின் அடியை மேற்கோள் காட்டியுள்ளார்.

யுத்த காண்டத்தில்—வருணனை வழி வேண்டு படலத்தில் (5), 'தருணமங்கையை' என்று தொடங்கும் பாடலில் வருகின்ற

**கருணை யங்கடல் கிடந்தது கருங்கடல் நோக்கி**

என்ற அடியையும் 'பெரியவாச்சான் பிள்ளை எடுத்தாண்டுள்ளார்:

"கடல், தன்னைப் பொர அளவுடைத்தாக நினைத்திருக்குமாயிற்று: அதுக்காக ஒரு கடல் ஒரு கடலோடே ஸ்பர்தித்து (மாறுபட்டு)க் கிடந்தாற்போலே இருக்கை; கருணையங் கடல் கருங்கடல் நோக்கிக் கிடந்தது' என்னும்படியிறே" (திருவாய்மொழி, 6-9-3).

## தமிழ் நடை

பெரியவாச்சான் பிள்ளை, பகவானையும் பிரபஞ்சத்தையும் ஆன்மாவையும் இவர்களுக்குள்ள தொடர்பையும் பற்றிப் பேசும் போது, பெரிதும் வடசொற்றொடர்களைக் கொண்டு எழுதுகின்றார். ஆனால், இயற்கை வருணனை போன்றவை கூறும் இடங்களில் தம்மை மறந்து இனிதாகத் தமிழ்ச் சொற்களாலேயே விளக்கமும் கதைகளும் சொல்லிக் கொண்டு போகிறார்.*

## 36000 படி

நம்பிள்ளையின் மற்றொரு மாணவராகிய வடக்குத் திருவீதிப்பிள்ளை முப்பத்தாறாயிரப் படியை வழங்கினார். இதுவே ஈடு என்று வழங்கப்படுகின்றது. ஈட்டின் ஆசிரியர், திருவரங்கத்தில் வடக்கு வீதியில் வாழ்ந்து வந்ததால் வடக்குத் திருவீதிப்பிள்ளை என்னும் பெயர்பெற்றார். நம்பிள்ளை நாள் தோறும் செய்துவந்த காலட்சேபத்தில் அருளிச்செய்த விரிவுரை, வடக்குத் திருவீதிப் பிள்ளையால் எழுதிவைக்கப்பட்டு ஈடு என்னும் பெயர் பெற்றது. இச் செய்தியை மணவாள மாமுனிகள்,

**தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறிதன்னை**
**வள்ளல் வடக்குத் திருவீதிப்-பிள்ளைஇந்த**
**நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்தது**
**ஈடுமுப்பத் தாறா யிரம்**

என்று கூறுகின்றார்.

* மு. அருணாசலம், இலக்கிய வரலாறு, 13-நூற். பக். 342.

## ஈடு

ஈடு என்று இவ்வுரை வழங்குவதற்குப் பல காரணங்களைக் கூறுகின்றனர்.

1. ஈடு என்ற சொல்லுக்குக் கவசம் என்பது பொருள் (சிந்தாமணி 537 உரை). கவசம் உடலைக் காப்பது போல முப்பத்தாறாயிரப்படி வியாக்கியானம் திருவாய்மொழியைக் காத்து நிற்கின்றது. கற்போராலும் எழுதுவோராலும் வேற்றுமக்களாலும் தன்நிலை திரிந்து மாறுபடாத வண்ணம் இவ்வுரை திருவாய்மொழியைக் காக்கின்றது என்பது கருத்து.

2. இடுதல் என்ற சொல்லுக்கு எழுதுதல் என்ற பொருள் உண்டு. இடு முதல் நீண்டு ஈடு என வழங்கும். நம்பிள்ளை நாள் தோறும் காலட்சேபத்தில் அருளிச் செய்தவற்றை வடக்குத் திருவீதிப் பிள்ளை எழுதிவைத்ததால் ஈடு என்று வழங்கப்பட்டது.

3. சுருதப் பிரகாசிகையினை அளவால் ஒத்து இருத்தலின் இதனை ஈடு என்றனர். ஈடு என்ற சொல்லுக்கு ஒப்பு என்பது ஒரு பொருள்.

4. தன்னைக் கற்பவர் எல்லாரையும் இறைவனிடம் ஈடுபடச் செய்வது ஆதலின் இது ஈடு எனப்பட்டது.

ஈட்டின் பெருமையை வைணவப் பெரியோர் பலவாறு எடுத்துக் கூறுகின்றனர். பின்வரும் பகுதி ஈட்டின் புகழை உணர்த்தும்:

"ஈட்டின் நடையழகு தனிச் சிறப்பு வாய்ந்தது; பொருள் உணர்வோடு பயிலப்பயிலப் பேரின்பம் பயப்பது; சொல்லாற்றல்கள் பொருளாற்றல்கள் அமைந்தது; சுருங்கச் சொல்லல் விளங்கவைத்தல் என்னும் வனப்பு வாய்ந்தது; கூறப்புகும் பொருளை விளக்குவதற்குக் காட்டப்படும் மேற்கோள்கட்குப் பொருள் கூறும்முறை எத்தகையோரும் வியக்கத்தக்கது; பதசாரம் கூறுவதில் இவ் ஈட்டின் ஆசிரியருக்கு ஒத்தாரும் மிக்காரும் இத்தமிழ் நாட்டில் இலர்; பிற நாட்டிலும் இலர் என்று கூறலாம்; ஒரு பதிகத்தோடு மற்றொரு பதிகத்திற்கும் உள்ள பொருள் தொடர்பைக் கூறிச்செல்லும் மாண்பு வேறு எவ்வுரையிலும் காண்டல் அரிது".*

## ஒரு பகுதி

திருவாய்மொழி ஈட்டிலிருந்து ஒரு பகுதியை இங்கே காண்போம்:

* திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம் பகுதி I (1957) பக்கம் 46.

அடங்கெழில் சம்பத்து அடங்கக்கண்டு ஈசன்
அடங்கெழில் அஃதென்று அடங்குக உள்ளே

என்பது திருவாய்மொழி.

இவ்விரு அடிகளுக்கும் ஈட்டு உரையின் பொழிப்புரை பின் வருமாறு: "அழகியதான செல்வம்; முழுவதையும் பார்த்து அஃது இறைவனுக்குள் அடங்கிய செல்வம் என்று நினைந்து, அச் செல்வத்திற்குள் நீயும் அடங்கு."

## விளக்கம்

"கடலிலே புக்க துரும்பானது இரண்டு தலையிலும் நினைவின்றியே இருக்கவும், திரைமேல் திரையாகத் தள்ளுண்டு போந்து கரையிலே சேருகிறதில்லையோ? அப்படியே அவனுடைய ஐசுவரிய அலையானது அவனைத் தள்ளாதோ என்னில், இந்த ஐசுவரியம் எல்லாம் நமக்கு வகுத்த சேஷியானவனுடைய ஐசுவரியமென்று நினைத்தால் தானும் அதுவாகச் சேரலாமே. ஆனபின்னர், சம்பந்த ஞானமே வேண்டுவது என்கிறார்.

## மேற்கோள் கதை

எங்ஙனம் எனின், ஒருவணிகன் தன்மனைவி கருவுற்றிருக்கும் காலத்தில் பொருள்தேடும் விருப்பினால் வெளிநாடு சென்றான்; அவளும் கருவுயிர்த்தாள்; மகனும் தக்க வயதடைந்து தனக்கும் தகப்பனாருடைய வாணிகமே தொழிலாகப் பொருள் தேடப் போனான். இருவரும் தத்தமக்கு வேண்டியச் சரக்குப் பிடித்துக் கொண்டு வந்து ஒரு பந்தலில் தங்கினார்கள். அஃது இருவர்க்கும் இடம் போதாமையால் அம்பறுத்து எய்யவேண்டும் படி விவாதம் உண்டான சமயத்தில், இருவரையும் அறிவான் ஒருவன் வந்து, 'இவன் உன் தகப்பன்; நீ இவன் மகன்!' என்று அறிவித்தால் கீழ் இருந்த நாட்களுக்குச் சோகித்து, இருவர் சரக்கும் ஒன்றாய் அவன் காப்பாற்றுகின்றவனாய், இவன் காப்பாற்றப் படும் பொருளாய்க் கலந்துவிடுவார்களன்றோ!

## கருத்துரை

அதுபோன்று, சீவான்மாவும் பரமான்மாவும் சரீரமாகிய ஒரு மரத்தினைப்பற்றி இருந்தால், ஒருவன் இருவினைப் பயன்களை நுகரா நிற்பான்; ஒருவன் நுகர்வித்து விளங்கா நிற்பன்; அவன் ஏவுகின்றவன்; நாம் ஏவப்படும் பொருள் என்னும் முறையறிவே பொருந்தலாம் அன்றே?

## எடுத்துக்காட்டு

ஓர் அரச குமாரன் பூங்கா ஒன்றினைக்கண்டு புகஅஞ்சினால், 'இது உன் தகப்பனதுகாண்' என்னவே, நினைத்தபடி நடந்து

கொள்ளலாம் அன்றோ? ஆனபின்னர், அவனுடைய உடைமை இவை எல்லாம் என்னும் நினைவே வேண்டுவது, தானும் அதற்குள்ளே ஒருவனாகச் சேரலாம் என்கின்றார்."

## உரையால் அறியும் செய்திகள்

ஈட்டு உரை பலவகையான அரிய செய்திகளை நமக்கு அறிவிக்கின்றது. அதில் இடம்பெற்றுள்ள பல நூறு உவமைகளில் எத்தனையோ செய்திகள் அடங்கியுள்ளன.

## மன்னர்களைப்பற்றிய குறிப்புகள்

அரசர்கட்கு நாடெங்கும் தமது ஆணை செல்லுமாயினும் தங்கள் தேவியரும் தாங்களுமாகப் பூந் தோட்டங்கள் சிலவற்றைக் குடநீர் வார்த்து ஆக்குவது அழிப்பதால் விளையாட்டின்பம் துய்க்குமாறு போன்று—

அரச குமாரன் அழுகு சிறையிலே கிடந்தால், முடி சூடி அரசை நடத்துவதிலும் சிறை விடுகைதானே பயனாக இருக்குமாறு போன்று—

இராஜாக்கள் இராஜதுரோகம் செய்தவர்களை நலிகைக்கு வேற்காரரை வரவிடுமாறு போன்று—

செடி சீய்த்துக் குடியேற்றின படைவீடுகளை விடாதே இருக்கும் அரசர்களைப் போன்று—

இராஜாக்கள் அந்தப்புரத்தில் ஒரு கட்டில் நின்றும் மற்றைக் கட்டில் ஏறப்போகா நிற்க அந்தரங்கர் நடுவே முகங்காட்டித் தம் காரியம் கொண்டு போமாறு போன்று—

சிறையிலே இருந்த இராஜ குமாரன் தலையிலே முடியை வைத்துப் பின்னைச் சிறையை வெட்டிவிடுவாரைப் போன்று—

அரச குமாரர்கட்கு உரிய அவ்வக் காலங்களில் வெள்ளிலை இடாதபோது அவர்கள் வருந்துவார்கள்; அது போன்று—

அரசனுடைய சந்நிதியில் கூனர் குறளர்களாய் வசிப்பது போன்று—

## நாகரிகம், பழக்கவழக்கம் முதலியன

செப்பிலே கிடந்த ஆபரணத்தை வாங்கிப் பூண்டு பின்னையும் அவ் ஆபரணத்தை வாங்கிச் செப்புக்குள்ளே இட்டு வைக்குமாறு போன்று—

கெடுமரக்கலம் கரை சேர்ந்தாற் போன்று—

இருகை முடவனை யானை ஏறு என்றால் அவனால் ஏறப் போகாதது போன்று—

ஒருவன் ஒருவனை, "உனக்கு ஒரு மாத ஜீவனத்துக்கு என்ன வேணும்?" என்றால் தன் மனைவி மக்களையும் கூட்டிக் கொண்டு, "எனக்குக் கலம் நெல் வேணும்" என்பது போன்று—

தம்மால் காதலிக்கப்பட்டவர்கள் இருக்கும் இடத்திற்குச் செல்லும் ஆடவர்கள் தம்மை அலங்கரித்துக்கொண்டு போமாறு போன்று—

வேற்றரசர்களால் கலகங்கள் உண்டான காலங்களில் அடைய வளைந்தானுக்குள்ளே குடிவாங்கி இருந்து, இவ்விடம் இன்னார் பற்று, இவ்விடம் இன்னார்பற்று' என்று பின்னும் தம் இடத்தைச் சொல்லிவைக்குமாறு போன்று—

**பயிர்த் தொழில்**

வேரிலே வெப்பந் தட்டினால் கொழுந்து முற்பட வாடுவது போன்று—

நெற்பயிர் செய்யப் புல் தேயுமாறு போல—

**நோயும் மருந்தும்**

பசியில்லாத காலத்தில் உணவு நோயினைத் தருவதாம் எனப்படுதலால், நோயின் மூலத்தை அறியும் மருத்துவர்கள் உணவு உண்ணலாகாது என்று விலக்குமாறு போன்று—

பால்குடிக்க நோய் தீருமாறு போன்று—

**தண்ணீர்ப் பந்தல்**

விடாயன் தண்ணீர்ப் பந்தலில் வந்ததும் சால் உருண்டு கிடந்தது போன்று—

தார்மிகன் வைத்த தண்ணீர்ப் பந்தலை அழிப்பாரைப் போன்று—

**இராமாயணக் கதை**

மோஹித்துக் கீழே விழுந்த ஸ்ரீபரதாழ்வானைப் போன்று—

சக்கரவர்த்தித் திருமகன் திரு அவதரித்த பின்பு வானர சாதி வீறு பெற்றாற் போன்று—

விபீஷணனைச் சேர்த்துக் கொண்டாற் போல—

**12000 படி**

இதனை இயற்றியவர் அழகிய மணவாள சீயர். இவர் கல்வி கற்று, உரை எழுதிய வரலாறு சுவையானது. 32 வயது வரை,

இவர் கல்வியறிவு இல்லாதவராய் இருந்தார். ஒரு நாள் கூட்டமாய்ச் சேர்ந்து படித்துக் கொண்டிருந்த மாணவர் சிலரைக் கண்டு, "நீங்கள் என்ன படிக்கிறீர்?" என்று கேட்டார். அந்த மாணவர்கள் இவர் எழுத்தறிவில்லாதவர் என்று அறிந்து சிரித்துக் கொண்டே, "முசலகிசலயம் படிக்கிறோம்!" என்றனர்.

அதன் பொருளை அறியாத இவர், தம்மை மாணவர்கள் எள்ளி நகைக்கின்றனர் என்று மட்டும் அறிந்து கொண்டார். பின்னர்ப் பெரியவாச்சான் பிள்ளையிடம் சென்று வணங்கி நடந்ததைக் கூறினார்; முசல கிசலயம் என்பதற்கு விளக்கம் கூறுமாறு வேண்டினார். பெரியவாச்சான் பிள்ளையும் நகைத்துக் கொண்டே, "நீர் படிப்பு வாசனை இல்லாதவர்! 'நாங்கள் படிப்பதைப் பற்றி ஏன் கவலைப்படுகிறீர்?' என்று உம்மை எள்ளி நகைக்கின்றனர். முசலகிசலயம் என்பதற்கு, உலக்கைக் கொழுந்து என்பது பொருள். அப்படி ஒரு நூல் இல்லை!" என்றார்.

இவ்வாறு பிள்ளை கூறியவுடன், மணவாளர் பெரிதும் நாணமடைந்தார். அவரது திருவடிகளில் விழுந்து வணங்கினார்; "அடியேனை மாணவனாய் ஏற்றுக் கொண்டு, கல்வி கற்பித்துப் புலவனாய் ஆக்குதல் வேண்டும்!" என்று வேண்டினார். பிள்ளை மனம் உருகி இவருக்குக் கல்வி மீது ஏற்பட்ட ஆர்வத்தை அறிந்து போற்றி, அன்றுமுதல் கல்வி கற்பித்து இவரைப் பெரும் புலவராய் ஆக்கினார்.

புலமை பெற்றபின், 'முசலகிசலயம்' என்னும் பெயரில் காவியம் ஒன்றை இயற்றினார். அதனை, முன்பு தம்மை இகழ்ந்த மாணவர்களிடம் காட்டி அவர்களைத் தலைகுனியுமாறு செய்தார்.

பின்னர், திருவாய்மொழிக்குத் தோன்றிய மிகவிரிவான வியாக்கியானங்களை எல்லாம் கற்றறிந்தார். அவற்றைச் சுருக்கி, சாரமாய்—எளிதாய்—எல்லோர்க்கும் விளங்கும் வகையில் 12000 படி இயற்றினார்.

### பராசரபட்டர் (1192–1220)

கூரத்தாழ்வாரின் மைந்தர். கி.பி. 1123-இல் பிறந்தவர். இராமானுசரின் சீடர் ஆன பின், இவருடைய கீர்த்தி விளங்கி வரும் காலத்தில் வடநாட்டிலிருநது மாதவசூரி என்னும் வேதாந்தி, அனைவரையும் தர்க்கத்தில் வென்று மிச்க சிறப்போடு திருவரங்கம் வந்தார். அவரைப் பட்டர் சென்று பார்த்து வெற்றி கொண்ட செய்தியை நஞ்சீயர் வரலாற்றால் அறியலாம். தோற்ற அந்த வேதாந்தியே இவருடைய மாணாக்கராகி, நஞ்சீயர் என்று பெயர் பெற்றார்.

பட்டர் திருநெடுந்தாண்டக வியாக்கியானத்தில் மிகவும் வல்லவர். அதிலும் சிறப்பாக 21 ஆவது பாடலாகிய,

**மைவண்ண நறுங்குஞ்சிக் குழல்பின்தாழ**

என்ற பாடலுக்கு மிகவும் விரிவாகப் பிரசங்கம் செய்வாராம். இதைச் சொல்லியே இவர் வேதாந்தி (மாதவசூரி)யை வென்றார். இந்தப் பகுதி மட்டும் இன்று கிடைக்கிறது. ஏனைய பகுதிகள் கிடைக்கவில்லை.*

## திருக்கோனேரிதாஸ்யை (1217–1312)

இவர், புலமைமிக்க வைணவப் பெண்மணி. திருவாய் மொழி வாசகமாலை என்னும் விவரண சதகம் எழுதினார்.

இந்த நூல், திருவாய்மொழியிலிருந்து தேர்ந்தெடுத்த 164 பாடல்களுக்கு விளக்கம் கூறுகிறது. திருவாய்மொழியின் ஒவ்வொரு பதிகத்திலும் உள்ள முதல் பாட்டையோ அடுத்த பாட்டையோ எடுத்து விளக்குகின்றது. பதிகத்திலுள்ள பத்துப் பாடல்களிள் கருத்தும் ஒன்றிலேயே அடங்குமாறு விளக்கு கின்றார். நூறுபகுதியாக விவரிப்பதால் இது விவரண சதகம் எனப்பட்டது.

இதனை 1952-இல், தஞ்சை சரசுவதி மகால் வெளியிட்டுள்ளது.

## மணவாள மாமுனி

இராமானுசருக்குப்பின், ஆசாரியார் பரம்பரையில் சிறப்புடன் விளங்கியவர் மணிவாள மாமுனிகள். இவர் ஆழ்வார் திருநகரியில் 1370 இல் (சாதாரண ஆண்டு, ஐப்பசி மாதம் மூல நட்சத்திரத்தில்) தோன்றினார்.

பெரியாழ்வார் திருமொழிக்கும், இராமானுச நூற்றந் தாதிக்கும் விளக்கம் எழுதிப் புகழ் பெற்றவர் இவர். வைணவ உலகம்,

**அடியார்கள் வாழ, அரங்க நகர்வாழ,**
**சடகோபன் தண்டமிழ்நூல் வாழ,—கடல்சூழ்ந்த**
**மண்ணுலகம் வாழ மணவாள மாமுனியே!**
**இன்னும்ஒரு நூற்றாண்டு இரும்**

என்று போற்றுகிறது.

* மு. அருணாசலம், 12 நூற், II இலக்கிய வரலாறு பக். 764.

## வேதாந்த தேசிகர் (1269—1369)

காஞ்சிபுரத்தின் ஒரு பகுதியான துப்புல்[1] இவர் பிறந்த இடம். இவர் காலத்தில் வடகலை தென்கலை என, வைணவம் இரண்டாகப் பிரிந்தது.

மாலிக்காபூர் படையெடுப்பால் திருவரங்கம் பாழ்பட்ட போது அங்கே இருந்து, கோயிலைக் காத்தார் இவர்.

## ஆழ்வார் பாடல்களும் ஆசாரியார்கள் விளக்கமும்

திருவாய்மொழிக்கு வியாக்கியானங்கள் பல தோன்றியது போல, திருவிருத்தத்திற்கும் ஐந்து உரைகள் தோன்றியுள்ளன. நம்பிள்ளை பெரியவாச்சான் பிள்ளை அழகிய மணவாள சீயர் அப்பிள்ளை பெரிய பரகால சுவாமி ஆகிய ஐவரும் விளக்கவுரை கண்டுள்ளனர்.

இவற்றுள், இப்போது பெரியவாச்சான் பிள்ளை விளக்கம் ஒன்றே கிடைக்கின்றது. அப்பிள்ளையுரை, முதல் பதினைந்து பாடல்களுக்கு மட்டுமே கிடைக்கின்றது. ஏனையவை மறைந்து விட்டன.[2]

நம்பிள்ளை திருவாய்மொழிக்கு ஒன்பதாயிரப்படி (நஞ்சீயர் கூறிய விளக்கவுரை) எழுதி அருளியதோடு நம்மாழ்வாரின் பெரிய திருமொழி, திருவிருத்தம் தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருப்பள்ளி எழுச்சி ஆகியவற்றிற்கு விளக்கம் எழுதியுள்ளார்.

நஞ்சீயர் மதுரகவியாழ்வாரின் கண்ணிநுண் சிறுதாம்புக்கு உரை இயற்றியுள்ளார். ஆண்டாளின் திருப்பாவைக்கு ஈராயிரப்படி, திருப்பல்லாண்டு வியாக்கியானம் ஆகியவற்றை அருளி இருக்கின்றார்.

அழகிய மணவாள சீயர் திருவிருத்த வியாக்கியானம் இயற்றியுள்ளார். மேலும், அவர் தீபப் பிரகாசிகை, கீதா சாரம் முதலிய பல நூல்களை இயற்றியுள்ளார்.

பெரியவாச்சான் பிள்ளை, நாலாயிர திவ்வியப் பிரபந்தம் முழுமைக்கும் வியாக்கியானம் எழுதி வியாக்கியான சக்ரவர்த்தி என்னும் புகழைப் பெற்றார். இவரைக் குருபரம்பரா பிரபாவம், “அநந்தரம் பெரியாழ்வார் திருமொழி முதலான ஆழ்வார்கள் அருளிச் செயல்களுக்கு எல்லாம் வியாக்கியானம் செய்தருளி லோகத்தை வாழ்வித்தருளினார்” என்று புகழ்ந்து கூறுகின்றது.

இவர்களேயன்றி இவர்கள் காலத்திற்குப் பின்னும் பல சான்றோர்கள் தோன்றி, ஆழ்வார்கள் பாடலுக்கு உரை எழுதிய

1 தூ—புல்; துப்புல் ஆயிற்று. தூ—தூய; துப்புல்—தருப்பைப்புல்
2. கரந்தைக் கட்டுரைகள்; பக்—274. பூவராகம் பிள்ளை.

தோடு வைணவ தத்துவப் பொருளை விளக்கிக் கூறும் நூல்களை இயற்றினர். அவர்களில் பிள்ளை லோகாச்சாரியார், மணவாள மாமுனிகள், வேதாந்த தேசிகர், அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், திருவாய்மொழிப் பிள்ளை ஆகியோர் குறிப்பிடத் தகுந்தவர்கள்.

பிள்ளை லோகாச்சாரியாரின் விளக்கம் செறிவும் விரிவும் உடையது. இவரது விளக்கங்களில் இனிய உவமைகள் இடம் பெற்றுள்ளன. கீழே சிலவற்றைக் காண்போம்:

"திருமந்திரத்தால் பிறக்கும் ஞானம், பைத்ருக தனம் போலே.—

பர்த்தாவினுடைய படுக்கையையும் பிரஜையினுடைய தொட்டிலையும் விடாதே இருக்கும் மாதாவைப் போலே—

ஸ்ரீ நந்தகோபரையும் கிருஷ்ணனையும் விடாத யசோதைப் பிராட்டியைப் போலே—"

இவர், புராண இதிகாசங்கள் வேதத்தின் விளக்கம் என்னும் கருத்தினார்.

"வேதாந்தம் அறுதியிடுவது ஸம்ருதீதிஹாஸ புராணங் களாலே" என்றும், "இதிஹாஸ சிரேஷ்டமான ஸ்ரீ ராமாயணத் தால் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது; மகா பாரதத்தால் தூது போனவன் ஏற்றம் சொல்லுகிறது'' என்றும் இவர் கூறியுள்ளார்.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் என்பவர் ஆசார்ய ஹ்ருதயம் எழுதியிருக்கின்றார். நாலாயிரதிவ்வியப் பிரபந்தப் பாடல்களின் கருத்தும் தொடரும் அடியும் மிகுதியாக அந்நூலில் உண்டு.

வேதாந்த தேசிகர் மணிப்பிரவாள நடையில் எழுதினாலும் தனித் தமிழில் கவிதைகள் பல இயற்றியுள்ளார். இவர் மூன்று பக்கம் ஒரே வாக்கியம் வரும்படி எழுதுவார். சிறு சிறு தொடரே ஒரு வாக்கியமாய் அமைவதும் உண்டு. தனித் தமிழ் நடை பல இடங்களில் ஒளி வீசுகின்றது.

**உரைக்கு உரை**

திருவாய்மொழியின் 36000 படி வியாக்கியானத்திற்குச் சீயர் அரும்பதம், அடைய வளைந்தான் அரும்பதம் என்ற குறிப்புரைகள் இரண்டு உள்ளன.

ஆத்தான் சீயர், திருவாய்மொழி வியாக்கியான அரும்பத விளக்கம், திருப்பல்லாண்டு வியாக்கியான அரும்பத விளக்கம் இரண்டும் எழுதியுள்ளார்.

திருவிருத்தம் பெரியவாச்சான் பிள்ளை விளக்கத்திற்கு அப்பு அரும்பதமும், பெயர் தெரியாத இருவர் எழுதிய அரும்பத உரைகள் இரண்டும் உள்ளன.

## செய்யுள் வடிவ உரை

நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பொருளைச் சுருக்கமாய் மதுரகவியாழ்வார் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்ற பகுதியில் பாடித்தந்துள்ளார்.

கம்பர் இயற்றிய 'சடகோபர் அந்தாதி' நம்மாழ்வாரைப் போற்றிப் பாடுகின்றது.

திருவாய்மொழிப் பதிகம் ஒவ்வொன்றின் கருத்தையும் சுருக்கி வெண்பா ஒன்றில் அமைத்துப்பாடும் நூல், திருவாய் மொழி நூற்றந்தாதி.

## தனியன் உரை

திவ்வியப் பிரபந்தத்தில், ஒவ்வொரு நூலின் முன்னும் பின்னும் சிறப்புப் பாயிரப்பாடல் ஒன்றோ பலவோ உள்ளன. இவை நூலின் கருத்தைச் சிறப்பிக்கின்றன; நூலியற்றிய ஆழ்வார்களைச் சிறப்பிக்கின்றன. இவற்றைத் 'தனியன்' என்று கூறுவது வழக்கம். நூலுள் சேராமல், தனித்து நிற்றலின் தனியன் என்ற காரணப் பெயரால் வழங்குகின்றது. தனியன்கள் எல்லாவற்றிற்கும் பிள்ளை லோகாசார்ய ஜீயர் சிறந்த உரை இயற்றியுள்ளார்.

## சைவர்களின் பாராட்டு

வைணவப் பெரியோர்கள் எழுதியுள்ள வியாக்கியானங்கள் ஏனைய சமயத்தவராலும் பெரிதும் பாராட்டப்படுகின்றன. அவ்வுரை விளக்கங்களைச் சைவ சமயத்தவரும் போற்றிக் கற்று மகிழ்கின்றனர். திருஞான சம்பந்தர், அப்பர் முதலிய அருட் கவிஞர்களின் திருமறைப் பாடல்களுக்கு வைணவ வியாக்கி யானங்களைப் போன்ற விளக்கவுரைகள் தோன்றவில்லையே என்ற ஏக்கம் சைவப் பெரியோர்கள் நெஞ்சத்தில் தோன்றிய துண்டு.

டாக்டர் உ.வே. சாமிநாத ஐயரின் நண்பரான தியாகராச செட்டியாரை, அக் காலத்தில் உயர் பதவியிலிருந்த பட்டாபிராம பிள்ளை சைவத் திருமுறைகளுக்கு வைணவ வியாக்கியானங் களைப்போல் விளக்கவுரை எழுதுமாறு அடிக்கடி தூண்டி வந்தார்.

பண்டிதமணி கதிரேசன் செட்டியார், "இந் நூல்களை (வியாக்கியானங்களை)ப் போல, தேவாரம் முதலிய சைவ நூல் களுக்கு வியாக்கியானம் எழுத யாராவது முன் வருவார் களானால் அது வரவேற்கத் தகுந்த இலக்கியப்பணியாகும்" என்று கூறியுள்ளார். (பண்டிதமணி, சோமலெ—பக்கம்:197).

இத்தகைய எழுச்சியின் காரணமாக இருபதாம் நூற்றாண்டில், திருவாசகத்திற்குப் பல உரைகள் தோன்றின. ஏனைய திருமுறைகளுக்கும் விளக்கங்கள் சில எழுதப்பட்டன.

நாயன்மார்களின் வரலாற்றைத் தெள்ளுதமிழில், பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய சேக்கிழார் வைணவ உலகத்தில் தோன்றி ஆழ்வார்களின் வரலாற்றை எழுதிப் பரப்ப வில்லையே என்ற குறை வைணவர்களுக்கு உண்டு.

ஆழ்வார்களின் பாடல்களுக்கு வியாக்கியானங்கள் எழுதி வைணவத்தைச் செழிக்கச்செய்த பெரியவாச்சான் பிள்ளை, சைவ உலகில் தோன்றித் திருமுறைகளுக்கு விளக்கங்கள் எழுத வில்லையே என்ற குறை சைவர்களுக்கு இருந்து வருகின்றது. "வைணவத்திற்கு ஒரு சேக்கிழாரும் சைவத்திற்கு ஒரு பெரிய வர்ச்சான் பிள்ளையும் இல்லை!" என்று கூறுவதுண்டு.

## திங்களில் களங்கம்

வெண்ணிலவில் உள்ள களங்கம்போல், இவ்வுரைகளில் சில குறைகள் இருப்பதாய்ப் பெரியோர் சிலர் கூறுகின்றனர். பண்டிதமணி, "இவ் வியாக்கியானங்களில் எடுத்ததற்கு எல்லாம் மேற்கோள் காட்டப்பட்டிருக்கிறது. முன் சொன்னதே பல இடங்களில் திருப்பிச் சொல்லப் பெற்றிருப்பதால் இந் நூல்களில் ஒழுங்குமுறை இல்லை என்று சொல்லலாம்" என்று கூறுகின்றார்.

பி. ஆர். மீனாட்சிசுந்தர முதலியார் தமிழ்நூல் விளக்கு (முதற்பாகம் 1939) என்னும் நூலில், "நாலாயிர திவ்வியப் பிரபந் தத்திற்கும் வேதாகமங்களுக்கும் கருத்து உடையன எனப் போதிக்கப்பட்டு வருவது தமிழ் மக்களிடை அறியாமையை வளர்த்து வருவதே. அப் பிரபந்தங்கள் வடமொழி வேத சம்பந்தத் தொடர்பு அன்னியில், தமிழ்நாட்டில் தமிழ்ப் பெரியோர்களால் ஆக்கப்பட்டன என்ற உண்மை தமிழ் மக்களுக்குத் தெரிய வேண்டியது அவசியம்" என்று கூறியுள்ளார் (பக்கம் 2,3,),

வேறொரு குறையும் தமிழறிஞர்களின் உள்ளத்தில் எழுவதுண்டு. மிகச் சிறப்பான கவிதைகளைத் தூயதமிழில் —செஞ்சொற்களால் இயற்றியுள்ள வியாக்கியான ஆசிரியர்கள் சில இடங்களில் தூய தமிழிலும் உரை இயற்றியுள்ளனர். ஆனால்,

இடையிடையே மணிப்பிரவாள நடையைக் கையாண்டு அரும் பெரும் அறிவுச் செல்வங்களாகிய வியாக்கியானங்களை இன்றுள்ளவர்க்கு விளங்காமல் செய்து விட்டனரே என்று ஏங்கு பவரும் உள்ளனர். சமய நோக்குடன் பயில்வோர் ஒருபுறமிருக்க, இலக்கிய இன்பம் கருதி அவ்வுரைகளைத் தமிழ் மட்டும் அறிந்த வர்கள் பயில இயலாத நிலை ஏற்பட்டுள்ளது.

"ஆழ்வார்களுடைய பாடல்களுக்குப் பிற்காலத்தில் உரை வரைந்த பேரறிஞர்கள், தம் காலத்து வைணவக் கருத்துக்களுக்கு எல்லாம் அப்பாடல்களில் இடம் காட்ட வேண்டும் என்ற எண்ணத்தால், பல வடமொழி நூற் செய்திகளையும் ஆழ்வார் பாடல்களின் கருத்துக்களாக வலிய அமைத்து உரை செய்துள்ளனர். தமிழ் மொழி இலக்கணம் நிகண்டு இலக்கிய மரபு இவைகளைக் கொண்டே ஆழ்வார்களின் பாடல்களுக்கு விளக்கம் கூற வேண்டி இருக்க இதனைவிடுத்து, வடமொழி வான்மீகி இராமாயணத்தை அடிப்படையாகக் கொண்டு விளக்கம் கூறுவதின் காரணம் புரியவில்லை. இவற்றை, திவ்வியப்பிரபந்த உரை என்பதை விட வைணவ சம்பிரதாயத்தை விரித்துக் கூறும் நூல் என்று கூறுவதே மிகவும் பொருத்தமானது"*

## குரு பரம்பரா ப்ரபாவம்

மணிப்பிரவாள நடையில் வைணவச் சான்றோர்கள் ஆழ் வார்களின் பாடல்களுக்கு எழுதிய வியாக்கியானங்களோடு, ஆழ்வார்களின் வரலாற்றையும் வைணவத்தை வளர்த்த ஆசிரியர்களின் தொண்டையும் வியாக்கியானம் எழுதிய உரை யாசிரியர்களின் அருட்செயல்களையும் விளக்கிக்கூறும் 'குருபரம் பரா ப்ரபாவம்' என்னும் உரை நடை நூல்களையும் இயற்றி யுள்ளனர். குருபரம்பரையைக் கூறும் நூல்கள் வைணவச் சான்றோர்களின் வாழ்க்கையை, வரலாற்றுப் பின்னணியுடன் வாய்மொழிக் கதைகளை இணைத்துத் தெய்விக நிகழ்ச்சிகளோடு தொடர்புபடுத்திக் கூறுகின்றன. கற்பவர் உள்ளத்தில் வைணவச் சான்றோர்களிடம் பெருமதிப்பும் பக்தியும் ஏற்படும் வகையில் அவை அமைந்துள்ளன. அந் நூல்களில் இலக்கியச் சுவையும் நயமும் உண்டு.

குருபரம்பரையைக் கூறும் நூல்கள் பல உள்ளன. பின் பழகிய பெருமாள் சீயர் இயற்றிய (6000 படி) குருப்பரம்பரையே காலத்தால் முற்பட்டது; பலவகை நயங்களால் சிறந்து விளங்குவது. அந்நூல் வைணவச் சான்றோர்களாலும் தமிழறிஞர் களாலும் பெரிதும் போற்றப்படுகின்றது.

* வரலாற்றில் பிறந்த வைணவம், பக். 304.

ஏனைய குருபரம்பரை நூல்களும், வைணவச் சான்றோர்களின் வாழ்க்கை வரலாறுகளை—விறுவிறுப்பான கதை நிகழ்ச்சிகளைக் கட்டுக்கோப்புடன் பல்வேறு சுவைகள் வெளிப்படும் வகையில் நல்ல நாடகமாக அமைத்துக் காட்டுகின்றன.

அந்நூலாசிரியர்களைக் ‘கதை சொல்லும் கலைஞர்கள்’ என்னலாம்; அவர்கள் இயற்றியுள்ள நூல்களை உரை நடைக் காவியங்கள் என்று போற்றலாம்.

## ஆண்டாள் வைபவம்

சூடிக்கொடுத்த சுடர்க்கொடி என்றும், பெரியாழ்வார் பெற்ற பெண்கொடி என்றும் வைணவப் பெருமக்களால் பெரிதும் கொண்டாடப்படும் ஆண்டாளின் வாழ்க்கை வரலாறு இன்று தோன்றிய புத்தம் புதுக் கதைபோல இனிக்கின்றது. இலக்கியவானில் மிக உயரத்தில் கற்பனைச் சிறகு விரித்து மண்ணுலகை மறந்து, மண்ணுலக மக்களை மறந்து, கண்ணன்மீது காதல் கொண்டு பறந்து மகிழும் கலைப்பறவையாகத் திகழும் ஆண்டாள், மக்கள் நெஞ்சத்தில் என்றும் வாழ்ந்து கொண்டிருப்பாள். அவள் கண்ணனை நினைந்து பொழிந்த காதல் கவிதைகள் எக்காலத்திலும் வாடாத கற்பக மலர்களாகப் பொலியும்.

ஆண்டாளின் கதையைக் குருபரம்பரை நூல் மிக அழகாக வண்ண ஓவியங்கள் தீட்டி விளக்குகின்றது.

“நாச்சியார் தமது திருத்தகப்பனாராகிய பெரியாழ்வார் வடபெருங்கோயில் உடையானுக்காகத் திருமாலை கட்டிப் போடுகிற விதத்தை அதிக நுட்பமாகக் கவனித்துக் கற்றுச் சில நாளைக்கு மேல் தாமும் அவரைத் தொடர்ந்து திரு நந்தவனத்துக்குப் போய், பூக்கொய்து புட்டிலில் சேர்த்துக் கொண்டுவந்து, செண்டுமாலை குழல்மாலை முடிமாலை கிளிமாலை தொங்கல்மாலை உலாமாலை வெற்றிமாலை முதலிய நானாவித மாலைகளைத் தகப்பனார் மகிழ்வடையும்படிக் கட்டிக்கொண்டு வந்து, நாளுக்கு நாள் பெருமாள் பக்கல் ப்ரேமை அதிகரிக்கப்பெற்று....” என்று ஆண்டாளின் கதை சொல்லப் படுகின்றது.

ஆண்டாளின் உள்ளத்தில் மலர்ந்த பெண்மைப் பண்பு களையும், இளம் பெண் ஒருத்தியின் நெஞ்சத்தில் தோன்றும் மிக மென்மையான காதல் உணர்ச்சிகளையும் பின்வரும் பகுதி ஆற்றல் வாய்ந்த சொற்களால் வெளிப்படுத்துகின்றது.

ஆழ்வார் (பெரியாழ்வார்) இல்லாத அவசரங்களிலே—கட்டி வைத்திருக்கும் மாலைகளை எடுத்துச் சூடிக்கொண்டு, "இந்த வடபெருங்கோயில் உடையானுக்கு நேர் ஒவ்வாது இருக்கிறேனோ! ஒத்திருக்குறேனோ! என்னும் சொல் விளைத்து, காரை பூண்டு கூறை உடுத்துச் சூடகம் அணிந்து தோள்வளை தரித்து, கைவளை குலுக்கி, சிலம்பும் பாடகமும் அணிந்து, அஞ்சனம் தீட்டி, செவ்வாய் திருத்தி, அசைந்து அசைந்து அவ் ஒப்பனை அழகை அங்குள்ள கண்ணாடியிலே கண்டு ஹ்ருதயம் குளிர்ந்து, அந்தரங்களைத்து அவை தம்மை முன் இருந்தபடியே வைத்து விட்டு வேறு கைங்கர்யத்தில் ஈடுபட்டிருப்பார்."

இப்பகுதியைப் படிக்கும்போது ஆண்டாள் ஒப்பனை செய்து கொண்டு கண்ணாடிமுன் நின்று அழகு பார்த்து மகிழும் திருக்கோலம் நம் கண்முன் தோன்றி, கலைவல்லான் ஒருவனால் தீட்டப் பெற்ற எழில் ஓவியமாய் மின்னிப் பொலிகிறது. உரை நடைக்கு உள்ள ஆற்றல் இப்பகுதியால் நன்கு வெளிப்படுகின்றது.

## வைணவ ஆசாரியர் பரம்பரை




2.33




## 2. திருமுறை உரைகள்

சைவசமயச் சான்றோர்கள் அருட்பாடல்களைப் பொழிந்து பக்திப்பயிர் வளர்த்தனர்; தமிழை ஆண்டவனுக்கு உகந்த மொழி யாக்கினர்: தமிழுக்கு அளவற்ற தெய்வத் தன்மையை ஏற்றினர்; தமிழ் மொழியையும் சிவ பெருமானையும் தொடர்புபடுத்தி, அதனை ஆற்றல் மிக்க மொழி என்று காட்டினர். தமிழின் பெருமையைப் பரஞ்சோதியார்,

> தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும், முதலை
> உண்ட பாலனை அழைத்ததும், எலும்புபெண் உருவாக்
> கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததும் கன்னித்
> தண்டமிழ்ச் சொலோ ? மறுபுலச் சொற்களோ ? சாற்றீர் ![1]

என்று போற்றிப் புகழ்கின்றார்.

சைவ அடியார்களை நாயன்மார்கள் என்று அழைப்பது வழக்கம். நாயன்மார்களுள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திசுவாமிகள், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் 'நால்வர்' என்று சிறப்பாக வழங்கப்படுகின்றனர். இவர்களுள் முதல் மூவரும் இயற்றிய பாடல்கள் தேவாரம் என்றும், மாணிக்கவாசகர் இயற்றிய பாடல்கள் திருவாசகம் என்றும் வழங்கப்பெறும்.

1. பரஞ்சோதியார் – திருவிளையாடற்புராணம், நாட்டுச் சிறப்பு – 68.

நம்பியாண்டார் நம்பி, திரு முறைகள் என்ற பெயருடன், நால்வர் அருட்பாடல்களையும் அவர்களுக்கு முன்னும் பின்னும் தோன்றிய ஏனைய சைவ நூல்களையும் அமைத்துப் பாகுபாடு செய்தார்.

திருமுறை என்பதில் உள்ள 'முறை' என்ற சொல்லுக்கு நூல் என்பது பொருள். சேக்கிழார், முறை என்ற சொல்லை 'நூல்' என்ற பொருளில், 'திருமுறை எழுதுவோர் வாசிப்போர்' என்று கணநாதர் புராணத்தில் ஆண்டுள்ளார்.

திருமுறைகள் பன்னிரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளன. திருஞானசம்பந்தர் தேவாரப் பாடல்கள் முதல் மூன்று திருமுறைகள். திருநாவுக்கரசரின் தேவாரப் பாடல்கள் நான்கு முதல் ஆறு திருமுறைகள். சுந்தரமூர்த்திசுவாமிகள் பாடல்கள் ஏழாம் திருமுறை. திருவாசகமும், திருக்கோவையாரும் எட்டாம் திருமுறை. ஒன்பதாம் திருமுறை, சேந்தனார் முதலியோர் பாடிய திருவிசைப்பா திருப்பல்லாண்டு முதலியன. திருமூலர் பாடிய திருமந்திரம் பத்தாம் திருமுறை. பதினோராம் திருமுறை திருவாலவாயுடையார் காரைக்கால் அம்மையார் முதலியோர் பாடிய நூல்கள். சேக்கிழார் பாடிய பெரியபுராணம் பன்னிரண்டாம் திருமுறை.

திருமுறைகளையும், அருணகிரிநாதர் பாடல்களையும் ஓதி உணர்ந்த ஒருவர் அவற்றை இயற்றிய புலவர்களின் சிறப்பியல்பு களை,

**வாக்கிற்கு அருணகிரி வாதவூ ரர்கனிவில்**
**தாக்கில் திருஞான சம்பந்தர்—நோக்கிற்கு**
**நக்கீர தேவர் நயத்திற்குச் சுந்தரனார்**
**சொற்குஉறுதிக்கு அப்பர்எனச் சொல்**

என்ற வெண்பாவில் கூறியுள்ளார்.

### நால்வர் புகழ்

சம்பந்தர் அப்பர் சுந்தரர் மாணிக்கவாசகர் ஆகியவரை 'நால்வர்' என்று குறிப்பிடுவர். மூவர் தேவாரமும், மணிவாசகரின் திருவாசகமும் பெரும் புகழ் பெற்றவை.

தாயுமானவர்,

**மொழிக்கு மொழி தித்திப்பாக**
**மூவர் சொலும் தமிழ்**

என்று பாராட்டுகின்றார்.

தேவாரத்தில் உள்ள இனிய இசையின் மாண்பை,

**வெந்தழல் நீராமால் வெள்ளெலும்பு பெண்ணாமால்**
**வந்த மதவேழம் வணங்கிடுமால்—சந்தமெழப்**
**பாடுவார் உள்ளுருகிப் பாடும் தமிழிசைக்கு**
**நீடுலகில் உண்டோ நிகர்**

என்ற வெண்பாவால் அறியலாம். நால்வரின் பெருமை,

**சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும்என் சுந்தரனும்**
**சிற்கோல வாதவூர் தேசிகனும்—முற்கோலி**
**வந்திலரேல் நீறுஎங்கே மாமறைநூல் தான்எங்கே**
**எந்தைபிரான் ஐந்துஎழுத்து எங்கே**

என்ற பாடலால் வெளிப்படுகின்றது.

## உரை இல்லாத குறை

திருமுறைகளுக்குப் பழைய உரையாசிரியர்கள் உரை எழுதாதது நம் தவக்குறைவேயாகும். "சைவ அடியார்களின் அருள் வாக்கிற்கு—சிவனருட் செல்வர்களின் திருப்பாடலுக்கு—ஆண்டவனே விரும்பிக்கேட்ட தெய்வப்பாடலுக்கு—ஆற்றல் மிகுந்த மறைமொழிக்கு எளியவர்களாகிய நாம் உரை எழுத முடியுமா? நாம் எங்கே, திருமுறை எங்கே!" என்று எண்ணி, திருமுறைகளைத் தொழுது போற்றிக் கற்று, உரை எழுதாமல் முன்னோர்கள் சென்று விட்டனர். திருமுறைகளைக் கற்ற நம் முன்னோர்களிடம்,

**அறம்உரைத் தானும் புலவன்;முப் பாலின்**
**திறம்உரைத் தானும் புலவன்;—குறுமுனி**
**தானும் புலவன்; தரணி பொறுக்குமோ**
**யானும் புலவன் எனில்**

என்ற நினைப்பே நெஞ்சில் நிலவிவந்தது.

சைவ சமயவுலகில் திருமறைகளுக்கு உரை எழுதக் கூடாது என்ற கொள்கை பன்னெடுங்காலமாக நிலவி வந்தது. திருவாதவூரர்புராணம் கூறும் வரலாறு ஒன்று இக்கொள்கையை வற்புறுத்தப் பெருந்துணையாக இருந்தது. "தில்லைவாழ் அந்தணர் ஒருங்குகூடி, தில்லையில் எம்பெருமானைச் செப்பிய தமிழ் மாலையின் பொருளைக் கூறுமாறு மாணிக்கவாசகரை வேண்டினர் என்றும், அதற்கு அவர், அருளுக்கு இடமான செம்பொனின் அம்பலம் எய்தி 'ஒன்றிய இத் தமிழ்மாலைப் பொருள் இவர்' என்று உரை செய்து மன்றதனில் கடிதேகி மறைந்தனர்" என்றும் திருவாதவூரர் புராணம் கூறுகின்றது. இவ் வரலாற்றை நினைந்து, 'திருவாசகத்திற்கும் ஏனைய திருமுறை களுக்கும் உரை எழுதக் கூடாது; அவற்றின் உட்பொருளை

அடியவர்களே ஓதி ஓதி உணர்ந்து இன்புற வேண்டும்; உள்ளத்தால் உணர்கின்ற உயர்கருத்தை நாவால் உரைப்பதும் கையால் எழுதுவதும் கூடாது; எழுத்தும் சொல்லும் திருமுறை களின் உட் பொருளை உணர்த்தா' என்று சைவ அடியவர்கள் திருமுறைக்கு உரை எழுதாது விட்டனர்.

இக்கொள்கையால் காலப்போக்கில் திருமுறைகளைப் பொருளுணர்ந்து ஓதும் பழக்கம் குறைந்தது. பொய்யுரையும் போலி விளக்கமும் பெருகின. பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே சைவமும் தமிழும் நன்கு அறிந்த சான்றோர்கள், உரை இயற்றி இருந்தால் எவ்வளவு பெரும் பயன் விளைந்திருக்கும்! 'கறந்த பால் கன்னலொடு நெய்கலந்தாற் போல'த் திருமுறையும் உரையும் சேர்ந்து சைவர்களுக்குச் சுவையூட்டி இருக்குமே!

மாணிக்கவாசகர்,

**சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்**
**சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்**
**செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்**
**பல்லோரும் ஏத்தப் பணிந்து**

**(சிவபுராணம் 92–95)**

என்று கூறியுள்ளார். சிவபெருமானின் திருவடிக்கீழ்ச் சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லவேண்டாமா? பொரு ளுணர்ந்து சொல்ல வேண்டுமாயின், திருவாசகம் போன்ற அருட் பாடல்களுக்குப் பொருள் எழுதுவது தவறாகுமா?

இத்தகைய எண்ணம் பிற்காலச் சைவ அன்பர்களுக்குத் தோன்றியது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் திரு முறை களுக்கு உரைகாணும் முயற்சி எழுந்தது. அப்போதும் திருவாசகம் போன்ற அருள் நூல்களுக்கு உரை எழுதும் தகுதி தம்மிடம் இல்லை என்றுகூறி ஒதுங்கிவிட்டவர் உண்டு.

டாக்டர் உ.வே. சாமிநாத ஐயரின் நண்பராகிய வித்துவான் தியாகராச செட்டியார் சிறந்த தமிழ்ப் புலவர். அவரது பெரும் புலமையை அறிந்த அக்காலத் திருச்சிராப்பள்ளிக் கலெக்டர் பட்டாபிராமபிள்ளை, செட்டியாரைத் திருவாசகத்திற்கு உரை எழுதுமாறு அடிக்கடி வற்புறுத்தி வந்தார். ஒரு நாள் நண்பகலில் செட்டியாரைக் கலெக்டர் காவிரிப் பாலத்தில் சந்திக்க நேர்ந்தது. மிக ஆவலுடன் கலெக்டர் செட்டியாரை நோக்கி, "திருவாசக உரை எழுதிவிட்டீரா?" என்றார். உடனே செட்டியார் "அதற்கு நானா உரை எழுதுவது? திருவாசகம் எங்கே? நான் எங்கே? அதற்கு உரை எழுதுவதற்கு என் படிப்பு எம்மாத்திரம்?" என்று கூறினார். கலெக்டர் செட்டியாரை உரை எழுதுமாறு மேன்

மேலும் வற்புறுத்திப் பேசினார். செட்டியார் கடுங்கோபம் கொண்டு, "இப்படிக் கண்டகண்ட இடங்களில் எல்லாம் நச்சு நச்சு என்று என்னைத் துன்புறுத்துவீர்களா? இனிமேலும் இப்படித் தொந்தரவு செய்வதாய் இருந்தால் இதோ இப்படியே காவிரியில் பொத்தென்று விழுந்து என் பிராணனை விட்டு விடுவேன்!" என்று கூறினார். உடனே கலெக்டர், "ஐயா! ஐயா! வேண்டாமையா!" என்று தடுத்து நிறுத்திப் பணிவாகச் சொன்னார். இவ்வரலாற்றினை டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் எழுதியுள்ளார்.*

## வைணவமும் சைவமும்

ஆழ்வார்களின் பாடல்களாகிய நாலாயிர திவ்வியப் பிரபந்தத்திற்குப் பழங்கால உரையாசிரியர்கள் விளக்கங்கள் எழுதி அப்பாடல்களுக்குச் சிறப்பு நல்கினர். அவ்விளக்கவுரைகள் சைவ அன்பர்களின் பாராட்டுதலையும் பெற்றுள்ளன. 'இத்தகைய அரிய பெரிய விளக்கவுரைகள் திருமுறைகளுக்கு இல்லையே' என்ற ஏக்கம், சைவர்களிடம் ஏற்பட்டது. அதன் விளைவாக மிகப் பிற்காலத்தில்தான் திருமுறைகளுக்கு உரைகள் எழுதப்பட்டன.

திருமுறைகளில் திருக்கோவையாருக்குத்தான் பழங் காலத்தில் தோன்றிய உரைகள் இரண்டு உள்ளன. ஒன்று இயற்றியவர் பெயர் தெரியாத பழையவுரை; மற்றொன்று நல்லறி வுடைய தொல்பேராசான் எனச் சிறப்பிக்கப்பெறும் பேராசிரியர் இயற்றியது. இவ்வுரையும் திருக்கோவையாரை ஓர் இலக்கியமாகக் கருதியே அமைக்கப்பட்டுள்ளது. திருக்கோவையாருக்குப் பேராசிரியர் உரை இயற்றியது இலக்கியப் பணியேயன்றி, சமயப் பணி என்பதற்கு இடமில்லை.

ஆழ்வார்களின் பாடல்களுக்கு வைணவ உரையாசிரியர்கள் வியாக்கியானங்கள் இயற்றிய காலத்தில் சைவப் பெருமக்கள் வேறு துறையில் பணியாற்றினர். சைவ சித்தாந்த நூல்களை இயற்றிச் சாத்திர அறிவை வளர்க்கும் பணியில் முனைந்து நின்றனர். அதன் விளைவாய்ச் சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கு தோன்றின. சாத்திர நூல்கள் தோன்றிய பின்னரும், சைவப் பெருமக்கள் திருமுறைகளுக்கு உரை இயற்ற முயலாமல், சாத்திரநூல்களுக்கே தம் அறிவுத் திறனையும் ஆராய்ச்சி வன்மையையும் காட்டி உரை வகுத்தனர். வைணவ உரையாசிரி யர்களைப் போல் மணிப்பிரவாள நடையை—பேச்சு மொழியை— கையாளாமல் தனித் தமிழ் நடையையும், வடித்த சொற்களையும்

* வித்துவான் தியாகராச செட்டியார் (1947) பக்கம் 142–145.

இலக்கண வரம்புடைய வாக்கிய அமைப்பையும் தம் உரையில் பயன்படுத்தினர். வடசொற்களுக்கு நேரான தமிழ்ச் சொற்களைத் தேடித் தந்தனர். கலைச் சொற்களைப் படைக்கும்போதும் தமிழ் வேர்ச்சொற்களைக் கொண்டே படைத்துக்கொண்டனர்.

## உரையும் விளக்கமும்

திருமுறைகளில் திருவாசகம், திருமந்திரம், பெரிய புராணம் ஆகியவற்றிற்கே பல உரைகளும் விளக்கங்களும் பிற்காலத்தில் தோன்றியுள்ளன. ஏனைய திருமுறைகளில் சில பகுதிகளுக்கும் சில பாடல்களுக்கும் உரையும் விளக்கமும் எழுதப்பட்டுள்ளன. திருமுறைகள் பன்னிரண்டிற்கும் உரை இல்லாததால் ஏற்படும் துன்பத்தைத் தமிழறிஞர் கி.வ. ஜகந்நாதன் பின்வருமாறு உரைக் கின்றார்:

"பன்னிரண்டு திருமுறை முழுவதையும் படித்துப் பொருள் உணர்ந்து இன்புறல் மிகமிக அருமையான காரியம். எல்லாப் பாடல்களுக்கும் பொருள் தெளிவாக விளங்கும் என்று சொல்ல முடியாது. பழங்காலத்தில் திவ்வியப் பிரபந்தத்துக்குச் சில பெரியோர்கள் உரை வகுத்ததுபோல் திருமுறைகளுக்கும் யாரேனும் வகுத்திருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! இப்போதுள்ள மூலத்தில் எத்தனையோ பிழைகள் இருக்கின்றன. பல பாடல்களுக்கு எத்தனைதான் மண்டையை உடைத்துக் கொண்டாலும் பொருள் விளங்குவதில்லை."*

## திருவாசகவுரைகள்

வைணவ உலகில், நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய் மொழி சிறந்து விளங்குவதுபோல, சைவ உலகில் மாணிக்க வாசகர் அருளிச்செய்த திருவாசகம் சிறந்து விளங்குகின்றது. திருவாய்மொழியைப்போல், திருவாசகத்திற்கும் பல உரைகள் தோன்றியுள்ளன.

திருவாசகத்தை, "வாதவூர் எங்கோன் திருவாசகம் எனும் தேன்" என்று சைவ அன்பர்கள் போற்றுவர். திருவாசகம், கல்நெஞ்சத்தையும் கனிவிக்கும் தன்மை வாய்ந்தது. திருவாசகத் திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார்" என்பது பழமொழி. சிவப்பிரகாச சுவாமிகள் நால்வர் நான்மணி மாலையில் (4),

**திருவா சகம்இங்கு ஒருகால் ஓதின்,**
**கருங்கல் மனமும் கரைந்துஉகக் கண்கள்**
**தொடுமணற் கேணியின் சுரந்துநீர் பாய**
**மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப்பு எய்தி**

* உள்ளங் கவர் கள்வன் – முன்னுரை, பக்கம் 5.

அன்பர் ஆகுநர் அன்றி
மன்பதை உலகின் மற்றையர் இலரே

என்று திருவாசகத்தின் பெருமையைப் பாடுகின்றார்.

திருவாசகத்திற்குப் பழைய உரைகள் இல்லை என்றாலும் சைவப் புலவர்கள் தாம் இயற்றிய செய்யுள் நூல்களிலும், உரை நூல்களிலும் வாய்ப்பு நேரும்போதெல்லாம் திருவாசகத்தின் சில பாடல்களுக்கு உரையும் விளக்கமும் கூறியுள்ளனர். குமர குருபரர், மாதவச் சிவஞான முனிவர், கச்சியப்ப முனிவர், சிதம்பர முனிவர், மதுரைச் சிவப்பிரகாசர், வெள்ளியம் பலவாணர் ஆகிய சிவனருட் செல்வர்கள் தாம் இயற்றிய செய்யுள்களிலும், உரைகளிலும் திருவாசகப் பாடல்கள் பலவற்றிற்கு உரையும் விளக்கமும் கூறியுள்ளனர்.

பரஞ்சோதி முனிவரும், பெரும்பற்றப்புலியூர் நம்பியும் தம் திருவிளையாடற் புராணங்களில் திருவாசகத்தின் சில பாடல்களின் உட்பொருளை விளக்கியுள்ளனர். கடவுள் மாமுனிவர் திருவாதவூரர் புராணத்திலும், மீனட்சிசுந்தரம் பிள்ளை திருப்பெருந்துறைப் புராணத்திலும் திருவாசகப் பகுதிகள் சிலவற்றிற்கு உரை இயற்றியுள்ளனர்.

திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் திருவாசகத்திற்கு உரை எழுதத்தொடங்கி நிறுத்திவிட்டார் என்று செவிவழிச் செய்தி ஒன்று கூறுகின்றது.

### திருவாசக வியாக்கியானம்

திருவாசக வியாக்கியானம் என்னும் 'திருவாசக அனுபூதி உரை' சீர்காழித் தாண்டவராயரால் எழுதப்பட்டது. இவ்வுரை "கலியுகம் *4945*, சாலிவாகனம் *1756* இவையிற் செல்லும் செய வருடம் மகர மாசம் பூச நாளில் தில்லை அம்பலவாணர் சந்நிதியில் துவங்கி, அதற்கடுத்த மன்மத வருடம் மார்கழி மாதம் 10உ பன்னிரு திருநாமம் பெற்ற சீகாழியில் எழுதி முற்றுப் பெற்றது" என்று சிறப்புப் பாயிரவுரை கூறுகின்றது. உரைப் பாயிரத்தில் தாண்டவராயர், "இவ்வநுபூதியுரை சம்பிரதாய உபதேசமாகும். திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசக சுவாமியார் அருளிச் செய்த இவ்வருள் நூலிற் சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து பொதியாசலமுனி அருளிய கருத்தநுபூதியான சூத்திரங்களை எமது குரவரான குரு சுவாமி அவை விளங்கப் பொழிப்புரை அநுபூதியை அடியேற்கு உபதேசித்தபடி அடியேன் கருத்தில் உறைவதான திருவருளையும் கலந்து சிவனடியார்கள் அனுக்கிரகப்படி பத வியாக்கியானமும் அவைகட்கு நுட்பமும் விரிவும் எழுதியுள்ளேன்" என்று உரைக்

கின்றார். இவர் சைவ சித்தாந்தங்களைக் கற்றுத்தெளிந்து, பக்தியுடன் பொருள் எழுதுகின்றார். நாயன்மார்களின் அருட் பாடல்களிலிருந்தும், சாத்திரம், புராணம், ஆகியவற்றிலிருந்தும் பல மேற்கோள்களைத் தந்து விளக்குகின்றார்.

இவர் உரையில், வைணவ வியாக்கியானங்களின் சாயல் உள்ளது.

இவ்வுரை இரு பகுதிகளாகத் தமிழக அரசால் *(1954)* வெளியிடப்பட்டுள்ளது.

## உரையின் சிறப்பியல்புகள்

இவ்வுரை எளிதில் விளங்கும் வகையில் தெளிவாக அமைந்துள்ளது.

**அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்**
**அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி**
**ஒன்றனுக்கு ஒன்று நின்றெழில் பகரின்**
**நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன**
**இன்னுழை கதிரின் துன்அணுப் புரையச்**
**சிறியவாகப் பெரியோன் (1—6)**

என்ற அடிகளுக்கு விளக்கம் பின்வருமாறு உள்ளது:

"உண்டை போலும் இருக்கின்ற அண்டத்தினது முடியடிகளை விசாரிக்கும்போது, அளத்தற்கு அரிய தன்மைகளும் வளத்திற் சிறந்த காட்சிகளும் மிகுந்திருக்கிற ஒவ்வோர் அண்டத்திற்குத் தொகையளவு சொல்லுமிடத்து நூறு கோடி யோசனை அளவாக இருக்கும். அப்படி அளவில்லாத அண்டங்களும் பல உண்டு. அவ்வண்டங்கள் எல்லாம் சிவனது பெருமைக்கும் அண்டங்களின் பெருமைக்கும் அளவைப் பிரமாணம் சொல்லுமிடத்து ஓர் அண்டத்தின், ஓர் உலகத்தின், ஒரு தேசத்தின், ஒரு நாட்டின், ஒரு வீட்டில், ஓர் ஓட்டையின்கண் சூரிய கிரணம் ஓடும்போது அதற்குள்ளே கண்ணுக்குத் தெரிகிற பல அணுக்கள் கூட்டத்தில் ஓர் அணு என்று சொல்லலாம்."

திருக்கோத்தும்பி என்னும் பகுதியில், தும்பி பறக்கும் விளையாட்டைப் பற்றி, "(தேன்) எனக்கும் கிடைத்தது. உனக்கும் கிடைத்தது என்று ஒருவர்க்கு ஒருவர் மடி பிடித்துக்காண வண்டு சுழல்கிறதுபோலச் சுற்றும் ஆனந்த விளையாட்டு" என்று கூறு கின்றார்.

### மற்ற உரைகள்

**சுந்தரமாணிக்க யோகீசுவரர்:** இவர் திருவாசகத்திற்கு இயற்றிய உரை அட்டாங்கயோக முறைகளை விளக்கும் நிலையில்

உள்ளது. இவர் உரை, அன்பு நூலாகிய திருவாசகத்தை யோகாநுபவமாக மாற்றி விட்டது என்பர்.

**வாசுதேவ முதலியார், இராமசாமி முதலியார்** *(1397)* **முருகேச முதலியார்** ஆகியோர் உரைகள் பாடல்களுக்குப் பொருள் கூறும் அளவிலேயே உள்ளன.

**சிவஅருணகிரி முதலியார்:** இவர் எல்லாப் பாடல்களுக்கும் தேவையான அளவு குறிப்புரைகளும், திருவாசக விஷய சூசனம் அறுபது என்ற தலைப்பில் சில பகுதிகளுக்கு வேதாகம உபநிடதப் பிரமாணங்களுடன் தடை விடை விளக்கங்களும் தந்திருக்கிறார். இந்தவுரை, மரபிற்கு மிக ஏற்றதாய் அனுபவத்திற்கு வழிகாட்டி யாய் உள்ளது.

**கா. சுப்பிரமணிய பிள்ளை:** இவர் உரை பொழிப்புரையாக உள்ளது. மிகத் தெளிவாகச் சொற்பொருளை உணர்த்துகின்றது: யாரும் எளிதில் உணர உதவுகின்றது; சிறந்த வழிகாட்டியாய் உள்ளது. இவ்வுரையில் ஆசிரியரின் தமிழ்ப்பற்றும் சித்தாந்தச் செந்நெறியின் கீர்த்தியும் தொட்ட இடம் எல்லாம் பொலிந்து தோன்றுகின்றன.

**மறைமலையடிகள்:** வடமொழி, தமிழ், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் ஆழ்ந்த புலமைமிக்க இவர், திருவாசகத்தில் முதல் நான்கு பாடல்களுக்குமட்டும் விரிவுரை மிகச் சீரிய முறையில் எழுதியுள்ளார். 'போற்றி' என்று சொல்லுக்கு இவர் செய்யும் இலக்கண ஆராய்ச்சி கற்று மகிழத்தக்கது. வடமொழியிலும் தமிழிலும் உள்ள சைவ நூற் பிரமாணங்களோடு திருவாசகத்தின் உண்மைப்பொருளை உணர்வதற்கு உறுதுணை செய்கின்றது இவரது உரை.

**பண்டிதமணி:** வடமொழியும் தமிழும் வல்ல இவர், திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், திருவெம்பாவை ஆகிய மூன்றிற்கு மட்டும் உரை இயற்றியுள்ளார். இவர் உரை உள்ளுணர்விலிருந்து பிறந்து, அனுபவத்தை வெளிப்படுத்து கின்றது. உரையில் சொல்நயம், சைவ சித்தாந்தக் கருத்து, வரலாற்று நுணுக்கம் ஆகியவை மிளிர்கின்றன. இலக்கியச்சுவை தோன்ற நயம்பட எழுதிச் செல்வது இவரது இயல்பு. நீத்தல் விண்ணப்பத்தில் வரும்,

**இருதலைக் கொள்ளியின் உள் எறும்பு ஒத்து (9)**

என்ற உவமையினைப் பின்வருமாறு நயமாக விளக்குகின்றார்.

"கொள்ளி நடுவண், கொள்ளிமேல் என்னாது கொள்ளியுள் என்றது ஒரு நயம். கொள்ளி நடுவிடத்துள்ள எறும்பு, அங்கும்

இங்கும் சென்று போக்குவழி பெறாமல் உழன்று அக் கொள்ளிக்குப் பற்றுக்கோடாக உள்ளது ஒன்றைத் தானும்பற்றி ஒருவாறு உய்யவும் கூடும். அக்கொள்ளி நிலத்தில் கிடந்தால் அவ் எறும்பும் நிலத்தில் இறங்கலாம். அஃது ஒன்றில் சார்த்தப்பட்டு இருந்தால், அச் சார்ச்சிப் பொருளைத் தானும் பற்றி உய்யலாம். அக் கொள்ளி உள் துளையுடைய மூங்கிலாக இருக்க, முன்னரே அதன் துளையுள் ஓர் எறும்பு நுழைந்திருக்குமாயின், இருபுறமும் நெருப்பு எரியுங்கால் அதனுள்பட்ட அவ் எறும்புக்கு எவ்வாற்றானும் உய்யும் நெறி இன்று என்பது கண்கூடாகக் காணத்தக்கது. இந்நயம் கருதியே கொள்ளி மேல், நடு என்னாது, இருதலைக் கொள்ளியின் 'உள் எறும்பு ஒத்து' என்றார் என்க."

**நவநீதகிருஷ்ண பாரதியார்:** இவர் உரை ஆராய்ச்சிப் பேருரையாகும். இவரது அகன்ற புலமையையும் ஆழ்ந்த அனுபவத்தையும் உரை வெளிப்படுத்துகின்றது. இவர், திருவாசகம் முழுதும் வெளிப்படையாகவும், குறிப்பாகவும் அகப் பொருள் நுதலி வருவதாகக் கருதி உரை கண்டுள்ளார்.

சிவபுராணம்—திருவாசகத்தின் தற்சிறப்புப் பாயிரம்; திருச்சதகம்—நுதலிய பொருள்; நீத்தல் விண்ணப்பம்—நுதலிய பொருள்; மேல்வருவன எல்லாம் காதல் பாவனை என்பது இவர் தரும் குறிப்பு.

இவர் உரை, கருத்து பொழிப்பு விசேடம் ஆகியவற்றுடன் சிறப்பாக அமைந்துள்ளது.

**தண்டபாணிதேசிகர்:** இவர் உரை 1964ஆம் ஆண்டில் வெளி வந்தது. பலவுரைகளின் துணைகொண்டு,சிவஞான முனிவர் போன்றார் தந்த விளக்கங்களை ஊன்றுகோலாகக் கொண்டு தேவையான விளக்கக் குறிப்புகளுடன் இவர் உரை அமைந்துள்ளது.

## திருமந்திரவுரைகள்

திருமூலர் இயற்றிய திருமந்திரத்திற்குத் திருமந்திரமாலை என்ற பெயரும் உண்டு. இதனால், திருமந்திரம் அந்தாதி நூலாக இருக்கலாம் என்பர். இந்நூலைச் சைவ அன்பர்கள் தோத்திர மாகவும் சாத்திரமாகவும் கருதிப் பயில்கின்றனர்.

திருமந்திரத்திற்குத் திரிசிரபுரம் அ. சிவானந்த சாகர யோகீசுவரர் இயற்றிய உரை ஒன்று உண்டு. யாழ்ப்பாணம் விசுவநாதம் பிள்ளை 1912 ஆம் ஆண்டில் திருமந்திரத்திற்குக் குறிப்புரை எழுதி வெளியிட்டார். 1913ஆம் ஆண்டு சேற்றூர் இரா.

சுப்பிரமணியக் கவிராயர் நூறு பாடல்களுக்கு உரை எழுதி வெளியிட்டார். இலங்கையில் பரமேசுவரக் கல்லூரியில் ஆசிரியராக இருந்த நவநீத கிருஷ்ண பாரதியார் (1889-1954) திருமந்திரத்திற்கு உரை இயற்றினார். இவர்களேயன்றிச் சேலம் சுந்தர முதலியார், (20-நூற்), வை.வே. ரமண சாஸ்திரியார் ஆகியோரும் உரை இயற்றியுள்ளனர்.

## பெரியபுராணவுரைகள்

மீனாட்சிசுந்தரம் பிள்ளை, சேக்கிழார் பிள்ளைத்தமிழில் "பக்திச் சுவை நன் சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ" என்று சேக்கிழாரைப் போற்றுகின்றார். சிவனடியார்களின் பெருமையைப் பெரியபுராணத்தில் பாடி, சிவனருட் செல்வர்களின் புகழைப் பரப்பியவர் சேக்கிழார்.

பெரியபுராணத்திற்கு அண்மைக் காலத்தில்தான் உரைகள் தோன்றின. தொழுவூர் வேலாயுத முதலியார் (1832-1889) பெரியபுராண வசனம் எழுதி அந்நூலை மக்களிடையே பரப்பிப் பக்திப்பயிர் வளர்த்தார். ஆறுமுக நாவலர் பெரியபுராண வசனம், பெரியபுராண சூசனம் இரண்டும் இயற்றினார். காஞ்சிபுரம் சபாபதி முதலியார் (?-1870), ஆலால சுந்தரம் பிள்ளை (1853-1923) ஆகியோர் பெரியபுராணத்திற்கு உரை இயற்றினர். திரு. வி. கல்யாண சுந்தரனார் பெரியபுராணக் குறிப்புரை எழுதினார். அவ்வுரையின் இரண்டாம் பதிப்பு, முதற் பதிப்பைவிடத் திருத்தம் பெற்றது. அதனை அவரே தம் வாழ்க்கைக் குறிப்புக்கள் என்ற நூலில் (பக்கம்-142) "பெரிய புராணம் இரண்டாம் பதிப்பில் புரட்சி நிகழ்ந்துள்ளது. உரிமை, புரட்சியை நிகழ்த்தி நிலைமையைச் சீர் செய்வது இயற்கையே. என்ன புரட்சி? ஜைனத்தைப் பற்றிச் சைவ உலகில் சில கறைகள் படிந்தன. அக் கறைகள் உரையால் களையப்பட்டன. அக் களைவே புரட்சியாயிற்று" என்று குறிப்பிடுகின்றார்.

சிவக் கவிமணி சி.கே. சுப்பிரமணிய முதலியார் பெரிய புராணத்திற்கு மிக விரிவாக உரை எழுதியுள்ளார். இவர் உரை காலத்தை வென்று நிலைபெறும். பல வகையான அரிய விளக்கங்களும், நாயன்மார்கள் தல யாத்திரை செய்த வழிகளை விளக்கும் தரைப்படங்களும் (Maps) உரையில் இடம் பெற்றுள்ளன.

இவ்வுரை இயற்றும் பணியை இவர் தம் வாழ்வின் தலையாய பெரும்பணியாகக் கருதி உழைத்து, தமிழுக்கும் சைவத்திற்கும் அருந் தொண்டாற்றியுள்ளார்.

# 3. சைவ சித்தாந்த உரைகள்

வேதாந்தம் என்னும் மரத்தினில் பழுத்த கனியின் சாரமே சைவ சித்தாந்தம் என்று போற்றுகின்றார் குமர குருபரர்:

வேதம் என்னும் பாதபம் வளர்த்னை !
பாதபம் அதனில் படுபயன் பலவே—அவற்றுள்
இலைகொண்டு வந்தனர் பலரே; இலைஒரீஇத்
தளிர்கொண்டு வந்தனர் பலரே; தளிர்ஒரீஇ
அரும்பொடு மலர்பிஞ்சு அருங்காய் என்றிவை
விரும்பினர் கொண்டு வந்தனர் பலரே;
அவ்ஆறு உறுப்பும் இவ்வாறு பயப்ப,
ஒரும் வேதாந்தம் என்று உச்சியிற் பழுத்த
ஆரா இன்ப அருங்கனி பிழிந்து
சாரம் கொண்ட சைவ சித்தாந்தத்
தேனமுது அருந்தினர் சிலரே.

—பண்டார மும்மணிக்கோவை

சைவ சித்தாந்த நூல்கள் பதினான்கு. அவற்றின் பெயர்களை,

உந்தி களிறோ டுயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மைப் பிரகாசம்—வந்தஅருள்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்ப முற்று

என்ற வெண்பா உரைக்கின்றது. 1. திருவுந்தியார் 2. திருக்களிற்றுப் பாடியார். 3. சிவஞான போதம் 4. சிவஞான சித்தியார். 5. இருபா இருபஃது. 6. உண்மை விளக்கம். 7. சிவப்பிரகாசம், 8. திருவருட்பயன். 9. வினா வெண்பா. 10. போற்றிப் பஃறொடை. 11. கொடிக்கவி. 12. நெஞ்சுவிடு தூது. 13. உண்மை நெறி விளக்கம். 14. சங்கற்ப நிராகரணம் ஆகிய பதினான்கு நூல்களைச் சைவ சமயச் சான்றோர் ஐவர் இயற்றினர். உய்யவந்தார், மெய்கண்டார், அருள் நந்தியார், மன வாசகங்கடந்தார், உமாபதி சிவனார் ஆகிய ஐவரும் மேலே கூறிய பதினான்கு நூல்களையும் இயற்றினர். இவர்களுள் மெய்கண்டாரின் மாணவர் மனவாசகங் கடந்தார். அருள் நந்தியாரின் மாணவர் உமாபதி சிவனார்.

## ஆசிரியரும் நூல்களும்

I. உய்யவந்தார்—1. திருவுந்தியார் 2. திருக்களிற்றுப் பாடியார்.

II. மெய்கண்டதேவர்—3. சிவஞான போதம்.

III. அருள் நந்தியார்— 4. சிவஞான சித்தியார்
5. இருபா இருபஃது.

IV. மனவாசகங் கடந்தார் —6. உண்மை விளக்கம்.

V. உமாபதி சிவனார்—7. சிவப்பிரகாசம் 8. திருவருட் பயன் 9. வினா வெண்பா 10. போற்றிப் பஃறொடை
11. கொடிக்கவி 12. நெஞ்சு விடு தூது
13. உண்மை நெறி விளக்கம் 14. சங்கற்ப நிராகரணம்.

சைவ சித்தாந்த நூல்களுள் சிவஞான போதமும், சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம் ஆகிய மூன்று நூல்களுக்கும் மிகுதி யான உரைகள் தோன்றியுள்ளன. அவற்றை இங்கே விரிவாகக் காண்போம்.

## சிவஞான போதம்

தமிழ்மொழியிலுள்ள சைவசித்தாந்த நூல்கள் பதினான் கனுள் சிவஞான போதம் தலைமையும் சிறப்பும் வாய்ந்தது. இதனை இயற்றியவர் திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்ட தேவ நாயனார். இவரது காலம் பதின் மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியாகும்.

சிவஞான போதத்தினுள் பன்னிரண்டு சூத்திரங்கள் உள்ளன. பன்னிரண்டு சூத்திரங்களும் நாற்பது வரிகளை யுடையவை. இந்நூலில், பன்னிரண்டு சூத்திரங்களையும் ஏதுக்கள்கொண்டு, விளக்கி உரைக்கும் முப்பத்தொன்பது அதிகரணங்கள் உள்ளன; எடுத்துக்காட்டுகளாக அமைந்த 81 வெண்பாக்கள் உள்ளன.

பன்னிரண்டு சூத்திரங்களில் முதல்ஆறும் பொது அதிகாரம் என்றும், பின் ஆறும் உண்மை அதிகாரம் என்றும் பெயர் பெறும். பொது அதிகாரத்தில் உள்ள முதல் மூன்று சூத்திரங்கள் பிரமாண இயலிலும் பின் மூன்றும் இலக்கண இயலிலும் அடங்கும். உண்மை அதிகாரத்தில் உள்ள முதல் மூன்று சூத்திரங்கள் சாதன இயலிலும், பின் மூன்றும் பயனியலிலும் அடங்கும்.

பன்னிரண்டு சூத்திரங்களும் கூறும் பொருளை இனிக் காண்போம்:

முதற் சூத்திரம் பதி (இறைவன்) உண்மையை உணர்த்து கின்றது. இரண்டாம் சூத்திரம் பாச உண்மையையும், மூன்றாம் சூத்திரம் பசு (உயிர்) உண்மையையும் கூறுகின்றது. நான்கு ஐந்து ஆறு சூத்திரங்கள் முறையே பசு பாச பதி இலக்கணத்தை விளக்குகின்றன. ஏழாம் சூத்திரம் முத்திபெறுவதற்கு ஏதுவாகிய உயிரின் சிறப்பிலக்கணமும், எட்டாம் சூத்திரம் சிவஞானத்தை

உயிர் உணரும் முறையையும், ஒன்பதாம் சூத்திரம் உயிர் பாச ஞானத்திற்கு மீளாதவாறு அதனைப் புனிதமாக்கும் முறையையும் கூறுகின்றன. பத்தாம் சூத்திரம் பாசநீக்கம் பண்ணும் முறையை உணர்த்துகின்றது. பதினொன்றாம் சூத்திரம் உயிரானது அயரா அன்பால் இறைவன் திருவடியாகிய சிவானந்த அனுபவம் எய்துவதை உணர்த்துகின்றது. பன்னிரண்டாம் சூத்திரம் சீவன் முக்தர் நிலையைக் கூறுகின்றது.

**உரைகள்:** சிவஞானபோதத்திற்குச் சிவஞான முனிவர் சிற்றுரையும் பேருரையும் இயற்றியுள்ளார். பேருரை, பாடியம் என்று போற்றப்படுகின்றது. இந் நூலுக்குப் பதினேழாம் நூற்றாண்டில், திருநெல்வேலியில் வாழ்ந்த பாண்டிப் பெருமாள் உரை இயற்றியுள்ளார்.

சிவஞான போதச் சூத்திரக் கருத்து என்னும் நூல், பன்னிரண்டு சூத்திரக் கருத்துக்களையும் திரட்டிக் கூறுகின்றது.

சிவஞான போத உதாரண வெண்பா என்னும் நூல், சிவஞான போதத்தின் சூத்திரப் பொருள்களுக்கு உதாரணமாக எழுந்தது.

இருபதாம் நூற்றாண்டில் காரைக்குடி சொக்கலிங்கையா, சிவஞானபோத லகுவசனம் இயற்றியுள்ளார்.

## மெய்கண்டதேவர்

சிவஞான போதத்திற்கு மெய்கண்டதேவர் எழுதிய வார்த்திகப் பொழிப்பில், அவர் காலத்தில் வழங்கிய பல பேச்சு மொழிச் சொற்கள் இடம் பெற்றுள்ளன. எளிய மக்களும் சைவ சமயக் கருத்துக்களைப் புரிந்துகொள்ள வேண்டும் என்று அவர் அவ்வாறு எழுதியிருக்கலாம்.

“அத்துவிதம் என்ற சொல்லானே ஏகம் என்னில் ஏகம் என்று சுட்டுவது உண்மையின் அத்துவிதம் என்ற சொல்லே அந்நிய நாத்தியை உணர்த்தும் ஆயிட்டு” என்பது போன்ற இடங்களில் பேச்சு மொழியின் இயல்பைக் காணலாம். ஆயிட்டு என்ற சொல் ஆயிற்று என்பதன் திரிபாகும். இச் சொல் அக் காலத்துப் பேச்சு வழக்கில் இருந்திருக்கலாம்.

## சிவஞான சித்தியார்

சிவஞான சித்தியார், சிவஞான போதத்தின் வழிநூல். இதனை இயற்றிய அருள் நந்தி சிவாச்சாரியார் பதின்மூன்றாம் நூற்றாண்டினர்.

சிவஞான சித்தியார், பரபக்கம் சுபக்கம் என இரு பிரிவுகளை உடையது. ‘பார்விரித்த நூல் எல்லாம் பார்த்தறியச்

சித்தியிலோர் விருத்தப் பாதிபோதும்' என்று இதன் புகழைக் கூறுவர்.

**உரைகள்:** சிவஞான சித்தியார் ஞானாவரணம் என்ற ஒரு நூல், செய்யுள் வடிவில் சித்தியாருக்கு உரையாய்த் தோன்றியது. அந்த உரைக்கு உரையாக, பதினேழாம் நூற்றாண்டில் வெள்ளியம் பலத்தம்பிரான் சிவ ஞான சித்தியார் ஞானாவரணவுரை என்ற பெயரில் ஓர் உரை நூல் இயற்றினார். பதினாறாம் நூற்றாண்டில் சிவாககிரயோகிகள் சிவஞான சித்தியார் விருத்தியுரை எழுதினார். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த வரும் ஆறுமுக நாவலருக்கு 'நாவலர்' என்ற பட்டம் வழங்கியவருமான சுப்பிரமணிய தேசிகர் சிவஞான சித்தி யாருக்குப் பதவுரை இயற்றினார்.

சித்தியாரின் முழுமைக்கும் உரை எழுதாமல் ஏதேனும் ஒரு பகுதிக்கு உரை கண்டவர்களும் உண்டு. அவ்வுரைகளைக் காண்போம்:

**பரபக்க உரைகள்:** பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருவொற்றியூர் ஞானப்பிரகாசர், தத்துவப் பிரகாசர், வேலப்ப (வேலுப்) பண்டாரம் ஆகியோர் பரபக்கத்திற்கு உரை இயற்றினர்.

**சுபக்க உரைகள்:** பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்த மறைஞான தேசிகர், நிரம்ப அழகிய தேசிகர், ஆறுமுக சுவாமிகள், பதினேழாம் நூற்றாண்டினரான (திருவண்ணாமலை ஆதீனம்) ஞானப்பிரகாச (முனிவர்) தேசிகர், பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சிவஞான முனிவர் ஆகியோர் சுபக்கத்திற்கு உரை எழுதியுள்ளனர்.

சிவஞான சித்தியாருக்கு முதன் முதலில் உரை கண்டவர் நிரம்ப அழகிய தேசிகர். அவரைப் பின்பற்றி, சிவக்கொழுந்து ஆசாரியர் உரை இயற்றினார். மறைஞான தேசிகர் சித்தியார் உரைப்பாயிரமாக,

> **ஓராது எழுதினேன் ஆயினும் ஒண்பொருளை**
> **ஆராய்ந்து கொள்க அறிவுடையார்—சீராய்ந்து**
> **குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்**
> **கற்றறிந்த மாந்தர் கடன்**

என்ற வெண்பாவை இயற்றியுள்ளார்.

**சிவப்பிரகாச உரைகள்:**

சிவப்பிரகாசத்திற்குப் பலர் உரை இயற்றியுள்ளனர். அவர்களுடைய காலம் வரலாறு ஆகியவற்றை அறிய இயல வில்லை.

பதினைந்தாம் நூற்றாண்டில் சிற்றம்பல நாடிகள் சிவப்பிரகாசக் கருத்துரைச் சூத்திரம் என்ற நூலை இயற்றினார். திருவாவடுதுறைச் சங்கரமூர்த்தி தேசிகரின் சீடராகிய நல்லசிவ தேவர், சிவப்பிரகாசச் சிந்தனை உரை எழுதினார். மதுரைச் சிவப்பிரகாசர், சத்திய ஞானப் பிரகாசர், சிதம்பரநாத முனிவர் ஆகியோர்களும் உரைகண்டுள்ளனர்.

சைவசித்தாந்த நூல்களுள் ஏனையவற்றிற்கும் உரை உண்டு. திருக்களிற்றுப் பாடியார்க்குச் சிவப்பிரகாசரும், இருபா இருபஃதுக்குத் திருவாவடுதுறைமடத்து நமச்சிவாயத் தம்பிரானும் (15 நூற்.), திருவருட்பயனுக்கு நிரம்ப அழகிய தேசிகரும், சங்கற்ப நிராகரணத்திற்குத் திருவொற்றியூர் ஞானப்பிரகாசரும் (16 நூற்.) உரை இயற்றியுள்ளனர். உண்மை விளக்கத்திற்குப் பழைய்வுரை ஒன்றும் உள்ளது.

## 4. சைவசாத்திர உரைகள்

சைவ சாத்திர நூல்களுக்குக் காலந்தோறும் சைவ நூல்வல்ல அறிஞர்கள் உரை கண்டுள்ளனர்.

பௌட்கர ஆகமத்திற்கு உமாபதி சிவனார் (14-நூற்.) உரை இயற்றியுள்ளார். குகை நமசிவாயர் இயற்றிய நிட்டானுபூதி என்ற வீரசைவ சமய நூலுக்கு முத்து கிருஷ்ணபிரமம் உரை எழுதியுள்ளார். பதினாறாம் நூற்றாண்டில் சிதம்பரத்தில் வாழ்ந்த ஆதிசைவராகிய அகோரசிவாசாரியார், போசதேவரின் தத்துவப் பிரகாசிகைக்கும் மிருகேந்திர ஆகமத்திற்கும் உரை கண்டார். தாண்டவராய சுவாமிகள் (17-நூற்.) இயற்றிய கைவல்ய நீதம் என்ற நூலுக்கு அருணாசல சுவாமிகள் உரை செய்துள்ளார்.

கீழே சில ஆசிரியர் பெயரும் அவர்கள் இயற்றியுள்ள உரைகளும் தரப்படுகின்றன:

ஒழிவில் ஒடுக்கம்—(252 வெண்பாக்கள்) இயற்றியவர் கண்ணுடைய வள்ளல் (18 நூற்.) உரையாசிரியர்—திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள்.

சின்மய தீபிகை: ஆசிரியர்—முத்தைய சுவாமி.

உரை இயற்றியவர்: இராமானந்தயோகி (19-நூற்.) வேதாந்த சூடாமணி சித்தாந்தவுரை—சர்க்கரைப் புலவர் (1645—70).

சோண சைலமாலை--இயற்றியவர்: துறைமங்கலம் சிவப்பிரகாசர், உரையாசிரியர்: கொ. இராமலிங்கத் தம்பிரான் (19-நூற்.)

2.34

சிதம்பர சுவாமிகள்—(18 ஆம் நூற்றாண்டு)—சாந்தலிங்க சுவாமிகளின் மாணவர். உரை இயற்றிய நூல்கள்: வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோதவுந்தியார், கொலை மறுத்தல், நெஞ்சுவிடு தூது.

திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி—ஆசிரியர்: அதி வீரராம பாண்டியன். உரை இயற்றியவர்: நாகை. சொ. தண்டபாணிப்பிள்ளை.

திருச்செந்தில் நிரொட்டக அந்தாதி. இயற்றியவர்: துறை மங்கலம் சிவப்பிரகாசர். உரையாசிரியர்: ஆறுமுக நாவலர்.

## ஞானாமிர்தம்—பழையவுரை

ஞானாமிர்தம் என்ற நூலை வாசீகமுனிவர் இயற்றினார். இந் நூலிலிருந்து பல பகுதிகளைச் சிவஞான முனிவர் சிவஞான பாடியத்தில் மேற்கோள் காட்டிப் போற்றுகின்றார்.

ஞானாமிர்தத்திற்குப் பழையவுரை ஒன்று உள்ளது. அதன் ஆசிரியர் ஊர்பேர் எதுவும் தெரியவில்லை.

## உரையின் இயல்பு

ஒவ்வொரு பாட்டுரையின் இறுதியிலும் இலக்கணக் குறிப்பு எழுதுவது இவரது வழக்கமாகும். இக் குறிப்புகள் சில ஏடுகளில் மிகுதியாக உள்ளன: சிலவற்றில் குறைவாக உள்ளன. இக் குறிப்பு களும் பெரும்பாலும் அசைநிலைகளை விளக்குகின்றன. சில இடங்களில் அருஞ்சொற்களுக்குப் பொருள் கூறுகின்றார்.

இவ்வுரையாசிரியர் நடை இலக்கியவளம் அற்றது. பாட்டின் பொருளை, சிறிது கற்றவரும் எளிதில் அறிந்து கொள்ளும் வகையில் தெளிவாக உள்ளது.

மேற்கோள் முதலியன இவ்வுரையில் இல்லை. ஆகமக் கருத்துகளும் இடம்பெறவில்லை. "பாட்டின் முறுக்கை அவிழ்த்துக் கண்ணழித்துப் பொருள்காட்டும் திட்பமும் தெளிவும் நம் உள்ளத்தைக் கவர்ந்து கொள்கின்றன."

## காலம்

சிவஞான முனிவர் மாபாடியத்தில் இந்தப் பழைய வுரையைச் சில இடங்களில் மறுப்பதால் இவ்வுரை சிவஞான முனிவர்க்கு முற்பட்டது என்பது விளங்கும்.

9

# சிவஞான முனிவர்

## 1. வரலாறும் சிறப்பும்

"சைவமும் தமிழும் தழைத்தினிது ஓங்க அருள்மழை பொழிந்த கார்முகில், புறச்சமய இருள் போக்கிச் சைவ சமயத்தை விளங்கவைத்த செங்கதிர்" என்று பலவாறு சிவஞான முனிவரைச் சைவசமயச் சான்றோர்கள் புகழ்வர். இவரைப் புலவர் பெருமக்கள் சிவஞானயோகி, சிவஞானசுவாமி, மாதவச் செல்வர், முனிவர் என்றெல்லாம் புகழ்ந்து கொண்டாடுவர்.

தமிழ் இலக்கண நூல்களுக்கும் சைவ சமய சாத்திரங் களுக்கும் திறமான உரைகண்ட இவரைத் தமிழறிஞர் கா. சுப்பிரமணிய பிள்ளை பின்வருமாறு பாராட்டுகின்றார்:

"தெளிவும் திட்பமும் உடைய செய்யுள் இயற்றுவதிலும், சிறந்த உரைநடை ஆள்வதிலும் இவர் இணையற்றவர். பிற்காலத்துப் பெரும் புலவர் யாவரும் இவர் உரைநடையைப் பெரும்பாலும் தழுவியே செவ்விய செந்தமிழ் வாசகநூல்கள் வகுத்தனர். செந்தமிழிலே உரைநடை கைவந்தவர்களுள் தலை சிறந்தவர் இவரே. ஆதலின் இவரை உரைமன்னர் என்னலாம்"*

சிவஞான முனிவர் பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந் தவர். இவர் தென்பாண்டி நாட்டில் விக்கிரசிங்கபுரம் என்னும் ஊரில் சைவ வேளாளர் குடியில் பிறந்தார். தந்தையார்பெயர் ஆனந்தக் கூத்தர். தாயார் பெயர் மயிலம்மை.

இளமையில் இவருக்குப் பெற்றோர் இட்டபெயர் முக்காள லிங்கர் என்பதாகும். சுசீந்திரம் ஈசான மடத்தில் வேலப்ப தேசிகரிடம் சமய அறிவும் தமிழ்ப் புலமையும் பெற்றார். தீக்கைப் பெயராகச் 'சிவஞானம்' என்ற பெயர் இவருக்கு இடப்பெற்றது.

* சிவஞான முனிவர் வரலாறும் நூலாராய்ச்சியும் 19: 2 பக்.32.

தமிழகம் எங்கும் பயணம் செய்து சைவ ஒளி பரப்பினார்; தமிழ்த்தொண்டு ஆற்றினார். அங்கங்கே இவருக்கு அடியவர்களும் மாணவர்களும் அன்பர்களும் தொண்டர்களும் தோன்றினர்.

திருவாவடு துறையிலும் காஞ்சிமாநகரத்திலும் தங்கி இவர் ஆற்றிய தொண்டுகள் பல. அவ்விரு இடங்களிலும் சில ஆண்டுகள் தங்கி, பல உரைகளையும் மறுப்பு நூல்களையும் இயற்றினார். அவ்விரு இடங்களிலும் இவர்பால் கற்ற மாணவர்களில் திருத்தணிகைக் கச்சியப்ப முனிவர், தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் முதலியோர் குறிப்பிடத் தக்கவர்கள்.

தொண்டுகள் பலவற்றை இடையறாது ஆற்றிவந்த இவர் 1785-ஆம் ஆண்டு (சித்திரைத் திங்கள் 8-ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமை) இறைவனடி சேர்ந்தார்.

சிவஞான முனிவர் இயற்றிய உரைநூல்களும் கண்டன நூல்களும் கீழே தரப்படுகின்றன:

**உரைநூல்கள்**

தொல்காப்பியச் சூத்திர விருத்தி
நன்னூல் விருத்தியுரை
சிவஞான பாடியம்
சிவஞான போதச் சிற்றுரை
சிவஞான சித்தியார் (சுபக்கம்) பொழிப்புரை
கம்பராமாயண முதற்செய்யுள் சங்கோத்தர விருத்தி

**மறுப்புரைகள்**

இலக்கண விளக்கச் சூறாவளி
சித்தாந்த மரபு கண்டனக் கண்டனம்
சிவ சமய வாதவுரை மறுப்பு
எடுத்து என்னும் சொல்லுக்கு இட்ட வயிரக் குப்பாயம்.

**இலக்கண ஆராய்ச்சியும் விளக்கமும்**

சிவஞான முனிவர் இலக்கண ஆராய்ச்சியில் வல்லவர்: ஆராய்ந்த கருத்துக்களைத் தெளிவாக விளக்குபவர். இவர் ஆராய்ந்து விளக்கும் இடங்கள் சிலவற்றைக் காண்போம்:

**நால்வகைச் சொல்**

"பொருள் உணர்த்தும்சொல் **பெயர்ச் சொல்** எனவும், குணப்பண்பும் தொழிற்பண்பும் ஆகிய பொருட்பண்பை உணர்த்தும் சொல் **உரிச் சொல்** எனவும், பொருட் புடைபெயர்ச்சி யாகிய தொழிற்பண்பின் காரியத்தை உணர்த்தும் சொல்

**வினைச் சொல்** எனவும், பொருளையும் பொருளது புடை பெயர்ச்சியையும் தம்மான் அன்றித் தத்தம் குறிப்பான் உணர்த்தும் சொல் **இடைச் சொல்** எனவும் பகுக்கப்பட்டன.

"எல்லாம் பொருள் என்பதற்கு ஒரோவழி உரிமை உடைமையின் அதுபற்றிப் பண்பும் தொழிலும் பொருள் எனவும் படும் ஆகலின், அவற்றை உணர்த்தும் உரிச் சொல்லும் ஒரோ வழிப் பெயர்ச் சொல் எனப்படும்; இடைச் சொல்லும் ஒருவாற்றாற் பெயரே ஆம்." *(சூத்திர விருத்தி)*

### எகரம்

"எகரமாவது அகரக் கூறும் இகரக் கூறும் தம்முள் ஒத்து இசைத்து, நரமடங்கல்போல நிற்பதொன்று" *(சூத்திர விருத்தி)*

### அநுவாதம்

"முன்னர்ப் பெறப்பட்டது ஒன்றினை வேறு ஒன்று விதித்தற் பொருட்டுப் பின்னரும் எடுத்து ஓதுதல்." *(சூத்திர விருத்தி)*

### மறுத்தல்

சிவஞான முனிவர் தமக்கு மாறுபட்ட கருத்தை எவர் கூறினும் அஞ்சாது மறுக்கும் இயல்புடையவர். தொல்காப்பிய உரையாசிரியர்களில் சேனாவரையரை இவர் பாராட்டுகின்றார்: இளம்பூரணரை மதிக்கின்றார். நச்சினார்க்கினியரைப் புறக்கணிக்கின்றார். 'வட நூற்கடலை நிலைகண்டு அறிந்த சேனாவரையர்' என்று பாராட்டுகின்ற இவர் இளம்பூரணரை, 'தமிழ்நூல் ஒன்றே வல்ல உரையாசிரியர்' என்று கூறுகின்றார். நச்சினார்க்கினியரை 'யாம் பிடித்ததே சாதிப்பேம் என்னும் செருக்கால் மயங்குபவர்' என்று குறிப்பிடுகின்றார்.

### முன்னோரைப் பின்பற்றல்

தமக்குமுன் வாழ்ந்த சான்றோர் உரைகளைப் பின்பற்றி இவர் உரை எழுதும் இடங்களும் உள்ளன.

சிவஞான பாடியத்துள், (முதற் சூத்திரம், முதல் அதிகாரம்) "காணப்பட்ட உலகத்தால் காணப்படாத கடவுட்கு உண்மை கூற வேண்டுதலின், (தோற்றிய திதியே ஒடுங்கி உளதாம் என) உலகின்மேல் வைத்துக் கூறினார்; சங்கார காரணனாய் உள்ள முதலையே முதலாக உடைத்து இவ்வுலகம்" என்று இவர் கூறும் உரை, திருக்குறள் முதற் குறளுக்குப் பரிமேலழகர் கூறிய உரையைப் பின்பற்றியதாகும்.

பதினோராம் சூத்திர உரையில், "மொழிபெயர்த்தல் யாப்பான் நூல் செய்து உரைப்பான் புகுந்த ஆசிரியர் வேறுபடச்

செய்து உரையார்” என்று இவர் கூறுவது, பேராசிரியர் மரபியலில் ‘மொழிபெயர்த்தல்’ என்ற தொடருக்குக் கூறும் விளக்கத்தை நினைவூட்டுகின்றது.

## ஒப்பிட்டு ஆராய்தல்

தொல்காப்பியத்தையும் நன்னூலையும் ஒப்பிட்டுக் கற்று, ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்ந்து அறிந்தவர் சிவஞான முனிவர். ‘தொல்காப்பியச் சூத்திர விருத்தியில் இரு இலக்கண நூல்களையும் ஒப்பிட்டு, நன்னூல் தொல்காப்பியத்திலிருந்து வேறுபடும் இடங்கள் பன்னிரண்டை அடுக்கிக் காட்டுகின்றார். அவை இலக்கணம் பயில்வோருக்குப் பெருந்துணை புரிய வல்லவை. ஆதலின் அவற்றைக் கீழே தருவோம்:

1. “செய்யுள் இயலுள் கூறிய ஒற்றளபெடையை, அளபெடை அதிகாரப்பட்டமை நோக்கி உயிரளபெடையைச் சார வைத்துக் கூறுதலும்;

2. தனிநிலை முதல்நிலை இடைநிலை ஈறு எனும் நால்வகை இடத்தை மூன்று இடம் என அடக்குதலும்;

3. ‘மெல்லெழுத்து மிகுதல் ஆவயினான’ (தொல். புள்ளி-20) என்றவாறே தங்கை நங்கை எங்கை செவி தலைபுறம் என மகாரம் கெட்டு இன மெல்லெழுத்து மிகும் என்னாது, ‘மகரமே இன மெல்லெழுத்தாய்த் திரியும்’ (நன்-மெய். புணர்-16) என்றலும்;

4. **அகமென் கிளவிக்குக் கைமுன் வரினே**
**முதனிலை ஒழிய முன்னவை கெட்டு**
**மெல்லெழுத்து மிகும்**

**(தொல்–புள்ளி–20)**

என்னாது, அங்கை என்புழிக் ககர அகரம் கெட்டு மகரம் திரிந்து முடியும் (நன்-மெய்-புணர்-19,16) என்றலும்;

5. **முதலீ ரெண்ணின் ஒற்று ரகரமாகும்**

**(தொல். குற்–34)**

**இடைநிலை ரகரம் இரண்டென் எண்ணிற்கு**
**நடை மருங்கின்று**

**(தொல் குற்–34)**

என்றவாறே கூறாது. இரண்டன் ஒற்று உயிர் ஏக நின்ற ரகர ஒற்றின் மேல் உகரம் வந்து செய்கைப்பட்டு முடியும் என்றலும்;

6. நாகியாது என யகரம் வரும் வழி உகரம் கெட்டு இகரம் தோன்றும் என்னாது (தொல். குற்-5) உகரமே இகரமாய்த் திரியும் என்றலும் (நன்-உயிர்-14);

7. நெடுமுதல் குறுகும் மொழிகளின் முன் பொதுப்பட ஆறன் உருபிற்கும் நான்கன் உருபிற்கும் அகர நிலையும் எனக் கூறி,

**ஆறன் உருபின் அகரக் கிளவி**
**ஈறாகு அகரமுனைக் கெடுதல் வேண்டும்**

**(தொல்–புணர்–13)**

என்னாது 'குவ்வி னவ் வரும்' என்றொழிதலும்;

8. ஆடிக்குக் கொண்டான் என்புழி (தொல். உயிர்–46) இக்குச்சாரியை என்னாது குச் சாரியை என்றலும்;

9. வற்றுச் சாரியை வகரம் கெட்டு அற்று என நிற்கும் என்னாது அற்றுச் சாரியை என்றே கோடலும் (நன்–உருபு–5);

10. இன் என் சாரியை இற்று எனத் திரியும் என்னாது இற்று என்பது வேறு சாரியை எனக் கோடலும்;

11. அக்கு என் சாரியை மெய்மிசையொடு கெடும் என்னாது, அகரச் சாரியை எனக் கோடலும்;

12. அ ஆ வ–என மூன்றும் பலவறி சொல் என்னாது (தொல்–வினை. 19), உண்குவ உறங்குவ என்புழி வகரத்தை வேறு பிரித்து இடை நிலை எனக் கொண்டு அகர விகுதி (நன்–வினை–10) என்றொழிதலும்."

என்பனவற்றை இரு நூல்களுக்கும் உரிய வேறுபாடுகளாகக் காட்டுகின்றார்.

## ஆகுபெயரும் அன்மொழித் தொகையும்

ஆகுபெயர்க்கும் அன்மொழித் தொகைக்கும் உள்ள வேறுபாடுகளை மிக விரிவாக ஆராய்ந்தவர் சிவஞான முனிவர். தம் காலத்திற்கு முன்வாழ்ந்த இலக்கண அறிஞர்கள் கூறிய பல்வேறு கருத்துக்களை எல்லாம் ஒருங்கு திரட்டி ஆராய்ந்து தம் கருத்துக்களையும் வெளிப்படுத்தியுள்ளார். தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தியுள்,"ஆகுபெயர், ஒன்றன் பெயரான் அதனோடு இயைபு பற்றிய பிறிது ஒன்றினை உணர்த்தி ஒரு மொழிக் கண்ணதாம். அன்மொழித் தொகை இயைபு வேண்டாது இரு மொழியும் தொக்கத் தொகை ஆற்றலால் பிறிது பொருள் உணர்த்தி இரு மொழிக் கண்ணதாம். இவை தம்முள் வேற்றுமை என்க" என்று தெளிவுபடுத்திப் பின்னர் விரிவாக அவற்றை ஆராய்கின்றார்.

இவர் தொடங்கிவைத்த ஆராய்ச்சியைப் பின்பற்றி, இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கருத்துப் போராட்டம்

அறிஞர்களுக்குள் நடந்தது. திருமயிலைச் சண்முகம் பிள்ளை, சோழவந்தான் அரசன் சண்முகனார், மறைமலையடிகள் முதலிய அறிஞர்கள் இப்போராட்டத்தில் ஈடுபட்டனர். இவர்கள் இந்த ஆராய்ச்சியைப்பற்றி எழுதிய கட்டுரைகள் ஞான போதினி, செந்தமிழ், ஞான சாகரம் ஆகிய இதழ்களில் இடம் பெற்றுள்ளன.

## கலித்தொகை—நாடகம்

கலித்தொகை முதலிய அகப்பொருள் நூல்களில் நாடகப் பண்பு வாய்ந்த பாடல்கள் இடம்பெற்றுள்ளன. ஒவ்வொரு கலிப்பாடலும் ஓரங்க நாடகம் ஆகும். இதனைச் சிவஞான முனிவர் மிகத் தெளிவாக உணர்ந்து விளக்குகின்றார்.

“பொருளதிகாரத்துக் கூறும் பொருளாவது, பெரும்பாலும் காமச் சுவையும் வீரச் சுவையும்பற்றி யோனி என்னும் உறுப்புத் தழுவி நாடக வழக்கோடு ஒத்துவரும் புலநெறி வழக்கு ஆகலின் அது நாடகத் தமிழுள் ...ஓதற்பாலதாயினும், கலித்தொகை முதலிய செய்யுள் ஆராய்ச்சிக்கு இன்றியமையாது வேண்டப்படுதலின், அதுபற்றி இயற்றமிழ் மொழியின் ஒழிபாய்க் கொண்டு ஈண்டைக்கு வேண்டும் துணையே ஓதினார்” (பாயிர விருத்தி).

## நோக்கு

சிவஞான முனிவர், நன்னூலில் சில நூற்பாக்களுக்கு நுண் பொருளும் விளக்கமும் எழுதுகின்றார். ஒவ்வொரு சொல்லையும் ஆழ்ந்து நோக்கிப் பொருள் கூறுகின்றார்.

**ஒருவர் என்பது உயர்இரு பாற்றாய்**
**பன்மை வினைகொளும் பாங்கிற்று என்ப**

**(நன். 289)**

என்ற நூற்பாவில் உள்ள ஒவ்வொரு சொல்லிலும் ஆழ்ந்த பொருள் இருப்பதைப் பின்வருமாறு விளக்குகின்றார்:

1. “(ஒருவர்) இச் சொல்லின்கண் பகுதிக்கு ஏற்ப **இருபாற்றாய்** என்றும்;

2. விகுதிக்கு ஏற்ப **பன்மைவினைகொளும்** என்றும்;

3. உயர்திணை முப்பாலுள் பன்மையைப் பின்விதத்தலின் ஆண் பெண் என விதவாது **உயர்** இருபாற்றாய் என்றும்;

4. உயர் என, முன் விதத்தலின் உயர்திணைப்பன்மை என விதவாது **பன்மை** என்றும்;

5. ஒருவர் வந்தார், ஒருவர் அவர் என வினையும் பெயரும் கொள வருவது உவப்பு உயர்வு முதலியவற்றான் வருவதாம்; இங்ஙனம் தன்னியல்பாய் வரும் ஒருவர் என்பது வினையும்

வினைக் குறிப்புமே கொள்ளும் என்பார் பெயரை ஒழித்து **வினைகொளும்** என்றும்:

6. இச் சொல் ஒருமைப் பகுதியோடு பன்மை விகுதி மயங்கிப் பால் வழுவாய் நின்றதேனும் தன்னில்பாய் மயங்கி நின்றமையின் வழாநிலை போலும் என்பதூஉம், பன்மைவினை என்றது சொல் மாத்திரையில் பன்மைவினையன்றி, பொருள் மாத்திரையின் ஒருமை வினையாம் ஆதலின் இப் பயனிலையை ஒருவர் என்னும் சொற் கொள்ளுதல் வழுவன்று என்பதூஉம் தோன்றப் **பாங்கிற்று** என்றும்;

7. இங்ஙனம் ஆதல் சான்றோர்க்கு ஒப்ப முடிந்தது என்பார் **என்ப** என்றும் கூறினார்."

இப் பகுதி, சிவஞான முனிவரின் இலக்கண ஆராய்ச்சியை வெளிப்படுத்துகின்றது.

### வடமொழிப் பற்று

சிவஞான முனிவர், சேனாவ்ரைப் போன்று வடமொழிப் பற்று மிகுந்தவர். பல இடங்களில் வடமொழி இலக்கணத்தை விளக்குகின்றார்; போற்றியுரைக்கின்றார். பின்வரும் பகுதிகள் இவரது வடமொழிப் பற்றை நன்கு வெளிப்படுத்தும்:

"வட நூல் உணர்ந்தார்க்கு அன்றி, தமிழ் இயல்பு விளங்காது என்பதும் உணர்ந்து கோடற்கு அன்றே, பாயிரத்துள் 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' என்றதுவும் என்க"

"வட நூற் கடலை நிலை கண்டு அறிந்த சேனாவரையர் எழுத்ததிகாரத்திற்கு உரை செய்தார் ஆயின், இன்னோரன்ன பொருள்அனைத்தும் தோன்ற, ஆசிரியர் கருத்து உணர்ந்து உரைப்பர். அவர், சொல்லதிகாரம் போலப் பெரும்பயன்படாமை கருதி, எழுத்திற்கு உரை செய்யாது ஒழிந்தமையின், தமிழ்நூல் ஒன்றே வல்ல உரையாசிரியரை உள்ளிட்டோர் உரையை ஆசிரியர் கருத்தாகக் கொண்டு பின்னுள்ளோரும் மயங்கு வராயினார்".

—தொல். முதற்சூத்திர விருத்தியுரை.

## 2. சூத்திர விருத்தி

தொல்காப்பியப் பாயிரம், முதற் சூத்திரம் ஆகிய இரண்டிற்கும் சிவஞான முனிவர் மிக விரிவாக ஆராய்ச்சி யுரைகள் இயற்றியுள்ளார். இந்நூல், முனிவரின் ஆராய்ச்சித்

திறனுக்கும் இலக்கணப் புலமைக்கும் ஓர் எடுத்துக்காட்டாய் விளங்கி வருகின்றது.

சூத்திர விருத்தி, இலக்கண ஆராய்ச்சிக் களஞ்சியம்; அறிவுக்கு விருந்து; ஆராய்ச்சிக்கு ஊற்று; புலமைக்கு வற்றாத இன்பம். இந்நூலைக் கற்றால்அன்றித் தமிழ் மொழி இலக்கணப்புலமை நிரம்பப்பெறாது. இந்நூலில் எத்தனையோ அரிய செய்திகளைத் தெளிவுபடுத்தியுள்ளார். இவர் கூறும் முடிவு, எல்லோருக்கும் உடன்பாடு அன்று எனினும் இவர் எழுப்பும் ஐயம், தடை, விடைகள், மறுக்கும் முறை, தம் கருத்தையே நிலை நாட்டும் வன்மை ஆகியவற்றை அனைவரும் போற்றி மதிப்பர்.

நன்னூல் விருத்தியுரையில் உள்ள சில பகுதிகள் எவ்வித மாறுதலும் இன்றி இந்நூல் இடம்பெற்றுள்ளன. இலக்கண விளக்கச் சூறாவளி, சிவஞான போதப் பேரூரை ஆகிய உரைகளில் இவர், இலக்கணக் கருத்துகளை மிக விரிவாக விளக்க வேண்டிய இடங்களில் 'சூத்திர விருத்தியுள் காண்க' என்று குறிப்பிடுகின்றார்: எனவே, சூத்திர விருத்தியே இவர் எழுதிய முதல் உரை நூல் ஆகும்.

## 3. நன்னூல் விருத்தியுரை

சிவஞான முனிவர் தமிழ் இலக்கண உலகிற்குச் செய்த பெருந்தொண்டுகளில் ஒன்று, நன்னூலுக்கு விருத்தியுரை இயற்றியதே ஆகும். சங்கர நமச்சிவாயர் நன்னூலுக்கு எழுதிய விருத்தியுரை சிலவிடங்களில் போதிய விளக்கம் இல்லாமல் இருப்பதை அறிந்து, முனிவர் அவ்விருத்தியுரையினைத் திருத்தி விரிவாக்கினார். முனிவர் உரை 'புத்தம் புத்துரை' என்று வழங்கலாயிற்று. சிவஞான முனிவர் விருத்தியுரையில் உள்ள இருவர் உரைகளையும் அடையாளம் கண்டு கற்பதற்கு உதவியாக, திருவாவடுதுறை ஆதீனத்தார் நன்னூல் உரையைப் பதிப்பித்துள்ளனர். அப் பதிப்பில் இருவர் உரைகளும் அடையாளமிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

முனிவர் நன்னூலுக்கு விருத்தியுரை கண்டபின் அவ்வுரையினைத் தழுவியே பிற்காலத்தில் எளிய உரைகள் பல நன்னூலுக்கு ஏற்பட்டன. தமிழ் இலக்கணம் கற்றுப் புலமை பெற விரும்புபவர்க்குச் சிவஞான முனிவரின் நன்னூல் விருத்தியுரை ஒரு நுழைவாயிலாக விளங்குகின்றது.

# 4. இலக்கண விளக்கச் சூறாவளி

திருவாரூர் வைத்தியநாத தேசிகர் 'இலக்கண விளக்கம்' என்னும் பெயரைச் சூட்டி ஐந்திலக்கணம் கூறும் நூல் ஒன்றை இயற்றினார். அந்நூலில் உள்ள குற்றங்களை எடுத்துக் காட்டி 'இலக்கண விளக்கச் சூறாவளி' என்ற பெயரால் மறுப்பு நூல் ஒன்றினைச் சிவஞான முனிவர் இயற்றினார். (இலக்கண) விளக்கை அணைக்க, சூறைக்காற்றை (சூறாவளி) எழுப்பினர்.

இலக்கண விளக்கச் சூறாவளி, சிவஞான முனிவரின் ஏனைய மறுப்பு நூல்களைப்போல அத்துணை விரிவாகவும், தெளிவாகவும் அமையவில்லை. இந்நூலில் மறுக்கப்படும் கருத்து, அதில்உள்ள குற்றம், அதைப்பற்றிய தடைவிடைகள், யாவரும் ஒப்பத் தக்க முடிவு ஆகியவற்றைக் காணமுடியவில்லை. இலக்கண விளக்கச் சூத்திரத்தை முழுமையாகக் காட்டாமல், தொடக்கம் மட்டும் காட்டி மறுப்புரைகளையும் விரிவாகத் தராமல் 'இவற்றைத் தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தியுள் காண்க' என்று பல இடங்களில் கூறிவிடுகின்றார். எனவே, இம்மறுப்பு நூலைக் கற்போர், இலக்கண விளக்கம், தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தி ஆகிய இரண்டினையும் நன்கு பயின்றவராக இருத்தல் வேண்டும்; நல்ல நினைவாற்றலோடு முன்பின் நோக்கி எளிதில் உணர்பவராய் இருத்தல் வேண்டும்.

இந்நூல் ஒன்றே, நூலாசிரியரை மறுத்து எழுந்த மறுப்பு நூலாகும்.

இலக்கண விளக்கச் சூறாவளியின் பெருமையினைத் தமிழறிஞர் வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார் பின்வருமாறு கூறிப் போற்றுகின்றார்.

"திருவாவடுதுறைச் சிவஞான சுவாமிகள், நாவலருடைய இலக்கண விளக்கத்தை அவிகும்பொருட்டுச் சூறாவளியை ஏவினர். இச்சூறாவளியை 'அநியாய கண்டனம்' என்று மகா-ரா-ரா-ஸ்ரீ சி.வை. தாமோதரம் பிள்ளையவர்கள் கூறுவது போல் நாம் ஒரு காலத்தும் சொல்லப்படாது. இக்கண்டனத்தை அவர் வேண்டுமென்று எழுதினபோதிலும் சில இடங்களில் நமது நாவலர் செய்த பிழைகளையும் எடுத்துக்காட்டிஇருக்கின்றனர். சூறாவளியின் மூலமாயே நம் இலக்கண விளக்கத்திற்கு அதிக மேன்மை என்று யாவரும் அறிதல் வேண்டும்.'*

* தமிழ்ப் புலவர் சரித்திரம் (1950) பக். 49.

சிவஞான முனிவர், இலக்கண விளக்கத்தில் எண்பதுக்கு மேற்பட்ட இடங்களை (எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் இரண்டில் மட்டும்) மறுக்கின்றார். சிலவற்றை மிகைபடக் கூறல் என்றும், வேறு சிலவற்றைக் குன்றக் கூறல் என்றும், இன்னும் சிலவற்றை மாறுகொளக் கூறல் என்றும் குற்றங்கள் கூறி மறுக்கின்றார்.

பதவியல் முதற் சூத்திர மறுப்பில், "இவர் கூறியவற்றுள் குற்றங்களை விரிக்கப்புகின், விளையாட்டு மகளிர் இட்ட மணற் சோற்றில் கல் ஆராயப் புகுதலோடு ஒக்கும்" என்று மிக வன்மையாகக் கூறுகின்றார்.

மறுப்புரைகள் சிலவற்றைக் காண்போம்:

"ஈண்டை விதிகளை நன்னூலார் போலச் சாலவும் சொற் சுருங்கச் சூத்திரித்தும், சிலவற்றை ஆசிரியர் தொல்காப்பியனார் போலச் சாலவும் சொற்பல்கச் சூத்திரித்தும் ஒரு வழிப்பட நில்லார் ஆயினார்" (உயிர் ஈற்று-35.)

"தாம் செய்த நூல்முறைபற்றி உரை செய்யாது, தொல் காப்பியத்திற் கிடந்தவாறே படி எடுத்து எழுதித் தமது அறியாமையை விளக்கினார் என அறிக". (உயிர் ஈற்று-11)

இலக்கண விளக்க ஆசிரியர் 'பதவியல்' என்று பெயரிட்டது பொருந்தாது என்பதற்குப் பின்வரும் காரணங்களைக் கூறுகின்றார்:

'நன்னூலார் பதவியல் கூறியதற்கு முதல்நூல் வடநூல் ஆதலின், அது தோன்ற மொழியில் என்னாது பதவியல் என வட சொல்லான் அதற்குப் பெயரிட்டு, அவ் ஓத்துள் வடவெழுத்துத் தமிழில் வருமாறு கூறினார். இவர் தமிழ்மொழி மாத்திரைக்கே இலக்கணம் கூறுதும் எனப் புகுந்தமையால் பதவியல் என வட மொழியால் குறியிடுதல் பழுதாம் என்க.'

இலக்கண விளக்க ஆசிரியர் ஆண்பால் பெண்பால் என்ற வழக்கு அஃறிணைக்கு இல்லை என்று கூறுகின்றார் (பெயரியல்-6). இதனைச் சிவஞான முனிவர், 'ஆண்பால் பெண்பால் வழக்கு உயர்திணைக்கே அன்றி அஃறிணைக்கு இன்று என்றார். 'ஆண்பால் எல்லாம் ஆண் எனற்கு உரிய' என்னும் மரபியல் சூத்திரங்களையும், ஆண்மை சுட்டிய பெயர், பெண்மை சுட்டிய பெயர் என்னும் குறியீடுகளையும், களிறு பிடி முதலிய வழக்குகளையும் மறந்தார் போலும்!' என்று தம் ஆராய்ச்சித் திறன் வெளிப்படும் வகையில் மறுக்கின்றார்.

# 5. கம்பராமாயண முதற் செய்யுள் சங்கோத்தர விருத்தி

சிவஞான முனிவர் காஞ்சிபுரத்தில் வாழ்ந்து வந்தபோது, தமிழுக்குத் தொண்டுகள் பல செய்து வந்தார். மாணவர் பலர் தோன்றினர். இவரிடம் பாடம் கேட்டுத் தமிழறிவு பெற்றுப் பலர் சிறப்படைந்தனர். முனிவர் புகழ், நகரமெங்கும் பரவியது. சைவமும் தமிழும் தழைத்து இனிது ஓங்கி வளர்வதைக் கண்ட வைணவர் சிலர் முனிவரிடம் வந்து, கம்பரையும், அவரது புலமைத் திறத்தையும், பாடலின் உயர்வையும் பலவாறு புகழ்ந்து பேசினர்; தமிழ் மொழியில் கம்பராமாயணம் போன்ற சிறந்த காவியம் வேறு இல்லை என்றும் கூறினர். இவ்வாறு அவர்கள் செருக்கோடு பேசுவதைக் கண்ட சுவாமிகள் அவர்கள் வாயை அடக்கக் கருதினார். கம்பராமாயணத்தின் முதற் செய்யுளாகிய 'நாடிய பொருள்' என்ற பாடலே இலக்கணப்படி பல குற்றங்களை உடைய பாடல் என்று கூறினார். அப் பாடலில் உள்ள பல குற்றங்களை ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கிக் கூறினார்.

வைணவர்கள் இவர் கூறும் குற்றங்களுக்குத் தக்க விடை கூறி மறுக்க இயலாமல், சுவாமிகளை வணங்கி அறியாது கூறினோம் என்று பணிவாகக் கூறினர்.

அதன்பின்னர், சுவாமிகளே தாம் முன்பு அப்பாடலுக்குக் கூறிய குற்றங்கள் அனைத்தையும் நீக்கிக்காட்டி விடை கூறினார். சுவாமிகள் அப்பாடலுக்கு வாய்மொழியாகக் கூறிய வினாவிடைகளை யாவரும் உணர்ந்து இன்புறவேண்டி எழுதித் தருமாறு காஞ்சிநகர்ச் சைவர்கள் வேண்டினர். அவ்வாறே சுவாமிகள் 'கம்பராமாயண முதற் செய்யுள் சங்கோத்தர விருத்தி' என்ற பெயருடன் சிறுநூல் ஒன்றைச் செய்து அளித்தார்.

இவ்வாறு சிவஞான சுவாமிகள் செய்தது கம்பன் புலமைக்கோ, வைணவ அன்பர்களுக்கோ தாழ்வு உண்டாக்கக் கருதி அன்று. 'நாடிய பொருள்' என்று தொடங்கும் பாடல் கம்பர் பாடல் அன்று என்றும் கூறுவர். பெரியோர் பாட்டில் பிழைகண்ட தாழ்வும் சிவஞான முனிவருக்கு உண்டாகாது. ஒரே பாட்டில் இவர் எழுப்பியுள்ள இருபத்து இரண்டு குற்றங்களும் இவரது இலக்கணப் புலமையை—அறிவு வளத்தை—ஆராய்ச்சித் திறனை வெளிப்படுத்துகின்றன. இவற்றினும் மேலாக அவ்வினாக்களுக்கு இவரே விடைகளும் கூறிப் பிழை நீக்கிக் காட்டியது மிக வியப்பைத் தருகின்றது. முடி போடுவது எளிது; அவிழ்ப்பது அரிது. இரண்டும் வல்லவர் சிவஞான முனிவர்.

சிவஞான முனிவர் ஒரு பாடலுக்கு எழுப்பிய வினாக் களையும், பின்னர்க் கூறிய விடைகளையும் அறிந்து கொள்ளும் விருப்பம் பலருக்கு ஏற்படுவது இயல்பே. ஆதலின், கீழே பாட்டையும் முனிவர் அப்பாடலில் கூறிய குற்றங்களையும் காண்போம்:

**நாடிய பொருள்கை கூடும்;**
**ஞானமும் புகழும் உண்டாம்;**
**வீடுயர் வழிய தாக்கும்;**
**வேரியங் கமலை நோக்கும்;**
**நீடிய அரக்கர் சேனை**
**நீறுபட் டொழிய வாகை**
**சூடிய சிலைஇ ராமன்**
**தோள்வலி கூறு வோர்க்கே.**

இதனுள் சங்கையும் உத்தரமும் வருமாறு: சங்கை சிறிது காட்டுதும்.

1. 'நாடிய பொருள்' எனவே எல்லாம் அடங்குதலின், 'ஞானமும் புகழும் உண்டாம்' எனவும், 'வீடுயர் வழிய தாக்கும்' எனவும், 'வேரியங் கமலை நோக்கும்' எனவும் கூறுதல் கூறியது கூறலேயாம்.

2. இனி, ஈண்டுக் கூறிய நாடிய பொருள் முதலியவற்றைத் தரும் இராமனை, அவைதருதற்குரிய சத்துவகுணத் தொழிலான் விசேடித்துக் கூறாது, 'நீடிய அரக்கர் சேனை நீறுபட்டு ஒழிய வாகை சூடிய சிலை இராமன்' என உருத்திரச் சுவை தோன்ற, ஏனைக் குணத் தொழிலான் விசேடித்துக் கூறுதல் சிறிதும் சிறப் பின்றாம்.

3. இன்னும் சொற்றொறும் சிறிது சங்கை காட்டுதும்.

**நாடென்ப நாடா வளத்தன நாடல்ல**
**நாடா வளந்தரு நாடு** **(குறள் – 739)**

என்பவாகலின், தேடிவருந்தாது பெறப் பொருள் கைகூடிடச் செய்தலே செய்தலாம்; அவ்வாறன்றித் தேடிப் பெறப் பொருள் கைகூடிடச் செய்தல் செய்யாமையோடு ஒக்கும் ஆதலின், 'நாடாப் பொருள் கைகூடும்' என்னாது, 'நாடிய பொருள்' என்றல் சிறப்பிலதாம்.

4. பொருள்கள் பல ஆதலின், பன்மைப் பாலால் கூறாது, பொருள் என்றல் வழுவாம்.

5. 'கூடும்' எனவே அமைந்திருப்ப, 'கைகூடும்' என்றல் வேண்டா கூறலாம்.

6. இல்லறம் துறவறம், இம்மை மறுமை, போகம் மோக்கம் என்றாற் போலப் புகழ் முன் கூறி, ஞானத்தைப் பின் கூறல் மரபாம்; அவ்வாறன்றி ஞானமும் புகழும் என்றல், முறை பிறழ வைத்ததாம்.

7. ஞானமும் புகழும் உள எனப் பன்மையால் கூறாது, ஞானமும் புகழும் என்னும் இரண்டு எழுவாய்க்கு 'உண்டு' என ஒருமைப்பாலால் கூறியது வழுவாம்.

8. 'உண்டு' எனவே அமைந்திருப்ப 'ஆம்' என்பது நின்று பயனின்மையாம்.

9. வீடு என்று ஒழியாது, 'உயர் வழியது' என்றல் மிகை படக் கூறலாம்.

10. அன்றியும் வீடாகிய உயர்வழியது என இருபெய ரொட்டுப் பண்புத் தொகையாகக் கொள்ளின் ஏற்றிடபம், யாட்டேறு என்றாற்போல, வீட்டுயர் வழியது எனச் செய்கைப் பட்டுப் புணர்வது அல்லது, 'வீடுயர் வழியது' எனப் புணராதாம்.

11. கைகூடும், உண்டாம், நோக்கும் என்பனவற்றைத் தன் வினையாகக் கூறி, ஆக்கும் என இஃது ஒன்றனையும், பிறவினை யாகக் கூறல் வழுவாம்.

12. வேரி இல்லாத கமலம் சில உள ஆயின், அவற்றை நீக்குதற்கு, 'வேரியங் கமலம்' என விசேடித்தல் அமையும்; அவ்வாறு இன்மையின், 'வேரியங் கமலம்' எனப் பயனில் விசேடம் அடுத்தல் வழுவாம்.

13. கமலை குடிகொண்டு உறையும் என்னாது, கடைக் கண்ணால் சிறிது பார்க்கும் என்பது பட நோக்கும் என்றமையால், அற்பச் செல்வம் எய்தும் எனப் பொருள் தருதலின் சிறப்பிலதாம்.

14. நிலைபேறு இன்றி, அழிவுறும் அரக்கரை நீடிய அரக்கர் என்றல் பொருந்தாதாம்.

15. அரக்கர் எனவே அமைந்து இருப்ப, சேனை என்றல் மிகையாம்.

16. அன்றியும், அரக்கரது சேனை நீறுபட்டு ஒழிந்த தன்றி அரக்கர் நீறுபட்டிலர் எனவும் பொருள் தருதலின் மயங்க வைத்தலாம்.

17. நீறுபட என்னாது, 'நீறுபட்டு ஒழிய' என்றல் மிகையாம்.

18. நீறுபட்டு ஒழிந்த பின் வாகைசூடுதலை, ஒழிய வாகை சூடல் என்றல் வழுவாம்.

19. பிரமாத்திரம் முதலிய ஏனைப் படைகளும் இருப்ப, சிலை இராமன் என ஒன்றனையே கூறல் அமையாதாம்.

20. இராமனுக்கு அனந்த நற்குணங்கள் இருப்ப, தோள்வலியாகிய ஓர் ஏகதேச மாத்திரையே கூறல் சிறந்தது அன்றாம்.

21. மனம் மொழி மெய்கள் என்னும் முப் பொறியுள் ஏனையவற்றை ஒழித்து, கூறுவோர்க்கு என ஒன்றன் வினை மாத்திரையே கூறல் சிறப்பிலதாம்.

22. இன்னும் முதல் பாட்டில் 'நீறுபட்டு ஒழிய' என அமங்கலச் சொல்லை வைத்தலும் வழுவாம்.

மேலே காட்டிய இருபத்திரண்டு குற்றங்களை ஒரே பாட்டில் காட்டிய சுவாமிகள், 'ஆதலின் இப் பாட்டு முழுதும் குற்றமே ஆம்' என்றும் கூறுகின்றார்.

பின்னர், 'பாட்டு முழுதும் குற்றமே ஆம் எனின், அற்றன்று' என்று உரைத்து, 'இனிச் சங்கைதீரப் பொருள் சிறிது காட்டுதும்' என்று மேலும் தொடர்கின்றார்.

இவர் கூறப்போகும் விடைகளைக் கேட்க நம் உள்ளத்தில் ஆவல் எழுதல் இயற்கையே. அவ்விடைகளை, கம்பராமாயண முதற் செய்யுள் சங்கோத்தர விருத்தி என்னும் நூலில் கண்டு மகிழலாம்.

## 6. மறுப்புரை நூல்கள்

சிவஞான முனிவர் எழுதிய மறுப்புரை (கண்டன) நூல்கள் பலவாகும். சித்தாந்தமரபு கண்டனம், சிவ சமவாதவுரைமறுப்பு, 'எடுத்து' என்னும் சொல்லுக்கு இட்ட வைரக்குப்பாயம் ஆகியவை குறிப்பிடத் தக்கவையாகும்.

**சித்தாந்த மரபு கண்டனம்:** சித்தாந்த மரபு அல்லது மரபு அட்டவணை என்ற ஒரு நூல் துறைசை ஆதீனத்தார் ஒருவரால் இயற்றப்பட்டது. அந் நூலுக்குக் கண்டனம் தருமை ஆதீனத்தாரால், 'சித்தாந்த மரபு கண்டனம்' என்ற நூல் இயற்றப் பட்டது. இக்கண்டன நூலால் மரபு அட்டவணை பிழையுடையது என்பது ஒப்புக் கொள்ளப்பட்டது. ஆனால், அக் கண்டன நூலில், மறுக்கத் தகாதவை சிலவற்றை எடுத்து மறுத்ததனால் சிவஞான முனிவர் அக்கண்டன நூலுக்கு ஒரு மறுப்புரை வரைந்தார். இந் நூலே, சித்தாந்த மரபு கண்டனம்.

**சிவசமவாத கண்டனம்:** திருவண்ணாமலை ஆதீனத்தைச் சேர்ந்த ஞானப்பிரகாசர், சிவஞான சித்தியாருக்கு எழுதிய உரைகளில், தமக்குப் பிழை என்று தோன்றியவற்றிற்கு முனிவர் எழுதிய மறுப்பு நூல், சிவசமவாத கண்டனம் எனப்படும்.

**'எடுத்து' என்னும் சொல்லுக்கு இட்ட வயிரக்குப்பாயம்:** 'என்னை இப்பவத்திற் சேரா வகை எடுத்து' என்னும் சிவஞான சித்தியார் திருவிருத்தத்துள், 'எடுத்து' என்னும் சொல்லிற்கு ஞானப் பிரகாசர், 'சமனாந்தம் பாசக் கூட்டம் கூடாதவகை சின் மாத்திர சுத்த கேவலமாகச் சேடிக்கப் பண்ணி' என்று பொருள் கூறினார்.

சிவஞான முனிவர், இவ்வாறு பொருள் கூறுவது பொருந் தாது என்பதற்குப் பல காரணங்கள் காட்டி மறுக்கின்றார்.

'குப்பாயம்' என்ற சொல்லுக்குச் சட்டை என்பது பொருள்.

## தனிப்பாடல் உரைகள்

சிவஞான முனிவர் காஞ்சிநகரில் வாழ்ந்து தமிழ்ப் பணி புரிந்தபோது, அவரிடம் அழுக்காறுகொண்ட போலிப் புலவர் சிலர், இரண்டு தனிப்பாடல்கள் இயற்றி அவற்றிற்குப் பொருள் கூறுமாறு சுவாமிகளிடம் அனுப்பினர். அவ்விரு பாடல்களையும் வாங்கிப் பார்த்துச் சுவாமிகள் மிக அரியதொரு விரிவுரை எழுதி, சொல், பொருள், அணி, யாப்பு ஆகிய பலவேறு வகையான இலக்கணக் குறிப்பும் தந்து அனுப்பினார்கள்.

அப்பாடல்களுள் ஒன்று, 'அங்கோழி முட்டை' என்று தொடங்குகின்றது. இன்னொன்று 'எங்கணவன்' என்று தொடங்கும் வெண்பா.

'எங்கணவன்' என்னும் வெண்பாவுக்கு எழுதிய விரிவுரையின் இறுதியில் சுவாமிகள், "சங்கம் மரீஇய சான்றோர் அவரோடு ஒரு தன்மையராகிய சான்றோர் செய்த இலக்கணத்தின் வராத செய்யுட்களின் பொருள் நுட்பங்களை எம்மனோர்பால் கேட்பின் அமையும்; எதுகை வழுவும் பருப் பொருளும், வெளிறிய சொல்லும் முதலிய குற்றங்களை உடைய வராய் இலக்கணத்திற் புறத்த, இன்னோரன்ன செய்யுட்களை இவ்வாறு செய்யுள் செய்யவல்லாரைக் கேட்க அமையுமல்லது, எம்மனோரையும் அவரோடு ஒருவராக்கி இவற்றையும் ஒன்றாகக் கேட்டல் அமையாது என அறிக" என்று தக்க அறிவுரை ஒன்றை எழுதியுள்ளார்.

2.35.

## 7. சிவஞானபோதச் சிற்றுரை

சிவஞான முனிவர் இயற்றிய உரைகளுள் சிவஞான போதச் சிற்றுரையும் ஒன்று. சிவஞான போதத்திற்குப் பேருரை காணு முன்னரே, முனிவர் அந்நூலுக்குச் சிற்றுரை கண்டார் என்பர் தமிழறிஞர் கா. சுப்பிரமணிய பிள்ளை. சிற்றுரையில் கூறியுள்ள கருத்துக்கள் யாவும் பேருரையுள் அடங்கும் என்றும் அவர் கூறியுள்ளார்.

ஆனால், மறைமலை அடிகளார், சிவஞானபோத ஆராய்ச்சி என்னும் தம் நூலில் சிவஞானபோதச் சிற்றுரை பேருரைக்குப்பின் இயற்றப்பட்டதாய்க் கூறுகின்றார். அடிகளார் அந்நூலில், "தமது பேருரைக்கண் 'அது' என்பதற்கு 'அலி' எனப் பொருள் உரைத்த சிவஞான முனிவரே, அதற்குப் பிற்காலத்தே தாம் வரைந்த சிற்றுரைக்கண் அவ்வாறு அதற்குப் பொருள் கூறக் காணாமையின், அதற்கு அலி எனப் பொருள்கோடல் பொருந்தாமையினைப் பின் உணர்ந்தார்" என்று கூறுகின்றார்.*

## 8. சிவஞான சித்தியார் சுபக்கவுரை

சிவஞான சித்தியார், 'தண்டமிழின் மேலாந்தரம்' என்று பாராட்டப் பெற்ற நூல்.

**சிவத்துக்கு மேல் தெய்வம் இல்லை**
**சிவஞான சித்தியார்க்கு மேல் நூல்இல்லை**

என்ற ஆன்றோர் செய்யுளும் இதன் சிறப்பை விளக்கும்.

இந்த நூல், பரபக்கம் சுபக்கம் என்னும் இரு பகுதிகளை யுடையது.

சுபக்கம் என்னும் பகுதியின் தொடக்கத்தில் 'அளவை இயல்' உள்ளது. அதில் தருக்க நூற் கொள்கைகள் நன்கு விளக்கப்பட்டுள்ளன. பதினான்கு செய்யுட்கள் அளவை இயலில் உள்ளன. முற் காலத்தில் தமிழில் தருக்க நூல்கள் இருந்தன. ஏரணம் என்ற தமிழ்ச் சொல், தருக்க நூலைக் குறிக்கின்றது. பண்டைய தருக்க நெறிக்குச் சான்றாய், சுபக்க அளவையியலில் உள்ள பதினான்கு செய்யுட்கள் உள்ளன.

தமிழரின் சமயச் சிந்தனைகளை முழுமையாகத் தருகின்ற தலைசிறந்த நூலாகத் திகழ்கின்றது. இலக்கண நுட்பம் இலக்கிய

* சிவஞான முனிவர் வரலாறும் நூலாராய்ச்சியும்; பக்கம்–143.

நயம் தருக்க நெறிமுறை சமயக் கொள்கைகளின் செப்பம் ஆகியவற்றை இதில் காணலாம்.

சிவஞான முனிவர், சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கு மட்டும் உரை இயற்றியுள்ளார். இவருக்கு முன்னரே சித்தியாருக்கு நால்வர் உரை இயற்றியுள்ளனர். சிவாக்கிரம யோகிகள், மறைஞான தேசிகர், நிரம்ப அழகிய தேசிகர், ஞானப் பிரகாச முனிவர் ஆகிய நால்வரும் உரை இயற்றினர்.

ஞானப் பிரகாசர் இயற்றிய உரை, சிவசமவாதத்தைத் தழுவியது ஆகலின் அதனைச் சிவஞான முனிவர் மறுத்தார்.

சிவஞான முனிவரின் சித்தியார் உரைக்குச் சுப்பிரமணிய தேசிகர் பதவுரை எழுதி அதனை எளிதாக்கியுள்ளார்.

சிவஞான சித்தியாருக்கு முனிவர் இயற்றியுள்ள உரை, பலவகை அரிய ஆராய்ச்சிக் குறிப்புகளைக் கொண்டதாய்ச் சிறப்புற்று விளங்குகின்றது. சுபக்கக் காப்புச் செய்யுளில் 'மும்மதம்' என்பதற்கு முனிவர் கூறியுள்ள உரை மிகவும் சிறப்பானது.

இவருக்கு முன்னர் 'மும்மதம்' பற்றிப் பல கருத்துக்கள் நிலவிவந்தன. விநாயகக் கடவுளுக்கு முகம் ஒன்றே, யானையின் உறுப்பாக அமைந்திருத்தலின் மும்மதம் என்பது பொருந்தாது என்பர் ஒரு சாரார். மும்மதம் என்பது முச்சக்திகளைக் குறிக்கும் என்பர் வேறொரு சாரார். ஒரு கோடு, இரு செவி முதலியவை உருவகங்கள் அல்ல ஆதலின் மும்மதம் என்பதனை மட்டும் முச்சக்தி என்று உருவகமாகக் கருதுதல் தவறு என்பர் இன்னொரு சாரார்.

சிவஞான முனிவர் இம் மூவகைக் கருத்துகளையும் ஆராய்ந்து, விநாயகக் கடவுளுக்குக் கழுத்திற்குக் கீழே யானை வடிவம் இல்லை என்றும், மும்மதம் உருவகம் அன்று என்றும் எடுத்துக்கூறி, மும்மதம் என்பதில் ஒரு மதமே ஏனைய இரு மதங்களையும் குறிக்கும் என்று விளக்கியுள்ளார்.

இத்தகைய நயமான பகுதிகள் உரைமுழுதும் உண்டு.

## 9. சிவஞான போதப் பேருரை

மெய்கண்டார் இயற்றிய சிவஞானபோதம் சைவ சித்தாந்த சாத்திரங்களுள் மிகவும் சிறந்தது என்று யாவராலும் போற்றப் படுகின்றது. அந் நூலின் சிறப்பை,

**வேதம் பசு,அதன்பால் மெய்ஆ கமம்,நால்வர்**
**ஓதும் தமிழ்வேதம் உள்ஊறுநெய்—போதமிகு**

நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் திறம்

என்ற வெண்பாவால் உணரலாம். இத்தகைய சிறப்பு வாய்ந்த நூலுக்குப் பேருரை ஒன்று பல காலமாய்த் தோன்றாமல் இருந்தது. வடமொழியில் வேதாந்த தத்துவத்திற்குச் சங்கரர், இராமானுசர், மத்துவர் ஆகியோர் தோன்றி, பிரம்ம சூத்திரங்கள், உபநிடதங்கள், பகவத்கீதை ஆகியவற்றிற்குப் பேருரைகள் எழுதியுள்ளனர். இவ்வுரைகள் வேதாந்த தத்துவத்திற்குத் தோன்றியதுபோலச் சைவ சித்தாந்தத்திற்குப் பல காலமாய்ப் பேருரை தோன்றாமல் இருந்தது. பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றிய சிவஞான முனிவர், சிவஞான போதத்திற்குப் பேருரை எழுதி அக்குறையை நீக்கினார்.

சிவஞான முனிவர் இயற்றியுள்ள பேருரை, பல சிறப்புகளை உடையது. சைவ சித்தாந்தப் பொருளைத் தமிழில் இனிது விளக்க வல்ல பெருநூல் இப் பேருரை ஒன்றே. பேருரைசெய்யப் புகுவார்க்குஎல்லாம் நல்லதோர் எடுத்துக்காட்டாய் இப் பெருநூல் விளங்குகின்றது. இப் பேருரையில் மாறுபட்ட கருத்துகளை ஆராய்ந்து அறிந்து, திட்பமான கொள்கையைத் தேர்ந்தெடுத்துத் தெளிவாக விளக்குகின்றார்; மற்றவர் எளிதில் அறிந்து கொள்ள முடியாத நுட்பங்களைப் புலப்படுத்துகின்றார். சுருங்கிய சொற்களால் பொழிப்புத் திரட்டி நயங்கூறிச் செல்லு கின்றார்.

"சிவஞான முனிவர் வடமொழிக் கடலையும் தென்மொழிக் கடலையும் உண்ட பெருங் கொண்டல். அக் கொண்டல் பொழிந்த மழையின் தேக்கம் சிவஞான பாடியம். சிவஞான முனிவரது தத்துவ ஆராய்ச்சி நுட்பத்தை நோக்கும்போது, நீலகண்டரும் சங்கரரும் இராமானுஜரும் மத்துவரும் ஓர் உருக் கொண்டு சிவஞான முனிவராக வந்தனரோ என்றும், அவர் தம் உரைநடையை நோக்கும் போது நக்கீரரும் இளம்பூரணரும் பரிமேலழகரும் நச்சினார்க்கினியரும் ஓர் உருக்கொண்டு அவராகப் போந்தனரோ என்றும் அறிஞர் கருதற்கு இடன் உண்டாகிறது."*

இப் பேருரை தமிழ்மொழி இலக்கணத்தில் ஆழ்ந்த புலமையும் தெளிவும் உடையவர்க்கே நன்கு விளங்கும். இந் நூலில் சுவாமிகளின் இலக்கணப் புலமை மாட்சியையும் ஆராய்ச்சித் திறனையும் காணலாம். திருக்குறள், பன்னிரு திருமுறை ஆகியவற்றின் கனிந்த பொருள் நலத்தை இதில்

* திரு.வி.க. சிவஞானபாடியம் — அணிந்துரை (1936)

காணலாம். தருக்கநூலின் பல முடிபுகள் இதில் இடம் பெறுகின்றன. வடமொழியில்உள்ள வேத ஆகமப் பொருள்களின் திட்பமும் இதில் வெளிப்படுகின்றது. தமிழிலும் வட மொழியிலும் உள்ள சைவ சித்தாந்த நூல்களின் பொருள் தெளிவை இதில் கண்டு மகிழலாம். பல வேறு சமயங்களில் உள்ள சாத்திரங்களின் பிழிவு இதில் உண்டு. பல நூறு சமய நூல்களைக் கற்றுப்பெறும் அறிவை, இவ் வுரை ஒன்றினைக் கற்றே பெறலாம்.

இதுவரை தமிழ்மொழியிலும் வடமொழியிலும் எழுதப் பட்டுள்ள மாபாடியங்கள் எல்லாவற்றுள்ளும் சிறந்ததொரு நூலாய் இப்பேருரை விளங்குகின்றது. ஆதலின் சுவாமிகளை மாபாடியச் சிவஞான யோகிகள் என்று போற்றுவர்.

சைவ சமாஜம் 1936-இல் வெளியிட்ட சிவஞான மாபாடியம் அணிந்துரையில் தமிழ்த் தென்றல் திரு. வி. க. பின்வருமாறு சிவஞான முனிவரைப் புகழ்கின்றார்:

“மெய்கண்டார் அருளிய சிவஞான போதத்தின் அகத்தைத் திறந்து காட்டவல்ல திறவு கோல், சிவஞான முனிவர் உரையே என்று கூறலாம். இவ் வுண்மை, மூலத்தையும் உரையையும் ஒருங்குவைத்து ஆராய்வோருக்கு நன்கு புலனாகும். சிவஞான முனிவர், நுண்ணுடல் கொண்டு மெய்கண்டாருடன் பேசிப் பேசி உரை வரைந்தனரோ என்று நினைக்குமாறு அவர்தம் உரை அமைந்திருக்கிறது.

“சிவஞான முனிவரை அறிவுப் பிண்டம் என்று கூறல் மிகையாகாது. கலைகள் எல்லாம் சிவஞான முனிவராகத் தோன்றின போலும். தருக்கமும் வியாகரணமும் இலக்கியமும் இலக்கணமும், தமிழ்ச் சிவஞான முனிவருக்குப் பணியாட் களாகித் துணைபுரியத் தவம் கிடந்தனவோ, என்னவோ தெரியவில்லை”

இந்த நூல் இனிய செந்தமிழில் ஆனது. இதிலுள்ள ஒவ்வொரு சொற்றொடரிலும் சொல்லிலும் தமிழ்ச்சுவை பொங்கித் ததும்புகின்றது. வடமொழிச் சொல்லும் சுலோகமும் மேற்கோளும் அம் மொழியில் உள்ளவாறே எழுதப்பெறாமல் தமிழ்மரபுக்கும் ஒலிக்கும் ஏற்றவாறு அமைக்கப்பெற்றுள்ளன. சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்ற ஐந்து அவத்தைக்கும் தனித்தமிழ்ச் சொற்களை அமைத்துத் தந்த பெருமை சிவஞான முனிவர்க்கே உரியதாகும். நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்குதல் என அவற்றைத் தமிழ்ச் சொற்களாக்கியுள்ளார்.

சிவஞான முனிவர் மிக நயமாகவும் நுட்பமாகவும் உரை எழுதுபவர் என்பதற்குச் சிறப்புப்பாயிரச் செய்யுள் உரையே சிறந்த சான்றாக உள்ளது. அச் செய்யுளில்வரும் 'மாயிருள்' என்பதற்கு முனிவர் நுட்பமாகப் பொருள் கூறியுள்ளார். இருளானது அக இருள், புற இருள் என இரு வகைப்படும். புற இருள் கதிரவனால் மாயும்; அக இருள் மாயாது. ஆதலின் புறஇருளைக் கூறுங்கால் அதனை 'மாயிருள்' என்றார் என்றும், அக இருள் சிவஞானபோதத்தால் மாய்க்கப்படும் என்றும் குறிப்பாகக் கூறுகின்றார்.

தமது கருத்தை இனிது விளக்கப் பல உவமைகளை எடுத்துக் காட்டியுள்ளார்.

"தன் நாடு பகைவரால் அழிவின்றி நிலைபெறுத்துதல் அரசன் தொழில் ஆனாற்போல"

"தண்ணீர்க் குடம் நிலைபெறுதல் அதனைத் தாங்கிச் செல்வோனது முயற்சியின்றி அமையாதவாறுபோல" (பிராண—2)

என்பனபோன்ற இனிய உவமைகளை உரை முழுவதும் காணலாம்.

சிவஞான முனிவர் தம் இலக்கணப் புலமை தோன்ற உரை எழுதும் இடத்திற்கு எடுத்துக்காட்டுகள் பல தரலாம்.

**அவையே தானும் ஆயிரு வினையின்**
**போக்கு வரவு புரிய ஆணையின்**
**நீக்கம் இன்றி நிற்கும் அன்றே**

**(இரண்டாம் சூத்திரம்)**

என்ற சூத்திரத்தின்கீழ், பின்வருமாறு இலக்கணக் குறிப்புத் தருகின்றார்:

"ஆணையின் என்பது சிங்க நோக்காய், இருவினை என்பதனோடும், நீக்கம் இன்றி நிற்கும் என்பதனோடும் இயைந்து பொருள்தந்து நின்றது. ஆண்டு இன் உருபு இருவினை என்பதனோடு இயையுங்கால் நீக்கப் பொருட் கண்ணும் வந்தது. இன் என்பது சாரியை எனக்கொண்டு ஈரிடத்தும் ஏற்கும் உருபுகள் விரித்து உரைத்தலும் ஒன்று. அன்றே—அசை. அநாதியே இவ்வாறு நிற்கும் எனினும் அமையும்; ஆய்ப் புரிய நிற்கும் எனக் கூட்டுக."

சமயக் கருத்துக்களை விளக்கும் தொடர்மொழி, சொல் ஆகியவற்றிற்குச் சிவஞான முனிவர் சிறந்த விளக்கம் தருகின்றார். சில சொற்களின் பொருள் விளக்கம் பின்வருமாறு:

மூலமலம் காரிய வேறுபாட்டான் எழு வகைப்படும். அவையாவன: மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என்பனவாம்.

**மதம்:** தன்னால் எய்தப்படும் அரிவையைத் தானே கொண்டாடிப் புகழ்ந்து இவளின் மேற்பட்ட மகளிர் உலகத்து இல்லை என மதித்தற்கு ஏதுவாயது.

**அராகம்:** அவள்பால் மேன்மேலும் ஆசை மிகுதற்கு ஏதுவாயது.

**கவலை:** ஊழ்வலியால் அவளைத் தணந்தவழிக் கண்ணீர் விட்டு அழுது பெரிதும் துன்பமுற்றுக் கவலுதற்கு ஏது வாயது.

**தாபம்:** அதனால் உள் வெதும்பித் தவித்தற்கு ஏது வாயது.

**வாட்டம்:** அங்ஙனம் அலறியும் ஆற்றியும் உள்வெதும்பு தலான் மூர்சையுற்று உள்ளமும் உடம்பும் வாடுதற்கு ஏதுவாயது.

**விசித்திரம்:** தான் பெற்ற உலக வாழ்க்கையை நோக்குந் தோறும் இவர் எமக்கு உரிமைச் சுற்றத்தார்; இவள் உரிமையுடைய மனைவி; ஆடை, அணி, பொன் முதலிய செல்வங்களில் குறைவில்லை; மனை, கழனி முதலிய நிலங்களில் குறைவில்லை ஆகலான் எனக்கு இனிப் பெறக்கடவது என்னை எனவும், என் குடும்பத்தைப் புரப்பவர் யாவர் எனவும் இவ்வாறு பல வேறு வகைபடச் சிந்தை செய்தற்கு ஏதுவாயது.

சிவஞான முனிவர் ஞானாமிர்தக் கோவையிலிருந்து பல எடுத்துக்காட்டுகள் தந்து விளக்கிச் செல்லுகின்றார். அக் கோவைக்குப் பழையவுரை ஒன்று உள்ளது. சிவஞான முனிவர் அவ்வுரையைச் சில இடங்களில் மறுத்துக் கூறுகின்றார். ஆதலின் அவ்வுரை முனிவர்க்கு முன்னரே வழக்கில் இருந்தது அறியப்படும்.

சிவஞான முனிவரின் புலமை முதிர்ச்சியை—ஆராய்ச்சித் திறத்தை—கல்விக் கடலின் ஆழத்தை—இப் பேருரையில் காணலாம். பல இலக்கண உரையும், மறுப்புரையும் எழுதிய பின்னரே இப் பேருரை இவரால் எழுதப்பட்டது. இவரே இப் பேருரையில் இலக்கணக்குறிப்புக்களை விளக்கும்போது, "சூத்திர விருத்தியுள் உரைத்தாம். ஆண்டுக் காண்க" என்று குறிப்பிடுகின்றார்.

சிவஞான முனிவரின் ஆற்றலை—அறிவை—ஆராய்ச்சியைக் காலந்தோறும் உலக மக்களுக்கு எடுத்து விளக்கிப் பறைசாற்றும் இனிய நூலாய் இப் பேருரை விளங்கும்.

சைவமும் தமிழும் தழைத்தினிது ஓங்க விரும்பும் திரு.வி.க. பின்வருமாறு போற்றியுரைக்கின்றார்:

"சிவஞான பாடியம் தத்துவ ஆராய்ச்சிக்கு ஒரு கருவூலம் போலத் துணைபுரியும்; தமிழ் பயில்வோர்க்கும் அவ்வாறே துணை செய்யும். சிவஞான பாடியம் தமிழ்ச் செல்வம்; கற்பகம்; காமதேனு. அது வேண்டுவதை உதவும். இத் துணைச் சிறப்பு வாய்ந்த திராவிடமாபாடியம் ஒவ்வொரு தமிழரிடத்திலும் மிளிர்தல் வேண்டுமன்றோ? தமிழ் வாழ்க. சிவநெறி வாழ்க. சிவஞான முனிவர் சேவடி வாழ்க."

## பாரதியாருக்குக் கிடைத்த புதையல்

ஏட்டுச்சுவடியில் இருந்த சிவஞான மாபாடியத்தை *1906*-ஆம் ஆண்டில், மதுரை-விவேகபானு பதிப்பகம் வெளியிட்டது. அந்த அச்சு நூலுக்கு, புரட்சிக்கவிஞர் சி. சுப்பிரமணிய பாரதியார் 'இந்தியா' இதழில் (சென்னை-டிசம்பர்-22, 1906) கீழே உள்ளவாறு மதிப்புரை எழுதியுள்ளார்:

"இப்புத்தகத்தை நாம் மிக ஆவலுடன் படித்தோம். மதுரை 'விவேகபாநு' ஆபீஸிலிருந்து நமக்கு அனுப்பப்பட்டது.

தமிழிலே நல்ல பழக்கமுடைய எல்லோரும் நெடுங் காலமாக இது எப்போது வெளியாகுமோ என்று, யூத ஜாதியார் மேஸையாவின் வரவுக்குக் காத்திருப்பதுபோலக் காத்துக் கொண்டிருந்தார்கள்.

தமிழ்ப் பாஷையிலே மிகுந்த பயிற்சியில்லாத நாம் கூட இளமை முதலாக, "ஐயோ, சிவஞான முனிவர் செய்திருப்பதாகச் சொல்லப்படும் 'ஆதி திராவிட மஹாபாஷ்யம்' என்ற அரிய நூலை, திருவாவடு துறை ஆதீனத்தார் உலகம் அறியாமல் மூடி வைத்திருக்கின்றார்களாமே? அது எத்தனை அருமையுடையதாய் இருக்குமோ எப்போதுதான் வெளிவருமோ?" என்று பலமுறை பெருமூச் செறிந்திருக்கின்றோம்.

இப்போது, அருமையான நூலைக் குறைந்தவிலையில் அச்சிட்டனுப்பியதன் பொருட்டு விவேகபாநு ஆபீஸாருக்கு மிகவும் நன்றி செலுத்துகிறோம். இந்நூல் நாம் எதிர்பார்த்திருந்ததற்குச் சிறிதேனும் பெருமையிலே குறைவுபடாது விளங்குகிறது.

இன்னும் சில பகுதிகள், பிரசுரித்தோருக்குக் கிடையாமல் போய்விட்டமை பற்றி விசனமுறுகின்றோம்.

இந்நூலிலே விஷயங்கள் சைவசித்தாந்த மார்க்க சம்பந்தமானதால், அவற்றைப்பற்றிப் பெருமையாக விவரிப்பது பொது ஜனங்களுக்கு ஒருவேளை விரஸமாய் இருக்குமென்று அஞ்சி,

அங்ஙனம் செய்யாது விடுகின்றோம். எனினும், சைவ சித்தாந்திகள் முதலிய எல்லா வகுப்பினருக்கும் தமிழறிவுள்ள அனைவரும் அதை ஆவலுடன் ஆதரவு செய்வார்கள் என்று உறுதியாக நம்புகிறோம்."*

இந்த மதிப்புரையில், நூலின் சில பகுதிகள் கிடைக்காமல் போனது பற்றி வருத்தமுறுவதாய்க் கூறியுள்ளார், பாரதியார். ஆனால், பிற்காலத்தில் அக்குறை நீங்கியது. கிடைக்காத பகுதிகள் கிடைத்தன. நூல் முழு வடிவம் பெற்றுப் பல பதிப்புகள் வெளி வந்துள்ளன.

* பாரதி தரிசனம்; (என்.சி.பி.எச், சென்னை) 1986. பக் – 447, 448.

# 10

# நன்னூல் உரையாசிரியர்கள்

## 1. நன்னூல் உரைகள்

தொல்காப்பியத்திற்குப் பிறகு தோன்றிய இலக்கண நூல்களுள், பவணந்தியார் இயற்றிய நன்னூலே தலைமையும் செல்வாக்கும் பெற்றுச் சிறந்து விளங்குகின்றது. சுருக்கமும் செறிவும் இந்நூலின் தனிச் சிறப்பியல்புகளாகும். இந் நூலிலிருந்து இலக்கண விளக்க ஆசிரியர் 250 சூத்திரங்கள் வரை எடுத்துத் தம் நூலில் சேர்த்துள்ளார். இலக்கணக் கொத்தின் ஆசிரியராகிய சாமிநாத தேசிகர் "முன்னோர் ஒழியப் பின்னோர் பலரினுள் நன்னூலார் தமக்கு எந்நூலாரும் இணையோ என்னும் துணிவே மன்னுக" என்று வாயாரப் புகழ்கின்றார்.

**நேமிநா தத்தால் நிலைதெரியாச் சொற்புணர்ச்சி**
**காமர் நன்னூற் சூத்திரத்தாற் காட்டிடீர்**

என்று திருத்தணிகையுலா போற்றுகின்றது.

பவணந்தியார் சமணத் துறவி. சனகை என்னும் ஊரில் பிறந்தவர். சீயகங்கன் என்னும் குறுநில மன்னன் வேண்டுகோளின்படி, பவணந்தியார் நன்னூலை இயற்றினார். சீயகங்கன் மூன்றாம் குலோத்துங்கனுக்கு *(1178-1216)* உட்பட்ட சிற்றரசன். எனவே, நன்னூலார் பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர்.

நன்னூலுக்குக் காலந்தோறும் பல உரைகள் தோன்றியுள்ளன. ஒவ்வோர் உரைக்கும் ஏதேனும் தனிப்பட்ட சிறப்பியல்பு இருக்கின்றது. நன்னூலுக்கு முதன் முதலில் தோன்றிய உரை மயிலைநாதர் உரையேயாகும். மயிலைநாதர் நன்னூலார் காலத்தை அடுத்துத் தோன்றியவர். இவர் நன்னூலார் கருத்தை ஒட்டி உரைசெய்து, சுருங்கச் சொல்லி விளங்க வைக்கின்றார். இவ்வுரையைக் காண்டிகையுரை என்றும் வழங்கினர். மயிலைநாதர் சமணர் ஆதலின், இவரது உரையில் சமணச் சார்பான மேற்கோளும் உதாரணமும் இடம் பெற்றுள்ளன.

இவ்வுரை பதினேழாம் நூற்றாண்டு வரை (ஏறத்தாழ நானூறு ஆண்டுகள்) செல்வாக்குப் பெற்று விளங்கியது.

சமணர் இயற்றிய உரையைச் சைவர்கள் கற்கத் தயங்கினர். சமணச்சார்புடைய உதாரணங்களையும் மேற்கோள் பாடல்கலையும் கற்கும்போது விருப்பமின்றிக் கற்றனர். இத்தகைய எதிர்ப்புணர்ச்சி, பதினேழாம் நூற்றாண்டில் நன்னூலுக்குப் புதிய உரை ஒன்று தோற்றுவிக்கும் எண்ணத்தைச் சைவ உலகில் உண்டாக்கிற்று. இலக்கணக் கொத்தின் ஆசிரியர், "சேற்று நிலத்தில் கவிழ்ந்த பால், தேன், நெய் முதலியனவும் சேறானாற் போல், நன்னூற் சூத்திரமும் அவ்வுரையுடனே கலந்து குற்றப் பட்டது என்க" என்று மயிலைநாதர் உரையைக் கடிந்தார்; தம் மாணவராகிய சங்கர நமச்சிவாயரை நன்னூலுக்கு வேறுரை எழுதுமாறு தூண்டினார். சங்கரநமச்சிவாயர் சைவ சித்தாந்தங் களையும் திருமுறைகளையும் நன்கு ஓதி உணர்ந்தவர். நன்னூலுக்கு உரைஎழுதத் தொடங்கி, தம் உரை எங்கும் சைவமணம் கமழும்படி செய்தார். மேற்கோளும் உதாரணமும் சைவ சமயச் சார்புடையனவாகக் காட்டினார். இவ்வுரை தோன்றியபின், மயிலைநாதர் உரை செல்வாக்கிழந்து ஒதுங்கியது. சங்கர நமச்சிவாயர் நன்னூலுக்கு இயற்றிய விருத்தியுரை எங்கும் பரவியது.

சங்கர நமச்சிவாயருக்குப்பின் தோன்றிய சிவஞான முனிவர், நன்னூல் விருத்தியுரையில் சில இடங்கள் போதிய அளவு விளக்கம் இல்லாமல் இருப்பதை உணர்ந்து புதிய பகுதிகள் பலவற்றை எழுதி, விருத்தியுரையின் நடுவே சேர்த்துப் புதுக்கினார். சிவஞானமுனிவர் புதுக்கிய உரை 'புத்துரை' என்ற பெயருடன் இலக்கண ஆராய்ச்சி நூலாய்ச் செல்வாக்குப் பெற்று விட்டது. சங்கர நமச்சிவாயர் உரையையும் வென்று அவ்வுரை விளங்குகின்றது.

சிவஞான முனிவரின் விருத்தியுரை இருநூறு ஆண்டுகள் தனிப்பெருமையுடன் ஒப்பும் உயர்வும் இன்றி விளங்கி வந்தது. 19, 20-ஆம் நூற்றாண்டுகளில் கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் இலக்கணம் கற்கும் மாணவர்களுக்கு ஏற்ற எளிய இலக்கண நூல்கள் தேவைப்பட்டதால் பலர் நன்னூல் விருத்தி யுரையைத் தழுவி, சுருக்கமாகவும் தெளிவாகவும் எளிமையாகவும் காலத்திற்கேற்ற பல புதிய உதாரணமும் மேற்கோளும் தந்து காண்டிகை யுரைகளை இயற்றினர். முகவை இராமாநுசக் கவிராயர், ஆறுமுக நாவலர், விசாகப் பெருமாள் ஐயர், சடகோபராமாநுசாச்சாரியார், பவானந்தம் பிள்ளை ஆகியோர்

இயற்றிய நன்னூல் காண்டிகை உரைகள் தமிழ்கற்கும் மாணவர் களுக்காக எழுதப் பட்டவை.

## 2. மயிலைநாதர்

நன்னூலுக்கு முதன்முதலில் உரை எழுதிய பெருமை மயிலைநாதரைச் சாரும். இளம்பூரணருக்குரிய சிறப்புகள் யாவும் இவருக்கும் உரியவையாகும். தொல்காப்பியத்திற்குப் பின் தோன்றிய இலக்கண நூல்களில் நன்னூல் தமிழ்மொழி மரபைக் காத்தது எனில், அந் நூலினை நன்கு தெளிந்து, நூலாசிரியர் கருத்தை அறிந்து காலத்திற்கு ஏற்ற புதுக் கருத்துகள் கூறிய பெருமை மயிலைநாதருக்கு உண்டு. தொல்காப்பியர் கொள்கையி லிருந்து, நன்னூலார் தம் காலத்திற்கு ஏற்ற திருத்தங்களைச் செய்து, பழையன நீக்கிப் புதியன ஏற்றார் எனில் நன்னூலாரின் ஆக்கத்திறனை உலகறியச் செய்தவர் மயிலைநாதர் என்னலாம். புதிய நூலின் போக்கை அறிந்து முதன்முதலில் உரை வகுப்பது என்பது அத்துணை எளிய செயல் அன்று. அவ்வாறு செய்தவர், பழமைக்கும் புதுமைக்கும் பாலம் அமைக்கும் திருப்பணியைச் செய்தவர் என்னலாம். பழையன நினைந்து, புதியன பேணி இலக்கண நெறியினைக் காக்கும் உரையாசிரியரின் பணி மிகப் பெரியதாகும்.

மயிலைநாதர் சிற்சில இடங்களில் உரைப்பாரும் உளர்; கூறுவாரும் உளர் என்று குறிப்பிடுவதால் இவருக்கு முன்னும் வேறு ஏதேனும் உரை நன்னூலுக்கு இருந்ததோ என்ற ஐயம் எழுகின்றது.

### வரலாறு

மயிலைநாதர் சமணசமயத்தைச் சேர்ந்தவர். மயிலை என்ற பெயர், இப்போது மயிலாப்பூர் என வழங்குகின்றது. மயிலையில் முன்பு இருந்த சினாலயத்தில் எழுந்தருளி இருந்த 22ஆம் தீர்த்தாங்கரரான நேமிநாதருடைய திருநாமம் ஆகும். இவ்வுரையாசிரியர், சமண சமயக் கருத்துகளைப் பல இடங்களில் எடுத்துக்காட்டுகின்றார்: அச் சமய நூல்களிலிருந்து பல மேற் கோள்கள் தருகின்றார்: அருகதேவனைப் பெரிதும் போற்று கின்றார்.

இவர், நன்னூலை ஆக்குவித்த சீயகங்கன் காலத்திலோ அவன் வழித்தோன்றல்களின் காலத்திலோ வாழ்ந்திருந்தார் என்று கருதத்தக்க சான்றுகள் சில உள்ளன.

சிறப்புப பாயிரத்தில்,

**கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்**
**திருந்திய செங்கோற் சீய கங்கன்** (15. 16)

என்ற வரிகளுக்கு உரை எழுதும்போது சீயகங்கனை மிகவும் பாராட்டி யுள்ளார். "பல்வகைத் தாதுவின்" என்னும் சூத்திரத்தின் உரைக் கீழ், கங்கனைப் புகழும் இனிய வெண்பா ஒன்றினைக் காட்டுகின்றார். கங்கன் என்ற பெயரை இரண்டு இடங்களில் *(110, 275)* உதாரணம் காட்டுகின்றார்.

இவற்றை எல்லாம் நோக்கும் போது நன்னூலை ஆக்குவித்த சீயகங்கனாலோ அவன் வழித் தோன்றல்களில் ஒருவனாலோ மயிலைநாதர் ஆதரிக்கப்பெற்றிருத்தல் வேண்டும். இஃது உண்மை யாயின், இவர் வாழ்ந்த இடம் கொங்கு நாடு என்னலாம்.

## உரையின் இயல்பு

மயிலைநாதர் எழுதிய உரை, சுருக்கமும் தெளிவும் வாய்ந்தது. சில ஏட்டுப் பிரதிகளின் இறுதியில், "காண்டிகையுரை முற்றிற்று" என்று எழுதப்பட்டிருந்ததாய், இதனைப் பதிப்பித்த டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் குறிப்பிடுகின்றார். ஆழமான நீர்நிலையில் அமைதியாகச் செல்லும் படகு போன்று இவருடைய உரை, நூல் முழுதும் அமைந்துள்ளது.

பாயிரவுரை, இறையனார் அகப்பொருள் பாயிர வுரையின் எதிரொலியாக உள்ளது. ஏனைய பகுதிகள் இளம்பூரணர் உரையையும் அவிநய உரையையும் பின்பற்றிச் செல்லுகின்றன. பிறர் கருத்தைச் சுட்டுவதோடு நிற்கும் இவ்வுரையாசிரியர், தம் கருத்தை வலியுறுத்தத் தயங்குவதும் இல்லை; மாறுபட்ட கருத்துகளை மதித்துப் போற்றுவதும் உண்டு.

பழைய இலக்கியங்களிலிருந்து சில பாடற் பகுதிகளை உரை நடையாக்கி மேற்கோளாகத் தருகின்றார். நயமான எதுகை மோனைகள் அமைந்த தொடர்களைக் கற்கவும், நினைவில் கொள்ளவும் ஏற்றவாறு அமைத்துள்ளார்.

வடமொழிக் கருத்துகளை மிகக் குறைவாகவே சுட்டுகின்றார். "வடமொழிக்கு இரண்டல்லாத எல்லாம் பல என்றும், தமிழுக்கு ஒன்றல்லாத பல என்றும் அறிக" *(396)*; "வடமொழி முதலான பிற கலைக் கடல்களுள்ளும்" *(459)* என்பவை குறிப்பிடத்தக்க இடங்களாகும்.

## உரைத்திறன்

மயிலை நாதரின் உரைத்திறனால், நன்னூலார் சுருக்கமாகச் சொல்லியுள்ள சூத்திரக் கருத்து, விளக்கம்பெற்றுச் சிறக்கின்றது.

'இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்' (403) என்பதற்கு மயிலைநாதர், 'உலகத்துப் பொருள்கள் எல்லாம் இயற்கைப் பொருளும் செயற்கைப் பொருளும் என இரு வகையவாம். அவற்றுள், இயல்பாக வராநின்ற பொருளைச் சொல்லுமிடத்து இத்தன்மையது என்று சொல்ல வேண்டும்' என்று உரை கூறுகின்றார்.

**துய்த்தல் துஞ்சல் தொழுதல் அணிதல்**
**உய்த்தல் ஆதி உடல்உயிர்த் தொழிற்குணம் —452**

என்ற சூத்திரத்திற்கு இவர், பின்வருமாறு விரிவாக உரை எழுது கின்றார்.

'மெய், வாய், மூக்கு கண், செவி என்னும் ஐம்பொறிகளானும் ஊறு, சுவை, நாற்றம், ஒளி, ஒலி என்னும் ஐம் புலன்களையும் நுகர்தலும்; உறங்குதலும், பிறரைத் தொழுதலும், வேண்டினவற்றை அணிதலும்; மடைத்தொழில், உழவு வாணிகம், கல்வி, எழுத்து, சிற்பம் என்னும் ஆறு தொழில்களையும் முயல்தலும் இவை போல்வன பிறவும் உடம்போடு கூடிய உயிர்த் தொழிற் பண்பாம்.'

**பல்வகை வடிவுஇரு நாற்றம்ஐ வண்ணம்**
**அறுசுவை ஊறுஎட்டு உயிரல் பொருட்குணம் –453**

என்ற சூத்திரத்திற்கு நல்ல விளக்கமாய், பின்வரும் மயிலை நாதர் உரைப்பகுதி அமைகின்றது;

"சதுரம், ஆய்தம், வட்டம், முக்கோணம், சிலை, துடி, தோரை, முழா, எறும்பு, கூன், குறள் முதலான வடிவுகளும்,

நன்றும் தீதும் ஆன இருவகை நாற்றமும்,

வெண்மை, செம்மை, கருமை, பொன்மை, பசுமை ஆன ஐந்து வண்ணங்களும்,

கைப்பு, புளிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, காழ்ப்பு, தித்திப்பு என்னும் ஆறு சுவைகளும்,

வெம்மை, தண்மை, மென்மை, வன்மை, திண்மை, நொய்மை, இழும்எனல், சருச்சரை என்னும் எட்டு ஊறும் உயிரில்லாத பொருட்பண்பாம்."

## இலக்கணக்குறிப்பும் ஆராய்ச்சியும்

"முற்காலத்திற் கண்ட இலக்கியங்கட்கே இலக்கணம் இயம்பலின்" (140) என்று இவர் குறிப்பிடுவதால், இலக்கணம் பற்றி இவர் கொண்ட கருத்துத் தெளிவாகின்றது.

இலக்கணச் சூத்திரங்கள் நிற்கும் நால்வகையினைக் குறித்துப் பின்வருமாறு விளக்கம் எழுதுகின்றார்:

"ஆற்றுஒழுக்கு என்பது, ஆற்றுநீர் தொடர்பறாது ஒழுகுமாறு போலச் சூத்திரங்களும் தம்முள் இசைபுட்டொழுகுவது. அரிமாநோக்கம் என்பது சிங்கநோக்கம். சிங்கம் நோக்குமிடத்து முன்னையாரையும் பின்னையாரையும் நோக்குவதுபோல இறந்த சூத்திரத்தினோடும் எதிர்ந்த சூத்திரத்தினோடும் இயைபுபடக் கிடப்பது. தவளைப்பாய்த்தென்பது, தவளை பாய்கின்றவிடத்து இடையிடை நிலம் கிடப்பப் பாய்வதுபோலச் சூத்திரம் இடையிட்டுப் போய் இயைபு கொள்ளுவது. பருந்தின் விழுக்காடு என்பது பருந்து நடுவே விழுந்து, தான்கருதும் பொருளை எடுத்துக் கொண்டு போவதுபோல இதுவும் முடிக்கப்படும் பொருளை முடித்துப்போம் இயைபினது" *(18)*.

அகரம் முதலில் வைக்கப்பட்டதற்கு இவர்கூறும் காரணம் சுவையானது:

"அகரம் தானே நடந்தும், நடவா உடம்பை நண்ணியும் நடத்தலானும், அரன், அரி, அயன், அருகன் என்னும் பரமர் திருநாமத்திற்கு ஒரு முதலாயும், அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருளின் முதற்பொருட்கும், அருள், அன்பு, அணி, அழகு முதலாயின நற்பொருட்கு முதலாயும் வருதலானும் முன் வைக்கப் பட்டது" *(72)*.

'மக்கள் தேவர் நரகர் உயர்திணை' *(260)* என்னும் சூத்திரத்தின் கீழ் மயிலைநாதர், "தேவரை முன்வையாது இவ்வாறு வைத்த காரணம் என்னையோ எனின், மக்களுள் பிறந்தே தானமும் தவமும் இயற்றி வானமும் வீடும் எய்தற் சிறப்பினான் முன்னே மக்களையும் அவ்வாறல்லது எய்தற்கு அருமைச் சிறப்பினான் அவர்பின்னே தேவரையும், தீவினையால் வருதல் இழிபினான் அவர்பின்னே நரகரையும் வைத்தார் என்க" என்று எழுதுகின்றார்.

அவன், அவள், அவர் என்பவை பகாப்பதம் என்பது இவர் கருத்து:

"அவன், அவள், அவர் என்றற்றொடக்கத்தன ஈறு பகுக்க வேறு பால் காட்டலின் பகுபதமாம்பிற எனின், அவை ஒன்றாய் நின்று ஒருபொருள் ஆவதல்லது ஈறுபிரித்தாற் பகுதிவேறு பொருள்படாமையின், அவற்றிற்குப் பகுதி விகுதித்தன்மை இன்மையின் ஆகா என்க" *(130)*.

'இறப்பு, எதிர்வு, நிகழ்வு எனக் காலம் மூன்றே' *(381)* **என்னும்** சூத்திர உரையில் காலத்தைப்பற்றி, பலவேறு கொள்கைகளை விளக்குகின்றார்:

'இறப்பு, நிகழ்வு, எதிர்வு என முறையிற் கூறாராயது காலமென ஒரு பொருள் இல்லை என்பாரும், நிகழ்காலம் ஒன்றுமே என்பாரும், இறந்ததும் எதிர்வதூஉம் என இரண்டென் பாரும், இறப்பு, நிகழ்வு, எதிர்வு என மூன்று என்பாரும் இப் பகுதி யார் ஆசிரியர். அவருள் காலம் இல்லை என்பார், ஒருபொருள் நிகழுமிடத்துப் பொருண்மைப் பேறல்லது காலம் என்று வேற்றுணர்வும் பிறவும் படுவதில்லை என்ப. இனி, காலம் ஒன்று என்பா.ர், யாறு ஒழுகும், மலை நிற்கும் என உள்ள பொருள் ஒரு காலத்தானே சொல்லப்படும், பிறிதில்லை என்ப. இறப்பும் எதிர்வும் என இரண்டென்பார் கோல் ஓடும் கால் சென்றதூஉம் செல்வதூஉம் அன்றே? அதனால், நிகழ்வில்லை என்ப. மூன்று என்பார் நெருநல், இன்று நாளை என்றும்; வந்தான், வாராநின்றான் வருவான் என்றும் இவ்வாறு சொற்கள் மூன்று காலமும் காட்டுதலின் மூன்று என்ப.'

இவ் விளக்கம் புலமைக்கு விருந்தாய் அமைகிறது.

'ந' என்பது சிறப்புப் பொருட்டு: பெயர் முன் அடுத்து வரும்; நக்கீரர், நச்செள்ளையார், நப்பாலத்தனார், நப்பின்னை, நந்நாகனார், நக்கடகம் எனக் காண்க" என்ற விளக்கம் நினைத்து மகிழ்தற்குரியது (420).

உரிச்சொல்லை விளக்கும்போது, 'உரிய சொல் யாது, அஃது உரிச்சொல்' என்று கூறுகின்றார்.

### புலவரைப் போற்றுதல்

புலவர் பெருமக்களின் பெயர்களைச் சிறப்பான அடை மொழிகள் தந்து பெருமையுடன் குறிப்பிடுவதும் இவர் இயல்பு.

**மிகத் தெளி கேள்வி அகத்தியனார்**
**ஒல்காப் புலமைத் தொல்காப்பியனார்**
**அளவறு புலமை அவிநயனார்**
**புவிபுகழ் பெருமை அவிநயனார்**
**உளங்கூர் கேள்வி இளம்பூரணர் எனும்**
**ஏதமில் மாதவர்**
**தண்டலங் கிழவன் தகைவரு நேமி**
**எண்டிசை நிறைபெயர் இராச**
**பவித்திரப் பல்லவ தரையன்**

என்பவை இவர் கூறும் சிறப்பு மொழிகளில் சில.

### நூல்கள்

இவர் தம் காலத்தில் வழங்கிய பல நூல்களைக் குறிப் பிடுகின்றார்.

"ஐம்பெருங் காப்பியம், எண்பெருந் தொகை, பத்துப் பாட்டு, பதினெண்கீழ்க் கணக்கு என்னும் இவ்விலக்கியங்களுள்ளும்" (387) என்று இவர் கூறுவதிலிருந்து, இப்பெயர்களும் பகுப்புகளும் பழைமையானவை என்று அறியலாம்.

கீழ்வரும் உரைப்பகுதி, நூல்களுக்குரிய பெயர்கள் எவ்வெக் காரணம்பற்றி வழங்கின என்பதை உணர்த்தும்.

"முதல் நூலாற் பெயர் பெற்றன ஆரியபடலம், பாரதம் முதலாயின. கருத்தானாற் பெயர்பெற்றன அகத்தியம், தொல் காப்பியம் முதலாயின. அளவினாற் பெயர் பெற்றன பன்னிரு படலம், நாலடி நானூறு முதலாயின. பகுதியாற் பெயர் பெற்றன தளவியல் முதலாயின. செய்வித்தோனாற் பெயர் பெற்றன சாதவாகனம், இளந்திரையம் முதலாயின. தன்மையாற் பெயர் பெற்றன சிந்தாமணி, சூளாமணி, நன்னூல் முதலாயின. இடுகுறியாற் பெயர் பெற்றன. நிகண்டு நூல், கலைக்கோட்டுத் தண்டு முதலாயின."

எச்சங்களின் வகையும் முடிபும் உணர்த்துகின்ற சூத்திரத் திற்கு (329) உரையும் விளக்கமும் எழுதியபின், குறட்பாக்களுக்கு (308, 392, 341, 485, 342, 407, 281, 488, 10, 332, 475, 496) இவர் உரை எழுதி விளக்குகின்றார். இவர் கூறும் உரை பரிமேலழகர் போன்ற திருக்குறள் உரையாசிரியர் கருத்திற்கு மாறுபட்டுச் சில இடங் களில் உள்ளது. அவற்றை ஒப்பிட்டுக் கற்பது, இன்பந்தரும் செயலாகும்.

மயிலை நாதர் காலத்தில் 'பாட்டியல்' என்று தனி இலக் கணம் தோன்றவில்லை என்று கருதச் சான்று உண்டு. "எழுத்துச் சொற்பொருள் யாப்பணி என்பன, அச்சொல்லப்பட்ட பொருள் களை உணர்த்தின் இயற்பெயராம்" என்று இவர் ஐந்திலக்கணமே குறிப்பிடுகின்றார் (289).

## உரைதந்த ஒளி

மயிலைநாதர் உரையினை இலக்கணப் புதையல் என்னலாம். இவ்வுரையால் பலப்பல புதிய செய்திகள் வெளிவந்தன. நன்னூல் ஐந்திலக்கணம் கூறும் ஐந்து அதிகாரங் களைக் கொண்ட பெருநூல் என்பது இவ் உரையால் தெரிந்தது. நன்னூலின் பொதுப்பாயிரம் பவணந்தியார் செய்தது என்று வழிவழியாக நம்பிவந்த கருத்து, வலிவிழந்தது இவ்வுரையால்தான்.

அவிநயம் என்னும் நூலைப்பற்றியும் அதன் உரையாசிரி யரைப்பற்றியும் பல அரிய கருத்துகள் வெளிப்பட்டன. உரை நடையாக வழங்கிவரும் இலக்கணவாக்கியங்களுக்குரிய பழைய

2-36

சூத்திரங்கள் சில தெரிந்தன. உரையாசிரியராகிய இளம்பூரணர் துறவி என்று தெரிந்தது. மறைந்து போன பல தமிழ் நூல்களின் பெயரும் அவற்றின் சில பகுதிகளும் வெளிப்பட்டன.

## நன்னூல்–ஐந்திலக்கண நூல்

எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐந்திலக் கணமும் நன்னூல் கூறிற்று என்பதற்கு மயிலை நாதர் உரையில் சான்றுகள் உள்ளன.

1. சொல்லதிகாரத்தில், முச்சக நிழற்றும் (257) என்னும் வாழ்த்துச் சூத்திரத்தின் கீழ், "ஒரு நூலுக்கு எடுத்துக் கோடற் கண்ணே வணக்கம் சொல்லுதலன்றி அதிகாரந்தோறும் சொல்ல வேண்டியது யாதோ எனின், நூலொன்றே எனினும் அதிகாரங்கள் பொருளான் வேறுபடுதலானும்—சொன்னார் எனக் கொள்க" என்று மயிலைநாதர், நன்னூலில் பல அதிகாரங்கள் உள்ளன என்று உணரும் வகையில் எழுதுகின்றார். சொல்லதிகாரம் நன்னூலில் இறுதியதிகாரம் ஆயின், அதிகாரந்தோறும் என்றும் அதிகாரங்கள் என்றும் எழுதி இருக்கமாட்டார்.

2. 'பல்வகைத் தாதுவின்' என்னும் சூத்திரவுரையின் கீழ் (267) இவர் பின் வருமாறு எழுதுகின்றார்:

"சொல் எழுத்தாற் பெறப்படுதலின், எழுத்து, சொல், பொருள், அணி என்னும் நான்கினும் நடப்பது யாப்பு என்பதாயிற்று. ஆகவே, ஐந்ததிகாரங்களும் தம்முள் ஒன்றை யொன்று இன்றியமையா எனக் கொள்க"

3. பொருள்கோள் பற்றிய சூத்திரங்களுக்கு உரை எழுதிய பின் முடிவில் (418) "பாட்டிற்குரிய பொருள்கோள்களை ஈண்டுச் சொல்லவேண்டியது என்னையோ எனின், அஃதே! நன்கு சொன்னாய், மேல் ஒருமொழி, தொடர் மொழி, பொதுமொழி என்று சொற்கூறு செய்து அவையாமாறு சொன்னாரன்றே; அவற்றுள், தொடர்மொழி அடிமறிமாற்று ஒழித்த ஏனை ஏழ் பொருள்கோளும்படத் தொடர்வன உளவாகலின், ஈண்டு வைத்தார் என்க. அஃதேல் பெரும்பாலும் யாப்பிற்கே உரிமை யுடைமையின் ஆண்டே வைக்கற்பால எனின், முன்னம் சொல்லறிந்து யாப்பறிய வேண்டுதலிற் சொல் அறிவுழி வைக்கவேண்டும் என்க." என்று யாப்பு இலக்கணம் பின்னால் இருந்ததை நினைவூட்டு கின்றார்.

4. சொல்லதிகாரத்தின் இறுதியில் உள்ள 'பழையன கழிதலும்' என்னும் புறநடைச் சூத்திரத்தின்கீழ், இந் நூலிற் சொன்ன ஐந்ததிகாரத்திற்கும் சிங்க நோக்காய் நிற்பதொரு

புறநடை உணர்த்துதல் நுதலிற்று" என்றும், "இவ்வாறே மேல்வரும் அதிகாரங்களிலும் கண்டு கொள்க" என்றும் குறிப்பிடுகின்றார்.

### பொதுப்பாயிரம் செய்தவர் யார் ?

மயிலைநாதரின் உரைப்போக்கு நன்னூலில் உள்ள பொதுப் பாயிரம் செய்தவர் யார் என்ற வினாவை எழுப்பி விடுகின்றது.

1

தொல்காப்பியம், இறையனார் களவியல் போன்ற நன்னூலுக்கு முற்பட்ட நூல்களில், பொதுப்பாயிரம் நூலாசிரியர் செய்ததாகக் காணப்படவில்லை. அந் நூல்களின் உரையாசிரியர் களே, சிறப்புப் பாயிரத்தின் உரைக்கு முன், பொதுப்பாயிரக் கருத்துக்களைக் கூறியுள்ளனர். மயிலை நாதரும் அவ்வாறே சிறப்புப்பாயிரத்திற்குப்பின் பாயிரச் சூத்திரங்களை அமைத்து உரையும் விளக்கமும் எழுதுகின்றார்.

2

மயிலைநாதர், பொதுப்பாயிரச் சூத்திரங்கள் இரண்டினை *(51, 52)* 'பனம்பாரம்' நூலிலிருந்து மேற்கொண்டனர் என்கிறார்.

3.

மயிலைநாதருக்குப் பிற்பட்ட நன்னூல் உரையாசிரியர்கள் பாயிரத்துள் சேர்த்துக் கூறிய 'முன்னோர் மொழி பொருளே யன்றி' என்ற வெண்பாவை, மயிலைநாதர் தம் உரை விளக்கத் திற்குரிய மேற்கோளாகக் காட்டுகின்றார் *(8)*.

இவற்றால் பொதுப்பாயிரம், நன்னூலாரால் இயற்றப் பட்டது என்ற கருத்து வலிமையிழந்து விடுகின்றது.

### தொல்காப்பியரை மறுத்தல்

சகரம் மொழிக்கு முதலில் வராது என்பதும், குற்றியலுகரம் மொழிக்கு முதலிலும் வரும் என்பதும் தொல்காப்பியர் கருத்து. இக் கருத்துகள் மயிலைநாதருக்கு மாறுபட்டவை. தொல்காப்பி யரை மிக நாகரிகமாக இவர் மறுத்துள்ளார். வெளிப்படையாக மறுக்காமல் பின்வருமாறு நயம்படக் கூறுகின்றார்:

**சரிசமழ்ப்புச் சட்டி சருகு சவடி**
**சளிசகடு சட்டை சவளி—சவிசரடு**
**சந்து சதங்கை சழக்காதி ஈரிடத்தும்**
**வந்தனவால் சம்முதலும் வை.**

"ஆசிரியர் தொல்காப்பியனார் (இவ்வாறு) குற்றியலுகரம் மொழிக்கு முதலாம் என்றாராலோ எனின்,

> நுந்தை யுகரங் குறுகி மொழிமுதற்கண்
> வந்த தெனின்உயிர்மெய் யாமனைத்தும்—சந்திக்
> குயிர்முதலா வந்தணையும் மெய்ப்புணர்ச்சி இன்றி
> மயலணையும் என்றத்னை மாற்று.

இவற்றை விரித்துரைத்து, விதியும் விலக்கும் அறிந்து கொள்க" (105).

## நாகரிகமும் பழக்க வழக்கங்களும்

மயிலைநாதர் உரையில், அக்கால மக்களின் நாகரிகமும் பழக்க வழக்கமும் இடம்பெற்றுள்ளன.

"ஒருவரான் அரிய தவம் பெற்றேன் என்றக்கால், ஆண்பால் என்பதும், ஒருவரால் அரிய மடல் பெற்றேன் என்றக்காற் பெண்பால் என்பதும் குறிப்பான் விளங்கும். அறிவும் தவமும் பெண்பாலால் பெறல் அரியவோ எனின்,

> நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும்
> பெண்ணறி வென்பது பெரும்பேதை மைத்தே (264)

எனச் சான்றோர் சொல்லுப ஆகலான் அரிய என்க" என்று மயிலைநாதர் கூறும் கருத்து, அவர் காலத்தில் பெண்களுக்கு இருந்த நிலையைப் புலப்படுத்தும்.

படைத்தலைவன் மனைவியைப் படைத்தலைவி என்றும், சேனாவரையன் மனைவியைச் சேனாவரசி என்றும் அக்காலத் தவர் வழங்கினர் (276).

தஞ்சாவூர், இவர் காலத்தில் சிறப்புடன் விளங்கியது, அதனைத் தஞ்சை என்று வழங்கினர் (238).

'கார்த்திகை விளக்கு விழா' இவர் காலத்தில், கொண்டாடப் பட்டது (400).

செல்வர்கள் பல நூல்களைத் தொகுத்து ஓரிடத்தில் வைத்திருந்தனர் என்றும், அவற்றை எடுத்துத் தரவும் வைக்கவும் ஏவலாளரைப் பயன்படுத்தினர் எனவும் பின்வரும் உரைப்பகுதி உணர்த்துகின்றது:

"பல பொத்தகம் கிடந்துழி, ஒருவன் ஏவுவான் ஏவலாளனை, பொத்தகங்கொடுவா என்றால், அவன் ஒரு பொத்தகம் கொடு வந்த விடத்து, தான் கருதியது அன்றெனின் அவன் 'மற்றையது கொணா' என்னும்" (432).

வடநாடு சென்று கங்கை நீராடி வந்த துறவியர், "கங்கையாடிப் போர்ந்தேன்; ஒரு பிடி சோறு தம்மின்; ஓராடை தம்மின்" என்று இல்லந்தோறும் சென்று கேட்டுப் பெற்றனர் (385).

**ஆடைபற்றிக் கூறும் குறிப்புக்கள்**

"குழிப்பாடி, சீனம் என்பன அவ்விடம் உணர்த்தின் இயற் பெயராம்; இப்படாம் குழிப்பாடி, இப்பட்டுச் சீனம் என அவ்விடத்திற் பொருளை உணர்த்தின் ஆகுபெயராம்" (289).

"கோலிகன், சாலிகன், பட்டணவன், சேணிகன் என்பன, அச் சாதிகளை உணர்த்தின் இயற்பெயராம்; இவ்வாடை கோலிகன், இவ்வாடை சாலிகன், இவ்வாடை பட்டணவன் இவ்வாடை சேணிகன் என, அவ் அவரான் ஆக்கப்பட்ட ஆடைகளை உணர்த்தின் ஆகுபெயராம்" (288).

"நூறு விற்கும் பட்டாடை உளவோ என்றாற்கு ஐம்பது விற்கும் கோசிகம் அல்லது இல்லை, இத்துணைப் பட்டாடை யுள என்க" (405).

இக் குறிப்புகளிலிருந்து ஆடைகளின் வகை, அவை நெய்த இடம், அவற்றை நெய்த சாதியினர், விலை ஆகியவற்றை உணரலாம்.

## 3. சங்கர நமச்சிவாயர்

நன்னூலுக்கு, மயிலைநாதருக்குப்பின் உரைஎழுதிப் பெரும்புகழ் பெற்றவர், சங்கர நமச்சிவாயர். இவர் பதினேழாம் நூற்றாண்டில் திருநெல்வேலியில் தடிவீரையன் கோயில் தெருவில் வாழ்ந்தவர்; சைவ வேளாளர் குடியில் தோன்றியவர். அக்காலத்தில் இவரைச் சங்கர நமச்சிவாய பிள்ளை என்றும், சங்கர நமச்சிவாயப் புலவர் என்றும் வழங்கி வந்தனர்.

இவரது ஆசிரியர், நெல்லை ஈசான மடத்திலிருந்த இலக்கணக் கொத்தின் ஆசிரியராகிய சாமிநாத தேசிகர். தொல்காப்பியம் முதலிய இலக்கணங்களையும், சங்க இலக்கியம், வடமொழி நூல்கள் ஆகியவற்றையும் நன்கு பயின்றார் இவர். சைவ சித்தாந்தங்களையும் திருமுறைகளையும் வைணவ இலக்கியங்களையும் கற்றுத் தேர்ந்தார். இவரைச் சிறப்புப் பாயிரம், "பன்னூற் செந்தமிழ்ப் புலவன்" என்று பாராட்டு கின்றது. சங்கர நமச்சிவாயர் தம் ஆசிரியராகிய சாமிநாத தேசிகரை,

நன்னெறி பிறழா நற்றவத் தோர்பெறும்
தன்னடித் தாமரை தந்துஎனை ஆண்ட
கருணையங் கடலைஎன் கண்ணைவிட்டு அகலாச்
சுவாமி நாத குரவனை அனுதினம்
மனமொழி மெய்களில் தொழுது

என்று போற்றுகின்றார்.

"சாமிநாத தேசிகர் மட்டுமன்றி இலக்கண விளக்கம் வைத்தியநாத தேசிகர் முதலியோரும் அவரைப்போன்ற வேறு சில பெரியாரும் இவர் காலத்தில் திருநெல்வேலியில் இருந்தவர்கள் ஆதலின், கல்வி கேள்விகளில் சிறந்த ஓர் இலக்கண நூலுக்கு உரை இயற்றுதற்குப் போதிய ஆற்றலைப் பெறுவது இவருக்கு எளிதாயிற்று" என்பர் டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர்.

சங்கரநமச்சிவாயர் நன்னூலுக்கு உரை இயற்றக் காரணமாய் இருந்தவர், ஊற்றுமலை சமீன்தாராகிய மருதப்ப தேவர். உரைப்பாயிரத்துள் சங்கரநமச்சிவாயர் ஊற்றுமலை மருதப்பரை,

பொன்மலை எனஇப் புவிபுகழ் பெருமை
மன்னிய ஊற்று மலைமரு தப்பன்
முத்தமிழ்ப் புலமையும் முறையர சுரிமையும்
இத்தலத்து எய்திய இறைமகன்

என்று போற்றுகின்றார். மருதப்பர் கூற, தாம் உரை இயற்றிய வரலாற்றை,

...ஊற்றுமலை மருதப்பன்
"நன்னூற்கு உரைநீ நவையறச் செய்து
பன்னூற் புலவர்முன் பகர்தி'என்று இயம்பலின்,
நன்நா வலர்முக நகைநா ணாமே
என்னால் இயன்றவை இயற்றும் இந்நூலுள்

என்று உரைக்கின்றார்.

சங்கரநமச்சிவாயர் உரை எழுதிக் கொண்டிருக்கும் போது மருதப்பர் வேண்டிய உதவிகளைச் செய்து தந்து, உரையை அரங்கேற்றிப் பரிசு நல்கிச் சிறப்பித்தார்.

சங்கர நமச்சிவாயர் சைவர் ஆதலின், இவரது உரை முழுதும் சைவமணம் கமழ்கின்றது. மேற்கோள்களும், எடுத்துக் காட்டும் சைவ சமயச் சார்பானவையாகும்.

## உரைத்திறன்

சங்கர நமச்சிவாயரின் உரைத் திறனை வெளிப்படுத்தும் சிறந்த பகுதிகள் பல உள்ளன.

'நடவாமடிசீ' என்ற நூற்பா (137) நன்னூலாரின் இலக்கணப் புலமையை உணர்த்தவல்ல சிறந்த நூற்பா என்பதை அறிந்த சங்கர நமச்சிவாயர் 'கையறியா மாக்கட்கு அன்றி நூலியற்றும் அறவினையுடைய மக்கட்குப் பல்கலைக்குரிசில் பவணந்தி என்னும் புலவர் பெருமான் புகழ்போல் விளங்கி நிற்றலான், உலக மலையாமை பத்தழகோடும் பிறந்து நின்றது இச் சூத்திரம் என்று உணர்க" என்று வியந்து போற்றுகின்றார்.

'பல்வகைத் தாதுவின் உயிர்க்கு உடல் போல்' என்ற சூத்திரத்தில் (268) உள்ள உவமையை, "தோல் இரத்தம் இறைச்சி மேதை எலும்பு மச்சை சுவேதநீர் என்னும் எழுவகைத் தாதுக்களினால் உயிர்க்கு இடனாக இயற்றப்பட்ட உடம்பு போல" என்று விளக்கிப் பொருள் உரைக்கின்றார்.

எச்சங்களை விளக்கும் சூத்திரவுரையில் (360) சில குறள்களுக்கு நல்ல விளக்கம் கூறுகின்றார். 'இணர் எரி தோய்வன்ன' (குறள்-308) என்ற குறளின் விளக்கம் படித்து மகிழத் தக்கது.

உரியியலில் 'இன்னாது இன்னுழி' (நன்-460) என்ற சூத்திரவுரையின் கீழ், 'இவ்வியலில் சால என்பது முதல் ஆர்ப்பு என்பது ஈறாக நாற்பத்து ஐந்து உரிச்சொல் எடுத்துச் சுருங்கச் சொல்லுதல்' என்று உரிச்சொற்களைக் கணக்கிட்டு உரைக் கின்றார்.

பொருள் கோள்களின் பெயர்ப் பொருத்தங்களைச் சங்கர நமச்சிவாயர் நன்கு விளக்குகின்றார். அவை பின்வருமாறு:

**தாப்பிசை:** ஊசல்போல் இடைநின்று இருமருங்கும் செல்லும் சொல். தாம்பு என்பது ஊசல்.

**அளைமறிபாப்பு:** அளை மறிபாம்பு என்பதில் பாம்பு என்பது பாப்பு என நின்றது.*

**மொழி மாற்று:** தனக்கு உள்ளதைக் கொடுத்துப் பிறர்க்கு உள்ளதை வாங்கும் பண்டமாற்றுப் போறல்.

## வடமொழிப் புலமை

சங்கர நமச்சிவாயர் தம் வடமொழிப் புலமையை வெளிப் படுத்தும் இடங்கள் சிலவற்றைக் கீழே காண்போம்:

* வளைக்குள் நுழைகின்ற நல்ல பாம்பு, தலையை முன்னால் வைத்து உடலைச் சுருட்டி அதன்மேல் தலையை வைக்கும்.

"வட நூலார் இடுகுறியை ரூடி என்றும், காரணத்தை யோகம் என்றும், காரண இடுகுறியை யோக ரூடி என்றும் வழங்குப" *(62)*.

"பிரகிருதி விகிருதி என்னும் ஆரிய மொழிகள் பகுதி விகுதி எனத் திரிந்து நின்றன *(133)*.

"வடநூலார் சொற்பொருளை வாச்சியம் வெங்கியம் இலக்கணை என மூன்று எனவும், இலக்கணையை வெங்கியத்துள் அடக்கி இரண்டு எனவும் கூறுப. இவற்றுள் வாச்சியம் என்பது வெளிப்படை; வெங்கியம் என்பது குறிப்பு; இலக்கணை என்பது ஒரு பொருளினது இலக்கணத்தை மற்றொரு பொருட்குத் தந்து உரைப்பது; அது விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டும் விடாத இலக்கணை என மூவகைப்படும் *(269)*.

## உவமைகள்

இவர் பல இனிய உவமைகளை எடுத்துக்காட்டி, இலக்கணக் கருத்துக்களை இனிது விளக்குகின்றார். அவ்வுவமைகள் எளியவையாயும், சிறியவையாயும் இருப்பினும் கற்போர் உள்ளத்தில் நன்கு பதியவல்லவை.

தொகை வகை விரி என்பவை ஒன்றோடொன்று தொடர்புடையவை என்பதற்கு "மரத்தினது பராரையினின்றும் கவடு கோடு கொம்பு வளார் பலவாய் ஒன்றோடொன்று தொடர் பட்டு எழுந்து நிற்றல்போல் என்ற உவமையைக் கூறுகின்றார் (பாயிரம்).

மேலும், மரங்களைப்பற்றிய பின்வரும் உவமைகளைக் கூறுகின்றார்:

மா பலா முதலியன பராரை முதலிய சினையொடு நின்றன எனக் கண்டது கூறுவார்போல *(141)*.

கமுகந் தோட்டம் என்றாற்போல *(151)*.

இவைகளேயன்றி முதல் நூல் வழி நூல் சார்பு நூல் என்பவற்றிற்குத் தந்தை மகன் மருமான் என்பவர்களை உவமை கூறுகின்றார். ஙகரம் சுட்டு வினா எழுத்துகளை முதலில் பெற்று வருவதற்கு முடவன் கோலூன்றி வருவதை உவமை கூறுகின்றார். இத்தகைய சிறந்த உவமைகள் உரை முழுதும் உள்ளன.

## போற்றும் நூல்கள்

சங்கர நமச்சிவாயர் தொல்காப்பியம், திருக்குறள், திருக்கோவையார் ஆகிய மூன்று நூல்களையும் பெரிதும் போற்றுகின்றார். தொல்காப்பியர் கொள்கையிலிருந்து நன்னூலார்

மாறுபடும் இடங்களைத் தெளிவாகச் சுட்டுகின்றார். இடையிடையே தம் உரையில் பல தொல்காப்பியச் சூத்திரங்களை மேற்கோள் தருகின்றார். தொல்காப்பியவுரைகளை ஆழ்ந்து பயின்று, பொருந்தாவுரைகளை மறுக்கின்றார்.

திருக்குறளிலிருந்து பல மேற்கோள்கள் இவர் தருகின்றார். 'பல்வகைத் தாதுவின்' என்ற சூத்திரத்திற்கு மேற்கோளாக, 'வரும் குன்றம் அனையான்' என்ற திருக்கோவையார் பாடலை எடுத்துக் காட்டுகின்றார்.

இவர் இம்மூன்று நூல்களையும் போற்றிக் கற்றவர் என்பது தெளிவாகின்றது.

## 4. ஆண்டிப் புலவர்

ஆண்டிப் புலவர் நன்னூலுக்கு விருத்தப்பாவினால் உரை இயற்றியவர். இவர் இயற்றிய உரை, "உரையறி நன்னூல்" என்று பெயர் பெற்றிருந்தது. இவர் ஆசிரிய நிகண்டும் இயற்றினார். அந் நூலின் பாயிரம், "இயம்பிய நிகண்டின் உரையறி நன்னூலினோடு இரண்டுமே செய்து வைத்தான்" என்று உரைக்கின்றது.

'உரையறி நன்னூல்' இன்று கிடைக்கவில்லை.

இவர் பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தார். தொண்டை மண்டலத்தில் செஞ்சிக்கு அருகேயுள்ள ஊற்றங்கால் என்பது இவரது பிறப்பிடமும் இருப்பிடமுமாகும். இவரது தந்தையாராகிய பாவாடை வாத்தியார் சிறந்த தமிழறிஞராக விளங்கினார். தந்தையாரிடம் கல்வி பயின்ற ஆண்டிப் புலவர், கல்வியிற் சிறந்து பலர்க்கு ஆசிரியராய்த் திகழ்ந்தார். ஆசிரிய விருத்தம் விரைந்து பாடவல்ல இவர், தம் மாணவர் நன்னூலை உரையுடன் கற்றுத் தெளிய ஆசிரிய விருத்தப்பாவால் உரை இயற்றினார்.

'செம்மை சிறுமை' என்ற நன்னூல் சூத்திரத்தின் விளக்கமாய்ப் பின்வரும் ஆசிரிய விருத்தம் அமைந்துள்ளது:

> செம்மையும் கருமையும் பசுமையும் வெண்மையும்
> திண்மையும் நுண்மை யுடனே
> சிறுமையும் பெருமையும் குறுமையும் நெடுமையும்
> தீமையும் தூய்மையும் அலால்
> வெம்மையும் குளிர்மையும் கொடுமையும் கடுமையும்
> மேன்மையும் கீழ்மை யும்பின்
> மெய்ம்மையும் வறுமையும் பொய்ம்மையும் வன்மையும்
> மென்மையும் நன்மை யும்சொல்

ஐம்மையும் பழமையும் புதுமையும் இனிமையும்
அணிமையும் நிலைமை யும்நேர்
ஆண்மையும் மும்மையும் ஒருமையும் பன்மையும்
அறுமையும் இருமையும் மிக்க
கைம்மையும் கூர்மையும் கேண்மையும் சேண்மையும்
கடிய வளமையும் இளமையும்
காணரிய முதுமையும் பண்புப் பகாப்பதம்
காட்டுமின் னனைய மாதே.*

உரையறி நன்னூல் முழுதும் கிடைத்திருந்தால் பல அரிய விளக்கங்கள் வெளிப்பட்டிருக்கும்!

## 5. கூழங்கைத்தம்பிரான்

கூழங்கைத்தம்பிரான், கூழங்கையார் என்று அழைக்கப் படுகின்றார். இவர், சைவ சித்தாந்தம் வல்ல புலவர்; வேளாளர் குடியில் காஞ்சிபுரத்தில் பிறந்தவர்.

இவரது இயற்பெயர் தெரியவில்லை. கை கூழையாய் இருந்தால், இவர் இப்பெயர் பெற்றார். இவர், திருவாரூர் மடத்தில் சில காலம் தம்பிரானாக இருந்தார். அப்போது இவர்மீது, மடாதிபதி சாட்டிய திருட்டுக் குற்றச்சாட்டை மறுத்து, தாம் குற்றமற்றவர் என்பதை மெய்ப்பிக்க, பழுக்கக்காய்ச்சிய இரும்புக் கம்பியைப் பிடித்தமையால் இவரது கை வெந்து கூழையாயிற்று என்பர் (தமிழ்ப்புலவர் அகராதி - பக்கம்-138).

பின்னர் இவர் யாழ்ப்பாணத்தில் குடியேறி வைத்தியலிங்கம் செட்டியார் ஆதரவில் வாழ்ந்தார். பல மாணவர்களுக்குத் தமிழ் கற்பித்தார்; 'சித்திவிநாயகர் இரட்டை மணிமாலை' முதலிய சிறு நூல்களை இயற்றினார்.

தம் வாழ்நாளின் இறுதிக் காலத்தில் கிறித்துவ சமயத்தைத் தழுவி வாழ்ந்தபோது, யோசேப்புராணம் முதலிய கிறித்துவ சமயச் சார்பான நூல்களை இயற்றினார். சிவியாதெருவில் வாழ்ந்து வந்த இவர் 1795-இல் மறைந்தார்.

இவர், நன்னூலுக்கு ஓர் உரை இயற்றினார். அந்நூல் மறைந்துபோய் விட்டதாய்ப் பலரும் எண்ணிவிட்டனர். அது, தமிழ் நாட்டிலோ, இலங்கையிலோ கிடைக்காமல் இருந்தது. அதனால், அது, மறைந்து போன தமிழ் நூல்களின் பட்டியலில்

* தமிழ்ப் புலவர் வரிசை (13-ஆம் நூற்) பக்கம்-16. சு.அ. இராமசாமிப் புலவர்.

இடம் பெற்றது. ஆனால், தமிழரின் தவப்பயனாய் அலைகடல் தாண்டிச் சென்று, ஜெர்மனி நாட்டில் இருக்கிறது.

மேற்கு ஜெர்மனியில் உள்ள ஹைடல்பெர்க் பல்கலைக் கழகம் 1962-இல் தொடங்கிய 'தெற்கு ஆசியக் கழகம்', கூழங்கைத்தம்பிரான் நன்னூலுக்கு எழுதிய உரையைக் கண்டெடுத்தது. அங்கே தமிழ்த்துறையில் பணியாற்றிவரும் தமிழறிஞர் அ. தாமோதரன் அவர்கள் அதனை மிகவும் போற்றித் திருத்தமான கையெழுத்தில் படிஎடுத்துத் தந்துள்ளார். (1980). அதன் பிரதி, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில்-மொழியியல் துறையில் உள்ளது. அதனை வெளிப்படுத்திய தாமோதரனாரே சிறந்த முறையில் பதிப்பித்து வருகின்றார். அந்தப்பதிப்பு வெளிவருமானால் பல சிறந்த ஆய்வுக் கருத்துகளும் உரை நலன்களும் வெளிப்படும்.

கூழங்கைத் தம்பிரான் உரை, மயிலை நாதர் உரையைத் தழுவி எழுதப்பட்டுள்ளது.

## 6. இராமநுசக் கவிராயர்

இராமாநுசக் கவிராயர் இராமநாதபுரத்தில் நாயுடு வகுப்பில் பிறந்தார். சிவஞான முனிவரின் மாணவராகிய சோம சுந்தரக் கவிராயரிடம் கல்வி பயின்றார். சென்னையில் குடியேறித் தமிழ்ப் பணி புரிந்தார். சென்னையில் வண்ணாரப்பேட்டையில் சஞ்சீவிராயன் கோயில் தெருவில் வாழ்ந்தார்.

சென்னையில் இவரிடம் தமிழ்பயின்ற மாணவர்கள் பலர் அவர்களுள் கந்தப்பையரின் மக்களான விசாகப் பெருமாள் ஐயர், சரவணப் பெருமாள் ஐயர், தாண்டவராய முதலியார், அ. வீராசாமி செட்டியார் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். வெளி நாட்டவரான ஜி.யு. போப், ட்ரு தாம்சன் கிளார்க், ரானஸ், வின்ஸ்லோ ஆகியோரும் இவரிடம் பயின்றுள்ளனர்.

ஜி. யு. போப் இராமாநுசக் கவிராயரைப் பற்றிப் பின் வருமாறு தாம் இயற்றியுள்ள திருக்குறள் உரையின் ஆங்கில முன்னுரையில் எழுதுகின்றார்:

"என் முதல் தமிழாசிரியர், யான் அறிந்த புலமைத் திறனும் மதி நுட்பமும் உடைய எவரினும் சிறந்தவர்; நெடு நாட்களுக்குப்

பின் காலஞ் சென்றவர்; ஒரு பேரறிஞர்; அவர், பிறர் கண்டு அழுக்காறு அடையத்தக்க வீறுமிக்க வைணவர்"[1]

இவர், பள்ளிச் சிறுவர்கள் பயில்வதற்கு ஏற்ற வகையில் ஆத்திசூடி, கொன்றை வேந்தன், வெற்றி வேற்கை ஆகியவற்றிற்கு உரை இயற்றினார்.

நன்னூலுக்குக் காண்டிகையுரை எழுதினார். திருக்குறள் அறத்துப்பாலில் இல்லறவியல்வரை உரை இயற்றினார்; பரிமேலழகர் உரைக்கு விளக்கவுரை இயற்றி, சில இடங்களில் 'வேறுரை' என்று குறிப்பிட்டுத் தம் கருத்தை எழுதி வெளியிட்டார்.

குடாரம் என்னும் கண்டன நூல் ஒன்றும் இயற்றினார். அந் நூலின் முன்னுரையில் அதன் தலைப்பிற்குப் பின் வருமாறு விளக்கம் தந்துள்ளார்:

**குடாரம்:** இது திருவள்ளுவர் குறளையும் பரிமேலழகர் உரையையும்பற்றிச் சிலர் மயங்கிக்கூறிய வழூஉக் களை குடாரம்.

**நன்னூல் உரை**

இவர் இயற்றியுள்ள நன்னூல் உரை பெரும்பாலும் சிவஞான முனிவர் உரையைத் தழுவிச் செல்லுகின்றது. எளிமையும் தெளிவும் வாய்ந்த நடையில், நினைவில் நிற்கத் தகுந்த எளிய உதாரணங்களுடன் அமைந்துள்ளது.

இவர் தம் உரையில்,

**தொல்லை வடிவின எல்லாஎழுத்தும் ஆண்டு**
**எய்தும் எகரம் ஒகரம் மெய் புள்ளி**

**(நன்–எழுத்–43)**

என்ற நன்னூல் சூத்திரத்தை,

**தொல்லை வடிவின எல்லா எழுத்தும் ஆண்டு**
**எய்தும் ஏகாரம் ஓகாரம் மெய்புள்ளி**

என்று மாற்றிவிட்டார். மாற்றியதற்குக் காரணம் கூறுகையில், "இச் சூத்திரத்தை ஏகாரம் ஓகாரம் மெய் புள்ளி பெறும் எனத் திருப்ப வேண்டிற்று என் எனின், இக் காலத்தார் ஏகார ஓகாரங்களுக்கு புள்ளியிட்டு எழுதுவது பெருவழக்கு ஆயினமையால் என்க" என்று எழுதுகின்றார்.

1. "My first teacher of Tamil was a most learned scholar, long dead (Peace to his ashes!), who possessed more than any man I have known, the cleverness ingenium perfervidum. He was a profound and Zealous Vaishnavite"

## 7. விசாகப்பெருமாள் ஐயர்

விசாகப்பெருமாள் ஐயர் திருத்தணிகையில் பிறந்தவர்; வீர சைவராகிய கந்தப்பையரின் புதல்வர்; இராமாநுசக் கவிராயரின் மாணவர். சரவணப் பெருமாளையரும் இவரும் இரட்டைப் பிறவிகளாகப் பிறந்தவர்கள். இவர் வாழ்ந்த காலம் பத்தொன்ப தாம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும்.

இவர் நன்னூலுக்குக் காண்டிகையுரை ஒன்றைத் தம் காலத்து மாணவர்கள் எளிதில் இலக்கணம் கற்றுத் தெளியும் வகையில் இயற்றினார். இவரது நன்னூல் உரைப் பாயிரத்தில் சேயூர் முத்தைய முதலியார்,

> தத்துவம் உணர்திருத் தணிகை மடாதிபன்
> சத்தெனும் வீர சைவமா கேசன்
> கற்றுணர்ந் தோங்கிய கந்தப்ப தேசிகன்
> பெற்றருள் விசாகப் பெருமா ளையன்

என்று இவரைக் குறிப்பிடுகின்றார்.

இவர் நன்னூலுக்கு உரை இயற்றிய சிறப்பை,

> நயன்மிகு சங்கர நமச்சி வாயனால்
> பயன்மிகச் செய்திடப் பட்டதன் பின்னர்,
> தவஞா னந்தனிற் சால்புகூர் துறைசைச்
> சிவஞான முனிவனால் திருத்திடப் பட்ட
> விருத்தி யுரைதனை வெளிப்படச் சுருக்கி,
> கருத்துப் பதப்பொருள் காட்டு மற்றும்சில
> வுறுமுறை காண்டிகை உரையுளங் கொண்டு
> சிறுவரும் உணர்தரும் செவ்வியிற் செய்தனன்

என்று பாயிரம் உரைக்கின்றது.

விசாகப்பெருமாள் ஐயர் எளியவுரை எழுதி மாணவர் உலகிற்கு நன்மை செய்த பின்னரே, இவரைப் பின் பற்றிப் பலர் நன்னூலுக்கு உரை எழுதும் முயற்சியில் ஈடுபட்டனர்.

## 8. ஆறுமுக நாவலர்

ஆறுமுக நாவலர் நன்னூலுக்குக் காண்டிகை யுரை எழுதி வெளியிட்டார். இவ்வுரை தமிழ் கற்கும் இளைஞர்க்கு நாவலர் தந்த நல்ல பரிசாகும். இவ்வுரை இளைஞர் உலகில் என்றும் நிலைத்து வாழும்.

நாவலர் பல ஆண்டுகள் தமிழ் கற்பிக்கும் பணியில் ஈடுபட்டு மாணவர் உள்ளத்தை அறிந்து சிறந்த முறையில் உரை இயற்றியுள்ளார். ஒவ்வொரு சூத்திரத்தின் கீழேயும் 'பரீட்சை வினாக்கள்' இடம் பெற்றுள்ளன. ஆகுபெயர், அன்மொழித் தொகை வேறுபாடுகளை மிகத்தெளிவாக இனிய முறையில் சிறுசிறு வாக்கியங்களில் விளக்குகின்றார் நாவலர்.

நூலின் இறுதியில் பிற்சேர்க்கையாக அப்பியாசம் என்னும் தலைப்பில் பல பயிற்சிகள் தரப்பட்டுள்ளன. இவ்வாறு அறுபது பகுதிகளில் பலவேறு பயிற்சிகள் இடம்பெற்றுள்ளன. இலக்கண அமைதி என்ற பகுதியில் சொல்லுக்கும் வாக்கியங்களுக்கும் இலக்கணம் கூறும் முறை விளக்கப்பட்டுள்ளது. பல சொற்களுக்குப் பகுபத இலக்கணம் காட்டப்பட்டுள்ளது. சொல்லிலக்கண சூசி என்ற தலைப்பில் சொற்களின் வகைகளை விரிக்கின்றார். தொடர் இலக்கணம் கூறிப் பல வாக்கியங்களைத் தெளிவு படுத்துகின்றார்.

## 9. சடகோப ராமாநுசாச்சாரியார்

நன்னூலுக்கு எளிய முறையில் உரை எழுதி மாணவர் உலகில் செல்வாக்குப் பெற்றவர் இவர். தமிழ் மொழியின் மாறுதலையும் வளர்ச்சியையும் உணர்ந்து தக்க உதாரணமும் மேற்கோற்கோளும் காட்டி இவரது உரை செல்லுகின்றது. எளிமையும் தெளிவும் இவரது உரையின் சிறப்பியல்புகளாகும்.

இவர் 1871ஆம் ஆண்டு, திருவல்லிக்கேணியில் (சென்னை) அப்பனையங்காருக்கு மகனாகத் தோன்றினார். பல வேறு தமிழ்ப் பணி புரிந்த இவர் 1910-இல் மறைந்தார்.

நன்னூலுக்குக் குமாரசாமிப் புலவர், பவானந்தம் பிள்ளை, ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை ஆகியோரும் உரை இயற்றியுள்ளனர். இவர்கள் இயற்றியுள்ள உரைகள் யாவும் மாணவர்க்கு இலக்கணங் கற்பிக்கும் நோக்கத்துடன் எழுதப்பட்டவையாகும்.

தமிழக அரசியலார் ஓலைச் சுவடி நூல் நிலைய வெளியீடாக இயற்றியவர் பெயர் தெரியாத நன்னூல் காண்டிகை உரை ஒன்று வெளிவந்துள்ளது (1952). இவ்வுரை மிக எளிமையாக, பழைய உரைகளைத் தழுவிச் செல்லுகின்றது. எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் 13 சூத்திரம் வரையிலுமே உரை உள்ளது.

# 11

# இலக்கிய உரையாசிரியர்கள் – II

## 1. திருக்கோவையார் — பழையவுரை

திருக்கோவையாரின், பேராசிரியர் உரைக்கு முற்பட்ட உரை ஒன்று உள்ளது. அவ்வுரை இயற்றியவர் பெயர் தெரியவில்லை. அவ்வுரைக்குப் பழையவுரை என்று பெயரிட்டு, தஞ்சை சரசுவதி மகால் நூல்நிலையத்தார் வெளியிட்டுள்ளார் (1951).

திருக்கோவையாருக்குப் பேராசிரியர் உரை எழுத இவ்வுரை பெரிதும் பயன்பட்டுள்ளது. இப் பழையவுரையை அவர் 'வேறுரை' என்று ஆங்காங்கே குறிப்பிடுகின்றார். பழையவுரை கொண்ட பாடங்களைத் தருகின்றார்.

பேராசிரியர் உரையில், பாடலுக்குப்பின் கொளு உள்ளது; பழையவுரையில் பாடலுக்கு முன் கொளு அமைந்துள்ளது.

இவ்வுரையில் வடமொழிச் சொற்கள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. நிமிடம் என்ற சொல் இவ்வுரையில் இடம் பெற்றுள்ளது. தாழேன் (269) என்பதற்கு, "நிமிடம் அளவும் தாழ்ந்து அங்கே உயிர் கொண்டு இரேன்" என்று பொருள் கூறுகின்றார்.

இறைவன் என்ற சொல்லுக்கு முதலியார் (6, 29, 44, 80, 82, 121) என்று பொருள் கூறுகின்றார்.

சில சொற்களுக்கு இவ்வுரை தரும் பொருள் போற்றத் தக்கவை. அவற்றுள் சிலவற்றைக் காண்போம்:

தென்புலியூர் — (19) தெற்குத் திருப்பதியாக உள்ள பெரும்பற்றப்புலியூர்.

சேய் — (370) சுப்பிரமணியன்.

சுழியல் — (377) திருவலஞ்சுழி.

சிந்தாமணி (12,400) சிந்தாமணி என்கின்ற வள்ளல்.

பாடலின் பொருள் நன்கு விளங்கும்பொருட்டு, சில சொற்களை வருவித்து இவ்வுரையாசிரியர் பொருள் எழுதுகின்றார்.

**மீண்டார் எனஉவந் தேன்கண்டு நும்மைஇம் மேதகவே**
**பூண்டார் இருவர்முன் போயினரே புலியூ ரெனைநின்று**
**ஆண்டான் அருவரை யாளிஅன் னானைக்கண் டேனயலே**
**தூண்டா விளக்கனை யாய்என்னை யோஅன்னை சொல்லியதே**
**(244)**

என்ற பாடல், மூவர் சேர்ந்து உரையாடுவதை உணர்த்துகின்றது. பாட்டில் மூவர் பெயரும் பேச்சும் எளிதில் விளங்கும் வகையில் அமையவில்லை. பழையவுரை இப்பாடலின் பொருளை நன்கு விளக்கி சில சொற்களை வருவித்து விளக்குகின்றது.

'உங்களைக் கண்டு, எம்மகளும் அவளுடை நாயகனும் மீண்டார்கள்' என்று பிரியப்பட்டிருந்தேன்; இம்மெய்ப்பாடு தக்க ஒழுக்கத்தினைப் பூண்டவர்கள் இரண்டு பேர் முன்னே போனார்களோ?' என்று செவிலி கேட்ப, எதிரே வருகிற நாயகன் சொல்லுவான்; 'புலியூரில் நின்று என்னை அடிமை கொண்டவன்; அவனுடைய அரியமலையில் சிங்கம் போன்றவனைக் கண்டேன். அவனுக்கு அயலாக 'தூண்டப்படாத விளக்கினை ஒப்பாய்! அன்னை சொன்ன வடிவு எத்தன்மைத்து?"

## 2. திருக்கோவையார் பேராசிரியர் உரை

'தேனூறு செஞ்சொல் திருக்கோவை என்கின்ற நானூறு' பாடல்களுக்கும் பேராசிரியர் உரை இயற்றியுள்ளார். திருக்கோவையைச் சிறந்ததோர் இலக்கியமாகப் பரப்பிய பெருமை பேராசிரியர்க்கு உண்டு. அந்நூல் பலவேறு நோக்கத்துடன், பல ஆண்டுகளாகக் கற்கப்பட்டு வருகின்றது.

**ஆரணம் காண்என்பர் அந்தணர்**
**யோகியர் ஆகமத்தின்**
**காரணம் காண்என்பர் காமுகர்**
**காமநன் னூல்அதுஎன்பர்**
**ஏரணம் காண்என்பர் எண்ணர்**
**எழுத்துஎன்பர் இன்புலவோர்**
**சீரணங் காயசிற் றம்பலக்**
**கோவையைச் செப்பிடினே**

என்ற பாடல் இங்கே நினைக்கத்தக்கதாகும்.

திருகோவையாருக்கு உரை எழுதியவர் யார் என்பது பற்றி அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு நிலவி வருகின்றது. தொல்காப்பியத்திற்கு உரை இயற்றிய பேராசிரியரே திருக்கோவையாருக்கும் உரை இயற்றினார் என்பது டாக்டர் மு.வ. அவர்களின் கருத்தாகும் (கலைக் களஞ்சியம் தொகுதி 5 பக்கம் 485). இரு பெரும் நூல்களுக்கும் உரை இயற்றியவர்கள் வேறு வேறானவர்கள் என்றும் சிலர் கூறுகின்றனர்.

திருக்கோவையாரை உரையுடன் பதிப்பித்த ஆறுமுக நாவலர் அதன் உரையாசிரியரை நச்சினார்க்கினியர் என்று குறிப்பிட்டார். தஞ்சைவாணன் கோவைக்கு உரை எழுதிய சொக்கப்ப நாவலர் திருக்கோவையாரின் உரையாசிரியர் சேனாவரையர் என்று குறிப்பிட்டுள்ளார். பிரயோக விவேக நூலாசிரியரான சுப்பிரமணிய தீட்சதரும், பரிமேலழகர் நுண்பொருள்மாலை இயற்றிய இரத்தின கவிராயரும் திருக்கோவையாரின் உரையாசிரியர் பேராசிரியரே என்று கூறுகின்றனர்.

'திருக்கோவையாரின் உரையாசிரியர், பேராசிரியரே' என்ற கொள்கையே அறிஞர்களிடம் நிலவி வருகின்றது.

## காலம்

இவர் பரிமேலழகருக்கு முற்பட்டவராய் இருக்கலாம். பல இடங்களில் பேராசிரியர் உரையின் சாயல் பரிமேலழகர் உரையில் தெரிகின்றது.

வித்தகம் என்ற சொல்லுக்குச் சதுரப்பாடு என்று பேராசிரியர் பொருள் கூறியுள்ளார் (109). இப்பொருளையே பரிமேலழகரும் 'நத்தம்போல்' என்ற குறளின் உரையில் (235) மேற்கொண்டுள்ளார்.

## மேற்கோள் சூத்திரங்கள்

திருக்கோவையார் உரையில் பேராசிரியர் அகப்பொருள் துறைகளை விளக்கக் கொளுக்களை அமைத்துத் தருகின்றார். பல பெரிய அகப்பொருள் சூத்திரங்களை மேற்கோள் காட்டுகின்றார். இவற்றை எல்லாம் ஒன்று சேர்த்து அகப்பொருளை விளக்கும் இலக்கணநூல் ஒன்றை உருவாக்கலாம். அக்கொளுக்கள், எதுகை மோனை நயம் வாய்ந்து ஓசை இன்பத்தோடு அமைந்துள்ளன.

விற்செறி நுதலியை
இற்செறி வித்தது (133)

முளையெயிற் றரிவை
விளைவிலள் என்றது (104)

2.37

ஏனல் விளையாட் டினியில்லை யென்று
மானற் றோழி மடந்தைக் குரைத்தது (138)

என்பவை அவற்றுள் சில.

உரையில் அமைந்துள்ள அகப்பொருள் சூத்திரங்கள் மிக விளக்கமானவை; நீளமானவை. கொளுக்களும் சூத்திரங்களும் இயற்றியவர் யார் என்று அறியமுடியவில்லை. டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர், "திருச்சிற்றம்பலக் கோவையார் உரையில், பேராசிரியர் அந்நூலுக்கு ஏற்பக் காட்டும் சூத்திரங்கள் ஓர் அகப்பொருள் இலக்கண நூலில் உள்ளனவோ அன்றி, அவராக அமைத்துக்கொண்ட உரைச் சூத்திரங்களோ இன்ன என்று துணிய முடியவில்லை" என்று கூறுகின்றார்.*

## சமயக் கருத்துக்கள்

பேராசிரியர் சைவ சமயத்தவர். ஆதலின், வேற்று மதத்தவராகிய சமண பௌத்தரை வேதத்தொடு முரண்பட்டார் என்று குறிப்பிடுகின்றார். மூல நூலில் இல்லாத சில கருத்துகளையும் நுழைத்து உரை எழுதுகின்றார். அத்தகைய இடங்கள் சிலவற்றைக் கீழே காணலாம்.

குறுகலர் ஊர் தீங்கில் புகச் செற்ற கொற்றவன் — குறுகாதார் புரங்கள் பாசண்ட தருமமாகிய தீங்கிலே புகுதலான் அவற்றைக் கெடுத்த வெற்றியை உடையான் *(13)*.

அம்பலத்தோன் எல்லை செல்குவோர் என்றது, அவர் சீவன் முத்தராய் இருத்தல். அஃதாவது, சீவன் உடனிருக்கும் போதே முத்தியை அடைந்திருத்தல். முத்தியாவது எங்கும் ஒக்க வியாத்தியை அடைந்திருத்தல். இஃது அகண்ட பரிபூரணம் என்றபடி *(197)*.

தில்லைத் தொல்லோனைக் காணாதவர் — தில்லைக்கண் உள்ளோனாகிய பழையோனைக் குருமுகத்தால் அறியாதார் *(284)*.

## நயவுரை

பேராசிரியர் நயவுரை எழுதும் இடங்கள் சிலவற்றைக் கீழே காணலாம்:

சிந்தாமணி — ஒருவன் தவம்செய்து பெறும் சிந்தாமணி *(12)*.

நிறை — ஐம்புலன்களையும் அடக்குதல் *(31)*.

பிழை கொண்டு ஒருவி, கெடாது அன்பு செய்யின் — அடைந்தார் பிழைப்பின், தலையாயினார் பிழையை

* தமிழ் நெறி விளக்கம் (உ.வே.சா. பதிப்பு) முகவுரை, பக்கம். 7

உட்கொண்டு அமைதலும், இடையாயினார் அவரைத் துறத்தலும், கடையாயினார் அவரைக் கெடுத்தலும் உலகத்து உண்மையின் அம்மூவகையும் செய்யாது எனினும் அமையும் (65).

முகமதியின் வித்தகம்சேர் மெல்லென் நோக்கம் — முகமாகிய மதியின்கண் உண்டாகிய சதுரப்பாட்டைச் சேர்ந்த மெல்லென்ற நோக்கம் (106).

தொழுது எழுவார் — துயில் எழும் காலத்து அல்லது முன் உணர்வின்மையான் உணர்வுள்ள காலத்து மறவாது நினைவார் (118).

இருவி என்பது கதிர் கொய்த தட்டை. தாள் என்பது கதிர் கொய்யாத முன்னும் சொல்வதோர் பெயர் (144).

செறிகடல் — என்புழி, செறிவு — எல்லை கடவா நிலைமை (179).

அம்பல் — பரவாத களவு (180).

திகழ்ந்து என்றதனால் ஒளிமிகுந்து விளங்கும் (182).

மெய்த்தகை — புனையா அழகு (231)

உய்த்து உணர்வோர் - வெளிப்படாத பொருளை ஏதுக்களால் உணர்வோரை (236).

இறுமாத்தல் — தாழாத உள்ளத்தராய்ச் செம்மாத்தல் (242).

எழுங்குலை — இளங்குலை; செழுங்குலை — முதிர்ந்த சூலை (250).

நிறைவு — அறிவோடு கூடிய ஒழுக்கம் (266).

கடவுள் மழை — கடவுளால் தரப்பட்ட மழை (279).

**உவமைகளை விளக்குதல்**

பேராசிரியர், திருக்கோவையாரில் உள்ள உவமைகளில் பெரிதும் ஈடுபட்டு ஆராய்ந்து விளக்கம் கூறுகின்றார்.

அபூத உவமை (125), இல்பொருள் உவமை (244), இல் பொருள் உவமை எனினும் அபூத உவமை எனினும் ஒக்கும் (125) என்று உவமையின் வகைகளைச் சுட்டி விளக்குகின்றார்.

நூலில் இடம்பெற்றுள்ள உள்ளுறை உவமங்களை விளக்குகின்றார் (250, 260, 276, 254, 369, 377, 99, 128, 133, 168, 128).

உவமை நயந்தோன்ற விளக்கும் இடங்கள் சிலவற்றைக் காண்போம்:

தலைவன் தலைவியை அமிழ்து என்றும் அணங்கு என்றும் பாராட்டுகின்றான். அதற்குப் பேராசிரியர் "இன்பத்தைச்

செய்தலின் அமிர்தமாய், துன்பத்தைச் செய்தலின் அணங்காய்" (39 என்றும், "அமிழ்தே, அணங்கே என்றான் — இன்பமும் துன்பமும் ஒருங்கு நிகழ்தலின்" (41) என்றும் நயங்கூறுகின்றார்.

**கார்த்தரங் கம்திரை தோணி**
**சுறாக்கடல் மீன்எறிவோர்**
**போர்த் தரங்கம் துறை மானும் (187)**

என்ற பகுதியில் உவமையைப் பின்வருமாறு விளக்குகின்றார்.

"குதிரைத் திரள் தரங்கத்திற்கும், தேர் தோணிக்கும், யானை சுறாவிற்கும் காலாள் மீன் எறிவோர்க்கும், போர்க்களம் கடற்கும் உவமையாக உரைக்க".

"மதிக் கமலம் எழில் தந்தென பொழில் ஆயத்துச் சேர்க" (124) என்பதில் உள்ள உவமைக்குப் பேராசிரியர் பின்வருமாறு விளக்கம் தருகின்றார்:

"கமலத்தோடு மதிக்கு ஒத்த பண்பு வெண்மையும் வடிவும் பொலிவும். மதியோடு தலைமகட்கு ஒத்த பண்பு, கட்கு இனிமையும் சுற்றத்திடை அதனின் மிக்குப் பொலிதலும். இவ்வாறு ஒத்த பண்பு வேறுபடுதலான் உவமைக்கு உவமை ஆகாமை அறிந்துகொள்க".

கொடைத்தன்மைக்குக் காரும், கற்பகமும் உவமையாகக் கூறப்பட்டுள்ளன. அவற்றைப் பேராசிரியர் "வேண்டாமைக் கொடுத்தலின் காரோடு ஒக்கும்; வேண்டக் கொடுத்தலின் அழகிய கற்பகத்தோடு ஒக்கும்" என்று விளக்கிக் காட்டுகின்றார் (400).

இந்த உவமை விளக்கத்தை நச்சினார்க்கினியர் சீவக சிந்தாமணி உரையில் மேற்கொண்டுள்ளார்.

## ஆராய்ச்சியும் விளக்கமும்

பேராசிரியர் சில பாடல்களுக்கு மிக நுட்பமாய் — ஆழமாய்ப் பொருள் எழுதுகின்றார். 'ஈசற்குயான்' என்ற பாடலுக்கும் (109) திரு என்ற சொல்லுக்கும் இவர்தரும் விளக்கம் மிக அருமையானவை. அவற்றைக் கீழே காண்போம்:

### நோக்கு

**ஈசற்கு யான்வைத்த அன்பின்**
**அகன்றுஅவன் வாங்கியஎன்**
**பாசத்தின் கார்என்று அவன்தில்லை**
**மின்னொளி போன்றுஅவன்தோள்**

பூசத்திரு நீறுஎன வெளுத்து
ஆங்கவன் பூங்கழல்யாம்
பேசத்திரு வார்த்தை யின்பெரு
நீளம் பெருங்கண்களே. (109)

தில்லையின் ஒளிபோறல் தில்லையின் ஒளிபோலும் ஒளியை உடைத்தாதல். ஆகவே தில்லையே உவமையாம்.

பூசத் திருநீறு வெள்ளிதாய்த் தோன்றுமாறுபோல வெளுத்து என்றும், பேசத் திருவார்த்தை நெடிய ஆயினாற் போலப் பெரு நீளமாம் என்றும் வினை எச்சமாக்கிச் சில சொல் வருவித்து உரைப்பினும் அமையும்.

பெரு நீளமாம் என ஆக்கம் வருவித்துத் தொழிற்பட உரைக்க. கண்களால் பெரிதும் இடர்ப்பட்டான் ஆகலானும், தோழியைத் தனக்குக் காட்டின பேருதவியை உடையன ஆகலானும், முன்னர்க் கண்மலர்ச் செங்கழுநீர் என்றும் அமையாது, பின்னும் இவ்வாறு கூறினான்.

கண்ணிற்குப் பிறிதுவகையான் உவமம் கூறாது இங்ஙனம் அகலம் முதலியன கூறவேண்டியது எற்றிற்கு எனின், அவை கண்ணிற்கு இலக்கணமும் காட்டியவாறாம். என்னை இலக்கணம் ஆமாறு?

கண்ணிற்கு இயல்பு கசடறக் கிளப்பின்
வெண்மை கருமை செம்மை அகலம்
நீளம் ஒளியென நிகழ்த்துவர் புலவர்.

ஆயின், இதனுள் செம்மை கண்டிலேம் என்பார்க்குச் செம்மையும் கூறிற்று. அவன் தோளிற் பூசத் திருநீறு என்றதனால் சிவப்பும் சொல்லியது ஆயிற்று. அது செம்மையால் தோன்றும் வரியென அறிக.

யான்பேசத் திருவார்த்தை என்னாது யாம் என்றது என்னை எனின், திருவார்த்தை பேசும் அன்பர் பலர் ஆகலான் யாம் என்று பலராகக் கூறினார்.

## திரு

திரு என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை. நோக்கம் என்றது அழகு. இஃது என் சொல்லியவாறோ எனின், யாவன் ஒருவன் யாதொரு பொருளைக் கண்டானோ அக் கண்டவற்கு அப் பொருள்மேல் சென்ற விருப்பத்தோடே கூடிய அழகு. அதன்மேல் அவற்கு விருப்பம் சேறல் அதனிற் சிறந்த உருவும் நலனும் ஒளியும் எவ்வகையானும் பிறிது ஒன்றற்கு இல்லாமையால், திரு என்றது அழகுக்கே பெயராயிற்று.

அங்ஙனம் ஆயின் இது செய்யுளின் ஒழிய, வழக்கினும் வருவது உண்டோ எனின் உண்டு; கோயிலைத் திருக்கோயில் என்றும் கோயில் வாயிலைத் திருவாயில் என்றும், அலகைத் திருவலகு என்றும், பாதுகையைத் திருவடிநிலை என்றும் வழங்கும் இத் தொடக்கத்தன எல்லாம் திருமகளை நோக்கி எழுந்தன அல்ல. அது கண்டவனுடைய விரும்பத்தானே எழுந்தது. ஆதலானும் திரு என்பது அழகு என்றே அறிக. அதனால் திரு என்பது கண்டாரால் விருப்பப்படும் தன்மை நோக்கமே. அல்லதூஉம் தான் கண்ட வடிவின் பெருமையைப் பாராட்டுவான் ஆகலான், ஒருத்தி இருந்த தவிசை இவளுக்கு முகமாகக் கூறுதல் வழுவாம். ஆதலால் தான்கண்ட வடிவின் உயர்ச்சியையே கூறினான் எனக் கொள்க.

## மேற்கோள் நூல்கள்

பேராசிரியர் தம் உரையில் பல நூல்களை மேற்கோள் காட்டியுள்ளார். திருச்சதகம் *(114)*, திவாகரம் *(1)*, தொல்காப்பியம், இறையனார் களவியல், திருவாசகம் ஆகிய நூல்களிலிருந்து மேற்கோள் தருகின்றார்.

பெரிய புராணக் கருத்தும் ஓரிடத்தில் இடம்பெறுகின்றது. "தில்லையான் ஏவலாவது, எல்லா உயிர்களையும் அரசன் காக்க என்னும் தருமநூல் விதி. காத்தலாவது தன் வினை செய்வாரானும், கள்வரானும், பகைவரானும் உயிர்கட்கு வரும் அச்சத்தை நீக்குதல்" *(312)**.

பேராசிரியர் பல இடங்களில் அணிநூல் கருத்தைக் குறிப்பிடுகின்றார். பரியாயம் *(289)*, முயற்சி விலக்கு *(234)*, தற்குறிப் பேற்றம் *(185)*, ஒற்றுமைக் கொளுவுதல் *(195)* உயர்ச்சி வேற்றுமை *(217)* ஆகிய அணிகளை இவர் குறிப்பிடுகின்றார்.

## அகத்திணை விளக்கம்

அகத்திணை இலக்கணத்தை இவர் நன்கு விளக்கிச் செல்லுகின்றார். சான்றுகள் சில காண்போம்:

**குறிவழிக் காண்டல்** என்பது குறிவழிச் சென்ற பாங்கன் தன்னை அவள் காணாமல், தான் அவளைக் காண்பதோர் அணிமைக்கண் நின்று, 'அவன் சொன்ன இடமும் இதுவே, இயலும் இவையே: இவளும் அவளே' என்று ஐயமறத் தெளியக் காணா நிற்றல்.

* "மாநிலம் காவல் ஆவான்" – பெரிய. திருநகரச்சிறப்பு – 36.

பரத்தையிற் பிரிதல் — வைகலும் பாலே நுகர்வான் ஒருவன் இடையே புளியங்காடியும் நுகர்ந்து அதன் இனிமை அறிந்தாற்போல, அவள் நுகர்ச்சி இனிமை அறிதற்குப் புறப் பெண்டிர்மாட்டுப் பிரியா நிற்றல். அல்லதூஉம் பண்ணும் பாடலும் முதலாயின காட்டி, புறப்பெண்டிர் தன்னைக் காதலித்தால் தான் எல்லார்க்கும் தலைவன் ஆகலின் அவர்க்கும் இன்பம் செய்யப் பிரியா நிற்றல் என்றுமாம்.

**உவமை கூறல்**

பேராசிரியர் தம் கருத்தை விளக்க, ஏற்ற இனிய உவமைகள் பலவற்றைத் தம் உரைகளில் கூறியுள்ளார். அவற்றுள் சிலவற்றைக் காண்போம்:

ஓர் ஆவிற்கு இருகோடு தோன்றினாற் போல *(1)*.

ஓரிடத்து ஒரு கலியாணம் உண்டானால் எல்லாரிடத்தும் உண்டாகிய ஆபரணங்கள் எல்லாம் அவ்விடத்துக்கூடி, அக் கலியாணத்தைச் சிறப்பித்தாற்போல *(1)*.

புதல்வனது பிணிக்கு, தாய் மருந்துண்டாற்போல *(118)*.

**சொற்பொருள் கூறல்**

அரிய சொற்களுக்குப் பேராசிரியர் தரும் விளக்கங்கள் அருமையானவை. சில விளக்கங்களைக் கீழே காண்போம்:

விதி — செயப்படும் வினையினது நியதி *(7)*.

துறவு துறவி என நின்றாற்போல அளவு அளவி என நின்றது *(8)*.

கண்ணன் என்பது, கரியோன் என்னும் பொருளதோர் பாகதச் சிதைவு *(53)*.

இரதம் என்றது நாட்டியச் சுவையையன்று, கட்கு இனிமையை.

நடம் என்றது நாட்டியத்தையன்று. கூத்து என்னும் பொதுமையை *(57)*.

வஞ்சித்தல் — மறுமொழியை வெளிப்படையாகக் கொடாது பிறிதொன்றாகக் கூறுதல் *(86)*.

குதலைமை — விளங்காமை. மழலை — இளஞ்சொல் *(104)*.

சோத்தம் — இழிந்தார் செய்யுள் அஞ்சலி; அது சோத்து எனக் கடை குறைந்து நின்றது *(173)*.

போது — பேரரும்பு *(174)*[1].

1. பரிமேலழகர் உரை.

முரம்பு — கல் விரவி உயர்ந்திருக்கும் நிலம் (202).

இவை என்பது தன்முன் உள்ளவற்றை; உவை என்பது முன் நின்றவற்றிற் சிறிது சேயவற்றை. அவை என்பது அவற்றினும் சேயவற்றை (223).

சுத்தி — பிறர்க்குத் திருநீறு கொடுத்தற்கு இப்பி வடிவாகத் தலையோட்டான் அமைக்கப்படுவது ஒன்று.

கடங்கம் என்பது மழு; இது கட்டங்கம் என நின்றது (242).

நாடுதல் — மனத்தால் ஆராய்தல்.

பார்த்தல் — கண்ணான் நோக்குதல் (253).

## 3. தக்கயாகப் பரணி — பழையவுரை

ஒட்டக்கூத்தர் இயற்றிய தக்கயாகப் பரணிக்குப் பழைய உரை ஒன்று உள்ளது. இவ்வுரையின் தன்மைகளை இவ் உரையாசிரியரின் பல்வேறு சிறப்பியல்புகளை மிக விரிவாக ஆராய்ந்து நூலின் முன்னுரையில் டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் தருகின்றார். மேலும், அப் பெரியவர் 'சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும்' என்ற நூலில் இவ்வுரையாசிரியரைப் பற்றி, "இவர் பெயர் தெரியவில்லை, எல்லா இயல்புகளிலும் அடியார்க்கு நல்லாரைப் போன்றவர். இவருடைய உரையினால் இவர் இருமொழியிலும் சிறந்த புலமை வாய்ந்தவர் என்று தெரிகின்றது'' என்று கூறுகின்றார் (பக்கம் 162).

இவ்வுரையாசிரியர் ஒட்டக்கூத்தரைக் 'கவிச்சக்கரவர்த்தி' என்று பெருமையுடன் அழைக்கின்றார் (தக்க - 536) சைவ சமயத்திலும் சோழர் குடிமீதும் பேரன்புடையவராக இவர் விளங்குகின்றார்.

தம் உரையில் வடசொற்களை மிகுதியாக ஆளுகின்றார். களேபரம் என்ற சொல்லைப் பிணம் (224) என்ற பொருளில் ஆளுகின்றார்.

இவர் உரை ஒருவகையாக அமையவில்லை. சில இடங்களில் பொழிப்புரை இடம்பெறும். சில இடங்களில் இலக்கணக் குறிப்பு மட்டும் இருக்கும். விரிவான நயம் காணப்படும் இடமும் உண்டு. 'இதன் பொருள் அறிக' என்று கூறிப் பொருள் எழுதாது சென்ற இடங்களும் உள்ளன.

**மேற்கோள்:** வடமொழி நூல்களையும் மறைந்துபோன பல தமிழ் நூல்களையும் மேற்கோள் தருகின்றார். உதயணன் கதை (பெருங்கதை) யிலிருந்து கணக்கற்ற மேற்கோள்களை இவர்

தருவதால் அந்நூலில் இவர்க்குள்ள பற்றும் பயிற்சியும் வெளிப்படும். தேவாரத்தைத் திருப்பாட்டு என்றும், சிறுபாணாற்றுப் படையைச் சிறப்புடைத்தான சிறுபாணாற்றுப் படை என்றும் போற்றி மேற்கோள் தருகின்றார். ஓரிடத்தில் (தக்க-425) "இவர் (ஒட்டக்கூத்தர்) வளையாபதியை நினைத்தார், கவியழகு வேண்டி" என்கின்றார். மற்றோரிடத்தில் (தக்க-54) "சிலம்பிபொதி செங்காய் — இது குறுந்தொகை" என்று கூறுகின்றார். இப்பாட்டு குறுந்தொகையில் காணப்படவில்லை.

**சொல்லும் பொருளும்:** உலக வழக்குச் சொற்களை இவர் உரையில் காணலாம். ஒரு சொல்லிற்குரிய இரண்டு சொற்களையும் சேர்த்துப் பொருள் எழுதுவது இவர் வழக்கம். அவற்றுள் சில கீழே தரப்படுகின்றன:

அலகில் — குற்றமும் கணக்கும் இல்லாத *(39)*.

தனித்துரகம் — தனியே ஒன்றாகிச் சமானமின்றி இருக்கும் குதிரை *(475)*.

பள்ளிவேலை — கோயிலும் படுக்கையுமான சமுத்திரம் *(54)*.

மாயோள் — மாயா சக்தியாய், கருநிறத்தையுடையாள் *(104)*.

**இலக்கணக் குறிப்பு:** இவர், உங்கள் உன் என்பன தமிழிற் பழைய வழக்கல்ல என்பர் *(186, 604)*. பிராகிருதத்தைச் சிதைந்த தமிழ் *(323)* என்றும், விகுதியை அடைசொல் *(463)* என்றும், அவாய் நிலையை வேண்டப்பாடு என்றும் *(704)* குறிப்பிடுகின்றார்

**உரையில் உள்ள உவமைகள்:** அரசன் அல்லாதோர் முடியைத் தம் தலையில் வைத்துக்கொள்ளவும் சிங்காதனத்தில் ஏறவும் பெறாதது போல.

பித்த தோஷத்திற்குப் பால் கைத்தாற்போல

மாம்பூ பனிக்குக் கருகுகின்றது போல.

## 4. மூவருலா - பழையவுரை

மூவருலா என்ற நூலில் அடங்கியுள்ள மூன்று உலாக்களில் குலோத்துங்கசோழன் உலா ஒன்றிற்கு மட்டுமே பழையவுரை உள்ளது. அவ்வுரையில் வடசொற்களும் பேச்சு வழக்கு மொழியும் கலந்துள்ளன. தக்கயாகப்பரணி உரையின் இயல்புகள் பல இடங்களில் உள்ளன. அவ்வுரையாசிரியர்க்கு வரலாற்றுப் புலமை இல்லை; சோழ மன்னர்களைப் பற்றிய விவரம் தெரியவில்லை. இலக்கணக் குறிப்பும் நயமும் போதிய அளவு உரையில் உண்டு.

## 5. சொக்கப்ப நாவலர்

தஞ்சைவாணன் கோவைக்கு விளக்கவுரை எழுதியவர் சொக்கப்ப நாவலர். இவர் தொண்டை மண்டலத்தைச் சேர்ந்த குன்றத்தூரில் பிறந்தார். 17-ஆம் நூற்றாண்டில், தமிழகத்தில் நாயக்க மன்னர்கள் சிறப்புற்றிருந்த காலத்தில் வாழ்ந்தவர்.

இவர் சிறந்த தமிழ்ப்புலமை உள்ளவர். பாவன்மையும் நாவன்மையும் நிரம்பியவர்.

தஞ்சைவாணன் கோவை இயற்றிய பொய்யாமொழிப் புலவர் மரபில் வந்தவர்.

இவர் சேலம் நகரில் கணக்கத் தெருவில் வாழ்ந்து வந்தார். இவர் வழியினர் இன்றும் சேலத்தில் வாழ்ந்து வருகின்றனர்.

தஞ்சைவாணன் கோவை உரை ஓர் அகப்பொருள் களஞ்சியம். எளிமையும் அழகும் தெளிவும் கொண்ட சிறந்த உரை இது. சில இடங்களில் இறையனார் களவியல் உரை எதிரொலிக்கின்றது.

### உரைநயம்

மகட்போக்கிய செவிலித்தாய், இடைச்சுரத்தில் வரும் வேறு தலைவன் தலைவியைக் கண்டு 'தன் மகளைக் கண்டீரோ' என்று புலம்புகின்றாள். அதற்குத் தலைமகன், "யான் கண்ட அண்ணலும்... மயில் கண்ட மாதரும்... தஞ்சை காண்பர்களே" என்று விடை கூறுகின்றான். இதற்குச் சொக்கப்ப நாவலர் எழுதும் உரை மிகவும் நயமானது.

"யான் கண்ட அண்ணலும் என் மயில் கண்ட மாதரும்" என்று கூறவே, எனக்கு அவள் தோன்றாமல் மறைந்து நின்றாள்; இவளும் அத்தன்மையாளதலின், இவள் அவளைக் கண்டதாகவும் தான் அவனைக் கண்டதாகவும் கூறினார். தலைவியை யான் கண்ட என்று கூறாது என் மயில் கண்ட மாதர் என்று கூறியது என்னை எனின் தலைவன் காணும் தன்மையள் அல்லது, அயலார் காணும் தன்மையள் அல்லள் ஆதலால் இவ்வாறு கூறினார்". *(தஞ் - 347)*

### கோவை நாடகம்

கோவை நூலை நாடகமாக எண்ணி உரை எழுதுகின்றார். "இத் தமிழ் நாடகத்தமிழ் எனப்படும். என்னை? கிளவி ஒழுங்கு படக்கோத்து, கதைபோல வந்து நாடகத்துக்கு ஏற்றலின், ஆயின், இலக்கணம் என்று இலக்கணத்தில் கூறியவாறு என்னை எனின்.

'அந் நாடகத் தமிழ்க்கே இலக்கணம் கூறினார் என்க" என்று இவர் கூறுவது நம் சிந்தனையைத் தூண்டுகிறது. (தஞ் - 1)

கோவையை நாடகமாகக் கருதிய இவர், இயற்கைப் புணர்ச்சி முதல்நாள் நிகழ்ச்சி, இடந்தலைப்பாடு இரண்டாம் நாள் நிகழ்ச்சி என்று நாளையும் நிகழ்ச்சியையும் ஒன்றுபடுத்திக் காட்டிச் செல்கின்றார். வரை விடை வைத்துப் பொருள் வயிற்பிரிதல் வரை 'பதினாறாம் நாள் நிகழ்ச்சி' என்று குறிப்பிட்டு, 'பொருள் வயிற் பிரிந்த தலைமகன் ஐம்பத்து ஒன்றாம் நாள் மீண்டு வந்தமையால் முப்பத்துநான்கு நாள் இடைப்பட்டது என உணர்க' என்று உரைக்கின்றார். நூலின் இறுதியில் 'இதுகாறும் ஐம்பத்து ஆறாம் நாள் செய்தி என்று உணர்க' என்று முடிக்கின்றார்.

கோவை கூறும் தலைமக்களைப் பற்றி இவர் கொண்டுள்ள கருத்தும், கோவை இலக்கியத்தை நாடகம் என்று கொண்டதற்குச் சான்றாய் உள்ளது.

"தலைமகன் என்றும் தலைமகள் என்றும் கூறிய இவர் யார் எனின், இல்லது இனியது நல்லது என்று புலவரான் நாட்டிக் கூறப்பட்ட மூன்றனுள், இல்லதாகிய புனைந்துரையால் தோன்றினோர் என்க. இவரது இலக்கணம் யாதோ எனின், பிணி மூப்பு இறப்புகள் இன்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மையராய், உருவும் திருவும் பருவமும் குலனும் குணனும் அன்பும் முதலியவற்றான் தம்முள் ஒப்புமையராய்ப் பொருவிறந்தார் என்ப".

## மடலேறல் — விளக்கம்

தமிழ் அகப்பொருள் நூல்களில் கூறப்படும் 'மடலேறல்' என்பது பற்றி இவர் மிக விரிவாக விளக்குகின்றார். பழந் தமிழ் நூல்களில் மடலேறல் பற்றி ஆங்காங்கே வரும் குறிப்புகளைத் திரட்டி ஓரிடத்தில் தந்து விளக்குகின்றார்.

"மடலேறலாவது — தலைவன் ஒவ்வாக் காமத்தால் பனங்கருக்காற் குதிரையும் பனந்தருவின் உள்ளவற்றால் வண்டில் முதலானவும் செய்து அக் குதிரையின் மேல் ஏறுவது. மடலேறுவான் திகம்பரனாய், உடலெங்கும் நீறுபூசிக் கிழி ஓவியர் கைப்படாது தானே தீட்டி, கிழியின் தலைப்புறத்தில் அவள் பேரை வரைந்து கைப்பிடித்து, ஊர் நடுவே நாற்சந்தியில் ஆகாரம் நித்திரையின்றி அக்கிழிமேற் பார்வையும் சிந்தையும் இருத்தி வேட்கை வயத்தனாய் வேறு உணர்வின்றி, ஆவூரினும் அழல் மேம்படினும் அறிதலின்றி, மழை வெயில் காற்றான் மயங்கா திருப்புழி, அவ்வூரிலுள்ளார் பலரும் கூடி வந்து 'நீ மடலேறுதியோ? அவளைத் தருதும்; சோதனை தருதியோ?' என்ற

வழி இயைந்தான் ஆயின், அரசனுக்கு அறிவித்து, அவன் ஏவலால் அவன் இணைந்து நையத் தந்து மடலேறு என்றவழி, ஏறும் முறைமை: பூளை, எலும்பு, எருக்கு இவைகளில் கட்டிய மாலை அணிந்துகொண்டு அம் மாவில் ஏற, அவ்வடத்தை வீதியில் ஈர்த்தலும், அவ்வுருளை உருண்டு ஓடும்பொழுது பனங்கருக்கு அறுத்த இடம் எல்லாம் இரத்தம் தோன்றாது வீரியம் தோன்றின் அப்போது அவளை அலங்கரித்துக் கொடுப்பது; இரத்தங் கண்டுழி அவனைக் கொலைசெய்து விடுவது. இவை புவரால் நாட்டிய வழக்கு என்று உணர்க" (தஞ் - 101)

மடலேறுதல் பற்றி இவர் கூறும் விளக்கம் இவையாகும். இவற்றில் பொருந்தாதவை உள்ளன. பனங்கருக்கு அறுத்த இடமெல்லாம் இரத்தம் தோன்றாது வீரியம் தோன்றும் என்பது சிறிதும் பொருந்தாது. மடலேறுபவனைக் கொல்லுதல் என்பது வரலாறு கூறாத செய்தி. மடலேறல் புலவரால் நாட்டிய வழக்கு என்பது தவறு. பல நூறு ஆண்டுகளுக்கு முன் மக்கள் வாழ்வில் நிகழ்ந்த ஒன்றே இலக்கியத்தில் இடம் பெறுகிறது என்பது அறிஞர்களின் முடிவு.

### சொல்லும் பொருள் விளக்கமும்

இவ்வுரையாசிரியர் தரும் சொற்பொருள் விளக்கம் மிக நயமானவை. சில விளக்கங்களைக் கீழே காண்போம்:

விருந்து என்பது உண்டிக்குப் பெயரோ எனின், விருந்து என்பது புதுமை. உலகின்கண் மருவி ஊண் மேல் நின்றது. (தஞ் - 140)

ஓம்படை — மறவாமை (தஞ் - 139)

தேர்பண்ணல் - தெர் செலுத்தற்கு உரியன எல்லாம் அமையச் செய்தல். (தஞ் - 262)

இப்பி ஆயிரம் சூழ்ந்தது இடம்புரி; இடம்புரி ஆயிரம் சூழ்ந்தது வலம்புரி; வலம்புரி ஆயிரம் சூழ்ந்தது சலஞ்சலம். (தஞ் - 62)

## 6. மயிலேறும் பெருமாள் பிள்ளை

கல்லாடம் என்னும் நூலுக்கு உரை இயற்றியவர் மயிலேறும் பெருமாள் பிள்ளை.

கல்லாடம் அகப்பொருள் இலக்கிய நூலாகும். இதில் நூற்றிரண்டு அகவற் பாடல்கள் உள்ளன. இந்நூலில் மதுரையில் நடந்த பல திருவிளையாடல்கள் கூறப்படுகின்றன. இதனை

இயற்றியவர் கல்லாடர். "கல்லாடம் கற்றவனோடு மல்லாடாதே" என்ற பழமொழி இந்நூலின் சிறப்பை உணர்த்தும். இந்நூல் கி.பி. எட்டாம் நூற்றாண்டுக்குப்பின் தோன்றியது என்பர்.

எட்டாம் நூற்றாண்டிற்குப் பின் தோன்றியதாகக் கருதப்படும் கல்லாடத்திற்குப் பதினேழாம் நூற்றாண்டில்தான் உரை தோன்றியது. மயிலேறும் பெருமாள் பிள்ளை கல்லாடத்தின் முதல் முப்பத்தேழு பாடல்களுக்கு உரை எழுதியுள்ளார். ஏனைய அறுபத்தைந்து பாடல்களுக்குப் புதுவை சுப்பராய முதலியார் பதவுரை பின்னர் எழுதினார்.

மயிலேறும் பெருமாள் பிள்ளை பாண்டி நாட்டினர். திருநெல்வேலி இவரது பிறப்பிடமும் இருப்பிடமுமாகும். இவர் சைவ வேளாளர் குடியில், தாண்டவ மூர்த்திப் பிள்ளையின் மகனாகத் தோன்றினார். கல்வி கேள்விகளில் வல்லவராகிப் பெரும்புலவராய் விளங்கினார். சைவ சமயத்தை மேற்கொண்டு ஒழுகி, திருவாவடுதுறை மடத்துடன் தொடர்புகொண்டு வாழ்ந்தார். இலக்கணக் கொத்தின் ஆசிரியராகிய சாமிநாத தேசிகர் இவரிடம் கல்விகற்ற மாணவர். சாமிநாத தேசிகர் தம் ஆசானை,

> **திருநெல் வேலி எனும்சிவ புரத்தன்**
> **தாண்டவ மூர்த்தி தந்தசெந் தமிழ்க்கடல்**
> **வாழ்மயி லேறும் பெருமாள் மகிபதி**

என்று போற்றுகின்றார்.

## 7. கம்பராமாயண உரைகள்

ஆங்கிலேயர்களின் முன்னால் இந்திய நாட்டுச் செல்வம் அனைத்தையும் ஒரு பக்கம் குவித்து வைத்து, மற்றொரு பக்கம் ஷேக்ஸ்பியர் நாடகச் செல்வத்தை வைத்து, "இவ்விரு செல்வங்களுள் எந்த ஒன்றினைப் பெற விரும்புகின்றீர்கள்?" என்று அவர்களை வினவினால், ஷேக்ஸ்பியரின் நாடகச் செல்வத்தையே பெற விரும்புவதாய் அவர்கள் உரைப்பர் என்று கூறுவதுண்டு. இவ்வாறு கூறி, ஆங்கிலேயர்களின் இலக்கிய ஆர்வத்தையும், ஷேக்ஸ்பியரின் சிறப்பையும் புகழ்வர்.

இதே போன்ற கருத்தை, கம்பரைப் பற்றிய தனிப்பாடல் ஒன்று கூறுகின்றது.

"இந்த உலகிலுள்ள எல்லாச் செல்வங்களையும் பெற்று அரசாளும் உரிமையுடன் வீற்றிருக்கும்போது ஏற்படுகின்ற

இன்பமும், மேல் உலகத்தில், தன் நிழலில் நிற்பவர் பெற நினைத்தவற்றை எல்லாம் உடனே தருகின்ற கற்பக மரத்தின் நிழலில் நின்றிருக்கும்போது தோன்றுகின்ற இன்பமும் கம்பன் கவிதையைக் கற்கும்போது அடையும் களிப்புக்கு இணையாகா".

இக் கருத்தைப் பின்வரும் பாடல் அறிவிக்கின்றது:

**இம்பர் நாட்டின் செல்வமெல்லாம்**
**எய்தி அரசரோ(டு) இருந்தாலும்**
**உம்பர் நாட்டின் கற்பகக்கா**
**ஓங்கு நீழல் இருந்தாலும்**
**செம்பொன் மேரு அனையபுயத்**
**திறல்சேர் இராமன் திருக்கதையில்**
**கம்ப நாடன் கவிதையிற்போல்**
**கற்றோர்க்(கு) இதயம் களியாதே,**

இந்தப் பாடல், கம்பரது கவிதையின்மீது தமிழ் மக்களுக்கு உள்ள ஆர்வத்தையும், கம்பரின் சிறப்பையும் போற்றி யுரைக்கின்றது.

கலைமகளைப் புலவர்கள் தாய் என்றும், தெய்வம் என்றும் போற்றுவர். ஆனால், கம்பர் மறைந்த நாளில் பெரிதும் துன்புற்ற புலவர் ஒருவர் பாடிய பாடல், கலைமகள் கம்பனுக்கு மனைவி என்றும், கணவனாகிய கம்பன் இறந்ததால் கலைமகள் மங்கல நாண் இழந்தாள் என்றும் கூறுகின்றது.

**இன்றோநம் கம்பன் இறந்தநாள் இப்புவியில்**
**இன்றோநம் புன்கவிகட்கு ஏற்றநாள் — இன்றோதான்**
**பூமடந்தை வாழப் புவிமடந்தை வீற்றிருப்ப**
**நாமடந்தை நூல்இழந்த நாள்.**

இந்தப் பாடலைப் படிக்கும்போது ஹோமரைப் பற்றி ஐரோப்பியர் கூறும் புகழ் மொழி நினைவுக்கு வருகின்றது.

"நெடுநாள் மகப்பேறு இன்றி வருந்திய இயற்கையன்னை ஹோமரை ஈன்றெடுத்தபின், மகப்பேறு அற்று விட்டாள்!"

இத்தகைய புகழுரைகள் யாவும் கற்றோர் உலகம், புலவர்களை எவ்வளவு மதித்துப் போற்றி வருகின்றது என்பதை விளக்குகின்றன.

தமிழச் சாதி அமரத்தன்மை வாய்ந்தது என்று எண்ணிப் பாரதியார் இறும்பூது எய்துவதற்கு உரிய காரணங்களைப் பின்வருமாறு கூறுகின்றார்.

**சிலப்பதி காரச் செய்யுளைக் கருதியும்**
**திருக்குறள் உறுதியும் தெளிவும் பொருளின்**

**ஆழமும் விரிவும் அழகும் கருதியும்**
**எல்லைஒன்று இன்மை எனும்பொருள் அதனைக்**
**கம்பன் குறிகளால் காட்டிட முயலும்**
**முயற்சியைக் கருதியும் முன்புநான் தமிழச்**
**சாதியை அமரத் தன்மை வாய்ந்ததுஎன்று**
**உறுதி கொண்டு இருந்தேன்.**

இவ்வாறு போற்றுவார் ஒருபுறம் இருப்பினும், கம்பருக்குக் காலந்தோறும் எதிர்ப்பு இருந்து வந்திருக்கிறது. கம்பர் வாழ்ந்த காலத்தில் ஒட்டக்கூத்தர் இவரை எதிர்த்தார் என்று வாய்மொழிக் கதை கூறுகின்றது. உரையாசிரியர்கள் கம்பர் பாடல்களை மேற்கோள் தராமல் ஒதுக்கிவிட்டனர். ஆனால் கம்பரைப் பொதுமக்கள் கவிச்சக்கரவர்த்தி என்று போற்றினர்; அவரது கவிதைகளைச் சுவைத்து மகிழ்ந்தனர்; அவர் கூறும் இராமன் கதையில் திளைத்தனர். கதை சொல்லும் கலைஞர்கள் கம்பராமாயணத்தை மக்களிடையே பரப்பி வந்தனர்.

மக்கள் கவிஞராக விளங்கிய கம்பரின் இராமாயணத் திற்குப் பழங்காலத்தில் புலவர்கள் யாரும் உரை எழுதவில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டில் அச்சு இயந்திரம் தோன்றிய பிறகுதான் உரை இயற்றிக் கம்பராமாயணத்தைப் புலவர்கள் சிலர் வெளியிட்டனர்.

திரிசிரபுரம் வி. கோவிந்தப்பிள்ளை *(?-1890)* சுந்தர காண்டத்திற்கு 1871-ஆம் ஆண்டில் உரை இயற்றி வெளியிட்டார். பால காண்டத்திற்கு இராமசாமி நாயுடு இயற்றிய உரை 1887-ல் வெளிவந்தது. சுப்பராயச் செட்டியார் *(?-1894)* அயோத்தியா காண்டத்திற்கு உரை இயற்றினார். 1896-இல் திருமயிலை சண்முகம் பிள்ளை அயோத்தியா காண்டத்திற்கு விளக்கம் எழுதினார். உடுமலைப்பேட்டை மு. ரா. கந்தசாமிக் கவிராயர் *(?-1948)* ஆரணிய காண்டத்திற்கு 1903-இல் உரை இயற்றினார். இவர்களுக்குப் பின் வை.மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் கம்பராமாயணம் முழுமைக்கும் சிறந்த விளக்கவுரை எழுதி வெளியிட்டுள்ளார்.

## இன்கவித் திரட்டும் உரையும்

ஆழ்வார்குறிச்சி வெ.ப. சுப்பிரமணிய முதலியார் (1857-1964), 'கம்ப ராமாயண இன் கவித் திரட்டும் உரையும்' என்ற நூலை இயற்றியுள்ளார். இந்த நூல், தொடர் கட்டுரையாகச் செந்தமிழ் இதழில் வெளிவந்தது. கதைத் தொடர்ச்சியுடன் அமைந்த பாடல்களை ஒன்று சேர்த்து அமைத்து இனிய விளக்கம் எழுதியுள்ளார்.

இந்த நூல் தோன்றுவதற்குப் பின் வரும் செய்யுள் காரணமாய் இருந்தது:

**சுற்றத்தார் தேவரொடும் தொழநின்ற**
**கோசலையைத் தொழுது நோக்கி**
**வெற்றித்தார்க் குரிசில்இவர் ஆர்என்று**
**குகன்வினவ வேந்தர் வைகும்**
**முற்றத்தான் முதல்தேவி மூன்றுலகும்**
**ஈன்றானை முன்ஈன் றானைப்**
**பெற்றத்தால் பெருஞ்செல்வம் யான்பிறத்த**
**லால்துறந்த பெரியாள் என்றான்.**

இச் செய்யுள் பொருளாழம் உடையது என்று முதலியாரின் நண்பர் சிலர் அடிக்கடி கூறிவந்தனர். அதனால், இச் செய்யுளின் பொருளை ஆழ்ந்து நோக்கினார். அதன் பயனாய்ப் பின்வரும் விளக்கத்தை எழுதினார்.

1. "சாமானியர் அல்லாத உயர்ந்த அரசரான சுற்றத்தாரே அன்றி, தேவரும் தொழுது கொண்டிருக்கும் ஒருவரைத் தெரிய விரும்புவோர். அவரைக் கைந் நீட்டிச் சுட்டிக் காட்டி, 'இவர் யார்?' என்று கேட்டால், தகாத முறை என்று கூறாமல் கூறி, தக்க முறை இது என்று உணர்த்துவாராய்,

**கோசலையைத் தொழுது நோக்கி...**
**... இவர் ஆர்என்று**
**குகன் வினவ**

என்றார்.

2. மேலும் 'இவர் ஆர்?' என்ற கேள்விக்குத் தசரதனுக்குத் தேவி, இராமனுக்குத் தாய் என்ற விடைகள் இயல்பான விடைகளாயிருப்ப, அவ்விடைகளை அவ்வாறு கூறாது, அவற்றைக் கூறும் முகத்தால் 'வேந்தர் வைகும் முற்றத்தான்' எனத் தசரதனைச் சிறப்பித்தும்; 'முதற்றேவி' எனக் கோசலையை மேம்படுத்தியும், 'மூன்றுலகும் ஈன்றானை முன் ஈன்றான்' என இராமனை விதந்தும் கூறுவானேன் எனில், அக்கேள்வி கேட்ட சமயத்தில், கோசலா தேவியைச் சுற்றத்தாரும் தேவரும் தொழுத வண்ணமாய் இருந்தனர் ஆதலால், அத் தேவியைக் கைந் நீட்டிக் காட்டலாற் சுட்டாது, கைகூப்பி நோக்குதலாற் சுட்டின குகன், 'சுற்றத்தார் தொழுவானேன்?' 'தேவர் தொழுவானேன்?' என்று தெரிய விரும்பினான் என்பது ஊகித்துணர்தற்பாலது. இவ்வாறாகக் குகன் கேளாது கேட்ட கேள்விகளுக்கு விடைகளாகப் பரதன், 'அரசர் வணங்கும் சக்கரவர்த்தியாகிய தரசதனது பட்ட மகிசி (பட்டத்து அரசி) ஆதலால் சுற்றத்தார் தொழுகின்றார்கள்; மகா விட்டுணுவின் அவதாரமான

இராமனைப் பெற்றவள் ஆதலால், தேவர்கள் வந்தனை செய்கிறார்கள் என்று தெரிவிக்க அவ்வாறு விசேடித்துக் கூறினான் என்க.

3. இன்னும் 'இவர் ஆர்?' என்ற வினாவுக்குச் சக்கர வர்த்தியாகிய தசரதனுக்கு முதல் மனைவி, திருமாலாகிய இராமனுக்கு மாதா என்று கூறியுள்ளதன்மேல், இராமனைப் பெற்றதால் பெறும் செல்வம், யான் பிறத்தலால் துறந்த பெரியாள்' என்று பரதன் ஏன் கூறினான் எனில், அவன் மேற்கூறிய விடைகளை அளிக்கும்போது, கோசலா தேவி முன்னிருந்த ஆனந்த நிலையும் இப்போதுள்ள துக்க நிலையும் அவன் மனத்தில் இயல்பாகத் தோன்றி வருத்தம் செய்து, 'ஐயோ நான் ஒரு பாவி பிறவாதிருந்தால், இவ் அன்னையாருடைய ஆனந்த நிலை மாறியிராதே!' என்ற எண்ணம் தோன்ற அதனை அவசனாய் வெளியிட்டுக் கூறினான் என்க.

4. இனி, பரதன் தான் பிறந்ததனால் கோசலாதேவி செல்வத்தை இழந்தாள் என்றது, தான் பிறக்கவில்லையானால், தனக்காகத் தன் தாய், தசரதன் இராமனுக்குக் கொடுத்த இராச்சியத்தைப் பிடுங்கிக் கொண்டு இராமனைக் காட்டுக்கு ஓட்டி இராள் என்றும், அவள் அவ்வாறு செய்யாதிருக்கவே கோசலாதேவி தசரதன் இறவாதிருக்கும் மாங்கலிய பாக்கியத்தையும், இராமன் முடி சூடி ஆளும் இராச்சியச் செல்வத்தையும் இழந்திராள் என்பதையும் குறிப்பித்தது".

இவ்வாறு ஒரு பாடல் தந்த விளக்கம், மற்றப்பாடல் களுக்கும் விளக்கம் காணத் தூண்டுதலாய் அமைந்துள்ளது. தேர்ந்தெடுத்துப் பல பாடல்களுக்கு உரையும் விளக்கமும் நயமும் இவர் எழுதினார்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் — ஆராய்ச்சித் துறையிலிருந்து வெளி வந்திருக்கும் கம்பராமாயண உரைகள் திருத்தமானவை; கம்பரையும் வால்மீகரையும் ஒப்பிட்டு நோக்குபவை: விரிவான ஆராய்ச்சியும் நயமும் கூறுபவை; கம்பனின் புலமைத் திறனைத் தமிழுலகிற்கு அறிவிக்கும் நோக்கத்துடன் எழுதப்பட்டவை. கம்பராமாயணத்தைத் தேவார திருவாசகங்களுடன் ஒப்பிட்டும், கம்பனின் சங்கநூற் புலமையை எடுத்துக்காட்டியும் செல்வது குறிப்பிடத் தக்கதாகும்.

## 8. புராண இதிகாச உரைகள்

தமிழ்மொழியில் இராமாயணக் கதையும் பாரதக் கதையும் பல்லவர் காலத்திலேயே (600-900) நூல் வடிவில் மக்களிடையே

2.38

பரவி இருந்தன. ஆனால், பிற்காலத்தில் அவை எக் காரணத்தாலோ அழிந்துபோயின. இடைக்காலத்தில் பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குப் பின் கம்பரும் வில்லிபுத்தூராரும் இயற்றிய இராமாயணமும் பாரதமும் மக்களிடையே பரவின. இவ்விரு நூல்களுக்கும் மிகப் பிற்காலத்தில்தான் உரைகள் தோன்றின.

பதினாறாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே தலபுராணங்கள் பல தோன்றின. அப்புராணங்களில் கந்த புராணம், தணிகைபுராணம், காஞ்சிபுராணம், திருவிளையாடல் புராணம், அரிச்சந்திர புராணம், நைடதம் ஆகியவை தவிர ஏனைய புராணங்களின் பெயரும் தெரியாமல் முடங்கின; படிப்பாரும் எடுப்பாரும் இன்றி ஏடுகளாய்க் கிடந்தன. இப் புராணங்களுக்கு உரைகள் எழுதி, மக்களிடையே பரப்பும் முயற்சி பத்தொன்பதாம் நூற்றாண்டில் தொடங்கியது.

இதிகாசம் புராணம் ஆகியவற்றிற்குத் தோன்றிய உரைகளைக் காண்போம்:

பாரத உரை — அரசஞ் சண்முகனார்.

பாரதம், ஆதிபருவம் உரை — பொன்னம்பலம் பிள்ளை (19-நூற்.).

திருவிளையாடற் புராண உரை — இராமலிங்க சுவாமி பிள்ளை (? - 1801).

திருவிளையாடற் புராண உரை — ஈக்காடு இரத்தின வேலு முதலியார்.

நைடத உரை — காஞ்சிகுமார சுவாமி தேசிகர் (1842).

மயூரகிரிப் புராண உரை — நல்லூர் பொன்னம்பலப் பிள்ளை (1836-1902).

கூர்ம புராண விரிவுரை — நா. கதிரைவேல் பிள்ளை (1844-1907).

அருணாசல புராண உரை — மழவை மகாலிங்கர் (1900).

திருச்செந்தூர்ப் புராணம் உரை — நீர்வேலி சிவப்பிரகாச பண்டிதர்; மாப்பாண முதலியார்.

பழனித்தல புராண உரை — நா. கதிரைவேல் பிள்ளை (1844-1907).

திருவாதவூரர் புராண உரை — குமாரதேவர்.

விநாயக புராண உரை — மயிலாடுபுரம் கிருஷ்ணஐயர் (1894).

திருச்செங்கோட்டுப் புராண உரை — சேலம் சிற்றம்பல உபாத்தியாயர் (20-நூற்).

இரகுவம்சம் (தமிழ் மொழிபெயர்ப்பு 2404 பாடல்கள்)

உரை : கணேசய்யர்.

## 9. வசனங்கள்

எழுதப் படிக்கத் தெரிந்த பொதுமக்களுக்குப் பயன்படும் வகையில், செய்யுளில் இருந்த பல நூல்களை உரைநடையில் எழுதிப் பரப்பும் முயற்சி, இரண்டு நூற்றாண்டுகளாக நடைபெற்று வருகின்றது. செய்யுளை அடியொற்றிப் பொழிப்புரை திரட்டிப் புராண இதிகாசக் கதைக்ளை வசனம் என்ற பெயரில் புலவர்கள் பலர் வெளியிட்டுள்ளனர். வசன நூல்கள் எழுதியவர்களைக் காண்போம்:

**ஆறுமுக முதலியார் (1822–1879)**

பெரிய புராண வசனம், திருவிளையாடற் புராண வசனம்.

**பூவை. கலியாணசுந்தரம் (1854–1819)**

திருப்பாசூர்ப் புராண வசனம், திருவலிதாயப் புராண வசனம், திருவேற்காட்டுப் புராண வசனம், திருவொற்றியூர்ப் புராண வசனம், சீகாளத்திப் புராண வசனம்.

**வ.சு. சண்முகம் பிள்ளை (1880–1941)**

திருவாடானைப் புராண வசனம், கோரணத்தல புராண வசனம், திருக்குடவாயிற் புராண வசனம், கண்டியூர்ப் புராண வசனம்.

**மு. ரா. அருணாசலகவிராயர் (20 நூற்.)**

திருச்செந்தூர்ப் புராண வசனம், திருப்பரங்குன்றப் புராண வசனம், திருக்குற்றாலப் புராண வசனம்.

**காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு**

பிரபுலிங்க லீலை வசனம் (1902)

**ச.க. இராகவ முதலியார்**

தேம்பாவணி வசனம்

**பு. து. இராமசாமிப் பிள்ளை**

குடந்தைப் புராண வசனம் (1933).

**தேவயம்பாடி சுப்பிரமணிய ஐயர்**

*திருவிரிஞ்சை புராண வசனம்.*

**அருணாசலக் கவுண்டர்**

*மூர்த்திமலைப் புராண வசனம்*

**தஞ்சைக் கலியபெருமாள் பிள்ளை**

*திருமழுவாடிப் புராண வசனம்.*

**புதுவை நயினாத்தை முதலியார்**

*ஆரிய புராண வசனம் (1792).*

## 10. நீதி நூல் உரைகள்

துள்ளித் திரிகின்ற பருவத்தில் துடுக்கு அடக்கிப் பள்ளியில் பயில்கின்ற சிறுவர்களுக்கு நீதி புகட்டுகின்ற வகையில், தமிழில் பல சிறந்த நூல்கள் உள்ளன. ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, உலக நீதி, நறுந்தொகை (வெற்றி வேற்கை), நன்னெறி ஆகிய ஏழு நூல்களையும் குழந்தைக் குறுந்தமிழ் என்று டாக்டர் வ.சுப. மாணிக்கனார் போற்றுகின்றார்:

**ஆத்திசேர் கொன்றை அழகுதமிழ் மூதுரை**
**பாத்திசேர் நல்வழி பண்புலகம் — பூத்த**
**நறுந்தொகை நன்னெறி ஏழும் குழந்தைக்**
**குறுந்தமிழ் என்றறிந்து கொள்**

இவையேயன்றி நீதிவெண்பா நீதிநெறி விளக்கம் அறநெறிச்சாரம் ஆகிய மூன்றும் சிறுவர்களுக்கு ஏற்ற நீதி நூல்கள்.

ஆங்கிலேயர் நம் நாட்டில் பள்ளிகள் நிறுவி, பாட திட்டங்களை அமைத்துக் கல்வியைப் பரப்பத் தொடங்கிய காலத்தில் — பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் — நீதிகள் பாட நூலில் இடம்பெற்றன. அவற்றைப் பதிப்பிக்கவும் அவற்றிற்கு எளிய உரைகள் எழுதவும் பலர் முன் வந்தனர்.

1868-ஆம் ஆண்டில் கா. பச்சையப்ப முதலியார் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வெற்றி வேற்கை ஆகிய நூல்களுக்கு உரை இயற்றி வெளியிட்டார். 1898-ஆம் ஆண்டு ஆத்திசூடிக்கு எஸ். சாமிநாத ஐயரும், 1873-ல் வாக்குண்டாம் என்ற நூலுக்குத் தில்லையம்பூர் சந்திர சேகரக் கவிராச பண்டிதரும் உரை இயற்றினர்.

நீதிவெண்பாவுக்கு ஆறுமுக நாவலர் உரை இயற்றியுள்ளார்.

1870-இல் நல்வழிக்குப் பதவுரையும் பொழிப்புரையும் தோன்றின. நன்னெறி 1870-இல் உரையுடன் வெளிவந்தது. நீதிவெண்பாவிற்கு 1876-இல் காஞ்சிபுரம் சபாபதி முதலியார் உரை இயற்றினார். நீதிநெறி விளக்கத்திற்கு 1859-இல் சோடசாவதானம் சுப்பராய செட்டியாரும், 1886-இல் முருகேச முதலியாரும், 1943-இல் காழி சிவ. கண்ணுசாமிப் பிள்ளையும் உரை இயற்றினர்.

அண்மைக் காலத்தில் நீதி நூல்களுக்குப் பலர் உரை எழுதி வெளியிட்டுள்ளனர்.

பள்ளிச் சிறுவர்களின் பாடத் திட்டத்தில் நீதி நூல்கள் முழுமையாக இடம்பெற வேண்டும் என்ற கருத்தை டாக்டர் வ. சுப. மாணிக்கனார் பின்வருமாறு வற்புறுத்தி உரைக்கின்றார்.

"இச் சுவடிகள் சிறுபருவம் தொட்டே கற்பிக்கத்தக்கன என்று ஆறுமுக நாவலர், கீழ் வகுப்புகளில் இவற்றைச் செய்யுட் பாட நூலாக அமைத்தார். அதனால் சிறு நூலாயினும் ஒரு நூலை முழுதும் கற்றல், பிரித்தும் புணர்த்தும் பயிலல், அருஞ்சொற் பொருள் அறிதல், யாப்பு மனம் பெறுதல், வரப்பண்ணி ஒப்பித்தல் முதலாய பல மொழிக் கூறுகள் ஈரத்தடம் போலக் குழந்தைகள் அறிவில் பதியலாயின.

நம் முன்னோர்கள் திண்ணைப் பள்ளிகளில் இச் சிறு முது நூல்களை முறையாகப் பயின்று குன்றாத் தமிழொலியும் குறையாத் தமிழறிவும் வளமான தமிழ் அடிப்படையும் வாய்த்திருந்தனர். முதுமையிலும் இளங் கல்வியை நினைந்து நினைந்து வாழ்ந்தனர். இத் தொல் மரபுப்படி ஏழ் இளந் தமிழ் மீண்டும் தொடக்கப்பள்ளியில் முழு நூலாக இடம் பெறுவதாக!"*

## 11. நோக்கு

ஒரு பாட்டை ஆழ்ந்து பயின்று நுணுகி நோக்கி நுண் பொருள் கண்டு வியந்துபோற்றி இலக்கியச் சுவையில் திளைத்து விளக்கம் கூறி மகிழ்வது, தமிழிலக்கிய உலகில் பல ஆண்டுகளாக இருந்துவரும் வழக்கமாகும். தொல்காப்பியர் செய்யுளுக்குரிய பல உறுப்புக்களில் நோக்கு என்ற ஒன்றைக் கூறி,

**மாத்திரை முதலா அடிநிலை காறும்**
**நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே**

* இலக்கிய விளக்கம் பக்கம். 117.

என்று அதனை விளக்குகின்றார். இச்சூத்திரத்திற்கு உரை எழுதிய பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் 'முல்லை வைந்நுனை' என்ற அகநானூற்றுப் பாடலை (4) எடுத்துக்காட்டி, அதில் அரிய பெரிய நுணுக்கங்கள் அடங்கியிருப்பதை வெளிப்படுத்தியுள்ளனர். இவ்வாறு ஏதேனும் ஒரு பாட்டில் மூழ்கி அதனை நோக்கி மகிழ்வது மற்ற உரையாசிரியர்களிடமும் உள்ள இயல்பாகும்.

இளம்பூரணரும் பேராசிரியரும் 'வையங்காவலர்' என்ற புறநானூற்றுப் பாடலை உவம இயலில் எடுத்துக்காட்டி விளக்கம் பல கூறி நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றனர்.

நன்னூலுக்கு உரை இயற்றிய சங்கர நமசிவாயர் 'இணர் எரிதோய்வன்ன' என்ற குறளுக்கு (நன்: 360) மிக விரிவாகப் பொருள் எழுதுகின்றார்.

திருக்கோவையாருக்கு உரை இயற்றிய பேராசிரியர் 'ஈசற்குயான் வைத்த' என்ற பாடலுக்கு (109) மிக விரிவாக விளக்கம் எழுதிச் சுவையூட்டுகின்றார்.

இவ்வாறு பல நூற்றாண்டுகளாகப் புலவர் பெருமக்களின் பலவகையான பாடல்களைச் சுவைத்து இன்புற்ற மரபில் வந்த ஒருவர்,

**வாக்கிற்கு அருணகிரி வாதவூ ரர்கனிவில்**
**தாக்கில் திருஞான சம்பந்தர் — நோக்கிற்கு**
**நக்கீர தேவர் நயத்திற்குச் சுந்தரனார்**
**சொற்குறுதிக்கு அப்பரெனச் சொல்**

என்று பாடியுள்ளார்.

திருவரங்கக் கலம்பகம் சிறப்புப்பாயிரச் செய்யுள்,

**சொல்நோக்கும் பொருள்நோக்கும்**
**தொடைநோக்கும் நடை நோக்கும்**

என்று கூறுகின்றது.

பாட்டை நோக்கி மகிழும் பரம்பரை, தொடர்ந்து காலந்தோறும் வந்துள்ளது. தமிழ்த்தென்றல் திரு.வி.க. "நன்கடம்பனைப் பெற்றவள்" என்ற அப்பர் திருப்பாட்டில் மூழ்கி அப்பாடலின் இறுதியடியாகிய 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்னும் தலைப்பில் விரிவுரை நிகழ்த்திச் சிறு நூல் ஒன்றும் இயற்றியுள்ளார். அப்பாடல் தம்மை ஆட்கொண்ட வகையை - அப்பாடலின் பெருமையைப் பின்வருமாறு புகழ்ந்து கூறுகின்றார்.

"என்கடன் பணிசெய்து கிடப்பதே என்னும் திருவாக்கு என் கண்ணுக்குப் புலனாகிய நாள்தொட்டு, அதை ஓதி ஓதி எனது

நாவும் தழும்பேறியது. உறக்கத்திலும் எனது நா அத்திருவாக்கை உச்சரித்துக் கொண்டிருக்கும். நான் அதை மறந்தாலும் அஃது என்னை மறப்பதில்லை. 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்னும் பொன்னுரையில் எனக்குள்ள அன்புக்கு ஓர் அளவும் உண்டோ? என்னைத் திருப்பணி வழியில் நிறுத்தி ஆட்கொண்ட அத்தமிழ்மொழி எனது குருமொழியாகும். அக் குருமொழி என்னைப் பண்படுத்தி வருவதுபோல் வேறு எம்மொழியும் பண்படுத்தி வருவதில்லை. உலகிலுள்ள அறிவு நூல்களின் திரண்ட பொருள், 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்பதாகவே இருக்கிறது. இவ்வொன்றே பல அறிவு நூல்களாகவும் விரிந்து நிற்கிறது" (என் கடன் பணிசெய்து கிடப்பதே (1952) (பக்கம் 12)).

'பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்' என்னும் பாடலில் வரும் 'நினைப்பவர் மனம்' என்ற தொடரை அமைத்து அப் பெரியவர் சிறுநூல் ஒன்று இயற்றியுள்ளார். 'முருகன் அல்லது அழகு' என்ற அவரது நூலில் திரு முருகாற்றுப்படையின் சில அடிகளுக்கு விளக்கம் காணலாம்.

அருட்பெருஞ் சோதியாகிய இராமலிங்க சுவாமிகள் 'உலகெலாம் உணர்ந்து' என்ற சேக்கிழார் பாடலுக்குப் பல மணி நேரம் விரிவுரை நிகழ்த்தினார். அந்த விரிவுரை அச்சில் வந்துள்ளது.

டாக்டர் மு.வ. இயற்றிய 'ஓவச்செய்தி', 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற நூல்களும் நோக்குவகையைச் சேர்ந்தவை. பன்மொழிப்புலவர் தெ.பொ.மீ. 'கானல் வரியும்', கோதண்டபாணி பிள்ளை 'முதற் குறள் உவமை'யும், செ. வேங்டராமச் செட்டியார் 'புனையா ஓவியம்', 'பெறலரும் பரிசில்' ஆகிய நூல்களும் இயற்றியுள்ளனர்.

பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் குறுந்தொகைப் பாட்டின் கடவுள் வாழ்த்தாகிய 'தாமரை புரையும்' என்ற பாடலுக்குத் தந்துள்ள அரிய விளக்கம் படித்து மகிழத் தக்கதாகும். தமிழ்ப் பேராசிரியர் லெ.ப.கரு. இராமநாதன் செட்டியார் 'அடிபணிந்த திருமகனை' என்ற சேக்கிழார் பாடலுக்கு (பெரிய புராணம், திருநகர்ச் சிறப்பு-48) நோக்கு என்ற நூலில் மிகச் சிறந்த விளக்கம் எழுதியுள்ளார்.

தமிழறிஞர் கி.வா. ஜகந்நாதன் சங்க இலக்கியப் பாடல்களுக்கும் திருமுறைப் பாடல்களுக்கும் விரிவுரை எழுதியுள்ளார்.

## ஒரு குறள்

புலமைச் செல்வர் ந. ரா. முருகவேள், 'இலக்கணத்திற் கற்பனைகள்' (1961) என்ற சிறந்த ஆய்வு நூலில் (பக்-111, 112).

**ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்**
**போஒம் அளவும்ஓர் நோய்**

என்ற குறளுக்கு மிகச் சிறந்த நுண்பொருள் விளக்கம் தந்துள்ளார்.

1. "பிறர் சொல்லியும் கேளாமல், தாமும் உணராமல் மனம் சென்றவாறு நடக்கும் புல்லறிவாளர்களின் புன்மையையும், அவர்கள்பால் தமக்குள்ள வெறுப்பினையும் சீற்றத்தினையும் ஆசிரியர் திருவள்ளுவர், 'ஏவவும் செய்கலான் தான் தேறான்' என முதற்கண் னகரஒற்று ஈற்றுச் சொல்லால் குறிப்பிடுதலாலும்;

2. பின்னர், அதற்கு ஏற்ப 'அம் மனிதன்' என உயர்திணை ஆண்பாலால் குறியாது 'அவ்வுயிர்' என அஃறிணையாகச் சுட்டுதலாலும்;

3. அவ்வளவில் அமையாது 'நோய்' என உருவகம் செய்தலாலும்;

4. நோய் போலச் சமுதாயத்தைப் பற்றிப் பீழிக்கும் அப்புலறிவாளர்கள் 'வாழும் அளவும்' எனற்பாலதனைப் 'போஒம் அளவும்' என்று மாற்றி உரைத்தலாலும்;

5. நல்லவர்கள் எல்லோரும் மிக மிக விரைவில் மறைந்துவிட இத்தகைய புல்லறிவாளர்கள் நெடுங்காலம் உலகில் உழன்று கொண்டிருக்கும் கொடுமையினைப் 'போஒம் அளவும்' என்னும் அளபெடைக் குறியால் புலப்படுத்துதலாலும் உணர்த்துகின்றார்".

# இலக்கண உரையாசிரியர்கள் – II

## 1. யாப்பருங்கல விருத்தியுரை

தமிழ்மொழிக்குரிய யாப்பு இலக்கணம் மிகவும் தொன்மையானது; வடமொழிச் சார்பும் ஊடுருவலும் இல்லாதது; தனித்தன்மையுடையது. அணி இலக்கணத்தில் வட மொழியின் செல்வாக்குப் பரவியது போல, யாப்பிலக்கணத்தில் வடமொழி நுழைய முடியவில்லை.

டாக்டர் மு.வ. தமிழ்யாப்பின் பெருமையைப் பின்வருமாறு புகழ்ந்துள்ளார் (மொழி வரலாறு (1954); பக் – 385, 386):

“வடமொழித் தொடர்பற்ற யாப்பிலக்கணம், பழந்தமிழில் அமைந்திருத்தல் ஆராய்ந்து போற்றுதற்கு உரியதாகும். வெண்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பா எனப் பாவும், அவற்றிற்கு ஏற்பச் செப்பல் அகவல் துள்ளல் தூங்கல் என ஓசையும் தனித்தனியே அமைந்து, தளை தொடை முதலியனவும் தனியே அமைந்துள்ள முறை வடமொழியோடு எவ்வகையிலும் தொடர்பற்றதாக உள்ளது. கலப்பற்ற தூய யாப்பிலக்கணம் ஒரு மொழிக்கு அமைய வேண்டும் எனின், அந்த மொழி அதற்குமுன் எவ்வளவு பண்பட்டுத் தனியே வளர்ந்திருக்க வேண்டும் என்பது, எண்ணிப் போற்றுதற்கு உரியதாகும்.”

மொழி ஞாயிறு தேவநேயப் பாவணர், தமிழ் இலக்கிய வகைகளை உலகமொழிகளுடன் ஒப்பிட்டு வியந்து பின்வருமாறு போற்றுகின்றார் (பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும் (1966) பக்-37).

1. “காக்கைக் காகா கூகை என்னும் ஓர் எழுத்துப் பாட்டும்;

2. சென்னி முகமாறுளதால் என்னும் காளமேகம் மும் மடியிரட்டுறலும்;

3. இராமலிங்க அடிகளின் மாணவர், தொழுவூர் வேலாயுத முதலியார் பாடிய பதின்பங்கி (தசபங்கி), பதிற்றுப் பதின்பங்கி (சதபங்கி) என்னும் சொல்லணிகளும்;

4. அருணகிரியார் பாடிய திருப்புகழ் வண்ணங்களும்;

5. பட்டினத்தார் பாடிய உடற்கூற்று வண்ணமும்;

6. அகப்பொருட் செய்யுட்களில் வரும் உள்ளுறை உவமையும்

— போன்ற அருஞ்சுவை இன்பக்கூறுகள், வேறு எம் மொழி இலக்கியத்திலும் காணக் கிடையா".

இவையேயன்றி, நாணிக் கண் புதைத்தல் என்ற அகத்துறை ஒன்றுக்கு ஒரு கோவை நூல் தமிழில் தோன்றி இருப்பதும், எண்ணி மகிழத்தக்கதாகும்.

இத்தகைய தனிச் சிறப்புகள் பல உடைய தமிழில் உள்ள யாப்பிலக்கணத்தைக் கற்பவர் விருப்பமுடன் பயிலும் நூல்கள் இரண்டாகும். ஒன்று யாப்பருங்கலம்; மற்றொன்று யாப்பருங்கலக்காரிகை. இவ்விரு நூல்களையும் இயற்றியவர் அமுதசாகரர் என்னும் சமணப் புலவர். அருங்கலம் என்பது சமண ஆசிரியர் பரம்பரையில் ஒரு பிரிவு; இது சங்க காலத்திற்குப் பின் தோன்றிய சமண சங்கத்தின் ஒரு பகுதி. இப் பிரிவினர் தீபங்குடியில் வாழ்ந்தனர்; அமுதசாகரர் முதலியோர் இப்பிரிவினர்; ஆதலின் தம் நூலுக்கு 'அருங்கலம்' என்ற பெயரை இட்டனர் என்று கோபிநாதராவ் கூறுகின்றார்.*

யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை என்ற இரு நூல்களுள் முன்னர்த் தோன்றியது யாப்பருங்கலம். அதனை அடுத்துத் தோன்றியது யாப்பருங்கலக் காரிகை. யாப்பருங்கலக் காரிகையுரை, "யாப்பருங்கலம் என்னும் யாப்பிற்கு அங்கமாய் — அலங்காரம் உடைத்தாகச் செய்யப்பட்டமையால் யாப்பருங்கலக் காரிகை என்னும் பெர்த்து" என்று கூறுகின்றது.

## உரையாசிரியர்

யாப்பருங்கலத்திற்கு விருத்தியுரையும் யாப்பருங்கலக் காரிகைக்குக் காண்டிகையுரையும் பழங்காலத்தில் தோன்றின. நூல் தோன்றிய மிக அண்மைக் காலத்திலேயே உரைகளும் தோன்றியுள்ளன. இவ்விரு உரைகளுள் முதலில் தோன்றியது யாப்பருங்கல விருத்தியுரையாகும். யாப்பருங்கலக் காரிகையில் பத்தாம் செய்யுளின் உரையில், "வெண்பாவினோடும்

* ஆராய்ச்சிக் கட்டுரைகள் (1947). டாக்டர் மா. இராசமாணிக்கனார், பக்கம்.95.

ஆசிரியத்தினோடும் வந்த மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா, யாப்பருங்கல விருத்தியுரையுள், 'காமர் கடும் புனல்' என்னும் பழம்பாட்டில் கண்டுகொள்க" என்று யாப்பருங்கல விருத்தியுரை சுட்டப்படுகின்றது.

இரண்டு உரைகளையும் இயற்றியவர்களில் காரிகையின் உரையாசிரியர் குணசாகரர். யாப்பருங்கல விருத்தியுரைக்கு உரை இயற்றியவர் யார் என்பது பற்றிப் பல கருத்து வேறுபாடுகள் உள்ளன.

டாக்டர் மொ.அ. துரையங்கனார், "(யாப்பருங்கல) விரித்தியுரையை எழுதியவர் பெருமாள் பெயர் மகிழ்ந்த பேராசிரியர் என அவர் சிறப்பிக்கும் மயேச்சுரருடைய மாணவரோ, அவர் பரம்பரையினரோ ஆதல் வேண்டும்" என்பர் (தென்றலிலே தேன்மொழி (1958 பக்கம் 59, 60).

வேறு சில அறிஞர்கள விருத்தியுரையாசிரியரும் காரிகையுரையாசிரியரும் ஒருவரே என்பர். இவ்வாறு அவர்கள் கூறுவதற்குக் காரணங்கள் பல உள்ளன. அவற்றைக் காண்போம்.

1. விருத்தியுரையில், காரிகை மேற்கோள் காட்டப் படுகின்றது. காரிகையை யாப்பருங்கலப் புறனடை என்று சுட்டுகிறது, விருத்தியுரை (விருத்தியுரை சூத் 48, 59, 68, 85, 86, 89, 92, 93).

2. காரிகையுரை, விருத்தியுரையைச் சில இடங்களில் குறிக்கின்றது. காரிகையின் 38-ஆம் செய்யுள் உரையில் 'அம்போதரங்கம் குறையாதே வந்தவாறு யாப்பருங்கல விருத்தியுரையுள் கண்டு கொள்க' என்றும், 42-ஆம் செய்யுள் உரையில், 'இவற்றிற்கு இலக்கியம் யாப்பருங்கல விருத்தியுள் கண்டு கொள்க' என்றும் கூறியுள்ள இடங்கள் இங்கே நினைக்கத்தக்கவை.

3. இரு நூல்களின் உரையில், பலவகை ஒற்றுமைகளைக் காணலாம். மேற்கோள் காட்டும் பல செய்யுள்கள், இரு உரைகளிலும் இடம் பெறுகின்றன. யாப்பிலக்கணக் கொள்கைகள் இரு உரைகளிலும் மாறுபாடின்றி உள்ளன. உரைநடையும் ஒத்துள்ளன. 'ஆரியம் என்னும் பாரிரும் பௌவத்து' என்ற சொற்றொடர் காரிகையுரையின் தொடக்கத்திலும் விருத்தியுரை (யாப்பருங்கல விருத்தியுரை -- பக்கம் 509 பவானந்தம் பிள்ளை பதிப்பு)யிலும் மாறுதலின்றி இடம் பெற்றுள்ளது.

4. யாப்பருங்கலக் காரிகை, யாப்பருங்கலம் இரண்டையும் இயற்றியவர் அமுதசாகரர் எனில், அவ்விரு நூல்களுக்கும் உரையாசிரியர் குணசாகரர் என்னலாம். இருநூல்களுக்கும்

நூலாசிரியர் ஒருவர், உரையாசிரியர் ஒருவர் என்பது பொருத்தமாக உள்ளது.

**வரலாறு**

யாப்பருங்கல விருத்தியுரை யாப்பருங்கலக் காரிகையுரை இரண்டினையும் இயற்றியவர் குணசாகரர் எனில் அவரைப்பற்றி அறிந்த வரலாற்றுக் குறிப்புகளைக் கூறுவோம்.

உரையாசிரியரான குணசாகரர், நூலாசிரியரான அமுதசாகரரின் ஆசிரியர் என்பர்.

நூலாசிரியரும் உரையாசிரியரும் சமண சமயத்தைச் சேர்ந்தவர்கள். உரையாசிரியராகிய குணசாகரர் அருகனைப் பற்றிய துதிப்பாடல்களை விருத்தியுரையில் மேற்கோள் காட்டுகின்றார். சில இடங்களில் பிற சமயப் பாடல்களையும் காட்டுகின்றார். பொய்கையாழ்வார் பாடல் (57), இலை நலவாயினும் (திருமந் - 204) என்ற திருமூலர் பாடல் (93), கொன்றை வேந்தன் செய்யுள் (63), நக்கீரனார் பாடிய திருஎழுகூற்றிருக்கை (11-ஆம் திருமுறை) ஆகியவற்றை மேற்கோள் காட்டுகின்றார்.

காரிகையுரையில், எல்லாக் குற்றமும் தீர்ந்த செய்யுளுக்கு உதாரணமாக, “தாமரை புரையும்” என்ற குறுந்தொகைக் கடவுள் வாழ்த்தை — பெருந்தேவனார் பாட்டை முருகக் கடவுளைப் போற்றும் செய்யுளை உதாரணம் காட்டுகின்றார்.

விருத்தியுரையுள் மயேச்சுரர் என்ற பெயருக்குச் சிவ பெருமானுக்கு உரிய பலவகையான சிறப்புப் பெயர்களைச் சேர்த்துச் சுட்டுகின்றார்.*

இவற்றால் குணசாகரர் சமயப்பொறை மிக்கவர், எம் மதமும் சம்மதம் என்ற கொள்கையுடையவர் என்பது விளங்கும்.

குணசாகரர் காலத்தை இனிக் காண்போம். நூலும் உரையும் ஒரு காலத்தில் தோன்றியவை என்பதை முன்னரே குறிப்பிட்டுள்ளோம். யாப்பருங்கலக் காரிகையை இளம்பூரணர், செய்யுளியலில் பல இடங்களில் மேற்கோள் காட்டுகின்றார். வீரராசேந்திரன் காலத்தில் (1064-1070) எழுந்த வீரசோழிய உரை, யாப்பருங்கல விருத்தியை மேற்கோள் காட்டுகின்றது. ஆதலின் யாப்பருங்கலத்தின் காலம் பதினோராம் நூற்றாண்டிற்கு முன் என்னலாம்.

* சில ஏட்டுப் பிரதிகளில் அடைமொழிப் பெயர்கள் இல்லை. எனவே பிற்காலத்தில் யாரோ சேர்த்திருத்தல் கூடும் என்பர்.

யாப்பருங்கல விருத்தியுரை, எட்டாரைச் சக்கரச் செய்யுளில் குறிக்கப்படும் பல்லவ மன்னன் எட்டாம் நூற்றாண்டினன். அப் பல்லவ மன்னன்,

**ஆராழி பாய்ந்த இடந்தோறழகிதாப்**
**பாராளும் பல்லவ மன்னன்**

என்று புகழப்படுகின்றான். மேலும், மற்றொரு மேற்கோள் வெண்பாவில், 'செந்தமிழ் ஆளி கலி மல்லன்' என்று புகழப் படுகின்றான். இங்கே குறிக்கப்படும் 'கலிமல்லன்' நரசிம்ம பல்லவனான மாமல்லன் ஆகலாம். எனவே குணசாகரர் கி.பி. எட்டாம் நூற்றாண்டிற்குப் பிறபட்டவர் என்பது உறுதி. இவற்றை நோக்கும்போது குணசாகரர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டு என்னலாம்.

## விருத்தியுரை

குணசாகரர் விருத்தியுரை, பத்தாம் நூற்றாண்டு வரை தோன்றிய இலக்கிய இலக்கண நூல்களின் இயல்பும் சிறப்பும் வரலாறும் அறிவதற்குப் பெரிதும் துணைபுரிகின்றது. பல்லவர் கால இலக்கியத்தின் காலக் கண்ணாடியாக இவ்வுரை விளங்குகின்றது. இடைக்காலத்தில் தோன்றிய பலவகையான யாப்பிலக்கணக் கொள்கைகளைத் தெள்ளத் தெளிய ஆராய்ந்து கூறி விளக்குகின்றது. அக் கொள்கைகளினிடையே எழும் சிக்கல்களைத் தீர்க்கின்றது. முரண்பாடுகளைத் தீர்த்துச் சிறந்த யாப்பிலக்கணக் கொள்கைகளை உருவாக்குகின்றது. குணசாகரர் சுவைத்த பாடல்களின் திரட்டாக இவ்வுரை விளங்குகின்றது.

## யாப்பும் பொருளும்

யாப்பிலக்கணத்தில் வரும் சொற்களுக்கு மிக நன்றாய்ப் பொருள் கூறி விளக்குகின்றார். அவற்றுள் சிலவற்றைக் காண்போம்:

**கலிப்பா:** சீர்பொருள் இசைகளால் எழுச்சியும் பொலிவும் கடுப்பும் உடைத்தாகலின் கலி என்பது காரணக் குறி *(55).*

**விருத்தம்:** ஒருபுடையால் தத்தம் பாவினோடு ஒத்த ஒழுக்கத்தானும் எல்லா அடியும் ஒத்தலானும் புராணம் முதலாகிய விருத்தம் உரைத்தலானும் விருத்தம் என்பதூஉம் காரணக் கூறி. இது வடமொழித் திரிசொல்.

**கொச்சகம்:** சிறப்பில்லாததனை ஒருசாரார் கொச்சை என்றும் கொச்சகம் என்றும் வழங்குவர் *(79).*

அம்போதரங்கம்: அம்போதரங்கம் என்பது நீர்த்திரையைச் சொல்லுமோ எனில் சொல்லும். அம்புத்தரங்கம் என்னும் வடமொழியை அம்போதரங்கம் என்று திரித்துச் சொன்னாராகலின் (80).

சுரிதகம்: ஓரிடத்து ஓடாநின்ற நீர், குழியானும் திடரானும் சார்ந்த இடத்து, சுரிந்து ஓடும் அதனைச் சுரிந்து என்றும், சுழி என்றும் வழங்குவது (82).

## புதிய விளக்கம்

இராக்கதம் பைசாசம் என்ற இருவகைத் திருமணத்திற்கும் இவர்தரும் விளக்கம் புதியவை; மற்றவர் கூறாதவை.

“இராக்கதம்: ஆடை மேலிடுதல் பூமேலிடுதல் கதவடைத்தல் முதலியவற்றால் வலிதிற் கோடல்”

“பைசாசம்: துஞ்சினாரோடும் மயங்கினாரோடும் சனித்தாரோடும் செத்தாரோடும் விலங்கினோடும் இழிதகு மரபில் யாருமில்லா ஒருசிறைக் கண் புணர்ந்து ஒழுகும் ஒழுக்கம்”.

## கொள்கையும் கருத்தும்

விருத்தியுரையின் ஒழிபியல் பகுதியுள், ஆனந்தக் குற்றங்களை விரிவாக ஆராய்கின்றார். “பாட்டுடைத் தலைவனையே கிளைவிப்பட, கிளவித் தலைவனாகக் கூறுவதூஉம் ஆனந்தம் எனக் கொள்க” என்று இவர் கூறியுள்ளார். மேலும், இவர் மலைபடு கடாம் பாடலுள் நான்கு இடங்களைக் காட்டி, பொருளானந்தம் ஆனந்தவுவமை என்று கூறுகின்றார்.

பாக்களின் வகையையும் சாதியையும் தொடர்புபடுத்தி விளக்குகின்றார். இவர் காலத்திலேயே பாட்டியல் கூறும் பொருத்தங்களைப் பற்றிய கருத்துகள் தோன்றிவிட்டன. அவற்றை இவர் சோதிட நுட்பத்துடன் விளக்குகின்றார்.

எழுத்துகள் உரு உணர்வு ஒலி தன்மை என நால்வகைப்படும் என்று விளக்குகின்றார்.

## தொல்காப்பியத்தில் இல்லை

யாப்பருங்கல விருத்தியுரை, தொல்காப்பிய நூற்பாவாக மேற்கோள் காட்டுகின்ற ஒரு நூற்பா, இன்று தொல்காப்பியத்தில் இல்லை!

விருத்தியுரை (பக்கம் - 132, கழகப் பதிப்பு), பாவிற்குரிய அடிகளின் வரையறை பற்றி, தொல்காப்பியம் செய்யுளியலில் உள்ள நூற்பாக்கள் ஐந்தினைக்காட்டி ஆறாவதாக,

'முடிபொருள் அல்லாது அடியளவு இலவே' என்ற நூற்பாவைத் தொல்காப்பியர் இயற்றியதாகக் காட்டுகின்றது. இந்த நூற்பா இன்றைய தொல்காப்பியப் பதிப்புகளில் இல்லை!

### நூலின் புகழ்

யாப்பருங்கலத்தைப் போற்றிப் புகழ்கின்ற வெண்பா ஒன்று, நூலின் இறுதியில் உள்ளது. யாப்பருங்கலம் சொல்லாற் சுருங்கியது; பொருளால் பெருகியது; தொல் ஞானம் எல்லாம் விளங்குவது; அறியாமை இருளை அகற்றுவது. இத்தகைய சிறப்புடைய யாப்புநூலைக் கற்று வல்லவர் ஆயினவர் கேள்விச்செல்வம் அனைத்தையும் உணர்ந்து ஒருங்கு அறியவல்லவர் என்று கூறுகின்றது வெண்பா:

**சொல்லிற் சுருங்கி, பொருள்பெருகி, தொன்ஞானம்**
**எல்லாம் விளக்கி இருளகற்றும் – நல்யாப்பு**
**அருங்கலம் வல்லவர் தாம்அன்றே கேள்வி**
**ஒருங்கறிய வல்லார் உணர்ந்து.**

## 2. யாப்பருங்கலக் காரிகையுரை

யாப்பருங்கலக் காரிகையுரை மிகவும் எளிமையும் தெளிவும் உடையது. கற்போர் நினைவில் என்றும் நிலைத்து நிற்கவல்ல பல சிறந்த மேற்கோள் பாடல்களைக் கொண்டது. தெளிவான யாப்பிக்கணக் கொள்கையை உணர்த்துவது.

இவ்வுரை முழுதும் உயிரோட்டமுள்ள நடையைக் காணலாம்.

"இந்நூல் யாது காரணமாகச் செய்யப்பட்டதோ எனின், பண்டையோர் உரைத்த தண்டமிழ்யாப்பிற் கொண்டிலாத குறியினோரைக் குறிக் கொளுவுதல் காரணமாகவும், தொல்லைப் பனுவல் துணிபொருள் உணர்ந்த நல்லவையோரை நகுவிப்பது காரணமாகவும் செய்யப்பட்டது".

"இந்நூல் யாவரால் செய்யப்பட்டதோ எனின், ஆரியம் என்னும் பாரிரும் பௌவத்தைக் காரிகையாக்கித் தமிழ்ப்படுத்திய அருந்தவத்துப் பெருந்தன்மை அமிதசாகரர் என்னும் ஆசிரியரால் செய்யப்பட்டது".

இந்த வாக்கியங்களில், ஓசைஇன்பமும் எதுகை மோனைச் சிறப்புடைய சொற்றொடரும் அமைந்திருப்பதைக் காணலாம்.

ஒழிபியலில் நூறுவகை வண்ணங்களை ஆராய்கின்றார்.

"ஒற்றுமைப்படாத உலோகங்களை ஒற்றுமைப்படப் பற்றாசிட்டு விளக்கினாற்போல" (காரிகை - 24) என்ற பொருத்தமான உவமையை ஓரிடத்தில் கூறுகின்றார்.

"அனுப்பிராசம் என்னும் வடமொழியை வழி எதுகை என்பது தமிழ்வழக்கு" (காரிகை - 56) என்று மற்றோர் இடத்தில் குறிப்பிடுகின்றார்.

"செந்தமிழ் நிலம் என்பது வையையாற்றின் வடக்கும் மருதயாற்றின் தெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்குமாகிய நான்கு எல்லைக்குட்பட்ட சோணாடு" என்பது இவர் கருத்தாகும்.

**உதாரண முதல்நினைப்புக் காரிகை**

காரிகை உரையாசிரியர் எடுத்துக்காட்டிய உதாரணப் பாடல்களை நினைவில்கொள்ள, பிற்காலத்தவர் உதாரண முதல் நினைப்புக் காரிகைகளை இயற்றினார். இன்று அவை நூலாசிரியர் இயற்றியவை போலவே கருதிக் கற்கப்பட்டு வருகின்றன.

## 3. பெருந்தேவனார்

வீரசோழியம் இலக்கண நூலுக்கு உரை இயற்றியவர் பெருந்தேவனார். வீரராசேந்திரன் (1063-1070) காலத்தில் பொன்பற்றி என்னும் ஊரில் வாழ்ந்த புத்த மித்திரர், அம்மன்னன் பெயரால் இயற்றிய நூலே வீரசோழியம். இது ஐந்திலக்கணம் கூறும் நூலாகும். இந்நூலாசிரியர் பழந்தமிழ் இலக்கண மரபைப் புறக்கணித்து, வடமொழி இலக்கணக் கொள்கைகளைத் தமிழ் மொழியில் கொண்டுவந்து புகுத்தியுள்ளார். இந்நூலைப் பின்பற்றியே பிற்காலத்தில் பிரயோக விவேகம், இலக்கணக் கொத்து ஆகிய நூல்கள் தோன்றின.

வீரசோழிய உரையாசிரியர் பெருந்தேவனார், நூலாசிரியர் கருத்துடன் மிக நெருக்கமாகப் பிணைந்து செல்லுகின்றார். இருவர்க்கும் பல வகையில் ஒற்றுமை உண்டு. இருவரும் ஒரே காலத்தினர்; பௌத்த சமயத்தினர்; வடமொழிக்கும் தமிழுக்கும் இலக்கணம் ஒன்றே என்னும் கருத்துடையவர்.

பெருந்தேவனார் என்ற பெயருடன் பலர் இருப்பதால் அப்பெயர் முற்காலத்தில் சிறப்புப்பெற்று விளங்கிற்று எனலாம். தொகை நூல்களுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடிய பாரதம் பாடிய

பெருந்தேவனார், பல்லவர் காலத்தில் வாழ்ந்த பெருந்தேவனார் என்று பலர் உள்ளனர்.*

நூலாசிரியரைப் பற்றிக் கூறும் பாயிரப் பாடல்களுக்குப் பெருந்தேவனார் உரை இல்லை. அப்பாடல்களுக்கு உரை இருந்திருப்பின், நூலாசிரியரைப் பற்றிய வரலாறு தெளிவாகக் கிடைத்திருக்கும். உரையாசிரியராகிய பெருந்தேவனாரைப் பற்றி,

**தடமார் தருபொழில் பொன்பற்றி காவலன் தான்மொழிந்த**
**படிவீர சோழியக் காரிகை நூற்றெண் பஃதொடொன்றின்**
**திடமார் பொழிப்புரை யைப்பெருந் தேவன் செகம்பழிச்சக்**
**கடனாக வேநவின் றான்தமிழ்க் காதலின் கற்பவர்க்கே**

என்ற பாடல் அறிவிக்கின்றது.

**மன்னன் புகழ்**

பெருந்தேவனார் தம் உரையில் வீரராசேந்திர சோழனைப் புகழ்ந்து பாடும் பல பாடல்களை மேற்கோளாகக் காட்டியுள்ளார். அப்பாடல்களை இவரே இயற்றி இருக்கவும் கூடும். "பழையாறை நகர்ச் சுந்தரச் சோழரை யாவர் ஒப்பர்?" என்ற கருத்துப்பட பாடல் ஒன்று மேற்கோளாக உள்ளது (வீர - 152). வீரராசேந்திரனைப் புகழ்ந்து பாடும் வெண்பாவும் கலிப்பாவும் யாப்பிலக்கண மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. வீரராசேந்திரனின் நாட்டில் பாய்ந்து செழிப்பூட்டும் காவிரியாற்றினை,

**மரத்தினை ஓர்எழுத்துச் சொல்லும் மற்றொன்று**
**நிரப்பிட நீரிற்பூ ஒன்றா – நிரப்பிய**
**வேறொர் எழுத்துய்க்க வீரரா சேந்திரன்நாட்டு**
**ஆறாம் எனஉரைக்க லாம்**

என்ற வெண்பா குறிப்பிடுகின்றது (வீர - 179).

**புத்தர் புகழ்**

பெருந்தேவனார் பௌத்த சமயத்தவர் ஆதலின், உரையில் பல இடங்களில் புத்தரைப்பற்றிய மேற்கோளும் உதாரணமும் தருகின்றார்.

**புத்தர் கண்ணனை உய்வித்தார்** **(வீர–41)**

**புத்தனைத் தெய்வமாய் உடையன் பௌத்தன்** **(வீர–54)**

என்று பல இடங்களில் உதாரணம் காட்டுகின்றார். நேர், நிரை அசைகளுக்கு,

* இப் பெயர், இக்காலத்தில் மகாதேவன் என்று வழங்குகிறது.

2.39

**போதி வேந்தன்**
**சரணலா லரண் புகேம்**

என்பதை உதாரணம் காட்டுகின்றார். புத்த தேவரின் துறவு, கொடை பற்றிய பாடல்கள் பலவற்றை யாப்பதிகாரத்தில் மேற்கோளாகத் தருகின்றார். "மேன்மை — பெரும்பகை தாங்கும் மேன்மை. அருளொடுபுணர்ந்த அகற்சியாம்" என்று விளக்கி, "புனிற்றுப் பசியுழந்த" என்ற பாடலைக் காட்டிப் புத்ததேவரின் அருட் பண்பை உலகிற்கு நினைவூட்டுகின்றார் (வீர - 109).

## நூலறிவு

பெருந்தேவனார் தம் உரையில் பல நூல்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். இவர் குறிப்பிடும் நூல்களின் காலத்தைத் தெளிவாக அறியலாம். பெருந்தேவனார், வீரராசேந்திரன் காலத்தவர் ஆதலின் உரையில் காட்டப்பெறும் நூல்களின் காலத்தை அறுதி இடமுடியும்.

பன்னிருபடலத்தைப் பெருந்தேவனார் குறிப்பிடுகின்றார் (வீர - 46). யாப்பருங்கல விருத்தியுரை காட்டிய பல செய்யுட்களை மேற்கோளாகத் தருகின்றார். யாப்பருங்கலக் கருத்தைத் தந்து, 'என்றார் அமுதசாகரனார்' என்று கூறுகின்றார்.

தண்டியலங்காரம் காட்டிய பல செய்யுள்களை இவர் மேற்கோள் காட்டுகின்றார். ஒன்பான்சுவை பற்றிய பாடல்கள் யாவும் தண்டியலங்காரம் காட்டியவை.

உவமைபற்றி இவர் கூறும் கருத்து, போற்றத்தக்கதாய் உள்ளது. அது பின்வருமாறு:

**உவமம் எனப்படுவது அவமற விரிப்பின்**
**புகழே பழியே நன்மை என்றின்ன**
**நிகழும் ஒப்புமை நேர்ந்தன முறையே**

**அவைதாம்**

**கண்ணே செவியே மூக்கே நாவே**
**மெய்யே மனமே விளம்பின ஆறும்**
**ஐய மின்றி அறுமூன்று ஆமே.**

## வடமொழிப் புலமையும் பற்றும்

பெருந்தேவனார் வட மொழிப்பற்று மிக்கவர்; புலமை உள்ளவர். கீழ்வரும் பகுதிகள் இவரது வடமொழிப் பற்றுக்கும் புலமைக்கும் சான்றாய் அமையும்:

"தமிழ்ச் சொல்லிற்கு எல்லாம் வடநூலே தாயாகி நிகழ்கின்றமையின், அங்குள்ள வழக்கு எல்லாம் தமிழுக்கும் பெறும்" (வீர - 60).

"வட மொழியில் அவ்வியச்சொல் தமிழின் இடைச்சொல் என அமைக்க" (வீர - 49).

"வடநூலில் பெண்பாலைக் குறித்த நதீ, குமரீ என்னும் ஈகாராந்தச் சொற்கள் நதி, குமரி எனக் குறுகும்" (வீர - 56).

"வனிதா தாரா உமா மாலா சாலா என வட நூலில் ஆகாராந்தமாய்ப் பெண்ணைக் குறித்துக் கிடந்த சொற்கள் தமிழில் ஐகாராந்தமாகி வனிதை தாரை உமை மாலை சாலை என முடியும். தேவதை கலை சீதை என வருவனவும் அது". (வீர - 56).

## சொல்லாராய்ச்சி

பெருந்தேவனார் பல இடங்களில் சொற்களைப் பற்றிய ஆராய்ச்சியில் மிகவிரிவாக ஈடுபட்டுள்ளார். அவற்றை இங்கே காண்போம்:

'பலவற்றை' என்ற சொல்லை (பல +அற்று +ஐ) அற்றுச் சாரியை சேர்க்காமல் பலவை (பல +ஐ) என்றே வழங்குகின்றார் (வீர - 30).

மூவிடப் பெயர்களைப்பற்றி இவர் பின்வருமாறு கூறுகின்றார்.

"உன் என்பதற்கு நும் என்பதும் நின் என்பதும் நான் என்பதற்கு யான் என்பதும் ஆதேசமாம். நாம், யாம் எனவும் யாவர் யார் எனவும் ஆதேசமாதலுமாம். பன்மையில் நீர்கள் நீங்கள் நாங்கள் தாங்கள் எனவும் யாவர்கள் அவர்கள் இவர்கள் உவர்கள் எவர்கள் எனவும் வரும்.

நீர்கள் என்பது நீயிர்கள் நீவிர்கள் என ஆதேசமாதலுண்டு. நீர் என்பது நீயிர் நீவிர் என ஆதேசமாம். நாங்கள் என்பது யாங்கள் என ஆதேசமாம்" (வீர - 37).

இவர் கருத்துகளை, 'திராவிட மொழியின் மூவிடப் பெயர்கள்' என்ற நூலில் வேங்கடராஜுலு ரெட்டியார் மறுத்துள்ளார்.

பெருந்தேவனார் தம் காலத்து வழக்குச் சொற்களையும் ஆராய்ந்து பின்வருமாறு கூறுகின்றார்:

"நாளி கோளி மூளை உளக்கு வாளை வளி எனவும், விழக்கு பழிங்கு தழிகை இழமை எனவும், பதினாறாம் உடலும்

பதினைந்தாம் உடலும் ( ழ், ள்) தம்முள் தேற்றக் கருநிலம் சுற்றின தேசத்துச் சிலர் வழங்குவர்.

"வெச்சிலை முச்சம் கச்சை எனவும், உற்றியம்போது மற்றியம் பிற்றை வாங்கி விற்றான் எனவும் பதினேழாம் உடலும் (ற்) மூன்றாம் உடலும் (ச்) தம்முள் தேற்றக் காவிரி பாய்ந்த நிலத்துச் சிலர் வழங்குவர்.

"நெல்லுக்கா நின்றது, வீட்டுக்கா நின்றது என்று பாலாறு பாய்ந்த நிலத்துச் சிலர் வழங்குவர்".

"மற்றும் இவனைப்பாக்க, இங்காக்க அங்காக்க எனவும், சேத்துநிலம் ஆத்துக்கால் எனவும், வாயைப் பயம் கோயி முட்டை எனவும், உசிர் மசிர் எனவும் பிறவாற்றானும் அறிவில்லாதார் தமிழைப் பிழைக்க வழங்குவர்" (வீர - 82).

குண்டலகேசி முதலிய காவியங்களில் பயின்றுவந்த அரிய சொற்களைப்பற்றிப் பெருந்தேவனார் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

"குண்டலகேசியும் உதயணன் கதையும் முதலாக உடையவற்றில் தெரியாத சொல்லும் பொருளும் வந்தன எனின், அகலக்கவி செய்வானுக்கு அப்படியல்லது ஆகாது என்பது. அன்றியும் அவை செய்தகாலத்து அச் சொற்களும் பொருள்களும் விளங்கி இருக்கும் என்றாலும் அமையும் எனக்கொள்க".

அயல்நாட்டுச் சொற்களைப் பற்றியும், இவரது சிந்தனை சென்றுள்ளது: "சிங்களவன் பேசுவது சிங்களம். வடுகன் பேசுவது வடுகு. துளுவன் பேசுவது துளுவு" (வீர - 54) என்றும், "வட்டா என்னும் ஆரிய தேயச் சொல்லு, வட்டை என வந்தவாறும், முருங்கா என்னும் சிங்களச் சொல்லும் முருங்கை என வந்தவாறும் கொள்க" (வீர - 59) என்றும் கூறுகின்றார்.

## நாகரிகமும் மக்கள் வாழ்வும்

பெருந்தேவனார் காலத்திலேயே சேரநாடு, மலையாளம் என்று தனிநாடாக மாறிவிட்டது. தமிழ் வழங்கும் நிலத்தின் எல்லையைக் குறிக்கும்போது, "குணகடல் குமரி குடகம் வேங்கடம் என்னும் இந்நான்கு எல்லைக்குள்" என்கின்றார் (வீர - 8).

இவர் காலத்தில் புகார், நாகபட்டினம், தஞ்சாவூர், உறையூர் குரங்காடு துறை, மயிலாடுதுறை ஆகிய ஊர்கள் சிறப்புடன் விளங்கின என்பதை இவர் உரையால் அறியலாம்.

**புகழார் அளகேசர் பூம்புகார் என்னும்**
**நகராரை ஒப்பவர் ஆர் நாட்டு**

என்று இவர் பூம்புகார் நகர மக்களைப் புகழ்கின்றார்.

"நாகபட்டினம் தஞ்சாவூர் உறையூர் எனக்கிடந்த ஊர்ப் பெயர்ச் சொற்கள், கடைகுறைந்து நாகை தஞ்சை உறந்தை என ஐகாரத்தான் முடியும்" (வீர - 56) என்றும்,

"குரங்குகள் ஆடப்பட்ட துறை யாதொரு ஊரில் உண்டு அவ்வூர் குரங்காடு துறை; மயில்கள் ஆடப்பட்ட துறை யாதொரு ஊரில் உண்டு அவ்வூர் மயிலாடுதுறை" (வீர - 47) என்றும் உதாரணம் காட்டுகின்றார்.

"கபில பரணர் தங்களிலே வாது செய்தார்கள்" (வீர - 49) என்று ஓர் உதாரணம் காட்டுகின்றார்.

"மருந்துகளால் ஆடப்பட்ட எண்ணெய், மருந்தெண்ணெய், இருப்பை நெய் (வீர - 44), மருந்தைப் பண்ணுவான் மருத்துவன்" (வீர - 54) என்ற உதாரணங்கள் அக்கால நாகரிகத்தை உணர்த்துகின்றன.

"மாச்சோறு உண்கின்ற சிறுக்கன் அதன்கண் வீழ்ந்த தூளியினைத் தின்றான்" (வீர - 41).

"தேசங்களிலே தேசங்களிலே பற்றிக்கொடு நிகழ்கின்ற யாதொரு பூசல் தேசாதேசி எனவும், தண்டுகளாலே தண்டுகளாலே அடித்து நிகழ்கின்றதோர் பூசல் தண்டாதண்டி எனவும் வருவன" (வீர - 47) என்ற உதாரணங்களில், அக்கால மக்களின் பேச்சுமொழி இடம் பெற்றுள்ளது.

**உயிரும் பயிரும்**

நீர்க் காக்கை, கடற்பன்றி (வீர - 44) என்பனவற்றை இவர் உதாரணம் காட்டுகின்றார்.

"கல்லுத் தலையின்கண் யாதொரு மீனுக்கு உண்டு அம்மீன் கற்றலை" என வழங்கப்படும் என்கின்றார் (வீர - 47, 49).

"கொம்மட்டி போலக் காய்க்கும் மாதளை கொம்மட்டி மாதளை" (வீர - 51) என்று ஓரிடத்தில் எழுதுகின்றார்.

இவர் காலத்தில் 'வழுதுணை' பயிரிடப் பெற்றது (வீர - 96).

**மகரக்குறுக்கம் – சிறந்தவிளக்கம்**

பெருந்தேவனார் தம் உரையில், மகரக் குறுக்கம் பற்றிய தொல்காப்பிய நூற்பாவுக்குச் சிறந்த பொருள் கூறுகின்றார். இந்தப் பொருளே பொருத்தமாக உள்ளது.

தொல்காப்பியர், மகரம் தன் மாத்திரையில் குறுகி வருகின்ற இடத்தைக் கூறிய பின்,

'உட்பெறு புள்ளி உருவாகும்மே' என்ற நூற்பாவை அமைத்துள்ளார். இதற்குத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் 'ப்'

என்னும் மெய் உள்ளே ஒரு புள்ளி பெற்று, 'ம்' என்னும் மெய்யின் வடிவத்தைப் பெறும் என்று பொருள் கூறியுள்ளனர்.

ஆனால், பெருந்தேவனார் இந்த நூற்பாவுக்கு வேறு விளக்கம் கூறுகின்றார். முன் வயிற்கால் வவ்வரின் (சந்தி - 19) என்ற நூற்பா விளக்கத்தில்,

"வருமொழி முதல் வகரம் வந்து புணர்ந்தால், அந்த மகரமானது குறுகி, கால் மாத்திரையாய் — **உட் புள்ளி பெறும்**" என்று கூறுகின்றார். இதுவே பொருத்தம் உடைய விளக்கம்.

**மொழியியலும் இலக்கணமும்**

இன்றைய மொழியில் சிந்தனையாளர்கள் போற்றி மேற்கொள்ளுகின்ற பல இடங்கள் நூலிலும் உரையிலும் உள்ளன. அவை வழிவழியாக வருகின்ற இலக்கணக் கொள்கைகளுக்கும், மரபுக்கும் மாறுபட்டவை. தொல்காப்பியமும் நன்னூலும் பரப்பிய இலக்கணக் கொள்கைகளினால் தோன்றியுள்ள நூல்கள் வீரசோழியத்தைத் தடுத்து நிறுத்தும் அரண்களாக உள்ளன.

## 4. தண்டியலங்கார உரை

பல்லவர் காலத்தில் (600-900) வடமொழி இலக்கண இலக்கியங்களுக்குத் தமிழ்நாட்டில் பெரிதும் செல்வாக்கு ஏற்பட்டது. அதனால் பல வடமொழி நூல்கள் தோன்றின. பிற்காலத்தில் வடமொழி நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்தனர். பன்னிரண்டாம் நூற்றாண்டில் தண்டியலங்காரம் என்னும் அணி இலக்கண நூல், வடமொழியில் உள்ள காவ்யாதர்சம் என்ற அலங்கார நூலின் மொழிபெயர்ப்பாகத் தோன்றியது. அந்த வடமொழி நூலை இயற்றியவர் ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆசார்ய தண்டி.

அம்பிகாபதி என்னும் தமிழ்ப் புலவரின் மகன் தண்டி என்பவர் இயற்றியதே தண்டியலங்காரம். தண்டி வடமொழி அலங்கார நூலை மொழிபெயர்த்து, உதாரணச் செய்யுள்கள் பலவற்றையும் வடமொழியிலிருந்து தழுவி இயற்றினார் என்பர். பிரயோக விவேக நூலாசிரியர், "தண்டியாசிரியர் மூலோதாரணமும் காட்டினாற்போல யாமும் உரை எழுதியதல்லது மூலோதாரணமும் காட்டினாம்" (காரக - 3) என்று கூறுகின்றார். ஆனால், தண்டியலங்கார உதாரணப் பாடல்களில் சில பழைமையானவை; பழைய நூல்களிலிருந்து மேற்கொண்டவை.

தண்டியலங்கார நூலாசிரியர் வரலாறு பற்றி மிகுதியாக ஒன்றும் தெரியவில்லை. தண்டியலங்கார உரை பாயிரப் பகுதி நூலாசிரியரைப் பற்றிக் குறிப்பிடவில்லை. தண்டியலங்காரத்தின் சிறப்புப்பாயிரச் செய்யுள் ஒன்றை, 'செந்தமிழ்' வெளியிட்டுள்ளது.* அது பின்வருமாறு:

வடதிசை இருந்து தென்மலை ஏகி
மதிதவழ் குடுமிப் பொதிய மால்வரை
இருந்தவன் தன்பால் அருந்தமிழ் உணர்ந்த
பன்னிரு புலவரின் முன்னவன் பகர்ந்த
தொல்காப் பியநெறி பல்காப் பியத்தும்
அணிபெறும் இலக்கணம் அரிதினில் தெரிந்து
வடநூல் வழிமுறை மரபினின் வழாது
ஈரிரண்டு எல்லையின் இகவா மும்மைப்
பாரத இலக்கணம் பண்புறத் தழீஇத்
திருந்திய மணிமுடிச் செம்பியன் அவையத்து
அரும்பொருள் விளங்க யாப்பின் வகுத்தனன்
ஆடக மன்றத்து நாடக நவிற்றும்
வடநூல் உணர்ந்த தமிழ்நூற் புலவன்
பூவிரி தண்பொழிற் காவிரி நாட்டு
வம்பவிழ் தெரியல் அம்பி காபதி
மேவரும் தவத்தினில் பயந்த
தாவரும் சீர்த்தித் தண்டி என்பவனே.

தண்டியலங்காரம் இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்தில் இயற்றப்பட்டது. அதில் இடம்பெற்றுள்ள பல உதாரணப் பாடல்கள் குறிப்பிடும் 'அநபாயன்' இரண்டாம் குலோத்துங்கனே. அம் மன்னன் காலத்தில் சிறப்புற்று விளங்கிய ஒட்டக்கூத்தர் புகழைச் 'சென்று செவியளக்கும்' என்ற உதாரணப் பாடல் கூறுகின்றது. அச் சோழ மன்னனின் முன்னோர் பெற்ற வெற்றிச் சிறப்புகளாகிய கலிங்கவெற்றி, கடாரம் கொண்டது ஆகியவையும் குறிப்பிடப்படுகின்றன. கங்கை கொண்ட சோழபுரத்தையும் சிதம்பரத்தையும் சிறப்பித்துப்பாடும் உதாரணப் பாடல்கள் சில உள்ளன. இவை யாவும் நூலாசிரியர் வாழ்ந்த காலத்தை நமக்கு அறிவிக்கும் தக்க சான்றுகளாகும்.

## வரலாற்றுக் குறிப்புகள்

நூலாசிரியர் இயற்றியுள்ள பல உதாரணச் செய்யுட்கள் சோழர் வரலாற்று ஆராய்ச்சிக்குத் துணை புரிகின்றன.

* செந்தமிழ்; 36 பக். 385–400.

சோழ மன்னன் அனபாயனின் வீரமும் கொடையும் பல பாடல்களில் இடம் பெறுகின்றன.

**அன்னைபோல் எவ்வுயிரும் தாங்கும் அனபாயா**
**நின்னையார் ஒப்பார் நிலவேந்தர்**

என்றும்,

**தண்கவிகை யால்உலகம் தாங்கும் அனபாயன்**
**வெண்கவிகைக் குள்அடங்கா வேந்தில்லை**

என்றும் அனபாயன் புகழப்படுகின்றான். சோழமன்னன் சிவந்த நிறம் உடையவன் என்று ஒரு பாடல் புகழ்கின்றது.

'செய்யனே, கோழியுடையான் மகன்' என்று அவனது திருமேனி அழகில் ஈடுபட்டுப் புலவர் பாடுகின்றார்.

சோழமன்னன் கலிங்கநாட்டில் பெற்ற வெற்றிகளைச் சில பாடல்கள் குறிக்கின்றன.

**ஒருவர் ஒருவர்மேல் வீழ்ந்துவட நாடர்**
**அருவர் அருவர்என அஞ்சி — வெருவந்து**
**தீத்தீத்தீ என்றுஅயர்வர் சென்னி படைவீரர்**
**போர்க்கலிங்கம் மீதுஎழுந்த போது.**

**(சொல்லணி - 15)**

இந்நிகழ்ச்சியைக் கலிங்கத்துப்பரணியில் விரிவாகக் காணலாம்.

பொருளணி இயலில், கருவிக்காரக ஏது அணிக்கு உதாரணமாக, சோழன் கலிங்கநாட்டிலிருந்து பெற்ற யானைக் கூட்டங்களின் சிறப்பை உணர்த்தும் பாடல் காட்டப்பட்டுள்ளது. யானைக் கூட்டம், 'நேரார் கலிங்கத்து வாளாற் கவர்ந்த வளம்' என்று புகழப்படுகின்றது.

அனபாயன் காலத்தில் கங்கை கொண்ட சோழபுரம் சிறந்த தலைநகரமாய் விளங்கிற்று. சோழன் அந் நகரில் தங்கி ஆட்சி புரிந்தான். அந் நகரில் வானளாவிய மாடங்கள் இருந்தன. இச் செய்திகளை எல்லாம்,

**வண்புயலைக் கீழ்ப்படுத்தி, வானத் தருமலைந்து**
**மண்குளிரச் சாயல் வளர்க்குமாம் — தண்கவிகைக்**
**கொங்கார் அலங்கல் அனபாயன் கொய்பொழில்சூழ்**
**கங்கா புரமா ளிகை**

என்ற வெண்பா உணர்த்துகின்றது.

இம் மன்னன் காலத்தில், பாண்டியநாடு ஐந்தாகப் பிரிந்து இருந்தது என்றும், பாண்டிய மன்னன் அதனை ஆண்டான் என்றும் தெரிகின்றது. அப் பாண்டிய மன்னன்,

**... வியன் தமிழ் நா(டு) ஐந்தின்**
**குலங்காவல் கொண்டு ஒழுகும் கோ**

என்றும் குறிக்கப்படுகின்றான்.

பலவேறு நாடுகளிலிருந்து சோழ மன்னனுக்குத் திறைப் பொருள்கள் வந்து குவிந்தன (இடமலைவு).

இம் மன்னன் காலத்தில் காஞ்சிபுரம் பெருஞ்சிறப்புடன் விளங்கியது. கச்சி என்று அது வழங்கியது. அப் பேரூரின் இரு பக்கமும் இரண்டு ஏரிகள் இருந்தன; நகரைச் சுற்றிலும் சிறந்த மதில் இருந்தது; செழுமையான சோலை நகரில் இருந்தது; திருமாலின் இருப்பிடமாகிய அத்தியூர் அந்நகரின் ஒரு பகுதியாக விளங்கியது; வானத்தில் இருந்து அந் நகரைப் பார்த்தால், ஓர் அழகிய மயில்போல அந்நகர் விளங்கியது;

**ஏரி இரண்டும் சிறகா எயில்வயிறாக்**
**காருடைய பீலி கடிகாவா — நீர்வண்ணன்**
**அத்தியூர் வாயா அணிமயிலே போன்றதே**
**போற்றேரான் கச்சிப் பொழில்**

**(பொருளணி இயல் – இயைபு உருவகம்)**

என்ற பாடல் கச்சியின் சிறப்பை விளக்குகின்றது.

**கச்சி படுவ கடல்படா கச்சி**
**கடல்படுவ எல்லாம் படும்**

**(உயர்ச்சி வேற்றுமை)**

என்றும் கச்சி சிறப்பிக்கப்படுகிறது.

வெஃகா, பாடகம், ஊரகம் என்னும் திருப்பதிகள் திருமாலுக்கு உரியவையாய் கச்சியில் இருந்தன (நிரல் நிறையணி). கச்சியிலுள்ள ஏகாம்பரநாதரையும் சில பாடல்கள் குறிப்பிடுகின்றன. அந் நகரில் உள்ள கச்சாலை என்னும் பகுதியில் சிவனை, 'கச்சாலைக்கனி' என்று பாடல் புகழ்கின்றது (நிரோட்டம், தன்மையணி).

சிதம்பரம், சிறந்த சைவத்தலமாக அக் காலத்திலும் விளங்கியது. தில்லையில் நடமிடும் கூத்தப்பெருமான் தில்லைத் திருநடம்செய்பூந்தாமரை, தில்லைப் பெருமான், அம்பலக் கூத்துடையான் என்றெல்லாம் புகழப்படுகின்றான்.

சோழநாட்டில் உள்ள கருவூர் வஞ்சி என்ற பெயருடனும், திருவண்ணாமலை சோணாசலம் என்ற பெயருடனும் சிறப்புற்று விளங்கின.

## உரையாசிரியர்

தண்டியலங்கார உரையாசிரியர் யார் என்பது விளங்கவில்லை. நூல் தோன்றிய காலத்தை அடுத்து உரையும் தோன்றியிருக்கக்கூடும் என்று கருதுகின்றார் டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர். அவர், "தண்டியலங்கார உரைஅனபாய சோழன் காலத்தில் இயற்றப்பட்டது என்று அந்நூலின் உரையிலுள்ள மேற்கோள்களால் தெரிய வருகின்றது. அந் நூலுரையாசிரியர் பெயர் விளங்கவில்லை" என்று கூறுகின்றார்.*

ஆனால், தண்டியலங்காரத்தைப் பழைய உரையுடன் பதிப்பித்தவர்கள் அவ்வுரையை இயற்றியவர் சுப்பிரமணிய தேசிகர் என்று குறிப்பிட்டுள்ளனர். இது உண்மைக்கு மாறானதாகும். தண்டியலங்கார உரை பழமையானது என்பதற்குச் சான்றுகள் பல தரலாம். அவ்வாறிருக்க, திருவாவடுதுறை ஆதீனத்தில் பதினான்காம் பட்டத்திற்கு உரியவராய் விளங்கிய சுப்பிரமணிய தேசிகர் உரை எழுதினார் என்பது பொருந்தாது. ஒருகால் பழைய உரையில் நடுவே ஏதேனும் விளக்கக் குறிப்பு எழுதிச் சேர்த்தவர் தேசிகராய் இருக்கலாம். அத்தகைய இடம் எது என்பதை இன்று அறிய இயலவில்லை.

## உரையின் இயல்பு

உரை, சுருக்கமும் தெளிவும் உடையது. சூத்திரங்களின் பொருளை நன்கு விளக்கிச் செல்லுகின்றது. மிகச் சில இடங்களில் அணிகளுக்குள்ள வேறுபாட்டைக் குறிப்பிடுகின்றது. தடை விடை எழுப்பி விளக்குகின்றது. உதாரணச் செய்யுளை அணி இலக்கணத்துடன் பொருத்திக்காட்டி விளக்காமல் செல்லுவது இவ்வுரைக்குள்ள ஒரு குறைபாடாகும். கற்போர் உய்த்து உணர்ந்து தெளிந்து கொள்ளட்டும் என்று இதன் உரையாசிரியர் விட்டிருக்கலாம்.

பாயிரம் பற்றிய விளக்கம், சிறப்புப் பாயிரம் கூறும் வரலாறு ஆகியவை இல்லாமை பெரிய இழப்பாகும்.

## முதல் நூலும் வழிநூலும்

தண்டியலங்காரம் வடமொழியிலுள்ள காவ்யா தர்சத்தின் வழிநூல் என்பதற்கு இதன் உரையே சான்றாக உள்ளது.

* சங்கத்தமிழும் பிற்காலத் தமிழும். பக்கம் – 161.

பொதுவணியியலில் (25), "இதன் முதல் நூல் செய்த ஆசிரியர் உலகத்துச் சொல்லை எல்லாம் சமஸ்கிருதம், பிராகிருதம், அபப்பிரஞ்சம் என மூன்று வகைப்படுத்தினார். அவற்றுள் சமஸ்கிருதம் புத்தேளிர் (தேவர்) மொழி எனவும் அபப் பிரஞ்சம் இதர சாதிகளாகிய இழிசனர் மொழி எனவும் கூறினார்" என்று உரை குறிப்பிடுகின்றது.

சொல்லணியியலின் இறுதியில், "மாலை மாற்றும், சுழிகுளமும், கோமூத்திரியும், சருப்பதோபத்திரமும் என நான்குமே அன்றே ஆண்டு ஆசிரியனால் வடநூலில் உரைக்கப் பட்டன. ஈண்டு உரைத்தன ஆகிய ஒழிந்த மிறைக்கவி, மிகைபடக் கூறிற்றாம் பிற எனின், ஆகா; ஒழிந்தன, 'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என்னும் தந்திர உத்தியால் உரைக்கப்பட்டன. அல்லதூஉம், இது வடநூலுக்கு வழிநூல் ஆதலால் தனது விகற்பம்பட உரைத்தார் எனினும் அமையும் என்று இந்நூலின் உரை கூறுகின்றது.

## நல்ல விளக்கம்

உரையில் சில கருத்துகள் நன்கு விளக்கப்பட்டுள்ளன. அவ்விளக்கங்கள் நம் புலமைக்கு விருந்தாய் அமைகின்றன.

பொதுவணி இயலின் இறுதியில், செறிவு என்பதனைப் பின்வருமாறு விளக்குகின்றார்:

"மாங்கனியும் தீம்பாலும் வருக்கைச் சுளையும் சருக்கரையும் தம்முள் வேறுபட்ட சுவைய எனினும் கூறுவது மதுரம் ஒன்று அன்றே? அதுபோல, எழுத்துச் செறிவும், சொற் செறிவும், பொருட் செறிவும் செறிவு எனவே சொல்லுவது அல்லது பிறிதொருவகை பேசிற் பெருகிய அகலம் உடைத்தாம் எனக் கொள்க."

பொருளணி இயலில், "இறக்கும் காலத்து உண்டாய நினைவு இறந்த பின்னர் வந்து ஊட்டும் என்பதனால் அறிக" என்ற விளக்கம், வாழ்த்து விலக்கு என்ற உதாரணச் செய்யுளுக்குச் சிறந்த ஒளியூட்டுகின்றது.

சத்துவம் என்பதனை இவர் நன்கு விளக்கியுள்ளார்: "சத்துவம் என்பன — வெண் பளிங்கில் செந்நூல் கோத்தால் அதன் செம்மை புறம்பே தோன்றுமாறுபோல, உள்ளம் கருதியது புலனாக்கும் குணங்கள். அவை, சொற்றளர்வு, மெய் வியர்ப்பு, கண்ணீர் நிகழ்ச்சி, மெய் விதிர்ப்பு, மெய் விதும்பல், மெய்ம்மயிர் அரும்பல் முதலியன. சத்துவம் — உள்ளதன் தன்மை".

## இன்றும் உதவும்

இளங்கவிஞர்கள் இன்று பாடும் கவிதைகளில் செய்யும் சிலவகையான பிழைகளை இவ்வுரை, அன்றே சுட்டிக் காட்டியுள்ளது.

பொன் தகடு என்பதனை பொற்றகடு என்று எழுதாமல், எதுகை சரியாக அமையவேண்டுமே என்று அப்படியே (பொன் தகடு என்றே) எழுதுவது; குற்றியலுகரத்தின் முன் வரும் உயிர் எழுத்தைச் சேர்த்து எழுதாமல், பாட்டில் சேர்ப்பது போன்ற குறைபாடுகளை இந்நூலின் உரை சுட்டிக் காட்டி அவற்றை நீக்குக என்று அறிவுரை கூறுகின்றது.*

## சொல்லாட்சி

மொட்டு என்ற பெயர்ச்சொல்லிலிருந்து, இவர் வினைச் சொற்களைப் படைத்துக் கொள்கின்றார். குவியும் என்ற பொருளில் மொட்டியா நிற்கும் என்றும், குவிதல் என்ற பொருளில் மொட்டித்தல் என்றும் சொற்களை வழங்குகின்றார் (பொருளணி இயல் யுத்த - ஏது, இயல் - யுத்த ஏது).

எங்களுக்கு, நுனக்கு ஆகிய சொற்கள் இவர் காலத்தில் வழூஉச் சொற்களாகக் கருதப்பட்டன. (சொல்லணி இயல் - சொல் வழு).

## வாழ்க்கை நிலை

வாழ்க்கையில் வெறுப்புற்ற மக்கள் தீயில் மூழ்கி இறக்கும் வழக்கம் அக் காலத்தில் இருந்தது.

இரவில் வீட்டில் திருடச்செல்லும் கள்வர், வீட்டிலுள்ளோர் விழித்துள்ளனரா, உறங்கி விட்டனரா என்று அறிந்து கொள்ளப் பொய்த்தலை ஒன்றைச் செய்து அதனைக் கோலில் செருகி வீட்டின் உள்ளே நீட்டுவர். பொய்த் தலையைக் கண்டு ஆரவாரம் செய்யாமல் வீட்டிலுள்ளோர் இருப்பாராயின், பின் திருடுவர்.

**கைத்தலம் கண்ணாக் களவுகாண் பான்ஒருவன்**
**பொய்த்தலை முன் நீட்டியற்றும் போந்து**

என்ற அடிகள் இச்செய்தியை உணர்த்தும். (நகைச்சுவை - உதாரணம்).

* பார்க்க: சொல்லணிஇயல் வழுக்களின் வகை (சந்திவழு; யதிவழு).

# 5. சாமுண்டி தேவ நாயகர்

புறப்பொருள் வெண்பா மாலை தொல்காப்பியத்திற்குப் பின், பெரிதும் பயிலப்படும் புறப்பொருள் இலக்கண நூல். புறப்பொருளின் இலக்கணத்தை உணர்த்தும் தனி நூல் இது. இந்நூலை உரையாசிரியர்கள் அனைவரும் பயின்றுள்ளனர்; தம் உரைகளில் மேற்கோள் காட்டியுள்ளனர்.

**இலக்கணமும் இலக்கியமும்:** இந் நூலாசிரியர் ஐயனாரிதனார். சேர அரச பரம்பரையில் தோன்றிய புலமைச் செல்வர். இவர் திணைகளை விளக்கும் சூத்திரங்கள் இயற்றி, துறைகளை விளக்கும் கொளுக்களைச் செய்து, அவற்றிற்கு ஏற்ற இலக்கியங்களையும் தாமே படைத்துள்ளார். பிற நூல்களிலிருந்து மேற்கோள் தராமல் தக்க மேற்கோள்களை இவரே வெண் பாக்களால் பாடிச் சேர்த்துள்ளார். மேற்கோள் காட்டுதல் உரையாசிரியரின் பணி என்றாலும் நூலாசிரியரே அதனைத் திறம்படச் செய்திருக்கின்றார். உரையாசிரியர் செய்ய வேண்டிய பணியை - மேற்கோள் தேடித் தரவேண்டிய பணியை நூலாசிரியரே செய்து உரையாசிரியர்க்குப் பெரிதும் உதவி செய்து விட்டார்.

### உரையாசிரியர்

இந்நூலின் உரையாசிரியர் சாமுண்டிதேவ நாயகர். 'ஜயங்கொண்ட சோழ மண்டலத்து மேற்கானாட்டு மாகறலூர் கிழார்' என்ற அடைமொழிகள் இவரது பெயரின் முன் சேர்ந்துள்ளன.

இவரைப்பற்றிய வரலாறு எதுவும் தெரியவில்லை. இவர் தம் உரையில் (பாடாண் - 42),

**உலவா வூக்கமொடு உள்ளியது முடிக்கும்**
**புலவர் ஆற்றுப்படை புத்தேட்கும் உரித்தே**

என்ற பன்னிரு பாட்டியல் (320) சூத்திரத்தை மேற்கோள் காட்டுகின்றார். எனவே இவ்வுரையாசிரியர் 12-ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர் என்பது விளங்கும்.

### உரையின் இயல்பு

புறப்பொருள் திணையை விளக்கும் சூத்திரம், துறையை விளக்கும் கொளு, மேற்கோள் பாடல்கள் ஆகியவற்றிற்கு இவர் உரை இயற்றியுள்ளார். மேற்கோள் பாடல்களும் நூலாசிரியரால் இயற்றப்பட்டவை ஆதலின், அவற்றிற்கும் இவர் உரை இயற்ற வேண்டியதாயிற்று. மற்ற உரையாசிரியர்கள் (தண்டியலங்கார

மேற்கோள்) உதாரணப் பாடல்களுக்கு உரை இயற்றவில்லை என்பது இங்கே கருதத் தக்கதாகும்.

சொல் கிடந்தவாறே இவர் பொழிப்புரையாகப் பொருள் எழுதுகின்றார். எழுவாய் பயனிலை செயப்படுபொருள் தேடி, கொண்டு கூட்டிப் பொருள் எழுதுவதில்லை.

வடசொற்கள் மிகுதியாக இவரது உரையில் இடம் பெறுகின்றன. நூலாசிரியர் எவ்வளவுக்கு எவ்வளவு தூய தனித் தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துகின்றாரோ அப் பண்புக்கு மாறாக உரையாசிரியர் வட சொற்களைக் கொட்டித் தம் உரையை நிரப்பி விடுகின்றார். விசாரித்தல், உபகாரி, உத்திரம், பிராணன் போன்ற வட சொற்கள் இடம் பெறுகின்றன.

'அப்படிக் கொத்தவன்' போன்ற பேச்சுமொழிச் சொற்களும் இடம் பெறுகின்றன. உலக வழக்கின் சார்பு இவரது உரையில் உண்டு.

மிகச்சில இடங்களில் செய்யுளை முடித்துக்காட்டுகின்றார். இலக்கணக் குறிப்பும், சொற்பொருள் விளக்கமும் அருகியே இடம் பெறுகின்றன. மேற்கோள் மிகுதியாகக் காட்டுவதில்லை.

நூலின் பல பகுதிகள் இவ்வுரையால்தான் விளங்குகின்றன. பல அரிய சொற்களுக்கு இவ்வுரைதான் பொருள் கூறுகின்றது.

நோலை என்பதற்கு எட்கசிவு என்றும்; நெய்த்தோர் (நெத்துரு - தெலுங்கு) என்பதற்கு உதிரம் என்றும் (வஞ்சி - 5) இவர் பொருள் எழுதுகின்றார்.

**நெடிபடு கானத்து நீள்வேல் மறவர்**
**அடிபடுத்து ஆரதர் செல்வான் — துடிபடுத்து**
**வெட்சி மலைய விரவார் மணிநிரைக்**
**கட்சியுள் காரி கலுழ்ம் (வெட்சி–3)**

என்ற பாடலில் பல அரிய தமிழ்ச் சொற்கள் உள்ளன. இப்பாடலின் உரை பின்வருமாறு உள்ளது:

"சிள் வீடு கறங்கும் காட்டிடத்து நீண்ட வேல்களையுடைய மறவர் காலிலே செருப்பைத் தொட்டு, கடத்தற்கரிய வழியிடத்துச் செல்வான் வேண்டி, துடியைக் கொட்டப் பண்ணி வெட்சிப் பூவைச் சூட, பகைவர் மணியாற் சிறந்த பசுவினையுடைத்தான காட்டிடத்துக் காரி என்னும் புள்ளுந் துந்நிமித்தமாக அழா நிற்கும்".

இவ்வுரை யின்றேல் பாட்டின்பொருள் தெளிவாக விளங்குதல் அரிதாகும்.

வெண் கண்ணி என்பதற்கு (வாகை-2) கொத்தான் வாகை என்றும், எழுது எழில் மாடம் என்பதற்கு (உழிஞை - 26) சித்திரம் எழுதிய அழகிய மாளிகை என்றும் பொருள் எழுதியிருப்பது எண்ணி மகிழத்தக்கதாகும்.

இவருக்கு முன் இருந்தோர் கொண்ட வேறு பாடங்களையும் உரைகளையும் இவர் குறிப்பிடுகின்றார் (வாகை - 8).

எண்வகை தானியம் (ஒழிபு - 4), மன்னனுக்கு உரிய பல வகைத்தொழில், உறுப்பு (பாடாண் 37, வாகை - 32), மூவுலகம் (வாகை - 13) ஆகியவற்றை விரித்துரைக்கின்றார்.

ஓரே துறை வேறு வேறு திணைகளில் இடம் பெற்றால் அவற்றை வேறுபடுத்திக் காட்டுகின்றார்.

"திணை தோறும் வாணாட்கோள், குடை நாட்கோள் வேறுபாடுடைய" (உழிஞை - 3) என்றும், "தும்பையின் முன்தேர்க் குரவை பின்தேர்க் குரவை, போர்க்குச் செல்லும் தேரின்மேல். இவை (வாகைப் படலத்துள்) வென்று நின்ற தேரின் மேல்" (வாகை-8) என்றும் கூறியுள்ளார்.

**பல்கலைப் புலமை**

பல்வேறு கலைகளைப்பற்றிய அறிவு இவ்வுரை யாசிரியருக்கு உண்டு. வடமொழிப் பயிற்சி போதிய அளவு உள்ளது.

கோழி வென்றியில் (ஒழிபு-6), "சொல்லுக்குச் சொல் வெல்லும், ஆமைக்கு ஆமை வெல்லும் தெங்குக்குத் தெங்கு வெல்லும் எனக் கோழிகளின் திறம் அறிந்து விடுதல். வித்தகர் — கோழி நூல் வல்லவர்" என்று விளக்குகின்றார்.

பூழ் வென்றியில் (ஒழிபு-9), "சொல்லக் கடவ மந்திரம் பல ஆவன; தீற்றும் அரிசி ஓதும் மந்திரமும், பச்சிலை பிசைந்து தடவும்போது சொல்லும் மந்திரமும் செவியுள்ளூறுத்தும் மந்திரமும்" என்று உரைக்கின்றார்.

குதிரை வென்றியுள் (ஒழிபு-13) ஐந்து வகை கதியினையும் விளக்குகின்றார்.

# 6. நம்பி அகப்பொருள் விளக்கவுரை

தமிழிலக்கிய உலகில் இறையனார் அகப்பொருள் நூலுக்குப்பின், நாற்கவிராச நம்பி இயற்றிய 'அகப்பொருள் விளக்கம்' சிறப்புற்று விளங்குகின்றது. தமிழ் அகப்பொருள்

இலக்கணம் பயில்வோர் விரும்பிப்பயிலும் சிறந்த இலக்கண நூலாக இந்நூல் விளங்குகின்றது.

**நூலும் உரையும்**

அகப்பொருள் விளக்கம் எழுதிய நாற்கவிராச நம்பியே தம் நூலுக்கு உரையும் இயற்றியுள்ளார். இதனை,

> **அகப்பொருள் விளக்கம்என்று அதற்கு ஒருநாமம்**
> **புலப்படுத்து இருளறப் பொருள்விரித்து எழுதினன்**

என்று சிறப்புப்பாயிரம் கூறுவதாலும்,

**"இருளறப் பொருள் விரித்து எழுதினன்"** என்பதற்கு மயக்கம் தீர உரையைப் பரப்பி எழுதினன் என்று அதன் உரை கூறுவதாலும் அறியலாம்.

சிறப்புப்பாயிரமும் அதன் உரையும் நாற்கவிராச நம்பியின் வரலாறுபற்றிக் கூறுவதைக் காண்போம்.

நம்பி என்பது இயற்பெயர் என்று பாயிரவுரை கூறுகின்றது. நால்வகைக் கவிதைகளாகிய ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என்பனவற்றைப் பாடும் திறன் பெற்றிருந்ததால் 'நாற்கவிராசர்' என்னும் சிறப்புப் பெற்றார். இவர் வடமொழி, தமிழ் இரண்டிலும் வல்லவர். சிறப்புப் பாயிரம்,

> **இருபெருங் கலைக்கும் ஒருபெருங் குரிசில்**
> **பாற்கடற் பல்புகழ் பரப்பிய**
> **நாற்கவி ராச நம்பி**

என்று இவர் புகழைக் கூறுகின்றது.

புளிங்குடி என்னும் ஊரில் வாழ்ந்த முத்தமிழ் ஆசானாகிய 'உய்யவந்தான்' என்பவரின் மைந்தர் இவர் என்பதைச் சிறப்புப் பாயிரம்,

> **உத்தமன் புளிங்குடி உய்யவந் தான்எனும்**
> **முத்தமிழ் ஆசான் மைந்தன்**

என்று அறிவிக்கின்றது. புளிங்குடி என்பது திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளது.

இவர் காலம் குலசேகர பாண்டியன் (1196-1266) அரசாண்ட காலம் என்று சிறப்புப்பாயிரம் கூறுகின்றது.

இவர் சமண சமயத்தவர். சிறப்புப்பாயிரம்,

> **மாந்தரும் தேவரும் வாழ்த்திமுக் குடைக்கீழ்**
> **ஏந்தெழில் அரிமான் ஏந்துபொன் அணைமிசை**
> **மதிமூன்று கவிப்ப உதய மால்வரைக்**

கதிர்ஒன்று இருந்தெனக் காண்டக இருந்து
தத்துவம் பகர்ந்தோன் சரணம் பொருந்திய உத்தமன்

என்று இவரைக் கூறுகின்றது.

## உரையின் இயல்பு

உரை மிகவும் எளிமையும் தெளிவும் உடையது. இறையனார்களவியல் உரையின் சார்பு சில 'இடங்களில் காணப்படுகின்றது. இளம்பூரணர் உரையின் இயல்புகளை எல்லாம் இவ்வுரையிலும் காணலாம். அடக்கமும் அமைதியும் இவரது உரைநடையில் காணப்படுகின்றன. சூத்திரங்களின் பொழிப்புரைக்குப்பின் மிகச் சுருக்கமாக விளக்கமும் அருஞ் சொற்பொருளும் இலக்கண ஒப்புமையும் தருகின்றார்.

## மேற்கோள் பாடல்கள்

இன்று அச்சில் உள்ள உரையில் அகப்பொருள் இலக்கணத்திற்கு இலக்கியமாகத் தஞ்சைவாணன் கோவைச் செய்யுட்கள் யாவும் காட்டப்பட்டுள்ளன. அவையேயன்றிச் சங்க நூல்களிலிருந்து ஏற்ற பாடல்கள் தரப்படுகின்றன.

நம்பி அகப்பொருள் இலக்கணத்திற்கு இலக்கியமாக எழுதப்பட்ட நூல், தஞ்சைவாணன் கோவை. ஆதலின் நூலாசிரியரே உரை எழுதிய அகப்பொருள் இலக்கணத்தில் மேற்கோளாகத் தஞ்சைவாணன் கோவைப் பாடல்கள் இடம் பெற முடியாது. காலப்போக்கில் யாரோ ஒருவர் தஞ்சைவாணன் கோவைப் பாடல்களை மேற்கோளாக அமைத்திருக்க வேண்டும்.

திருக்கோவையார், திருவாரூர்க் கோவை ஆகியவற்றி லிருந்தும் மேற்கோள் தரப்படுகின்றன. இவையும் பின்னரே சேர்க்கப்பட்டிருக்க வேண்டும்.

இதன் உரையில், "இவற்றுள் சான்றோர் செய்யுள் இல்லாத வற்றிற்குச் சூத்திரம் தன்னையே இலக்கியமாகக் கொள்க" (சூத்-146) என்று குறிப்பிடப்படுகிறது. ஆனால், பெரும்பாலும் மேற்கோள் எல்லாவிடங்களிலும் தரப்பட்டே உள்ளன.

"நடுங்க நாட்டத்திற்குச் சான்றோர் செய்யுள் இல்லை" என்று உரை (சூத்-139) கூறிய போதிலும், "பால்போல் மொழிவஞ்சி" என்ற தஞ்சைவாணன் கோவைப் பாடல் (63) மேற்கோள் காட்டப்பட்டுள்ளது.

இவற்றை எல்லாம் நோக்கும்போது தஞ்சைவாணன் கோவைப் பாடல்கள் பிற்காலத்தில்தான் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வரவேண்டியுள்ளது.

2.40

1878-ஆம் ஆண்டில் யாழ்ப்பாணம் வ.ச. வைத்தியலிங்கப் பிள்ளை அகப்பொருள் விளக்கத்திற்கு ஓர் உரை இயற்றி மேற்கோள் பாடல்களைத் தஞ்சைவாணன் கோவையிலிருந்து தந்தார். இந்தப் புது உரைக்குப்பின், பழையவுரையிலும் அக்கோவைப் பாடல்கள் சேர்க்கப்பட்டிருக்கலாம்.

சுன்னாகம் அ. குமார சுவாமிப் பிள்ளை திருக்கோண மலை த. கனகசுந்தரம் பிள்ளை அகப்பொருள் விளக்கத்திற்கு உரை கண்டுள்ளனர்.

## சொற் பொருள் விளக்கம்

சில சொற்களுக்கு நாற்கவிராசநம்பி கூறும் பொருள் கீழே தரப்படுகின்றன:

"நூல் என்ற சொற்குப் பொருள் உரைக்குங்கால், தந்திரம் என்னும் வடமொழியை நூல் என்று வழங்குவது தமிழ் வழக்கு எனக்கொள்க" *(1)*

"உரன் எனினும் அறிவு எனினும் ஒக்கும். பெருமை என்பது பழியும் பாவமும் அஞ்சுதல். அறிவு என்பது தக்கது அறிதல். அச்சம் என்பது காணாதது ஒன்று கண்டாற்பெண்டிரிடத்து நிகழ்வது. நாணம் என்பது பெண்டிர்க்கு இயல்பாகிய குணம். மடம் என்பது பேதைமை எனக்கொள்க *(247)*".

"அல்ல குறி என்பது குறியல்ல என்றவாறு. அதனை முன்றில்போலக் கொள்க *(159)*".

"கோவலன் என்பது கோபாலன் என்னும் வடமொழித் திரிபால், ஆப் புரத்தல் தொழில்மேல் நின்றது" *(247)*.

# 7. தமிழ்நெறி விளக்கவுரை

தமிழ்நெறி விளக்கம் என்பது, முன்னும் பின்னும் சிதைந்து அரைகுறையாகக் கிடைத்த நூல். இதனைப் பதிப்பித்தவர் டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர். அவர் பதிப்பித்த நூலில் அகப் பொருளைப்பற்றிக் கூறும் 25 சூத்திரங்களே உள்ளன.

பொருளியல் என்ற பகுதியின் முதற் சூத்திர உரையில், 'நிறுத்த முறையான் பொருளிலக்கணம் ஆமாறு உணர்த்தல் நுதலிற்று' என்று இருப்பதால் இதற்கு முன் எழுத்தும் சொல்லும் கூறும் பகுதியும், பொருளியலில் புறப் பொருளும், அதற்குப்பின் யாப்பு அணி பற்றிய பகுதியும் இருந்திருக்கலாம்.

நூலாசிரியர் பெயரும் உரையாசிரியர் பெயரும் தெரியவில்லை. நூலாசிரியரே உரை எழுதியிருக்கலாம் என்பதற்குச் சான்று உண்டு. உரையின் எப்பகுதியிலும், என்றார் நூலாசிரியர் என்றோ, நூலாசிரியர் கருத்து இது என்றோ கூறாமல் உரை செல்லுகின்றது. களவியற் காரிகையின் உரையாசிரியர், 'தமிழ் நெறி விளக்கத்தில் பொருளியலுடையாரும் களவொழுக்கம் ஆறு வகைப்படும் என்றார்' என்று இந்நூலை மேற்கோள் காட்டுகின்றார். 'முக்கண் கூட்டம்' (21) என்ற சூத்திரத்தின் மூலமும் உரையும் இந்நூலில் உள்ளபடியே அவரால் மேற்கோள் காட்டப்படுகின்றன. ஆதலின் 'தமிழ் நெறி விளக்கம்' இயற்றிய ஆசிரியரே உரையும் இயற்றி இருக்கலாம்.

இந்நூலின் உரையில் மேற்கோளாகக் காட்டப் பெறும் பாடல்களில் சில, களவியற் காரிகை உரையில் உள்ளன. பரிமேலழகர் காமத்துப்பாலில் குறிப்பிடும் ஆயிடைப் பிரிவு, சேயிடைப் பிரிவு ஆகிய இரண்டும் இந்நூலில் கூறப்பட்டுள்ளன. எனவே, தமிழ்நெறி விளக்கம் களவியற் காரிகை ஆசிரியர்க்கும் பரிமேலழகர்க்கும் முன்னேரே தோன்றியது என்னலாம்.

உரைமேற்கோளாக வரும் பாடல்களில் (6, 32, 52 ஆம் பாடல்கள்) 'வழுத்தூர் மதிதரன்' என்பவரைப் பற்றிய குறிப்புக்கள் கிடைக்கின்றன.

**தூய்மை சான்ற தொல்குடித் தோன்றிய**
**வாய்மை நாவின் மதிதரன்**

**(மேற். பாடல்–33)**

**மண்மிசை விளங்கிய வழுத்தூர் மதிதரன்**
**நுண்ணியற் பனுவல் நுழைபொருள் நுனித்த**
**வாய்மொழி அமிர்தம்**

**(மேற். பாடல்–62)**

என்ற பகுதிகள் குறிப்பிடத்தக்கவை.

மதிதரன் என்பவர், நூல் இயற்றியவர்க்குக் கல்வி புகட்டிய ஆசிரியராக இருக்கலாம். மதிதரன் என்பது சிவபெருமான் திருநாமங்களில் ஒன்று. ஆதலின் ஆசிரியரும் மாணவரும் சைவசமயத்தவராக இருக்கக்கூடும்.

வழுத்தூர் என்பது தஞ்சாவூர் மாவட்டத்தில் ஐயம் பேட்டைக்கு வடக்கே குடமுருட்டியாற்றி ர தென்கரையில் உள்ளது.

**உரையின் இயல்பு**

உரை மிகவும் சுருக்கமாய்-எளிமையாய் உள்ளது. மகுணன் (மகிழ்நன்) குறுஞ்சி (குறிஞ்சி) போன்ற மரூஉச் சொற்கள் இடம் பெற்றுள்ளன. இலக்கணச் செறிவோ நடையழகோ உரையில் இல்லை.

ஒருமை பன்மை மயக்கத்திற்கு மேற்கோளாகக் காட்டப் பெறும் 'ஏவல் இளையர் தாய் வயிறு கரிக்கும்' என்ற அடி இவ்வுரையில் ஓர் பாடலில் இடம் பெறுகின்றது.

> நிரையிர் செல்லு மோஎன நேர்ந்து
> புலையன் எறிந்த பூசல் தண்ணுமை
> ஏவல் இளையர் தாய்வயிறு கரிக்கும்
> இன்னா அருஞ்சுரம் என்ப
> என்னோ தோழி அவர்சென்ற ஆறே.

(மேற். பாடல்–154)

# 8. களவியற் காரிகை உரை

**உரையின் இயல்புகள்**

களவியற் காரிகை, அகப்பொருள் உணர்த்தும் இலக்கண நூல். முன்னும் பின்னும் சிதைந்து அரைகுறையாகக் கிடைத்த தமிழ் நூல்களுள் இதுவும் ஒன்று. இதற்கு உரையும் உள்ளது. இந்த நூலின் பெயரோ, இயற்றியவர் பெயரோ, உரையாசிரியர் பெயரோ தெரியவில்லை. இந்நூலின் சில பகுதிகளை ஒன்று சேர்த்து வெளியிட்ட ஆராய்ச்சி அறிஞர் ச. வையாபுரிப் பிள்ளை, இந்நூலுக்குக் 'களவியற் காரிகை' என்ற பெயரிட்டார். அவர் 1931-இல் இந்நூலையும் உரையையும் செப்பனிட்டு வெளியிட்டார். சிதைந்து போனவை போகக் கிடைத்த துண்டுதுணுக்குகளை எல்லாம் ஒன்று சேர்த்து இயையு நோக்கி அமைத்து நூலாக்கி, பொருத்தமான பெயரும் இட்டு வெளிப்படுத்திய அறிஞரின் முயற்சியையும் திறனையும் எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

**பெயர்ப் பொருத்தம்:** 'களவியற் காரிகை' இறையனார் களவியலைத் தழுவி எழுதப்பட்ட நூல். இறையனார் களவியலில் நூற்பாவால் ஆகிய அறுபது சூத்திரங்கள் இருக்கின்றன. அந்நூலைத் தழுவி எழுதப்பட்ட களவியற் காரிகையில் கட்டளைக் கலித்துறையால் ஆன அறுபது செய்யுள்கள் உள்ளன. நூற்பாவால் அமைந்த யாப்பருங்கலம் என்னும் நூலை ஒட்டி, கட்டளைக்

கலித்துறையால் எழுதப்பட்ட யாப்பிலக்கண நூல் யாப்பருங்கலக் காரிகை என்று பெயர் பெற்றதுபோல, நூற்பாவால் ஆகிய களவியலைத் தழுவிக் கட்டளைக் கலித்துறையால் ஆன நூல் களவியற்காரிகை என்று பெயர் பெற்றது.

களவியற் காரிகையின் தொடக்கத்தில் பத்துச் செய்யுளும் இறுதியில் ஆறு செய்யுளும் மறைந்துபோயின. இப்போது 11 முதல் 54 வரையில் உள்ள கட்டளைக்கலித்துறைகள் அந்தாதியாக அமைந்துள்ளன.

இதன் உரையாசிரியர் யார் என்று தெரியவில்லை. உரையில் மிகுதியான விளக்கங்கள் இன்மையால் உரையாசிரியரைப்பற்றி அறிய வாய்ப்பு இல்லை. உரையின் தொடக்கத்தில் உள்ள ஆசிரிய விருத்தம், நெல்வேலி வேய்முத்தரை வணங்குவதாய் அமைந் துள்ளது. ஆதலின் இவரைத் திருநெல்வேலியில் வாழ்ந்த சைவர் என்னலாம். காட்சி என்ற துறையை விளக்கும்போது இவ்வுரையாசிரியர் இறையனார் களவியல் உரையிலிருந்து பல வரிகளை அப்படியே எடுத்து எழுதி இருக்கின்றார். எனவே, இவர் அவ்வுரையை விரும்பிப்பயின்று அதில் ஆழ்ந்தவர் என்னலாம். திருவரங்கத்துத் திருமாலைப் போற்றும் கோயிலந்தாதியிலிருந்து சில பாடல்களை மேற்கோள்தந்து தம் சமயப் பொதுநோக்கைக் காட்டுகின்றார்.

**காலம்:** இவ்வுரையாசிரியர் கண்டனலங்காரம் என்னும் நூலிலிருந்து மேற்கோள் தருகின்றார். கண்டன் அலங்காரம் சோழ மன்னனை, "பொன்னி நாட்டுமன்னன் கண்டன் பூபால தீபன்" என்று புகழ்கின்றது. இரண்டாம் இராசராசனுக்குக் கண்டன் என்றபெயர் உண்டு. இம் மன்னன் 1146 முதல் 1163 வரை அரசாண்டவன்.

இவ்வுரையாசிரியர் பல் சந்த மாலை என்ற நூலிலிருந்து மேற்கோள் தருகின்றார். இந் நூலில் வின்னன் என்ற முகம் மதிய சிற்றரசனைப் பற்றிய குறிப்புகள் வருகின்றன. முகம்மதியர் தென்னாட்டின்மீது படையெடுத்து மதுரையைக் கைப்பற்றியது 1310 முதல் 1325க்கு இடைப்பட்ட காலத்திலாகும். முகம்மதிய மரபில் வந்த வின்னன் பாண்டிய நாட்டுக் கீழ்க்கடற்கரையில் இருக்கும் வகுதாபுரி என்னும் காயல்பட்டினத்தில் வசித்தான் என்றும் பல் சந்தமாலை அவனைப்பற்றிய நூல் என்றும் கூறுவர். வின்னன் வெளிநாட்டவன் ஆதலின் யவனராசன் என்று குறிப் பிடப்படுகின்றான். இவன் அஞ்சு வன்னத்தவர் குலத்தைச் சேர்ந்தவன்; கலிபாமரபில் தோன்றியவன். ஆகையால் கலுபதி என்றும் அழைக்கப்பட்டான். இவனது காலம் 1325க்குப் பின்னர் ஆகும்.

எனவே, உரையாசிரியர் பதினான்காம் நூற்றாண்டின் பிற் பகுதியில் வாழ்ந்தவர் என்னலாம்.

இவர், தமிழ்நெறி விளக்கத்தையும் மேற்கோள் காட்டி யுள்ளார்.

**மேற்கோள் நூல்கள்:** இவ்வுரையாசிரியர் முப்பதுக்கு மேற் பட்ட நூல்களைத் தம் உரையில் காட்டியுள்ளார். பெரும்பாலான நூல்கள் இன்று கிடைக்காதவை. அகத்திணை, அரையர் கோவை, இன்னிசைமாலை, ஐந்திணை, கண்டனலங்காரம், கிளவித் தெளிவு, கிளவி மாலை, கிளவி விளக்கம், கோயிலந்தாதி, சிறப்பட்டகம், திணைமொழி, தில்லையந்தாதி, நரையூரந்தாதி, பல்சந்த மாலை, மழவை எழுபது, வங்கர் கோவை என்பன மறைந்துபோன தமிழ் நூல்கள். இவ்வுரையால் இந்நூல்களிலிருந்து பல செய்யுள்கள் கிடைக்கின்றன. தமிழ் நூல்களின் பெரும் பரப்புத் தெரிகின்றது. உரையாசிரியரின் நூலறிவு வெளிப்படு கின்றது.

பல இடங்களில் களவியலுரையைப் பெயர்த்து எழுதிச் செல்கின்றார்.

**இல்லாத பாடல்கள்**

'பையுள் மாலை' என்ற செய்யுளை மேற்கோள் காட்டி, அது நெடுந்தொகையுள் உள்ளதாய்க் குறிப்பிடுகின்றார்.

'ஆரணங்குற்றனை' என்ற பாடல் குறுந்தொகையுள் இருப்ப தாய்க் கூறி, மேற்கோள் தருகின்றார். இவை இரண்டும் இன்றைய பதிப்புக்களில் அத்தொகை நூல்களில் இல்லை.

## 9. நேமிநாத உரை

நேமிநாதம் *12* ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில், திரி புவனதேவன் என்னும் மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் *(1178-1219)* இயற்றப்பட்ட இலக்கண நூல். இது நன்னூலுக்கு முற் பட்டது. வெண்பாக்களால் ஆனது; எழுத்து சொல் ஆகிய இரண்டின் இலக்கணத்தைச் சுருக்கமாக உரைப்பது; சின்னூல் என்னும் வேறு பெயரை உடையது.

இதில் பாயிரம் *1*, அவையடக்கம் *1*, எழுத்ததிகாரம் *24*, சொல்லதிகாரம் *71* ஆக *97* வெண்பாக்கள் அடங்கியுள்ளன.

இதனை இயற்றியவர் குணவீர பண்டிதர் என்னும் சமணப் புலவர். நேமிநாதர் என்னும் 22-ஆம் சைன தீர்த்தாங்கரர்

பெயரால் இந்நூலை இயற்றி, இந் நூலுக்கு நேமிநாதம் என்று பெயரிட்டார்.

## உரையாசிரியர்

இந்நூலுக்குப் பழைய உரை உள்ளது. இவ்வுரையாசிரியரின் ஊர், பெயர் எதுவும் தெரியவில்லை. ஆனால், இவர் சமண சமயத்தவர் என்பதற்கு உரையில் சில சான்றுகள் உள்ளன. அருகன் (10) முக்குடை பல்லவத்தின் சந்தம் (16) ஆகிய சொற்களை எடுத்துக்காட்டியுள்ளார்.

**காலம்:** இவர், எண் ஒகாரத்திற்கு (79), 'முத்தன் என்கோ மூர்த்தி என்கோ' என்னும் பாடலைக் காட்டி அதன் கீழ், 'என்றார் அவிரோதி யாழ்வார்' என்று கூறுகின்றார். இப்பாடல் அவிரோதியாழ்வார் (அவிரோத நாதர்) என்னும் சமணப் புலவர் இயற்றிய திருநூற்றந்தாதி என்னும் நூலில் (31) உள்ளது. அவிரோதியாழ்வார் காலம் 14 ஆம் நூற்றாண்டு ஆகும்.* ஆதலின் நேமிநாதவுரையாசிரியர் 14-ஆம் நூற்றாண்டிலோ அதற்குப் பின்னரோ வாழ்ந்தவர் என்னலாம்.

## உரையின் இயல்பு

இவ்வுரை, சூத்திரங்களுக்குத் தெளிவான பொழிப்புரை யுடன் அமைந்து, தக்க எடுத்துக் காட்டுகளுடன் வினாவிடைகள் பொருந்தி, தேவையான இடங்களில் விரிவுரையோடு விளங்குகின்றது. இவ்வுரையில் நீளமான வாக்கியத்தையோ கடினமான ஆராய்ச்சியையோ காண இயலாது. எளிமையான சின்னஞ்சிறு வாக்கியங்கள் நூல் முழுதும் அமைந்து இன்ப மூட்டுகின்றன. சிறிதளவு தமிழ்ப் பயிற்சியுடையவரும், எளிமையாக இலக்கணம் கற்க விரும்புவோரும் இதனைப் படித்துப் பயன் பெறலாம். பிறர் கருத்தை மறுப்பதோ, முரண்பட்ட கருத்தை எடுத்துக் காட்டுவதோ இவ்வுரையில் இல்லை.

இவ்வுரையாசிரியர் சமணராயினும், சமயக்காழ்ப்புச் சிறிதும் இன்றி, பிற சமய நூல்களையும் கொள்கைகளையும் ஆங்காங்கே எடுத்துக்காட்டுகின்றார். தொல்காப்பியத்திலிருந்து தொடர்ச்சியாய்ப் பல சூத்திரங்களை (6, 54 வெண்பாக்களின் கீழ்) எடுத்துத் தந்து, "இவைகளை விரித்துக் கொள்க" என்று எழுதிச் செல்கின்றார்.

* கலைக்களஞ்சியம் 1, பக்-236.

திருவள்ளுவ மாலையில் (21) உள்ள,

**உப்பக்கம் நோக்கி உபகேசி தோள்மணந்தான்**

என்ற செய்யுளை மேற்கோள் காட்டி (30), அதன்கீழ், "உபகேசி ஆவாள் நப்பின்னைப் பிராட்டியார்" என்று எழுதும் விளக்கம், புதிய ஒளி தருகின்றது. இவ் விளக்கத்தால் அப்பாடல் தெளிவு பெறுகின்றது.

கீழ்வரும் உரைப்பகுதிகள், இவ்வுரையாசிரியரின் எளிய இனிய தெளிவான நடைக்குச் சான்று பகரவல்லவை:

"அரைக் கழஞ்சு என்புழி முன்மொழியிற் பொருள் நின்றது: வேங்கைப் பூ என்புழிப் பின்மொழியிற் பொருள் நின்றது; தூணிப் பதக்கு என்புழி இரு மொழியிலும் பொருள் நின்றது. பொற்றொடி என்புழி இரு மொழியினும் பொருள் இன்றி இவற்றை உடையாள் என்னும் வேறொரு மொழியிலே பொருள் நின்றது" (1).

"பவளக் கோட்டு நீல யானை சாதவாகனன் கோயிலுள்ளும் இல்லை. அம்மிப் பிந்தும் துன்னூசிக் குடரும் சக்கரவர்த்திக் கோயிலுள்ளும் இல்லை!" (36)

**உவமைகள்:**

"வல்லினம் கல்மேல் விரல் இட்டாற்போலவும், மெல்லினம் மணல் மேல் விரல் இட்டாற்போலவும், இடையினம் மண்மேல் விரல் இட்டாற்போலவும் கொளக்" (2).

"வாளும் கூடும் இருப்பின் வாளைக் கொடுவா என்னும் அத்துணை அல்லது கூட்டைக் கொடுவா என்பது இல்லை ஆதலின் இங்ஙனம் சொல்லப்பட்டது" (8).

## 10. பாட்டியல் உரைகள்

தொல்காப்பியர் காலத்தில் எழுத்து, சொல், பொருள் என மூன்று பகுதிகளாகத் தமிழ் மொழியின் இலக்கணம் ஆராயப்பட்டது. காலப்போக்கில் பொருள்இலக்கணம் பல வாறாகப் பிரிந்து வளர்ச்சி பெற்றது. அகம், புறம், யாப்பு, அணி என்று பிரிந்து வளர்ந்தன. பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குப்பின் 'பாட்டியல்' என்று ஓர் இலக்கணம் பிரிந்து வளர்ந்தது.

பாட்டியல் என்பது ஒருவகை யாப்பிலக்கண ஆராய்ச்சியே யாகும். பாட்டியல் கூறும் செய்திகளை இரு பெரும் பிரிவுகளாகப் பகுக்கலாம். ஒன்று, பாட்டில் அமைந்திருக்க வேண்டிய

பொருத்தங்கள்; மற்றொன்று, இலக்கிய வகைகளைப் பற்றிக் கூறும் இலக்கணங்கள்.

தமிழில் கணக்கற்ற பாட்டியல் நூல்கள் தோன்றின. அவற்றுள் பன்னிரு பாட்டியல், வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், வரையறுத்த பாட்டியல் என்ற ஐந்துமே இன்று பயிலப்பட்டு வருகின்றன. பாட்டியல் உரைகளிலும், ஏனைய இலக்கண நூல் உரைகளிலும் பல பாட்டியல் நூல்கள் குறிப்பிடப்படுகின்றன. சூத்திரங்கள் மேற்கோளாகக் காட்டப்படுகின்றன.

அகத்தியர் பாட்டியல், பண்டாரப் பாட்டியல், வருணப் பாட்டியல், பாட்டியல் மரபு, தத்தாத்திரேயப் பாட்டியல், தொல்காப்பியர் பாட்டியல், பரணர் பாட்டியல், கல்லாடர் பாட்டியல் என்பன போன்ற பல பாட்டியல் நூல்களின் பெயரும் சூத்திரங்களும் உரையாசிரியர்களால் கூறப்படுகின்றன.

இலக்கண விளக்கம் நூலில் பொருளதிகாரத்தின் ஐந்தாம் இயலாகப் பாட்டியல் உள்ளது. அதனை இயற்றியவர் இலக்கண விளக்கத்தின் ஆசிரியர் அல்லர். அந்நூலாசிரியரின் மகனே அதனை இயற்றியுள்ளார். அதனையும் தனிப் பாட்டியல் நூலாகவே கருத வேண்டும். அதற்கு 'இலக்கண விளக்கப் பாட்டியல்' என்று பெயரிடலாம்.

**பாட்டியல் உரைகள்**

பாட்டியல் நூல்களுள் பன்னிரு பாட்டியலுக்குப் பழைய வுரை இல்லை. இலக்கண விளக்கப் பாட்டியலுக்கு நூலின் ஆசிரியரே உரை இயற்றியுள்ளார். ஏனையவற்றிற்குப் பழைய வுரைகள் உள்ளன. அவற்றை இயற்றியவர் வரலாறு எதுவும் தெரியவில்லை.

பாட்டியல் நூல்களுள் பன்னிரு பாட்டியலுக்குப் பழைய வுரை இல்லை. இலக்கண விளக்கப் பாட்டியலுக்கு நூலின் ஆசிரியரே உரை இயற்றியுள்ளார். ஏனையவற்றிற்குப் பழைய வுரைகள் உள்ளன. அவற்றை இயற்றியவர் வரலாறு எதுவும் தெரியவில்லை.

பாட்டியல் நூல்களுள் காலத்தால் முற்பட்டது பன்னிரு பாட்டியலாகும். இதற்கு கா. ரா. கோவிந்தராச முதலியார் விளக்கவுரை எழுதி, முன்னுரையில் நூலைப் பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார்.

## வெண்பாப் பாட்டியல்—பழையவுரை

வெண்பாப் பாட்டியலுக்கு வச்சணந்திமாலை என்ற பெயரும் உண்டு. இந் நூலைச் செய்வித்தவர் வச்சணந்தித் தேவர். இதற்குப் பழையவுரை உள்ளது.

செய்யுளியல் உரையில் (45) இவ்வுரையாசிரியர், 'கந்த புராணம், கூர்மபுராணம் என்பன பாடப்படும் பொருள்பற்றி வந்தன' என்கின்றார். ஆதலின் இவர் அவ்விரு நூலாசிரியர் களுக்கும் பிறபட்டவர் என்னலாம்.

உரையில் தெளிவும் எளிமையும் உண்டு. தேவையான அளவு சுவையான பாடல்களை மேற்கோள் தருகின்றார். இவ் வுரையாசிரியர், செய்யுளியல் உரையில் (செய்-3) மதுர கவிக்கு உதாரணமாக,

**பூமகளும் நல்வாழ்வு பெற்றாள் புரைதீர்ந்த**
**நாமகளும் பல்கலையும் நண்ணினாள்–தோமகல்சீர்**
**வையம் புகழ்களந்தை வச்சணந்தி மாமுனிகள்**
**செய்ய பதகமலஞ் சேர்ந்து**

என்ற வெண்பாவைக் காட்டுகின்றார்.

பாயிரவுரை மிகவிரிவாக உள்ளது. நூலை இயற்றியவர் குணவீரபண்டிதர் என்றும், இந்நூல் வச்சணந்தித் தேவன் செய்வித்ததால் வச்சணந்திமாலை என்று பெயர் பெற்றது என்றும், இந்நூல் திரிபுவன தேவன் என்னும் மன்னன் காலத்தில் இயற்றப்பட்டது என்றும் உரையாசிரியர் கூறுகின்றார்.

கற்பிக்கப்படும் நன்மாணாக்கர் இயல்புகளுக்கு இவர் சில புதிய எடுத்துக்காட்டுகள் தருகின்றார். எந்நிறத்தையும் ஏற்கும் வெண்ணிறம், கூட்டமாய்த் தம்மைக் காத்துக்கொள்ளும் யானை, ஒலியை உற்றுக்கேட்டு உணரும் ஆனேறு ஆகியவற்றை நன்மாணாக்கர்க்கு உவமை கூறுகின்றார். நெய்யரியை நன்மாணாக்கர்களுக்கு உவமை கூறித் திறம்பட விளக்குகின்றார்.

**நல்லவை அகத்திட்டு நவைபுறத் திடுவது**
**நெய்யரி மாண்பென நினைத்தல் வேண்டும்**

என்பது, இவர் தரும் புதிய விளக்கம்.

இவ்வுரையின் எளிமைக்கு ஓர் உதாரணம் காண்போம்:

**ஆரொருவன் பாக்களை ஆங்கொருவ னுக்களிப்போன்**
**சோரகவி; சார்ந்தொலியிற் சொல்லுமவன்–சீரிலாப்**
**பிள்ளைக் கவி;சிறந்த பின்மொழிக்காம் புன்மொழிக்காம்**
**வெள்ளைக் கவிஇவனின் வேறு.**

—செய்யுளியல்–48

**உரை**

ஒருவன் பாட்டை மற்றொருவனுக்குக் கொடுப்போன் கள்ளக் கவியாம்; ஒருவன் கவி இசையில் வேறொரு செய்யுள் புணர்ப்போன் சார்த்துக் கவியாம்; தனக்கென ஒன்றின்றி முன்னோர் மொழிந்த சொன்னடை பொருள் நடை கண்டு கவிபாடுவோன் பிள்ளைக் கவியாம்; புன் மொழிகளால் ஒன்று கவிபாடுவோன் வெள்ளைக் கவியாம்.

## நவநீதப்பாட்டியல்

நவநீதன் என்பவர் இயற்றிய பாட்டியல் நவநீதப் பாட்டியல் எனப்பட்டது. இந்நூலின் இறுதிப்பாடல் ஆக்கியோனைப்பற்றிச் சில செய்திகளைக் கூறுகின்றது. 'ஈட்டிய எண்ணெண்' என்று தொடங்கும் அப் பாடல் (102) நூலாசிரியரை, நாட்டிய வேதத்தவன் 'நவ நாட்டு நவநீதன்' என்றும், 'குறுமுனியாதிக் கலைஞர் கண்ட பாட்டியல் ஆனவை எல்லாம் தொகுத்தான்' என்றும் கூறுகின்றது.

இந்நூலின் முதற் செய்யுளில், "கமலக் கண்ணன் பார் கொண்ட பாதத்தை ஏத்திப் பகருவன் பாட்டியலை" என்று இவர் கூறுவதால் இவரை வைணவர் என்று கருதலாம். நவநீதப் பாட்டியல், பதின்மூன்றாம் நூற்றாண்டில் தோன்றிய வெண்பாப் பாட்டியலுக்குப்பின் தோன்றியது என்பர்.

இந்நூலுக்குப் பழைய உரை ஒன்றும் உள்ளது. நூலினையும் உரையினையும் நன்கு ஆராய்ந்து வெளியிட்ட ச. வையாபுரிப் பிள்ளை இந் நூலின் உரைமிகப் பழையது என்றும், இயற்றியவர் யார் என்று தெரியவில்லை என்றும் கூறுகின்றார். பழையவுரை நூலின் கருத்தை அறியப் பெரிதும் உதவுகின்றது.

நவநீதப் பாட்டியலுக்கு மு. சண்முகம் பிள்ளை புதிய உரை இயற்றியுள்ளார்.

## சிதம்பரப் பாட்டியல்

சிதம்பரப் பாட்டியலை இயற்றியவர் பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்த பரஞ்சோதியார். இதற்குப் பழைய உரை உள்ளது. இவ்வுரை நூல் முழுமைக்கும் இல்லை. தனிநிலைச் செய்யுள் இலக்கணம் கூறும் உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல் ஆகியவற்றிற்கு மட்டுமே உள்ளது. இவ்வுரை யாப்பருங்கல விருத்தி, இலக்கண விளக்கச் செய்யுள் உரை ஆகியவற்றைப் பின் பற்றிச் செல்லுகின்றது. அவ்விரு நூல்களுள்ளும் காட்டிய உதாரணப் பாடல்களை இவ்வுரையும் காட்டுகின்றது.

**வரையறுத்த பாட்டியல்**

வரையறுத்த பாட்டியல் என்பது பத்துப் பாடல்களால் ஆன சிறு நூல். இதனை இயற்றியவர் யார் என்று தெரியவில்லை. பாட்டியல் கூறும் பத்து வகைப் பொருத்தங்களுள் மங்கலப் பொருத்தத்தை மட்டும் வரையறுத்துச் சுருக்கிக் கூறுவதால் இது இப் பெயர் பெற்றது.

இச் சிறு நூலுக்குப் பழைய உரை உள்ளது. பாட்டியல் கூறும் செய்தியை விளக்கி உதாரணங்காட்டிச் செல்லுகின்றது.

**இலக்கண விளக்கப் பாட்டியல்**

இலக்கண விளக்கம் இயற்றிய வைத்தியநாத தேசிகரின் மைந்தராகிய தியாகராய தேசிகர் இலக்கண விளக்கம் பொருளதிகாரத்தின் பிற்சேர்க்கையாகப் பாட்டியல் என்ற பகுதியை இயற்றி நூலோடு சேர்த்தார். பாட்டியலுக்குத் தாமே உரையும் செய்தார். இப் பாட்டியல் இலக்கண விளக்கத்துடன் சேர்ந்தே உள்ளது. இதனைத் தனியாகப் பாட்டியல் நூலாகக் கருதலாம்; இலக்கண விளக்கப் பாட்டியல் என்று புதிய பெயரையும் தரலாம். இப்பாட்டியலின் பதிகம்,

**ஐந்திய லும்தன் புந்திசான் றாகத்**
**தந்தைமுன் உரைத்த நூல்முடிபு எய்த**
**அந்தண் ஆரூர்ச் சந்திர மௌலி**
**அருள்உள் கொண்டு மருள்மனம் நீங்கி,**
**பவம்கொள் பாட்டியல் இலங்க உரைத்தனன்**
**வாய்மைதிரு தியாக ராய தேசிகனே**

என்று கூறுகின்றது.

இப் பாட்டியலில் தொல்காப்பிய மரபியல், செய்யுளியல் (நூல் பற்றிய கருத்து), பொதுப்பாயிரச் செய்தி, பாட்டில் கூறும் செய்தி யாவும் திரட்டித் தரப்பட்டுள்ளன.

## 11. வடமொழியின் செல்வாக்கு

தொல்காப்பியம் சொல்லதிகார உரையில் சேனாவரையர் வடமொழிக்கும் தமிழுக்கும் இலக்கணம் ஒன்றே என்ற கருத்திற்குக் கால்கோள் செய்தார். அக் கருத்தினை வீர சோழிய ஆசிரியரும் அதற்கு உரைகண்ட பெருந்தேவனாரும் பேணி வளர்த்தனர். பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில், பிரயோக விவேகம் இயற்றிய ஆழ்வார் திருநகரி சுப்பிரமணிய தீட்சிதரும், இலக்கணக் கொத்தின் ஆசிரியரான சாமிநாத தேசிகரும்

வடமொழிக்கு ஏற்றம் தந்து சிறப்புச் செய்து இரு மொழிக்கும் இலக்கணம் ஒன்றே என்று சாதித்தனர்.

தமிழறிஞர்கள் இத்தகைய ஆசிரியர்களின் கொள்கைகளைத் தகர்த்து எறிந்தனர்; கண்டித்துத் தமிழின் பெருமையை நிலை நாட்டினர். நாவலர் சோமசுந்தர பாரதியார் "தமிழ் மரபு உணர்ந்து பேணாத வட நூல் வல்ல உரைகாரரால் இத் தகவிலா வழக்குப் பெருகி, தமிழ் ஒரு தனி மொழி அன்று என இகழும் பிரயோக விவேகம், இலக்கணக்கொத்துப் போன்ற பனுவல்களும் தமிழில் எழுதப்பட்டன" என்று கண்டிக்கின்றார் (நற்றமிழ் (1955) பக்கம் 25).

தமிழ்மொழி இத்தகைய சூழலை வென்று விளங்குவதை அறிஞர் பெருமக்கள் வியந்து போற்றுகின்றனர். மணி, திருநாவுக்கரசு முதலியார், "வட நாட்டினின்றும் வீறிவந்த ஆரியம் தெலுங்கை அடிமைப்படுத்தியது. மலையாளத்தை மணந்து கொண்டது; கன்னடத்தில் கை வைத்தது; துளுவத்தைச் சூழ்ந்து கொண்டது; செந்தமிழ் மருங்கிலும் செல்லத் தொடங்கியது. ஆனால் அச்சூழலில் அகப்படாது தனது ஒப்பற்ற தன்மையை இன்றும் அழியாமல் காத்துக்கொண்டு அதனோடு சமமாய் எதிர்த்து நின்று, 'நான் நினக்கு ஒருவாற்றானும் எளியேன் அல்லேன்; எவ்வாற்றானும் நின்னினும் சிறந்தேன்' என்று ஒளிரும் தமிழ் அன்னையின் கன்னித் தன்மையை என்னென்பேன்!" என்று பாராட்டுகின்றார் (பல்பொருட் கட்டுரை :பக்கம் - 145).

## 12. சாமிநாத தேசிகர்

சாமிநாத தேசிகர் பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பாண்டிய நாட்டில் பிறந்தவர். இவர் தோன்றியது சைவ வேளாளாளர் குடியாகும்.

இளமை முதற்கொண்டே இவர் கல்வியைச் செல்வமாகவும் கற்றோரைச் சுற்றமாகவும் கொண்டு ஒழுகினார். இவருக்குத் தமிழ் கற்பித்தவர், மயிலேறும் பெருமாள் பிள்ளை. வடமொழி பயிற்றியவர் கனகசபாபதி சிவாசாரியார்.

தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களை எழுத்து எண்ணிப்படித்தவர் என்று தம் காலத்து அறிஞர்களால் இவர் பாராட்டப்பெற்றார்.

இவர் காலத்தில் திருவாரூரில் வாழ்ந்த வைத்தியநாத தேசிகர் இலக்கண விளக்கம் நூலும் உரையும் இயற்றினார். ஆழ்வார் திருநகரியில் வாழ்ந்த சுப்பிரமணிய தீட்சிதர் பிரயோக விவேகம் நூலும் உரையும் இயற்றினார். இச் செய்தியைச் சாமிநாத தேசிகரே கூறியுள்ளார்.

**... என்கண் காணத்**
**திருவா ரூரில் திருக்கூட் டத்தில்**
**இலக்கண விளக்கம் வகுத்துஉரை எழுதினன்;**
**அன்றியும் தென்திசை ஆழ்வார் திருநகர்**
**அப்பதி வாழும் சுப்பிர மணிய**
**வேதியன், தமிழ்ப் பிரயோக விவேகம்**
**உரைத்து உரை எழுதினான்**

என்று தம் நூலில் குறிப்பிடுகின்றார்.

நன்னூலுக்கு உரை இயற்றிய சங்கர நமசிவாயர் இவரிடம் கல்வி கற்ற மாணவர்.

## நூலும் உரையும்

இலக்கணக் கொத்து என்ற பெயரால் ஓர் இலக்கண நூலும் உரையும் இவர் இயற்றினார். நூலும் உரையும் பல அரிய இலக்கண ஆராய்ச்சிகள் நிரம்பியவை. "முன்னோர் நூல்களுள் வெள்ளிடை மலை போல விளங்கிக் கிடந்து பயன்படு விதிகள் அளவில்லை; அவற்றுள் இலைமறை காய்போலக் கரந்து கிடந்து பயன்படாதன சிலவற்றுள் சிறிது எடுத்து உரைத்தனன்" என்று இவர் கூறுகின்றார் (இலக்-7).

## சைவப்பற்று

இவர் சைவசமயப்பற்று மிகுந்தவர். சைவசமய நூல்களைப் போற்றிப் புகழ்வார். சைவசமயம் பற்றிய உதாரணங்களைத் தருவார். பிற சமயத்தவர் இயற்றிய நூல்களைப் புறக்கணிப்பார். அவற்றைக் கற்பது கூடாது என்பார்.

"மாணிக்கவாசகர் அறிவால் சிவனே என்பது திண்ணம். அன்றியும், அழகிய திருச்சிற்றம்பலமுடையார் அவர் வாக்கில் கலந்திருந்து அருமைத் திருக்கையால் எழுதினார்" என்று போற்றி, மணிவாசகர் இயற்றிய திருக்கோவையாரைப் புகழ்கின்றார். "அப் பெருமையை நோக்காது சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, சங்கப்பாட்டு, கொங்குவேள் மாக்கதை முதலிய வற்றோடு சேர்த்துச் செய்யுட்களோடு ஒன்றாக்குவர்" என்று கூறி ஏனைய நூல்களை விலக்குகின்றார். சைவசமயச் சார்பான நூல்

களைக் கற்பதால் பெரும் பயன் விளையும் என்றும், பிற நூல்களைக் கற்பது வீண் என்றும் தயங்காமல் கூறுகின்றார்:

"இறையனார் அகப்பொருள் முதலான இலக்கணங் களையும், தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப் பல்லாண்டு, பெரிய புராணம், சிவஞானபோதம், சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம், பட்டணத்துப்பிள்ளையார் பாடல் முதலிய இலக்கியங்களையும் ஒரு பொருளாக எண்ணாது, நன்னூல், சின்னூல், அகப்பொருள், காரிகை, அலங்காரம் முதலிய இலக்கணங்களையும், பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க்கணக்கு, இராமன் கதை, நளன் கதை, அரிச்சந்திரன் கதை முதலான இலக்கியங்களையும் ஒரு பொருளாக எண்ணி வாணாள் கழிப்பர். அவர் இவைகள் இருக்கவே அவைகளை விரும்புதல் என் எனின், பாற்கடலுள் பிறந்து அதனுள் வாழும் மீன்கள் அப் பாலை விரும்பாது வேறு பலவற்றை விரும்புதல்போல அவரது இயற்கை என்க."

சைவ சமய மாண்பை வெளிப்படுத்தும் பல உதாரணங்களை இவர் தம் நூல் முழுதும் தருகின்றார்: அவற்றுள் சிலவற்றைக் கீழே காண்போம்:

"அரியைப் படைத்தலால் அயன் கடவுள் என்றும், அயனைப் பெற்றுக் காத்தலால் அரி கடவுள் என்றும் மாறுபட்டுழி, இவ் இருவரையும் அழித்தலால் இவர் கடவுள் அல்லர். அரனே கடவுள் என்பதுபோல" (இலக். 7).

நாரா யணன்பூ ஓரா யிரத்தைக்
கரத்தால் கொய்துஓர் அரற்கே கொடுத்துச்
சக்கரச் சிறுமையின் நீங்கி, நற்சுவைப்
பாற்கடற் கண்ணே பள்ளிகொண் டான்என,
காரகம் முழுதும் வந்தன காண்க
இவற்றுள் ஒன்றே இயம்பினும் காரகம்

(இலக்–15)

எண்ணா யிரவரைக் கழுவில் ஏற்றினார்
ஆண்டவனைத் தூதாக அஞ்சாது நடத்தினார்
அப்பர் தாம்கொண்ட விரதம் அழித்தனர்
கடவுளை நாடொறும் கல்லால் எறிந்தனர்
ஆண்டவன் தலையில் அடியால் மிதித்தனர்
இவை தீவினை நல்வினை யாயின.

(இலக்–81)

இவன் மானேந்தி, இவன் பிறைசூடி
இவன் கங்கையாடி.

(இலக்-83)

## சுவையான மேற்கோள்

இவரது உரையில் பல சுவையான மேற்கோள்கள் இடம் பெற்றுள்ளன.

"உள்ளங்கையில் உரோமம் முளைத்ததாயின் அறிவிலான் அடங்குவன்" ஏன்பது ஓர் உதாரணம்.

"இத்தகடு பேயோட்டி" என்பது மற்றோர் உதாரணம். பொய்யுரைக்குப் பின்வரும் உதாரணத்தைக் காட்டுகின்றார்:

ஒப்பிலா மலடி பெற்ற
மகன்ஒரு முயற்கொம்பு ஏறி
தப்பில்ஆ காயப் பூவைப்
பறித்தமை சாற்றி னாரே!

முதலியன எல்லாம் பொய்யுரை.

## சொல்லும் பொருளும்

ஆரியன் என்ற சொல்லை இவர் ஆசிரியன் என்ற பொருளில் பயன்படுத்துகின்றார்.

"பகவற்குப் பாடி ஆடினான் பாகவதன்; வடக்கினின்றும் வந்தவன் வடமன்" (இலக்-117) என்பது இவர் தரும் விளக்கம்.

## வேறுபாடு

வடமொழிக்கும் தமிழுக்கும் உள்ள வேறுபாட்டை, "இரு திணையும் ஆண்பால் பெண்பால் வினைஈறும் வடமொழிக்கு இல்லை. மூன்று இலிங்கமும் முதலீற்று வேற்றுமைகட்கு உருபுகளும் தமிழிற்கு இல்லை" என்று கூறுகின்றார் (இலக்-7.)

## வடமொழிப் பற்று

வடமொழிப் பற்றும் புலமையும் மிக்க இவர் தமிழின் தனித் தன்மையை மறந்து விட்டார். இரு மொழியும் வேறு வேறு இயல்புடையவை என்ற உண்மையைப் புறக்கணித்தார்.

தமிழால் அறிய முடியாத செய்திகளை வடமொழி பயின்றால் அறிந்து கொள்ளலாம் என்பது இவரது கொள்கை:

பலகாற் பழகினும் தெரியா உளவேல்
தொல்காப் பியம்திரு வள்ளுவர் கோவையார்

மூன்றினும் முழங்கும்; ஆண்டிலும் இலையேல்
வடமொழி வெளிபெற வழங்கும் என்க

(இலக்–7)

என்று இவர் கூறுகின்றார்.

"வடமொழி தமிழ்மொழி எனும் இரு மொழியினும் இலக்கணம் ஒன்றே என்றே எண்ணுக" என்று இவர் உரைக்கின்றார் (இலக்-7).

வடமொழி மீதிருந்த அளவுகடந்த பற்றின் காரணமாகத் தமிழ்மொழியை இகழவும் தொடங்கிவிடுகின்றார்.

... தமிழ்நூற்கு அளவிலை; அவற்றுள்
ஒன்றே ஆயினும் தனித்தமிழ் உண்டோ ?
அன்றியும் ஐந்து எழுத்தால் ஒருபாடை என்று
அறையவும் நாணுவர் அறிவுடை யோரே

(இலக்–7)

என்று தமிழ்மொழியையும் நூல்களையும் இகழ்ந்து அறிஞர் பலருடைய வெறுப்பிற்கும், இகழ்ச்சிக்கும் ஆளாகிவிடுகின்றார்.

செங்கல்வராய பிள்ளை 'தமிழ் உரைநடை இலக்கிய வரலாறு' என்னும் நூலில் சாமிநாத தேசிகரைப்பற்றி, "இவர் சிறந்த தமிழறிஞராக இருந்தபோதிலும் தமிழ்மொழி, இலக்கியங்களைப்பற்றி, சில துறைகளில் மிகவும் குறுகிய நோக்கம் உடையவராகக் காணப்படுகின்றார்"[1] என்று கூறுகின்றார்.

இவரது கொள்கைகள் சிலவற்றைத் தமிழறிஞர் வி.கோ. சூரியநாராய்ண சாஸ்திரியார் தமிழ் மொழியின் வரலாறு என்னும் நூலில் மறுத்துள்ளார்.

பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரைப் பிள்ளை, சரித்திரம் பேசுகிறது என்னும் நூலில் (1962, பக்-77) பின்வருமாறு சாமிநாத தேசிகரைக் கண்டித்துள்ளார்:

"இந்தியாவிலேயே சமஸ்கிருத ஆதிக்க வாதிகளின் தலைவர் என்று, இலக்கணக் கொத்து ஆசிரியரான சாமிநாத தேசிகரைக் கூறலாம். தமிழுக்கும் சமஸ்கிருதத்துக்கும் பொதுவான எழுத்துகளைச் சமஸ்கிருத எழுத்துக்கள் என்று அவர் முடிவு செய்தார். தமிழ்ச் சிறப்பு எழுத்துக்களான ற ன ழ எ ஒ என்ற ஐந்துமே தமிழ் எழுத்துக்கள் என்று கொண்டார். "ஐந்தெழுத்தால்

1. "Although he (Swaminatha Desikar) was a great Tamil scholar, he seems to have had very crooked notions in some cases, about his own Tamil language and literature" – Chengalvaraya Pillai, History of the Tamil Prose literature (1928) p.33.

2-41

ஒருபாடை, எப்படித் தனிமொழி ஆகும்?" என்று வீறாப்புடன் அவர் வினவினார். தமிழைப் பழித்து அவர் தமிழிலேயே எழுதத் துணிந்தார்"

## புலவரைப் போற்றுதல்

வடமொழிப்பற்று மிகுந்த இவர், தமிழ்ப் புலவர்களைப் போற்றிப் புகழும் இடங்களும் உண்டு.

**பல்காற் பழகினும் தெரியா உளவேல்**
**தொல்காப் பியம்திரு வள்ளுவர் கோவையார்**
**மூன்றினும் முழங்கும்**

என்றும், "இலக்கணமாவது தொல்காப்பியம் ஒன்றுமே, செய்யுளாவது திருவள்ளுவர் ஒன்றுமே" என்றும் போற்றுகின்றார் (இலக்-7).

பிழை செய்வது மனித இயல்பு என்றும், அதனைப் பொறுப்பது ஆன்றோர் கடன் என்றும், முன்னோர் நூலில் பிழை இருப்பினும் போற்றுதல் வேண்டும் என்றும் கூறுகின்றார்.

**நூலா சிரியர் கருத்தினை நோக்காது**
**ஒருசூத் திரத்திற்கு ஒவ்வொரா சிரியர்**
**ஒவ்வொரு மதமாய் உரைஉரைக் குவரே**

**என்றும்,**

**நூலுரை போதகா சிரியர் மூவரும்**
**முக்குண வசத்தால் முறைமறந்து அறைவரே**

**(இலக்–6)**

என்றும் இவர் உலகிற்கு அறிவுரை கூறகின்றார். மற்றோர் இடத்தில், "இறைவன் நீங்கலான எல்லா ஆசிரியர்க்கும் 'மறவி இனைய உடல் கொள் உயிர்க் குணம்' என்பதனாற் பொது. அவரவர் மறவிகளை விரிக்கின் பெருகுதலானும், அறிதல் அருமையானும், பெரியோர்க்குக் குற்றம் கூறினான் என்னும் குற்றம் வருதலானும் விரித்திலம் என்க" (இலக்-89) என்று உரைக் கின்றார்.

நன்னூலாரை இவர் பெரிதும் போற்றி மதிக்கின்றார். 'சேற்று நிலத்தில் கவிழ்ந்த பால் தேன் நெய் முதலியனவும் சேறு ஆனாற்போல, நன்னூல் சூத்திரமும் அவ்வுரையுடனே கலந்து குற்றப்பட்டது என்க. முன்னூல் ஒழியப் பின்னூல் பலவினுள் நன்னூலார் தமக்கு எந்நூலாரும் இணையோ என்னும் துணிவே மன்னுக" (இலக்-8) என்று இவர் கூறி நன்னூலாரைப் புகழ்கின்றார்.

இப்பகுதியில் அவ்வுரை என்று இவர் குறிப்பிடுவது, இலக்கண விளக்க ஆசிரியர் தம் நூலில் மேற்கோளாக நன்னூல் சூத்திரங்களைக்கொண்டு அவற்றிற்கு உரைத்த உரையாகும்.

இலக்கண விளக்க ஆசிரியரை இவர், மேலும் சிலவிடங் களில் குறிப்பாக மறுத்துள்ளார்:

"அ இ உ முதல் தனிவரின் சுட்டே — நன்னூலார்க்குப் பின்னூலார் இச்சூத்திரத்திற்கு அளவிறந்த குற்றம் கூறினார்" என்றும், "(நன்னூல்) சூத்திரம் பிழைபட்டதாகக் கருதித் திருத்தி, திருத்தினம் என்றும் இன்னும் பல கருதி மயங்குவர்" (இலக்-117) என்றும் இவர் மறுக்கின்றார்.

## இலக்கணத் தொடரும் விளக்கமும்

வேற்றுமை, இரட்டைக் கிளவி, தொகை நிலை ஆகிய வற்றிற்குப் பொருளும் விளக்கமும் தருகின்றார்.

**வேற்றுமை:** "உருபு ஏற்றதனையும், உருபையும் உருபு நோக்கி வந்ததனையும் வேற்றுமை என்பர். வேறுபடுதலால் வேற்றுமை, வேறுபடுத்தலால் வேற்றுமை, வேற்றுமையை முடித்தலால் வேற்றுமை என்று பொருள் உரைப்பர்" (இலக்-20).

**இரட்டைக் கிளவி:** "இரட்டைக் கிளவியைப் பிரித்தது என் எனின், இது இலை இரட்டை, பூவிரட்டை, காய் இரட்டை, விரல் இரட்டைபோல ஒற்றுமைப்பட்டு நிற்றலானும்; அவ்வைந்தும் மக்கள் இரட்டை, கால் இரட்டை போல வேற்றுமைப்பட்டு நிற்றலானும் என்க" (இலக்-120).

**தொகை நிலை தொகா நிலை:** "தொகைநிலை தொகா நிலை எனும் சொற் பொருளான் மாறுபடு புலவர்கள் மூவர் என்க.

1. நிலைமொழி வருமொழிக்கு இடையே மறைந்து நிற்றல் வெளிப்பட நிற்றல் என்றும்,
2. நிலைமொழி வருமொழிகள் கூடிநிற்றல் பிரிந்து நிற்றல் என்றும்,
3. நிலைமொழி வருமொழிகள் ஒன்றாய் நிற்றல் பலவாய் நிற்றல் என்றும்,

பொருள் கூறி, ஒருவரை ஒருவர் மறுப்பர். அவை விரிக்கின் பெருகும்."

## போலி எழுத்து

போலி எழுத்துப் பற்றி இவர் கொண்டுள்ள கருத்து வேறுபட்டது. சிவஞான முனிவர் சந்தியக்கரம் என்று கொண்டதனை இவர் போலி எழுத்து என்பர்.

அ + ய் = ஐ
அ + வ் = ஔ

என்பது இவர் கருத்தாகும்.

"போலி எழுத்தைப் போற்றுதல் கடனே" (இலக்-91) என்று ஒரு நூற்பா இயற்றி, "ஈரெழுத்துக்கூடி ஓர் எழுத்துப் போல வருவனவற்றைத் தள்ளாது கொள்ளுக" என்று உரை கூறிப் பின் வரும் விளக்கமும் எழுதியுள்ளார்:

"வட நூலார் இவ்விலக்கணத்தைத் தள்ளாது சமானாக்கரம் என்று பெயரிட்டு இவ்விரண்டினையும் தழுவினர். அது பற்றித் தமிழ் நூலார், 'இணை எழுத்து' என்று மொழிபெயர்க்க. மற்றது 'போலி எழுத்து' என்று மொழிபெயர்த்ததனால், போலிச் சரக்கு போலி இலக்கணம் போலியுரை என்னும் சொற்களைப் போல இதனையும் கருதி, முன்னும் பின்னும் பாராது தள்ளினார். அது பற்றியே இச் சூத்திரம் செய்தனம் என்க"

**வாக்கியத்தின் வகைகள்**

வாக்கியத்தின் வகைகளைப்பற்றி இவர் ஆராய்ந்துள்ளார். 'ஒரு தொடர் பல தொடர் எனத் தொடர் இரண்டே' (இலக்-124) என்று சூத்திரம் இயற்றி, 'இவற்றை வட நூலார் ஏக வாக்கியம், பின்னவாக்கியம் என்பர். அதனான் மொழி பெயர்த்தனம் என்க"

இக்காலத்தவர், ஒரு தொடர் என்பதனைத் தனி வாக்கியம் (Simple sentence) என்றும், பல தொடர் என்பதனைத் தொடர் வாக்கியம் (Complex sentence) என்றும் வழங்குகின்றனர்.

## 13. சுப்பிரமணிய தீட்சிதர்

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் பாண்டிய நாட்டில் உள்ள ஆழ்வார் திருநகரியில் தோன்றிய சுப்பிரமணிய தீட்சிதர் பிரயோகவிவேகம் என்ற இலக்கண நூலையும் உரையையும் இயற்றினார். இந்நூல் முழுக்க முழுக்க வடமொழி இலக்கணத்தைப் பின்பற்றியது.

நூலின் தொடக்கத்தில் "பாணினி பதஞ்சலி ஆகிய வடமொழி வல்லுநரின் தாள் வணங்கி நூலை இயம்புகிறேன்" என்று கூறுகின்றார். தம் நூல் அரங்கேறிய வரலாற்றினை,

பேர்கொண்டு நின்றபிர யோக விவேகத்தைச்
சீர்கொண்ட ராமபத்ர தீக்கிதன்தான்–நேர்கொண்டு

**கேட்டான் இனிக்கண்ணாற் கேட்கும் பதஞ்சலிதான்**
**கேட்டால்என் கேளாக்கால் என்**

என்ற வெண்பாவால் உணர்த்துகின்றார்.

தம் நூலுக்கு வடமொழிப் பெயரை வைத்ததற்குக் காரணம் கூறும்போது, "வடமொழிப் பிரயோக விவேகத்தினும் சொல்லிலக்கணம் அல்லது எழுத்திலக்கணம் கூறாமையின் சொற்பிரயோக விவேகம் என்றாம்" என்று உரைக்கின்றார்.

தாம் இயற்றிய நூலுக்குத் தாமே பதிகமும் உரையும் செய்து அவ்வாறு செய்தல் வடமொழி மரபு என்கிறார்.

"வடநூலார் தாமே பதிகமும் உரையும் செய்வார். இந்நூலும் வடநூலைத் தற்பவமாகச் செய்தலான், யாமும் பதிகமும் உரையும் செய்து உதாரணமும் காட்டினாம்" என்று கூறுகின்றார் (காரக படலம்—3).

காரக படலத்தின் முதற் சூத்திரவுரையிலேயே, "வடமொழிக்கும் தமிழ் மொழிக்கும் இலக்கணம் ஒன்று" என்றும், "வடமொழிக்கு உரிய குறிஎல்லாம் வடமொழிக்கேயன்றித் தமிழ் மொழிக்கும் உரியன" என்றும் கூறுகின்றார்.

**பழையன கழிதலும் புதியன புகுதலும்**
**வழுவல கால வகையி னானே**

என்ற சூத்திரம் நன்னூலாருக்குப் பெருமை தருவதாகும். இதனை எடுத்துக்காட்டி இந்நூலாசிரியர், "இச்சூத்திரம் பாணினி கூறியவாறு கூறினார். அது வடமொழியிற் காட்டுதும்" என்கின்றார். (திங்குப்படலம்-16).

நூலின் இறுதியில், "இந் நூலுள் சந்தேகம் தோன்றுவதனை மகாபாடியம், கையடம், சித்தாந்த கௌமுதி, சத்த கௌமதி, வாக்கிய பதீயம், அரிபீடிகை, தாதுவிருத்தி, பதமஞ்சரி, சத்த கௌத்துவம் கற்றவரைக் கேட்க. காசிகா விருத்தி, பிரக்கிரியா கௌமுதி என்னும் இரண்டினும் சித்தாந்தம் பிறவாது ஆதலின் அவை கற்றோரைக் கேளாது ஒழிக" என்று உரைக்கின்றார்.

இவை எல்லாம் வடமொழியில் இவர்க்குள்ள பற்றினையும் புலமையினையும் உணர்த்தும் சான்றுகளாகும்.

## வேற்றுமை காட்டல்

மிகச்சில இடங்களில் வடமொழிக்கும் தமிழுக்கும் உள்ள வேற்றுமைகளைச் சுட்டுகின்றார். திங்குப் படலத்தில் (6-ஆம் சூத்), "இருமைக்கு உதாரணம் வடமொழிக்கல்லது தமிழ்மொழிக்கு இல்லை" என்று தெளிவுபடுத்துகின்றார். மேலும்,

சாற்றிய தெய்வப் புலவோர் மொழிக்கும் தமிழ்மொழிக்கும்
வேற்றுமை கூறின் திணைபால் உணர்த்தும் வினைவிகுதி
மாற்றரும் தெய்வ மொழிக்குஇல்லை பேர்க்குஎழு
வாய்உருபும்
தேற்றிய லிங்கம் ஒருமூன்றும் இல்லை செழுந்தமிழ்க்கே

என்றும் கூறி இருமொழி இலக்கணத்தையும் வேறுபடுத்துகின்றார் *(திங்குப் படலம்-15).*

## வடமொழித் திணிப்பு

பிரயோகவிவேகம் என்ற தலைப்பில் நூலை இயற்றிய இவர், நூலின் உட்பிரிவுகளுக்கும் வடமொழியை ஒட்டியே பெயரிட்டுள்ளார். காரக படலம், சமாச படலம், தத்தித படலம், திங்குப்படலம் என்ற பெயர்களை அமைத்துள்ளார்.

வடசொற்களை, தமிழ்மொழியின் ஒலிமுறைக்குச் சிறிதும் ஒவ்வாத வகையில் தம் நூலில் எடுத்தாளுகின்றார். சந்தம், வாதேசம், திஙந்த வினை, திங்கு போன்ற சொற்களை இவர் உரையில் காணலாம்.

எளிய தமிழ்ச் சொற்களுக்கும், அவற்றோடு ஒத்த வட சொற்களைத் தந்து விளக்கம் தருகின்றார். கீழே சிலவற்றைக் காண்போம்:

“இயற்கை என்பது சகசம். செயற்கை என்பது ஆகந்துகம்” *(காரக-5).*

“அலங்கார நூலார் இசை எச்சத்தைக் காகு என்பர்” *(திங்கு-16)*

“இலக்கணையாவது, பெயராக வினையாக நிற்கும் சொற்கள் தத்தம் பொருளை உணர்த்தாது, பொருளின் சம்பந்தப் பொருளையும் தாற்பரியப் பொருளையும் அறிவித்தல்” *(திங்கு-13)*

“உரிச்சொல்லாவது பொருளும் தானும் பேதமின்றி அபேதமாதற்குரிய சொல்... அர்த்த நாரீசுவரன் என்னும் பார்வதி பரமேசுவரன் போலப் பொருளும் சொல்லும் பேதாபேதமாய் வரும் என்பாரும் உளர். காளிதாசனும் வாகர்த்தாவிய என்னும் சுலோகத்தால் அவ்வாறு கூறுவன்” *(சமாச - 1)*

## சைவப்பற்றும் தமிழ்ப்புலமையும்

இவர் சைவ சமயத்தில் மிகுந்த ஈடுபாடு உடையவர். தம் உரைகளில் “மானேந்தி, பிறை சூடி, அம்பலத்தாடி” என்ற பெயர்களை உதாரணங் காட்டுகின்றார்.

தமிழறிஞர்களின் கருத்துகளை ஏற்ற இடங்களில் குறிப்பிடுகின்றார். அவற்றுள் சில பின்வருமாறு:

"சதி சத்தமியைத் தொல்காப்பியர் வினைசெய் இடம் என்பர். பரிமேலழகர் வினை நிகழ்ச்சி என்பர்" (காரக-16).

"வஞ்சரை அஞ்சப்படும் என்னும் குறளினும், கொள்ளப் படாது மறுப்ப அறிவில்லன கூற்றுக்களே என்னும் திருக் கோவையாரினும் பரிமேலழகரும் பேராசிரியரும் முதனிலையைப் பிரித்து எழுவாயாக்கி முடித்தலும் காண்க" (திங்நு-2).

**சந்தியக்கரம்**

சந்தியக்கரம் பற்றி இவர் பின்வருமாறு கூறுகின்றார்:

"இனிச் சந்தியக்கரமாவது,

அகர இகரம் ஏகாரம் ஆகும்.
அகர உகரம் ஓகாரம் ஆகும்.
இகார உகாரம் என்னும் இவற்றோடு
ஆகாரம் ஐ ஔ ஆகலும் உரித்தே.

இவ்வுரைச் சூத்திரங்களால் ஈரெழுத்தாகிய சந்தியக்கரம் என்றும் ஓரெழுத்தாகிய ஏகாக்கரம் என்றும் அறிக" (காரக-5)

## 14. ஐந்திலக்கண நூல்களும் உரைகளும்

பழம்பெரும் இலக்கண நூலாகிய தொல்காப்பியம், எழுத்து சொல் பொருள் என்று மூன்று அதிகாரங்களில் தமிழ் இலக்கணத்தை ஆராய்கின்றது. பொருளதிகாரத்தில் கூறப்பட்ட இலக்கணங்கள் பிற்காலத்தில் பலவேறு வகையாகப் பிரிந்து தனி நூல்கள் தோன்றின. பொருள் இலக்கணம், அகம் புறம் யாப்பு அணி எனத் தனித் தனியாகப் பிரிந்தது.

தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் கூறியுள்ள அகத் திணையியல், களவியல் கற்பியல் பொருளியல் ஆகியவை பிற் காலத்தில் அகப்பொருள் இலக்கணம் ஆயின. புறத்திணை இயல் புறப்பொருள் இலக்கணமாயிற்று. உவம இயல், அணி இலக்கண மாயிற்று. செய்யுளியல், யாப்பிலக்கணமாக வடிவம் கொண்டது. மெய்ப்பாட்டியல் வளர்ச்சியின்றி, போதிய கருத்து விளக்கமின்றி அணி நூலில் அடைக்கலம் புகுந்தது. மரபியல் மறக்கப்பட்டது. நிகண்டு நூல்கள் மரபியல் கூறும் சில செய்தியைச் சேர்த்துக் கொண்டன. தொல்காப்பியர் கூறிய எழுத்து சொல் பொருள்

என்ற மூவகை இலக்கணம் காலப்போக்கில் இவ்வாறு ஐவகை இலக்கணமாயின.

ஐந்திலக்கணப் புலமை பெறுவதைப் புலவர்கள் பெரும் பேறாகக் கருதினர். குமரகுருபரர்,

> எழுத்து முதலாம்ஐந்து இலக்கணம் தோய்ந்து
> பழுத்த தமிழ்ப்புலமை பாவித்து–ஒழுக்கமுடன்
> கடிஏற்கும் பூங்கமலக் கால்காட்டி ஆட்கொண்டு
> அடியேற்கு முன்நின்று அருள்
>
> –கந்தர் கலி வெண்பா

என்று இறைவனை வேண்டுகின்றார்.

இலக்கணம் ஐந்தாகப் பிரிந்தாலும் ஒவ்வோர் இலக்கணம் பற்றிய நூல்களே முதலில் தோன்றியுள்ளன. இறையனார் அகப் பொருள், நம்பியகப்பொருள் விளக்கம் என்பவை அகப்பொருள் பற்றியும், புறப்பொருள் வெண்பா மாலை புறப்பொருள் பற்றியும், யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை என்பன யாப்பிலக்கணம் பற்றியும், தண்டியலங்காரம் அணி பற்றியும் தோன்றின.

நேமிநாதம், நன்னூல் இரண்டும் எழுத்து, சொல் பற்றிய இலக்கண நூல்களாகும். நன்னூல் ஐந்திலக்கணமும் கூறியது என்ற கருத்தும் நிலவுகின்றது. மயிலைநாதர் உரையில் அதற்குச் சான்றுகள் உள்ளன. சங்கரநமச்சிவாயர், நன்னூல் சிறப்புப்பாயிர வுரையில், "நுதலிய பொருள் அரும் பொருள் ஐந்து என உணர்த்தினமையின், இந்நூலுள் கூறிய பொருள் யாப்பு அணி என்னும் மூன்று அதிகாரங்களும் அக் காலத்து உள்ளன போலும்" என்று உரைக்கின்றார். ஆதலின் இவரது காலத்திற்கு அவை முன்பே மறைந்திருந்தல் வேண்டும்.

தமிழ் இலக்கணத்தை ஐவகையாக்கி ஆராய்ந்து விளக்கிய முதல் நூல் வீரசோழியம். அதன் உரையாசிரியர் பெருந் தேவனாரைப் பற்றி முன்னரே அறிந்தோம்.

பதினேழாம் நூற்றாண்டிற்குப் பின்னர் ஐந்திலக்கணங் கூறும் இலக்கண நூல்கள் சில தோன்றின. இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், முத்து வீரியம், சாமி நாதம் என்ற இலக்கண நூல்கள் ஐந்திலக்கணமும் கூறுபவை.

**நூலும் உரையும்**

**இலக்கண விளக்கம்:** இலக்கண விளக்கம் என்பது எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்ற ஐந்தையும் உணர்த்தும் இலக்கண நூல். இதனைக் குட்டித் தொல்காப்பியம் என்பர்.

இந்நூலின் ஆசிரியர் வைத்தியநாத தேசிகர். இவர் பதினேழாம் நூற்றாண்டில் திருவாரூரில் பிறந்தார். இவர் தந்தையார் வன்மீகநாத தேசிகர். வைத்தியநாத தேசிகர் அகோர முனிவரிடம் கல்வி கற்று வடமொழி, தமிழ் ஆகிய இரு மொழிகளிலும் புலமை பெற்றார்.

இவர் கயத்தாற்றில், திருமலை நாயக்கரின் ஆணையாளர் களில் ஒருவரான திருவேங்கடநாத ஐயரின் மக்களுக்குக் கல்வி புகட்டும் ஆசிரியராகப் பணிபுரிந்தார். தம் மாணவர்களுக்கு இலக்கணங் கூற, தொல்காப்பியம், நன்னூல், தண்டியலங்காரம் முதலிய இலக்கணங்களையும் உரைகளையும் கற்பிக்கும்போது தமக்குப் பிடித்தமான பல கருத்துகளை ஒன்று சேர்த்து 'இலக்கண விளக்கம்' என்று ஒரு நூல் செய்தார். இந்நூல் ஐந்திலக்கணம் கூறும் நூலாக அமைந்தது.

இலக்கண விளக்கத்தில் இவர் முன்னோர் கருத்துகள் சிலவற்றை மாற்றிவிட்டார். ''பழையன கழிதலும்'' என்ற நன்னூலார் சூத்திரத்தை.

**பழையன கழித்தலும் புதியன புகுத்தலும்**
**வழுவல கால வகையி னான**

என்று மாற்றியுள்ளார்.

இவர் தம் நூலுக்குத் தாமே உரை இயற்றினார். இச் செய்தியைச் சாமிநாத தேசிகர் தம் இலக்கணக்கொத்து நூலில்,

**என்கண் காணத் திருவா ரூரில்**
**சிறப்புற் றிலகும் வைத்திய நாதன்**
**இலக்கண விளக்கம் வகுத்துரை எழுதினான்**

என்று குறிப்பிடுகின்றார்.

**மற்றவை**

தொன்னூல் விளக்கத்தை இயற்றியவர் வீரமாமுனிவர் (1680-1747). முத்து வீரியத்தை இயற்றியவர் முத்து வீரமுனிவர். தொன்னூல் விளக்கம், முத்து வீரியம் ஆகிய இரு நூல்களே அன்றிச் சாமிநாதம் என்னும் இலக்கண நூலும் உள்ளது. இந் நூலின் சில பகுதிகளே தமிழ்ப் பொழிலில் (பகுதி-4) வெளிவந்துள்ளன. சாமிநாதம், அந்நூலின் உரை ஆகியவை பற்றி ச. வையாபுரி பிள்ளை பின் வருமாறு கூறுகின்றார்:

''பொதிகை நிகண்டின் ஆசிரியராகிய சாமிநாத கவிராயரைக் குறித்து ஒரு சில செய்திகளே அறியக்கிடக்கின்றன. திருநெல்வேலி ஜில்லாவைச் சார்ந்த அம்பா சமுத்திரம் தாலுக்காவில் கல்லிடை நகரில் இவர் வாழ்ந்தவர். இந் நிகண்டு

நூலேயன்றி ஐவகை இலக்கணங்களையும் உணர்த்தும் சாமிநாதம் எனப் பெயரிய நூலொன்றும் இவர் இயற்றி இருக்கின்றார். இந் நூல் துறைசை சுப்பிரமணிய தேசிகரின் ஆணைப்படி இயற்றப்பட்டது என இந்நூற்பாயிரம் உணர்த்துகின்றது. சாமிநாதத்திற்கு விருத்தியுரை ஒன்றும் உள்ளது. ...இது சுமார் கொல்லம் 950-ல் இயற்றப்பட்டது ஆகலாம் எனத்துணியலாம்" (இலக்கிய மணி மாலை (1954) பக்கம் 218, 219)

### ஐந்திற்கும் மேலாக

ஐந்திலக்கணங்களுக்குப் பின்னர், இலக்கணம் விரி வடைந்தது.

தொல்காப்பியர், உயிரியல் இடையியல் மரபியல் ஆகியவற்றில் கூறியுள்ள சொற்பொருள் விளக்கம், நிகண்டுகளாக —உரிச்சொற்பனுவலாக—அகராதியாக உருவெடுத்து வளர்ந்தன

பெண்களின் உறுப்பிற்கும், சிறுவர்களுக்கும் கூற வேண்டிய உவமைக்குரிய பொருள்களைப் பட்டியல் போட்டுக் கூறுகின்ற உவமான சங்கிரக நூல்கள் தோன்றின.

பாட்டியல் நூல்கள் கூறுகின்ற 96 வகையான பிரபந் தங்களின் இலக்கணத்தைத் தொகுத்து, பிரபந்த தீபிகை என்ற நூலை, வேம்பத்தூர் பாப்புவையர் என்ற முத்து வேங்கட சுப்பையர் இயற்றினார்.

பிற்காலப் பா வகைகளில் ஒன்று, வண்ணப்பா. வண்ணச் சரபம் திருப்புகழ் தண்டபாணி சுவாமிகள் 'வண்ணத்தியல்பு' என்று நூலில் வண்ணப்பாக்களுக்கு இலக்கணம் எழுதினார். இந்த நூல், திருக்கோயில் இதழில் உரையுடன் வெளிவந்துள்ளது.

விருத்தப்பாக்களின் வகைகளை விளக்குகின்ற 182 நூற்பாக்கள் (12 படலம்) அடங்கிய நூலை, சென்னை டி. வீரபத்திர முதலியார் (1855-1910) எழுதினார்.

20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தண்டபாணி சாமி 'அறுவகை இலக்கணம்' என்ற நூலை இயற்றினார். ஆறாவதாக, புலமை இலக்கணம் செய்தார். இதில் 319 நூற்பாக்கள் உள்ளன.

## 15. காரிரத்தினக் கவிராயர்

காரிரத்தினக் கவிராயர் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த வைணவப் புலவர். இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் ஆழ்வார் திருநகரிக்கு அருகில் உள்ள தென் திருப்பேரையில் வேளாண் மரபில் பிறந்தவர்.

காரிரத்தினம் என்பது நம்மாழ்வாரின் சிறப்புப் பெயர். வைணவராகிய இக் கவிராயர் நம்மாழ்வாரின் பெயரைப் பெற்றார். இவர், ஆழ்வார் திருநகரியில் இருந்தவரும், மாறன் அலங்காரம் முதலான நூல்களை இயற்றியவருமான திருக்குருகைப் பெருமாள் கவிராயரிடம் கல்வி பயின்றார்.

இவர், திருக்குறள் பரிமேலழகர் உரைக்கு விளக்கமாக 'நுண் பொருள் மாலை' என்ற ஒரு நூலை இயற்றியுள்ளார். அவ் விளக்கவுரை செந்தமிழில் (6-10) வெளிவந்தது. தொல்காப்பிய நுண்பொருள் மாலை என்ற உரை விளக்கம் எழுதியதாகக்கூறுவர். அவ்வுரை இன்று கிடைக்கவில்லை. திருக்குருகைப் பெருமாள் கவிராயர் இயற்றிய மாறன் அலங்கார நூலுக்கு உரை இயற்றினார்.

## நுண்பொருள் மாலை

பரிமேலழகர் உரைக்கு விளக்கமாக இயற்றப்பட்ட இவ் விளக்கவுரை பல சிறப்புக்களை உடையது. பரிமேலழகர் உரையில் விளக்கம் காண வேண்டிய பகுதிக்கும், பலமுறை நுணுகிக் கற்றுத் தெளிய வேண்டிய பகுதிக்கும் அரிய இலக்கணக் குறிப்புக்கும் விளக்கம் எழுதுகின்றார் காரிரத்தினக் கவிராயர்.

முதற் குறளின், பரிமேலழகர் உரைக்கு இவர் தரும் விளக்கம் மிகவும் நயமானது. ஆகுபெயர் அன்மொழித் தொகை ஆராய்ச்சியில் பரிமேலழகர் உள்ளக் கிடக்கையை அறிய ஊழிற் பெருவலி (380) என்னும் குறளின் விளக்கவுரை உதவுகின்றது. பரிபாடலுக்குப் பரிமேலழகர் உரை எழுதினார் என்பதை 216-ஆம் குறள் உரையில், "பரிபாட்டினுள் 'மழையிருஞ்சூல்' என்பதனை முன்பின்னாகத் தொக்க இரண்டாம் வேற்றுமைத் தொகை என்றார் இவ்வுரையாசிரியர்'' என்று இவர் தெளிவுபடுத்துகின்றார்.

## மாறன் அலங்காரவுரை

மாறன் அலங்காரம், நம்மாழ்வாரைத் தலைவராகக் கொண்டு இயற்றப்பெற்ற மேற்கோள் பாடல்களுடன் அமைந்த அணி இலக்கண நூல். இந்நூல் பொதுவியல், பொருளணியியல், சொல்லணியியல், எச்சவியல்என்னும் நான்கு பகுதிகளை உடையது. முதல் இயல் வெண்பாவிலும் ஏனையவை ஆசிரியப்பாவிலும் அமைந்துள்ளன. இந்நூலை இயற்றியவர், திருக்குருகைப்பெருமாள் கவிராயர்; வைணவர்; பதினேழாம் நூற்றாண்டினர். திருநெல்வேலியில் ஆழ்வார் திருநகரியில்

வாழ்ந்தவர். இவரது மாணவராகிய காரீரத்தினக் கவிராயரே மாறன் அலங்காரத்திற்கு உரை இயற்றினார்.

இந் நூலிலுள்ள உதாரணச் செய்யுள்களை நூலாசிரியரே இயற்றினார். உதாரணம் தேடும் முயற்சி உரையாசிரியர்க்கு இல்லாமல் போனது. 'இந்நூலாசிரியர் இவ்வுதாரணம் யாண்டுப் பெற்றாரோ எனில்,' என்று உரையாசிரியர் கூறி, உதாரணச் செய்யுளுக்குப் பொழிப்புரை எழுதுகின்றார். சில பாடல்களுக்குக் குறிப்புரை எழுதுகின்றார். பாடல்களுக்குத் திணை, துறை கூறி, அணி இலக்கணத்தோடு பொருத்திக் காட்டுகின்றார்.

உதாரணச் செய்யுள்கள் கற்பனைக் களஞ்சியமாய்—சொற்சுவை பொருட்சுவை நிரம்பியவையாய் உள்ளன. பொருள் விளங்குவது சற்றுக் கடினமாகவே உள்ளது. உதாரணச் செய்யுள் ஒன்றை இங்கே காண்போம்:

**முற்ற உணர்த்தும் முதுகாப் பியம்புணர்ப்பான்**
**உற்றவர்தம் கண்போன்று உறங்காவாம்—இற்பிரிந்தால்**
**நல்லியலார் வந்தனைசெய் நாவீறன் மால்வரைமேல்**
**மெல்லியலார் இன்ப விழி**

என்ற வெண்பா பொருளணியியலில் ஏகவுவமைக்கு உதாரண மாகக் காட்டப்பட்டுள்ளது.

உரையின்றேல் நூலின் பெருமையும், உதாரணச் செய்யுள் களின் பொருளும் வெளிப்பட்டிரா. நூலாசிரியரின் மாணவர் இவ்வுரையாசிரியர் ஆதலின், "இக் குறிப்புவமை இந்நூலுடையார் யாண்டுப் பெற்றார் எனின், நலமிகு புலவர், ''உலகம் உவப்ப...அவிரொளி'' எனக் கூறிய முருகாற்றுப்படுத்ததுள் பெற்றாராம்'' என்று நூலாசிரியரின் உள்ளம் அறிந்து கூறுகின்றார் (99).

இவ்வுரையாசிரியரின் உரைத் திறனை அறிந்து, 'கருகாத செஞ்சொல் உரை விரித்தான் கற்பகாடவிபோல் வருகாரி ரத்ன கவிராயன்' என்று, சிறப்புப்பாயிரம் புகழ்கின்றது.

## 16. உவமான சங்கிரக உரை

அணி இலக்கண நூல்கள் அணி வகைகளைக் கூறி, அவற்றின் இயல்புகளை விளக்கி, ஏற்ற உதாரணப் பாடல் களையும் காட்டி விளக்குகின்றன. பாட்டியல் நூல்கள், பிள்ளைத் தமிழ் நூல்களில் இன்ன இன்ன பொருள்களைக் குழந்தைகளுக்கு உவமை கூறவேண்டும் என்று விதிக்கின்றன. உவமான சங்கிரக

நூல்கள் பெண்ணைக் கேசாதி பாதமாக வருணிக்கும்போது, எந்த எந்தப் பொருளை உவமையாகக் கூற வேண்டும் என்று பட்டியல் தருகின்றன.

தமிழில் மூன்று உவமான சங்கிரக நூல்கள் உள்ளன. அவற்றுள் ஒன்று ஆறுமுக நாவலரால் இரத்தினச் சுருக்கத்துடன் சேர்த்து வெளியிடப்பட்டது. மற்றொன்று கொங்கு நாட்டுப் புலவர் இயற்றிய ஆசிரிய விருத்தத்தால் ஆன நூல். மூன்றாவது நூல் செந்தமிழ் பதினான்காம் தொகுதியுள் (பக்கம் 161-165) வெளியிடப்பட்டுள்ளது.

இம் மூன்று நூல்களுள் ஆறுமுக நாவலர் வெளியிட்ட உவமான சங்கிரகத்தை இயற்றியவர் ஸ்ரீவில்லிபுத்தூர்த் திருவேங்கடையர் என்று குறிக்கப்பட்டுள்ளது. அவ்வாறு குறித்திருப்பது தவறு என்றும், அதனை இயற்றியவர், திருமேனி குருகை இரத்தின கவிராயர் என்பவரே என்றும் தக்க சான்றுகளுடன் நிறுவியுள்ளனர். செந்தமிழ் பதினான்காம் தொகுதியுள் (பக். 16) சடகோப ராமாநுசாசார்யன் தமக்குக் கிடைத்த உவமான சங்கிரகப் பழைய ஏட்டில் பதினேழாம் செய்யுளாகக் கீழ்வரும் பாடல்காணப்பட்டதாகக் குறிப்பிடுகின்றார்:

பார்புகழ் குருகை யூரன்
　　பைங்குவ ளைத்தார் மார்பன்
நாரியர் வேளாம் ரத்ந
　　நாற்கவிச் சிங்கம் எங்கோன்
வார்முலை மடவார் தேக
　　வன்னனை அனைத்தும் தேர்ந்து
சீர்புனை தமிழால் மாறன்
　　திருவடி தொழுது செய்தான்.

இப்பாடல் 'திருமேனி குருகை இரத்தின கவிராயர்' உவமான சங்கிரகம் செய்தார் என்று குறிப்பிடுகின்றது.

இந்த உவமான சங்கிரகத்தினுள் உள்ள பதினாறு வெண்பாக்கள் அந்தாதியாக உள்ளன. முதல் வெண்பா காப்புச் செய்யுள் ஏனைய பதினைந்து வெண்பாக்கள் கேசாதி பாத வருணனைக்குரிய உவமைப் பொருள்களைக் கூறுகின்றன.

இந்நூலுக்குக் காஞ்சிபுரம் இராம யோகிகள் சிறந்த உரை இயற்றியுள்ளார். இவ்வுரை 1914ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. வெண்பாவிற்குப் பதவுரை இயற்றிய பின்னர் விசேடவுரையும் தருகின்றது.

இந்நூலுடன் இவர் இரத்தினச் சுருக்கம் என்ற நூலுக்கும் உரை எழுதிச் சேர்த்துள்ளார்.

## 17. அணிநூல் உரைகள்

'தொனிவிளக்கு' என்ற நூல் வடமொழியில் உள்ள 'த்வந்ய'ாலோக' என்னும் நூலின் மொழிபெயர்ப்பாகும். அந்நூல் வடமொழியுல் அலங்கார இலக்கண நூல்களுள் சிறந்ததாகப் போற்றப்படுகின்றது. அது ஒன்பதாம் நூற்றாண்டில், காஷ்மீரத்தில், அவந்தி வர்மன் அவையில் இருந்த புலவர்களுள் ஒருவரான ஆனந்த வர்த்தனரால் இயற்றப்பெற்றது.

'த்வந்யாலோக' என்ற வடமொழி அணியிலக்கண நூலைத் தமிழில் 'தொனி விளக்கு' என்ற பெயரில் பின்னங்குடி சா. சுப்பிரமணிய சாஸ்திரி நூற்பாவால் மொழி பெயர்த்து (1944), உரையும் தாமே இயற்றி வெளியிட்டார். இலக்கணத்திற்குத் தேவையான மேற்கோள் பாடல்களை வடமொழியிலிருந்து மொழிபெயர்த்துக் காட்டியுள்ளார்.

குவலயானந்தம் என்னும் அணி நூலை மாணிக்கவாசகர் என்பவர் (19 ஆம் நூற்.) இயற்றியுள்ளார்.

மு. இராகவ ஐயங்காரின் தந்தையார் முத்துச்சாமி ஐயங்கார், சந்திரலோகத்தை வடமொழியிலிருந்து ஆசிரியப் பாவால் மொழிபெயர்த்துள்ளார். இது உரையுடன் மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடாக வந்துள்ளது.

# 13

# 19-ஆம் நூற்றாண்டு உரையாசிரியர்கள்

## சரவணப் பெருமாள் ஐயர்

பத்தொன்பதாம் நூற்றாண்டு உரையாசிரியர்களில் புகழ் பெற்றவர் சரவணப்பெருமாள்ஐயர். இவர் தொண்டை நாட்டில் உள்ள திருத்தணிகையில் வீர சைவமரபில் கந்தப் பையரின் மகனாகத் தோன்றினார். இவர் இராமாநுச கவிராயரிடம் கல்வி பயின்று புலமை பெற்றார். சென்னையில் தங்கிப் பல ஆண்டுகள் தமிழ்ப்பணி புரிந்தார்.

இவர் உரை இயற்றிய நூல்கள்: நாலடியார், நன்னூல், வெங்கைக்கோவை, திருவல்லுவமாலை, ஆத்திசூடி, கொன்றை வேந்தன், நறுந்தொகை, மூதுரை, நன்னெறி என்பன.

1830ஆம் ஆண்டில் திருக்குறள் பரிமேலழகர் உரைக்கு விளக்கம் எழுதிப் பதிப்பித்தார்.

நைடதம் (கைக்கிளைப் படலம் வரை) பிரபுலிங்கலீலை (மாயை உற்பத்தி வரை) ஆகிய இரு நூலுககும் உரை இயற்றத் தொடங்கி முடிக்காமல் மறைந்தார். அவற்றின் பிற பகுதிகளுக்கு இவரது மகன் கந்தப்பையர் உரை எழுதி முடித்தார்.

## திருவள்ளுவமாலை உரை

சரவணப் பெருமாளையர் இயற்றிய திருவள்ளுவமாலை உரை, சிறந்த ஆராய்ச்சியுரையாக உள்ளது. பாடல்களின் பலவகை நுட்பங்களை எடுத்துக்காட்டி விளக்குகின்றது. இவ் வுரையையும் விளக்கத்தையும் பலர் மேற்கொண்டனர்.

இவ்வுரையிலும் சில திருத்தங்களைச் செய்ய வேண்டும் என்று அறிஞர்கள் எடுத்துக்காட்டியுள்ளனர். டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர், "திருவள்ளுவமாலையில், ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறளும் என்னும் செய்யுளில் (16) உள்ள 'வீற்றிருக்கலாம்' என்ற சொல்லிற்கு 'ஒரு சபை நடுவிலே உயர்வாகிய ஆசனத்தில் ஏறியிருக்கலாம்' என்று ஒருவர் (சரவணப் பெருமாளையர்) எழுதிவிட்டார். கவலையற்றிருக்கலாம் என்பதே

அதன் பொருள். சிந்தாமணி உரையிலும், திருமுருகாற்றுப் படையிலும் வீற்றிருத்தல் என்பதற்குக் கவலையற்றிருத்தல் என்று நச்சினார்க்கினியர் பொருள் கூறியிருக்கிறார்" என்று உரைக் கின்றார்கள்.*

திருவள்ளுவமாலையுரையில் மற்றோரிடம் மறுக்கப் படுகின்றது. 'உப்பக்கம் நோக்கி' என்ற பாடலில் (21), 'உபகேசி தோள்மணந்தான்' என்ற வரிக்குச் சரவணப் பெருமாளையர் எழுதியுள்ள உரை, சைவ சமயச் சார்பாய் உள்ளது. சமயப் பற்றின் காரணமாய் உண்மை உரை காணத் தவறி விட்டார். 'உபகேசி தோள்மணந்தான்' என்பதற்கு, 'உமாதேவியினது தோளை மணந்த கடவுள்' என்று பொருள் கூறி, "கேசி திருமால்; இது அக்கடவுள் சகசிர நாமத்தில் கண்டது. கேசிக்கும் பின்னே பிறந்தவள் உபகேசி என்றாயது" என்று விளக்குகின்றார்.

ஆனால், மற்ற உரையாசிரியர்கள் உபகேசி என்பதற்கு நப்பின்னை என்றும், உபகேசி தோள்மணந்தான் என்பதற்குத் திருமால் என்றும் பொருள் கூறுகின்றனர்.

நேமிநாத உரையாசிரியர், 'உட்பக்கம் நோக்கி' என்ற பாடலைக் காட்டி, "உபகேசி ஆவாள் நப்பின்னைப் பிராட்டியார்" என்று கூறுகின்றார் (நேமி-30).

"இச் செய்யுளில் 'உபகேசி தோள்மணந்தான்' என்றது கண்ணபிரானை. உபகேசம்-மயிராற்பின்னிய பின்; அதனால் பெயர் சிறந்தாள் பின்னைப் பிராட்டி. உபகேசத்தை உடையாளை உபகேசி என்பது தமிழ் நூல் முடிபு. குண்டலகேசி நீலகேசி பிங்கலகேசி என்றாற் போலக் கொள்க. இதனால் உபகேசியும் பின்னையும் ஒரு பொருட் பன்மொழியாதல் காண்க" என்று ரா. இராகவ ஐயங்கார் செந்தமிழ் முதல் தொகுதியில் கூறியுள்ளார்.

"நப்பின்னை என்பதில் உள்ள 'ந' சிறப்புப் பொருள் உணர்த்துவதோர் இடைச்சொல், நச்செள்ளை நப்பாலத்தன் நக்கீரன் என்றாற்போல. நப்பின்னை (என்பதன்) விகாரமும் ஆம்" என்கின்றார் நச்சினார்க்கினியர் (சீவக-74).

## ஆறுமுக நாவலர் (1822—1879)

நாவலர் என்று கூறினாலே ஆறுமுக நாவலர் தான் முதலில் நம் நினைவுக்கு வருவார். தாம் வாழ்ந்த காலத்தில் நாவலர் என்ற பெயரைத் தமக்கு உரியதாக்கிச் சிறந்து விளங்கிய வித்தகர் இவர். நாவலர் என்ற சிறப்புப் பெயரைப் பெற்ற இவர் சைவ சமயத்தின் காவலராய்—தமிழ் மொழியின் புரவலராய் விளங்கினார்.

* சங்கத்தமிழும் பிற்காலத் தமிழும் (பக்கம் – 179)

நாவலர் யாழ்ப்பாணத்து நல்லூரிலே செல்வாக்கு மிகுந்த சைவ வேளாளர் குடியில் 1822-ஆம் ஆண்டில் (மார்கழி மாதம்) பிறந்தார். தந்தையார் கந்தப்பிள்ளை. தாயார் சிவகாமியம்மை.

இளமை முதற்கொண்டே கல்வியில் ஆர்வமுடைய இவர், தமிழும் ஆங்கிலமும் பயின்று இருமொழிப் புலமை பெற்றார். சைவசமய நூல்களைப் பயின்று தெளிந்து சிவனருட் செல்வர் ஆனார்.

இவர் சொற்பொழிவாற்றும் திறனை வியந்து போற்றி, திருவாவடுதுறை ஆதீனத்தலைவராய் இருந்த சுப்பிரமணிய தேசிகர், நாவலர் என்ற பட்டத்தை வழங்கினார்.

மேடைத்தமிழின் வீறெல்லாம் அறிந்த இவர், உரை நடைத் தமிழின் நுட்பத்தை, அறிந்து பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே 'தமிழ் உரைநடைத் தந்தை'யாக விளங்கினார். அறிஞர் பெருமக்களின் புகழுக்கும் போற்றுதலுக்கும் உரியவரானார்.

சி. வை. தாமோதரம் பிள்ளை, "நல்லை நகர் ஆறுமுக நாவலர் பிறந்திலரேல் சொல்லு தமிழ் எங்கே? சுருதி எங்கே?" என்று நாவலரின் தமிழ்த் தொண்டினைப் போற்றுகின்றார். பரிதிமாற் கலைஞர் "வசன நடை கை வந்த வல்லாளர்" என்று இவரது உரைநடைத்திறனைப் பாராட்டுகின்றார்.

ஆறுமுக நாவலரின் தமிழ்த் தொண்டினைப் பாராட்டித் தமிழகச் செய்தித்தாள் ஒன்று, நாவலர் வாழ்ந்த காலத்திலேயே புகழ்ந்து எழுதியது. டாக்டர். உ. வே. சாமிநாத ஐயரின் ஆசிரியராகிய மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஒரு சமயம் வேதநாயகம் பிள்ளையைச் சந்தித்து வரச் சென்றார். அப்போது வேதநாயகம் பிள்ளை தாம் படித்த செய்தித்தாளில், தமிழ்ப் புலவர்கள் இருவரைப் போற்றி எழுதியிருந்த புகழுரையைப் படித்துக் காட்டினார். அப்புகழுரை பின்வருமாறு:

"இக் காலத்தில் தமிழ்நாட்டிற்கு இரண்டு கண்களாக விளங்குகின்றவர் இருவர். அவருள் ஒருவர் வசனம் எழுதுவதில் ஆற்றலுடையவர்; மற்றொருவர் செய்யுள் இயற்றுவதில் ஆற்றலுடையவர்; வசனம் எழுதுபவர் ஆறுமுக நாவலர்; செய்யுள் செய்பவர் மீனாட்சி சுந்தரம்பிள்ளை. நாவலர் சிதம்பரத்தில் பாடசாலை வைத்துத் தமிழைப் பரிபாலித்து வருகிறார்; மற்றொருவர் தாமே நடையாடு புத்தக சாலையாக இருந்து தம்முடைய செலவிலேயே பிள்ளைகளைப் படிப்பித்து வருகிறார்."*

* மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம் II (1940) பக்கம். 104 – டாக்டர் உ.வே.சா.

2-42

ஆறுமுக நாவலர், சைவ சமயத்திற்கும் தமிழ் மொழிக்கும் பலவகையாய்த் தொண்டு புரிந்தார். சைவ சமயச் சொற் பொழிவுகள் ஆற்றியும், சைவத்தை எதிர்த்தவர்களை எதிர்த்துக் கண்டன நூல்கள் இயற்றியும் சைவத்தை வளர்த்தார். பழந்தமிழ் இலக்கணங்களையும் உரைகளையும் இலக்கியங்களையும் பதிப்பித்தும், உரை இல்லாதவற்றிற்கு உரை எழுதியும், தமிழ் கற்கும் மாணவர்களுக்கு ஏற்ற உரை நடை நூல்கள் இயற்றியும் தமிழ் மொழியை வளர்த்தார்.

ஆறுமுக நாவலர் இயற்றிய உரைகள்: கோயிற்புராணவுரை, நன்னூல் காண்டிகையுரை, மருதூர் அந்தாதியுரை, திருச்செந்தில் நிரொட்டயமக அந்தாதியுரை, சைவ சமய நெறியுரை, சிவதருமோத்தரவுரை திருமுருகாற்றுப் படையுரை, நீதிவெண்பா வுரை என்பன. இவையேயன்றித் திருவிளையாடற் புராண வசனம், பெரிய புராண வசனம், பெரிய புராண சூசனம் ஆகியவற்றையும் எழுதியுள்ளார்.

ஆறுமுக நாவலர் உரைத்திறனுக்கு ஒரு சான்று காண்போம்.

நீதி வெண்பா உரையில்,

**நன்றறியாத் தீயோர்க் கிடங்கொடுத்த நல்லோர்க்கும்**
**துன்று கிளைக்கும் துயர்சேரும்–குன்றிடத்தில்**
**பின்இரவில் வந்தகரும் பிள்ளைக் கிடங்கொடுத்த**
**அன்னமுதற் பட்டதுபோ லாம் (—74)**

என்ற பாடலில் உள்ள கதையை நாவலர் பின்வருமாறு விளக்கு கின்றார்.

"எவராலும் ஏற முடியாத ஒரு பெரிய மலைக்குகையில் ஓர் அரச அன்னம் அன்னப் பட்சிகளோடு வாசம் செய்து கொண்டிருக்கும் போது, ஒருநாள் இரவு பெருமழையினால் வருந்திய ஒரு காக்கை, தான்இருக்க இடம்கேட்டது. மந்திரியாகிய அன்னம் காக்கைக்கு இடம் கொடுக்கலாகாது என்று சொல்லவும், அரச அன்னம் அதன் சொல்லைக் கேளாமல் காக்கைக்கு இடம் கொடுத்தது. காக்கை அன்று இரவில் அங்கே தங்கி எச்சமிட அவ் எச்சத்தில் இருந்து ஆலம் வித்து முளைத்து எழுந்து பெரிய விருக்ஷமாகி, விழுதுகளை விட்டது. ஒரு வேடன் விழுதுகளைப் பற்றிக் கொண்டு அம்மலையில் ஏறிக் கண்ணிவைத்து அன்னங்களைப் பிடித்தான்".

## இராமலிங்க அடிகள்

இராமலிங்க அடிகள், வள்ளலார் என்ற பெயரோடு, உலக மக்கள் போற்றும் அருட்பெருஞ்சுடர். இவரது வாழ்க்கை வரலாற்றை நாடு நன்கு அறியும்.

வள்ளலார், உரையாசிரியராய் - பதிப்பாசிரியராய்ச் சிறந்து விளங்கினார். இவர் இயற்றிய உரை நூல்கள்:

1. பொன்வண்ணத்தந்தாதி (பாடல்-22) உரை
2. வேதாந்ததேசிகர் குறட்பா உரை
3. தமிழ் என்பதன் உரை
4. ஒழிவிலொடுக்க உரை
5. பெரியபுராண உரை
6. தொண்ட மண்டல சதக உரை

வள்ளலாரின் உரைத்தொண்டு, திருவருட்பா வியாக்கியானப்பகுதி (மூன்றாம் புத்தகம் பாலகிருஷ்ணபிள்ளை பதிப்பு) யில் நன்கு விளக்கப்பட்டுள்ளது. இதில் உள்ள பாயிரம் என்ற அரிய ஆராய்ச்சி முன்னுரை, பல நல்ல கருத்துக்களைத் தெரிவிக்கின்றது. அவற்றைக் காண்போம்:

"சுவாமிகள் மறந்தும் தாம் ஓர் வியாக்கியான கர்த்தாவாகத் தொழிற்படவிரும்பவில்லை. தம்மைவியாக்கியான கர்த்தாவாக அவர்கள் கருதவில்லை. இவ் வியாக்கியானங்களில் பெரும் பாலான அன்பர்கள் பற்பலரின் பல நாள் வேண்டு கோட்களைத் தொடர்ந்து மறுக்க மனம் வராத பரம தாக்ஷிண்ய நிலையில் அவரவர் பொருட்டு அப்போதப்போது எழுதி உதவியன."

இவ்வாறு வள்ளலார் உரைத் தொண்டின் வரலாறு கூறப் படுகின்றது.

வள்ளாரின் உரை நூல்கள் வாயிலாக அவரது பல திறப்பட்ட புலமைகள் வெளிப்படுகின்றன.

"ஒழிவிலொடுக்க உரையினின்றும் அவர்களது சித்தமார்க்க ஞானத்தையும்;

குறட்பா உரையினின்றும் அவர்களது சித்த மார்க்க ஞானத்தையும்;

தமிழ் உரையினின்றும் அவர்களது மந்திர சாஸ்திர ஞானத் தையும்;

தொண்ட மண்டல சதக உரையினின்றும் அவர்களது இலக்கிய இலக்கண தர்க்க ஞானத்தையும்;

பெரியபுராண உரையினின்றும் அவர்களது வேதாகம தத்துவாநுபவ ஞானத்தையும் அறிந்து கொள்ளலாம்." (பாயிரம் பக்-21).

வள்ளலார் காலத்தில் வாழ்ந்த ஆறுமுக நாவலர், இவரது உரை நூல்களில் உள்ள குற்றங்களை எடுத்துக் காட்டினார்.

தொண்ட மண்டலமா? தொண்டை மண்டலமா? என்ற வினாவை எழுப்பினார். வள்ளாரின் ஒழிவிலொடுக்க உரைப் பதிப்பில் இருந்த தவறுகளைப் பட்டியல் போட்டு, சிறு நூல் ஒன்று வெளியிட்டார்.

நாவலரின் மறுப்புரை, நம் ஆராய்ச்சியைத் தூண்டுகிறது; நாவலரின் புலமை மாண்பைக் காட்டுகின்றது. ஆதலின், நாவலர் வெளியிட்ட மறுப்பை அறிய விரும்புவோர், ஆறுமுக நாவலர் பிரபந்தத் திரட்டு என்ற நூலில் உள்ள 'போலியருட்பா மறுப்பு' என்ற கட்டுரையைப் படித்துப் பார்க்கலாம்.*

## நினைவில் நிற்பவர்கள்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் அச்சு இயந்திரங்கள் பெருகியபோது, பழைய நூல்களுக்கு உரை எழுதி வெளிப் படுத்தும் பணியில் பலர் ஈடுபட்டனர். அப் பணியில் ஈடுபட்ட தமிழ்ப் பெருமக்களைப் பற்றி மிகச் சில வரலாற்றுக் குறிப்புக்களே கிடைக்கின்றன. அவற்றைத் தொகுத்துக் காண்போம்.

### வேதகிரி முதலியார் (1799–1852)

சூடாமணி நிகண்டு பதினொன்றாம்தொகுதி, திருக்குறள், நைடதம் ஆகியவற்றிற்கு உரை இயற்றினார்.

### சந்திர சேகர கவிராச பண்டிதர் (?–1883)

இவர் இயற்றிய உரைகள்: நன்னூல் விருத்தியுரை, யாப்பருங்கலக் காரிகையுரை, தண்டியலங்காரவுரை.

### வல்லை வைத்தியலிங்கம் பிள்ளை

இவர் அகப்பொருள் விளக்கம் *(1878)*, கந்த புராணம் *(1878)*, கல்வளை யந்தாதி *(1888)* ஆகியவற்றிற்கு உரைஎழுதினார்.

### மாங்காடு வடிவேல் முதலியார்

உரை கண்ட நூல்கள்: திருப்புகழ், ஔவைகுறள், நெஞ்சறி விளக்கம், மஸ்தான் சாகிப் பாடல்கள், சாதக அலங்காரம், பட்டினத்தார் பாடல்கள்.

### கோமளபுரம் இராச கோபால் பிள்ளை

இவர் சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழ்த்துறையில் பணியாற்றியவர். உரைகண்ட நூல்கள்: நாலடியார், நளவெண்பா, திருவாய்மொழி.

* பார்க்க பிற்சேர்க்கை – 7.

**சுப்பராயச் செட்டியார் (?–1894)**

இவர் உரை இயற்றிய நூல்கள்: பரஞ்சோதியார் திருவிளையாடல் புராணம், கம்பராமாயணம், அயோத்தியா காண்டம், காஞ்சி புராணம், புலியூர் வெண்பா.

**பிரமபுரி திருவேங்கடம் பிள்ளை**

இவர் நந்த மண்டல சதகத்திற்கு உரை இயற்றினார் *(1894)*.

**அஷ்டாவதானம் சபாபதி முதலியார் (?–1836)**

இவர் கந்தர் அனுபூதி, மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் இரண்டிற்கும் உரை எழுதினார்.

**காஞ்சிபுரம் சபாபதி முதலியார் (?—1870)**

இவர் பெரிய புராணத்திற்கும் திருவிளையாடல் புராணத்திற்கும் உரை கண்டார்.

**தாண்டவராய முதலியார்**

இவர் உரை எழுதி வெளியிட்ட *(1870)* சூடாமணி நிகண்டு பல பதிப்புக்கள் வெளிவந்தன.

**மகுதண்ண மரைக்காயர்**

விவேக சிந்தாமணிக்கு உரை இயற்றினார் *(1896)*

**காதிரசனா மரைக்காயர்**

சீறாப் புராணத்திற்கு உரை எழுதியுள்ளார் *(1887)*.

**இராமானுசக் கவிராயர் (1835—)**

இராமநாதபுரம் மாவட்டத்தில் பிறந்த இவர், புலமைச் செல்வம் பெற்றபின், சென்னை வண்ணாரப்பேட்டையில் வாழ்ந்தார். நன்னூல் காண்டிகை உரை, ஆத்திசூடி உரை, கொன்றை வேந்தன் உரை ஆகியவற்றை எழுதியுள்ளார்.

**தொழுவூர் வேலாயுத முதலியார் (1832—1889)**

வள்ளலாரின் மாணவர். சேலம் செவ்வாய்ப்பேட்டையருகே உள்ள தொழுவூரில் பிறந்தவர். பெரிய புராண வசனம் இயற்றினார்.

**மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் (1883—1888)**

திருநெல்வேலி மாவட்டத்தில்—மேலகரம் என்னும் ஊரில்—திரிகூடராசப்பக் கவிராயர் மரபில் தோன்றியவர்.

சிவஞான சித்தியாருக்குச் சிவஞான முனிவர் எழுதியுள்ள உரைக்குத் தெளிபொருள் விளக்கம் எழுதியுள்ளார். இவ்வுரையை மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை பாராட்டியுள்ளார்.

**14**

# 20-ஆம் நூற்றாண்டு உரையாசிரியர்கள்

பத்தொன்பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றி இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்து தமிழ்ப்பணி புரிந்து மறைந்த உரையாசிரியர்கள் சிலரைப் பற்றிக் கிடைக்கும் குறிப்புகளைக் கீழே காண்போம்:

**பொன்னம்பல சுவாமிகள் (1832—1904)**

இவர், கைவல்ய நவநீதம், வேதாந்த சூடாமணி ஆகிய வற்றிற்கு உரை இயற்றியுள்ளார்.

**திருமயிலை சண்முகம் பிள்ளை (1958—1905)**

இவர் கந்தபுராண வசனம் இயற்றினார். இவர் உரை கண்ட நுல்கள்: அயோத்தியா காண்டம்; பொன்வண்ணத்தந்தாதி, திருக்கைலாய ஞானஉலா, திருவாரூர் மும்மணிக் கோவை, பிச்சாடன நவமணி மாலை.

**சிவசம்புப் புலவர் (19830—1909)**

இவர் மறைசை யந்தாதி, யாப்பருங்கலக் காரிகை, கந்த புராணம் (வள்ளியம்மை திருமணப் படலம் வரை) ஆகிய நூல் களுக்கு உரை இயற்றினார். இவர் யாழ்ப்பாணப் புலவர்.

**பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (1862–1914)**

இவர் நற்றிணைக்கு உரை இயற்றியுள்ளார்.

**பூவை. கலியாணசுந்தர முதலியார் (1854–1918)**

தாயுமானவர் தனிப்பாடல் திரட்டு உரையும், பட்டினத்தார் தனிப்பாடல் திரட்டு உரையும் எழுதினார்.

**வெ. குப்புசாமி ராசு ( ?–1921)**

சிவஞானபோத உரையும், ஞானவசிட்ட உரைநடையும் இயற்றினார்.

**குமாரசுவாமிப் புலவர் (1854–1922)**

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம் இவரது பிறப்பிடம். இவர், திருக்காசைப் புராணப் பொழிப்புரை, யாப்பருங்கலக் காரிகைப் புத்துரை, திருவாதவூரர் புராணவுரை, அகப் பொருள் விளக்கப் புத்துரை, பாலகாண்டம் அரும்பதவுரை, நீதிநெறி விளக்கவுரை, தண்டியலங்காரவுரை ஆகியவற்றை இயற்றினார்.

**ஆலாலசுந்தரம் பிள்ளை (1853–1923)**

இவர், பெரியபுராண விருத்தியுரை, காஞ்சி புராணவுரை, திருப்போரூர்ச் சந்நிதி முறை உரை, திருவுந்தியார் உரை, சிவஞான போதக் கருத்துரை ஆகியவற்றை இயற்றியுள்ளார்.

**பானுகவியடிகள் ( ?–1926)**

கந்த புராணவுரை, திருவிளையாடல் புராண அரும்பத வுரை, மகாராசா துறவு உரை ஆகியவற்றை எழுதினார்.

**வேலுப் பிள்ளை (1847–1930)**

வாதவூர்ப் புராணவுரை, புலியூர் அந்தாதியுரை, அபிராமி அந்தாதியுரை, கௌளிநூல் உரை ஆகியவை இவர் இயற்றியவை.

**கந்தசாமிக் கவிராயர்**

கம்பராமாயணம் ஆரணிய காண்டவுரை (1903), அரசன் சண்முகனார் இயற்றிய மாலை மாற்று மாலை உரை ஆகியவற்றை எழுதினார்.

**டி. என். சேஷாசல ஐயர் (1891–1938)**

கம்பராமாயணவுரை, சூளாமணி உரை, நளவெண்பா உரை ஆகியவற்றை இவர் எழுதியுள்ளார்.

**கா. ர. கோவிந்தராச முதலியார் (1872–1952)**

பன்னிரு பாட்டியலுக்கு இவர் உரை இயற்றினார்.

**திருவளங்கம்**

இவர் கொழும்பில் வழக்கறிஞராக இருந்தவர். சிவஞான சித்தியார், கந்தர் அலங்காரம், சிவப்பிரகாசம், திருப்புகழ் ஆகிய வற்றிற்கு உரை இயற்றியவர்.

**சிவபாத சுந்தரனார்**

இவர் யாழ்ப்பாணத் தமிழர். திருவருட்பயனுக்கு உரை கண்டுள்ளார்.

## அரசன் சண்முகனார் (1868–1915)

அரசன் சண்முகனார், மதுரை நகருக்கு அருகில் உள்ள சோழவந்தான் என்னும் ஊரில் 1886ஆம் ஆண்டு பிறந்தார். இவரது தந்தையார் பெயர் அரசப்பிள்ளை. தாயார் பெயர் பார்வதியம்மையார். இவர் சைவ வேளாளர் குலத்தினர்.

இவர் இளமையிலே ஆர்வத்தோடு கல்வி கற்றுப் பெரும் புலமை பெற்றுவிட்டார். தம் காலத்தில் பலர் போற்ற வாழ்ந்த பெரும் புலவராக விளங்கினார்.

இவர் இயற்றிய உரை ஆராய்ச்சி நூல்கள் இரண்டு. ஒன்று தொல்காப்பியப்பாயிர விருத்தி; மற்றொன்று திருக்குறள் உரை விளக்கம். செந்தமிழ் இதழ்களில் இடம் பெற்று வெளிவந்தன. தொல்காப்பியப்பாயிர விருத்தி சண்முக விருத்தி என்ற பெயருடன் வெளிவந்துள்ளது. இந் நூலை இலக்கணப் புலமை பெற விரும்புவோர் விரும்பிப்பயில்கின்றனர். இந் நூல் ஓர் இலக்கண ஆராய்ச்சிக் களஞ்சியம்.

இவர் கலந்துகொண்ட புலமைப் போர்கள் பல. அவற்றுள் 'உம்மை'யைப் பற்றி நிகழ்த்திய ஆராய்ச்சியும் மறுப்பும் குறிப்பிடத் தக்கவை. 'உம்மை' ஆராய்ச்சியில் ஈடுபட்டு வென்ற சண்முகனார் முடிவில், "இதுகாறும் உம்மை நிலை அறியாதிருந்த நீவீர் இனியேனும் உம்மை நிலை அறிவீராக" என்று இரு பொருள்பட எழுதினார்.

## கோ. வடிவேல் செட்டியார்

"வடிவேல் செட்டியார் தமிழ்க் கருவூலம்; வேதாந்தக் களஞ்சியம். அவர் வேதாந்தக் கடலில் அழுந்தினவர். அதனால் அவரது நெஞ்சம் தம்மைத் தொல்காப்பியப் புலவர் என்றோ சங்க இலக்கிய வல்லவர் என்றோ நினைக்கவும் அவரை விட்டதில்லை. செட்டியாரின் (பரிமேலழகர் உரை விளக்கம்) குறிப்புரையும், கைவல்ய விளக்கவுரையும் அவரது கல்வித் திறத்தைப் புலப் படுத்தா நிற்கின்றன." என்று திரு. வி. க. வடிவேல் செட்டியாரைப் போற்றுகின்றார்.*

## டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர்

சிறந்த பதிப்பாசிரியராகிய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் சில நூல்களுக்கு உரையும் எழுதியுள்ளார். குறுந்தொகைக்கு உரையும், பெருங்கதை, மணிமேகலை, குமர குருபரர் நூல்கள் ஆகியவற்றிற்குக் குறிப்புரையும் இயற்றியுள்ளார்கள். இவரது உரைகள ஆராய்ச்சிக் களஞ்சியம்.

* திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புக்கள் – பக்கம் 175.

## குறுந்தொகை உரை

குறுந்தொகையுரையில் 'முளிதயிர் பிசைந்த' என்னும் பாடலுக்கு (167) இவர் தரும் பொருள் பொருத்தமாக இல்லை.

**முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**
**கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇ**

என்ற அடிகளுக்கு, "முற்றிய தயிரைப் பிசைந்த காந்தள் மலரைப் போன்ற மெல்லிய விரலைத் துடைத்துக் கொண்ட ஆடையைத் துவையாமல் உடுத்துக்கொண்டு" என்று பொருள் கூறுகின்றார்.

மறைமலை அடிகள் முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரையில் (1931, பக்கம்—10), மேலே காட்டிய வரிகளுக்கு, "வற்றக் காய்ச்சின கட்டித்தயிரைப் பிசைந்த காந்தள் மலர் முகிழ் போற் சிவந்த மெல்லிய விரல்களால், நன்கு கழுவி வெண்மையான உயர்ந்த ஆடை, சமையல் செய்யும் விரைவினால் இடுப்பினின்றும் அவிழ்ந்து கழல அதனைக் கை கழுவாமலே உடுத்திக் கொண்டு" என்று பொருள் உரைக்கின்றார். இப் பொருளே பொருத்தமாய் உள்ளது.

குறுந்தொகை, உரையைப் பற்றி எஸ். வையாபுரிப் பிள்ளை பின்வருமாறு உரைக்கின்றார்:

'இவர் தாமாக முழுப்பொறுப்பையும் ஏற்று நன்றாக உழைத்து வந்தது சுமார் 1930 வரை என்றுதான் சொல்லுதல் வேண்டும். இதற்குப்பின் தளர்ச்சி மேலீட்டினால் ஐயர் தமது சிஷ்யர்களையே முற்றும் நம்பிவிட வேண்டியதாயிற்று. இதனால் முன் பதிப்பித்த நூல்களின் செம்மைப் பாடு பின்வந்தவற்றுள் இல்லை. இதற்கு உதாரணமாகக் குறுந்தொகைப் பதிப்பைக் கூறலாம். இதன் கண்ணே பாட நிச்சயத்திலும், பொருள் உணர்ச்சியிலும் பிழைகள் பல உள்ளன என்பது தமிழறிஞர்கள் நன்கு உணர்ந்ததே."*

## வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார்

இருபதாம் நூற்றாண்டு உரையாசிரியர்களில் இவர் மிகுதியான நூல்களுக்கு உரை இயற்றியவர். கல்லூரிகளிலும் உயர் நிலைப்பள்ளிகளிலும் பயிலும் மாணவர்களுக்குப் பல உரைகளை எழுதிவெளியிட்டார். இவரது உரையில் மிகுதியான வட சொற்கள் உள்ளன. இவர் விளக்கங்களை மிகுதியாக எழுதுவார்.

இவர் உரை இயற்றிய நூல்கள்: கம்பராமாயணம் (முழுவதும்), வல்லிபாரதம் (முழுவதும்), பத்துப் பாட்டு (தனித்

* **தமிழ்ச் சுடர் மணிகள் (1949)** பக்கம் – 253.

தனிப் பாடல்களுக்கு உரை), சிலப்பதிகாரம் (அடைக்கலக் காதை, கடலாடுகாதை), திருக்குறள் பரிமேலழகர் விளக்கவுரை (சிறந்த ஆராய்ச்சி முன்னுரையுடன்), நாலடியார், நன்னூல் (காண்டிகையுரை), சடகோபர் அந்தாதி, திருப்பாவை, சரசுவதியந்தாதி, திருவேங்கடக்கலம்பகம், அழகர் கலம்பகம், மதுரைக் கலம்பகம், முதுமொழிக் காஞ்சி, அஷ்டப் பிரபந்தம், நாலாயிர திவ்வியப் பிரபந்தம்.

இவரது உரைத்திறனை அறிய வில்லிபாரத உரையிலிருந்து ஒரு பகுதியைக் காண்போம்:

விராட பருவத்தில் நிரை மீட்சிச் சருக்கத்தில் (56),

**முந்த ஆன்தொறு மீட்டலும் முற்கவர் பொதுவர்**
**வெந்த நெய்யென அரவம் அடங்கினர்; மிகவும்**
**வெந்த நெய்யினில் பால்துளி உகுத்தென ஆர்த்தார்**
**வந்த மச்சர்கோ மகனோடும் வந்த கோபாலர்**

என்ற பாடல் அருச்சுனன் நிரை மீட்டபோது இடையர்கள் மனம் மகிழ்ந்ததைக் குறிப்பிடுகின்றது.

இப் பாடலுக்குக் கோபால கிருஷ்ணமாசாரியார் பொழிப்புரை தந்து, அருஞ்சொற் பொருள் கூறி விளக்கம் எழுதுகின்றார். அவற்றைக் காண்போம்:

## சொற்பொருள் கூறல்

முந்த-முன்னே; ஆன்தொறு-பசுக்கூட்டத்தை; முன் கவர் பொதுவர்--முன்பு பசுக்களைக் கவர்ந்துபோன இடையர்.

## விளக்கம்

“வெந்த நெய்—காய்ச்சுகையில் வெண்ணெயின் நீர்ப் பசையற்ற நெய்; கொதிப்புத் தணியாத நெய். தொழில் பற்றி வந்த உவமையணி.”

“பால் துளி உகுத்தல், நீர்ப்பசையற்றதையும் அருமையையும் உணர்தற்கு என்க. வெந்த நெய்யென அரவம் அடங்கினர் எனவும், அந்த நெய்யினில் பால் துளி உகுத்தது என ஆர்த்தார் எனவும் கூறியன-இடத்துக்கும் சாதிக்கும் ஏற்ற உவமைகள். இங்ஙனம் கூறுவது மகா கவிகளது இயல்பு.”

## ந. மு. வேங்கடசாமி நாட்டார் (1884–1944)

ந. மு. வேங்கடசாமி நாட்டார் தலைசிறந்த தமிழ் நூல்களுக்கு உரை இயற்றித் தம் பெயரை நிலைநாட்டிச் சென்றுள்ளார். இவருடைய தமிழ்நடை, ஆற்றல் நிறைந்தது; எடுத்துக்கொண்ட பொருளைத் தெளிவாக விளக்குவது.

இலக்கண வரம்புடையது. இவரது உரை, தமிழ் மரபுணர்ந்து எழுதப்பட்ட செவ்விய உரையாகும்.

இவர் அகநானூறு, சிலப்பதிகாரம், மணிமேகலை, நானாற்பது, திருவிளையாடற் புராணம் ஆகியவற்றிற்கு உரை இயற்றியுள்ளார்.

## திரு. வி. க. (1883–1953)

திரு. வி.க. அவர்களைத் தமிழகம் நன்கு அறியும். இவர் நாவலராய்—பாவலராய்—செந்தமிழ்க்காவலராய்—எழுத்தாளராய் விளங்கினார். இவர் சில நூல்களுக்கு உரையும் இயற்றியுள்ளார்.

இவர் பெரிய புராணத்திற்குக் குறிப்புரை இயற்றி வெளி யிட்டார். திருக்குறள், முதல்நூறு குறள்களுக்கு விளக்கவுரை கண்டார். பட்டினத்தார் பாடல், பத்திரகிரியார் புலம்பல் ஆகியவற்றிற்கு விருத்தியுரை இயற்றினார்.

இவர் இயற்றியுள்ள திருக்குறள் விளக்கவுரை நயம் பல கொண்டது: புதுமைப்போக்கு உடையது; விரிவானது. எண் குணத்தான் *(10)* என்பதற்கு "எண்ணும் குணத்தான். அன்பர் என்னும் குணங்களை உடையவன்", என்றும் 'குணம் என்னும் குன்றேறி நின்றார்' என்ற குறளுக்கு, "குணம் என்னும் மலை ஏறி நின்றவர், தம்முள் கோபத்தை ஒரு நொடிப் பொழுதேனும் பாதுகாத்தல் இல்லை. குணக்குன்றுகட்குக் கோபம் பிறப்பதில்லை" *(27)* என்றும் புதிய விளக்கம் தருகின்றார்.

'அன்பிற்கும் உண்டோ' என்னும் குறளுக்கு இவர் தரும் விளக்கம் இலக்கியச்சுவை மிகுந்ததாகும்.

பட்டினத்தார் பாடல்களுக்கு மிக அரிய ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் விளக்கவுரை தருகின்றார்.

**வித்தை கற்கும் ஆசையது விட்டொழியேன் என்குதே**
**சித்து கற்கும் ஆசை சிதையேனே என்குதே**

என்பது பத்திரகிரியார் புலம்பல். இதற்குத் திரு. வி. க. உரை பின்வருமாறு உள்ளது.

*(பொ—ரை)* "கல்வி பயிலும் விருப்பம் என்னை விட்டு நீங்கேன் என்கிறது. சித்துக்கள் கற்றுக்கொள்ள வேண்டும் என்னும் ஆசை அழியேன் என்கிறது.

*(வி—ரை)* 'கல்வி என்னும் பல் கடல் பிழைத்தும், என்றார் வாதவூரர். சித்தாசை பெரும் பைத்தியம். ஆசைகளில் தலையாயது சித்தாசை என்னலாம்.

## மாகறல் கார்த்திகேய முதலியார் (1857–1916)

செங்கல்பட்டு மாவட்டம் மதுராந்தகம் அருகே உள்ள வேட்டூரில் பிறந்தவர். இவர், ஆத்திசூடி உரை, முதற் சூத்திர விருத்தி எழுதியுள்ளார்.

## செல்வக் கேசவராய முதலியார் (1864–1921)

சென்னைக்கு அருகில் உள்ள திருமணம் என்னும் ஊரில் பிறந்தவர். ஆத்திசூடி, நல்வழி முதலிய நீதி நூல்களுக்கு உரை எழுதினார். பதினெண்கீழ்க் கணக்கு நூல்களில் சிலவற்றை உரையுடன் பதிப்பித்தார்.

## தி. த. கனகசுந்தரம் பிள்ளை (1863–1922)

இலங்கை-திரிகோண மலையில் பிறந்தவர். ஆறுமுக நாவலர்க்குப் பதிப்புப்பணியில் உதவியாக இருந்தவர். சுன்னாகம் குமாரசாமிப் பிள்ளையுடன் சேர்ந்து நம்பியகப் பொருளுரைக்குப் புத்துரை கண்டார். கம்பராமாயணம் பால காண்டத்திற்கு உரை இயற்றியுள்ளார்.

## சுன்னாகம் குமாரசாமிப் புலவர் (1855–1922)

இவர் யாழ்ப்பாணம் சுன்னாகத்தில் பிறந்தவர். இவர் உரை கண்ட நூல்கள்: கம்பராமாயணம்-பாலகாண்டம்; நீதி நெறி விளக்கம்; தண்டியலங்காரம்; யாப்பருங்கலக் காரிகை; கலைசைச் சிலேடை வெண்பா.

## ஆ. சிங்காரவேலு முதலியார் (1855–1934)

தொண்டை மண்டலம் பொன்விளைந்த களத்தூரில் பிறந்தவர்; சென்னைப் பல்கலைக் கழகத்தில்-பேரகராதிக் குழுவில் பணியாற்றியவர். அபிதான சிந்தாமணி என்னும் அரிய கலைக்களஞ்சியத்தை எழுதி வெளியிட்டவர்.

11 ஆம் திருமுறைக்கு உரை எழுதினார்.

பொது நோக்கு ஒழிமதி
புலவர் மாட்டே !

— கபிலர்

# 1. உரையாசிரியர் பரம்பரை

இலக்கண இலக்கிய நூல்களை முதல்நூல், வழிநூல், சார்புநூல் என்று ஒன்றோடு ஒன்றைத் தொடர்புபடுத்திக் காட்டுவது வழக்கம். யாப்பருங்கல விருத்தியுரை,

தொல்காப் பியப்புலவோர் தோன்ற விரித்துரைத்தார்
பல்காய னார்பகுத்துப் பன்னினார் – நல்யாப்புக்
கற்றார் மதிக்கும் கலைக்காக்கை பாடினியார்
சொற்றார்தம் நூலுள் தொகுத்து

என்ற செய்யுளில் பண்டைய நூல்களைத் தொடர்புபடுத்திக் காட்டுகின்றது.

இவ்வாறே உரை நூல்களையும் தொடர்புபடுத்தலாம். உரையாசிரியர்களின் பரம்பரையை அமைக்கலாம். 'முதல் உரையாசிரியர் யார்? அவரைப் பின்பற்றுபவர் யார் யார்? எந்த எந்த வகையில் பின்பற்றுகின்றனர்? முதல் உரையாசிரியரின் கொள்கையிலிருந்து எங்கெங்கே விலகித் தனி வழி வகுத்துச் செல்லுகின்றனர்?' என்று காண்பது சுவை மிகுந்த ஆராய்ச்சியாக இருக்கும்.

களவியல் உரையாசிரியர், இளம்பூரணர், சேனாவரையர், பேராசிரியர், பரிமேலழகர், ஆகிய உரையாசிரியர்கள் ஒவ்வொருவரும் தனித்தனியாக ஒரு பரம்பரையை உண்டாக்கி அதற்குத் தலைமை தாங்கி நடத்திச் செல்லுகின்றனர். நாலாயிர திவ்வியப் பிரபுந்தங்களுக்கு உரை எழுதியவர்கள், திருக்குறள் உரையாசிரியர்கள், சைவ சித்தாந்த சாத்திரங்களுக்கு உரை கண்டவர்கள்/ ஆகியவர்களுக்குள்ளும் பரம்பரைத் தொடர்பு காணலாம். யாப்பு நூல், பாட்டியல் நூல் ஆகியவற்றின் உரையாசிரியர்களுள்ளும் பரம்பரைத் தொடர்பு உண்டு.

**களவியல் உரையாசிரியர்**

உரைகளில் களவியல் உரையே தொன்மையானது. அவ்வுரையை 'முதல்உரை' என்னலாம். அது பல ஆண்டுகள் வாய்மொழியாக வழங்கி வந்து — ஒன்பது தலைமுறைகளுக்குப் பின்னர், எழுத்து வடிவம் பெற்றது. ஆதலின், அவ்வுரையை 'முதல் உரை' என்று கூறுவது மிகவும் பொருந்தும். முதல் உரையாகிய அவ்வுரை பல உரைகளைத் தோற்றுவிக்கும் தாய் ஆயிற்று. தனக்குப் பின்னால் தோன்றிய உரைகளுக்கு வழிகாட்டியாயிற்று. பாயிரக்கருத்து உரைத்தல், சொற்பொருள் விரித்தல், தமிழ் மரபு பேணுதல், இலக்கணக் குறிப்புத் தருதல், பழைய பாடல்களை

2-43

மேற்கோள் காட்டுதல், வினா விடை முறையில் பொருளை விளக்குதல், செய்யுள் நடையில் உரைநடை எழுதுதல், எந்தக் கருத்தையும் தெள்ளத் தெளியக் கூறுதல் போன்ற பல வழிகளில், பிற்கால உரையாசிரியர்களுக்கு அவ்வுரை வழிகாட்டியது.

அவ்வுரையை ஒவ்வொரு வகையிலும் ஒவ்வொரு உரையாசிரியர் பின்பற்றினர். களவியல் உரையின் பாயிரக் கருத்து, தமிழ் மரபு, கருத்துத் தெளிவு, இலக்கணக்குறிப்பு ஆகியவற்றை இளம்பூரணர் பின்பற்றி, தமக்கென ஒரு தனி வகையான நடையை அமைத்துக்கொண்டார். திருக்கோவை யாருக்கு உரை எழுதிய பேராசிரியர் களவியல் உரையின் செய்யுள் போன்ற உரைநடை, வினாவிடை முறை, சொற்பொருள் விளக்கம், நயங்கூறல், அகத்திணைக் கருத்தை விளக்கல் ஆகியவற்றைப் பின்புற்றினார். தஞ்சைவாணன் கோவைக்கு உரை எழுதிய சொக்கப்ப நாவலர் களவியல் உரையின் உரைநடையைக் கையாண்டார்; அகத்திணைக் கருத்தை மேற்கொண்டார்; நயங்கூறும் முறையைப் பின்பற்றினார்.

## இளம்பூரணர்

இளம்பூரணர், களவியலுரையைச் சில வகையில் பின்பற்றினாலும் தொல்காப்பியத்திற்கு முதன்முதலில் உரை இயற்றித் தமக்கெனத் தனிச் சிறப்பும் தலைமையும் பெற்று விளங்குகின்றார்.

தொல்காப்பிய உரையாசிரியர்களுக்கும் பிற்கால இலக்கண உரையாசிரியர்களுக்கும் அவரே தலைவர் என்னலாம். மயிலைநாதர், நேமிநாத உரையாசிரியர், நம்பி அகப்பொருள் ஆசிரியர் (ஆசிரியரே உரை எழுதியுள்ளார்) ஆகியோர் அவரைப் பின்பற்றுகின்றனர்.

களவியல் உரையின் செய்யுள்நடையை இளம்பூரணரிடம் காணமுடியவில்லை. தொல்காப்பியப்பாயிர விளக்கத்தில் அத்தகைய நடை சில இடங்களில் ஒளி வீசுகின்றது. தெளிவும் அமைதியும் அடக்கமும் இவரது உரையின் தன்மைகள். இவை யாவும் இவரைப் பின்பற்றிய உரையாசிரியர்களிடம் அப்படியே சென்று படிந்துள்ளன.

## சேனாவரையர்

இளம்பூரணரை அடுத்துத் தோன்றிய சேனாவரையர், தமக்கென ஒரு புதிய மரபை உண்டாக்கித் தலைமை தாங்குகின்றார். அவர் இட்ட வித்துகள் பல உரையாசிரியர் களைத் தோற்றுவித்தன. தருக்க நூலறிவோடு மறுக்கும் திறன்,

ஆழ்ந்த வடமொழிப் புலமை, தமிழுக்கும் வடமொழிக்கும் இலக்கணம் ஒன்றே என்ற கொள்கை, செறிவு மிகுந்த உரைநடை எழுதும் ஆற்றல், நுட்பமான கருத்து வெளிப்பாடு, சுருங்கச் சொல்லி உய்த்து உணரும் வகையில் விளக்குதல் ஆகியவை சேனாவரையரிடம் காணும் தனித்தன்மைகளாகும்.

சேனாவரையரின் உரைத்தன்மையைப் பின்பற்றித் திருக்குறளுக்கு உரை எழுதினார் பரிமேலழகர். பரிமேலழகரின் உரையில், சேனாவரையர் உரையின் இயல்புகள் பலவற்றைக் காணலாம்.

வடமொழி இலக்கணக்கொள்கைகளைத் தமிழோடு தமிழாக்கிக் கூறி இரு மொழிக்கும் இலக்கணம் ஒன்றே என்று சேனாவரையர் வகுத்த புதுக்கொள்கை பிற்காலத்தில் பெருகி வளர்ந்தது. வீரசோழியம், பிரயோக விவேகம், இலக்கணக் கொத்து ஆகிய நூல்களும் உரைகளும் சேனாவரையரின் புதுக்கருத்தை வளர்த்து, பல பொருந்தாத கொள்கைகளைத் தமிழ்மொழி இலக்கணத்தில் புகுத்திவிட்டன. இந்நூல்களும் உரைகளும் அறிஞர்களால் காலந்தோறும் கண்டிக்கப்பட்டு வருகின்றன.

பரிதிமாற்கலைஞர், தமிழ் மொழியின் வரலாறு என்ற நூலில் (ஐந்தாம் பதிப்பு, பக்கம் 32), "இலக்கணக் கொத்து "நூற்பாயிரத்தின்கண் கூறிய சில கூற்றுக்கள் அறிவுடையோர் ஒதுக்கற்பாலன" என்றும், "மொழி நூலாராய்ச்சியும் அறிவும் இல்லாததால் ஏற்பட்ட குறைபாடு" என்றும், "பொருந்தாக் கூற்று" என்றும், அக்கருத்துக்களைப் "பேரறிவாளர் நகைத்து விடுப்பர்" என்றும் கூறியுள்ளார்.

சேனாவரையர் பரம்பரையில் தோன்றி மிக்கபுகழுடன் விளங்குபவர், சிவஞானமுனிவர். அவர், தம் பரம்பரைக்குத் தலைவராய் விளங்கும் சேனாவரையரை, "வட நூற்கடலை நிலைகண்டு உணர்ந்த சேனாவரையர்" என்று வாயாரப் போற்றிப் புகழ்கின்றார். தலைவரின் புகழ் பாடிப் பரவும் மனநிலை சிவஞான முனிவரிடம் உள்ளது. தம் பரம்பரைக்குரிய தலைவனைக் கண்டு வணங்கிய பெருமை அவருக்கு உண்டு. சேனாவரையரைத் தவிர மற்ற எவரையும் பொருட்படுத்தாத - மதிக்காத போக்கு அவரிடம் உண்டு.

சேனாவரையர் பரம்பரை, வளர்த்து வந்த உரைநடை முழு வளர்ச்சி பெற்று ஒப்புயர்வற்று விளங்குவது, சிவஞான முனிவரின் நூல்களில்தான். அந்நடை, முனிவரின் நூல்களிலே தான் உச்சநிலையை அடைந்தது.

சேனாவரையரிடம் காணப்படும் இயல்புகளாகிய பிறர் எவரும் எளிதில் மறுத்துவிட இயலாதபடி விளக்கிச் செல்லும் முறையும், பிறர் கருத்தை மிக வன்மையாய் - தருக்க நூலறிவுடன் மறுக்கும் திறனும் சிவஞான முனிவரிடம் மிகுதியாக உள்ளன. சேனாவரையரைவிடப் பிறரைத் தாக்குவதில் மிக்க உணர்ச்சியும் ஊக்கமும் உடையவராய்ச் சிவஞானமுனிவர் விளங்குகின்றார். சேனாவரையர் நடையைப் பின்பற்றிய போதிலும், குறைந்த சொற்களால் நிறைந்த பொருளை விளக்குவதில் சேனா வரையரைச் சிவஞான முனிவர் வென்றுவிட்டார் என்றே கூறலாம்.

இத்தகைய பல சிறப்பியல்புகள் கொண்ட சிவஞான முனிவரிடம், பரம்பரைப் பண்புகளும் காணப்படுகின்றன. வடமொழி இலக்கணத்தைத் தமிழில் கொண்டு புகுத்துதல், இருமொழிக்கும் இலக்கணம் ஒன்றே என்று கருதல், வடமொழிப் புலமை இன்றேல் தமிழ் இலக்கண அறிவு நிரம்பப்பெறாது என்று நினைத்தல் போன்ற பரம்பரைப் பண்புகள் சிவஞான முனிவரிடம் உள்ளன.

## பேராசிரியர்

சேனாவரையருக்குப்பின் வந்த தொல்காப்பிய உரை யாசிரியரான பேராசிரியர், தமக்கென ஒரு பரம்பரையைத் தொடங்கித் தலைமை தாங்குகின்றார். தொல்காப்பியப் பொருளதிகார உரையில் பல்கலைப் புலமையைக் காணலாம். நாடகம், இசை, தருக்கம், சோதிடம் ஆகிய பலவகையான கலைகளின் இருப்பிடமாய் இவர் உரை விளங்குகின்றது. இவர் உரையில் சமயநூல் கருத்துக்கள் ஆங்காங்கே பளிச்சிடும்; வளமான இலக்கியப் புலமை வெளிப்படும்; இலக்கண அறிவு தோன்றும்; வடமொழிப் புலமையும் தேவையான அளவு நிறைந்திருக்கும். இவற்றிற்கும் மேலாக தூய இனிய வளமான தமிழ்நடை இன்னிசையோடு தவழ்ந்துவரும்; இலக்கியச்சுவை கனிந்து இன்பமூட்டும்.

அடியார்க்கு நல்லார், நச்சினார்க்கினியர், தக்கயாகப் பரணி உரையாசிரியர் ஆகியோர் இப் பரம்பரையைச் சேர்ந்தவர்கள். இவர்கள் அனைவரும் பல்கலைச் செல்வராய் விளங்குகின்றனர். இவர்களுடைய உரைநூல்களைக் கலைக் களஞ்சியம் என்னலாம். பரிமேலழகரிடம் காணப்படும் பல்கலைப் புலமை இப் பரம்பரைத் தொடர்பால் ஏற்பட்டதேயாகும்.

### மணிப் பிரவாளப் பரம்பரை

நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களுக்கு வியாக்கியானங்கள் எழுதிய உரையாசிரியர்களைப்போல, ஏனைய தமிழ் இலக்கியங்கள் பலவற்றிற்கும் சிலர் உரை கண்டனர். வியாக்கியான உரையாசிரியர்களைப் போலவே வடமொழிச் சொற்களையும் பேச்சு மொழியையும் கையாண்டு, சொற்பொழிவு செய்யும் முறையில் உரைகளை இயற்றினர். அவ்வுரைகளில் கொச்சை மொழிகளும், நாட்டுக்கதைகளும் பழமொழியும் மரபுத்தொடரும் மிகுதியாக இடம் பெறுகின்றன.

திருக்கோவையாருக்கு உரைகண்ட பழைய உரையாசிரியர், நீலகேசிக்கு உரை வடித்த சமய திவாகரவாமன முனிவர், திருக்குறளுக்கு உரை எழுதிய பரிதி, புறப்பொருள் வெண்பாமாலை உரையாசிரியர், மூவருலாவின் பழைய உரையாசிரியர், தக்கயாகப் பரணி உரையாசிரியர் ஆகியவர்கள் இப்பரம்பரையைச் சேர்ந்தவர்கள்.

இவ்வுரையாசிரியர்கள் வாழ்ந்த காலத்து மக்களின் பேச்சு மொழி, பழக்கவழக்கம், சமுதாய நிலை, நாட்டின் போக்கு ஆகியவற்றை அவ்வுரைகள் மிகத்தெளிவாக எதிரொலிக்கின்றன. பேசுவதுபோலவே எழுதும் உரைநடையிலும் ஒருவகை இன்பமும், எழிலும், உயிரோட்டமும் இருப்பதைக் காணலாம்.

### தழுவல் உரைகள்

சொல்லதிகாரத்திற்கு இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் ஆகியோர் உரை எழுதிச் சென்றபின், எல்லா உரைகளிலிருந்தும் தமக்குப் பிடித்தமான கருத்துக்களைத் திரட்டி ஒருவகை உரையினைக் கல்லாடனார் இயற்றியுள்ளார். சொல்லதிகாரத்திற்குப் பழையவுரை ஒன்றும் உள்ளது. அதுவும் மற்ற உரைகளைத் தழுவியே அமைந்துள்ளது. சிறந்த உரைகளுக்குப் பின் தோன்றிய போதிலும் இவ்வுரைகள் விளக்கம் உடையனவாய் — முன்னைய உரைகளை வென்று விளங்கும் தன்மையுடையனவாய் இல்லை.

பல உரைகளிலிருந்து நல்லனவற்றை எல்லாம் அல்லது தாம் விரும்புவனவற்றை எல்லாம் திரட்டிச் சுருக்கமாகத் தரும் முயற்சி பிற்காலத்தில் எழுந்தது. சிவஞானமுனிவர்க்குப் பின் தோன்றிய நன்னூல் உரைகளும், திருக்குறளுக்கும் தொல் காப்பியத்திற்கும் உரிய பல உரைகளும் அச்சான பின்னர், இவ்விரு நூல்களுக்கும் தோன்றிய எளியவுரைகளும் தழுவல் உரைகளே.

தழுவல் உரை இயற்றியவர்களிடம் தமக்கென ஒருவகைத் தனிப்பண்பையோ, கருத்தையோ காணமுடியவில்லை. அவ்வுரையாசிரியர்கள் எல்லாரும், பிறர்காலில் நிற்பவர்கள்; பல நிறமுடைய காகிதப் பூக்களைத் திரட்டி மகிழ்பவர்கள்.

### மரமும் கிளையும்

ஒரு நூலுக்கு அல்லது ஒரே வகையான நூலுக்கு உரை எழுதியவர்கள் பலர் உள்ளனர். ஒருவருக்குப்பின் ஒருவராகத் தோன்றி, ஒருவர் எழுதியதற்கு மற்றவர் விளக்கம் எழுதி ஒருவகைப் பரம்பரையைத் தமக்குள் அவர்கள் ஏற்படுத்திக் கொண்டனர்.

தொல்காப்பியம், திருக்குறள், நாலடியார், திருவாய்மொழி, திருவாசகம், நன்னூல் ஆகிய நூல்களுக்கு உரை கண்டவர்கள் முதன் முதலில் உரை எழுதியவர் வகுத்துத் தந்த வழியில் அமைத்துத்தந்த பாதையில் சென்றனர். அடி மரத்திலிருந்து கிளையும், கிளையிலிருந்து கொம்பும், கொம்பிலிருந்து மிலாரும் (விளாரும்) பிரிவதுபோல ஒன்றற்கு ஒன்று விளக்கமாய் ஒரே நூலுக்கு விளக்கமாய் உரைகள் பெருகி வளர்ந்துள்ளன.

இவையேயன்றிச் சைவ சாத்திரங்களுக்கும் யாப்பிலக்கணம் அணியிலக்கணம், பாட்டியல் நூல்கள் ஆகிய நூல்களுக்கும் உரைகண்டவர்களிடம் ஒருவகை மரபுநிலை தென்படுகிறது; உரைகளில் சில பரம்பரைகள் தெரிகின்றன.

### தொல்காப்பியப் பாயிர ஆராய்ச்சி

தொல்காப்பியப் பாயிரமும் முதற் சூத்திரமும், பல உரைகளும் விளக்கங்களும் தோன்றுவதற்கு இடம்தந்து ஆழ்ந்த பொருள் உடையனவாய் உள்ளன. தொல்காப்பியத்திற்கு முதன் முதலில் உரை இயற்றிய இளம்பூரணர், பாயிரத்திற்குத் தெளிவான விளக்கம் தருகின்றார்; முதற் சூத்திரத்திற்குப் போதுமான அளவு விரிவுரை தருகின்றார். இவருக்குப்பின் வந்த நச்சினார்க்கினியர் தம் கல்வித்திறனைக்காட்டிப் புலமை மாண்பு வெளிப்படும் வகையில் பாயிரத்தையும் முதற் சூத்திரத்தையும் ஆராய்ந்து விளக்குகின்றார். ஆனால், இவர் தொல்காப்பியரையும் அகத்தியரையும் பற்றி, கட்டுக்கதை ஒன்றினை நுழைத்துக் குழப்பத்தை உண்டாக்குகின்றார். இலக்கிய வரலாற்றில், உண்மையை நெருங்கமுடியாதபடி இக்கதை தடை செய்கின்றது.

பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றிய சிவஞான முனிவர் தமது இலக்கண ஆராய்ச்சி வன்மையை - புலமைத் திறனை - கல்விப்பரப்பை வெளிப்படுத்துதற்கு உரிய இடமாகத்

தொல்காப்பியப் பாயிரத்தையும், முதற் சூத்திரத்தையும் தேர்ந்தெடுத்தார்; அங்கே தம் ஆராய்ச்சிக் கருத்துக்களை அள்ளிச் சொரிந்தார்; இலக்கணப் புலமையைக் கொட்டி நிரப்பினார்; பல வேறு துறைகளில் தமக்கு இருந்த அரும்பெரும் திறங்களை யெல்லாம் வெளிக்காட்டினார். இவரது ஆராய்ச்சி, இலக்கண ஆராய்ச்சியாளருக்குப் பெரும் புதையல்; இலக்கணப் பயிற்சி பெற விரும்புவர்க்குத் தக்கதோர் படைக்கலக் கொட்டில்; மொழித்திறம் முட்டறுக்க எண்ணுவோர்க்குச் சிறந்த பயிற்சிக்கூடம்.

சிவஞான முனிவர் இளம்பூரணரையும் நச்சினார்க் கினியரையும் ஏனைய உரையாசிரியர்களையும் நன்கு புரிந்து கொண்டு, அவர்களின் அடி நெஞ்சத்தில் தோன்றி வெளிவரும் பலவகையான ஒலிகளையும் தெளிவாக உணர்ந்து விளக்கவுரை எழுதுகின்றார். எத்தனையோ காலமாக இலக்கணத்தில் தொடுவாரின்றிக் கிடந்த மேடுகளை — தகர்க்க முடியாத பெரும்பாறைகளை இவரே துணிவுடன் அணுகித் தகர்த்து எறிந்து வழிகாட்டுகின்றார்.

இருபதாம் நூற்றாண்டில் அரசஞ்சண்முகனார் இலக்கண ஆராய்ச்சிப் பரம்பரை தம் காலத்திலும் வாழ்கிறது என்பதை நினைவூட்டுவதுபோல. ‘சண்முக விருத்தி’ என்ற நூலை இயற்றினார். இளம்பூரணர், நச்சினார்க்கினியர், சிவஞான முனிவர் ஆகிய மூவர் உரையையும் கடந்து சென்று மேலும் சில ஆராய்ச்சித் துறைகளை வகுத்துத் தந்தார்.

‘சண்முக விருத்திக்கும் மறுப்பு எழுந்தது. செந்தில்நாதன் என்பவர் சண்முக விருத்தியில் உள்ள சில கொள்கைகளை மறுத்துள்ளார்.

இந்த ஆராய்ச்சி உரைகளையும் பேராசிரியரின் பாயிர வுரையையும் தொகுத்து ‘உரைவளம்’ வெளிவந்துள்ளது. அதனைச் செப்பாகவும் பல அரிய செய்திகளுடனும் உருவாக்கியவர் ஆ. சிவலிங்கனார். வெளியிட்டது சென்னை உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்.

## சொல் இலக்கண ஆராய்ச்சி

சேனாவரையருக்குப் பின், சொல் இலக்கண ஆராய்ச்சி மிக விரிவாக நடைபெற்றுள்ளது. சொல்லதிகாரத்திற்கு எழுந்த பல உரைகள், இந்த ஆராய்ச்சியினைத் தெளிவாக விளக்கும். வடமொழி இலக்கணக் கருத்து, சொல் இலக்கண ஆராய்ச்சி யாளரால் பெரிதும் வரவேற்கப்பட்டுள்ளது. இந்த ஆராய்ச்சிக்கு வடமொழி இலக்கண அறிவு இன்றியமையாதது என்பதை இவ்வுரையாசிரியர்கள் வற்புறுத்துகின்றனர். சொல்லதிகாரத்திற்கு

இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடர், பழையவுரையாசிரியர் ஆகிய அறுவர் உரைகண்டுள்ளனர்.

சொல் இலக்கண ஆராய்ச்சி, தொல்காப்பியம் சொல்லதிகாரத்திற்கு உரை காண்பதோடு அமையாது, தனியாகவும் வளரத் தொடங்கியது. 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சாமிநாத தேசிகர், முன்னோர் நூல்களிலும் உரைகளிலும் சிதறிக்கிடக்கும் இலக்கணக் கருத்துக்களைத் தொகுத்து ஆராய்ந்து 'இலக்கணக் கொத்து' என்ற பெயருடன் சூத்திரமும் உரையுமாக ஓர் இலக்கண ஆராய்ச்சி நூல் வெளியிட்டார். சுப்பிரமணிய தீட்சிதர் 'பிரயோக விவேகம்' நூலில், சொல் இலக்கண ஆராய்ச்சியில் விரிவாக ஈடுபட்டுச் சூத்திரமும் உரையும் இயற்றினார். சிவஞான முனிவரின் இலக்கண விளக்கச் சூறாவளியும் சொல் இலக்கண ஆராய்ச்சியில் மிகுதியாக ஈடுபடுகின்றது.

### புலமைப்போர்

இருபதாம் நூற்றாண்டில் இலக்கண ஆராய்ச்சி, புலமைப் போராய் வெளிப்படுகின்றது. ஆகுபெயர் அன்மொழித்தொகை ஆராய்ச்சி, முதற் குறள் ஆராய்ச்சி, துன்னூசி பற்றிய ஆராய்ச்சி ஆகியவை குறிப்பிடத் தக்கவை. இந்த ஆராய்ச்சிகளில் அரசஞ் சண்முகனார், மறைமலை அடிகள், யாழ்ப்பாணத்து இலக்கணச் சாமியார், திருமயிலை சண்முகம் பிள்ளை, சுன்னாகம் குமாரசுவாமிப்பிள்ளை, மாயவரம் சோமசுந்தரம் பிள்ளை ஆகியோர் தம் காலத்தில் வெளிவந்த பத்திரிகைகளில் தம் ஆராய்ச்சிக் கட்டுரைகளை வெளியிட்டனர். அவற்றுள் சில நூல் வடிவம் பெற்றுள்ளன. அவை யாவும் இலக்கண ஆராய்ச்சியாளருக்குப் பெரிதும் பயன்படும்.

## 2. உரை வேற்றுமை

ஒரு நூலுக்குப் பல உரைகள் தோன்றி, அவ்வுரைகள் வேறுபட்டிருப்பதைத் திருக்குறள் உரை வேற்றுமையால் அறியலாம். தொல்காப்பியம் சொல்லதிகாரத்திற்குப் பல உரைகள் இருப்பதால் அவற்றிற்கு உள்ள வேற்றுமையை ஒப்பிட்டு 'உரைவளம்' தோன்றியுள்ளது. இவ்வாறே ஒரு நூலின் பல உரைகளை ஒப்பிடுவதோடு, ஏதேனும் ஒரு சொல், ஏதேனும் ஓர் இலக்கணக் குறிப்பு, ஏதேனும் ஒரு விளக்கம் ஆகியவை பற்றி வெவ்வேறு காலத்தில் தோன்றிய வெவ்வேறு நூலின்

உரையாசிரியர்கள் என்ன என்ன கருதினர் என்பதை அறிந்து இன்புறலாம்.

என்மனார், போற்றி என்ற இரண்டு சொற்களைப்பற்றி உரையாசிரியர்கள் கூறும் இலக்கணக் குறிப்புக்களை ஒப்பிட்டு ஆராய்வது மிகவும் பயனுள்ள பணியாகும். இவ்வாறே போலி எழுத்தைப்பற்றிக் காலந்தோறும் நிலவி வந்த கருத்துக்களைத் தொகுத்து ஆராயலாம். செப்பு வினா வகைகள் பற்றி உரையாசிரியர்கள் கூறும் விளக்கங்கள் சுவையானவை; வேறுபட்டவை.

பொருள்கோள், சார்பு எழுத்துகள், திணை பால் எண் இடம் மரபு செப்பு வினா ஆகியவற்றின் வழுவமைதி, உரிச்சொல் பற்றிய கோட்பாடு ஆகியவற்றைத் தொகுத்து ஆராயலாம்.

ஓர்தல் என்ற சொல்லுக்கு உரையாசிரியர்கள் கூறும் பல்வேறு பொருள்களையும், முந்நீர் என்பதற்குத் தரும் விளக்கத்தையும் காண்போம்.

**திணைத்தாள் அன்ன சிறுபசுங் கால**
**குருகும் உண்டு**

**என்ற** குறுந்தொகைப்பாடலில் ‘கால — குருகு’ என்பதைப் பற்றிய இலக்கணக் கருத்துகளையும் காண்போம்.

**ஓர்தல்**

**இறையனார் களவியல் உரை:** ஓர்ப்பு - ஒரு பொருளை ஆராய்ந்து உணர்தல்.

**பரிமேலழகர்:** அளவைகளானும் பொருந்துமாற்றானும் தெளிய ஆராய்ந்து *(குறள் - 357).*

**நச்சினார்க்கினியர்:** கேள்வி ஓர்க்கும் *(முருகு - 96)* — யாகங்களில் தீங்கு வராதபடி நினையா நிற்கும்.

ஓர்ப்பனள் *(முல்லை - 88)* — கருதினள்.

ஓர்க்கும் *(பெரும் - 183)* — செவி கொடுத்துக் கேட்கும்.

**திருமுருகாற்றுப்படை பழைய உரை:** ஓர்க்கும் *(முருகு - 96)* — திருவுள்ளத்து அடைக்கும்.

**முந்நீர்**

**புறநானூறு பழையவுரை:** ‘யாற்று நீரும் ஊற்று நீரும் மழை நீரும் உடைமையால், கடற்கு முந்நீர் என்று பெயராயிற்று; **அன்றி** **முன்னீர்** என்றோதி நிலத்திற்கு முன்னாகிய நீர் என்றும் உரைப்ப” *(புறம் - 9).*

அடியார்க்கு நல்லார்: "முந்நீர் - கடல்; ஆகுபெயர். ஆற்றுநீர் ஊற்றுநீர் மேனீர் என இவை என்பார்க்கு அற்றன்று; ஆற்று நீர் மேனீர் ஆகலானும் இவ்விரண்டும் இல்வழி ஊற்று நீரும் இன்றாம் ஆதலானும் இவற்றை முந்நீர் என்றல் பொருந்தியது அன்று; முதிய நீர் எனின், 'நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும்' என்பதனால் அதுவும் மேனீர் இன்றி அமையாமையின் ஆகாது; ஆனால் முந்நீர்க்குப் பொருள் யாதோ எனின், முச்செய்கையை உடைய நீர் முந்நீர் என்பது; முச்செய்கை யாவன:

> மண்ணைப் படைத்தலும் மண்ணை அழித்தலும்
> மண்ணைக் காத்தலும் ஆம்.'

(சிலம்பு–17 உள்வரி – 3)

நச்சினார்க்கினியர்: "நிலத்தைப் படைத்தலும் காத்தலும் அழித்தலும் ஆகிய மூன்று தொழிலும் உடைமையின் முந்நீர் ஆகுபெயர் (மூதுரைக் - 75, 6).

**கால — குருகு: இளம்பூரணர்**

> தினைத்தா ளன்ன சிறுபசுங் கால
> ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
> குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே

(குறுந் – 25)

என்புழிச் 'சிறுபசுங்கால' என்று பன்மையாற் கூறி, பின்னைக் 'குருகும் உண்டு' என்று ஒருமையாற் கூறுதல் வழுவாயிற்று; ஆயினும் அமைக என்பது.

**பேராசிரியர்**

'உவவின நாண்மதி' என்றது. "கால குருகு" என்பது போலப் பன்மை ஒருமை மயக்கம் (திருக்கோவை - 108).

**நச்சினார்க்கினியர்**

> தினைத்தா ளன்ன சிறுபசுங் கால
> ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
> குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே

(குறுந் – 25)

எனப்பன்மை சுட்டிய பெயர்ச்சொல், ஒருமையோடு இயைபின்றி இயைதலின், வழுவாய் அமைவதூஉம் கொள்க. 'குருகு' என்பது இயற்பெயராதலின், அதன்கண் பன்மையோடு 'கால' என்பது இயைந்து, காலனவாகிய குருகுகள் என நிற்பின், அஃது 'உண்டு' என்னும் ஒருமைக்கு ஏலாமையின், 'குருகு' என்பது ஒருமையாயே நின்றது ஆதலின், வழுவேயாம்; கள்வன்தான் ஒருவனுமே; வேறு

சிலர் ஆண்டு 'இல்லை' என்று கூறுகின்றாள், 'இரைதேரும் மனக் குறிப்பு உடைமையின் கேளாது; சிறிது கேட்டதாயினும் கொலைசூழ் குருகு ஆதலின், கூறுவதும் செய்யாது; இத்தன்மைத்து ஆயதோர் குருகும் உண்டு' என்று கூறுதலின் உண்டு என்று ஒருமை வாசகத்தால் கூறினார் (சொல் - 461).

## சிவஞான முனிவர்

"யாரும் இல்லை தானே கள்வன்" என்பதனுள் கால என்பது (போல மரபின என்பதும் மரபினை உடைய எனப்) பெயர் எச்சவினைக் குறிப்புச்சொல் என்றலும் ஒன்று. அற்றேல், கால என்புழி அகரம் பால்காட்டும் ஈறு என்றாற்படும் இழுக்கு என்னை எனின், அஃது உண்டு என்னும் ஒருமைச் சொல் கொண்டு முடிதலின் பால் வழுவாய் முடியும் என்க. இவ் உண்டு என்னும் சொல், ஐம்பால் மூவிடத்திற்கும் பொது அன்றோ எனின், அறியாது கடாயினாய்" என்று சிவஞானமுனிவர் வினா எழுப்பி, அதற்குத் தக்க விடைகூறி, உண்டு என்பதனை ஒருமைச் சொல்லே என்று நிலை நாட்டியபின், "அற்றேல், 'கால — குருகு' என்பது பன்மை ஒருமை மயக்கம் எனக் கோடும் எனின், அற்றன்று; "மாடமது வார்சடைய வள்ளலையும் ஒக்கும்" என உயர் திணைக்கண்ணும் பயின்று வருதலின், ஒரு காரணம் இன்றித் திணை மயங்குதல் பொருந்தாமையின் இன்னோ ரன்னவை எல்லாம் பெயரெச்சவினைக் குறிப்பே ஆம் என்க". (சூத்திர விருத்தி)

### எச்சங்கள்

எச்சங்களைப்பற்றி, உரையாசிரியர்கள் கொண்டுள்ள பலவேறு கருத்துக்களை, தமிழறிஞர் ஆர். வேங்கடாசலம் பிள்ளை கரந்தைக் கட்டுரைகள் என்னும் நூலில் (பக். 21-30) விரிவாகத் தந்துள்ளார்.

## இலக்கணக் கொத்து உரையில்

இலக்கணக் கொத்து உரை, சில நூற்பாக்களுக்கு ஏற்பட்டுள்ள பலவேறு உரை விளக்கங்களை எடுத்துக் காட்டுகின்றது (பாயிரவியல் - 6).

**நூலா சிரியர் கருத்தினை நோக்காது**
**ஒருசூத் திரத்திற்கு ஒவ்வோர் ஆசிரியர்**
**ஒவ்வொரு மதமாய் உரைவகுக் குவரே**

**— பாயிரம் 6**

எழுத்தினுள் உயிர்மெய்யை,

உம்மைத் தொகை என்றும்
அன்மொழித் தொகை என்றும்
வேற்றுமைத் தொகை என்றும்

உரைப்பர்.

சொல்லினுள் மக்கட் சுட்டை

அன்மொழித் தொகை என்றும்
இரு பெயரொட்டு ஆகுபெயர் என்றும்
பின்மொழி ஆகுபெயர்ப் பண்புத்தொகை என்றும்

உரைப்பர்.

பொருளினுள் (188)

**வேண்டிய கல்வி யாண்டுமூன்று இறவாது**

என்புழி மூன்றினை,

பதிபசு பாசம் என்றும்
தத்துவ மசி வாக்கியம் என்றும்
அறம் பொருள் இன்பம் என்றும்
எழுத்துச் சொற்பொருள் என்றும்
ஆண்டு என்றும்

உரைப்பர்.

இவை ஒரு சூத்திரத்திற்கே பலரும் பல மதமாய் உரைத்தல்.

## ஆகுபெயரும் அன்மொழித் தொகையும்

ஆகுபெயரும் அன்மொழித் தொகையும் இலக்கண ஆய்வில் பல மாறுபட்ட சிந்தனைகளை எழுப்பியுள்ளன. அவற்றைத் தொகுத்துக் காண்போம்.

"அணங்கு கொல்" என்னும் குறளில் வந்துள்ள கனங்குழை என்பதைப் பரிமேலழகர் ஆகுபெயர் என்றார்.

சிவஞான முனிவர் இதனை அன்மொழித் தொகை என்று கூறுகின்றார். இவர், பரிமேலழகர் கருத்தை மறுத்து, இலக்கண விளக்கச் சூறாவளி மறுப்புரையில் விளக்கம் தருகின்றார்.

திருக்கோவையாரில் (282), வருகின்ற 'பாயின மேகலை' என்ற சொற்கள் ஒரு சொல் நீர்மைப்படுதலின் ஆகுபெயர் என்று கூறினார் பேராசிரியர்.

பேராசிரியர் கருத்தைப் பிரயோக விவேகநூல் (சமாச படலம் - 7) ஆசிரியர், மறுக்கின்றார். பெயரெச்சம் நிறுத்த சொல்லும் குறித்து வரு கிளவியும் ஆகப் புணர்ந்தது நோக்காமையின் அவ்வாறு உரைத்தார் என்று மறுத்து, அதனை அன்மொழித் தொகை என்று கூறுகின்றார்.

சிலப்பதிகாரத்தில் வரும், 'அருந்திறல் பிரிந்த அயோத்தி போல' *(13:65)* என்பதில், அருந்திறல் என்பதை அன்மொழித் தொகை என்கின்றார், அடியார்க்கு நல்லார்.

ஆகுபெயர், அன்மொழித்தொகை ஆய்வு அறிஞர்களிடையே எழுப்பியுள்ள கருத்து வேற்றுமையை இவை காட்டுகின்றன.*

# 3. மேற்கோள் பாடல்கள்

சங்க நூல்களைத் தொகுக்க முயன்ற காலத்தில், பல ஆயிரம் பாடல்கள் அகம், புறம் பற்றியவை கிடைத்திருக்கக்கூடும். அவற்றை எல்லாம் திரட்டியபின் அகம், புறம் என்று பாகுபடுத்தி, அகவல், ஆசிரியம், கலி, பரிபாட்டு என்று வகைப்படுத்தி, அடிவரையறை நோக்கிப் பிரித்துத் தொகுத்தனர். அவ்வாறு தொகுக்கும்போது நானூறு என்ற எண்ணில் தொகுத்தவர்களுக்கு நாட்டம் பிறந்தது. அதனால் அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை என்ற நான்கு தொகை நூல்களிலும் நானூறு நானூறு பாடல்கள் அமைந்திருப்பது சிந்தித்தற்கு உரியது. புறப்பொருள் பற்றிய பாடல்கள் நானூறு மட்டுமே கிடைத்தன என்று எண்ண முடியாது. குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகிய தொகை நூல்களில் அந்த அந்த நூல்களுக்குரிய பாடல்கள் நானூறு மட்டுமே கிடைத்தன என்று கருத முடியாது. நானூற்றுக்கு மேற்பட்ட பாடல்கள் கிடைத்திருக்கக்கூடும். அவற்றில் பொருள்சிறப்பு இல்லாதவை என்று சிலவற்றை ஒதுக்கி இருப்பார்கள்; ஒரே கருத்து உடையன்வ என்று சிலவற்றைப் புறக்கணித்திருப்பார்கள்; மரபுக்கு மாறானவை என்று சிலவற்றை விட்டுவிட்டிருப்பார்கள்.

சங்க இலக்கியத் தொகை நூல்களில் இடம் பெறாத எத்தனையோ பாடல்களை நாம் இழந்துவிட்டோமே என்ற ஏக்கம் நெஞ்சத்தில் எழுகின்றது. ஆனால் அத்தனை பாடல்களும் மறைந்துவிடவில்லை. கால வெள்ளத்தில் நீந்தி ஒதுங்கி வந்து, சில பாடல்கள் வாழ்வு பெற்றுவிட்டன. உரையாசிரியர்களின் காலம்வரை வாய்மொழியாக — செவி வாயிலாக வாழ்ந்து வந்த பாடல்கள், உரைகளில் மேற்கோள்களாய் இடம் பெற்றன. உரையாசிரியர், தமக்கு முன் வழங்கி வந்த பழம் பாடல்களையும் தம் காலத்தில் தோன்றிய புதுப் பாடல்களையும் தம் உரைகளில் எடுத்துக்காட்டியுள்ளனர்.

* இலக்கணத்தில் எழிற்கற்பனைகள் — பக். 70 ந.ரா. முருகவேள்.

உரையாசிரியர்களின் உரையில் இடம் பெறும் பாடல்கள் பலவகை நோக்கத்துடன் சேர்க்கப்பட்டுள்ளன. அப் பாடல்களில் சில மறைந்து போன தமிழ்நூல்களுக்கு உரியவை. நூல் மறைந்து போனாலும் அந்நூல்களுக்குரிய பாடல்களைக் காத்து நல்கிய பெருமை உரையாசிரியர்களுக்கு உண்டு. அவர்கள் திரட்டித் தந்துள்ள பாடல்கள் சிறந்த கவிதைக் களஞ்சியமாய் உள்ளன. கற்கும்தோறும் சுவை நல்கும் கற்கண்டுக் கவிதைகளாய்ப் பல உள்ளன. உரையாசிரியர்களின் காலத்து இலக்கியமும், தனிப்பாடல்களும் உரைகளில் இடம் பெறுவதால் அக்கால இலக்கியங்களின் இயல்புபற்றி அறிய முடிகின்றது. இன்னும் சில பாடல்கள் வரலாற்று நிகழ்ச்சியைக் கூறுவனவாய் உள்ளன. பகைமன்னர்களின் படையெடுப்பு, முடிசூட்டுவிழா, மன்னர்களின் கொடைப்பண்பு, தலை நகரங்களின் மாண்பு ஆகியவை பற்றிய பாடல்கள் பல கிடைக்கின்றன. யாப்பருங்கல விருத்தியில் பல்லவ மன்னர்களைப் பற்றிய பாடல்கள் இடம் பெற்றுள்ளன. வீரசோழியத்தில் வீரராசேந்திரனைப் பற்றிய பாடல்கள் உள்ளன. தண்டியலங்காரத்தில் குலோத்துங்க சோழனைப் பற்றிய பாடல்களைக் காணலாம்.

உரையாசிரியர்கள் தம் சமயக் கருத்துக்களைப் பரப்பவும் உரைகளைக் கையாண்டனர். யாப்பருங்கல விருத்தியுரை, யாப்பருங்கலக் காரிகை உரை, நேமிநாத உரை, நன்னூல் மயிலைநாதர் உரை ஆகியவற்றில் சமணத்தைப் போற்றிப் பரப்பும் பாடல்களைக் காணலாம். உதாரணம் காட்டும் சிறுசிறு தொடர்களையும் சமண சமயச் சார்புடையவையாய் அமைத்துள்ளனர். அருகனைப் பரவும் துதிப்பாடல்களை எடுத்துக்காட்டியுள்ளனர். வீரசோழியத்தில் பெருந்தேவனார் புத்ததேவனைப் பாடும் பாடல்கள் பலவற்றை எடுத்துக் காட்டியுள்ளார். பிற்காலத்தில் நன்னூலுக்கு உரை எழுதிய சங்கர நமச்சிவாயரும் சிவஞான முனிவரும் சைவ சமயத்திற்கு ஏற்ற பல உதாரணங்களைக் காட்டித் தம் சமயத்தைப் பரப்பினர். கல்விகற்கும் மாணவர் உள்ளத்திலேயே சமயக்கருத்தை விதைத்துச் சமயப் பயிர் வளர்க்க உரையாசிரியர்கள் முயன்று வந்தனர். அவர்கள் நோக்கம் இனிது நிறைவேறிற்று. காரிகை கற்பவர் சமணச் சார்புடைய உதாரணச் செய்யுட்களை மனப்பாடம் செய்யவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. பிற்காலத்தில், காரிகை கற்கச் சைவரும் வைணவரும் காரிகை கூறும் யாப்புக்கு ஏற்ற சைவ வைணவ சமயச் சார்புடைய பாடல்களை இயற்றும் முயற்சியில் ஈடுபட்டனர். இத்தகைய முயற்சியின் விளைவால் சிதம்பரச் செய்யுட்கோவையும், திரு

அலங்கல் திரட்டும் மாறன் அலங்காரமும் பா-பாவினமும் தோன்றலாயின.

உரைகளில் அமைக்கப்படும் உதாரணச் செய்யுட்கள் பலவகைச் சிறப்புடையவை; சிறந்த கவிதைக்கு உரிய தன்மைகள் யாவற்றையும் கொண்டவை. சிறந்த கவிதைக்கு உரிய இயல்புகளைப் பின்வருமாறு வகைப்படுத்திக் கூறலாம்.

1. ஓரிரு முறை படிக்கும்போது, கேட்டவுடனே நெஞ்சத்தில் ஆழப் பதிந்து இடம்பெறும். நம்மை அறியாமலே நம் வாய் அதனை முணுமுணுக்கத் தொடங்கும்; நெஞ்சில் இடம் பெற்று, மனப்பாடமாகிவிடும். ஆண்டுகள் பல சென்றாலும் அழியாமல் இருக்கும்.

2. எளிமையும் தெளிவும் உடையதாய் இருக்கும். கேட்டவுடனே பொருளை உணர்த்தும்; எவ்விதக் குழப்பத்தையும் உண்டாக்காமல் தெளிவாய் விளங்கும்.

3. இதுவரை நம் உள்ளத்தில் தோன்றாத ஏதோ ஒரு வகையான புதிய உணர்வை உண்டாக்கும். அந்தப் புதிய உணர்வு, அக்கவிதையை எப்போது நினைத்தாலும் மிகுதிப்பட்டு மேன்மேலும் வளரும். அறிவும் உணர்வும் வளர வளர அப்பாடல் தரும் புதிய உணர்வும் வளர்ந்து கொண்டே வரும்.

4. சிறந்த கவிதை ஒன்றைக் கற்கும்போது, அது வேறொரு கவிதையை நினைவூட்டுவதில்லை. 'அதுபோன்று இது உள்ளதே' என்று எண்ணவோ, இதைவிடச் 'சிறப்பாக வேறு சில கவிதைகள் உள்ளன' என்ன நினைக்கவோ முடிவதில்லை.

மலைபடுகடாத்துள், 'சேறு சிறந்து உண்ணுநர்ந் தடுத்தன தேமா' என்ற அடிக்கு நச்சினார்க்கினியர், "பழமாக்கள் (மாம்பழங்கள்) சாறுமிக்கு உண்பாரை வேறொன்றிற் செல்லவொட்டாமல் தடுத்துக்கொண்டன" என்று எழுதும் உரை இங்கே கருதத்தக்கது.

சிறந்த பொருள், தன்னை நுகரும்போது மற்றொன்றினை நுகரவொட்டாமல் நினைக்கவும் விடாமல் தடுக்கும். 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்றவாறு சிறந்த கவிதையில் ஆழ்ந்தவர்கள் வேறு ஒன்றினை நினைக்கமாட்டார்கள்.

இத்தகைய சிறந்த இயல்புகளை உரையாசிரியர்களின் மேற்கோள் பாடல்களில் காணலாம். அதனால்தான் அவை எல்லோராலும் பாராட்டப்பட்டு வருகின்றன.

மு.ரா. கந்தசாமிக் கவிராயர், "பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், கம்பராமாயணம் ஆகியவற்றில் உள்ள

கவிகளையும், மற்றும் பல தனிக் கவிகளையும் மனப்பாடம் செய்யத் தொடங்கினால் வெகு சுலபத்தில் பாடமாகின்றமைக்குக் காரணம் அவை கவிதா சக்தி மிகுதியால் இயற்றப் பட்டமையேயாம். இதனால்தான், பண்டு தோன்றியனவும் இன்று தோன்றுகின்றனவுமான நூல்களுள், தனிக்கவிகளில் ஒரு சில யாவராலும் பாராட்டப்பெறுதலும், ஒருசில அங்ஙனம் பாராட்டப்படாது அபிமானம் வைத்த சிலரால் மட்டும் பாதுகாக்கப்படுதலும் பெற்றுள்ளமை தெளியத்தகும்"* என்று கூறியுள்ள கருத்துக்கள் உரையாசிரியர்கள் தம் உரைகளில் காட்டும் மேற்கோள் பாடல்களுக்கும் பொருந்தும்.

உரையாசிரியர்கள் மேற்கோள் காட்டிய பாடல்கள் மூன்று வகையானவை.

1. பெரிய நூல்களை — பல ஆயிரம் பாடல்கள் கொண்ட நூல்களைக் கற்றுத் தேர்ந்து அவற்றிலிருந்து மேற்கோள் காட்டப்பட்டவை.

2. தமக்கு முன்னும், தம் காலத்திலும் வழங்கி வந்த சுவைமிகுந்த தனிப்பாடல்கள்.

3. உரைச்செய்யுட்கள் என்ற பெயருடன் தம் கவிதைத் திறனை வெளிப்படுத்தி இயற்றியவை.

இம் மூவகையான பாடல்களும் மேற்கோளாக உரைகளில் இடம் பெறுகின்றன.

**முதல் வகை**

பழங்கால இலக்கியங்களைக் கற்றுத் தமிழ்ச் சுவையில் மூழ்கிய புலவர்கள்,

**இருந்தமிழே ! உன்னால் இருந்தேன்; இமையோர்**
**விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்**

**— தமிழ்விடு தூது**

**ஆயுந் தொறும் இன்பம் தரும் தமிழ்**

**— கச்சியப்ப முனிவர்**

**உள்ளுதோறு உள்ளுதோறு உணாஅமுது**
**உறைக்கும் திருமுத்தமிழ்**

**— கல்லாடம்**

என்றெல்லாம் தம் அனுபவத்தை வெளியிட்டுள்ளனர்.

* **தமிழ்க் கட்டுரைக் களஞ்சியம் (1955), பக்கம் – 57, 58.**

இவ்வாறே உரையாசிரியர்களும் அமுதத் தமிழ்க் கடலில் மூழ்கி இன்புற்று, தாம் சுவைத்த பாடல்களைத் திரட்டி எடுத்துத் தருகின்றனர். அவர்கள் தரும் மேற்கோள் செய்யுட்கள் அவர்களுடைய செழுமையான அறிவு நுட்பத்தைப் புலப் படுத்துவதுடன், அவர்களின் தமிழார்வச் சிறப்பையும் நமக்கு அறிவிக்கின்றன.

சிறந்த பாடல்களை மேற்கோள் தருபவர்கள், பல சிறந்த நூல்களில் மூழ்கித் திளைத்திருக்க வேண்டும்; கற்றவற்றை எல்லாம் நினைவில் நிலைபெறுத்த வேண்டும்; அவற்றை ஆராய்ச்சித் திறனுடன் வெளியிடவேண்டும்; தேவையான இடத்தில் தக்க நேரத்தில் ஏற்ற பாடல் வந்து துணைபுரிய வேண்டும். இத்தகைய அரிய திறன்கள் பல வாய்க்கப் பெற்ற உரையாசிரியர்கள் காட்டிய மேற்கோள் பாடல்கள் யாவும், மிகச் சிறந்தவையாய் உள்ளன.

### இரண்டாம் வகை

“மொழி என்னும் கட்டிடத்துக்கு இலக்கணம் அடித்தளம் என்றால், காப்பியங்கள் தூண் என்றால், நாடக நூல்கள் மேன்மாடங்கள் என்றால், நாடோடிப் பாடல்கள் காற்றுவரும் காலதர்கள் என்றால், தனிப்பாடல்கள் படிக்கட்டுக்கள் என்று சொல்லவேண்டும்”.*

ஒவ்வொரு தனிப்பாடலும் சிறந்ததோர் சிறுகதையாகும். சிறுகதைக்கு உரிய கரு மிகச் சிறப்பாய்ச் சிறு கதையில் அமைந்துள்ளது. ஆதலின் கற்பவரின் கற்பனைத் திறனை வளர்த்து இன்பமூட்டும் பணியைத் தனிப்பாடல்கள் செய்து வருகின்றன. அத்தகைய தனிப்பாடல்கள் பலவற்றை உரையாசிரியர்கள் தம் உரைகளில் எடுத்துக்கூறி, இலக்கியப் பணியாற்றி வந்துள்ளனர்.

### மூன்றாம் வகை

உரையாசிரியர்கள் தாமே இயற்றிய செய்யுட்களும் உரைகளில் இடம் பெறுகின்றன. உரைச் சூத்திரம், உரைச் செய்யுள் ஆகியவை உரையாசிரியர்கள் இயற்றியவையாம். இரண்டொரு செய்யுட்களையே அவர்கள் இயற்றி இருப்பினும் அவை சிறப்பு வாய்ந்தவை என்பதில் ஐயமில்லை.

டாக்டர் உ.வே.சா. “ஒரு புலவனுடைய பெருமையை ஆயிரக்கணக்கான பாடல்களால் அறிந்து கொள்ள வேண்டும்

* எந்தச் சிலம்பு (1964) பக்கம் 110. டாக்டர் வ.சுப. மாணிக்கம்.

2.44

என்பதில்லை. உண்மைக் கவித்துவம் என்பது ஒரு பாட்டிலும் பிரகாசிக்கும். ஓர் அடியிலும் புலப்படும்" என்பர்.[1]

## மேற்கோள் காட்டும் முறை

உரையாசிரியர்கள், மேற்கோள் காட்டும் முறை பல வகையாய் உள்ளன. இளம்பூரணர் பல பெரிய பாடல்களை முழுமையாகத் தருவார். அவற்றில் இலக்கணத்திற்குப் பொருத்தமான பகுதியை நாமே தேடிக் காணவேண்டும். நச்சினார்க்கினியர், பேராசிரியர் ஆகியோர் மேற்கோள் பாடல்களைத் தேவையான அளவு துண்டித்து உரிய இடங்களில் காட்டிச் செல்வர்; முதல் அடி, முதற்சொல் காட்டி 'என்ற பாட்டினுள் காண்க' என்றும் கூறுவர்; 'இதற்கு, முன்னர் உதாரணம் கூறினோம்; பின்னர்க் காட்டுதும்' என்றும் எழுதுவர். நச்சினார்க்கினியர், தாம் மேற்கோள் காட்டும் பாடல்கள் இன்ன நூலைச் சார்ந்தவை என்றோ, இன்ன ஆசிரியர் பாடியவை என்றோ பெரும்பாலும் சுட்டுவதில்லை. ஆதலின் அவர் உரையில் இடம் விளங்கா மேற்கோள்கள் மிகுதியாக உள்ளன. அடியார்க்கு நல்லார் தாம் மேற்கோளாகக் காட்டும் பாடல் எந்த நூலைச் சேர்ந்தது என்று சுட்டியே செல்வார். பாடலின் ஆசிரியரையும் மறவாமல் கூறுவார். இவ்வாறு ஒவ்வொருவரிடமும் ஒவ்வோர் இயல்பு காணப்படுகின்றது.

## மேற்கோள் காட்டாத நூல்கள்

உரையாசிரியர்கள் தம் காலத்தில் தோன்றிய புதிய நூல்களிலிருந்தும், சங்க காலத்திற்குப்பின் தோன்றிய இலங்கியங்களிலிருந்தும் மேற்கோள் தருவதில்லை. இதைப்பற்றி அறிஞர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார், "நாயன்மார்கள், ஆழ்வார்கள் எழுதிய பாடல்கள் பொதுமக்கள் உள்ளத்தைக் கவர்ந்தாலும் பழைய இக்கண உரையாசிரியர்கள் பெரும்பாலோர் இவற்றைப் பற்றியதோர் இருட்டடைப்பினை விளைத்திருக்கக் காண்கிறோம். கம்பனும் இந்த இருட்டடைப்புக்கு உட்பட்டே உள்ளான். திருப்புகழையோ, தாயுமானவரையோ பின்வந்த உரையாசிரியர்கள் எடுத்துக்காட்டக் காணோம்! சிலப்பதிகாரத்தைக் கோவலன் கதை எனவும், இராமாயணத்தை இராமன் கதை எனவும் எள்ளி நகையாடும் மனப்பான்மையும் அங்குக் காண்கிறோம்"[2] என்று கூறுகின்றார்.

இவ்வாறு புறக்கணிக்கக் காரணம் என்ன?

1. என் சரிதம் (1950) பக்கம் 338.
2. கலைக்களஞ்சியம் 5, பக்கம் 492.

### முதற் காரணம்

"தொல்காப்பியத்திற்கும் சங்கப்பனுவல்கட்கும் உரையாசிரியர்கள் பெரும்பாலும் பிற்கால நூல்களிலிருந்து மேற்கோள்கள் தருவதில்லை. பழந்தமிழ் நூல்களை அவற்றிற்குரிய பெருமையோடு பரப்ப விரும்பினார்கள் உரையாசிரியர்கள் என்ற நெறியை இதனால் அறிகின்றோம்"[1].

### இரண்டாவது காரணம்

பழைய இலக்கியங்கள் மரபு பிறழாதவை என்ற எண்ணம் உரையாசிரியர்களிடம் இருந்தது. பிற்காலத்தில் தோன்றிய இலக்கியங்களில் பழைய மரபு காணப்படவில்லை. எனவே பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களுக்கு உரை கண்டவர்கள் அவற்றிற்கு ஏற்ற, அவற்றோடு ஒத்த பழைய நூல்களிலிருந்தே மேற்கோள் காட்ட வேண்டியதாயிற்று.

### மூன்றாவது காரணம்

"பொதுமக்கள் இலக்கியம் என்பது தமிழில் தொடர்ந்து விளங்கிக்கொண்டே வந்துள்ளது. ஆனால், கற்றோரது இலக்கியமென ஒருசில எழுந்து பொதுமக்கட்கும் கற்றோர்க்கும் இடையே ஒரு பெரிய பிளவினை ஏற்படுத்தியது"[2] பொதுமக்களின் பாராட்டுதலைப் பெற்ற புதுவகை இலக்கியம் கற்றறிந்தவர்களால் எளிதில் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. இதனால் உரையாசிரியர்கள் பிற்காலத்தில் எழுந்த பொது மக்களால் பாராட்டப்பெற்ற பல புதுவகை இலக்கியங்களி லிருந்து மேற்கோள் காட்டவில்லை.

### நான்காவது காரணம்

சமய வேறுபாடு காரணமாய்ச் சில நூல்கள், மேற்கோள் காட்டப் பெறாமல் புறக்கணிக்கப்பட்டன. தேவாரம், திருவாசகம், ஆழ்வார் பாடல்கள் ஆகியவை தோன்றியபோது, அவற்றை மக்கள் மிக ஆர்வத்தோடு கேட்ட காலத்தில் பல சமண பௌத்த சமயப் புலவர்கள் இருந்தனர். அவர்கள் தம்தம் சமயச் சார்பான நூல்களிலிருந்தே மேற்கோள் காட்டினர். யாப்பருங்கல விருத்தியுரை, காரிகை உரை, நேமிநாதவுரை, வீரசோழிய உரை, நன்னூல் மயிலை நாதர் உரை ஆகியவை நாயன்மார், ஆழ்வார் ஆகியவர்களின் காலத்திற்குப்பின் தோன்றியவை என்பதையும்; அவர்கள் பாடல்களை இவ்வுரை

1. எந்தச் சிலம்பு (1964) பக்கம் – 76.
2. கலைக் களஞ்சியம் 5 (பக்கம் 492) தெ. பொ. ம

நூல்கள் மேற்கோள் காட்டவில்லை என்பதையும் இங்கே நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

யாப்பருங்கல விருத்தியுரை (93 சூத்திர உரை),

**கோழியும் கூவின குக்கில் அழைத்தன**
**தாழியுள் நீலத் தடங்கணீர் போதுமினோ**
**ஆழிசூழ் வையத்து அறிவன் அடியேத்தி**
**கூழை நனையக் குடைந்தும், குளிர்புனல்**
**ஊழியுள் மன்னுவோம் என்றேலோர் எம்பாவாய்**

என்ற பாடலை மேற்கோளாகக் காட்டியதே ஒழியத் திருப்பாவையிலிருந்தோ, திருவெம்பாவையிலிருந்தோ மேற்கோள் காட்டவில்லை.

இவ்வாறே நாலாயிர திவ்வியப்பிரபந்த உரையாசிரியர்கள் சைவ சமயப் பாடல்களைப் புறக்கணித்தனர். சைவ உரையாசிரியர்களான சங்கர நமச்சிவாயர் போன்றோர் வைணவப் பாடல்களைப் புறக்கணித்தனர்.

இக்காரணங்களால், சங்க காலத்திற்குப் பின் தோன்றிய பல இலக்கியங்கள் உரையாசிரியர்களின் உரையில் மேற்கோள்களாக இடம் பெறவில்லை.

### ஐந்தாவது காரணம்

காலத்திற்குக் காலம் மாறிவந்த அரசியல் சூழல், உரையாசிரியர்களை மேற்கோள் காட்டுவதில் கட்டுப்படுத்தியது என்னலாம். தத்தம் காலத்தில் அரசோச்சும் அரசர்களின் ஆதரவை உரையாசிரியர்களும் நாடினர்; பொன்னும் பொருளும் நிலமும் பரிசாகப் பெற்றனர். ஆதலின், தம் காலத்து மன்னனைப் புகழும் பாடல்களை அல்லது அவன் விரும்பும் இலக்கியத்தை மேற்கோள்களாகக் காட்டினர்.

யாப்பருங்கல விருத்தியுரை பல்லவ மன்னரைப் பற்றியும், வீரசோழியவுரை வீரராசேந்திரனைப் பற்றியும், தண்டியலங்கார வுரை குலோத்துங்க சோழனைப் பற்றியும், நன்னூல் மயிலைநாதர் உரை சியகங்கனைப் பற்றியும் பலப்பல உதாரணத் தொடர்களையும், மேற்கோள் பாடல்களையும் காட்டியுள்ளன. களவியலுரை, பாண்டிக்கோவையிலிருந்து பல பாடல்களைத் தந்துள்ளது.

### மேற்கோள் காட்டிய நூல்கள்

உரையாசிரியர்கள் மேற்கோள் காட்டிய நூல்களை இனி ஆராய்வோம்: உரைகளில் மேற்கோள்களாகக் காட்டப் பெற்ற நூல்களை உரையாசிரியர்களின் கால வரிசைப்படி நோக்கினால்

ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு வகையான இலக்கியங்களுக்குச் செல்வாக்கு இருந்தது என்பது விளங்கும். காலச்சூழலே அன்றி அரசியல் சார்பும், நூலாசிரியர் சமயும் முதலிய அகச்சார்பும் மேற்கோள் நூல்களின்மீது ஆதிக்கம் செலுத்தின.

பழந்தமிழ் இலக்கியச் செல்வங்களாகிய எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றை எல்லா உரையாசிரியர்களும் மேற்கோள் காட்டுகின்றனர். எட்டுத்தொகையுள் குறுந்தொகைப் பாடல்களே மிகப்பல உரையாசிரியர்களால் மிகுதியான இடங்களில் மேற்கோள்களாகக் காட்டப் பெற்றுள்ளன. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் எல்லா நூல்களும் மேற்கோளாகக் காட்டப்பெற்றுள்ளன. அவற்றுள் திருக்குறட் பாக்களே எண்ணற்ற உரையாசிரியர்களால் காலந்தோறும் மேற்கோள் காட்டப்பெற்றுள்ளன. திருக்குறளுக்கு அடுத்த படியாக நாலடியார் செய்யுள்கள் மிகுதியாக மேற்கோளாக ஆளப்பட்டுள்ளன.

பத்துப்பாட்டு 500 இடங்களில் மேற்கோளாக வந்துள்ளது. அவற்றுள் திருமுருகாற்றுப்படை முதலிடம் பெறுகின்றது. அடுத்து மலைபடுகடாம் பெரும்பாணாற்றுப் படை நெடுநல்வாடை இடம் பெறுகின்றன. எட்டுத்தொகை நூல்களில் குறுந்தொகையில் உள்ள 250 பாடல்கள் 1000 இடங்களில் காட்டப்படுகின்றன. கலியும் புறமும் அடுத்த இடத்தைப் பெறுகின்றன. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் குறளும் நாலடியாரும் சிறப்பிடம் பெறுகின்றன. 721 குறள்கள் 2500 இடங்களிலும் நாலடியார் செய்யுட்கள் 300 இடங்களிலும் வந்துள்ளன.*

இவ்வாறு மேற்கோள்களாகக் காட்டப்பெற்ற செய்யுள்கள் புதிய விளக்கங்களைப் பெற்றுள்ளன; நல்ல பாட வேறுபாடு களைப் பெற்றுச் சிறப்படைந்துள்ளன; சிறந்த பாடத்துடன் தெளிவாய் உள்ளன. அப்பாடல்களுக்கு உரையாசிரியர்கள் தந்த விளக்கம், அவற்றிற்கு உரை கண்ட பிற்கால உரையாசிரியர் களுக்குப் பெரிதும் உதவி செய்தன.

பெருங்காப்பியங்களில், சீவக சிந்தாமணிப் பாடல்கள் பல, உரையாசிரியர்கள் பலரால் மேற்கோள்களாகக் காட்டப் படுகின்றன. சிலப்பதிகாரமும் மணிமேகலையும் மிகச் சில இடங்களில் மேற்கோளாக உதவுகின்றன. சூளாமணிப் பாடல்கள் இலக்கியச் சுவைக்கும், சொல்லழகிற்கும் உதாரணமாகக் காட்டப் பெறுகின்றன.

* திருக்குறள் மேற்கோள் விளக்கம் – டாக்டர் அ. தாமோதரன், (1970) பக். 45, 46.

பல்லவ மன்னர்களின் காலத்தில் (கி.பி. 600-900) தோன்றிய பக்திப் பாடல்களாகிய ஆழ்வார்களின் பிரபந்தங்களும், தேவாரம், திருவாசகம் முதலியனவும் தாம் தோன்றிய காலத்தில் உரையாசிரியர்களால் மேற்கோள் காட்டப்பெறவில்லை. மூன்று நூற்றாண்டுகளுக்குப் பின்னர், ஏறத்தாழப் பன்னிரண்டாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து பக்திப் பாடல்களில் சில, மேற்கோளாக வருகின்றன. பரிமேலழகர் ஆழ்வார்களின் பாடல்கள் சிலவற்றையும், பேராசிரியர் நச்சினார்க்கினியர், தக்கயாகப்பரணி உரையாசிரியர் ஆகியோர் சைவசமயப் பெரியோர்களாகிய நாயன்மார்களின் பாடல்களிலிருந்து சில பாடல்களையும் தம் உரைகளில் தருகின்றனர். பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில் தோன்றிய சுவாமிநாத தேசிகர், சங்கரநமச்சிவாயர், சிவஞான முனிவர் ஆகியோர் தம் உரைகளில் பல தேவார, திருவாசகச் செய்யுள்களை மேற்கோள் காட்டுகின்றனர். யாப்பருங்கல விருத்தி பொய்கையார் பாடலையும் திருமந்திரப் பாடலையும் மேற்கோள் காட்டுகின்றது.

பக்தி இலக்கியங்களை அடுத்துத் தோன்றிய காப்பியம், புராணங்களிலிருந்து மேற்கோள் தராமல் கதையையும், பாட்டின் கருத்தையும் உரையாசிரியர்கள் கூறிச் செல்கின்றனர். நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர்கள் தம் உரைகளில் பாரதம், இராமாயணம் போன்ற இதிகாசங்களிலிருந்தும் புராணங்களிலிருந்தும் மேற்கோள்களாகப் பல செய்திகளைக் காட்டியுள்ளனர். ஆனால் அவை யாவும் வில்லிபுத்தூரார் இயற்றிய பாரதத்திற்கோ, கம்பர் இயற்றிய இராமாயணத்திற்கோ உரியவை அல்ல. நச்சினார்க்கினியர் காட்டும் பாரத இராமாயணச் செய்யுட்கள் பல்லவர் காலத்தில் தோன்றியவை.

இனி இவற்றை விரிவாகக் காண்போம்.

கம்பர், கவிச்சக்கரவர்த்தி என்ற பெருமைக்குரியவர்; பல ஆயிரம் பாடல்களைப் பாடி இலக்கிய உலகில் அழியாப் புகழ் பெற்றவர்; பெருங்காப்பியம் ஒன்றினை அருளிய பெரும் புலவர். இத்தகைய சிறப்புக்குரியவரின் செய்யுள் மேற்கோளாகக் காட்டப் பெறாமை நமக்கு வியப்பைத் தருகின்றது. "கம்பர் கவிதைகள் உரையாசிரியர்களால் புறக்கணிக்கப்பட்டதேன்?" என்ற வினா அறிஞர்களின் உள்ளத்தில் தோன்றிப் பலமுறை எதிரொலித்த வண்ணமாய் உள்ளது. அவ்வினாவிற்கு உரிய விடையாகக் கீழ்வரும் பகுதி அமைகின்றது.

"கம்பனுக்கு அரசனது ஆதரவு மிக்கிருந்தது என்று சொல்லக்கூடவில்லை. பிற்காலச் சோழர்கள், சைவப்

பற்றுடையவராய், சிவவழிபாட்டில் விஞ்சிநின்றமை அனைவரும் அறிந்ததே. இதனால், கம்பனது இராமாவதாரம் அரசவைப் புலவர்களால் விரும்பி வரவேற்கப்படாதிருந்திருக்கலாம். மேலும் கம்பனது காவியப் போக்கைப் பழைய நெறியையே போற்றும் புலவர்கள் விரைந்து ஏற்றுக் கோடலும் இயலாததே. உரையாசிரியர்கள் கம்பனை மேற்கோளாக எடுத்தாளாமையும் ஆழ்ந்து சிந்தித்தற்கு உரியது. பிற்காலத்தில் சமய உணர்ச்சியாலும் சிலர் கம்பனைப் புறக்கணித்திருத்தல் கூடும்".[1]

விரல்விட்டு எண்ணக்கூடிய இடங்களில் உரையாசிரியர்கள் கம்பரை நினைவூட்டிச் சென்றுள்ளனர். 'கம்பனாரிடைப் பெருமை உளது' என்று வீரசோழியவுரை உதாரணம் கூறுகின்றது (வேற் - 7). பரிமேலழகர் பேராண்மை என்பதற்கு, "இலங்கையர் வேந்தன் போரிடைத் தன்தானை முழுதும்படத் தமியனாய் அகப்பட்டானது நிலைமை நோக்கி, அயோத்தியர் இறை மேற்செல்லாது, 'இன்று போய் நாளை நின் தானையோடு வா' என விட்டாற்போல்வது'' என்று இராமயணத்தை நினைவூட்டு கின்றார் (773). பெரியவாச்சான் பிள்ளை 'ஈக்கள் வண்டொடு' (கம்ப நாட்டுப் படலம்) என்ற பாடலை மேற்கோள் காட்டுகின்றார்.

சைவ உரையாசிரியர்கள் கம்பரைப் புறக்கணித்தனர் என்றால், வைணவ உரையாசிரியர்கள் போற்றாதிருக்கக் காரணம் யாது என்பது விளங்கவில்லை.

பெரியபுராணமும் உரையாசிரியர்களால் மேற்கோளாக ஆளப்பெறவில்லை. பெரியபுராணச் செய்யுள்களைச் சைவ உரையாசிரியர்களும் மேற்கோள் காட்டாமைக்குரிய காரணம் புலப்படவில்லை. திருக்கோவையாருக்கு உரைகண்ட பேராசிரியர் (கோவை - 312) திருக்குறள் உரையாசிரியராகிய பரிமேலழகர் (குறள் -442) ஆகியோர், மன்னனுக்கு உரிய கடமைகளைக் கூறும் சேக்கிழார் கருத்தைத் தம் உரையில் உரைநடைப்படுத்தி எழுதுகின்றனர்.[2]

கோவை, பரணி முதலிய சிற்றிலக்கியங்களில் மிகச்சில நூல்களிலிருந்தே மேற்கோள்கள் தரப்பட்டுள்ளன. இறையனார்

1. கம்ப. பால காண்டம் (மர்ரே அண்டு கம்பெனி வெளியீடு) பதிப்புரை (பக்கம்–5).
2. "மாநிலங்கா வலன்ஆவான் மன்னுயிர்காக் குங்காலை,
தான்அதனுக் கிடையூறு, தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்தும்தீர்த்து அறங்காப்பான் அல்லனோ"
— பெரிய. திருநகரச் – 36.

களவியல் உரையில் பாண்டிக்கோவையிலிருந்து பல பாடல்கள் எடுத்துக்காட்டாய்த் தரப்பட்டுள்ளன. களவியற்காரிகை என்ற நூலுரையும் பாண்டிக்கோவைப் பாடல்களை உதாரணங் காட்டுகின்றன. நம்பியகப் பொருள் உரையில் தஞ்சைவாணன் கோவையிலிருந்து பல பாடல்கள் தரப்படுகின்றன. திருக் கோவையாரைப் பல உரையாசிரியர்கள் எடுத்துக்காட்டாய்த் தருகின்றனர்.

அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையில் கலிங்கத்துப் பரணிச் செய்யுள்களை மேற்கோளாகத் தருகின்றார். இவை தவிர ஏனைய தூது, உலா நூல்களிலிருந்து மேற்கோள் தரப்படவில்லை.

முப்பெருஞ் சோழமன்னர்களின் அவைக்களத்தில் அரசவைக் கவிஞராய் விளங்கி, கவிச்சக்கரவர்த்தி என்ற புகழ்ப் பெயர் பெற்று, மூவருலா பாடிய ஒட்டக்கூத்தரின் செய்யுள் ஒன்றேனும் மேற்கோளாக வரவில்லை. தக்கயாகப்பரணி உரையாசிரியரே கூத்தரையும் அவரது செய்யுளைப் பற்றியும் நினைவூட்டுகின்றார்.

பிற்காலத்தில் தோன்றிய நல்வழி, மூதுரை, கொன்றை வேந்தன், ஆத்திசூடி முதலிய நீதி நூல்களிலிருந்தும் மிகுதியான மேற்கோள் உரைகளில் இடம்பெறவில்லை. யாப்பருங்கல விருத்தியுரை, 'கொன்றை வேய்ந்த' என்னும் கொன்றை வேந்தன் நூலின் கடவுள் வாழ்த்தை மேற்கோள் காட்டுகின்றது. பேராசிரியர் தொல்காப்பியப் பொருளதிகார உரையில் 'கொன்றை வேய்ந்த' என்ற கொன்றை வேந்தன் நூலின் செய்யுளையும், 'அட்டாலும் பால் சுவை' என்ற மூதுரைச் செய்யுளையும் மேற்கோளாகக் காட்டுகின்றார் (செய்யுள் இயல் *149, 72*).

## ஆலம் விதை

சின்னஞ் சிறிய ஆலம் விதையிலிருந்து மிகப்பெரிய ஆல மரம் தோன்றி வளர்வதுபோல், உரையாசிரியர்கள் தம் உரைகளில் காட்டியுள்ள சிறிய பாடல் ஒன்றிலிருந்து பெரிய கதையோ, கருத்தோ பின்னால் வளர்ந்திருக்கிறது. அத்தகைய பாடலைக் காண்போம்.

நச்சினார்க்கினியர் தொல்காப்பியம் புறத்திணை இயல் உரையில் (*22* சூத்) 'அருளொடு புணர்ந்த அகற்சி'க்கு உதாரணமாகப் பின்வரும் செய்யுளைக் காட்டுகின்றார்.

**புனிற்றுப் பசியுழந்த புலிப்பிணவு, தனாஅது**
**முலைமறாக் குழவி வாங்கிவாய் மடுத்து**

இரைஎனக் கவர்வுற நோக்கி ஆங்குஅவ்
ஏரிளங் குழவியின் முன்சென்று தாக்கும்
கூர்நுதிப் பிணைமான் புலவுவேட்டுத் தொடங்கிய
வாள்எயிற்றுக் கொள்ளையில் தங்கினன் கதுவ
பாசிலைப் போதி மேவிய பெருந்தகை
ஆருயிர்க் காவல் பூண்ட
பேரருட் புணர்ச்சியின் அகலு மாறே.

இப்பாடலை வீரசோழிய உரை முதன் முதலில் உதாரணங் காட்டியுள்ளது. கருத்துச் சிறப்பும், உயர்ந்த கொள்கையும் உடைய இப்பாடல் நச்சினார்க்கினியர் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்துள்ளது.

மேலே காட்டிய பாடல், புத்தபெருமானின் அருட்பண்பை விளக்குகின்றது. குட்டி ஈன்ற ஒரு பெண் புலி, தன் பசியைத் தீர்த்துக்கொள்ளக் கருதி, தாயிடம் பால் குடிக்கும் மான் குட்டியைப் பற்றியது. உடனே, தாய்மான் குட்டியை விலக்கிக் கொண்டு புலியை எதிர்த்துத் தாக்கியது. புலி, மான் குட்டியை விட்டு மானையே கொன்று தின்றுவிட விரும்பி வாயை அகலத் திறந்தது. இந்தக் கொடிய காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்த புத்தபெருமான், மானையும் அதன் குட்டியையும் காப்பதற்கு, அகலத்திறந்த புலிவாயில், கூர்மையான பற்கள் கதுவுமாறு தங்கினார். இதுவே அப்பாடலின் கருத்தாகும்.

நச்சினார்க்கினியர் மேற்கோள்காட்டும் இப்பாடல் கூறும் கதை, பிற்காலத்தில் திருவிளையாடற் புராணங்களில் பெரிதாக வளர்ந்தது. அப் புராணங்களைப் பாடிய புலவர்கள் மேலே காட்டிய பாடலின் கதையை மிக விரிவாக்கிக் கொண்டனர்.

வேம்பத்தூர் நம்பி பாடிய திருவாலவாய் உடையார் திருவிளையாடற் புராணத்தில், 'புலிமுலை புல்வாய்க்கு அருளின திருவிளையாடல்' (53) என்ற பகுதியில் மேலே கூறிய கதை வேறு வடிவில் இடம் பெறுகின்றது. குட்டி ஈன்ற மான், நீர் வேட்கை மிகுதியால் நீர்நிலை ஒன்றிற்கு வந்தது. அங்கே மறைந்திருந்த வேடன் ஒருவன் அந்த மானைக் கொன்று வீழ்த்தினான். மான் இறக்கும்போது தன் பச்சிளங்குட்டியை நினைத்தவாறே உயிர் நீத்தது. அதன் மீது இரக்கம் கொண்ட ஆலவாயுடையார், தாயை இழந்த மான்குட்டிக்குப் பாலூட்ட, பக்கத்தில் இருந்த புலி ஒன்றினை ஏவினார். இக் கதையில் புத்தபெருமான் கதைக்கு உரிய நிகழ்ச்சி எதிரொலிக்கின்றது.

பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணத்தில், 'பன்றிக் குட்டிக்கு முலை கொடுத்த படலம்' என்பதும் புத்ததேவனின்

கதையைப் பின்பற்றி அமைக்கப்பட்டதேயாகும். காட்டிற்கு வேட்டையாட வந்தவர்களால் ஆண் பன்றியும் பெண் பன்றியும் கொன்று வீழ்த்தப்பட்டன. தாய் தந்தையரை இழந்து தவிக்கும் பன்றிக் குட்டிகளுக்கு இரங்கி ஆலவாயுடையார், பெண் பன்றி வடிவில் வந்து பாலூட்டினார் என்று பரஞ்சோதியார் கதையை அமைத்துள்ளார்.

நச்சினார்க்கினியர் காட்டும் மற்றோர் பழம் பாடலின் கருத்து, திருக்கோவையாரில் உள்ள பாடல் ஒன்றில் இடம் பெறுகின்றது.

> **இவன்வயிற் செலினே இவற்குஉடம்பு வறிதே**
> **இவள்வயிற் செலினே இவட்கும் அற்றே**
> **காக்கை இருகணின் ஒருமணி போல**
> **குன்றுகெழு நாடற்கும் கொடிச்சிக்கும்**
> **ஒன்றுபோல் மின்னிய சென்று வாழுயிரே**

**(தொல். பொருள் 114)**

என்ற பாடலை நச்சினார்க்கினியர் மேற்கோள் காட்டுகின்றார். இப் பாடல் அவருக்கு முற்பட்ட பழம்பாடலாக இருக்க வேண்டும். அதனை மாணிக்கவாசகர் கற்றிருக்கலாம். அப்பாடலின் கருத்து,

> **காகத்து இரு கண்ணிற்கு ஒன்றே**
> **மணிகலந் தாங்கு இருவர்**
> **ஆகத்துள் ஓர் உயிர்கண்டனம்**

**(திருக்கோவை – 71)**

என்று திருக்கோவையார் பாடலில் இடம்பெறுகின்றது.

### பொன்மணல்

ஆற்றங்கரையோரத்தில் குவிந்துகிடக்கும் மணலில் அங்கங்கே பொன் மணல் சிதறிக் கிடந்தால் அவை காண்பவர் கண்ணையும் கருத்தையும் கவருமல்லவா? அம் மணலைப் போல உரைகளின் நடுவே காட்டப்பெறும் மேற்கோள் பாடல்களில் சில, மிகச் சிறப்பு வாய்ந்தவையாய்க் கற்பவர் உள்ளத்தில் ஆழப்பதிந்து எண்ணும்தோறும் இலக்கியச்சுவை நல்கிப் பேரின்பத்தில் ஆழ்த்துகின்றன.

உரைகளில் இடம்பெற்றுள்ள மேற்கோள் பாடல்களின் சிறப்பியல்புகளை நன்குணர்ந்த தமிழறிஞர் மு. இராகவ ஐயங்கார் அவற்றையெல்லாம் திரட்டிப் பெருந்தொகை என்று பெயரிட்டு இரு தொகுதிகளாக வெளியிட்டுள்ளார்.

இறையனார் அகப்பொருள் உரையில் மேற்கோள் காட்டப்பெற்றுள்ள ஒரு பாடல் இலக்கியவானில் பேரொளி வீசும் சுடர்மீனாய்ப் பொலிகின்றது. தலைவன், தலைவியின் அருமை பெருமைகளை எடுத்துக்கூறிப் பாராட்டுகின்றான். தலைவியைத் தன் உயிராக மதிக்கின்றான். “உயிரைக் கண்ணால் காண இயலாது என்று கூறுபவர்கள் வெட்கமில்லாதவர்கள்; பொய் கூறுகின்றனர். யான் என் உயிரைக் கண்ணால் காணுகின்றேன். என் உயிர் பேசும்; மெல்ல நடக்கும்; மெல்லிய இடையும் குளிர்ந்த கண்ணும் பெருந்தோளும் உடையது அது!” என்று தலைவியைப் போற்றுகின்றான். இக் கருத்துடைய பாடல் கீழே தரப்படுகின்றது:

**காணா மரபிற்று உயிரென மொழிவோர்**
**நாணிலர் மன்ற பொய்ம்மொழிந் தனரே**
**யாஅம் காண்டும் அரும்பெறல் உயிரே**
**சொல்லும் ஆடும் மென்மெல இயலும்**
**கணைக்கால் நுணுகிய நுசுப்பின்**
**மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே.**

**(இறையனார் அகப்பொருளுரை)**

தமிழ் மொழியில் நகைச்சுவை இலக்கியம் என்று குறிப்பிடத் தக்க தனிநூல் முற்காலத்தில் இல்லை. அங்கங்கே இடம் பெற்றுள்ள பல பாடல்கள் நகைச்சுவை பயப்பனவாய் உள்ளன. யாப்பருங்கல விருத்தியுரை மேற்கோளாகக் காட்டும் செய்யுள் ஒன்று நகைச்சுவைக்கு நல்ல எடுத்துக்காட்டாய் அமைகின்றது.

பேய்கள் எல்லாம் கூடித் தம் தலைவியாகிய காளிதேவிக்கு மணம்மிகுந்த சாந்தை அரைக்கின்றன. தேவிக்கு அரைக்கும் சாந்து மிகுந்த மணம் வீசுகின்றது. அத்தகைய உயர்ந்த சாந்தை மிகத் தூய்மையாக, யாரும் தொடாமல் வைத்துப் போற்றுகின்றன பேய்கள். ஒரு பேய்க்கு, மணம் மிகுந்த சாந்தைத் தன் கையால் தொட்டு மோந்துபார்த்து விடவேண்டும் என்ற ஆவல். தான் சாந்தைத் தொட்டது பிறர்க்குத் தெரிந்து விட்டால் என்ன செய்வது என்ற அச்சம். அதன் நெஞ்சத்தில் ஆசையும் அச்சமும் போராடி முடிவில் ஆசை வென்றுவிடுகின்றது. யாருக்கும் தெரியாமல் தன்கையை நீட்டிச் சாந்தைத் தொட்டுவிடுகின்றது. தொட்டுக்கொண்டு அங்கிருந்து சற்றுத் தொலைவில் சென்று விடுகின்றது. ஆனால், மணம் மிக்க சாந்தின் மணம் அதன் கையிலிருந்து வெளிப்பட்டுப் பரவுகின்றது. மணம் வரும் திசையை மற்றப்பேய்கள் உற்று நோக்குகின்றன. சாந்தைத் தொட்ட பேய் உண்மை வெளிப்பட்டுவிடுமோ என்று நடுங்கி,

கூர்மையான கத்தி ஒன்றை எடுத்துத் தன் கையை — சாந்தைத் தொட்ட கையை வெட்டி வீழ்த்துகின்றது.

கறைப்பல் பெருமோட்டுக் காடுகிழவோட்கு
அரைத்திருந்த சாந்தைத் தொட்டப்பேய்
மறைக்க அறியாது மற்றுந்தன்கையைக்
குறைக்குமாம் கூர்ங்கத்தி கொண்டு

(யாப்பருங்கலவிருத்தி – 93)

என்ற பாடலில் மேலே கூறிய நிகழ்ச்சி அடங்கியுள்ளது.

யாப்பருங்கலக் காரிகையுரை கலித்தாழிசைக்கு உதாரணமாக, திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் ஆடும் ஆட்டத்தைப் புனையும் பாட்டலைக் காட்டுகின்றது:

பூண்ட பறையறையப் பூதம்மருள
நீண்ட சடையான் ஆடுமே
நீண்ட சடையான் ஆடும்என்ப
மாண்ட சாயல் மலைமகள் காணவே காணவே.

இளம்பூரணர், தொல்காப்பியம் களவியல் பகுதியுரையில் *(109)*, நெறிப்படு நாட்டத்து நிகழ்ந்தவை மறைத்தற்கு உதாரணமாகக் கீழ்வரும் காதல் கவிதையினைக் காட்டியுள்ளார்.

துறைவன் துறந்தெனத் துறைஇருந்து அழுதஎன்
மம்மர் வாண்முகம் நோக்கி அன்னைநின்
அவலம் உரைஎன் றனளே கடல்என்
பஞ்சாய்ப் பாவை கொண்டு
வண்டலம் சிறுமனை சிதைத்தது என்றேனே.

(தொல் – கள – 21)

போர்க்களத்தில் களிறு எறிதலைச் சிறந்த வீரமாகப் புறப்பொருள் இலக்கியம் புகழும். ஆனால், ஒரு வீரன் போர்க்களிறு ஒன்றை எறிவது தன் ஆண்மைக்கு இழுக்கு என்று கூறுகின்றான்:

தானால் விலங்கால் தனித்தால் பிறன்வரைத்தால்
யானை எறிதல் இளிவரவால் — யானை
ஒருகை உடையது எறிவலோ யானும்
இருகை சுமந்துவாழ் வேன்.

இந்தப் பாடலை நச்சினார்க்கினியர் மேற்கோள் காட்டுகின்றார் *(புறத் – 5)*.

போர்க்களத்தில் நால்வகைப் படைகளும் நிற்கின்றன. போர் தொடங்கும் நேரத்து நிகழ்ச்சிகளை, வீரசோழிய உரை மேற்கோள் பாடல் ஒன்று, மிக அழகாகப் பாடுகின்றது.

வீரர் களிறேற வெல்வேந்தர் தேரேறப்
போர்கெழு வெஞ்சிலைநாண் பூட்டேற — வார்முரசம்
ஆர்ப்பேற வேல்இளைஞர் மாஏற வெஞ்சுடர்வாள்
கூர்ப்பேற ஏறினான் குன்று.

(வீரசோழியம் – 152)

காஞ்சி மாநகரத்தின் சிறப்பை விளக்கும் பாடல் ஒன்று யாப்பருங்கல விருத்தியுரையுள் (62) இடம் பெற்றுள்ளது.

வையகம் எல்லாம் கழனியா வையகத்துச்
செய்யகமே நாற்றிசையின் தேயங்கள் செய்யகத்து
வான்கரும்பே தொண்டை வளநாடு வான்கரும்பின்
சாறேஅந் நாட்டுத் தலையூர்கள் சாறட்ட
கட்டியே கச்சிப் புறம்எல்லாம் கச்சியுள்
தானேற்ற மான சருக்கரை மாமணியே
ன்ஏற்றான் கச்சி யகம்

(யாப்ப. விருத்தி 62)

என்பதே அட ாடல்.

நன்னூல் இயற்றிய பவணந்தி முனிவரை ஆதரித்த சீயகங்கனின் கொடைச் சிறப்பை, மயிலைநாதர் மேற்கோள் காட்டும் வெண்பா ஒன்று மிக அழகாகப் பாடுகின்றது.

கங்கன் அகன்மார்பன் கற்றோர்க்கு இனிதளிக்கும்
செங்கனக வெள்ளைச் செழுமணிகள் — எங்கும்
தெறித்தனவே போல்விளங்கும் மீன்சூழ்ந்த திங்கள்
எறிக்கும்நிலா அன்றோ இனி

(நன் – 267)

என்ற பாடல் காலத்தை வென்று விளங்கும் கலைச் செல்வமாய்ப் பொலிந்து கங்கன் புகழைத் தமிழ் மக்களிடம் பரப்பிக் கொண்டே இருக்கும்.

இன்னும் சிறந்த பாடல்கள் பல, உரைதோறும் உள்ளன. அவற்றைத் தேடி எடுத்துத் தொகுத்துச் சுவை பயக்கும் விளக்கங்கள் தருவது சிறந்த இலக்கியப் பணியாகக் கருதிப் போற்றப்படும்.

## 4. சமயங்கள் வளர்ந்த உரைகள்

ஆங்கிலம் வணிக மொழி; இலத்தீன் சட்ட மொழி; கிரேக்கம் இசை மொழி; ஜெர்மன் தத்துவ மொழி; பிரெஞ்சு தூது

மொழி; இத்தாலியம் காதல் மொழி என்று கூறுகின்ற வழக்கை நினைவுபடுத்தித் தமிழைப் பக்தி மொழி என்பர்.*

சைனரும் பௌத்தரும், சைவரும் வைணவரும், முஸ்லீம்களும் கிறிஸ்தவர்களும் ஒன்றுபட்டு இலக்கிய உரிமை கொண்டாடும் ஒரு மொழி உண்டு என்றால் அது தமிழேயாகும். பலவேறு சமயங்களின் தமிழ்த் தொண்டு, இந்நாட்டு மக்களின் ஒப்பற்ற பெருந்தன்மைக்குச் சான்றாய் விளங்குகின்றது. சமய வேறுபாடுகளை மறந்து — சமயக் கோட்பாடுகளை மறந்து — கருத்து முரண்பாடுகளை மறந்து அனைவரும் மொழியால் ஒன்றுபடுகின்றனர். தமிழ்த் தொண்டால் அனைவரும் தமிழ் இனத்தினர் என்றும், தமிழ் நாட்டவர் என்றும் கருதி வாழ்கின்ற ஒருமைப்பாட்டு உணர்வு பல நூறு ஆண்டுகளாய் வளர்ந்து வருகின்றது. இராமலிங்க அடிகளார் சமய உலகில் கண்ட ஒருமைப்பாடு தமிழினத்தை ஒன்றுபடுத்தி வருகின்றது.

தமிழகத்தில் தோன்றி வளர்ந்த எல்லாச் சமயங்களும் போட்டியிட்டுக் கொண்டு, உரைநூல்கள் இயற்றியுள்ளன. சமயம் சார்ந்த இலக்கியம் இலக்கணம் சாத்திரம் தோத்திரம் ஆகிய எல்லா உரைநூல்களும் ஆற்றிய பணிகளைப் பின்வருமாறு பாகுபடுத்தலாம்.

1. சமயக்கொள்கைகளை மிகத் தெளிவாய் விளக்கி, தமிழில் தத்துவச் சிந்தனை வளத்தை உண்டாக்கியுள்ளன.

2. தமிழகத்துச் சமயங்களின் வரலாற்றை விளக்குகின்ற காலக் கண்ணாடியாய் உள்ளன.

3. சமயச் சிந்தனையை, தத்துவமுறைப்படி செம்மையாய் விளக்கத் தருக்க நூற்புலமை தேவைப்படுவதால், தருக்க நூற்கொள்கைகள், மிகத் தெளிவாக விளக்கப்படுகின்றன. பலவேறு உரைநூல்களில் கூறப்பட்டுள்ள அளவைநூல் கருத்துக்களைத் தொகுத்தால் மிகச் சிறந்த அளவைநூல் ஒன்றைத் தமிழில் உருவாக்கலாம்.

4. சமயம் சார்ந்த கலை பண்பாடு நாகரிகம் ஆகியவற்றை அறிந்துகொள்ள உரைநூல்கள் பெரிதும் துணை செய்கின்றன.

## 5. பதிப்பாசிரியர்கள்

இன்று நம் கையில் உள்ள உரைநூல்கள் கண்ணைக் கவரும் வனப்புமிக்க அட்டைகளுடன், முத்து முத்தான அச்சு

* தமிழ்த் தூது (1962) பக். 34, தனிநாயக அடிகள்.

எழுத்துக்களுடன், எளிதில் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் அமைந்த பத்திப் பிரிவுகளுடன் விளங்குகின்றன. இந்த வடிவத்தைப் பழைய உரை நூல்கள் பெறுமுன்னர் எத்தனையோ இடர்ப்பாடுகளைக் கடந்து வந்துள்ளன.

அச்சுக்கலை தோன்றாத காலத்தின் நிலையை நினைத்துப் பார்க்கும்போது, எழுதும் கலை எவ்வளவு அரிதாக இருந்திருக்கும் என்பது விளங்கும். பனையோலைகளில் எழுத்தாணியின் உதவியால், பல நூறு பக்கங்களைக்கொண்ட நூல்களை, எண்ணெய் விளக்கின் முன்னால் உட்கார்ந்து கொண்டு கைவலிக்க எழுதியவர்களைப் பெருந்தொண்டர்கள் என்று போற்ற வேண்டும். எழுதி எழுதிக் குவித்த ஏடுகளை நினைவோடு ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கித் துளையிட்டு, கயிறுகட்டி மேலே சட்டம் சேர்த்து வைத்தவர்களை மதிக்க வேண்டும். எழுத்துக்களின் மீது மை தடவி எளிதில் படிக்கும் நிலையில் வைத்துக் காத்தவர்களை என்றும் நினைக்க வேண்டும்.

முற்காலத்து ஏடுகளின் நிலையையும் அவற்றைப் போற்றிய வகையினையும்,

> **எழுதுவரிக் கோலத்தார் ஈவார்க் குரியார்**
> **தொழுதிமைக் கண்ணணைந்த தோட்டார் – முழுதகலா**
> **நாணிற் செறிந்தார் நலங்கிள்ளி நாடோறும்**
> **பேணற் கமைந்தார் பெரிது**

என்ற வெண்பா உணர்த்துகின்றது.

தமிழ்விடுதூது தமிழ் மொழியை,

> பள்ளிக்கூ டத்துஅசையாம்* பற்பலதொட் டிற்கிடத்தித்
> தள்ளிச் சிறார்கூடித் தாலாட்டி – உள்ளிலகு
> மஞ்சள் குளிப்பாட்டி மையிட்டு முப்பாலும்
> மிஞ்சப் புகட்ட மிகவளர்ந்தாய்

என்று போற்றுகின்றது. தமிழ்ச் சுவடிகளைப் பேணி வைத்திருந்த முறை இதனால் விளங்குகின்றது.

இவ்வளவு கண்ணும் கருத்துமாகச் சுவடிகளை எழுதிக் காத்துவந்த போதும், பழங்கால ஏடுகளில் குறைபாடுகள் நேராமல் இல்லை. ஏடு எழுதியவர்களில் சிலர் போதிய அளவு கல்விப் பயிற்சி இல்லாதவர்கள்; சிறிதளவே கற்றுக் கூலிக்கு எழுதியவர்கள். அதனால் ஏடுகளில் பிழைகள் ஏற்பட்டன. கற்றறிந்தவர்களும் விரைவு, கவனக்குறைவு, வேலையின் கடுமை, உடற்சோர்வு, மறதி ஆகியவை காரணமாகப் பிழை

* அசை – சுவடி தூக்கும் பலகை.

செய்திருத்தலுங் கூடும். ஒருவர் மூல ஏட்டைப் படிக்க மற்றொருவர் கேட்டு எழுதியதும் உண்டு. படிப்பவர் தவறாகப் படித்தாலும் அதைக்கேட்டு எழுதுபவர் அப்படியே எழுதிவிடுவார். பிறர் உதவியின்றித் தாமே ஏடு எழுதியவரும், பிறர் எழுதுவதற்காக ஏடு படித்தவரும் பிழை செய்ததைப்பற்றி முற்காலத்தில் ஒரு பழமொழி எழுந்தது. 'எழுதியவன் ஏட்டைக் கெடுத்தான்; படித்தவன் பாட்டைக் கெடுத்தான்' என்ற பழமொழி அக்காலத் தமிழ் மக்களிடம் தோன்றி வழங்கியது.

ஏடு எழுதியவர்கள் தம் குறைபாடுகளை உணராமல் இல்லை. தாம் படி எடுத்த ஏட்டுச் சுவடியின் முடிவில்,

> **ஓராது எழுதினேன் ஒண்பொருளை**
> **ஆராய்ந்து கொள்க அறிவுடையார் – சீராய்ந்து**
> **குற்றம் களைந்து குறைபெய்து வாசித்தல்**
> **கற்றறிந்த மாந்தர் கடன்**[1]

என்று எழுதியுள்ளனர்.

"அச்சுப் புத்தகங்களைவிட ஏட்டுச் சுவடிகள் அதிக விலை பெற்றன. பொருள் உள்ளவர் மட்டும் ஏட்டுச் சுவடியை ஏடெழுதுவோருக்குப் பொருள் கொடுத்து எழுதிக் கொள்ள முடியும். பொருள் இல்லாதவர் பிரதி செய்ய முடியாது. இதனால் பண்டைக் காலத்தில் இருந்த சமண சமயத்தார் (ஜைனர்) சாஸ்திர தானம் என்னும் ஒரு தானத்தை ஏற்படுத்தியிருந்தார்கள். செல்வர்களான சமண சமயத்தவர் வீடுகளில் திருமணம் முதலிய சிறப்புகள் நடைபெறும்போது தமது சமய நூல்கலைப் பல பிரதிகள் எழுதுவித்து, அப் பிரதிகளைத் தகுந்தவர்களுக்குத் தானமாக வழங்கினார்கள். இதற்குத்தான் 'சாஸ்திரதானம்' என்று பெயர். பண்டைக் காலத்தில் செல்வர்கள்தான் பெரும்பொருள் செலவிட்டுப் புத்தகச்சாலை அமைக்க முடியும்"[2]

செல்வர்கள் பொருட்செலவை நோக்காது பல அரிய நூல்களை எழுதித் தொகுத்து வைத்துப் போற்றிக் காத்து வந்தனர். அவற்றைப் படித்துப் பயன் பெறுமாறு புலவர்களுக்கு உரிமை அளித்தனர். நாலடியாரில் உள்ள,

> **புத்தகமே சாலத் தொகுத்தும் பொருள்தெரியார்**
> **உய்த்தகம் எல்லாம் நிறைப்பினும் — மற்றவற்றைப்**
> **போற்றும் புலவரும் வேறே பொருள்தெரிந்து**
> **தேற்றும் புலவரும் வேறு**

**(நாலடியார் – 318)**

1. இவ்வெண்பா, சீவக சிந்தாமணியின் ஏட்டுப் பிரதிகள் சிலவற்றின் இறுதியில் இருந்ததாக டாக்டர் உ.வே. சா. குறிப்பிட்டுள்ளார்கள்.
2. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழிலக்கியம் பக். 113, 114.

என்ற செய்யுள் அக் காலத்தில் செல்வர்களின் வீட்டில் நூல் நிலையம் இருந்ததையும், அந்நூல் நிலையத்தைப் பயன் படுத்துவோர் இருந்ததையும் தெளிவாகக் குறிப்பிடுகின்றது.

பல புத்தகங்களைத் தொகுத்து வைத்திருந்த செல்வர்கள் அவற்றை எடுத்துத்தரவும், வைக்கவும் பணியாட்களை வைத்திருந்தனர். இளம்பூரணரும் மயிலைநாதரும் தம் உரைகளில் 'மற்றையது' என்னும் சொல் இனம் குறிக்கும் என்பதற்கு, "பல பொத்தகம் கிடந்தவழி ஒருவன் ஏவலாளனைப் பார்த்து, 'பொத்தகம் கொண்டுவா' என்றால், அவன் ஒரு பொத்தகம் கொண்டுவந்த விடத்துத் தான் கருதிய பொத்தகம் அன்றெனில், 'மற்றையது கொணா' என்னும்" என்று உதாரணம் கூறியுள்ளனர் (தொல், சொல் - இடையியல் - 16 இளம் உரை; நன் - 432).

தொகுத்து வைத்திருந்ததோடு செல்லுமிடம் எங்கும் சுவடிகளைத் தம் கையில் எடுத்துச் சென்றனர். 'பாடம் ஏறினும் ஏடது கைவிடேல்' என்ற பழமொழி இதனை உணர்த்தும்.

இவ்வாறு போற்றி வைக்கப்பட்ட ஏடுகள், பல தலைமுறைகளைத் தாண்டி வந்து, இன்று சிலருடைய அரிய முயற்சியால் தொகுத்து வைக்கப்பட்டுள்ளன. அத்தகைய இடங்கள் சிலவற்றைக் குறிப்பிடுவோம்.

தஞ்சைச் சரசுவதி மகால், மதுரைத் தமிழ்ச் சங்கம், சென்னை அரசாங்கச் சுவடி நிலையம், திருவாவடுதுறை தருமபுர மடங்கள், திருவனந்தபுரம் அரண்மனை நூலகம், கேரளப் பல்கலைக் கழகச் சுவடி நூல் நிலையம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், திருப்பதி வேங்கடேசுவரா பல்கலைக் கழகம், கரந்தைத் தமிழ்ச் சங்கம், டாக்டர் உ.வே.சா. ஐயர் நூல் நிலையம், சைவ சித்தாந்த சமாஜம், பவானந்தர் கழகம், யாழ்ப்பாணம் தாமோதரம் பிள்ளை பதிப்பு நிலையம் ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

அயல்நாடுகளுக்குச் சென்றுவிட்ட தமிழ்ச் சுவடிகள் பல உள்ளன. இலண்டன், மாஸ்கோ, பாரிசு, சிகாகோ முதலிய பெருநகரத்து நூல் நிலையங்களில் தமிழ் ஏடுகள் இருப்பதை அங்கே சென்று கண்டு வந்தவர்கள் குறிப்பிடுகின்றனர்.

பனையோலைகளில் இருந்த நூல்களை அச்சேற்றி வெளியிட அரும் பாடுபட்ட அறிஞர் பெருமக்கள் பலராவர். அவர்கள் உழைப்பும், முயற்சியும் இன்று நம் கற்பனைக்கும் எட்டாதவை. அவர்களுக்கு ஏற்பட்ட இடையூறுகள் சொல்லில் அடங்காதவை.

245

பதினேழாம் நூற்றாண்டிலிருந்தே தமிழகம் மிக்க கலக்க மடைந்த நிலையில் இருந்து வந்தது. நிலையற்ற ஆட்சி, பொறுப்பற்ற தலைவர்கள், கேள்விமுறை இல்லாத கொடுஞ் செயல்கள். வேற்று இனத்தாரின் சூறாவளிப் போர்முறை, பிற சமயங்களின் கவர்ச்சியூட்டித் திருப்பும் முயற்சி, ஐரோப்பிய நடையுடை மொழிகளில் நாட்டம் ஆகியவற்றால் மூன்று நூற்றாண்டுகளாகத் தமிழினம் அலைக்கழிக்கப் பட்டது. இந்த நிலையில் பனை ஓலைகளில் இருந்த எத்தனையோ இலக்கண இலக்கியச் செல்வங்கள், பேணுவாரின்றித் தவித்தன; எடுப்பாரும் படிப்பாரும் இன்றி ஏங்கின; கறையானும் பிற பூச்சிகளும் அரிய தமிழ்ஏடுகளைச் சுவைத்து உண்டு தீர்த்தன. எத்தனையோ ஏடுகள் நெருப்புக்கு இரையாயின; கல்வியறிவில்லாத மக்கள் பழைய ஏடுகளை ஆடிப் பெருக்கில் ஆற்று வெள்ளத்தில் மூழ்க வைத்து மனம் மகிழ்ந்தனர்.

இத்தனை இடையூறுகளையும் கடந்து வந்து, ஒதுங்கி மறைந்து வாழ்ந்த பல தமிழ்ஏடுகள், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த கல்வியாளர்களின் இல்லத்தில் சென்று புகுந்து கொண்டன. அவற்றை அவர்கள் எளிதில் வெளியே காட்டவில்லை.

தமிழ் இலக்கியச் செல்வங்களை அச்சேற்றி நூல்வடிவில் கொண்டுவர முயன்ற தமிழ்த் தொண்டர்களுக்கும் பழைய ஏடுகள் எளிதில் கிடைக்கவில்லை. தம்மிடம் இருப்பவை அரிய ஏடுகள் என்றும், அவை ஒப்பற்ற செல்வங்கள் என்றும் அறிந்தபோது, ஏடுகள் வைத்திருந்தோர் தமிழ்த் தொண்டர் களுக்கு அவற்றைக் கொடுக்கத் தயங்கினர்.

இத்தகைய சூழ்நிலையில் பழைய நூல்களை அச்சிட முயன்ற பெரியவர்களின் நிலை எவ்வாறு இருந்திருக்கும்! அவர்கள், பழந்தமிழ் ஏடுகளைத் தேடியவண்ணம் நாடு நாடாக ஊர் ஊராக — வீடு வீடாக அலைந்து திரிந்தனர். ஏடுகள் கிடைத்த இடத்திலேயே அவற்றைப் பார்த்து எழுதிக் கொண்டு வந்தனர்.

ஏடு தேடி, பழைய நூல்களை அச்சிட முயன்ற பெரியவர்களில் ஈழநாட்டுத் தமிழ்ப் பெரியவர் சி.வை. தாமோதரம் பிள்ளை, ஆறுமுக நாவலர், டாக்டர் உ.வே. சாமிநாதையர், ரா. இராகவ ஐயங்கார், பின்னத்தூர் அ. நாராயண சாமி ஐயர், சௌரிப் பெருமாள் அரங்கனார், பவானந்தம் பிள்ளை, எஸ். வையாபுரிப் பிள்ளை ஆகியோர் தமிழ் மக்களின் நெஞ்சத்தில் என்றும் இடம்பெறத் தக்கவர்கள்.

அச்சேறிய நூல்களின் மறுபதிப்பைச் செப்பனிட்டுத் தெளிவுபடுத்தி, ஒழுங்கு படுத்திய பெருமை ஈழநாட்டுப் புலவர் சி. கணேசையர், ந.மு. வேங்கடசாமி நாட்டார், ச. தண்டபாணி தேசிகர், மே.வீ. வேணுகோபாலப்பிள்ளை ஆகியோர்க்கு உரியதாகும். இத் தமிழ்த் தொண்டர்கள், தாம் பதிப்பித்த நூல்களின் பதிப்புரையில், தமக்கு ஏற்பட்ட இடையூறுகளைக் கூறுகின்றனர்.

கலித்தொகையின் பதிப்புரையில், சி.வை. தாமோதரம் பிள்ளை தம் காலத்தில் ஏடுகள் பல அழிந்து வருவதைக் கண்டு துன்புற்றுப் பின் வருமாறு எழுதுகின்றார்:

"பழைய சுவடிகள் யாவும் கிலமாய் ஒன்றோடு ஒன்றாய் அழிந்து போகின்றன. புது ஏடுகள் சேர்த்து அவற்றை எழுதி வைப்பாரும் இலர். இந்நாள் தவறினால், பின்பு தவம் புரிந்தாலும் ஒருதரம் அழிந்த தமிழ்நூற்களை மீட்டல் அரிது. காலத்தின் வாய்ப்பட்ட ஏடுகளைப் பின் தேடி எடுப்பினும் கம்பையும் நாராசமும் தான் மீரும்".

இவ்வாறு கூறித் தமிழ்மக்களை, தமிழ் ஏடுகளைக் காக்குமாறு பணித்த அவர், தமிழகத்தின் பல இடங்களிலிருந்து பல ஏடுகளை அரிதில் முயன்றுபெற்று அச்சிடும் எண்ணத்துடன் பேணி வைத்தார். தமக்குக் கிடைத்த ஏடுகளின் நிலையைப் பற்றி அவர் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றார்.

"ஏடு எடுக்கும்போது ஓரஞ் சொரிகிறது. கட்டு அவிழ்க்கும்போது இதழ் முறிகிறது. ஏட்டைப் புரட்டும்போது துண்டு துண்டாய்ப் பறக்கிறது. இனி, எழுத்துக்களோ என்றால், வாலும் தலையும் இன்றி, நாலு புறமும் பாணக் கலப்பை மறுத்து மறுத்து உழுது கிடக்கின்றது".*

ஏடுகளின் நிலை எது என்றால், எழுத்துகள் எளிதில் படித்து அறிய முடியாதவையாய் இருந்தன. ஏடு எழுதியவர்களால் நேர்ந்த பிழைகள் கணக்கின்றி இருந்தன. இவற்றை டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் கீழுள்ளவாறு எழுதி நமக்கு அறிவிக்கின்றார்.

"ஏட்டுச் சுவடியிலுள்ள ஒரு நூலை ஆராய்ந்து, வெளியிடுவதில் உண்டாகும் துன்பம் மிக அதிகம். அச்சுப் பிரதியிலுள்ளவாறு ஏட்டுச் சுவடி அமைந்திராது. சுவடியில் எழுதுவோரால் நேரும் பிழைகள் குறியீடுகள் கொம்பு கால் புள்ளி முதலியவை இரா; நெடிலுக்கும் குறிலுக்கும் வேறுபாடு தெரியாது; அடிகளின் வரையறைகளும் இரா; இதுமூலம் இஃது உரை, இது

* கலித்தொகை – பதிப்புரை

மேற்கோள் என்று அறியவும் இயலாது; எல்லாம் ஒன்றாகவே எழுதப்பட்டிருக்கும்".

இவற்றோடு ஏடுகள் அவிழ்ந்து முறை பிறழ்ந்து முன் பின்னாக மாறி, அமைந்தும் இருந்தன. முழுதும் எழுதப்படாமல் அரை குறையாகக் கிடைத்த ஏடுகளும் இருந்தன. நூலின் ஏதேனும் ஒரு பகுதி எழுதப்பட்ட ஏடுகளும் இருந்தன. கரந்தைக் கவியரசு ஆர். வேங்கடாசலம் பிள்ளை தெய்வச்சிலையார் உரையின் பதிப்புரையில், ஏடுகளைப் பற்றிய தம் அனுபவத்தைக் குறிப்பிட்டுள்ளார். அவற்றைக் கீழே காணலாம்.

"சில ஏடுகள் முழுவதும் இன்றியும் சில ஏடுகள் பாதியில் முறிந்தும் சில பொடிந்தும் போய்விட்டமையின் மிகப் பழுதுபட்டிருப்பதும்; கற்றறிஞர் எவராலும் எழுதப்பெறாது கூலிக்கு எழுதுவோர் எவராலோ எழுதப்பெற்றதால் ணனந, லளழ வேறுபாடுகள் பிறவும் தேறாமையான் எழுந்த எழுத்துப்பிழை சொற்பிழைகளும் ஒருமை பன்மைப் பிறழ்ச்சி முடிவுகள் முதலாய சொற்றொடர்ப் பிழைகளும் மல்கியும், சில இடங்களில் நூற்பா இன்றியும், சில இடங்களில் அவை பிறழ்ந்தும், காணப்பெற்றமையின் பல்லிடங்களில் பொருள் துணிதற்கு இயலாதவாறு இருப்பதும் காணலானேன்".*

இத்தகைய ஏடுகளைக் கொண்டு, அச்சிடத்தொடங்கு முன் செய்யவேண்டிய பணிகள் பல இருந்தன. அவற்றைப் பதிப்பாசிரியர் கீழுள்ளவாறு கூறுகின்றார்:

"பண்டைத்தமிழ் நூல் ஏடுகளை அச்சிடுவது என்பது எளிய வேலையன்று. ஆழ்ந்தகன்ற பயிற்சியும், கூர்ந்து கூர்ந்து செல்லும் மதிநுட்பமும், ஏட்டுச் சுவடியில் பன்னெடுங்காலப் பழக்கமும், சிறந்த பயிற்சியுடையார் துணையும் உடையவரே பண்டைத் தமிழ் நூல் ஏடுகளை அச்சிடற்கு உரியார். இன்னோர் தாமும் தாம் அச்சிடப்புகும் நூலிற்குப் பற்பல ஏட்டுப் பிரதிகள் தேடிவைத்துக் கொள்ளல் வேண்டும். அவற்றுள் ஒன்றிரண்டேனும் சிறந்த புலவர் கைப்பட்டனவாய் அன்றிச் சிறந்த பயிற்சியுடையோரால் எழுதப்பெற்றனவாய் இருத்தல் வேண்டும். இவர் தாம் அச்சிட எடுத்துக்கொள்ளும் நூலுரைகளைப் பன்முறை பயின்று அந்நூற்பொருள் முழுவதையும் சிலையெழுத்தெனத் தம் மனத்தகத்தே பதிப்பித்துக்கொண்டு, அப்புணர்ச்சியோடு பண்டைத் தமிழ் இயனூல் செய்யுணூல்களை எல்லாம் ஒவ்வொன்றாகப் பார்த்துப் பார்த்து ஒப்புமைப் பகுதிகள்,

* தெய்வச்சிலையார் உரை – கரந்தைத் தமிழ்ச் சங்க வெளியீடு (1929) பதிப்புரை – பக்கம்—9, 10. (1929).

மேற்கோள் விளக்கங்கள் முதலாயவற்றைத் திரட்டிக் கொள்ளல் வேண்டும். இங்ஙனம் எல்லாம் பண்டை நூற்பதிப்பிற்குச் செயத்தகும் முன்வேலைகள், பின்வேலைகள் பலவாகும்."

பதிப்புக்கலைபற்றி மேலும் விளக்கமாக அறிய விரும்புவோர் டாக்டர் வி.ஐ. சுப்பிரமணியம் எழுதியுள்ள பதிப்புக்கலை என்னும் கட்டுரையைக் கற்கவேண்டும். (சில கட்டுரைகள் 1 (1961) பக்கம் 121-134).

இத்தனை இடர்ப்பாடுகளுக்கு இடையே பழைய நூல்களைப் பதிப்பிக்க முன்வருபவர்க்குப் போதிய அளவு பணமில்லாத குறையும் இருந்தது. ஒரு நூலை நல்லமுறையில் அச்சிட்டு வெளியிடப் பெரிய தொகை வேண்டி இருந்தது. பெரிய தொகை செலவிட்டால், அது திரும்பவும் செலவிட்டவர் கைக்குக் கிடைக்குமா என்பது ஐயப்பாடாகவே இருந்தது. நூலை அச்சிட்டு மொத்தமாக வைத்துக்கொண்டு போற்றி, ஆண்டுதோறும் சிறுகச்சிறுக விற்று, பணம் சேர்ப்பது எளிய செயலன்று. ஆங்கிலமொழி நாடெங்கும் திருவோலக்கம் கொண்டிருந்த காலத்தில் பழந்தமிழ் நூல்களை ஆர்வத்தோடு வாங்கிப் பயில்பவர் குறைவாகவே இருந்தனர்.

தமிழறிந்த புலவர்கள் சிலர், பதிப்பாசிரியர்களைக் கண்ணோட்டமின்றி, குறைகூறி வந்தனர்; பதிப்பித்த நூலில் காணும் சில குறைகளை மிகுதிப்படுத்திக் காட்டினர்; மறுப்பு எழுதினர்; கண்டித்தனர்.

பதிப்பாசிரியர்கள் இத்தகைய சூழ்நிலையில், வாழ்ந்து கொண்டு, கருமமே கண்ணாய் இருந்து,

**துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி**
**இன்பம் பயக்கும் வினை**

என்ற மணிமொழிக்கு எடுத்துக்காட்டாய்ப் பல நூல்களை வெளியிட்டனர். இத்தகைய பெரியவர்கள் இம் முயற்சியில் அக் காலத்தில் ஈடுபடவில்லை என்றால் மறைந்துபோன தமிழ் நூல்களின் பட்டியல் மிகவும் நீண்டிருக்கும்.

பதிப்பாசிரியர்கள், தாம் பழைய ஏடுகளில் கண்டவற்றை எல்லாம் அப்படியே பார்த்து எழுதி வெளியிடவில்லை. ஒரு பாட்டின் அல்லது உரைப்பகுதியின் பொருளை நன்கு அறிந்த பின்னரே, தெளிவுபெற்ற பின்னரே தம் பணி முற்றுப் பெற்றதாக எண்ணினர்; தமக்கு விளங்காதவற்றை விளங்காதவை என்று குறிக்கத் தவறவில்லை. 'நாள் செய்வதை நல்லோர் செய்யார்' என்று எண்ணி, 'காலம் கனியட்டும், கருத்து விளங்கட்டும், பொருள் தெரியட்டும்' என்று பல நாட்கள் காத்திருந்தனர்.

தம்மினும் கற்றறிந்த பெரியோர்களின் உதவியைப் பெறவும் அவர்கள் தயங்கவில்லை. தொல்காப்பியம் பதிப்பித்த சி.வை. தாமோர்தரம் பிள்ளை தொல்காப்பியப் பதிப்புரையில்,

"விடியல் வெங்கதிரகாயும் வெயமல கறை என்னும் வாக்கியத்தையும், ஒரு பரிபாடற் செய்யுளையும் சரியாய்ப் பார்த்துணர்தற்கு எத்தனை பெயரிடங்கொண்டு திரிந்தேன்! எத்தனை வித்துவான்களுக்குக் கடிதம் எழுதிக் கைசலித்தேன்!" என்று குறிப்பிட்டுள்ளார்.

### புள்ளி படுத்தும்பாடு

பழைய ஏடுகளில் எழுத்துக்குப் புள்ளியிடும் வழக்கம் இல்லை. நெடில் எழுத்தின்பின் சேரும்காலுக்கும் (இடையின) ரகரத்திற்கும் வேறுபாடு இல்லாமல் எழுதப்பட்டன. இதனால் ஏற்பட்ட குழப்பமும் பிழையும் மிகுதி.

தமிழ்ப் பெரியார் செல்வக் கேசவராய முதலியார், தமிழ் என்ற நூலில்,

"(சூடாமணி நிகண்டு நூலை இயற்றிய) மண்டல புருஷரே, தேனீ எனப் பொருள்படுவதான சரகம் என்கிற வடசொல்லைச் சாகம் எனக்கொண்டு, 'சாகம் சாகினி வெள்ளாடு தேக்கெனும் தருவுதேனீ' எனத் தமது சூடாமணி நிகண்டில் பாடிவிட்டனர்" என்று கூறுகின்றார் (தமிழ் (1931) பக்கம் 39). இந்தப் பிழையான சொல் பின்னர் இலக்கியத்தில் புகுந்து விட்டது. கச்சியப்ப முனிவர் தாம் இயற்றிய 'வண்டு விடுதூது' என்னும் சிற்றிலக்கியத்தில் இச்சொல்லை ஆண்டு விட்டார்.

புள்ளி இல்லாததால் ஏற்பட்ட குழப்பங்களை இனிக் காண்போம்.

"பன்றி முள் எனப் பொருள்படும் சலலம் என்கிற வடசொல்லை மண்டல புருஷர் சல்லம் என நிகண்டில் வழங்கி விட்டார்" (தமிழ் (1931) பக்கம் 39).

குறுந்தொகைப் பாட்டு ஒன்றில் வரும் 'புனறரு பசுங்காய்' (புனல் தரு பசுங்காய்) என்ற தொடரைப் 'புன்றரு பசுங்காய்' என்று படித்துவிட்டுப் பொருள் விளங்காமல் குழம்பிக் கிடந்து பின், விளக்கம் பெற்றனர்.

நண்டு என்ற பொருளில் கள்வன், களவன் என்ற இரு சொற்களும் சங்க இலக்கிய அச்சு நூல்களில் இடம் பெறுகின்றன. கள்வன் என்பது சரியா? களவன் என்பது சரியா? இக் குழப்பம் ஒரே ஒரு புள்ளியால் வந்துவிட்டது. இதைப்பற்றி ஆராய்ச்சி

அறிஞர் ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை பின்வருமாறு கூறுகின்றார்:

"கள்வன் என்பது களவன் எனவும் வழங்கும்.

புள்ளிக் களவன் புனல்சேர் பொதுக்கம் போல்

(கலி – 88)

எனவும்,

அலவ னன்னி குளிர்ஞெண் டார்மதி
களவன் என்றிவை கற்கடகப் பெயரே

எனத் திவாகரத்தும் சான்றோர் கூறுதல் காண்க. ஐங்குறு நூற்று அச்சுப் பிரதியினும் களவன் எனப்பாட வேறுபாடு காட்டப் பெற்றுள்ளது. அகநானூற்று அச்சுப் பிரதியும் 'கள்வன் மண்ணளைச் செறிய' (அகம் - 235) என்று பாடங்கொண்டு களவன் என்பதனைப் பாட வேறுபாடாகக் காட்டிற்று" (ஐங்குறு நூறு உரை I, பக்கம் 73 (1957).

காமத்துப்பாலில், "பதிமருண்டு பைதல் உழக்கும்" என்னும் குறள் உரையில், பரிமேலழகர் பிறர் உரையாக ஒரு கருத்தைக் காட்டுகின்றார். அப்பகுதி பல பதிப்புகளில் பலவாறாக உள்ளது.

"மாலை மயங்கி வரும் போழ்தென மதி நிலை கலங்கி நோயுழக்கும் என்று உரைப்பாருமுளர்" என்று சில பதிப்பிலும், "வரும் போழ் தென்மதி நிலைகலங்கி" என்று சில பதிப்பிலும் வெளியிட்டனர். ஒரு புள்ளி படுத்திய பாட்டை விரிவாக ஆராய்ந்து நல்ல பாடத்தை அறிஞர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் காட்டியுள்ளார்.

சிலப்பதிகார முதற்பதிப்பில் 'என' என்று கொண்ட ஆசிரியப்பாக்களின் இறுதியசையை 'என்' என்று மறுபதிப்பில் திருத்தினார் டாக்டர் உ.வே.சா.

பதிப்பாசிரியர்கள், நூலாசிரியரின் பெயர் முதலியன தெரியாமல் தவித்ததும் உண்டு. யாருடைய உரை என்று அறியாமல் தடுமாறியதும் உண்டு.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் பின் நான்கு இயல்களுக்குப் பேராசிரியர் எழுதியுள்ள உரையைத் தொடக்கத்தில் நச்சினார்க்கினியர் உரை என்று கருதி அவர் உரை என்றே வெளியிட்டனர். பின்னர் ரா. இராகவையங்கார் அவ்வுரை பேராசிரியர் உரையே என்பதை, செந்தமிழ் இதழ் வாயிலாகத் (தொகுதி 1, 2) தக்க காரணங்கள் காட்டி உணர்த்தினார்.

தெய்வச்சிலையார் (தொல், சொல்) உரையை முதலில் பேராசிரியர் உரை என்றே கருதி, கரந்தைத் தமிழ்ச்சங்கம் அந்நூலைப் பற்றிய விளம்பரங்களில் குறித்தது. பின்னரே அவ்வுரை தெய்வச்சிலையார் உரை என்பது தெளிவாயிற்று.[1]

திருக்கோவையாருக்குப் பேராசிரியர் எழுதிய உரையையும், கல்லாடத்திற்கு மயிலேறும் பெருமாள் பிள்ளை இயற்றிய உரையையும் பல ஆண்டுகளாக நச்சினார்க்கினியர் உரை என்றே கருதினர். பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் சிலவற்றின் பழையவுரைகளை அவர் உரை என்றே பதிப்பித்து விட்டனர்.

டாக்டர் உ.வே.சா. "ஒரு நூலுக்குப் பல உரைகள் இருக்கின்றன. உரையாசிரியர்கள் இன்னாரென்று விளங்குவதில்லை; ஆகையால் பதிப்பித்தவர்கள் அவ்வுரைகளைத் தம் பெயரால் பதிப்பிடுவது வழக்கமாக இருந்தது" என்று கூறுகின்றார்கள்.[2]

"உரைகளில் மேற்கோளாக வரும் பாடல்கள் எந்த நூலைச் சேர்ந்தவை என்று தெரியாமல் இருந்ததும் உண்டு. உரைகளில் வரும் அரிய சொற்றொடர், பழமொழி மேற்கோள் கதை ஆகியவற்றைத் தெரிந்து கொள்ள முயன்று அலைந்த வரலாற்றைப் பதிப்பாசிரியர்கள் ஆங்காங்கு குறிப்பிட்டுள்ளனர். 'ஒரு பிடி அரிசிக்காக ஒரு குறுணி உமியையும் புடைத்து எடுக்கும் ஏழைப் பெண்போல், ஒரு சிறிய கருத்து விளக்கத்திற்காகப் பலர் கூறும் பொருத்தமற்ற செய்திகளையும் பொறுமையாகக் கேட்க வேண்டும்" என்று டாக்டர் உ.வே.சா. கூறுவதுண்டாம்.

## பதிப்பாசிரியர்கள் செய்த மாறுதல்கள்

பழைய நூல்களை அச்சேற்றிய பதிப்பாசிரியர்கள் நல்ல மாறுதல்கள் சிலவற்றையும் செய்தனர். பரிமேலழகர் உரை திருக்குறளுக்குப் பொழிப்புரையாகவே ஏட்டில் இருந்தது. அதனைப் பதிப்பித்தோர் பதவுரையாக மாற்றிப் பதிப்பித்தனர். கலித்தொகையைப் பதிப்பித்த சி.வை. தாமோதரம் பிள்ளை சில மாறுதல்களைச் செய்தார். கலிப் பாடல்களின் கொளுச் சொல், ஏடுகளில் பாட்டிற்குமுன் இருந்தது. அதை அவர் பாட்டிற்குக் கீழே அமைத்தார். பாட்டு முழுவதும் ஒருங்கு தொடர்ந்து அமையாமல் ஏதேனும் ஒரு முடிவுரையில் பாட்டின் ஒரு பகுதியும் உரையுமாக இருந்தது. இடையிடையே அற்று அற்று உரைகளின் நடுவே இருந்த பாட்டைத் திரட்டி முழுவடிவில்

1. தெய்வச் சிலையார் உரை — பதிப்புரை பக்கம் – 10 (1929)
2. சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும் (1953) பக்கம்–176.

தந்தார். பாட்டு உரை விளக்கம் என்ற முறை மாறி, தொடக்கத்தில் விளக்கமும், பின் ஏனைய பகுதியும் இருந்ததை ஒழுங்கு படுத்தினார்.[1]

பதிற்றுப்பத்தில் ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் அமைந்துள்ள பதிகத்தை, தொடக்கத்தில் அமைத்து உரை எழுதியிருப்பதும் இங்கே நினைக்கத் தக்கதாகும்.

நற்றிணை, குறுந்தொகை ஆகிய இரு தொகை நூல்களின் ஏட்டுப் பிரதிகளில் பாடலுக்குத் திணை குறிப்பிடப்படவில்லை. அவற்றை முதன் முதலில் பதிப்பித்த பின்னத்தூர் அ. நாராயண சாமி அய்யரும், திருக்கண்ணபுரத்துச் சௌரிப் பெருமாள் அரங்கனாரும் பாடல்களுக்கு ஏற்றவாறு தம் ஆராய்ச்சிக்கு உடன்பாடான முறையில் திணை வகுத்தனர்.[2]

## தமிழகத்தில் அச்சுக்கலையின் வரலாறு

இந்தியாவிலேயே முதன் முதலில் தமிழ்மொழிக்குதான் அச்சு எழுத்துக்கள் தோன்றின. முதன்முதலில் அச்சான புத்தகம், தமிழ்ப் புத்தகம்தான். தமிழ் அச்சு எழுத்துக்களை 1956 ஆண்டு (1577) கொல்லத்தில் உண்டாக்கினர். 1578 ஆம் ஆண்டில் Doctrina Christam என்ற பெயருடன் தமிழ் நூல் ஒன்று வெளியாயிற்று. (அச்சுக்கலை மா.சு. சம்பந்தன் (1960) பக்கம் 144-6) தனிநாயக அடிகள், தமிழ்த்தூது என்ற நூலில் (பக். 123, 124), 'தமிழ் மொழிதான் இந்திய மொழியில் முதன்முதலில் அச்சினைக் கண்டமொழி. 1554-ல் இலிஸ்பன் மாநகரில் இலத்தீன் எழுத்துக்களைக் கொண்டு தமிழ்ச் செபங்களை ஒலி பெயர்த்த நூல் ஒன்றினை அச்சிட்டனர்' என்று கூறுகின்றார்.

தொடக்கத்தில் வெளியான தமிழ் நூல்கள் யாவும் கிறித்துவ சமயத்தைப் பரப்பும் சின்னஞ்சிறு வெளியீடுகளே ஆகும். அச்சுக்கலை தமிழகத்தில் 16-ஆம் நூற்றாண்டின் இறுதியிலேயே தோன்றிவிட்டபோதும், அச்சிடும் உரிமை இங்குள்ள மக்களுக்கு வழங்கப்படவில்லை. அச்சுயந்திரங்கள் வாங்குதல், அச்சு எழுத்துக்களை உண்டாக்குதல், நூல்களை அச்சிட்டுப் பரப்புதல் போன்ற உரிமைகள் ஆங்கிலேயர் போன்ற அயல் நாட்டினரிடமே இருந்தன. இதனால் ஏட்டில் எழுதி வைக்கப்பட்ட பழந்தமிழ் நூல்கள் அச்சேற முடியவில்லை.

கி.பி. 1835-ஆம் ஆண்டில் உள்நாட்டு மக்கள் அச்சிடும் உரிமை பெற்றனர். அந்த ஆண்டு முதல், தமிழகமெங்கும் அச்சுயந்திரங்கள் பரவின; பழந்தமிழ் நூல்கள் அச்சேறின.

1. தமிழோசை (1955) டாக்டர் அ. சிதம்பரநாதனார், பக்கம் 129.
2. குறுந்தொகைச் சொற்பொழிவுகள் (1940) பக்கம். 6.

அச்சு எழுத்துக்களை அக்காலத் தமிழ்ப்புலவர்கள் "எழுதா எழுத்து" என்றனர்.*

கி.பி. 1835-ஆம் ஆண்டிற்கு முன்னரே, ஆங்கிலேயர்கள் தமிழ் கற்க ஏற்படுத்திய சென்னைக் கல்விச் சங்கத்தின் (1812-1854) சார்பில் மிகச் சில பழந்தமிழ் நூல்கள், பாடநூலாக அச் சங்கத்தின் சார்பில் பதிக்கப்பட்டன.

**பதிப்பாசிரியர்கள்**

''நூலாசிரியர், உரையாசிரியர், விரிவுரையாசிரியர் ஆகியோர்க்குள்ள மதிப்பு, பதிப்பாசிரியருக்கும் அளித்தல் வேண்டும் என்பது ஒப்புக்கொள்ளக்கூடிய தொன்றே. அம் மூவருக்கும் உள்ள அறிவு பதிப்பாசிரியருக்கும் இன்றி யமையாதது" (தமிழோசை - டாக்டர் அ. சிதம்பரநாதனார், (1955) பக்கம் 126).

பதிப்பாசிரியர்களை நினைக்கும்போது எளிதில் நம் நினைவுக்கு வருபவர் மூவர். தமிழ்ப் பெரியார் திரு.வி.க. "பழந்தமிழ் இலக்கிய வெளியீட்டுக்குக் கால் கொண்டவர் ஆறுமுக நாவலர்; சுவர் எழுப்பியவர் தாமோதரம் பிள்ளை; கூரை வேய்ந்து நிலையம் கோலியவர் சாமிநாத ஐயர்'' என்று கூறுகின்றார்.

இம் மூவரும் பதிப்புக்கலையை வளர்த்த கலைஞர்கள். இம் மூவரிடமும் ஒவ்வொரு தனித்தன்மை காணப்படுகின்றது.

ஆறுமுகநாவலர் தாம் பதிப்பித்த நூல்களில் பாட வேறுபாடுகளைத் தருவதில்லை. தமக்குச் சிறந்தது என்று தோன்றிய பாடத்தை மேற்கொண்டு ஏனையவற்றை நீக்கி விட்டார். தம் பதிப்பில் மிகச் சிறிய பிழையும் நேர்ந்து விடக்கூடாது என்று கண்ணும் கருத்துமாய் இருந்தார். 'நாவலர் பதிப்பு, நல்ல பதிப்பு' என்று மக்கள் போற்றினர். தேவையான இடங்களில் மிகச் சிறிய விளக்கங்களை அடிக் குறிப்பாகத் தந்தார். இவரது பதிப்பில், நூலைப் பற்றிய வரலாறு, ஆசிரியர் பற்றிய விளக்கம், ஏடுகளின் நிலை, ஆராய்ச்சி முன்னுரை எதுவும் காண முடியாது.

சி.வை. தாமோதரம் பிள்ளை, மூல ஏடுகளில் இருந்த அமைப்பு முறையைத் தேவையான இடங்களில் மாற்றினார். அரிய பெரிய முன்னுரைகளை இயற்றினார். பதிப்பிப்பதில் உள்ள இடர்ப்பாடுகளையும் ஏடுகளின் நிலையையும் விரிவாகக்

* பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம் - 106.

குறிப்பிட்டார். கலித்தொகை, சூளாமணி, தொல்காப்பியம் ஆகிய நூல்களின் முன்னுரைகளில் பல அரிய செய்திகளைக் காணலாம்.

உ.வே. சாமிநாத ஐயர் தமக்குக் கிடைத்த பலவேறு பாடங்களை அப்படியே அடிக்குறிப்பில் தந்தார். சிறந்தது என்று கருதிய பாடத்தை மேற்கொண்டார். அடிக்குறிப்பில் சிறந்த கருத்துக்களைத் திரட்டித் தந்தார். ஆராய்ச்சி முன்னுரை எழுதினார். ஏட்டுச் சுவடிகளின் நிலை, நூல் வரலாறு, ஆசிரியர் பற்றிய விளக்கம் ஆகியவற்றை நன்கு விளக்கினார்.

இவர்கள் பதிப்புத்தொண்டை விரிவாகக் காண்போம்.

## ஆறுமுகநாவலர் (1822 – 1879)

யாழ்ப்பாணத்து நல்லூரில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய ஆறுமுக நாவலர் செந்தமிழ்ப் பயிர் வளர்க்கும் சிறந்த ஆசிரியராய் — சைவ சமயத்தின் காவலராய் — பழைய நூல்களுக்கு உரை எழுதும் நல்ல உரையாசிரியராய் — உரைநடை நூல் வரையும் வித்தகராய் விளங்கியதோடு சிறந்த பதிப்பாசிரியராகவும் தொண்டாற்றினார்.

இவர் பதிப்பித்த உரை நூல்களின் பெயர்கள் கீழே தரப்படுகின்றன.

1. இலக்கணக் கொத்து (உரை)
2. தொல்காப்பியப் பாயிர விருத்தி
3. பிரயோக விவேகம் (உரை)
4. இலக்கண விளக்கச் சூறாவளி
5. சேனாவரையம்
6. திருக்கோவையார் (உரை)
7. திருக்குறள் - பரிமேலழகர் உரை

ஆறுமுக நாவலரின் பதிப்பு நலங்கள் முன்னரே கூறப்பட்டன.

## சி.வை. தாமோதரம் பிள்ளை (1832–1901)

"படிப்பாரும் எழுதுவாரும் இன்றிப் பாண வாய்ப்பட்டும், தேடுவாரும் இன்றிச் செல்லுக்கு இரையாகியும் காலாந்தரத்தில் ஒன்றொன்றாய் அழிந்தும்போம் பழைய தமிழ் நூல்களை இயன்ற மட்டும் அச்சிட்டு நிலைநிறுத்தத் தொடங்கிய"வர்களில் சி.வை. தாமோதரம் பிள்ளை ஒருவர். ஏடு தேடிப் பதிப்பிக்கும் பணியில் ஈடுபட்ட இவர், "என் சிறு பிராயத்தில் என் தந்தையார் எனக்குக் கற்பித்த சில நூல்கள் இப்போது தமிழ் நாடெங்கும் தேடியும்

அகப்படவில்லை. ஒட்டித் தப்பி இருக்கும் புத்தகங்களும் கெட்டுச் சிதைந்து கிடக்கும் நிலைமையைத் தொட்டுப் பார்த்தவர்க் கன்றோ தெரியவரும்!" என்று வருந்தி எழுதுகின்றார்.

இவர் தமிழுக்குச் செய்துள்ள தொண்டு யாவராலும் பாராட்டப்பெறும் சிறப்புடையது. பரிதிமாற் கலைஞர் இப் பெரியாரை, 'தாமோதரம்பிள்ளை சால்பெடுத்துச் சாற்ற எவர் தாமோ தரமுடையோர்?' என்று புகழ்ந்து கூறுகின்றார்.

இவர் பதிப்பித்த நூல்களின் முன்னுரைகளிலும் இவருடைய ஆராய்ச்சித்திறனைக் காணலாம்; திட்ப நுட்பமும், உவமை முதலிய அணி நலன்களும் நகைச்சுவையும் இனிமையும் பொருந்திய உரைநடைத் திறனைக் காணலாம்; தமிழ் மொழி மீது இவர் கொண்ட தணியாக் காதலைக் காணலாம்; தமிழ்த் தொண்டில் இவர்க்குள்ள ஈடுபாட்டைக் காணலாம்.

பல ஏடுகளைத் திரட்டி ஒப்புநோக்கி, மிக முயன்று ஆராய்ந்து இவர் பதிப்பித்த உரைநூல்கள் பின்வருபவையாகும்.

1. நீதிநெறிவிளக்கவுரை
2 வீரசோழியம் *(1881)*
3. தொல்காப்பியப் பொருளதிகாரம் *(1885)*
4. கலித்தொகை *(1887)*
5. இலக்கணவிளக்கம்
6. சேனாவரையம் *(1889)*
7. தொல் எழுத்து, நச்சினார்க்கினியம் *(1890)*
8. இறையனார் அகப்பொருள் உரை *(1893)*

இவ்வுரை நூல்களை இவரே முதன்முதலில் பதிப்பித்தவர்.

### டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் (1855–1942)

பழந்தமிழ் நூல்களைப் பதிப்பித்து வெளியிடும் பணியில் தம் வாழ்நாட்களைக் கழித்துவிட்ட பெரியவர் இவர்.* புதுமைக் கவிஞர் பாரதியார் இவரை,

> **பொதியமலைப் பிறந்தமொழி வாழ்வறியும்**
> **காலமெல்லாம் புலவோர் வாயில்**
> **துதியறிவாய் அவர்நெஞ்சின் வாழ்த்தறிவாய்**
> **இறப்பின்றித் துலங்கு வாயே**

என்று வாயாரப் புகழ்கின்றார்.

* பார்க்க பிற்சேர்க்கை – 8.

சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குறுந்தொகை ஆகிய நூல்களை இவருக்கு முன்னரே தமிழறிஞர்கள் பதிப்பித்து வெளியிட்டுள்ளனர்.

சீவகசிந்தாமணியை 1868-ஆம் ஆண்டு நாமகள் இலம்பகம் மட்டும், எச். பவர் (Rev. H. Bower) ஆங்கில விளக்கத்துடன் வெளியிட்டார். ப. ரங்கசாமிப் பிள்ளை 1883-ஆம் ஆண்டில் பதுமையார் இலம்பகம் வரை வெளியிட்டார். டாக்டர் ஐயர் 1888-ஆம் ஆண்டில் நச்சினார்க்கினியர் உரையுடன் சீவக சிந்தாமணியைத் திருத்தமாக வெளியிட்டார். சிந்தாமணியை வெளியிடுமாறு டாக்டர் ஐயரைத் தூண்டியவர் சேலத்தில் வாழ்ந்த இராமசாமி முதலியார். அப் பெரியவர் இறந்துபோன செய்தியைக் கேட்டபோது தம் நெஞ்சத்தில் தோன்றிய எண்ண அலைகளைப் பின்வருமாறு டாக்டர் ஐயர் தம் வாழ்க்கை வரலாற்றில் எழுத்து வடிவில் தருகின்றார்.[1]

"1892-ஆம் வருஷம் மார்ச்சு மாதம் இரண்டாம் தேதி அவர் (இராமசாமி முதலியார்) உலக வாழ்வை நீத்தார். அந்தத் துக்கச் செய்தியைக் கேட்டு நான் துடித்துப்போனேன். அவருடைய பழக்கம் எனக்கு ஏற்பட்டதையும் அதனால் பழந்தமிழ் நூலாராய்ச்சியிலே நான் புகும்படி நேர்ந்ததையும் எண்ணிப் பார்த்தேன். அவ்வுருடைய தூண்டுதல் இல்லாவிட்டால் சிந்தாமணியை நான் அச்சிடுவது எங்கே? சங்க நூல்களின் பெருமையை உணர்ந்து இன்புற்று வெளிப்படுத்தும் முயற்சிக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்?"

சீவகசிந்தாமணியை நன்கு பதிப்பித்துத் தேர்ச்சி பெற்ற பின், டாக்டர் ஐயர் பல தமிழ் நூல்களை ஒன்றன்பின் ஒன்றாய் வெள்ளியிட்டார். சிலப்பதிகார்த்தை 1892-ஆம் ஆண்டில் அரும்பதவுரை, அடியார்க்கு நல்லார் உரை ஆகியவற்றுடன் வெளியிட்டார். இவருக்கு முன்னரே 1872-ஆம் ஆண்டில் சோடசாவதானம் சுப்பராய செட்டியாரும், 1876-ல் (புகார்க் காண்டம் மட்டும்) தி.ஈ. ஸ்ரீவாச ராகவாசாரியரும் தாமே உரை எழுதி வெளியிட்டுள்ளனர்.

மணிமேகலையை ஐயர் 1898-ஆம் ஆண்டில், குறிப்புரை யுடன் வெளியிட்டார். ஆனால், அதற்கு முன்னரே மணிமேகலை 1894-ஆம் ஆண்டில் திருமயிலை சண்முகம் பிள்ளையால் வெளியிடப்பட்டது.

இவ்வாறு இவருக்கு முன்னரே இந்த நூல்களும் பிறரால் வெளியிடப்பட்டிருப்பினும் செவ்வையாகவும் திருத்தமாகவும்

பதிப்பித்து ஆராய்ச்சிப் பகுதிகளைச் சேர்த்த பெருமை இவருக்கு உண்டு.

எட்டுத்தொகை நூல்களுள் நற்றிணை, கலித்தொகை, அகநானூறு தவிர ஏனைய ஐந்து நூல்களைப் பழைய உரைகளுடன் மிகத்திருத்தமாக வெளியிட்டார். பத்துப்பாட்டை நச்சினார்க்கினியர் உரையுடன் பதிப்பித்தார். நன்னூலை, மயிலைநாதர் உரை, சங்கர நமச்சிவாயர் உரை ஆகிய இரு உரைகளுடன் பதிப்பித்தார். இவைகளேயன்றிப் பல சிற்றிலக்கியங்களைப் பதிப்பித்தார்.

ஆராய்ச்சியாளருக்கு இவரது பதிப்புப் பெரிதும் பயன்படுகிறது. இவர் பதிப்பித்த எல்லா நூல்களின் முன்னும் பின்னும் ஆராய்ச்சிக் குறிப்புகள் நிறைந்திருக்கும்; நூலாசிரியர் உரையாசிரியர் பற்றிய வரலாறுகள் இடம் பெற்றிருக்கும்; உரையில் காட்டப்பட்ட மேற்கோள் நூல்களின் பட்டியல் சேர்ந்திருக்கும்; செய்யுள் அகராதியும் அரும்பத அகராதியும் தரப்பட்டிருக்கும்.

ஒரு பெரிய தமிழ்ப் பேரவையில் பல புலவர்கள் கூடிப் பல ஆண்டுகள் பொறுமையாக ஆய்ந்து பதிப்பித்திருக்க வேண்டிய பல நூல்களை இவர் ஒருவரே பதிப்பித்துப் பெருந்தொண்டு ஆற்றியுள்ளார். இப் பெரியவர் தமிழ்மொழிக்குச் செய்த அரிய பெரிய தொண்டுகளை நன்றியுணர்ச்சியுடன் நினைத்துப் போற்றி டாக்டர் வ.சுப. மாணிக்கம் பின்வருமாறு புகழ்கின்றார்:

**பார்காத்தார் ஆயிரம்பேர் பசித்தார்க் காகப்**
**பயிர்காத்தார் ஆயிரம்பேர் பாலர்க் காக**
**மார்காத்தார் ஆயிரம்பேர் வாழ்ந்த நாட்டின்**
**மனங்காத்த தமிழ்த்தாய்என் உடைமை எல்லாம்**
**யார்காத்தார் ? எனக்கேட்க ஒருவன் அம்மா**
**யான்காப்பேன் எனஎழுந்தான் சாமிநாதன்**
**நீர்காத்த தமிழகத்தார் நெஞ்சின் உள்ளான்**
**நிலைகாத்த மலைஇமய நெற்றி மேலான் !**

### பிற பதிப்பாசிரியர்கள் (19–ஆம் நூற்றாண்டு)

பழந்தமிழ் நூல்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே அச்சேறி வெளிவந்தன. கி.பி. 1812–ஆம் ஆண்டிலேயே திருக்குறளும் நாலடியாரும் அச்சாகி வெளிவந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் இருந்த பதிப்பாசிரியர்கள், பதிப்பித்த நூல்கள் ஆண்டு ஆகியவற்றை ஆராய்ச்சி அறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி தொகுத்துத் தந்துள்ளார். அவற்றுள்

உரைநூல்களை வெளியிட்ட பதிப்பாசிரியர் பட்டியல் கீழே உள்ளது.

## பதிப்பாசிரியர் பட்டியல்*

| பதிப்பாசிரியர் | உரைநூல் | இடம் | ஆண்டு |
|---|---|---|---|
| இராமாநுச கவிராயர் | திருக்குறள் – பரிமேலழகர் உரை | சென்னை | 1840 |
| சரவணப் பெருமாள் ஐயர் | வாக்குண்டாம், நல்வழி – உரை | — | 1859 |
| கந்தசாமி ஐயர் | நைடதம் – உரை | — | 1842 |
| மயிலை சண்முகம் பிள்ளை | தஞ்சைவாணன் கோவை சொக்கப்ப நாவலர் உரை | சென்னை | 1843 |
| கோவிந்தபிள்ளை | வில்லிபாரதம் (சபா பர்வம்) உரை | — | 1868 |
| தி.ஈ. ஸ்ரீநிவாச ராகவாச்சாரியார் | நளவெண்பா உரை – சிலப்பதிகாரம் – புகார்க்காண்டம் பதிப்பாசிரியர் உரை | சென்னை | 1870 1876 |
| சுப்பராய செட்டியார் | சிலப்பதிகாரம் பழமொழி நானூறு பதிப்பாசிரியர் உரை | சென்னை | 1872 1874 |
| வாசுதேவ முதலியார் | நான்மணிக்கடிகை கோ. இராசகோபால பிள்ளை உரை | — | 1879 |
| சிதம்பர கவி | கூர்ம புராணம் உரை | — | 1883 |

### இருபதாம் நூற்றாண்டில் பதிப்பாசிரியர்கள்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றி இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்து பழமைக்கும் புதுமைக்கும் பாலம் அமைத்துப் புகழ்பெற்ற பதிப்பாசிரியர்கள் பலர் உள்ளனர். டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் *(1855–1942)* இக்காலப் பகுதியைச் சேர்ந்தவரே. பதிப்புக்கலையில் எண்ணிறந்த அறிஞர்கள் ஈடுபட்டுப் பணியாற்றியுள்ளனர்; அவர்கள் அனைவரையும் குறிப்பிட்டு அவர்கள் செய்த தமிழ்ப் பணிபற்றித் தனியாக ஒரு நூலை இயற்றலாம்.

* 19ஆம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம் – பக்கம் 379–891 மயிலை சீனி. வேங்கடசாமி.

## ரா. இராகவையங்கார் (1870–1948)

இவர் வடமொழி, ஆங்கிலம் ஆகிய இருமொழி அறிந்து தமிழ் மொழியில் வளமான புலமை பெற்ற ஆராய்ச்சியாளர். அகநானூறு பதிப்பிப்பதில் கோபாலையருக்குப் பெரிதும் உதவிசெய்து பெருமை பெற்றவர். “டாக்டர் உ.வே. சாமிநாதையரைப் போலவே, இவரும் நமது பண்டை நூற்க(ந)வூலங்களைத் தேடித் தொகுத்து வைத்தலில் பேரூக்கம் கொண்டவர். இவர் நூற்பதிப்பு முயற்சியை மேற்கொண்டிருந்தால் அந்த நெறியிலும் இவர் தலைசிறந்தவராயிருப்பார் என்பதில் ஐயமில்லை.”*

## எஸ். வையாபுரிப்பிள்ளை (1891–1956)

ஆங்கிலமும் தமிழும் வல்ல ஆராய்ச்சி அறிஞர் இவர். பலவேறு தமிழ்த்துறைகளில் பணியாற்றிய இப் பெரியவர் கணக்கற்ற ஓலைச்சுவடிகளை முயன்று தேடித் தொகுத்தார்; நூற்பதுக்கு மேற்பட்ட நூல்களைப் பதிப்பித்தார். களவியற் காரிகை, நவநீதப் பாட்டியல் ஆகிய இரண்டு நூல்களையும் பழைய உரைகளுடன் — ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் திருத்தமாக வெளியிட்டார். கப்பலோட்டிய தமிழர் வ.உ.சி. பதிப்பித்த தொல்காப்பியம் இளம்பூரணர் உரையைப் பதிப்பிக்க இவர் பெரிதும் உதவினார்.

## வ. உ. சிதம்பரம் பிள்ளை (1872–1936)

விடுதலைப் போராட்டத்தில் பெரும் பங்கு கொண்டவர் என்றும், கப்பலோட்டிய தமிழர் என்றும். வ.உ.சி. அவர்களை நாடு நன்கு அறியும். இவரது தமிழ்த்தொண்டினை அறிந்திருப்பவர் மிகக் குறைவே. இவர் திருக்குறள் மணக்குடவர் உரை, தொல்காப்பியம் இளம்பூரணர் உரை ஆகிய இரு உரை நூல்களையும் வெளியிட்டவர்.

## கா. நமச்சிவாய முதலியார் (1876–1981)

வட ஆர்க்காடு மாவட்டம் காவேரிப்பாக்கத்தில் தோன்றி, சிறந்த தமிழாசிரியராக விளங்கிய இவர், தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம், இறையனார் களவியல் உரை, தொல்காப்பியம் சொல்லதிகாரம் இளம்பூரணம் ஆகியவற்றைத் திருத்தமாய்ப் பதிப்பித்தார்.

* தமிழ்ச்சுடர் மணிகள் 1949 பக். 200; எஸ். வையாபுரிப்பிள்ளை.

### பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (1862–1914)

பழந்தமிழ் நூல்களில் ஆழ்ந்த புலமையுடைய இவர் தஞ்சை மாவட்டத்தினர். நற்றிணைக்கு உரை எழுதிப் பதிப்பித்த பெருமைக்கு உரியவர் இவர்.

### இ.வை. அனந்தராமையர் (1872–1931)

ஆராய்ச்சித்திறன் மிகுந்த தமிழ்ப்புலமையார் இவர். தஞ்சை மாவட்டம் இடையாற்று மங்கலம் என்னும் ஊரினர். கலித்தொகை - நச்சினார்க்கினியர் உரையைப் பலவகை அரிய ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் வெளியிட்டுப் புகழ் பெற்றவர்.

### கரந்தைக் கவியரசு ரா. வேங்கடாசலம்பிள்ளை (1858–1953)

முறையாகத் தமிழ்பயின்ற இவர், பல ஆண்டுகள் ஆசிரியராகப் பணியாற்றியவர். தொல்காப்பியம் சொல்லதிகாரம் தெய்வச் சிலையார் உரை பதிப்பித்தவர்.

### ச. பாவானந்தம் பிள்ளை (?–1932)

இவர் தமிழும் ஆங்கிலமும் கற்ற அறிஞர். இவர் தம் பெயரால் கல்விக்கழகம் ஒன்றைப் பெரும் பொருட்செலவில் நிறுவினார். நாற்பதாண்டுகள் அரிதில் முயன்று பழந்தமிழ் நூல்களைத் திரட்டித் தொகுத்தார். பல உரை நூல்களை அச்சிட்டார். தொல்காப்பியம் பொருளதிகாரம் (நச்சினார்க் கினியர் உரை, பேராசிரியர் உரையுடன்) யாப்பருங்கல விருத்தியுரை, இறையனார் அகப்பொருள் உரை, வீரசோழியவுரை ஆகியவை இவர் பதிப்பித்த உரை நூல்களாகும்.

### தெ.பொ. பழனியப்ப பிள்ளை

தமிழும் ஆங்கிலமும் வல்ல ஆராய்ச்சி அறிஞர் திரு வேங்கடவன் கீழைத்துறை ஆராய்ச்சிப் பகுதியில் பணியாற்றிய இவர், அங்கே இருந்த பழைய ஓலைச் சுவடிகளில் காணப்பட்ட திருக்குறள் — காலிங்கர், பரிப்பெருமாள் உரையை வெளியிட்டார்.

### ச. தண்டபாணி தேசிகர்

சைவமும் தமிழும் தழைத்தோங்கப் பெருந்தொண்டு புரிந்த ஆராய்ச்சியாளர் இவர். நன்னூல் - சிவஞான முனிவர் விருத்தியுரையைத் திருத்தமுற வெளியிட்டுள்ளார். அப்பதிப்பில், காலப் பழமையால் நூலில் ஏறிய பிழை, அறியாமையால் திருத்திவிட்ட பாடபேதம், விளக்கமற்றிருந்த பகுதி ஆகியவற்றை

2.46

விளக்கியுள்ளார். ஆராய்ச்சிக் குறிப்புக்கள் சேர்த்துள்ளார். 'திருக்குறள் - உரைவளம்' பதிப்பித்து அழியாப் புகழை எய்தினார். உரை வளத்தில் ஒப்பிட்டுநோக்கும் பார்வையை வழங்கியவர் இவரே.

### மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை

ஆழ்ந்த இலக்கணப் புலமையாளர். பதிப்புக்கலையில் வல்லவர். புலமை உலகம் மதிக்கும் வகையில் பழைய நூல்களைத் திருத்தமாகப் பதிப்பித்தவர். யாப்பருங்கல விருத்தியுரை, யாப்பருங்கலக் காரிகையுரை, இறையனார் அகப்பொருள் உரை, தொல்காப்பியம் சொல்லதிகாரம் நச்சினார்க்கினியர் உரை ஆகியவற்றை மிக அழகாகக் குறைபாடு எதுவும் இன்றிப் பதிப்பித்துள்ளார்.

### வேண்டும் !

தமிழகத்தில் பதிப்புக்கலை இன்னும் வளர்ந்து முழுமை எய்தவில்லை. பதிப்புக் கலையில் இன்னும் எத்தனையோ நுணுக்கங்களை அறிந்து போற்ற வேண்டும். பழைய மூல நூல்களைத் தேடிச் சரியான பாடத்தை உறுதி செய்தல், அழகான முறையில் அச்சேற்றுதல், அச்சுப்பிழை நேராமல் கவனித்தல், ஆராய்ச்சி முன்னுரை, அருஞ்சொல் அகராதி, பொருள் அடைவுப் பட்டியல், ஒப்புமைப் பகுதிகள், பிற பாடங்களைத் தவறாமல் சேர்த்தல் போன்ற பணிகளை விழிப்போடு செய்தல் வேண்டும்.

தமிழில் வெளிவரும் அச்சு நூல்களில் உள்ள பிழைகளை நீக்கியாவது அடுத்து வரும் பதிப்புகள் பாராட்டுப் பெறுதல் வேண்டும். தமிழ்ப் பெரியார் திரு.வி.க. பதிப்பாளர்களுக்குப் பின்வரும் வேண்டுகோள் விடுக்கின்றார்.

"மேல் நாடுகளில் வெளியிடப்படும் நூல்களில் அச்சுப் பிழை உறுதல் அரிது. முதற்பதிப்பில் ஒரு வேளை பிழையுற்றாலும் இரண்டாம் பதிப்பில் அப்பிழைகளைக் களைவதில் வெளியிடுவோர் பெருங்கவலை செலுத்துவர். நமது நாட்டில் முதற் பதிப்பில் உறும் பிழைகளைப் பார்க்கிலும் பின்வரும் பதிப்புக்களில் புதுப்பிழைகள் மலிந்து வருகின்றன. நூல்களை வெளியிடும் கூட்டத்தார் கவலையீனத்தை என்னென்று கூறுவது? இக்குறை நீக்கித் தமிழ்ப்பற்றுடையார் ஒருவழிகோலல் ஆகாதா?"[1]

1. பட்டினத்தார் பாடல் விருத்தியுரை (1923) முகவுரை பக்கம். 5,6.

# 6. திருத்த வேண்டிய உரைப் பகுதிகள்

இலக்கணக் கொத்தின் ஆசிரியர்,

**நூல்,உரை, போதகா சிரியர் மூவரும்**
**முக்குண வசத்தான் முறைமறைந் தறைவரே**

என்று கூறியுள்ளார். இம்மூவரோடு பதிப்பாசிரியர்களையும் நாம் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

"ஏடு எழுதுபவர், அச்சு எழுத்துக்களைக் கோப்பவர், பதிப்பிப்பவர் ஆகிய எல்லோரும் எல்லாம் தெரிந்தவராய் இருத்தல் இயலாது ஆதலின், அவருள் யாரையும் குறை கூறாமலும் நம்பாமலும் ஒவ்வொருவரும் உண்மை காண முயல வேண்டும்" என்று தமிழறிஞர் மு. அருணாசலம் பிள்ளை கூறியிருப்பது போற்றத்தக்கதாகும்.[1]

பழைய நூல்களைப் பதிப்பிக்கும் வாய்ப்புப் பெறாத கற்றறிந்த அறிஞர்கள் அச்சு நூல்களில் ஆங்காங்கே கூறி வந்துள்ள திருத்தங்கள் பலவாகும். அவர்கள் தம் மாணாக்கர்களுக்குப் பாடம் சொன்னபோது அச்சுநூல்களில் இருந்த பிழைகளை எடுத்துக்ககாட்டி, பொருத்தமான பாடங்களை விளக்கியுள்ளனர். தமிழ்ச் சான்றோர் சிலர் தாம் பலகாலும் பயின்ற நூல்களில் தமக்குச் சரி என்று தோன்றிய பல திருத்தங்களைக் குறித்து வைத்ததும் உண்டு; சிலவற்றை எழுதி வெளிப்படுத்தியதும் உண்டு. பழைய நூல்களை மறுமுறை புதிதாக, பதிப்பிக்க முன் வருவோர் இத்தகைய நல்ல திருத்தங்களை அறிந்து போற்றி மேற் கொள்ள வேண்டும்.

**புதியன கண்ட போது**
**விடுவரோ புதுமை காண்பார்**

என்று உலகம் மதிக்கும்வகையில், புதிய பதிப்பாசிரியர்கள் விளங்க வேண்டும். இன்றேல், அறிஞர் பெருமக்கள் கண்டறிந்த பல நல்ல திருத்தங்கள், கடலில் கரைத்த பெருங்காயமாய்ப் போய்விடும்.

பிரயோகவிவேக நூலார், "இளம்பூரணரும் போலி எழுத்தைக் கொள்ளற்க என்று கூறாமை அவர் உரையிற் காண்க" என்று எழுதியுள்ளார் (பிரயோக காரக படலம் - 5). ஆனால், இன்று வெளியாகியுள்ள அச்சு நூல்களில் இளம்பூரணர் உரையில் போலி எழுத்தைப் பற்றிக் குறிப்பிடும் இடத்தில் 'கொள்ளற்க' என்று (நச்சினார்க்கினியர் உரைப் பகுதியில் உள்ளவாறே) எழுதப்

1. 1008 ஆவது நூல் வெளியீட்டு விழா மலர் கழக வெளியீடு (1961)

பெற்றுள்ளது. இதனை அறிஞர் பெருமக்கள் ஆராய்ந்து திருத்த வேண்டும்.

உயிரியலில் ''பேஎ நாம்'' என்ற சூத்திரத்திற்குத் தெய்வச்சிலையார் எழுதிய விளக்கத்தின் அடிக்குறிப்பில் கரந்தைத் தமிழ்ச் சங்கப் பதிப்பில் பின்வரும் செய்தி சேர்க்கப்பட்டுள்ளது.

"நாம நல்லார் எனப்பல உரைகளுள்ளும் காணப்படும் இதனைப் பண்டித திரு.அ. கோபாலையர் அவர்கள் அருள் கூர்ந்து ஆய்ந்து 'நாமநல்லரா' என இருத்தல் வேண்டும் என்றனர். இதுவும் பொருத்தம் உடையதே."

ஆனால், சாலவும் பொருத்தமுடைய இத் திருத்தம் இன்னும் பலரால் ஏற்று கொள்ளப்படாமல், நாமநல்லார் என்றே அச்சிடப்பட்டு வருவது வருந்தத் தக்கதாகும்.

பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார், பலகாலும் போற்றிப் பயின்று வந்த தொல்காப்பியம் பொருளதிகார நச்சினார்க்கினியர் உரை நூலில் — பொருளியலில் — உடனுறை உவமம் என்னும் சூத்திரவுரையில் *(பொருளியல் - 48)* "இறைச்சி தானே *(229)*, இறைச்சியிற் பிறக்கும் *(230)* என்பனவற்றுள் இறைச்சிக்குக் காரணம் காட்டினாம்" என்றும், "அன்புறு தகுந *(231)* என்பதனுள் ஏனையதற்குக் காரணம் காட்டினாம்" என்றும் வரும் உரைப் பகுதிகள் பொருத்தமின்மை கருதித் திருத்தியுள்ளார். இறைச்சிக்குக் காரணம் என்பதை **இறைச்சிக்கு உதாரணம்** என்றும்; ஏனையதற்குக் காரணம் என்பதை **ஏனையதற்கு உதாரணம்** என்றும் திருத்தியுள்ளார். எவ்வளவு அருமையான திருத்தங்கள் இவை!

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பல ஆண்டுகள் தமிழ்ப்பணி புரிந்த வித்துவான் திரு.மு. அருணாசலம் பிள்ளை அச்சு நூல்களில் செய்யவேண்டிய திருத்தங்கள் பலவற்றைக் குறிப்பிட்டுள்ளார். அவைபற்றி அவர் எழுதிய கட்டுரைகள் சில உண்டு.

இளம்பூரணர் பொருளதிகார உரையில் திருத்தம் அடைய வேண்டிய பகுதிகள் பல உண்டு என்பது அவர் கருத்து. இளம்பூரணர் உரையில் செய்யுள் இயலில், தொகை வகை பற்றிய விளக்கம் வருகின்றது. அக்கணக்குப் பற்றியும் இளம்பூரணர் உரையில் செய்யவேண்டிய திருத்தம் பற்றியும் அரிய கட்டுரை ஒன்றினை அவர் எழுதியுள்ளார்.*

* **1008**ஆவது நூல் வெளியீட்டு விழாமலர் (கழக வெளியீடு 1961) தொல்காப்பியத்தில் ஒரு சூத்திரம் — மு. அருணாசலம் பிள்ளை.

மேலும், அவர் பொருளதிகார உவமையியலில் பேராசிரியர் உரையில் செய்யவேண்டிய மாறுதல்களைப் பற்றிச் செந்தமிழ்ச் செல்வியில் (தொகுதி - 23) இரு கட்டுரைகள் எழுதியுள்ளார்.

பல அரிய நூல்களை மிகத் திருத்தமாக வெளியிட்ட டாக்டர் உ.வே.சா. அவர்களின் சிந்தாமணிப் பதிப்பிலும் திருத்தமடைய வேண்டிய பகுதிகள் உள்ளன என்பதை எஸ். வையாபுரிப் பிள்ளை கூறுகின்றார்.

"இவர் (உ.வே.சா.) பதிப்பில் திருத்தவேண்டிய இடங்கள் இல்லையென நினைப்பதும் தவறு. சீவக சிந்தாமணியில் நான்கு பதிப்புக்கள் வெளிவந்து விட்டன; என்றாலும் பல இடங்கள் திருத்தம் பெற வேண்டியனவாக உள்ளன. சைவ சமாசப் பதிப்பின் முன்னுரையில் (1941) என்னால் காட்டப்பட்டுள்ளன. உதாரணத்தின் பொருட்டு இங்கே வேறு சில காட்டுகிறேன்"* என்று கூறிப் பல திருத்தங்களை (நச்சினார்க்கினியர் உரையிலும் மூலத்திலுமாக) எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

சிந்தாமணி மூலத்தில் செய்யவேண்டிய வேறு சில திருத்தங்களை மு. அருணாசலம் பிள்ளை செந்தமிழ் இதழ்களில் வெளியிட்டுள்ளார்.

இன்னும் பலவகை திருத்தங்களை அறிஞர் பெருமக்கள் அறிந்திருக்கக்கூடும். அவற்றை எல்லாம் தொகுத்து ஆராய்ந்து புதிய பதிப்புக்களில் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

பழைய உரைகளில் திருத்தவேண்டிய பகுதிகள் இருப்பது போலவே, இக்காலத்தார் எழுதும் புதிய உரைகளிலும் பொருத்தமற்ற விளக்கங்கள் உள்ளன. அவற்றையும் திருத்த வேண்டும்.

சங்க நூல்களில் வரும் 'தூங்கும்' என்ற சொல்லுக்கு உறங்கும் என்று பொருள் எழுதப்பட்டுள்ளது. எத்தகைய பெரும் பிழை இது!

குவளை உண் கண் என்பதற்கு 'ஆளை உண்பதுபோல் பார்க்கும் குவளை மலர் போன்ற கண்' என்று எழுதி மரபைச் சிதைக்கின்றனர்!

சங்க இலக்கியத்தில் வரும் 'தோன்றி' என்பதற்குக் காந்தள் என்றே பொருள் எழுதுகின்றனர். காந்தள் வேறு, தோன்றி வேறு.

**சினைவளர் வேங்கை கணவிரி காந்தள்**
**தாய தோன்றி தீயென மலர**

**(பரி: 11, 20-21)**

---

* தமிழ்ச்சுடர் மணிகள் (1947) பக்கம் 248, 249.

என்று பரிபாடலிலும், குறிஞ்சிப் பாட்டிலும் (62, 90) காந்தளும் தோன்றியும் வேறு வேறாகவே குறிப்பிடப்படுகின்றன.

இத்தகைய பிழைகளைக் களைந்து திருத்தமான உரை காணுதல் வேண்டும்.

**உரைச்சிதைவு***

ஒரு சூத்திரத்திற்கு அமைந்த உரையைப் பதிப்பித்தோர் சிதையச் செய்திருப்பதைக் காண்போம்.

**அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்**
**இயற்கைய வாகும் செயற்கைய என்ப**

என்பது இகர ஈற்று அளபெடைப்பெயர் விளியேற்கு மாற்றைக் கூறுகின்றது.

**இளம்பூரணர் உரை**

இச்சூத்திரம் இகரம் ஈறாயின், இயல்பாயே விளியேற்கும் என்றவாறு.

**வரலாறு:** தொழீஇ என வரும். பெயர் நிலையும் விளி நிலையும் அதுவே நிற்குமாறு.

'இனிச் 'செயற்கைய' என்றதனால், இரண்டு மூன்று மாத்திரை பெற எழுதுவாரும், ஐந்து மாத்திரை பெற எழுதுவாரும் என இரு திறத்தார் ஆசிரியர் என உணர்க'.

**சேனாவரையர் உரை**

அளபெடை தன்னியல்பு மாத்திரையின் மிக்கு நான்கும் ஐந்தும் மாத்திரை பெற்று நிற்கும் இகரவீற்றுப்பெயர். இ ஈயாகாது இயல்பாய் விளியேற்கும் செயற்கையை உடையவாம் என்றவாறு,

'அளபெடை மிக்கு இயற்கையவாகும் செயற்கைய' என்னாது, 'மிகூஉம் இகர விறுபெயர்' என அனுவதித்தாரேனும், மாத்திரை மிக்கு இயல்பாம் என்பது அதனாற் பெறப்படும்.

**உதாரணம்: தோழீஇ** எனவும், **தோழீஇஇ** எனவும் வரும்.

இ ஈயாகாமையின், 'இயற்கையவாகும்' என்றும், மாத்திரை மிகுதலாகிய செயற்கையுடைமையால், 'செயற்கைய' என்றும் கூறினார்.

'இகரவிறுபெயர்' என்றது, 'இகரத்தான் இற்ற பெயர்' என விரியும்.

* தமிழ் அன்றும் இன்றும்; பக் : 38–40. மகா வித்துவான் மே.வீ. வேணு கோபாலப் பிள்ளை.

### தெய்வச் சிலையார் உரை

'இகரவீற்றுக்கண் வருவதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.'

'அளபெடை மிக்க இகரவீற்றுப் பெயர் இயற்கையவாகிய செய்தியையுடைய' என்றவாறு.

**'உ.ம். தோழீஇ** என்பது, விளிக்கண்ணும் அவ்வாறே வரும். 'செயற்கை' என்றதனான், விளிக்கண் வரும் ஓசை வேறுபாடு அறிந்துகொள்க.

### நச்சினார்க்கினியர் உரை

'அளபெடை தன் இயல்பு மாத்திரையின் மிக்கு நான்கு மாத்திரை பெற்று நிற்கும் இகரவீற்றுப் பெயர், இ ஈயாகாது இயல்பாய் விளியேற்கும் செயற்கையை உடைய என்று கூறுவர் ஆசிரியர்', என்றவாறு.

'உ.ம். **தொழீஇஇ !**

என வரும். **தொழீஇஇஇ** என ஐந்தெழுத்தும் இட்டு எழுதுப.

'இகர ஈற்றுப் பெயர்' எனவே, நெட்டெழுத்து அளபெடுத்தது அன்று; குற்றெழுத்தே நின்று மாத்திரை பெற்றது என்று உணர்க. இது 'தொழில் செய்கின்றவளே!' என்னும் பொருள் தந்து நிற்பதோர் சொல்.

இங்குக் காட்டிய **'தொழீஇ'** என்னும் சொல்லின் உண்மை வடிவை அறியாத ஏடெழுதுபவர்கள் 'தோழீஇஇஇஇ' எனவும், 'தொழீலீஇஇஇஇஇ' எனவும் பிழைபட எழுதினார்கள். 'நான்கெழுத்தும் ஐந்தெழுத்தும் இட்டு எழுதுப', என்னும் உரை விளக்கத்தை உணராத ஏடெழுதுவோர், நான்கெழுத்தும் ஐந்தெழுத்தும்' என்றதை அளபெழுந்ததற்கு அறிகுறியாக எழுதிய எழுத்தெனப் பிறழ உணர்ந்து, நான்கும் ஐந்தும் இகரம் இட்டுப் படியெடுத்ததாலும், 'தொழீஇ' என்னும் சொல் வடிவமும் பொருளும் அறியாமையால், 'தோழீஇ' என்றும், 'தொழிலீஇ' என்றும் எழுதிப் படித்ததாலும் நேரிட்ட பிழையென்பதை உணராமையால், வழுவிய இப்பாடம் அச்சில் இடம் பெறலாயிற்று என்பது புலனாகும்.

---

## 7. காலம் தந்த விளக்கம்

பெரிய நகரம் ஒன்றில் திருவிழா நடக்கின்றது. பல்லாயிரக் கணக்கான மக்கள், பலப்பல ஊர்களிலிருந்து திருவிழாக் காணத்

திரண்டு வருகின்றனர். தேரோடும் நெடுந் தெருவில் வெள்ளித்தேர் வருகின்றது. அத்தேரில் கூத்தப்பெருமானின் சிலை, கண்கொள்ளாக் காட்சியாய்ப் பொலிகின்றது. சிலைவழங்கும் கலையழகில் — முகத்தில் தவழும் மோன எழிலில் — ஆடல் திறத்தில் அடியவர்கள் மூழ்கித் தம்மை மறக்கின்றனர்.

அக்காட்சியைக் காணச் சிற்றூரிலிருந்து தந்தையும் மகனுமாய் இருவர் வருகின்றனர். பெருங்கூட்டத்தின் நடுவே சிக்கி ஆண்டவனின் திருக்கோலத்தைக் காண இயலாது அவர்கள் தவிக்கின்றனர். தந்தைக்கு வெள்ளித்தேரும், கலையழகு வாய்ந்த சிலையும் பாதியளவே தெரிகின்றன. அந்த நிலையில் அவர் நிறைவு அடைந்து தன் மகனைத் தூக்கித் தம் தோளின் மீது அமர்த்துகின்றார். தந்தையின் தோள், மகனைச் சுமக்கின்றது. தந்தையின் தலையைவிட மகனின் தலை இப்போது உயர்ந்து விட்டது. தந்தைக்குத் தெரியாத பல இனியகாட்சிகள் — அழகுக் கோலங்கள் மகனுக்குத் தெரிகின்றன. மகிழ்ச்சி மிகுதியால் அந்தச் சிறுவன் கூச்சலிடுகிறான். "அப்பா அதோபார்! இங்கே பார்! இதைப்பார்!" என்கிறான். தந்தை அமைதியாக, "நீயே பார். உனக்குத் தெரிந்தால் போதும்!" என்கிறார். பின்னர்ச் சிறுவன் தன் தந்தைக்குத் தெரியாத பல காட்சிகளை, தான் கண்டுவிட்டதாய் மகிழ்கின்றான். தந்தை அறியாத பலவற்றைத் தான் அறிந்துகொண்டதாய்ப் பூரிக்கின்றான்; 'எனக்குத் தெரிபவை என் அப்பாவுக்குத் தெரியவில்லையே!' என்றும் நினைக்கின்றான்.

தந்தையின் தோள் மீது இருந்துகொண்டு மகிழும் சிறுவனின் மனநிலையே 'உரையாசிரியர்களின் உரைகளைக் கற்று, அவர்களிடம் குறை காண்பவரிடம் உள்ளது. "நமக்குத் தெரிபவை உரையாசிரியர்களுக்குத் தெரியவில்லையே!" என்று நினைப்பவர்கள், தாம் உரையாசிரியர்களின் தோள் மீது இருப்பதை நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

உரையாசிரியர்களுக்கு இல்லாத. பலவகை வாய்ப்புகள் இன்றுள்ளவர்க்கு ஏற்பட்டுள்ளன. ஆதலின் உரையாசிரியர் களுக்குத் தோன்றாத விளக்கமும், விளங்காத புதுப்பொருளும் இன்றுள்ள சிலருக்குத் தோன்றுவதும் விளங்குவதும் இயல் பானவை. காலம்தரும் புது விளக்கங்களைப் போற்றுதல், பழமையைப் புறக்கணிப்பதாகாது; உரையாசிரியர்களிடம் குறை காணும் நோக்கம் உடையதும் அன்று.

காலம் தந்த அரிய கருத்து விளக்கங்கள் சிலவற்றை இங்கே காண்போம்.

## எழுதாத உரை

ஏட்டில் எழுதிவைக்காமல், மன்றங்களில் சொற்பொழி வாற்றியபோதும், மாணவர்களுக்குப் பாடம் சொன்னபோதும், அறிஞர்கள் ஒன்றுகூடி அளவளாவிப் பேசி மகிழ்ந்தபோதும் புலவர்களிடமிருந்து எத்தனையோ பாடல்களுக்குப் புதிய உரையும் விளக்கமும் தோன்றின. அவை யாவும் ஏட்டில் எழுதப்படாமையால் காற்றோடு காற்றாய் மறைந்து போயின. சில உரைகளையும் விளக்கங்களையும் இன்றும் நினைவில் கொண்டு கூறுவோர் நம்மிடையே வாழ்ந்து வருகின்றனர்.

### 1

ந.மு. வேங்கடசாமி நாட்டார் 'ஈன்று புறந்தருதல்' என்னும் புறநானூற்றுப்பாடலை *(312)* விளக்கியபோது அப்பாடலில் உள்ள சான்றோன் என்ற சொல்லுக்கு 'வீரன்' என்ற பொருள் கூறி, 'நன்னடை' என்ற பாடத்தை நீக்கிவிட்டு, அடிக்குறிப்பில் பாடவேறுபாடாகத் தரப்பட்டுள்ள 'தண்ணடை' என்ற பாடத்தைப் பாட்டில் அமைத்துக் கொண்டு நல்லதொரு விளக்கம் கூறினார் என்று அவருடைய மாணவர்கள் கூறுகின்றனர். அவர் கருத்தின்படி, அந்தப் புறப்பாட்டு பின்வருமாறு அமையும்.

ஈன்றுபுறம் தருதல் என்றலைக் கடனே
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
தண்ணடை நல்கல் வேந்தற்குக் கடனே
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.

— புறம். 312

இப் பாடலுக்கு அப் பெரியார் கூறிய விளக்கத்தையும் அதன் சிறப்பையும் காண்போம்.

1. இப் பாடலின் திணை, வாகை; துறை, மூதின் முல்லை 'மூதின் முல்லை'யைப் புறப்பொருள் வெண்பாமாலை பின்வருமாறு விளக்குகின்றது.

அடல்வேல் ஆடவர்க்கு அன்றியும் அவஇல்
மடவரல் மகளிர்க்கும் மறமிகுத் தன்று. (8:21)

மறக்குடியில் பிறந்த ஆண்மக்களுக்கேயன்றி பெண் மக்களுக்கும் வீரம் உரியது என்று இத்துறை கூறுகின்றது.

மேலே காட்டிய 'ஈன்று புறம் தருதல்' என்னும் பாட்டு மறக்குடி மகள் ஒருத்தியின் கூற்றாக அமைந்துள்ளது. "நான் சிறந்த ஆண்மகனைப் பெற்றெடுக்கிறேன்; தந்தை அவனை வீரனாக்கட்டும்; கொல்லன் வேல்வடித்துக் கொடுக்கட்டும்; யான் பெற்ற காளை போரில் புகுந்து யானையைக் கொன்று வீழ்த்தட்டும்; மன்னன் அவனுக்கு வளமான வயல்களைத் தரட்டும்!" என்று அவள், தான் தோன்றிய வீரக்குடிக்கு ஏற்பக் கூறுகின்றாள்.

இவ்வாறு பொருள் கொள்ளும்போது, துறைக்கு ஏற்ற பாடாக அது விளங்குகிறது.

2. **சான்றோன் ஆக்குதல்:** சான்றோன் என்ற சொல்லுக்குப் போர்வீரன் என்ற பொருள் உண்டு. புறநானூற்றுக்குக் குறிப்புரை எழுதிய டாக்டர் உ.வே.சா. 'சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே' என்ற அடிக்கு, "தன் குலத்துக்குரிய படைக்கலப் பயிற்சியாகிய கல்வி, அதற்குரிய அறிவு, அதற்குரிய செய்கைகள் ஆகிய இவற்றால் நிறைந்தவனாகச் செய்தல் தகப்பனுக்குக் கடமையாம்" என்று எழுதியுள்ளார். பாட்டின் திணை, துறை ஆகிய இரண்டையும் மனத்தில் கொண்டு எழுதிய நல்ல விளக்கம் இது.

பதிற்றுப்பத்தில், சான்றோன் என்ற சொல், போர்வீரனைக் குறிக்கும் இடங்கள் பல உள்ளன.

**நோன்புரித் தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை — 14:12**
**ஏந்தெழில் ஆகத்துச் சான்றோர் மெய்ம்மறை — 58:11**
**சாந்தெழில் மறைத்த சான்றோர் பெருமகன் — 67:18**

என்ற இடங்களில் சான்றோர் என்ற சொல் போர் வீரனையே குறிக்கின்றது.

எனவே, பாட்டின் திணை துறை இவற்றிற்கேற்ப, சான்றோன் என்ற சொல்லுக்குப் போர்வீரன் என்று பொருள் கொள்வதே பொருத்தமாகும்.

3. **தண்ணடை நல்கல்:** போரில் சிறந்த வெற்றிச் செயல்களைச் செய்த வீரர்களுக்கு மருத நிலங்களைத் (தண்ணடை) தருதல் அக்காலத்தில் வழக்கமாய் இருந்தது.

**...பிணங்கு கதிர்**
**அலமரும் கழனித் தண்ணடை ஒழிய**
**இலம்பாடு ஒக்கல் தலைவற்கோர்**
**கரம்பைச் சீறூர் நல்கினன்** — புறம்: 285

ஓடல் செல்லாப் பீடுநடை யாளர்
நெடுநகர்ப் பொய்கைப் பிறழிய வாளை
நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதல் புரளும்
தண்ணடை பெறுதல் — புறம்: 287

தண்ணடை பெறுதலும் உரித்தே வைந்நுதி
நெடுவேல் பாய்ந்த மார்பின்
மடல்வன் போந்தையின் நிற்கு மோர்க்கே— புறம்: 297

என்று வரும் புறநானூற்றுப் பாடற்பகுதிகள், மன்னர்கள் வீரர்களுக்குத் தண்ணடை நல்கும் வழக்கம் இருந்ததை உணர்த்தும். மேலும், புறப்பொருள் வெண்பாமாலையுள்,

சிலையளித்த தோளான் சினவிடலைக் கன்றே
தலையளித்தான் தண்ணடையும் தந்து (2:12)

புண்ணோடு வந்தான் புதல்வற்குப் பூங்கழலோய்.
தண்ணடை நல்கல் தகும் (3:2)

என்று வரும் இடங்கள், வீரர்கள் தண்ணடை பெற்றதை அறிவிக்கின்றன.

4. மறக்குடி மகள், போர்க்களம் சென்று பகைவரை வீழ்த்தும் சிறந்த ஆண்மகனைப் பெறுதலையே சிறந்ததாகக் கருதுகின்றாள். அவளுடைய உள்ளத்தில் உயர்ந்த நினைப்பே எழுகின்றது. தான் பெற்ற மகனைத் தந்தை, சிறந்த வீரனாக்க வேண்டும். போர்க்கலையைத் தன் மகனுக்கு நன்கு பயிற்றுவிக்க வேண்டும் என்று விரும்புகிறாள். தன் மகன் மிகச்சிறந்த போர் வீரனாகிவிடவேண்டும் என்று வேட்கை கொள்கின்றாள். கொல்லன் சிறந்த வேல் படையைச் செய்து தர வேண்டுமாம்! வேலை ஏந்தி, போர்க்கலை பயின்ற வீரமைந்தன் களம் நோக்கிச் செல்லவேண்டுமாம்! அங்கே அவன் யானையை வீழ்த்த வேண்டுமாம்!

'யானை பிழைத்த வேல் ஏந்தல் இனிது' என்று வீரத்திற்கு இலக்கணம் கண்ட தமிழ்மக்கள் போர்க்களிற்றை வீழ்த்தி வாகை சூடுவதை விரும்புவதில் வியப்பு என்ன! இங்கேயும் மறக்குடி மகளின் கனவு உயர்ந்தே உள்ளது.

களிறு எறிந்த காளைக்கு மன்னன் சிறப்பு வாய்ந்த பரிசு அளிக்க வேண்டுமாம். தண்ணடை பெறுதல் அக் காலத்தில் சிறந்ததாகக் கருதப்பட்டது.

'பெரு நீர் மேவல்' என்னும் புறநானூற்றுப் பாட்டை (புறம்-297) எடுத்துக்காட்டி நச்சினார்க்கினியர், "சீறூர் புரவாகக் கொள்ளேன், தண்ணடை கொள்வேன் எனத் தன்னுறு தொழில்

கூறினான்" (புற-5) என்று கூறியிருப்பது இங்கே நினைக்கத் தக்கதாகும்.

மன்னனிடமிருந்து தண்ணடை பெறுவதையே சிறந்த பரிசிலாகக் கருதினர் அக் கால வீரர்கள். ஆதலின், மறக்குடிமகள் தன் மகனுக்கு வேந்தன் தண்ணடை தருதல் வேண்டும் என்று விரும்பினாள்.

ஈன்று புறந் தருதல் என்னும் புறப்பாட்டு, தாய் தந்தை கொல்லன் மன்னன் மகன் ஆகியவர்களுடைய தலையாய கடமைகளைக் கூறுகின்றது. போர் செய்து வாழ்ந்த மறக்குடியில் தோன்றிய வீரப் பெண்ணின் உள்ளத்திலிருந்து தோன்றிய பாடல் இது! இதில் வீரவுணர்ச்சி தேங்கிக் கிடக்கிறது!

## 2

'சுரையாழ அம்மி மிதக்கிறது' என்பது ஒரு பழமொழி. நீரில் மிதக்க வேண்டிய சுரை ஆழ்வதும், மூழ்கிவிட வேண்டிய அம்மி மிதப்பதும் இயற்கைக்கு மாறானவை. கனமற்ற பொருள் ஆழ்வதும் கனமுள்ள பொருள் மிதப்பதும் இயற்கையில் நிகழாதவை.

பெரியோர் சிறப்பு அடைவதும், சிறியோர் சிறுமை அடைவதும் உலக இயற்கை. இம்முறை மாறிச் சான்றோர் மூலையில் ஒடுங்கி வாழ, கீழ்மக்கள் செருக்கித் தலை நிமிர்ந்து நடப்பது உலக இயற்கைக்கு மாறானது; சுரையாழ அம்மி மிதப்பது போன்றது. இக் கருத்தை,

உரைசான்ற சான்றோர் ஒடுங்கி உறைய
நிரையுளர் அல்லார் நிமிர்ந்து பெருகல்
வரைதாழ் இலங்கருவி வெற்ப அதுவே
சுரையாழ அம்மி மிதப்பு

(123)

என்று பழமொழி நானூறு விளக்குகின்றது. இப்பாடலுக்குப் பழைய உரை பின்வருமாறு உள்ளது.

"புகழமைந்த சான்றோர் விளங்காது ஒடுங்கி வாழ்தல், தூய குடியினர் அல்லாத கீழோர் செல்வத்தால் ஓங்கிப் பெருகல், வரைதாழ் இலங்கு அருவி வெற்பனே! அஃது அன்றோ, சுரை ஆழ அம்மி மிதப்பதனோடு ஒக்கும்".

இப் பகுதிக்கு விளக்கம் எழுதிய செல்வக் கேசவராய முதலியார், "நீரில் சுரை ஆழ்வதும், அம்மி மிதப்பதும்

பொருந்தாதவாறு போல, பெரியோர் ஒடுங்கி இருக்கச் சிறியோர் விளங்குதல் பொருந்தாது" என்று கூறுகின்றார்.

இதே கருத்தைத் திருத்தக்க தேவர் தம் நூலில்,

**இம்மிஅன நுண்பொருள்கள் ஈட்டிநிதி ஆக்கிக்**
**கம்மியரும் ஊர்வர்களிறு ஓடைநுதல் சூட்டி**
**அம்மிமிதந்து ஆழ்ந்துசுரை வீழ்ந்ததுஅறம் சால்கென்று**
**உம்மைவினை நொந்துபுலந்து ஊடல்உணர் வன்று**

**— சீவகசிந். 495**

என்று கூறகின்றார். இப் பாடலுக்கு உரை எழுதிய நச்சினார்க் கினியர், "ஆழ்தற்கு உரிய அம்மி மிதந்து, மிதத்தற்கு உரிய சுரை வீழ்ந்தது என்றது, உயர்ந்தோர் வாழாதே தாழ்ந்தோர் வாழ்ந்ததனை'' என்று பழமொழியின் பொருளை விளக்கி யுள்ளார்.

இப் பழமொழி, பிற்காலத்தில் தோன்றிய அகப்பாடலில் இடம்பெற்றுச் சிறந்த பொருளை விளக்குகின்றது.

தலைவியுடன் இல்லறம் நடத்திவரும் தலைவன், பரத்தையை நாடிப்பிரிந்தான். தலைவி அதனால் துன்புற்றாள். பரத்தை இன்பமாக வாழ்ந்து வந்தாள். ஒருநாள் இருநாள் அல்ல, பல நாள் இந்நிலை இருந்தது. தலைவனுக்கு உரியவள் தலைவி. அவளே இன்பத்தோடு வாழ வேண்டும். ஆனால், அதற்குமாறாகப் பொதுமகள் ஒருத்தி வாழ்ந்து மகிழ்கின்றாள். சுரை ஆழ அம்மி மிதப்பது போன்றது அல்லவா இந்நிலை? இதனைத் தலைவி, தன் தோழியிடம் கூறுகின்றாள்.

"கானக நாடனாகிய தலைவனின் சுனையில் சுரைஆழும்
அம்மி மிதக்கும் யானை மூழ்கும் முயல் நிற்கும்"

என்று இவ்வூரார் கூறுகின்றனர். ஆதலின், இன்புற்று வாழ வேண்டிய நாம் துன்புறுவதிலும், பொதுமகள் ஒருத்தி மகிழ்ந்து வாழ்வதிலும் வியப்பு இல்லை.

**சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய**
**யானைக்கு நீத்து முயற்கு நிலைஎன்ப**
**கானக நாடன் சுனை**

என்ற பழம் பாடல் இக் கருத்தினை உடையதாகும்.

இப்பாடலுக்கு, உரையாசிரியர்கள் பலரும் இவ்வாறு பொருள் கொள்ளவில்லை. தொல்காப்பியர் கூறும் சுண்ணப் பொருள்கோளுக்கு (சொல்-406) இளம்பூரணர், சேனாவரையர் ஆகியோர் இப்பாடலை உதாரணமாகக் காட்டி, "சுரை மிதப்ப அம்மி ஆழ யானைக்கு நிலை முயற்கு நீத்து எனத் துணித்துக்

கூட்ட இயைந்தவாறு கண்டு கொள்க” என்று கூறுவர். இவ்வாறே இப்பாடலை நன்னூல் உரையாசிரியர்கள் மொழிமாற்றுப் பொருள் கோளுக்கும் (நன்-413), யாப்பருங்கலக்காரிகை உரையாசிரியர், சுண்ணமொழி மாற்றுப் பொருள்கோளுக்கும் உதாரணம் தந்து, சொற்களை மாற்றி இயைத்துக் காட்டுவர்.

இவ்வாறு சொற்களை மாற்றி இயைத்துப் பொருள் கொள்ளும்போது, பாடல் பொருள் சிறப்பு இன்றி நிற்கிறது. ‘காக்கை கறுப்பு, கடல் தண்ணீர் உப்பு’ என்று விளையாட்டாகச் சொல்வது போல, “கானக நாடனின் சுனையில் சுரை மிதக்கிறது. அம்மி ஆழ்கிறது, யானை நிற்கிறது, முயல் மூழ்குகிறது” என்று பொருள் கொள்வதில் என்ன சிறப்பு இருக்கிறது?

எனவே, இப்பாடலைச் சுண்ணப் பொருள்கோள் முதலியவற்றிற்கு வழிவழியாய் உதாரணமாகக் காட்டி வருவது பொருந்தாது.

### 3

தொல்காப்பியம் சொல்லதிகாரத்தில் உள்ள உரியியலில் இரு சீரான் அமைந்த (குறள் அடி) சூத்திரங்கள் பல உள்ளன. ஏனைய இயல்களில் இத்தகைய சூத்திரங்கள் இல்லை. இரு சீரான் அமைந்த இச் சூத்திரங்கள், அடுத்து அடுத்து இடம் பெற்றுள்ளன. இவை நான்குசீர் கொண்ட சூத்திரங்களாக அமைக்கும் வகையில், எதுகை மோனை ஓசைநயம் ஆகியவற்றால் சிறப்புப் பெற்று விளங்குகின்றன. இவற்றை எல்லாம் உற்று நோக்கிய மு. அருணாசலம்பிள்ளை தொல்காப்பியர் நான்கு அடி கொண்ட சூத்திரங்களாகவே — ஏனைய இயல்களில் செய்திருப்பது போலவே இயற்றி இருக்கவேண்டும். ஒரு சூத்திரம் ஒரு பொருளையே உரைக்க வேண்டும் என்ற வடமொழியாளர் கருத்து, தமிழ் இலக்கண உலகில் செல்வாக்குப் பெற்ற காலத்தில் உரியியல் சூத்திரங்கள் இவ்வாறு பிரிக்கப்பட்டிருக்க வேண்டும். இம்மாறுதல் எக்காலத்தில் நிகழ்ந்தது என்று கூறத் தக்க சான்றுகள் கிடைக்கவில்லை” என்று வகுப்பில் விளக்கினார்கள். உரியியல் சூத்திரங்கள் சிலவற்றை அவர்கள் இயைத்தும் காட்டினார்கள். அவர்கள் கூறியவண்ணம்,

பயப்பே பயனாம் (உரியியல் – 9)
பசப்பு நிறனாகும் (உரியியல் – 10)
இயைபே புணர்ச்சி (உரியியல் – 11)
இசைப்பு இசையாகும் (உரியியல் – 12)

என்பனவற்றை,

பயப்பே பயனாம் பசப்புநிற னாகும்

என்றும்,

இயைபே புணர்ச்சி இசைப்பு இசையாகும்

என்றும் இணைப்பது பொருத்தமாக உள்ளது. எதுகை நோக்கிச் சிலவற்றை இரண்டு அடிச் சூத்திரங்களாக அமைக்கலாம்.

வம்புநிலை இன்மை (உரியியல் – 30)
மாதர் காதல் (உரியியல் – 31)
நம்பும் மேவும் நசையா கும்மே (உரியியல் – 32)

இவற்றைச் சேர்த்து,

வம்புநிலை இன்மை மாதர் காதல்
நம்பும் மேவும் நசையா கும்மே

என்று இரண்டு அடியாக எதுகை மோனை அமைந்த ஒரு சூத்திரமாக அமைக்கலாம்.

வயவலி யாகும் (உரியியல் – 68)
வாள்ஒளி யாகும் (உரியியல் – 69)
துயவென் கிளவி அறிவின் திரிபே (உரியியல் – 70)

என்பவற்றை,

வயவலி யாகும் வாள்ஒளி யாகும்
துயவென் கிளவி அறிவின் திரிபே

என்றும்,

உயாவே உயங்கல்
உசாவே சூழ்ச்சி
வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம் (உரியியல்–71–73)

என்பனவற்றை,

உயாவே உயங்கல் உசாவே சூழ்ச்சி
வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்

என்றும் இணைக்கலாம்.

சிவப்பிரகாசம் என்னும் நூலின் அவையடக்கத்தில்,

தொன்மையவாம் எனும்எவையும் நன்றாகா
இன்று தோன்றியவாம் எனும்எவையும் தீதாகா

என்று உமாபதி சிவாசாரியர் கூறியுள்ள கருத்து, பொன்னே போல் போற்றி மேற்கொள்ளத்தக்கதாகும்.

4

உவமை குறுகி உருவகமாகின்றது; உருவகம் குறுகி ஒரு பொருள் (ஏகதேச) உருவகம் ஆகின்றது; அதுவும் குறுகி, குறிப்பு உருவகம் ஆகின்றது. பரிமேலழகர், 'இடுக்கண் கால் கொன்றிட' என்றும் குறளில் குறிப்பு உருவகம் இருப்பதாய்க் கூறுகின்றார். பரிமேலழகர் தரும் விளக்கத்தைக் கொண்டு நோக்கும்போது, பின்வரும் அகநானூற்றுப் பாடல்களின் அடிகளில் குறிப்பு உருவகம் இருப்பது புலனாகின்றது.

**பயம்பமல் அறுகை**
**தழங்குகுரல் வானின் தலைப்பெயற்கு ஈன்ற**
**மண்ணு மணியன்ன மாயிதழ்ப் பாவை**

**— அகம் : 136**

**தண்கார்க்கு ஈன்ற பைங்கொடி முல்லை**
**வைவாய் வான்முகை**

**— அகம் : 144**

பதிற்றுப்பத்துப் பதிகத்தில் *(2)* வருகின்ற 'உதியஞ்சேரற்கு வெளியன் வேண்மான் நல்லினி ஈன்ற மகன்' என்ற தொடரை நினைவில் கொண்டு, மேலே உள்ள பாடல்களின் அடியை நோக்குவோம்.

'அறுகம்புல், மழைக்கு ஈன்ற கிழங்கு' *(அகம் - 136)* என்றும்; முல்லைக் கொடி மழைக்கு ஈன்ற அரும்பு *(அகம் - 144)* என்றும் சங்கப் புலவர்கள் கற்பனைச் சிறப்புடன் குறிப்பு உருவகம் அமைத்துப் பாடியுள்ளனர். அவற்றில்,

| | | |
|---|---|---|
| அறுகம்புல் | — | தாய் |
| மழை | — | தந்தை |
| கிழங்கு | — | குழந்தை |

என்றும்,

| | | |
|---|---|---|
| முல்லைக்கொடி | — | தாய் |
| மழை | — | தந்தை |
| அரும்பு | — | குழந்தை |

என்றும் பொருள் அமைகின்றன.

இவ்வாறே அகநானூற்றில் *(212)* வரும்,

**'நாணற் கிழங்கு மணற்கு ஈன்ற முளை'** என்னும் அடியில்,

| | | |
|---|---|---|
| நாணற் கிழங்கு | — | தாய் |
| மணல் | — | தந்தை |

முளை — குழந்தை

என்று பொருள் கொண்டு, குறிப்பு உருவகமாய்க் கருதி நோக்கினால் இலக்கியச்சுவை மிகுகின்றது.

ஆனால், இலக்கண உரையாசிரியர்கள் பலரும், இந்த அடியை வேற்றுமை உருபு மயக்கத்திற்கு மேற்கோள் காட்டி, "கிழங்கு மணலுள் ஈன்ற முளை என ஏழாவதன் உருபாகக் கொள்ள வேண்டும்" என்று விளக்குகின்றனர்.

## 5

குறுந்தொகையில் 113-ஆம் பாடலில்,

**கூழைக்கு எருமண் கொணர்தற் சேறும்**

என்ற அடியில் உள்ள 'எருமண்' என்ற பாடம் பொருத்தமற்றது என்றும், அது 'எருமணம்' என்று இருக்க வேண்டும் என்றும் ஆராய்ச்சி அறிஞர் எஸ். வையாபுரி பிள்ளை கூறுகின்றார் (இலக்கிய தீபம் (1955), பக் 118-121). அவர் கூறியுள்ள விளக்கம்:

"நான் கொண்ட பாடம் எருமணம் என்பது. இதற்குச் செங்கழுநீர் என்ற பொருள் உண்டு என்பது, பிங்கலந்தையால் அறியலாம்.

**அரத்த முற்பலம் செங்குவளை எருமணம்**
**நல்லாரமும் செங்கழு நீரும் அதன்பெயர்.**

இது மரப்பெயர்த் தொகுதியில் கண்ட சூத்திரம். அச்சுப் பதிப்பில், இச்சூத்திரம் வேறுபட்டுக் காணப்படினும், எருமணம் என்ற பெயர், அதன் கண்ணும் கொடுக்கப்பட்டுள்ளது. ஆகவே கூந்தலில் பெய்து முடித்தற்குச் செங்கழுநீர் மலர் கொண்டு வர, தோழியருடன் தலைவி பொழிலுக்குச் செல்வதாகக் கூறிக் குறியிடம் உணர்த்தியமை தெளிவாம். இதுவே பொருத்தமாய் உள்ள பொருள்.

இப்பாடலின் பொருள், 'நந்தீ வரமென்னும்' என்ற திருக்கோவையாரில் உள்ளது."

## 6

தொல்காப்பியம் உரியியலில் உள்ள,

**ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும்**

என்ற நூற்பா, ஆராய்ச்சி உலகில் சிந்தனையை எழுப்பியுள்ளது. 'எற்றம்' என்பது நச்சினார்க்கினியர் கொண்ட பாடம். ஏனைய உரையாசிரியர்கள் அனைவரும் 'ஏற்றம்' என்று பாடம் கொண்டு,

2.47

அதற்கு ஏற்றவாறு உதாரணம் காட்டுகின்றனர். இதனால் ஏற்றம் எற்றம் என்ற இரு சொற்களில் எது சரியானது என்ற வினாவை எழுப்பிக் கொண்டு டாக்டர் இராம. சுந்தரம் ஆய்வுக் கட்டுரை ஒன்றை எழுதியுள்ளார் (பேராசிரியர் அரசு நாராயண சாமி நாயுடு நினைவு மலர் (1973), பக் (48-50).

பண்டைய உரையாசிரியர்களின் கருத்துக்களைக் கீழே காண்போம்.

**இளம்பூரணர்**

ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும் (உரியியல் - 40)

(வ-று) 'ஏற்றத்திருந்தார்' என்றக்கால், நினைந்திருந்தார் என்பதூஉம், துணிந்திருந்தார் என்பதூஉம் ஆம்.

**சேனாவரையர்**

ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும் (உரியியல் - 41)

(இ-ள்) கானலஞ் சேர்ப்பன் கொடுமை ஏற்றி (குறுந் - 142)

'ஏற்றேற்றம் இல்லாருள் யான் ஏற்றம் இல்லாதேன்' எனவும் நினைவும் துணிவும் ஆகிய குறிப்புணர்த்தும்.

**தெய்வச்சிலையார்**

ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும் (உரியியல் - 41)

(எ.டு) கானலஞ் சேர்ப்பன் கொடுமை ஏற்றி (குறுந் - 145)

— இது நினைவு.

ஏற்றென் றிரங்குவ செய்யற்க — இது துணிவு.

**நச்சினார்க்கினியர்**

எற்றம் நினைவும் துணிவும் ஆகும் (உரியியல் - 39)

(எ.டு) கானலஞ் சேர்ப்பன் கொடுகை எற்றி (குறுந் - 145)

எற்[illegible]ட்டி என் ஏமுற்றாள் (கலி - 144, 63)

## 8. இடைச்செருகல்

பழைய நூல்களிலும் உரைகளிலும் பிற்காலத்தவர் தம் கருத்தைத் தாமே எழுதிச் சேர்த்துவிடுவது உண்டு. புதிய பாடல்கள் இயற்றியும், உரை இயற்றியும் சிலர் பழைய நூல்களில் சேர்த்துவிடுவதுண்டு. இவ்வாறு சேர்த்த பகுதியை 'இடைச் செருகல்' என்பர். பழைய நூலின் இடையில் தாம் எழுதியவற்றைச் செருகுதலின் இடைச்செருகல் எனப்பட்டது.

புதிதாக எழுதிச் சேர்ப்பது மட்டுமன்றி, பழைய நூலின் மூலத்தையோ உரையையோ தம் கருத்திற்கு ஏற்பச் சிலர் திருத்தி விடுதலும் உண்டு.

இவ்வாறு செய்வதற்குக் காரணங்கள் சில உள்ளன.

1. பெரியோர் நூலில் தாம் இயற்றிய பாடலும் சேர்ந்து, பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறுவதுபோல் பெருமை யடைவதைச் சிலர் விரும்பி இடைச்செருகல் செய்தனர்.

2. தம் சமயம், கொள்கை ஆகியவற்றிற்கு மாறானவற்றை நீக்கிவிட்டு, தம் கருத்திற்கு ஏற்ப மாற்றினர்.

3. பழைய நூல்களைப் பதிப்பித்தவர்கள், கிடைக்காத பகுதிகளுக்கு, தாமே எழுதி அவ்விடத்தை நிரப்பியதும் உண்டு.

கந்தியார் என்ற பெண்பாற்புலவர் பரிபாடல்' சீவக சிந்தாமணி ஆகிய இரண்டு நூல்களிலும் இடைச்செருகலாகப் பாடல்களை எழுதிச் சேர்த்தார் என்ற செய்தி பரிபாடலின் உரைச் சிறப்புப்பாயிரத்தாலும், நச்சினார்க்கினியர் உரையாலும் வெளிப்படுகின்றது.

கந்தியார் என்ற பெயரைத் தாங்கிய பெண்பாற்புலவர் சமணசமயத் துறவி என்று பெருந்தொகை குறிப்பிடுகின்றது. கவுந்தி என்பது, கந்தி என்று மாறியுள்ளது.

"பெரிய புராணம் கம்பராமாயணம் முதலிய நூல்களில் வெள்ளியம்பலவாணர் சில பாடல்களை நூதனமாக இயற்றி இடையிடையே செருகிவிட்டார். காலக்கிரமத்தில் அச்செயல் கண்டுபிடிக்கப்பட்டது. சென்னையில் முன்பிருந்த காஞ்சிபுரம் மகாவித்துவான் ஸ்ரீ சபாபதி முதலியார் அவர்கள் சிலவற்றை அச்சிட்டபோது 'இவை வெள்ளிப் பாடல்கள்' என்று அவற்றை நீக்கிவிட்டு அச்சிட்டார்."*

ஊர் பேர் தெரியாத சிலர், எழுதிச் சேர்த்தவையும் உண்டு. குறுந்தொகையில் நானூறுக்கு மேற்பட்டுள்ள பாடல்கள் இடைச்செருகல் ஆகும்.

தக்கயாகப் பரணியில் 'பள்ளிக்குன்றும்' (536) என்னும் செய்யுள் உரையின்கீழ் அதன் உரையாசிரியர், "இப்பாட்டு, கவிச்சக்கரவர்த்திகள் வாக்கல்ல என்பாரும் உளர்'' என்று குறிப்பிடுகின்றார்.

* சங்கத்தமிழும் பிற்காலத் தமிழும் — பக்கம் 176. டாக்டர் உ.வே.சா.

**மூலத்தை மாற்றுதல்**

இலக்கண விளக்க நூலாசிரியர், "பழையன கழிதலும்" என்ற நன்னூல் சூத்திரத்தை,

> **பழையன கழித்தலும் புதியன புகுத்தலும்**
> **வழுவல கால வகை யினான**

என்றும், நன்னூலுக்கு உரை இயற்றிய இராமாநுசக் கவிராயர்,

> **தொல்லை வடிவின எல்லா எழுத்தும் ஆண்டு**
> **எய்தும் எகரம் ஒகரம் மெய்புள்ளி**

**(நன் – எழுத் – 43)**

என்ற நன்னூல் சூத்திரத்தை,

> **தொல்லை வடிவின எல்லா எழுத்தும் ஆண்டு**
> **எய்தும் ஏகாரம் ஓகாரம் மெய்புள்ளி**

என மாற்றி விட்டார்கள்.

சமயப்பற்றின் காரணமாக மூலத்தைச் சிலர் மாற்றினர் என்பதை ஆராய்ச்சி அறிஞர் மயிலை. சீனி வேங்கடசாமி கூறுகின்றார்.

"சமயப் பற்றுக் காரணமாக ஏற்பட்ட இந்தக் குறுகிய மனப்பான்மையினால், பாரதம், கம்ப இராமாயணம் முதலிய நூல்களை 19-ஆம் நூற்றாண்டில் ஏட்டுச் சுவடியிலிருந்து அச்சுப் புத்தகமாக அச்சிட்டவர் சிலர், சிவபெருமானுக்கு ஏற்றம் தந்த செய்யுள்களை மாற்றியும் சிதைத்தும் புதுக்கியும் அச்சிட்டனர். சில நூல்களின் முதலில் அருகக் கடவுள் வாழ்த்துக் கூறிய செய்யுட்களைச் சிலர் எடுத்துப்போட்டு, அந்த இடத்தில் விநாயகர் வணக்கப்பாடல் அமைத்து அச்சிட்டனர். நிகண்டுகளில் அருகப் பெருமானுக்குக் கூறப்பட்ட செய்யுள்களை மாற்றிவிட்டனர். இவ்வாறு சமயப் பற்றுக் காரணமாகச் சிலர் அச்சுப் புத்தகங்களை அச்சிட்டபோது மாற்றினார்கள்.[1]

சமயப்பற்றுக் காரணமாக உரையைத் திருத்தி எழுதியதும் உண்டு. டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் சிந்தாமணி (நச்சினார்க்கினியர்) உரையில் அத்தகைய மாற்றம் ஒன்றினைத் தாம் கண்டதாகக் குறிப்பிடுகின்றார்.

"சிந்தாமணி உரையில் ஓரிடத்தில் 'பஞ்சாட்சரம்' உபதேசிக்கப்பட்டதாக எழுதியிருந்தது. சிந்தாமணியே சைனர்களுடைய நூல். இறக்கும் நிலையிலிருந்த ஒரு நாயின் காதில் மந்திரம் உபதேசிக்கப்பட்டதென்பது சந்தர்ப்பம்.

1. 19ஆம் நூற்றாண்டில் — தமிழ் இலக்கியம் பக்கம் 86.

உரையைப் பிரதி செய்தவர் உரையாசிரியர் எழுதியிருந்த "பஞ்சநமஸ்காரம்" என்பதை, 'பஞ்சாட்சரம்' என்று எண்ணி விட்டாரென்று தோன்றியது. அந்தப் பிரதி சைவர் ஒருவருடைய பிரதி. பஞ்சநமஸ்காரம் என்பது சைனர்களுடைய மந்திரம்"[1]

இத்தகைய மாற்றங்களேயன்றி, முன்னோர் உரைகளைப் படித்த மாணவர்கள், தாம் விளங்கிக் கொள்வதற்காக எழுதிய உரைவிளக்கக் குறிப்புகளும் உரையோடு சேர்ந்து விட்டன. வேறு சில ஏடுகளை ஒப்பிடுகையில் அத்தகைய பிறசேர்க்கைகள் அறிந்து விலக்கப்பட்டன.

வீரசோழிய உரையைப் படித்த ஒருவர், ஆங்காங்கே உரையின் கீழ் எழுதிச் சென்ற விளக்கக் குறிப்புகளை வேறு பிரதிகளைக் கொண்டு அறிந்து உரையிலிருந்து நீக்கி அடிக்குறிப்பில் அவற்றைச் சேர்த்து, பவானந்தம் பிள்ளை வீரசோழிய உரையை வெளியிட்டுள்ளார்.

அச்சில் உள்ள நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பொருளதிகார உரையில், பிற்காலத்தவர் அவ்வுரையைப் படித்தவர் எழுதிச் சேர்த்த விளக்கக் குறிப்பும் சிற்சில இடங்களில் கலந்துள்ளது என்று எண்ண இடமுண்டு. இதே போல திருக்கோவையாருக்குப் பேராசிரியர் எழுதிய உரையிலும், அவ்வுரையைப் படித்த ஒருவர் எழுதிய விளக்கமும் இடையிடையே சேர்ந்துள்ளது. இவ்வாறு படித்தவர்களால் எழுதிச் சேர்க்கப்பட்ட உரைப்பகுதிகள் உரையாசிரியர்கள் கூறியனவற்றிற்கு விளக்கவுரைகளாக அமைந்துள்ளன. அப் பகுதிகள் நடைப்போக்கில் வேறுபட்டுக் காணப்படுவதோடு, பிழைகள் மலிந்தனவான உள்ளன. அகத்திணை இயலிலுள்ள 'திணைமயக் குறுதலும் கடிநிலை யிலவே' எனத் தொடங்கும் சூத்திரத்திற்குக் கூறப்பட்டுள்ள விளக்கவுரையினை இவற்றிற்கு ஓர் உதாரணமாகக் காட்டலாம்.[2]

ஓர் உரையாசிரியரின் உரையில் மற்றோர் உரையைப் பெய்து விடுதலும் உண்டு. தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையத்தில் இருந்த திருக்கோவையார் பழையவுரை அடங்கிய ஏட்டுச் சுவடியில் 281-ஆம் பாடலுக்குப்பின், பழையவுரைக்கு ஈடாகப் பேராசிரியர் உரையைத் தழுவி எழுதிச் சேர்க்கப் பட்டிருந்தது.

திருக்குறள் பரிதியார் உரையில் 1126-ஆம் குறளுக்குப் பரிமேலழகர் உரை தரப்பட்டுள்ளது. காலிங்கர் உரையும் பரிதியர்

1. 'சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும்' – பக்கம் 170.
2. தமிழ் உரைநடை வரலாறு (1957) வி. செல்வநாயகம், பக்கம்–67.

உரையும் 161, 166, 167, 191, 193, 194, 1313, 1324 ஆகிய குறட்பாக்களுக்கு ஒரே வகையாய் உள்ளன.

இவை எல்லாம், உரைகள் அச்சேறுமுன் ஏற்பட்ட மாறுதல்கள். பழைய உரைகளை அச்சிட முயன்ற காலத்தில் இடையிடையே மறைந்தும் சிதைந்தும் குறைந்தும் போன பகுதிகளை நிரப்பப் பதிப்பாசிரியர்கள் பிற உரைகளின் துணை கொண்டு புதிதாக எழுதி அவ்விடங்களை நிரப்பி அச்சிட்டனர். தாம் செய்த மாறுதல்களைப் பதிப்பாசிரியர்கள் நேர்மையாக எடுத்துக் கூறி, தாம் எழுதிச் சேர்த்த பகுதிகளை அடையாளமிட்டுக் காட்டினர்.

தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணர் உரையை முதலில் பதிப்பித்த அறிஞர் வ.உ. சிதம்பரனார் முன்னுரையில், பின்வரும் செய்தியைக் கூறுகின்றார்.

“இப்போது வெளியிடும் பகுதியில் ஒரு சில இடங்களில் இளம்பூரணர் உரை மறைந்துபோய்விட்டது. இவ்விடங்களில் நச்சினார்க்கினியர் உரையைத் தழுவி உரை எழுதிச் சேர்க்கப்பட்டுள்ளது. இவ்வகையான இடங்கள் ஆங்காங்கே அடையாளமிட்டுக் காட்டப்பட்டுள்ளன. இருதலைப் பகரத்துள் அமைந்துள்ள எழுத்துகளும் சொற்களும் இன்றியமையாமை பற்றிப் புதிதாகச் சேர்க்கப்பட்டனவாகும்.”

இவ்வளவு நேர்மையாக — வெளிப்படையாக உண்மையை, முதலில் பதிப்பித்தவர் எடுத்துக்கூறி இருந்தபோதிலும், இளம்பூரணர் உரையை மீண்டும் பதிப்பித்தவர்கள் அடையாளங்களை நீக்கிவிட்டனர். எல்லாம் இளம்பூரணர் உரையே என்று நம்புமாறு செய்துவிட்டனர்!

அச்சில் வெளி வந்துள்ள திருக்குறள் மணக்குடவர் உரையில், பரிமேலழகர் உரை கலந்துள்ளது. மணக்குடவர் உரையை வெளியிட்ட திரு. கா. பொன்னுசாமி நாடார், தம் பதிப்பில் மணக்குடவர் உரை கிடைக்காத குறள்களுக்குப் பரிமேலழகர் உரையையே தந்துள்ளார். அண்மையில், சென்னை மலர் நிலையத்தார் வெளியிட்டுள்ள மணக்குடவர் உரையில், மணக்குடவர் உரை கிடைக்காத இடங்களைப் பரிமேலழகர் உரையே நிரப்பியுள்ளது.

பரிப்பெருமாள் உரையை முதன் முதலில் வெளியிட்ட தமிழறிஞர் டி.பி. பழனியப்ப பிள்ளை பரிப்பெருமாள் உரை கிடைக்காத இடங்களில் மணக்குடவர் உரையைத் தந்து, அதனை மணக்குடவர் உரை என்று மறவாமல் குறிப்பிட்டுள்ளார். மணக்குடவர் உரையும் பரிப்பெருமாள் உரையும் பெரும்பாலும்

ஒத்துச் செல்வதால், அவர் அவ்வாறு செய்தது பொருந்தும். இவரைப் பின்பற்றி மணக்குடவர் உரையில், கிடைக்காத பகுதிகளைப் பரிப்பெருமாள் உரையைத் தந்து அதனைக் குறிப்பிடலாம்.

## 9. உரையில்லாத நூல்கள்

உரை வளம் கொண்ட நூல்கள் பல உண்டு. கருத்து வளர்ச்சிக்கு ஏற்றவாறு பழைய நூல் ஒன்றிற்கே பலப்பல புதிய உரைகள் தோன்றியுள்ளன. தொல்காப்பியம், திருக்குறள், நாலடியார், நன்னூல், திருவாய்மொழி, திருவாசகம், சிவஞானபோதம், சிவஞான சித்தியார், கம்பராமாயணம் ஆகிய நூல்கள் உரைவளம் உடையவை.

ஓர் உரையும் இல்லாத வறுமை, பல நூல்களுக்கு உள்ளது. பழைய நூல்களை உரையின் உதவியின்றிப் படித்துணர எல்லோராலும் இயலாது. உரையில்லாத நூல்களைப் பாடமாக வைக்கும்போது, மாணவர்கள் அவற்றை நன்கு படித்துணர இயலாமல் துன்புறுகின்றனர். உரையில்லாத நூல்கள், மூட்டையாகக் கட்டி வைக்கப்பட்ட சித்திரவண்ணப் பட்டாடை போல — இருள் அடர்ந்த இடத்தில் உள்ள எழிலோவியம் போலப் பிறர் நுகர இயலாமல் முடங்கிக் கிடக்கின்றன.

உரையில்லா நூல்களை இங்கே காண்போம்:

சைவத் திருமுறைகள் பலவற்றிக்குத் தக்க உரைகள் இன்னும் தோன்றவில்லை. பொதுமக்களும் மாணவர்களும் படித்து இன்புறத்தக்கவாறு பல எளிய உரைகள் தோன்றி, திருமுறைகள் வெளிவருதல் வேண்டும்.

இடைக்காலத்தில் மிகுதியாகத் தோன்றிய புராணங் களுக்கும் கோவை, உலா, தூது முதலிய சிற்றிலக்கியங்களுக்கும் உரைகள் எழுதி வெளியிடவேண்டும். பண்டார சாத்திரங்கள் பதினான்கும் உரையுடன் வெளிவரவேண்டும்.

குமரகுருபரரின் பாடல்கள் யாவும் இலக்கியச் சுவை மிகுந்தவை; கற்கும் தோறும் இன்பமூட்டுபவை. அவரது பாடல்களுக்கு உரை எழுதினால் மக்களிடையே பரவும். துறைமங்கலம் சிவப்பிரகாசர் பாடல்களும் தாயுமானவர் பாடல்களும் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் பாடல்களும் மக்களிடையே பரவாமல் இருப்பதற்குக் காரணம் தகுந்த உரைகள் இல்லாமையேயாகும். சித்தர் பாடல்களும், செய்யுள் வடிவில் உள்ள மருத்துவ நூல்களும் உரை இருந்தால்

நன்கு விளக்கமடையும். தனிப்பாடல் திரட்டு, பெருந்திரட்டு, பெருந்தொகை போன்ற பிற்காலத் தொகை நூல்களுக்கு உரை எழுதுதல் சிறந்த இலக்கியப் பணியாகும்.

உரை இல்லாத இலக்கண நூல்கள் சில உள்ளன. தண்டபாணி அடிகள் (1839-1898) இயற்றிய அறுவகை இலக்கணம் 786 சூத்திரங்களைக் கொண்டது. ஐந்திலக்கணத்தோடு ஆறாவதாகப் 'புலமை இலக்கணம்' என்று ஓர் புதிய இலக்கணத்தைக் கூறுகின்றது. இந்த நூலுக்கு உரை இல்லை.

இலக்கண தீபம், (இயற்றியவர் பெயர் தெரியவில்லை. செந்தமிழ் 14 தொகுதியில் உள்ளது) என்னும் இலக்கண நூலுக்கும் உரைகள் இல்லை.

## 10. மறைந்து போன உரை நூல்கள்

**ஏரணம் உருவம் யோகம்**
**இசைகணக் கிரதம் சாலம்**
**தாரணம் மறமே சந்தம்**
**தம்பம்நீர் நிலம்உ லோகம்**
**மாரணம் பொருள்என்று இன்ன**
**வாரணம் கொண்டது அந்தோ,**
**வழிவழிப் பெயரும் மாள !**

**—பழம்பாடல்**

பழம்பெரும் தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் தோன்றிப் பல நூறு ஆண்டுகள் வரை—இளம்பூரணர் காலம் வரை உரையின்றியே பயிலப்பட்டு வந்தது என்பது பொருந்தாது. இளம்பூரணருக்கு முன், வேறு உரைகள் அந்நூலுக்கு இருந்திருக்க வேண்டும். தொல்காப்பியத்திற்கு இன்று கிடைக்கும் உரைகளில் இளம்பூரணர் உரையே பழமையானது என்று கொள்ளவேண்டும். தம் உரைகளில் 'என்றும் கூறுவர்', 'என்று உரைப்பாரும் உளர்' என்று பலப் பல இடங்களில் குறிப்பிடுகின்றார். சில சூத்திரங்களுக்கு வேறு உரைகளையும் தருகின்றனர். எனவே இளம்பூரணருக்கு முன், வேறு சில உரைகள் தொல்காப்பியத்திற்கு இருந்தன என்பது உறுதி.

இவ்வாறே இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் 'ஒரு சார் ஆசிரியர் கூறுவது', 'ஒருவன் கூறுவது' என்றும் 'உரைப்பர்' என்றும் குறிப்பிடுவது அவருக்கு முற்பட்ட உரைகளை என்னலாம்.

புறநானூற்றின் பழைய உரையாசிரியர், சிலப்பதிகாரத்தின் அரும்பத உரையாசிரியர் ஆகியோரும் தமக்கு முன் வேறு உரைகள் அவ்வவ் நூலுக்கு இருந்ததைக் குறிப்பிடுகின்றனர்.

பத்துப்பாட்டிற்கு உரைகண்ட நச்சினார்க்கினியர் தமக்கு முன் அந் நூலுக்கு இருந்த வேறு உரைகளைச் சுட்டுகின்றார்.

இவ்வாறு பழைய உரையாசிரியர்கள் தமக்கு முற்பட்டவர்களின் கருத்தாகக் கூறுபவை எல்லாம் அவர்களுக்கு முன்னர், வழங்கிவந்த உரைநூல்களில் இருந்தவை என்னலாம்.

'மறைந்துபோன தமிழ் நூல்கள்' என்ற நூலில் குறிக்கப் பெறும் பல தமிழ் நூல்களுக்கு உரைகளும் இருந்திருக்கும். அவற்றைப் பற்றி நாம் ஒன்றும் அறிந்துகொள்ள இயலவில்லை.

இயற்றியவர் பெயர் முதலியன தெரியாமல் மறைந்து போன உரைநூல்கள் பல உள்ளன. உரையாசிரியர் பெயர் முதலிய விவரம் தெரிந்த உரைநூல்கள் பல, கிடைக்கவில்லை.

ஏட்டுச் சுவடிகளில் இருந்த பல உரைகள் மறைந்துபோன தற்குக் காரணங்கள் உள்ளன. போற்றுவார் இன்மையால், சில நூல்கள் மறைந்தன. வேற்று நாட்டவர் படையெடுப்பால், சில நூல்கள் மாண்டன. சமயக் காழ்ப்பு, சில நூல்களை வீழ்த்தியது. கல்லாத மக்களின் பொல்லாத மடமை, சில நூல்களை மாய்த்தது. வெள்ளமும் தீயும், சில ஏடுகளை அழித்தன. கறையான்கள், சில நூல்களைத் தின்று தீர்த்தன.

போற்றுவார் இன்மையால் சிதைந்துவரும் ஏட்டுச் சுவடிகளைப்பற்றித் தமிழறிஞர் ஒருவர், "நூல்களுள் ஒரு சில, எடுப்பாரும் எழுதுவாரும் படிப்பாரும் பாலிப்பாரும் அற்றுக் காலப் பழமையால் செல்லரித்து, இராம பாணங்களால் துளைப்புண்டு, உட்கி மட்கிப் பெயரளவினவாகி விட்டன. சில அடி நுனியற்று முற்றும் கிடைப்பதற்கு அரியனவாய் விட்டன. இன்னும் சில நூல்கள் ஒப்பு நோக்கிக்கொள்வதற்குக் கூட யாண்டும் அத்தகைய பிறிதொன்று கிடைப்பதற்கரிய நிலையில் அருகிவிட்டன" என்று எழுதியுள்ளார்.*

'சேர நாடும் செந்தமிழும்' என்ற நூலின் ஆசிரியர், "திருவனந்தபுரம் அரண்மனையைச் சார்ந்து பழைய ஏட்டுப் பிரதிகள் அடங்கிய சுவடிச் சாலை ஒன்று உண்டு: அதில் தமிழ், மலையாளம், சமஸ்கிருதம் என்னும் மூன்று மொழிகளிலும் அமைந்த ஏடுகள் ஏராளம் இருக்கின்றன. அவற்றில் தமிழேடுகள் பலவும் கவனிப்பார் இல்லாமையால் அழிந்து போயின" என்று

* செந்தமிழ்: 19ஆம் தொகுதி, பக்கம் 313.

மிகுந்த வருத்தத்துடன் தெரிவிக்கின்றார். (சேர நாடும் செந்தமிழும். செ. சதாசிவம் (1949), (பக்கம் 82).

'மறைந்துபோன தமிழ் நூல்கள்' என்ற நூலின் ஆசிரியர், திருக்குறளுக்குப் பழங்காலத்தில் தோன்றிய பத்து உரைகளும் தீயில் அகப்பட்டு அழிந்ததை, பின் வருமாறு கூறுகின்றார்:

"அதிவீரராம பாண்டியனின் புத்தகசாலையில் இருந்த ஏட்டுச் சுவடிகள், பிற்காலத்தில் கோயில் அதிகாரிகளால் தீயில் இட்டுக் கொளுத்தப்பட்டனவாம்! மதுரைத் தமிழ்ச் சங்கப் புத்தக சாலையில் சேமித்து வைக்கப்பட்டிருந்த ஏட்டுச் சுவடிகள் சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு தீப்பிடித்து எரிந்துபோயின. அதில் அச்சில் வராத சில பல ஏட்டுச் சுவடிகளும் இருந்தனவாம். திருக்குறள் பத்து உரைகளும் அதில் இருந்ததாகக் கூறப்படுகிறது. வேறு அருமையான நூல்களும் இருந்தனவாம்!" (பக்கம்—328).

மக்களின் அறியாமையால் தீக்கு 'இரையான ஏடுகளைக் குறித்து டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் "பழங்காலத்தில் பழைய சுவடிகள் சிதிலமான நிலையில் இருந்தால் புதிய பிரதிபண்ணிக் கொண்டு பழம் பிரதிகளை ஆகுதி செய்வது (நெருப்பில் இடுவது) வழக்கம். புதுப்பிரதி இருத்தலினால் பழம்பிரதி போவதில் நஷ்டம் ஒன்றும் இராது. பிற்காலத்து மேதாவிகள் பிரதி செய்வதை மறந்து விட்டு, சுவடிகளைத் தீக்கு இரையாக்கும் பாதகச் செயலைச் செய்தார்கள். என்ன பேதைமை! இத்தகைய எண்ணத்தால் எவ்வளவு அருமையான சுவடிகள் இந்த உலகிலிருந்து மறைந்தன!" என்று மனம் நொந்து எழுதுகின்றார் (என் சரிதம்- பக்கம் 928).

பிற்காலத்தில் எழுந்த சமயப் பகைமை பல தமிழ் நூல்களை அழித்தன. சைவ சமயத்தவர் சைன, பௌத்த நூல்களைப் போற்றாமல் வெறுத்து ஒதுக்கினர்; புறச்சமய நூல்களைப் பயிலக்கூடாது என்று தடுத்தனர்.

சைவ சமயத்தவரான இலக்கணக் கொத்தின் ஆசிரியர், "நன்னூல் சின்னூல் அகப்பொருள் காரிகை அலங்காரம் முதலிய இலக்கணங்களையும், பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண்கீழ்க் கணக்கு, இராமன் கதை, நளன் கதை, அரிச் சந்திரன் கதை முதலான இலக்கியங்களையும் ஒரு பொருளாக எண்ணி வாணாள் வீணாள் கழிப்பர்" என்று உரைக்கின்றார்.

சிவஞான முனிவர் சோமேசர் முதுமொழி வெண்பாவில் (20),

**சேக்கிழார் சிந்தா மணிப்பயிற்சி தீதுஎனவே**
**தூக்கிஉப தேசித்தார் சோமேசா—நோக்கின்**

பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்
மக்கட் பதடி எனல்

என்று கூறுகின்றார். அப்பாடலின் உரை, "சிந்தாமணி என்றது உபலக்கணம் ஆதலின், அதுபோலும் சிலப்பதிகாரம், மணிமேகலை, சூளாமணிப் பயிற்சியும் சைவ வைணவ நன் மக்களுக்கு ஆகா" என்று கூறுகின்றது.

இவ்வாறு புறக்கணித்துவிட்டதால், சைன பௌத்த சமய இலக்கியங்களும் அவற்றின் உரைகளும் போற்றுவாரின்றி மறைந்தன.

மறைந்துபோன உரை நூல்களை அறிவதற்கு உரையாசிரியர்கள் பெரிதும் துணைபுரிகின்றனர். உரைச் சிறப்புப் பாயிரங்கள், ஏனைய உரைகளைச் சுட்டும் உரைப் பகுதிகள் ஆகியவற்றின் துணைகொண்டு மறைந்துபோன உரை நூல்களை இனிக் காண்போம்.

## இறையனார் களவியல் உரைகள்

நக்கீரர் இயற்றியதாக வழங்கிவரும் இறையனார் களவியல் உரை, அந்நூலுக்கு உரை தோன்றிய வரலாற்றைப் பின் வருமாறு கூறுகின்றது:

"(பாண்டியமன்னன்) சங்கத்தாரைக் கூவுவித்து, 'நம் பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச் செய்த பொருளதிகாரம், இதனைக்கொண்டு போய்ப் பொருள் காண்மின்' என, அவர்கள் அதனைக் கொண்டு போந்து கல்மாப் பலகை ஏறியிருந்து ஆராய்வுழி எல்லோரும் தாம்தாம் உரைத்த உரையே நல்லது என்று சில நாளெல்லாம் சென்றன."

இப்பகுதி, இறையனார் களவியலுக்குப் பல உரைகள் தோன்றின என்று கூறுகின்றது. இவ்வுரைகளை இயற்றியவர் பெயர் முதலியவற்றைக் குறிப்பிடவில்லை. ஆனால் இவ்வுரையில் மற்றோரிடத்தில், நக்கீரரைத் தவிர வேறு ஓர் உரையாசிரியர் பெயர் குறிப்பிடப்படுகின்றது.

"எல்லோரும் முறையே பொருள் உரைப்பக் கேட்டு (உருத்திரசன்மன்) வாளா இருந்து மதுரை மருதன் இளநாகனார் உரைத்தவிடத்து ஒரோ விடத்துக் கண்ணீர் வார்ந்து, மெய்ம்மயிர் நிறுத்தி பின்னர்க் கணக்காயர் மகனார் உரைத்தவிடத்துப் பதந்தோறும் கண்ணீர் வார்த்து மெய்ம்மயிர் சிலிர்ப்ப இருந்தான்."

இங்கே குறிப்பிடப்படும் மதுரை மருதன் இளநாகனார் உரை மறைந்துவிட்டது. சிறந்த உரையைத் தேர்ந்தெடுத்த பின்,

ஏனைய உரைகளைப் புலவர்கள் போற்றாது விட்டனர் என்று தெரிகிறது. அவ்வுரைகள் கால வெள்ளத்தில் மூழ்கி மறைந்து போயின.

## குறுந்தொகை: பேராசிரியர், நச்சினார்க்கினியர் உரைகள்

நச்சினார்க்கினியர் பழைய நூல்களுக்குச் செய்துள்ள உரைகளை,

பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியும்
ஆரக் குறுந்தொகையுள் ஐஞ்ஞான்கும்—சாரத்
திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
விருத்திநச்சி னார்க்கினிய மே

என்ற வெண்பா தொகுத்துக் கூறுகின்றது. இவ் வெண்பாவால் குறுந்தொகையுள் இருபது பாடல்களுக்கு நச்சினார்க்கினியர் உரை எழுதினார் என்ற செய்தி வெளிப்படுகின்றது. நானூறு பாடல்கள் அடங்கியுள்ள அத்தொகை நூலின் இருபது பாடல் களுக்கு மட்டும் நச்சினார்க்கினியர் உரை எழுதவேண்டிய தேவையை அவரது உரைச் சிறப்புப் பாயிரம் விளக்குகின்றது. “பேராசிரியர் தம் கல்வித்திறனும் ஆராய்ச்சி வன்மையும் உலக மெல்லாம் அறிந்து போற்றும் வகையில் குறுந்தொகையில் 380 பாடல்களுக்கு விளக்கம் எழுதினார்; அந் நூலில் இருபது பாடல் களுக்கு மட்டும் அவர் பொருள் எழுதவில்லை. பேராசிரியர் உரை காணாத இருபது பாடல்களுக்கும் நச்சினார்க்கினியர் உரை எழுதினார்'' என்று நச்சினார்க்கினியரின் உரைச் சிறப்புப் பாயிரம் கூறுகின்றது:

நல்லறி வுடைய தொல்பே ராசான்
கல்வியும் காட்சியும் காசினி அறியப்
பொருள்தெரி குறுந்தொகை இருபது பாட்டிற்கு
இதுபொருள் என்று,அவன் எழுதாது ஒழிய
இதுபொருள் என்றுஅதற்கு ஏற்ப உரைத்தும்

என்பது அவர் உரைப் பாயிரப் பகுதி.

நல்லறிவுடையதொல் பேராசானாகிய பேராசிரியர் இருபது பாடல்களுக்கு ஏன் உரை எழுதவில்லை என்பது விளங்கவில்லை. அவர், உரை எழுதாத பாடல்கள் எவை என்றும் தெரியவில்லை. இதைப்பற்றி டாக்டர் உ. வே. சா கூறியுள்ள கருத்துக்கள் போற்றத் தக்கவையாய் உள்ளன.

“அவர் (பேராசிரியர்) உரை எழுதாது விடுத்த இருபது செய்யுட்கள், பின் இருபது செய்யுட்களாக இருத்தல் கூடும். இடையிடையே பொருள் தோன்றாமல்விட்ட செய்யுட்கள் என்று

கொள்ளுதல், நல்லறிவுடைய தொல்பேராசானாகிய அவரது பெருமைக்கு இழுக்காகும். அவர்தம் முதுமையில் குறுந் தொகைக்கு உரை எழுதத் தொடங்கி 380 செய்யுட்களுக்கு எழுதி முடித்த பின்னர் நோய்வாய்ப்பட்டதாலோ பிற காரணத்தாலோ மேல் எழுத இயலாத நிலையை அடைந்தனர் என்றே கொள்ளுதல் ஏற்புடைத்தாகும். பிற்காலத்தில் நச்சினார்க்கினியர் அவ்வரிய உரையைப் பின்பற்றி, அதற்கேற்ப எஞ்சிய செய்யுட் களுக்கு உரை எழுதி இருத்தல் கூடும்"* என்று டாக்டர் உ. வே. சா. கூறியிருப்பது பொருத்தமாய் உள்ளது.

இவ்வாறு இருபெரும் உரையாசிரியர்களும் சேர்ந்து எழுதி முடித்த குறுந்தொகை உரை மறைந்துபோய்விட்டது. அவ்வுரையில் எத்தனை அரிய பெரிய கருத்துக்களும் விளக்கங்களும் இருந்தனவோ!

## அகநானூறு அகவல் உரை

அகநானூற்றுக்கு முற்காலத்தில் அகவற்பாக்களால் ஆன உரை ஒன்று இருந்தது. உரைச் சிறப்புப் பாயிரம் அவ்வுரை யாசிரியர் பெயர், ஊர், அவர் அகநானூற்றுக்கு அகவற் பாக்களால் உரை எழுதிய செய்தி ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றது:

...நன்னெடுந் தொகைக்கு,
கருத்தெனப் பண்பினோர் உரைத்தவை நாடின்,
அரியவை யாகிய பொருண்மை நோக்கிக்
கோட்டம் இன்றி, பாட்டொடு பொருந்தத்
தகவொடு சிறந்த அகவல் நடையால்
கருத்துஇனிது இயற்றி யோனே; பரித்தேர்
வளவர் காக்கும் வளநாட் டுள்ளும்
நாடெனச் சிறந்த பீடுகெழு சிறப்பின்
கெடலருஞ் சிறப்பின் இடையள நாட்டுத்
தீதில் கொள்கை மூதூர் உள்ளும்
ஊரெனச் சிறந்த சீர்கெழு மணக்குடிச்
செம்மை சான்ற தேவன்
தொன்மை சான்ற நன்மை யோனே

என்பது உரைச் சிறப்புப் பாயிரத்தின் ஒரு பகுதி. இப்பாயிரத்தின் கீழே, "இத்தொகைக் கருத்து அகவலாற் பாடினான், இடையள நாட்டு மணக்குடியான் பால்வண்ண தேவனான வில்லவ தரையன்" என்ற உரைநடைப் பகுதி உள்ளது.

* குறுந்தொகை — உ.வே.சா. உரை. (1937) முகவுரை பக்கம் – 8.

இவ்வுரையாசிரியர் ஊர் இன்று எங்கே உள்ளது என்பதை ஆராய்ந்து அறிஞர் டி.வி. சதாசிவப் பண்டாரத்தார் கூறியுள்ளார்.* தஞ்சாவூர் மாவட்டம், திருத்துறைப் பூண்டி வட்டத்தில் கொறுக்கை என்னும் ஊருக்கு அருகேயுள்ள மணக்குடி என்பதே இவ்வுரை யாசிரியர் ஊர் என்று அவர் கருதுகின்றார்.

மணக்குடியான் பால்வண்ண தேவன் வில்லவ தரையன் அகநானூற்றுக்கு அகவற்பாக்களால் எழுதிய உரை நூல் மறைந்து விட்டது.

### திருக்குறள் உரைகள்

திருக்குறளுக்கு முற்காலத்தில் பதின்மர் உரை இயற்றினர். அவர்களை,

**தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்**
**பரிதி பரிமே லழகர்—திருமலையர்**
**மல்லர் பரிப்பெருமாள் காலிங்கர் வள்ளுவர்நூற்கு**
**எல்லையுரை செய்தார் இவர்**

என்ற வெண்பா குறிப்பிடுகின்றது. பரிமேலழகர், மணக்குடவர், காலிங்கர், பரிதி, பரிப்பெருமாள் ஆகிய ஐவர் உரைகள் வெளி வந்துள்ளன. தருமர், தாமத்தர், நச்சர், திருமலையர், மல்லர் ஆகிய ஐவர் உரைகளும் கிடைக்கவில்லை.

### அவிநய உரை

அவிநயனார் என்ற சமணப் புலவர் இயற்றிய இலக்கண நூல் அவிநயம். இந்நூல், வெண்பாவாலும் ஆசிரியப்பாவாலும் ஆனது; எழுத்து சொல் பொருள் ஆகிய மூன்று இலக்கணமும் உரைக்கும் நூல் என்றும் தெரிகின்றது.

அவிநயத்திற்கு இராசபவித்திர பல்லவ தரையன் உரை இயற்றினார் என்று நன்னூலின் உரையாசிரியர் மயிலைநாதர் கூறு கின்றார்.

"இந்தப் பத்து எச்சமும் புவி புகழ் புலமை
அவிநய நூலுள், தண்டலங் கிழவன் தகைவரு
நேமி எண்திசை நிறைபெயர் இராச பவித்திரப்
பல்லவ தரையன் பகர்ச்சி என்று அறிக"

**(நன்–359)**

என்று மயிலைநாதர் கூறுவதால், அவிநய உரை பற்றி நாம் அறிந்து கொள்ள முடிகின்றது.

* செந்தமிழ்ச் செல்வி – 19 தொகுதி (பக்கம் 322 – 325)

மயிலைநாதருக்குமுன் சிறந்து விளங்கிய அவிநய இலக்கணமும் அதன் உரையும் கிடைக்கவில்லை.

## ஆளவந்த பிள்ளை உரை

நச்சினார்க்கினியர் மலைபடுகடாம் உரையில், ஆளவந்த பிள்ளை ஆசிரியர் என்று ஓர் உரையாசிரியரைக் குறிப்பிடுகின்றார். மலைபடுகடாத்துள் வரும் 'தீயின் அன்ன ஒண் செங்காந்தள்" என்ற அடிக்கு (145)ப் பொருள் எழுதியபின், "இதற்கு நன்னன் என்னும் பெயர் தீயோடு ஒத்ததன்மையின், ஆனந்தமாய், பாடினாரும் பாட்டுண்டாரும் இறந்தார் என்று ஆளவந்தபிளளையாசிரியர் குற்றங் கூறினார் எனின், அவர் அறியாது கூறினார்" என்று கூறுகின்றார்.

பேராசிரியர், தொல்காப்பியப் பொருளதிகாரம் மரபியலில், "தன்னான் ஒரு பொருள் கருதிக் கூறல் என்பது, மலைபடுகடாத்தினை ஆனந்தக் குற்றம் எனப் பிற்காலத்தான் ஒருவன் ஒரு சூத்திரங்காட்டுதலும், பதமுடிப்பு என்பதோர் இலக்கணம் படைத்துக் கோடலும் போல்வன" (மரபியல்-108) என்று பெயர் கூறாமல் ஆனந்தக் குற்றம் கூறியவரை மறுக்கின்றார்.

நச்சினார்க்கினியரால் மறுக்கப்படும் ஆளவந்த பிள்ளை ஆசிரியரும், பேராசிரியரால் மறுக்கப்படும் ஆசிரியரும் ஒருவரா? அல்லது இரு வேறு ஆசிரியர்களா? ஒருவரே ஆயின், ஆளவந்த பிள்ளை என்பவர் யார்? எந் நூலுக்கு உரை எழுதினார்? எவ்விடத்தில் மலைபடுகடாம் பாட்டிற்கு ஆனந்தக் குற்றம் கூறினார்? இந்த வினாக்களுக்குத் தக்க விடை இதுகாறும் கிடைக்கவில்லை.

ஆளவந்த பிள்ளை உரையாசிரியராயின், அவர் செய்த உரை நூல் கிடைக்கவில்லை.

யாப்பருங்கலவிருத்தி ஒழிபியலில் (பக்கம் 519-52, பவானந்தம் பிள்ளை பதிப்பு) விருத்தியுரைகாரர், மலைபடுகடாம் பாடலிலிருந்து நான்கு இடங்களை எடுத்துக்காட்டி, அவற்றிற்கு ஆனந்தக் குற்றம் கற்பித்துள்ளார். இவ்விருத்தியுரைகாரர், ஆளவந்த பிள்ளையைப் பின்பற்றி இவ்வாறு ஆனந்தக் குற்றம் கூறினார் என்பதா? விருத்தியுரைகாரரை ஆளவந்த பிள்ளை பின்பற்றினார் என்பதா?

ஆளவந்தபிள்ளை என்ற பெயர், வைணவசமயச் சார்புடையதாய் உள்ளது.

## வியாக்கியானங்கள்

கூரத்தாழ்வானின் மைந்தரான பராசரபட்டர் திருநெடுந்தாண்டகத்திற்கு வியாக்கியானம் இயற்றினார். இன்று,

'மைவண்ண நறுங்குஞ்சி' (21) என்ற பாடல் தவிர ஏனைய வற்றிற்கு உரை கிடைக்கவில்லை.

திருவிருத்தத்திற்கு நம்பிள்ளை பெரியவாச்சான் பிள்ளை அழகியமணவாள சீயர் அப் பிள்ளை பெரிய பரகால சுவாமி ஆகிய ஐவரும் உரை கண்டனர். பெரியவாச்சான் பிள்ளை உரை தவிர ஏனைய நான்கு பேர் இயற்றிய உரைகளும் மறைந்து போயின.

## நன்னூல் ஆண்டிப் புலவர் உரை

ஏறத்தாழ நானூறு ஆண்டுகளுக்குமுன், செஞ்சிக்கு அண்மையில் உள்ள ஊற்றங்கால் என்னும் ஊரில் வாழ்ந்த ஆண்டிப்புலவர், விருத்தப்பாவில் நன்னூலுக்கு உரை எழுதினார். அப் புலவர் எழுதிய ஆசிரிய நிகண்டின் பாயிரம் நன்னூல் விருத்தப்பா உரையை, 'உரையறி நன்னூல்' என்று குறிப்பிடு கின்றது. இந் நூலிலிருந்து ஒரே ஒரு விருத்தப்பா மட்டுமே கிடைத்துள்ளது. ஏனைய பகுதிகள் கிடைக்கவில்லை.

## பரத சேனாபதீயம் உரை[1]

இந் நூலின் பாயிரங்களை மட்டும் டாக்டர் உ.வே. சாமிநாதய்யர் நூல் நிலையம் வெளியிட்டுள்ளது. இதற்கு உரை இருந்தது. இன்று கிடைக்கவில்லை. இந்நூலின் உரையாசிரியர் பெயர் தெரியவில்லை.

## இடைக்காடர் ஊசிமுறி உரை

இடைக்காடர் ஊசிமுறி என்னும் நூலில் நாற்பத்தைந்து பாடல்கள் இருந்தன என்றும், அந் நூலுக்கு ஆறைப் பொறையிலான் உரை எழுதினார் என்றும் கூறப்படுகிறது.[2] நூலும் உரையும் இன்று இல்லை!

## தொல்காப்பியம் சிவமயம்

பதினாறாம் நூற்றாண்டுத் தமிழ்ப் புலவர் மறைஞான சம்பந்தர் இயற்றிய பதிபசுப்பாசப் பனுவல் என்னும் சித்தாந்த நூலின் பாயிரம் இவரை,

> அருந்தமிழ் உணர்வால் அகத்திய முனியெனத்
> திருந்துதொல் காப்பியம் சிவமயம் செய்தோன்

என்று குறிப்பிடுகின்றது. "இவர் செய்த நூல்களுள்ளே தொல் காப்பியம் சிவமயம் என்பன இரு நூல்களா? ஒரு நூலா என்பது

1. மறைந்துபோன தமிழ் நூல்கள் (பக்கம் 323).
2. செந்தமிழ் – 19 தொகுதி பக். 315.

விளங்கவில்லை. இருவேறு நூல்கள் என்பது பெரியோர் கொள்கை. அவற்றைப் பற்றிய விவரம் ஒன்றும் அறிதற்கில்லை." என்பர் எஸ். சோமசுந்தர தேசிகர்.

தொல்காப்பியம் சிவமயம் என்பது, தொல்காப்பியத்திற்கு மறைஞான சம்பந்தர் இயற்றிய உரை நூலாக இருக்கவும் கூடும்.

## தொல்காப்பியவுரை: நுண்பொருள்மாலை

பரிமேலழகர் உரைக்கு நுண்பொருள்மாலை என்ற உரை விளக்கம் எழுதிய இரத்தின கவிராயரே, தொல்காப்பிய வுரைக்கும் நுண்பொருள்மாலை என்ற பெயரால் விளக்கம் எழுதினார் என்பர்.

இவர், பழைய உரைக்கு விளக்கம் எழுதினாரா? அவ்வாறாயின் யாருடைய உரைக்கு விளக்கம் எழுதினார்? தாமே புதிய உரை விளக்கம் ஒன்று எழுதினாரா? என்பது விளங்கவில்லை.

## பதிபசு பாசப்பனுவல் உரை

பதினாறாம் நூற்றாண்டில் சீகாழியில் பிறந்த மறைஞான தேசிகர் பதிபசுபாசப் பனுவல் என்ற நூலுக்குக் காண்டிகை உரை (கண்ணழிவு உரை) இயற்றினார். இவ்வுரை கிடைக்கவில்லை.

## குறிஞ்சிப்பாட்டு, மலைபடுகடாம் உரைகள்

மறைமலையடிகளார் தாம் இயற்றிய பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை (1951) என்னும் நூலின் முகவுரையில் (பக்கம்-16),

"இன்னும் யாம் எழுதி வைத்திருக்கும் குறிஞ்சிப்பாட்டு ஆராய்ச்சியுரையும், மலைபடுகடாம் ஆராய்ச்சியுரையும், இனி எழுத நினைத்திருக்கும் ஆராய்ச்சியுரைகளும் விரைவில் வெளிவருவதற்குத் திருவருள் உதவி புரியுமென்று எதிர்பார்த்திருக் கின்றோம்" என்று கூறியுள்ளார். ஆனால் மேலே குறிப்பிட்ட ஆராய்ச்சியுரைகள் கிடைக்கவில்லை என்று கூறுகின்றனர்.

## மறைந்துபோன உரைப் பகுதிகள்

இன்று கிடைத்துள்ள உரைகளில், சில பகுதிகள் மறைந்து விட்டன. மறைந்துபோன உரைப் பகுதிகளை அறிய மற்றப் பகுதிகள் துணை செய்கின்றன. உரையாசிரியர்கள் முன்னர்க் கூறினாம், பின்னர்க் கூறுவாம் என்று கூறிச் செல்வதிலிருந்து மறைந்துபோன உரைப்பகுதிகளை அறிய முடிகின்றது.

2.48

## இளம்பூரணர் உரை

இளம்பூரணரை 'உரையாசிரியர்' என்று மற்றவர்கள் குறிப்பிட்டுள்ளனர். உரையாசிரியர் என்ற சொல் இளம்பூரணரையே குறிக்கும்.

இளம்பூரணர் பெயரால் தொல்காப்பியம் முழுமைக்கும் உரை வெளிவந்துள்ளது. அடியார்க்கு நல்லார், நச்சினார்க்கினியர், சேனாவரையர் ஆகியோர் தம் உரைகளில் உரையாசிரியர் கருத்தாகச் சிலவற்றை எடுத்துக் கூறுகின்றனர். அவர்கள் குறிப்பிடும் சில இடங்களில் இளம்பூரணர் உரை, அச்சில் வெளிவந்துள்ள நூல்களில் காணப்படவில்லை.

அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையில், குமரிக் கண்டத்தைக் கடல் கொண்ட செய்தியினைக் கூறி, "உரையாசிரியராகிய இளம்பூரண அடிகள் முகவுரையானும் பிறவாற்றானும் பெறுதும்'' என்று வேனிற் காதையின் தொடக்கத்தில் கூறுகின்றார்.

நச்சினார்க்கினியர் மதுரைக் காஞ்சியில்,

**தென்னவன் பெயரிய துன்னருந் துப்பின்**
**தொன் முதிர் கடவுள்** **(40, 41)**

என்ற அடிக்கு, "இராவணனைத் தமிழ்நாட்டை ஆளாதபடி போக்கின கிட்டுதற்கரிய வலியினையுடைய பழமை முதிர்ந்த அகத்தியன்" என்று பொருள் கூறியபின், "இராவணன் ஆளுதல் பாயிரச் சூத்திரத்து உரையாசிரியர் கூறிய உரையானும் உணர்க" என்று உரைக்கின்றார்.

அடியார்க்கு நல்லார் குறிப்பிடும் இளம்பூரண அடிகள் முகவுரையும், நச்சினார்க்கினியர் கூறும் உரையாசிரியர் பாயிரச் சூத்திரவுரையும், இன்றுள்ள தொல்காப்பிய இளம்பூரணர் உரையில் காணப்படவில்லை.

## நச்சினார்க்கினியர் உரை

தொல்காப்பியம் முழுமைக்கும் உரை எழுதியவர் நச்சினார்க்கினியர். இவர் உரை, எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் ஆகிய இரு பகுதிகளுக்கும் முழுமையாகக் கிடைத்துள்ளன. பொருளதிகாரத்திற்கு முதல் ஐந்து இயல்களுக்கும், செய்யுளியலுக்கும் மட்டுமே இவரது உரை உள்ளது. மெய்ப்பாட்டியல், உவம இயல், மரபியல் ஆகிய மூன்று இயல்களுக்கும் உரை கிடைக்கவில்லை. செய்யுளியலிலும் சில சூத்திரங்களுக்கு இவரது உரை இல்லை.

### பேராசிரியர் உரை

பேராசிரியர் பொருளதிகாரம் முழுவதற்கும் உரை இயற்றினார் என்பதற்கு, அவரது உரைகளில் சான்றுகள் உள்ளன.

பொருளதிகாரத்தின், பின்நான்கு இயல்களாகிய மெய்ப் பாட்டியல், உவம இயல் செய்யுளியல், மரபியல் ஆகிய நான்கிற்கும் மட்டுமே பேராசிரியர் உரை உள்ளது. ஏனைய இயல்களின் உரை மறைந்துவிட்டன.

### தொல். சொல். கல்லாடர் உரை

இவ்வுரை, கிளவியாக்கம் முதல் இடையியல் வரையிலுமே உள்ளது. பின்னுள்ள பகுதிக்கு இவ்வுரை இல்லை.

### தொல். சொல். பழைய உரை

கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல் ஆகிய மூன்றிற்கு மட்டுமே இப் பழைய உரை கிடைத்துள்ளது.

### பதினெண் கீழ்க்கணக்கு: பழைய உரைகள்

பதினெண் கீழ்க்கணக்கில் பலவற்றிற்குப் பழைய உரைகள் உள்ளன. பின்வரும் நூலின் பகுதிகளுக்குப் பழைய உரைகள் கிடைக்கவில்லை.

ஏலாதி: 1 முதல் 8 பாடல்கள் உரை இல்லை.
திணைமாலை நூற்றைம்பது: 128-150 வரை-உரை இல்லை.
திணைமாலை எழுபது: 25-70 பாடல்களுக்கு இல்லை.
கைந்நிலை: 1-17, 27 - 34, 44 - 52 பாடல்களுக்கு உரை இல்லை.
கார் நாற்பது: 23-38 பாடல்களுக்கு இல்லை.

### அகநானூறு—பழைய குறிப்புரைகள்

அகநானூற்றுக்குப் பழைய உரைகள் இரண்டு உள்ளன. ஒன்று குறிப்புரை. மற்றொன்று சொல் விளக்கமும் பாட்டிற்குத் தேவையான அடிக்குறிப்பும் கொண்ட எளியவுரை.

குறிப்புரை, அகநானூற்றின் முதல் 90 பாடல்களுக்கே உள்ளது. எளியவுரை, தொடர்ச்சியாக இல்லாமல் ஆங்காங்கே சிலச்சில பாடல்களுக்கு மட்டுமே உள்ளன.

இவ்வுரையாசிரியர்கள் எழுதியவை அவ்வளவுதானா, அல்லது மற்றப் பாடல்களின் உரைகள் மறைந்து போயினவா என்பது தெரியவில்லை.

### புறநானூறு—பழையவுரை

புறநானூற்றுக்குப் பழையவுரை ஒன்று உள்ளது. இவ்வுரை 266 பாடல்களுக்கு மட்டுமே கிடைக்கின்றது.

### பரிபாடல், பதிற்றுப் பத்து உரைகள்

பரிபாடல், பதிற்றுப் பத்து ஆகிய நூல்களின் சிதைந்து போன பகுதிகளுடன் அவற்றிற்குரிய உரைப் பகுதிகளும் மறைந்து போயின.

### அடியார்க்கு நல்லார் உரை

சிலப்பதிகாரத்திற்கு அடியார்க்கு நல்லார் உரை ஊர் சூழ்வரி என்ற பகுதி வரையில்தான் உள்ளது. நடுவே கானல் வரிக்கும் உரை இல்லை

### நீலகேசி உரை

நீலகேசியின் ஒன்பதாம் பகுதியாகிய வேத வாதச் சருக்கத்தில் எட்டுச் செய்யுட்களும் (22 முதல் 29 வரை) உரையும் காணப்படவில்லை.

### சீவக சிந்தாமணி—நச்சினார்க்கினியர் உரை

தஞ்சைவாணன் கோவை உரையாசிரியர் சொக்கப்ப நாவலர், தஞ்சை வாணன் கோவை 276ஆம் செய்யுள் உரையில், காண்க என்பதற்கு அழகுதக என்று பொருள் எழுதியபின், "நித்தில முலையினார்தம் என்னும் சிந்தாமணிச் செய்யுளில் (1907), காண்க என்னும் சொற்கு அழகு தக என்று நச்சினார்க்கினியர் கூறிய உரையானும் அறிக" என்று கூறுகின்றார்.

இன்று அச்சில் வெளி வந்துள்ள சிந்தாமணி உரையில் சொக்கப்ப நாவலர் எடுத்துக் காட்டும் விளக்கம் இல்லை.

### நன்னூல் மயிலைநாதர் உரை

நன்னூல் உரையாசிரியர் மயிலைநாதர் உரையிலிருந்து அது ஐந்திலக்கணமும் கூறும் பெரு நூல் என்பது விளங்குகின்றது. நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் திருமங்கை ஆழ்வார் பாடலுக்குக் கூரத்தாழ்வான் பாடிய,

> நெஞ்சுக் கிருள்கடி தீபம்; அடங்கா நெடும்பிறவி
> நஞ்சுக்கு நல்ல அமுதம்; தமிழநன் னூல்துறைகள்
> அஞ்சுக் கிலக்கியம்; ஆரண சாரம்; பரசமயப்
> பஞ்சுக் கனலின் பொறிபரகாலன் பனுவல்களே

என்ற தனியன், நன்னூல் என்பது பவணந்தியாரின் இலக்கண நூலைக்குறிக்குமானால் இப்பாடலையும் ஏற்ற சான்றாகக் கொள்ளலாம்.

நன்னூலின், எழுத்திகாரம், சொல்லதிகாரம் ஆகிய இரு பகுதிகள் தவிர மற்றவையும் மயிலைநாதர் உரையும் மறைந்து போயின.

## குறுந்தொகை உரை

அறிஞர் ரா. இராகவையங்கார் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பணியாற்றியபோது குறுந்தொகை முழுமைக்கும் அரிய விளக்கவுரை எழுதி முடித்தார். ஆனால் 112 பாடலுக்கே இவர் உரை, நூல் வடிவம் பெற்று வெளிவந்துள்ளது. குறுந்தொகை விளக்கத்தின் முகவுரையில் டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார் 'அவ்வுரையில் அப்போது கிடைத்துள்ள ஒரு பகுதியாகிய நூற்றுப் பன்னிரண்டு பாடல்களின் உரை, இப்போது அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடாக வெளி வருகின்றது' என்று கூறுகின்றார்கள்.

அச்சு யந்திரங்கள் பெருகியுள்ள இக் காலத்திலும் அச் சேறாத எத்தனையோ கையெழுத்துப் பிரதிகள் மறைந்து வருகின்றன. கையெழுத்துப் பிரதியைப் போற்றாமை, படி எடுத்துக் காப்பாற்றாமை, உரிய நேரத்தில் ஆசிரியரே அச்சிடாமை போன்ற குறைபாடுகளால் இன்றும் பல அரிய நூல்கள் அழிந்து வருகின்றன. அச்சகங்களுக்குச் செல்லும் கையெழுத்துப் பிரதிகள் திரும்ப வெளியே வருவது மிக அரிதாக உள்ளது. பனையோலைச் சுவடிகள் அழிந்தது எல்லாம் பழங்காலத்தில் என்றால், புது உலகம் விழிப்படைந்துவிட்டது என்று வாய் வீரம் பேசி வரும் இந்நாளில் கையெழுத்துப் பிரதிகள் மறைந்து போவதையும் அழிந்து போவதையும் தடுக்க முடியவில்லை!

**போனது போகட்டும் கண்மணியே—இனி**
**யாகிலும் புத்தியுடன் இருப்போம்!**

என்ற நாமக்கல் கவிஞரின் பொன்னான அறிவுரையை எதிர் காலம் இனிது போற்றி, நலம் பெறுக!

# பிற்சேர்க்கை

## 1

### குயவனும் கணக்கனும்

கர்னாடக துரைத்தனத்தில் ஓர் ஆற்றினிடத்தில் ஆயிரம் பொதிமாட்டு வர்த்தகர் வந்து இறங்கி இருக்கையில், ஆற்றில் வெள்ளம் வந்து அங்கு இறங்கி இருந்த பொதிகளையும் மாடுகளையும் வர்த்தகர்களையும் அடித்துக்கொண்டு போக; விடிந்தபொழுது அவர்களில் தப்பிப் பிழைத்தவர்கள் விசனப்படுவதை, ஆற்றுக்கு அடுத்த கிராமத்தில் இருந்த கணக்கன் கண்டு, தனக்குப் பகையாளாகிய குயவன் குடியைக் கெடுப்பதற்கு இதுதான் சமயம் என்று நினைத்து வர்த்தகர்களை அந்தக் கிராமத்தார் இடத்தில் போய் முறையிட்டுக் கொள்ளச் சொல்லி, 'கிராமத்தார் இதற்கு நாங்கள் என்ன செய்கிறது என்றால் இந்த நஷ்டம் குயவன் கொடுக்க வேண்டியது. இவ் விஷயத்தை ஊர்க்கணக்கனைக் கேட்டால் தெரிய வரும்' என்று வர்த்தகர் சொல்லும்படி செய்வித்து, கிராமத்தார் தன்னைக் கேட்கையில், "அப்படிதான் வழக்கம்; கணக்கைப் பார்க்க வேண்டும்!' என்று சொல்லி, வீட்டில் புகுந்து பின் வருகிறபடி ஓர் ஏட்டில் எழுதி அது பழமையாகத் தோற்ற, நெல்லுப் பானையில் வைத்து வேவித்து, வெகுநாளைக் கணக்குக் கட்டின் நடுவிலே கோர்த்துக் கட்டி, கட்டோடு எடுத்துவந்து கிராமத்தாருக்கு முன் அவிழ்த்து, அதற்குள் தேடி எடுப்பது போல அந்த ஏட்டை எடுத்து, "காட்டெரு முட்டை பொறுக்கி, மட்கலஞ் சுட்ட புகைபோய் மேற்கே கிளம்பி, மின்னுக் குமுறி மழைபொழிய ஆற்றில் வெள்ளம் பெருகி அடித்துப் போன பல சரக்கை ஊரார் இழுப்பது வழக்கு: குயவன் இறுப்பது கணக்கு" என்று வாசித்துக் காட்ட, சரிதான் என்று கிராமக்தார் ஒப்புக் கொண்டு அந்த நஷ்டத்தை, ஊர்க் குயவனைக் கொடுக்கச் சொல்லித் தீர்த்தார்கள்.

குயவன், 'ஐயையோ, தெய்வமே! இதுவும் தலைவிதியா!' என்று, உப்புச் சட்டி வறவோடும் விற்று வர்த்தகருக்குத் தொலைத் தான்.

— விநோத ரச மஞ்சரி (1937), பக்–55

## 2

## குண்டலகேசி கதை

'குண்டல கேசி' என்பாள், ஒரு வைசிய கன்னிகை. இவள் ஒரு நாள் பிரசாஸ்தலத்து விளையாடுகின்றாளாக, ஒரு கிதவப வைசியபுத்ரன் காளன் என்பான்; இவன் பௌத்தர் சனங்கொண்டு பல வழியும் சோர விருத்தி பண்ணிச் செல்வானை, அரசன் வதிக்க என்று ஏவ, சிறைப் பட்டுப் போகின்றானை, முன் சொன்ன குண்டல கேசி கண்டு காமப் பரவசையாக; அதனை அறிந்து அவளுடைய பிதா, ராசாவைக் கண்டு யாதானும் ஓர் உபாயத்தால் மீட்டு, இவனுக்குக் குண்டல கேசி என்னும் கன்னிகையினை விவாக விதியாற் கொடுத்து இனிது செல்கின்ற காலத்து, ஒரு நாள்:

ப்ரணய கலகத்து நர்மோகதி முகத்தால், 'நீ கள்வன் அன்றோ?' என்று குண்டல கேசி சொல்ல, காளனும் தன் உள்ளத்தே சினங்கொண்டு, பின்பு ஒரு நாள் வித்யாசாதன வ்யாசத்தால் இவளைத் தனிக்கொண்டு ஒரு பர்வதத்து ஏறி, 'நீ என்னை இவ்வாறு சொல்லுதலில் யான் உன்னைக் சொல்லத் துணிந்தேன்!'' என்ன, குண்டல கேசியும், 'தற்கொல்லியை முற்கொல்லிய என்பதன்றே! இவனை யான் கொல்வேன்!' என நினைந்து, 'யான் சாகின்றேன் ஆகில், உம்மை வலங்கொண்டு சாவல்!' என, அதற்கு இயைந்த காளனை வலம் கொள்கின்றாள் வரையினின்றும் விழ நூக்கினள்.

நூக்கக் காளனும் புத்த ஸ்மரணத்தினால் மோக்ஷித்தனன். குண்டல கேசியும் பர்த்ரு விரக துக்கிதை ஆகி, 'துறப்பன்!' என நினைந்து, பர சமயங்கள் எல்லாம் நாவல் நட்டுச்சயித்து, பௌத்த தர்சனம் கொண்டு முத்தி பெற்றனள்.

**–நீல கேசி உரை (மொக்கல வாதச் சருக்கம்).**

## 3

## நாதமுனிகள்

ஆழ்வார்கள் பர க்ருபையாலே இத் திவ்ய ப்ரபந்தங்களை உய்பவர்க்கு உய்யும் வண்ணமாக அருளிச் செய்து உபகரித்து அருளி, தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளின பின்பு நெடுங் காலம் கழிந்தவாறே, வீர நாராயணபுரத்திலே மன்னனாரைச் சேவித்து நித்யவாசம் பண்ணிக்கொண்டு அவர் திருவடிகளிலே சர்வவித கைங்கர்யங்களையும் செய்து கொண்டு போருகிற

ஈஸ்வர பட்டாழ்வாரும் அவர் குமாரர் நாதமுனிகளும் அவர் குமாரர் ஈஸ்வர முனிகளும்...மன்னனாருக்குத் திருநந்தவனம் செய்து, திருமாலை கட்டிச் சாத்தி அமுதுபடி சாத்துபடி திருவிளக்கு முதலானவை எல்லாம் குறைவற நடத்தி வித்வத் கோடிகளும் சாஸ்திர ப்ரவர்த்தனங்களும் எல்லாம் பண்ணிக் கொண்டு இருக்கச் செய்தே...

மேல்நாட்டில் (மேற்குத் திசையில் உள்ள மைசூர்ப் பகுதி) நின்றும் சில ஸ்ரீ வைஷ்ணவர்கள் எழுந்தருளி, மன்னனாரைச் சேவித்து அவர் திருமுன்னே **'ஆராஅமுதே'** என்கிற திருவாய் மொழியை அனுசந்தித்து அருள; அத்தை நாதமுனிகள் கேட்டருளி, அதி ப்ரீதராய் அவர்களைப் பார்த்து, "ஆயிரத்துள் இப்பத்து என்று இருந்தது. இப்பிரபந்தம் உங்களுக்கு முற்றப் போமோ?" என்று கேட்டருள; அவர்களும், "இப் பத்துப் பாட்டுமே வருவது!" என்று விண்ணப்பம் செய்ய; இவரும், "உங்கள் நாட்டிலே ஸ்ரீ கோசம் உண்டோ? பாடம் போவாரும் உண்டோ?" என்று கேட்டருள; "எங்களுக்கு இவ்வளவு பாடம் வருவது; வேறு எவ்விடத்திலும் இல்லை!" என்று அவர்கள் விண்ணப்பம் செய்ய, இவரும் அவர்களுக்கு மன்னனாருடைய தீர்த்த பிரசாதமும் பிரசாதிப்பித்து அருளி...

நாதமுனிகளும், 'சடகோபன் அவதரித்து அருளின திருக்குருகூர் பிரதேசத்தில் உண்டாக வேணும்!' என்று திருநகரிக்கு எழுந்தருளி, ஆழ்வாரையும் பொலிந்து நின்ற பிரானையும் சேவித்து, அங்கே ஸ்ரீ மதுரகவிகளுடைய சிஷ்யரான ஸ்ரீ பராங்குச தாசரைச் சேவித்து, 'இவ்விடத்திலே திருவாய்மொழி ஓதினவர்கள் உண்டோ? ஸ்ரீ கோசம் உண்டோ?' என்று கேட்டருள; அவரும், திருவாய் மொழியும் மற்றும் உள்ள திவ்விய பிரபந்தங்களும் நெடுங்காலம் உண்டு; பிரமுஷிதமாய்த்து இப்போது எங்கள் ஆசார்யரான ஸ்ரீ மதுரகவிகள் அடியேனுக்கு, இக் கண்ணி நுண் சிறுத்தாம்பு என்கிற திவ்வியப் பிரபந்தத்தை அருளிச் செய்தார்' என்ன; நாதமுனிகளும் 'அந்தத் திவ்வியப் பிரபந்தத்தை அடியேனுக்குப் பிரசாதித்து அருள வேணும்!'என்று தண்டன் சமர்ப்பித்து விண்ணப்பம் செய்ய; அவரும் இவருக்கு மிகவும் உவப்புடனே அந்தத் திவ்வியப் பிரபந்தத்தை ஓதுவித் தருள...

---

நாதமுனிகளும் தம்முடைய மருமக்களான கீழை அகத்து ஆழ்வாரையும் மேலை அகத்து ஆழ்வாரையும் அழைத்தருளி... இத் திவ்வியப் பிரபந்தங்களைத் திவ்விய கானத்திலே அடைத்து, இயலும் இசையுமாக்கிப் பாடுவித்து அருள, இது லோகத்திலே பிரசித்தமாயிற்று.

# 4

## இராமானுசர்

ஆளவந்தார் ஸ்ரீபாதத்தில் ஆசிரயித்த முதலிகளில் பெரிய திருமலை நம்பி, வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர் என்கிறபடியே திருவேங்கடமுடையானை அடிக்கீழ் அமர்ந்து புகுந்து சேவித்துக் கொண்டு எழுந்தருளி இரா நிற்க;

அவர் உடன் பிறந்த பெண் பிள்ளைகள் ஸ்ரீ பூமி பிராட்டியார் என்றும், பெரிய பிராட்டியார் என்றும் பெயருடைய இருவரிலே, மூத்த ஸ்ரீ பூமி பிராட்டியார் ஆசூரி கேசவப் பெருமாள் என்கிற சர்வ கிரது தீட்சிதர்க்குத் திருமணம் புணர்ந்தாள். இளைய ஸ்ரீ பெரிய பிராட்டியார் மழலை மங்கலத்துக் கமல நயன பட்டர்க்கு வடமணி குலத்திலே திருமணம் புணர்ந்தாள்.

அவர்களும் தம்தம் புக்கங்களிலே வாழும் காலத்திலே... பெரிய திரு அனந்தாழ்வானும் ராமானுஜ திவாகரராய், ஸ்ரீ பெரும்புதூரிலே ஸ்ரீ பூமி பிராட்டியார் கர்ப்பத்தைப் பிராபித்து அருளி...

### ஆளவந்தாரும் இராமானுசரும்

இளையாழ்வாரும் (இராமானுசரும்), அவரை (ஆள வந்தாரை)த் தண்டனிட்டுச் சேவிக்குமளவில், மூன்று விரல்கள் மடங்கி இருக்க இவரும் அது கண்டு, 'முன்னும் இவர்க்கு இப்படி உண்டோ?' என்று முதலிகளைக் கேட்க, அவர்களும்,' 'இல்லை! இப்போது கண்டது இத்தனை!' என்ன இளையாழ்வாரும், 'இவர் திருவுள்ளத்தில் ஏதேனும் ஒரு கருத்து உண்டாகவேணும்!' என்று விசாரித்து அருளி முதலிகளைப் பார்த்து, 'முன்பு வியாக்கியான சமயங்களிலே அபிமத சல்லாபங்களைக் கேட்டு அறிந்தவர்கள் உண்டோ?' என்ன; ஸ்ரீ பாதத்து முதலிகள் எல்லோரும், 'கூட வேறு ஒன்றும் அறியோம்! வியாசபராசரரிடத்திலே உபகார ஸ்மிருதியும், நம்மாழ்வார் பக்கல் பிரேமாதிசயமும், விசிஷ்டாத்துவைத பரமாக வியாச சூத்திரத்தில் வியாக்கியான வாஞ்சையும் பல காலும் அருளிச் செய்யக் கேட்டிருக்கையாய் இருக்கும் என்ன; இவரும் அகவாயில் எண்ணத்தில் ஏற்றம் அறிந்து, 'இச் சரீரமும் திருடமாய் -இவ்வாசார்ய கிருபையும் அடியேன் இடத்தில் பரிபூர்ணமாய் இருக்கும் ஆகில், இவ் சர்வேஸ்வரன் அடியேன் நினைத்தபடி கூட்டுவாராகில், இவ் இழிவு மூன்றையும் தீர்க்கக் கடவேன்!' என்ன; உடனே திருவிரல்கள் நிமிர, இத்தைக் கண்டு அகிலரும் ஆச்சரியப்பட்டு,

இவ் ஆசாரிய கிருபையும் உம் இடத்திலே உண்டு! இவருடைய திவ்விய சக்தியும் உம்மிலே கூடும்! நீரே இத் தரிசனத்துக்கு நிர்வாகரர் ஆவீர்!' என்று சர்வரும் இவரை மங்களா சாசனம் பண்ண—

## 5

## ஆறாயிரப்படி

உடையவர் காலத்திலே ஆசாரியர்கள் எல்லாரும் உடையவர்க்கு ஒரு மானச புத்திரரான திருக்குருகைப் பிரான் பிள்ளானை அனுவர்த்தித்து, 'ஆழ்வார்க்ளின் அருளிச் செயல்களில் அரும் பொருள் தெரியும்படிக்கு, தேவரீர் வியாக்கியானம் செய்தருளவேணும் என்று உடையவரை வேண்டிக்கொள்ள வேணும்!' என்று பிள்ளானுக்கு விண்ணப்பம் செய்ய;

பிள்ளானும், உடையவர் பெருங்கூட்டத் திருவோலக்கமாக எழுந்தருளி இருக்கச்செய்தே சாஷ்டாங்க பிரணாமம் பண்ணி, சவினராய், 'இரப்புடனே ஒரு விண்ணப்பம் உண்டு!' என்று சொல்ல;

உடையவரும் என் என்று கேட்டருளப் பிள்ளானும்; 'தேவரீர்! ஸ்ரீ பாஷ்யம் அருளிச் செய்து, திக் விஜயம் பண்ணி தரிசனத்தை நிலைநிறுத்தி அருளிற்று; இனி திருவாய்மொழி முதலான ஆழ்வார்ப் பிரபந்தங்களும் வியாக்கியானம் செய்து ரட்சித்து அருளவேணும்' என்று விண்ணப்பம் செய்ய;

உடையவரும் திருவுள்ளத்திலே விசாரித்து அருளி, 'அப்படி, யாம் அருளிச் செயல்களுக்கு வியாக்கியானம் பண்ணினால்,

1. 'மந்த மதிகட்கு', இவ்வளவே இதற்கு அர்த்தம் உள்ளது!' என்று தோற்றுமாகில், அபசாரமாம்.

2. ஆழ்வார்கள் பாசுரங்களுக்கு அவருடைய புத்திக்கு ஈடாகப்பஹுவாய்ச் சுருக்கும்.

3. ஆகையாலே நாம், அருளிச் செயல்களுக்கு வரம்பு கட்டினாப்போலே ஆம்.

நீர், ஒருபடி திருவாய்மொழிக்கு வியாக்கியானம் பண்ணும்!' என்று நியமித்து அருளினார்.

திருக்குருகைப் பிரான் பிள்ளானும், எதிராஜர் அனுமதி கொண்டு ஸ்ரீ விஷ்ணு புராண பிரக்கிரியையாலே திருவாய் மொழிக்கு முந்துற முன்னம் இனிதாக ஆறாயிரப்படி உரைத் தருளினார்.

## 6

## நஞ்சீயர்

பட்டரும் நஞ்சீயருக்குப் பிள்ளான்படி ஆறாயிரமும் நன்றாகப் பிரசாதித்து அருளினார். நஞ்சீயரும் அத்தை நன்றாக அதிகரித்து, பட்டரை அனேகமாக அனுவர்த்தித்து அவருடைய அனுமதிகொண்டு, திருவாய் மொழிக்கு ஒன்பதினாயிரப் படியாக ஒரு வியாக்கியானம் பண்ணா நிற்கச் செய்தே....

வேதாந்திகளான நஞ்சீயர், பட்டர் நல்லருள் சீர் கொண்டு திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரமாக ஸ்ரீபாஷ்ய பிரக்கிரியை யாலே ஒரு வியாக்கியானம் செய்து, முற்றப் பட்டோலை கொண்டு 'இத்தை ஒரு சம்புடத்திலே நன்றாக எழுதித்தர வல்லார் உண்டோ?' என்று சீயர் தம் ஸ்ரீ பாதத்து முதலிகளைக் கேட்க;

அவர்களும் 'தென்கரையில் நின்றும் நம்பூர் வரதராஜர் என்பர் ஒருவர் பல காலும் இங்கே வருவர். அவர் நன்றாக எழுதுவர், என்று சீயருக்கு விண்ணப்பம் செய்ய, சீயரும் வரதராஜரை அழைத்து, 'ஒரு கிரந்தம் எழுதிக் காட்டிக் காணீர்' என்ன, வரதராஜரும் எழுதிக் காட்ட, சீயரும் அத்தைத் திருக்கண் சாத்தியருளி, 'எழுத்து முத்துப்போல நன்றாய் இருந்தது. ஆகிலும், இது திருவாய் மொழி வியாக்கியானம் ஆகையாலே, ஒரு விலட்சணரைக் கொண்டு எழுதுவிக்க வேண்டுகையாலே—திரு இலச்சினை திருநாமம் மாத்திரம் உண்டான இவரைக் கொண்டு எப்படி எழுதுவிப்பது? விசேஜ்ஞரைக் கொண்டே எழுதுவிக்க வேணுமிறே' என்று சந்தேகிக்க;

வரதராஜரும் சீயர் திருவுள்ளத்தை அறிந்து, 'அடி யேனையும் தேவரீர் திருவுள்ளத்துக்கு வரும்படியே திருத்திப் பணி கொள்ளலாகாதோ?' என்ன; அவ்வளவிலே சீயரும் திருவுள்ளம் உகந்து அப்போதே வரதராஜனை அங்கரித்தருளி விசேஷ கடாட்சம் செய்தருளி பட்டோலையிலே எழுதின ஒன்பதினா யிரமும், முற்ற ஓர் உரு வரதராஜனுக்கு அருளிச் செய்து காட்டி யருளி, 'இப்படித் தப்பாமல் எழுதித்தாரும்!' 'என்று பட்டோலையை வரதராஜர் கையிலே கொடுத்தருள, அவரும் அத்தை வாங்கிக் கொண்டு, 'அடியேன் ஊரிலே எழுதிக்

கொண்டு வருகிறேன்!' என்று விண்ணப்பம் செய்ய சீயரும், 'அப்படியே செய்யும்!' என்றுவிட;

அனந்தரம் (பிறகு), வரதராஜன் திருக்காவேரிக்குள்ளே எழுந்தருளின அளவிலே சற்று இடம் நீஞ்சிப் போக வேண்டுகையாலே, பட்டோலையைத் திருமுடியிலே கட்டிக் கொண்டு நீஞ்சி வரச்செய்தே, ஒருஅலை வந்து அடித்துக் கிரந்தம் ஆற்றுக்குள்ளே விழுந்து போக, வரதராஜரும் அக்கரையிலே ஏறி, 'பட்டோலை போய் விட்டதே! இனி நாம் என் செய்யக் கடவோம்?' என்று விசாரித்து, ஒரு அலேகத்தை உண்டாக்கிக் கொண்டு, நஞ்சீயர் பிராசாதித்து அருளின அர்த்தம் ஒன்றும் தப்பாமல் ஒன்பதினாயிரமும் நன்றாக எழுதியருளி,

தாம் தமிழுக்கு மிகவும் உத்தம விரகர் ஆகையாலே ஒவ்வொரு பாட்டுக்களிலே உசிதமான தலங்களுக்குப் பிரசன்ன கம்பீர பதங்களுக்கு அர்த்த விசேஷங்களும் எழுதிக் கொண்டு போய், சீயர் திருக்கையிலே கொடுக்க;

சீயரும் ஸ்ரீ கோசத்தை அவிழ்த்துப் பார்க்கும் அளவில், தாம் அருளிச் செய்த கட்டளையாய் இருக்கச் செய்தேயும், சப்தங்களுக்கு மிகவும் அனுகுணமான அனேக விசேஷார்த்தங்கள் பல இடங்களிலும் எழுதி இருக்கையாலே, அத்தைக் கண்டு மிகவும் திருவுள்ளம் உகந்து அருளி, வரத ராஜரைப் பார்த்தருளி, 'இது மிகவும் நன்றாய் இரா நின்றது! இது என்?' என்று கேட்க; அவரும் பயப்பட்டு ஒன்றும் விண்ணப்பம் செய்யாது இருக்க சீயரும், 'நீர்பயப்பட வேண்டாம்! உண்மை சொல்லும்!', என்ன;

வரதராஜரும், 'திருக்காவேரி நீச்சாகையாலே பட்டோலையை அடியேன் தலையிலே கட்டிக் கொண்டு நீஞ்சப் புக்கவாறே, ஒருஅலை வந்து அடிக்கையாலே, அது ஆற்றிலே விழுந்து அழிந்துபோயிற்று. இது தேவரீர் ஓர் உருமுற்ற பிராசித்து அருளின கட்டளையாலே எழுதினேன்' என்று விண்ணப்பம் செய்ய;

நஞ்சீயரும், 'இவருடைய ஒருபுத்தி விசேஷம் இருந்த படி என்! இவர் மகா சமர்த்தராய் இருந்தார். நன்றாக எழுதினார்' என்று மிகவும் திருவுள்ளம் உகந்து அருளி, வரதராஜரை வாரி எடுத்து அழுந்தக் கட்டிக் கொண்டு, 'இவர் நம்முடைய திருக்கவி கன்றிதாசர்' என்று திரு நாமம் சாற்றி, தம்முடைய சந்நிதியிலே அரைக் கணமும் பிரியாமல் கரதலாமலகமாக வைத்துக் கொண்டு, பிள்ளைக்குச் சகலார்த்தங்களும் பிரசாதித்து அருளினார். அருளிச் செய்த அன்று தொடங்கி வரதராஜர்க்கு 'நம்பிள்ளை' என்று திருநாமம் உண்டாயிற்று.

## 7

### 1. தொண்டை மண்டலமா? தொண்ட மண்டலமா?

தொண்டை மண்டலம் என்று இருக்க வேண்டுவதை, தொண்ட மண்டலம் எனத் தம் மாணாக்கர் ஒருவர் பொருட்டுச் சாதிக்கப் புகுந்து, புது விதிகள் கற்பித்து அறிவில்லாதாரை வஞ்சித்தாரே!

அவைகள் பழவிதிகள் என்பார் ஆயின், இன்ன நூலில்-இன்ன அதிகாரத்தில்-இன்ன இயலில்-இத்தனையாம் சூத்திரம் எனக் காட்டல் வேண்டுமே!

'தொண்டை மண்டலமே சரி' என்பது-அகத்திய முனிவர் வரத்தால் தோன்றி, வட நூற் கடலும் தென் தமிழ்க் கடலும் முழுது ஒருங்கு உணர்ந்து, சிவாநுபூதிப் பெருஞ்செல்வம் உற்று, விளங்கிய திராவிட பாஷ்ய முநிவராகிய திருக்கைலாச பரம்பரைத் திருவாவடுதுறைச் சிவஞான சுவாமிகள் அருளிச் செய்த,

**எந் நாட்டு...**
**நன் நாட்டைப் புலவர் எலாம் தொண்டை நாடு**
**என உரைப்பர்...**

**—காஞ்சிப்புராணம்: திருநாட்டுச் சிறப்பு.**

என்னும் செய்யுளால் துணிக.

### 2. ஒழிவிலொடுக்க உரைப் பதிப்பும் பிழைகளும்

*(1)* பிரளயாகலர் ஆவார், இருமலமும் உடையவராகிய உருத்திரர்கள் என்பதும்; சகலர் ஆவார், மும்மலமும் உடையவராகிய பிரம விட்டுணு முதல் கிருமி ஈறாக உள்ள உயிர்கள் என்பதும் சாதாரணமாகிய தத்துவக் கட்டளைகள் வாசித்தவர்க்கும் தெரியுமே! அஃது அறியாது, "பிரளயாகலர் மும்மலங்கள் ஒரு மலம் நீத்தோர்; அவர் பிரமன் முதலானோர்'' என்று, ஒழிவிலொடுக்க உரைப் புத்தக முதலிலே பதிப்பித்த இராமலிங்க பிள்ளையா ஓதாது உணர்ந்தவர்?

*(2)* ஸ்ரீ, ஸ்திரி—என்னும் சொற்களுக்கும்; கண்ட (Kanta) கண்ட (Ganta) என்னும் சொற்களுக்கும் வேற்றுமை அறியாது, 'ஸ்ரீகண்ட பரமசிவன்' என்பதற்கு, 'பெண்ணைப் பாகத்து உடைய பரமசிவன்' எனப் பொருள் கூறி, தமது அறியாமையை உலகு அறியப் புலப்படுத்திய இராமலிங்க பிள்ளையா ஓதாது உணர்ந்தவர்?

(3) அவர், தாம் பதிப்பித்த ஒழிவிலொடுக்க உரையிலே

| (திருத்தம்) | | (பிழை) |
|---|---|---|
| சுழு முனையை | - | சுழி முனை என்றும், |
| சொப்பனத்தை | - | சொற்பனம் என்றும், |
| ஞாதிருவை | - | ஞாதுரு என்றும் |
| கேட்க என்பதை | - | கேழ்க்க என்றும் |
| சரியையை | - | சரிதை என்றும் |
| பிராரத்தத்தை | - | பிராரத்துவம் என்றும், |

தோன்றிய விருது காலம் என்பதை -
தோன்றப்பட்ட விருது காலம் என்றும்,

நூல் கேட்டலை - நூற் கேட்டல் என்றும்,
அழியுமித்தேகாதி என்பதை -
அழியப்பட்ட வித் தேகாதி என்றும்,
'மண்ணினின்றும் கடகல சாதி காரியங்கள்'
என்பதில் 'மண்ணினின்று' என்பதை - 'மண்ணை'
என்றும்,

நூல்கள் அறிவிக்க மாட்டா என்பதை - நூல்கள்
அறிவிக்க மாட்டாது என்றும்,
மகேசுரனை - மயேசுரன் என்றும்,
இச்சாயத்தினத்தை - இச்சா யெத்தினம் என்றும்,
அத்தமயனத்தை-அத்தமானம் என்றும்,
அவைகள் அறியா என்பதை - அவைகள் அறியாது
என்றும்,
'இச்சா ஞானம் முதலிய வருவிக்கப்பட்டன'
என்பதில் 'பட்டன' என்பதை - பட்டது என்றும்,
போய இடத்து ஆன்மா என்பதை - போய
இடத்து வான்மா என்றும்,
பெத்த தசையை — பெத்ததிசை என்றும்,
வர்ணத்தை - வர்நம் என்றும்,
கதிரவனுக்கு அசுத்தமும் இன்றாயது என்பதை - கதிர
வனுக்கும் சுத்தமும் இன்றாயது என்றும்,
நேதி களைதலை - நியதி களைதல் என்றும்,
வெதுப்புதலை - வெதிப்புதல் என்றும்,
உற்பிச்சத்தை - உற்பீசம் என்றும்,
தொடையை - துடை என்றும்,
மித்தியா ரூபத்தை - மித்தையா ரூபம் என்றும்,
ஆக என்னும் வினையெச்சங்களை - ஆய் என்றும்
பதிப்பித்து இருக்கின்றாரே!

(4) அப் புத்தகத்தில், பல இடங்களில் பெயரெச்சங்களை முற்று எனக் கொண்டு, முற்றுக் குறி கொடுத்து வரி முடிவு செய்து,

அவை கொள்ளும் பெயர்களை வேற்று வரிக்குமுதலாகக் கொண்டு தொடங்கி இருக்கின்றாரே!

—ஆறுமுக நாவலர் பிரபந்தத் திரட்டு (1954). பக்.95–97.

## 8

## டாக்டர் உ. வே. சா. பதிப்பித்த நூல்கள்

### காவியங்கள்

1987 — சீவகசிந்தாமணி

1892 — சிலப்பதிகாரம்

1898 — மணிமேகலை

1924 — பெருங்கதை

1935 — உதய குமாரகாவியம்

### சங்க இலக்கியம்

1889 — பத்துப் பாட்டு

1894 — புற நானூறு

1903 — ஐங்குறு நூறு

1904 — பதிற்றுப் பத்து

1918 — பரிபாடல்

1937 — குறுந்தொகை

### இலக்கணம்

1895 — புறப்பொருள் வெண்பாமாலை

1925 — நன்னூல் - மயிலைநாதர் உரை

1928 — நன்னூல் - சங்கர நமசிவாயர் உரை

1937 — தமிழ் நெறி விளக்கம்

### பிரபந்தங்கள்

1910 — மீனாட்சிசுந்தரம் பிள்ளை பிரபந்தத் திரட்டு

1932 — சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தத் திரட்டு

1939 — குமர குருபரர் பிரபந்தத் திரட்டு

1930 — தக்கயாகப் பரணி

*1933* — பாசவதைப் பரணி

மூவருலா, கப்பற்கோவை, தென்றல் விடுதூது முதலிய பல சிற்றிலக்கியங்கள்.

## புராணங்கள்

*1883* முதல் *1940* வரை, *14* புராண நூல்களைப் பதிப்பித்துள்ளார்.